# திருக்குர்ஆன்

ஆன்மீக மற்றும் அறிவுப்பூர்வமான இரண்டு தளங்களிலும் உண்மையை மனிதன் கண்டடைய வேண்டியதன் முக்கியவத்துவத்திற்கு அழுத்தத்தைக் கொடுத்து, மனித குலத்திற்கான நற்செய்தியைக் கொண்டுள்ள நூலாக குர்ஆன் விளங்குகிறது.

ஒவ்வொரு நூலுக்கும் ஒரு கருப்பொருள் மற்றும் நோக்கம் இருக்கும். குர்ஆனின் கருப்பொருள் மற்றும் நோக்கம் இறைவனின் படைப்புத்திட்டத்தை மனிதனுக்கு எடுத்துரைப்பதாகும். அதாவது இவ்வுலகத்தை இறைவன் படைத்தது ஏன், பூமியில் மனிதனை குடியமர்த்தியதன் நோக்கம் என்ன, மரணத்திற்கு முன்உள்ள இந்த வாழ்க்கையில் மனிதன் என்ன செய்யவேண்டும், மரணத்திற்குப் பின்னரான நிரந்தர வாழ்க்கையில் என்ன நிகழும் என்பனவற்றைத் தெளிவுபடுத்துவதேயாகும்.

குர்ஆனின் முக்கிய நோக்கம், இறைவனைப்பற்றிய ஞானத்தை அடைதல், இறைவனின் நெருக்கத்தைப் பெறுதல், சாந்தி மற்றும் ஆன்மீக ரீதியிலான வாழ்க்கையை வாழ்தல் என்பதாகும். இறைமையைக் குறித்தும் இறைவன் உலகில் ஏற்படுத்தியுள்ள அத்தாட்சிகள் குறித்தும் ஆழ்ந்து சிந்தித்துணர்ந்து இவற்றை அடையலாம். இதனைக் குறிக்க தவஸ்ஸும், ததப்புர் மற்றும் தஃபக்குர் போன்ற சொற்களை குர்ஆன் பயன்படுத்துகிறது.

இவற்றையெல்லாம் மனதில் கொண்டே இந்த மொழிபெயர்ப்பும், விளக்க அடிக்குறிப்புகளும் செய்யப்பட்டுள்ளன.

# திருக்குர்ஆன்

## தமிழாக்கம்

## ترجمة
## معاني القرآن الكريم
## باللغة التاميلية

குட்வேர்ட் புக்ஸ்

**First published - 2016**



Translation From Arabic to Urdu
**Maulana Wahiduddin Khan**

**Tamil Translation and Editorial Board**

Nariyambut Abdussalam
Abu Nathera Oomeri
Yusuf Raja
Hafiz Syed Iqbal Ahmed Oomeri
Khateeb Asrarul Hasan Oomeri
Kollu Nadeem

**Goodword Books**
A-21, Sector 4, Noida-201301, India
Tel : +91-120-431 4871, +91-85888 22672
email : info@goodwordbooks.com
Web : www.goodwordbooks.com

**Goodword Books, Hyderabad**
Tel : +91-40-2351 4757, Mob : +91-70326 41415
email : hyd.goodword@gmail.com

**Goodword Books, Chennai**
324, Triplicane High Road, Chennai - 600 005.
Tel : +91-44-4352 4599, Mob : +91-96001 05558
email : chennaigoodword@gmail.com

**அரபியிலிருந்து உருது மொழிபெயர்ப்பு**
**மௌலானா வஹீதுத்தீன் கான்**
தஸ்கீருல் குர்ஆன் விளக்கவுரை ஆசிரியர்

**மொழிபெயர்ப்புக் குழு**

நரியம்பட்டு அப்துஸ்ஸலாம்
அபூநதீரா உமரி
யூசுப் ராஜா

**ஒப்பிட்டு நோக்குதல் மற்றும் ஆய்வுக் குழு**

ஹாஃபிஸ் செய்யத் இக்பால் அஹ்மத் உமரி
கதீப் அஸ்ராருல் ஹசன் உமரி
கொள்ளு நதீம்

அச்சுக்கோவை
A.R. ஷாஹ் பிரிண்ட்ஸ்

**குட்வேர்ட் புக்ஸ்**

# பொருளடக்கம்



## திருக்குர்ஆன்
## அத்தியாயங்களின் பெயர்கள்

# முன்னுரை

## திருக்குர்ஆன் : சுருக்கமான வரலாறு

குர்ஆன் எனும் இந்த வேதம், முஹம்மது (அவர் மீது சாந்தியும் சமாதானமும் உண்டாவதாக) அவர்களுக்கு இறைவனால் அருளப்பட்டதாகும். இது இறைவனின் தூதரான முஹம்மது அவர்களுக்கு ஒட்டுமொத்தமாக ஒரேயடியாக அருளப்படவில்லை. இவ்வேதம் 23 ஆண்டுகாலம் பகுதிபகுதியாக அவருக்கு அருளப்பட்டதாகும். இஸ்லாம் மார்க்கத்தின் இறைத்தூதர் மக்காவில் வாழ்ந்த காலத்தில் கி.பி.610-ஆம் ஆண்டில் குர்ஆனின் முதல் பகுதி அருளப்பட்டது. அதன்பின்னர் குர்ஆனின் பல்வேறு பகுதிகள் அவருக்கு அருளப்பட்டுக் கொண்டே இருந்தன. இறைத்தூதர் மதீனா நகரத்தில் இருந்தபோது கி.பி.632-ல் குர்ஆனின் இறுதிப்பகுதி அருளப்பட்டது. இவ்வேதம் வானவர் கேப்ரியேல் மூலமாகவே அருளப்பட்டு, அவ்வானவரின் அறிவுரைப்படியே ஒரே தொகுப்பாக ஆக்கப்பட்டது.

குர்ஆனில் பெரிய அத்தியாயங்களாகவும், சிறிய அத்தியாயங்களாகவும் மொத்தமாக 114 அத்தியாயங்கள் உள்ளன. குர்ஆனில் மொத்தம் 6236 வசனங்கள் உள்ளன. ஓதுவதற்கு எளிதாக இருக்கும்படி அது முப்பது பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஏழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் காகிதம் புழக்கத்தில் இருந்த காலகட்டத்தில் குர்ஆன் அருளப்பட்டது. அந்தக் காகிதமானது குறிப்பிட்ட சில மரங்களின் இலைகளால் தயாரிக்கப்பட்டிருந்தது. அது பேப்பிரஸ் (Papyrus) எனப்பட்டது. குர்ஆனின் பகுதி அருளப்படும்போதெல்லாம் அது காகிதத்தில் எழுதப்பட்டது. இது அரபி மொழியில் ‘கிர்தாஸ்’ (திருக்குர்ஆன் 6:7) எனப்படுகிறது. அத்துடன் மக்களாலும் அது உடனுக்குடன்

மனனம் செய்யப்பட்டது. இஸ்லாமிய மார்க்கத்திற்கு அழைக்கும் பணியின்போதும் அது மக்களுக்கு ஓதிக் காட்டப்பட்டது. இவ்வாறு குர்ஆன் ஒரே சமயத்தில் எழுதப்பட்டும் மனனம் செய்யப்பட்டும் வந்தது.

இறைத்தூதரின் இறுதி காலகட்டம்வரை குர்ஆனை பாதுகாப்பதான இதே வழிமுறையே தொடர்ந்தது. கி.பி. 632-ஆம் ஆண்டில் இறைத்தூதர் மறைந்தபின் அபுபக்கர் இஸ்லாத்தின் முதல் ஆட்சித்தலைவர் (கலீஃபா)ஆனார். அக்காலத்தில் புழக்கத்திலிருந்த காகிதத்தில் குர்ஆனை அவர் ஒரே தொகுப்பாக்கினார். அது சதுர வடிவில் இருந்தது. இவ்வாறு குர்ஆன் முதல் கலீஃபாவின் காலத்திலேயே தொகுக்கப்பட்ட புத்தக வடிவத்தில் பாதுகாக்கப்பட்டு விட்டது. இது கலீஃபா உஸ்மானுடைய காலகட்டத்தில் பல பிரதிகளாக எடுக்கப்பட்டு, பல்வேறு நகரங்களுக்கு அனுப்பப்பட்டு, அந்த நகரங்களில் இருந்த பள்ளிவாசல்களில் பாதுகாப்பாக வைக்கப்பட்டது. அதனை மக்கள் வாசித்துக்கொண்டும், பிரதிகளாக எடுத்துக்கொண்டும் இருந்தார்கள்.

19-ஆம் நூற்றாண்டில் அச்சு இயந்திரம் கண்டுபிடிக்கப்படும் வரை குர்ஆன் மேற்கண்ட முறையிலேயே பாதுகாக்கப்பட்டது. 19-ஆம் நூற்றாண்டில் காகிதம் பெருமளவில் உற்பத்தி செய்யப்பட்டபோது, குர்ஆன் அச்சடிக்கப்பட்டது. ஒவ்வொரு வீட்டிலும், பள்ளிவாசல்களிலும், புத்தக விற்பனை நிலையங்களிலும் காணப்படும் அளவுக்கு குர்ஆன் பிரதிகள் பெருமளவு தயார் செய்யப்பட்டன. சிறந்த முறையில் அச்சடிக்கப்பட்ட குர்ஆன் பிரதியை மனிதன் பூமியின் எந்தப் பகுதியில் இருந்தபோதும் இப்போது பெற முடியும்.

# திருக்குர்ஆன் : மொழிநடை

இறைவேதமான குர்ஆன் அரபி மொழியில் முழுமையாக பாதுகாக்கப்பட்ட நிலையில் உள்ளது. மூலநூலுக்கு மாற்றாக இந்த மொழிபெயர்ப்பு ஒருபோதும் அமைய முடியாது. குர்ஆனை எளிதாகப் புரிந்து கொள்ளும்படிச் செய்வதுதான் இந்த மொழிபெயர்ப்பின் நோக்கமாகும். குர்ஆன் அரபி மொழியில் இருந்தாலும் உண்மையில் அது இயற்கையின் மொழியிலேயேதான் அமைந்துள்ளது. அதாவது இறைவன் மனிதர்களைப் படைத்தபோது அவர்களுடன் உரையாடிய மொழி இவ்வகையிலான மொழி. ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் இயற்கையிலேயே அம்மொழி காணப்படுவதால் எவரும் குர்ஆனைப் புரிந்து கொள்ளமுடியும்.

இந்த உண்மை குர்ஆனில் இறைவாக்காக பின்வருமாறு கூறப்பட்டுள்ளது :

> *மாறாக இது அறிவு வழங்கப்பட்டோரின் உள்ளங்களில் தெளிவான சான்றுகளாகத் திகழ்கின்றது. அக்கிரமக்காரர்கள்தான் நம் வசனங்களை நிராகரிப்பார்கள் (29:49)*

இறைவனைக் குறித்து குர்ஆன் எத்தகைய உணரும்படியான மொழியில் குறிப்பிடுகிறதோ, அத்தகைய மொழி மனிதனுக்குள் முன்னதாகவே அமைக்கப்பட்டுள்ளது. குர்ஆன் கூறுபவை மனிதனுக்கு அன்னியமானவையல்ல. அது அவனது இயல்பிலேயே அறிந்துள்ளவற்றின் வார்த்தை வெளிப்பாடாகும். வரும்காலங்களில் வரப்போகின்ற மனிதர்கள் அனைவரும் ஆதாம் படைக்கப்பட்டபோதே படைக்கப்பட்டு விட்டார்கள். அப்போது மனித ஆன்மாக்களிடம் இறைவன் உரையாடியது குர்ஆனில் இறைவாக்காக பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

'உம் இறைவன் ஆதமுடைய மக்களின் முதுகுத்தண்டிலிருந்து அவர்களின் சந்ததிகளை வெளியாக்கியபோது அவர்களுக்கு அவர்களையே சாட்சியாக்கி 'நான் உங்கள் இறைவனல்லவா?, என்று கேட்டான். அதற்கு அவர்கள் 'ஆம் - இதற்கு நாங்களே சாட்சியாக இருக்கின்றோம் என்றார்கள்' *(07:172)*

'நாம் இந்தப் பொறுப்பை வானங்கள், பூமி மற்றும் மலைகளுக்கு முன்னால் வைத்தபோது அவை அதனை ஏற்க மறுத்து விட்டன. அதைக்கண்டு பயந்து விட்டன. ஆனால் மனிதன் அதனை ஏற்றுக் கொண்டான். நிச்சயமாக அவன் அநியாயக்காரனாகவும், அறியாதவனாகவும் இருக்கிறான்', என்று இறைவனும் மனிதனும் உரையாடியதை குர்ஆன் *(33:72)* குறிப்பிடுகிறது.

இவற்றின் மூலம் தெளிவாவது என்னவென்றால் தொடக்கத்தில் இறைவன் மனிதனைப் படைத்தபோது மனிதர்கள் அனைவரிடமும் உரையாடினான் என்பதாகும். அந்த உரையாடலில் கூறப்பட்டவை மனித இயல்பிலேயே அவர்கள் அறியாத விதத்தில் வைக்கப்பட்டுள்ளது. அதாவது குர்ஆனின் வடிவில் மனிதன் இப்போது வாசித்துக் கொண்டிருப்பது ஏற்கனவே அவன் இறைவனிடமிருந்து கேட்டதுதான். குர்ஆன் என்பது மனிதன் ஏற்கனவே அறிந்தவற்றை மீண்டும் அறிவதுதான். உண்மையில் குர்ஆன் மனிதனின் அறிவை திறந்து காட்டக்கூடியதே ஆகும்.

குர்ஆனைப் புரிந்து கொள்வதற்கு அதன் மொழிபெயர்ப்பு ஒரு கருவியாக அமைகிறது. ஒரு மனிதனின் இயல்பு உயிர்ப்போடு இருக்குமானால், அவன் முன்முடிவுகளால், -சிந்தனைகளால் பாதிக்கப்படாதவனாக இருந்தான் என்றால் குர்ஆனைப் வாசிக்கும்போது அவனது சிந்தனையின் முடிச்சுகள் அவிழ்ந்து விடும். அங்குதான் இறைவனின் உரையாடல் பாதுகாக்கப்பட்டுள்ளது.

திருக்குர்ஆனில் (7:172) கூறப்பட்டுள்ள ஒப்பந்தம் இறைவனுடனான முதல் உரையாடல் என்றால், குர்ஆன் இறைவனின் இரண்டாவது உரையாடலாகும். இரண்டும் ஒன்றொன்றை ஒன்று உண்மைப்படுத்துவதாக இருக்கிறது. குர்ஆனின் கூற்றுகள் தற்காலத்தில் அறிவியல் உண்மைகளாகி விட்டன. தற்காலத்தைய மரபணு தொடர்பான அறிவியலும் ஆய்வும் குர்ஆனில் கூறப்பட்டுள்ளவற்றை முழுமையாக வலுப்படுத்துகின்றன.

## இறைவனின் படைப்புத் திட்டம்

ஒவ்வொரு நூலுக்கும் ஒரு கருப்பொருள் (Subject) மற்றும் நோக்கம் (Purpose) இருக்கும். குர்ஆனின் கருப்பொருள் மற்றும் நோக்கம் இறைவனின் படைப்புத் திட்டத்தை (Creation Plan of God) மனிதனுக்கு எடுத்துரைப்பதாகும். அதாவது இவ்வுலகத்தை இறைவன் படைத்தது ஏன், பூமியில் மனிதனை குடியமர்த்தியதன் நோக்கம் என்ன, மரணத்திற்கு முன்னுள்ள இந்த வாழ்க்கையில் மனிதன் என்ன செய்ய வேண்டும், மரணத்திற்குப் பின்னரான நிரந்தர வாழ்க்கையில் என்ன நிகழும் என்பனவற்றை மனிதர்களுக்கு தெளிவுபடுத்துவதேயாகும்.

மனிதன் நிரந்தரப் படைப்பாக படைக்கப்பட்டுள்ளான். அவனது வாழ்க்கையை இறைவன் இரண்டாகப் பிரித்துள்ளான். மரணத்திற்கு முந்தைய பகுதியை சிறியதாகவும், மரணத்திற்குப் பிந்தைய பகுதியை பெரியதாகவும் அவன் பிரித்துள்ளான். மரணத்திற்கு முன்னதான வாழ்வை சோதனைக்கானதாகவும், மரணத்திற்குப் பின்னதான வாழ்க்கையை சோதனையின் நன்மை அல்லது தீமையான விளைவைப் பெறக் கூடியதாகவும் இறைவன் அமைத்துள்ளான். வாழ்க்கையின் உண்மையை அறிமுகப்படுத்தும் வேதமாக குர்ஆன் அமைந்துள்ளது.

இறைவனது அருட்கொடைகளின் நினைவூட்டலாக குர்ஆன் உள்ளது. மனித வாழ்க்கைக்குத் தேவையான அனைத்தும் பூமியில் உள்ளது. இறைவனின் இந்த அருட்கொடைகளால் பயனடைந்தவனாக மனிதன் அருட்கொடையாளனை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று குர்ஆன் விரும்புகிறது. அருட்கொடையாளனான இறைவனது விருப்பத்தை மனிதன் நிறைவேற்ற வேண்டும். இதுவே நிரந்தர சுவனத்திற்கான தகுதிச் சான்றிதழாகும். இறைவனின் அருட்கொடைகளைப் பயன்படுத்திக்கொண்டு அவனை மறந்துவிடுவது மனிதனை நரகத்தைப் பெறும்படி செய்துவிடுகிறது. இந்த பேருண்மையின் நினைவூட்டலாக குர்ஆன் அமைந்துள்ளது.

## திருக்குர்ஆன் : இறைவனின் சொற்கள்

குர்ஆனை வாசிக்கையில் ‘இறைவேதம், இறைவாக்கு’ போன்ற சொற்கள் அடிக்கடி வருவதைக் காணமுடியும். உலகில் பல நூல்களை புனித நூல்கள் என மக்கள் கருதுகின்றனர். அத்தகைய நூல்களுடன் ஒப்பிட்டால் குர்ஆனைத்தவிர வேறு எந்த நூலிலும், இது ‘இறைவேதம், இறைவாக்கு’ என்று கூறப்படாமலிருப்பதை பார்க்கும்பொழுது இப்படியான ‘சொற்கள்’ ஆச்சர்யப்படுத்துபவையாகத் தோன்றும். குர்ஆனை வாசிப்பவர்கள் மற்ற நூல்களைப் போலல்லாமல் உயர்ந்ததொரு நூலாக எண்ணி படிக்கும்படி இந்த சொற்கள் செய்துவிடுகின்றன.

குர்ஆன் எடுத்துரைக்கும் விதமும் தனித்துவமிக்கதாகும். மனிதர்களால் உருவாக்கப்படும் நூல்களின் ஆரம்பம் - முடிவு போன்ற முறைமை குர்ஆனில் இல்லை. குர்ஆன் சாதாரண மனிதனுக்கு தொடர்பற்ற அறிவுரைகளைக் கொண்டது போலத் தோன்றும். ஆனால் ஆழ்ந்து நன்றாக குர்ஆனை வாசித்தால்

அது தொடர்பு முறையில் அமைந்துள்ளது தெளிவாகும். குர்ஆன் விளித்துக் கூறும் விதம் ஒரு அரசன் மக்களை விளித்துக் கூறுவதைப் போன்றதாகும். குர்ஆனை வாசிக்கும்பொழுது அதனை எழுதிய ஆசிரியர் உன்னதமான உயர்ந்த ஒரு இடத்திலிருந்து ஒட்டுமொத்த மனித சமூகத்தையும் பார்த்துக் கொண்டிருப்பது போலவும், ஒட்டுமொத்த மனித சமூகத்துடனும் உரையாடிக் கொண்டிருப்பது போலவும் தோன்றும். குர்ஆனின் இன்னொரு சிறப்பம்சம் என்னவென்றால் அதனை வாசிப்பவர் எந்த நேரத்திலும் அதனை எழுதிய ஆசிரியரோடு தொடர்பு கொள்ள முடியும் என்பதாகும். குர்ஆனின் ஆசிரியரான இறைவன் நித்திய ஜீவனாவான். ஒட்டுமொத்த மனித சமூகமும் அவனது கட்டுப்பாட்டிலேயே இருக்கிறது. மனிதர்கள் கூறுவதைக் கேட்டு அவற்றுக்கு அவன் பதிலளிக்கிறான். எனவே குர்ஆனை வாசிப்பவர் எந்த நேரமும் இறைவனோடு தொடர்பு கொள்ளலாம், அவனிடம் கேட்கலாம், பதிலையும் பெறலாம்.

## திருக்குர்ஆனில் ஜிஹாத் : அமைதியான கொள்கைப் போராட்டம்

ஊடகங்களின் மூலமாக குர்ஆனை அறிய நேர்பவர்களுக்கு அது ‘ஜிஹாதுக்கான வேதம்’ என்று தோன்றலாம். ’ஜிஹாத்’ என்பது தீவிரவாதத்தின் மூலம் நோக்கத்தை அடைதல் என்று இவர்கள் கருதுகின்றனர். இது மிக மிகத் தவறான ஒரு புரிதலாகும். குர்ஆனை நேரடியாக வாசிப்பவர்களுக்கு அது தீவிரவாதத்தை போதிக்கும் வேதமல்ல என்பது தெளிவாகப் புரியவரும். குர்ஆன் அமைதியை போதிக்கும் வேதமாகும். அது தீவிரவாதத்தை போதிப்பதல்ல.

குர்ஆனுடைய போதனைகளில் ஜிஹாதும் ஒன்றுதான். ஆனால் ஜிஹாத் என்பது அமைதியாக இறைவழியில் முயற்சித்தலாகும்.

'எனவே நீர் நிராகரிப்பாளர்களுக்கு கீழ்ப்படியாதீர், இந்த குர்ஆனின் மூலம் அவர்களுடன் கடும் முயற்சி செய்வீராக' (25:52) என்று குர்ஆன் கூறுகிறது.

இந்தக் 'கடும் முயற்சி செய்வீராக' என்பது 'ஜிஹாத்' என்பதாகும்.

குர்ஆன் என்பது ஒரு நூலே தவிர, அது ஆயுதமல்ல. அது இறைவன் விரும்பும் கொள்கையின் அறிமுகமாகும். 'ஜிஹாத்' என்பதை அமைதிவழியிலான போராட்டம் என்றே குர்ஆன் கூறுகிறது. அந்தப் போராட்டத்தின் இலக்கு குர்ஆனின் இறைச்செய்தி மக்களின் உள்ளங்களை சென்றடைவதேயாகும்.

'அவர்களின் உள்ளங்களில் உள்ளவற்றை அல்லாஹ் நன்கறிவான். எனவே நீர் அவர்களைப் பொருட்படுத்தாமல் அவர்களுக்கு அறிவுரை கூறுவீராக. அவர்களின் உள்ளங்களில் பதிந்து விடும்படியான வார்த்தைகளைக் கூறுவீராக' (04:63)

என்று குர்ஆனின் வசனம் ஒன்று இறைத்தூதரை விளித்துக் கூறுவதாக அமைந்துள்ளது.

இந்த வசனத்தின்படி பார்த்தால் குர்ஆன் விரும்பும் வார்த்தை உள்ளங்களில் பதிந்துவிடும்படியான வார்த்தையாகும். அதன்மூலம் குர்ஆனின் உண்மைத்தன்மையை மக்கள் அறிந்து கொள்ளவேண்டும், அவர்களிடையே சிந்தனைப் புரட்சி ஏற்பட வேண்டும் என்பதே குர்ஆனின் நோக்கமாகும். இவ்வகையிலான நோக்கங்களை ஆதாரங்களின் மூலமே அடையமுடியும்; தீவிரவாதத்தினாலோ, ஆயுதந்தாங்கிய போராட்டத்தினாலோ அல்ல.

போர்புரிய அனுமதியளிக்கும் வசனங்கள் குர்ஆனில் இருக்கின்றனதான். ஆனால் அவை போர் சூழ்நிலைகளுக்கு

மட்டுமேயானவையாகும். அதுவும் தற்காப்பிற்கானவையாகும். தற்காப்பு யுத்தத்தை தவிர வேறு எவ்வகையிலான யுத்ததிற்கும் இஸ்லாமிய மார்க்கத்தில் அனுமதியில்லை. இவ்வகையிலான தற்காப்பு யுத்தத்தை நன்கு அமையப்பெற்ற முறையான ஒரு அரசாங்கம்தான் புரிய வேண்டும். தனி மனிதனுக்கோ எந்த ஒரு அமைப்பிற்கோகூட தற்காப்பு வகையிலான போர்புரிய இஸ்லாத்தில் அனுமதியில்லை.

குர்ஆனைப் புரிந்துகொள்வதற்கான ஒரு முக்கிய விஷயம்: குர்ஆன் ஒரு சட்ட நூல் அல்ல. அது அழைப்புப் பணிக்கான வேதம் என்பதாகும். குர்ஆனின் பாணி சட்ட நூலின் பாணி அல்ல. மாறாக அது அழைப்புப் பணியின் பாணியாகும். அதில் பொருளின் மீதுதான் அதிகக் கவனம் செலுத்தப்படுகிறது. அழைப்பியல் புத்தகத்தில் வார்த்தைகள் கருவிகளாகவே இருக்கின்றன. சட்டப் புத்தகத்தில் வார்த்தைகள்தான் நோக்கங்களாக இருக்கின்றன.

அழைப்பியல் எழுத்துக்களில் நோக்கத்தை வலியுறுத்தும் பொருட்டு கடுமையான பாணி பயன்படுத்தப்படுகிறது. அழைப்பியல் எழுத்துக்களில் பயன்படுத்தப்படும் பாணி வெளிப்படையில் கடுமையாகத் தோன்றினாலும் அது மதிநுட்பத்தின் அடிப்படையில் பயன்படுத்தப்படும் ஒன்றேயாகும். இவ்வகையான பாணியைப் பார்த்து அதனை சட்ட ரீதியான கடுமை என எண்ணுவது மடமையாகும். இந்த அறிவார்ந்த பாணியின் பலன் என்னவெனில் சட்ட நூலில் பயன்படுத்தப்படும் கடினமான பாணி அழைப்பியல் நூலில் விழிப்புணர்வு ஊட்டுவதற்காகப் பயன்படுத்தப்படுகின்றது. உறங்கிக் கொண்டிருக்கும் மனிதனது இயல்புகளை, மறைந்திருக்கும் அவனது உணர்வுகளை செயல்பட வைப்பதுதான் இதன் நோக்கமாகும்.

பின்வரும் உதாரணத்தின் மூலம் இதனை விளங்கிக் கொள்ளலாம்: இறைத்தூதர் காலத்தில் பத்ர் போர் நடைபெற்றது. இது தற்காப்பிற்காக புரிந்த போரேயாகும். இந்தப் போரில் முஸ்லிம்களுக்கு வெற்றி கிடைத்தது. போரின் முடிவில் எழுபது பேர் கைது செய்யப்பட்டனர். பின்னர் இவர்கள் கைதிகளாக மதீனாவிற்குக் கொண்டு வரப்பட்டனர். இந்த சம்பவத்தை மையப்படுத்தி குர்ஆனின் பின்வரும் வசனம் இறங்கியது: "களத்தில் எதிரிகளைக் கொன்று குவிக்கும்வரை அவர்களைக் கைதிகளாகப் பிடிப்பது தூதருக்கு உகந்ததல்ல. நீங்கள் இவ்வுலகப் பொருட்களை விரும்புகிறீர்கள். அல்லாஹ் மறுமையை விரும்புகிறான். அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவனாகவும் ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்"(8:67). இந்த வசனத்தின் பொருளை சட்ட ரீதியாக அணுகினால் போரில் பிடிபட்ட கைதிகள் கண்டிப்பாகக் கொல்லப்பட வேண்டும் என்ற பொருளையே தருகிறது. இந்த வசனம் அருளப்பட்ட சமயத்தில் எழுபது கைதிகளும் இறைத்தூதரின் கட்டுப்பாட்டில்தான் இருந்தார்கள். இது சட்ட ரீதியான வசனமாக இருந்தால் அதில், "கைதிகளாகப் பிடிபட்டு மதீனாவிற்குக் கொண்டுவரப்பட்ட இவர்கள் தங்களின் குற்றங்களின் அடிப்படையில் கொல்லப்பட வேண்டும்" என்பது போன்ற வாசகங்கள்தான் இடம்பெற்றிருக்கும். ஆனால் அந்த வசனத்தில் இவ்வகையான வாசகங்கள் இடம்பெறவில்லை. இறைத்தூதர் இதனை சட்ட ரீதியான வசனமாக அணுகவில்லை.

இந்த சம்பவத்திலிருந்து, "இந்த வசனம் சட்ட ரீதியான பொருளைத் தரவில்லை. மாறாக அதன் அழைப்பியல் ரீதியான பொருளையே தருகிறது. கைதிகளின் உள்ளத்தில் சீர்திருத்த உணர்வைத் தூண்டுவதற்காகக் கூறப்பட்ட கடுமையான பாணியே இது" என்பது தெளிவாக விளங்கும். இந்த வசனத்தின் நோக்கம்

குற்றவாளிகளின் சீர்திருத்தமேயன்றி அவர்களைக் கொலை செய்வது அல்ல. எனவேதான் இந்த கைதிகளில் பெரும்பாலோர் பின்னர் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டனர். உதாரணமாக சஹல் இப்னு அம்ரு போன்றோரைக் கூறலாம்.

பல்வேறு தலைப்புகளிலான கட்டளைகளின் பிரிவு என்பது இயல்பானதும் அனைத்து சமய நூல்களிலும் காணப்படுவதுமாகும். உதாரணத்திற்கு இந்துக்களின் புனித நூலான கீதை, ஞானம் மற்றும் நீதிநெறிகளுக்கான நூலாகும். இருந்தும் இவை போன்றவைகளுடன் கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு போரிட ஊக்குவிக்கும் வசனம் (03:30) உள்ளது. மகாத்மா காந்தி தனது அகிம்சைக் கொள்கையை கீதையிலிருந்தே பெற்றார். கீதையிலுள்ள போர் புரியத் தூண்டும் வசனங்கள் வேறு வழியற்ற குறிப்பிட்ட பொதுவான சூழ்நிலைகளுக்கானதாகும். ஆனால் தினசரி சூழல்களுக்கு மகாத்மா காந்தி கீதையிலிருந்து பெற்ற அமைதி வழிக் கொள்கைகளையே கீதை போதிக்கிறது.

அதைப் போன்றே இயேசு கிறிஸ்துவும்,

“பூமியில் அமைதியை கொண்டு வர நான் வந்திருக்கிறேன் என்று நினைக்காதீர்கள், ஆனால் வாளை” என்று கூறினார் (மத்தேயு 10:34)

இயேசு கிறிஸ்து குறிப்பிட்ட சூழ்நிலைகளுக்காகவே இப்படி கூறியுள்ளார். எனவே இப்படிக் குறிப்பிட்டதைக்கொண்டு இயேசு கிறிஸ்து போதித்த சமயம் போரையும் வன்முறையையும் கொண்டது என்று தீர்மானிப்பது சரியானதல்ல. பொது வாழ்க்கைக்கான போதனைகளாக இயேசு கிறிஸ்து போதித்தவற்றை எடுத்துக் கொண்டால் அமைதியான நன்னெறிகள், நன்னடத்தையைக் கட்டமைத்துக் கொள்வது, ஒவ்வொருவரும் மற்றவர் மீது அன்பாக

நடந்துகொள்வது, ஏழைகளுக்கும் வறியவர்களுக்கும் உதவுவது போன்றவையே ஆகும்.

குர்ஆனும் அப்படியானதே. இறைத்தூதர் முஹம்மது மக்காவை விட்டு மதீனாவிற்குப் புலம்பெயர்ந்தபோது மக்காவிலிருந்த சிலை வணக்கம் புரிந்தவர்கள் அவருடன் மிகக் கடுமையான முறையில் நடந்து கொண்டனர். ஆனால் இறைத்தூதர் முஹம்மது எதிர்த்துத் தாக்குவதை எப்போதுமே தவிர்த்து வந்தார். இருந்தபோதிலும் மோதலைத் தவிர்க்கக்கூடிய எந்த வழியுமே இல்லாத சூழலில் அவர் தற்காத்துக் கொள்ள வேண்டி வந்தது. ஆகவே மிகச் சில சந்தர்ப்பங்களில் அவர் அதனைச் செய்ய வேண்டி வந்தது. இவற்றைப் போன்ற சூழ்நிலைகளில்தான் போர் சம்பந்தமான சில இறைவசனங்கள் வெளிப்பட்டன. போர் சம்பந்தமான இத்தகைய கட்டளைகள் அந்தக் குறிப்பிட்ட சூழ்நிலைகளுக்கானவையே தவிர, பொதுவான பயன்பாட்டுக்கான கட்டளைகள் அல்ல. அதனால்தான் இறைத்தூதரின் நிலையான தகுதியாக, “அனைத்து மனித குலத்திற்கான கருணை” (21:107) என்று குர்ஆன் அவரைக் குறிப்பிடுகிறது.

இஸ்லாமிய மார்க்கம் ‘அமைதி’ என்ற சொல்லின் முழுப் பொருளிலான ஒரு மார்க்கமாகும். குர்ஆன் தனது வழியை அமைதிக்கான வழிகள் (05:16) என்று குறிப்பிடுகிறது. “சமாதானமே சிறந்தது” (04:125) என்று குர்ஆன் விளக்குகிறது. “அமைதிக்கு பங்கம் ஏற்படும் வகையில் குழப்பம் ஏற்படுத்துவதை இறைவன் விரும்புவதில்லை” (02:205) என்றும் குர்ஆன் கூறுகிறது. இஸ்லாமிய மார்க்கமும் வன்முறையும் ஒன்றுக்கொன்று முரணானவை, எதிரானவை என்பது மிகையான கூற்றல்ல. வன்முறை என்று கூறப்படுவது எடுத்த எடுப்பிலேயே புறந்தள்ள வேண்டிய ஒன்றாகும். நிகழ்கால உலகில் வன்முறை என்பது நிலையானதல்ல

என்ற உண்மையே இஸ்லாமியக் கொள்கைக்கு வன்முறை என்பது அந்நியமானது என்பதற்குப் போதுமானதாகும். இஸ்லாம் தன்னை நிரந்தரமான மார்க்கம் என்று கூறிக் கொள்வதால் வன்முறை போன்ற நிலைத்து நிற்காத எதனையும் இஸ்லாம் கொள்கையாகக் கொண்டிருக்க முடியாது. இஸ்லாமிய மார்க்கத்துடன் வன்முறை என்பதை இணைக்க முற்படுவது இஸ்லாமிய மார்க்கம் நிரந்தரமான மார்க்கம் என்பதன் மீது சந்தேகம் கொள்ள வைக்கும் செயலாகும். எனவே 'இஸ்லாமிய வன்முறை' என்று கூறுவது 'அமைதி வன்முறை' என்று கூறப்படுவதைப் போல மிகவும் முரணான ஒன்றாகும். மேலும் இஸ்லாமிய போதனைகள் அனைத்துமே நேரடியாகவோ மறைமுகமாகவோ அமைதியின் அடிப்படையிலானதாகும்.

## திருக்குர்ஆனின் நோக்கம்

திருக்குர்ஆனின் மூலம் சத்தியத்தை அறிந்து கொள்ள விரும்புபவர்களுக்கு திருக்குர்ஆன் இரு பணிகளை வழங்குகிறது. ஒன்று மனிதன் தனது வாழ்க்கையில் இறைவழிகாட்டுதலைப் பின்பற்றுதல், மற்றொன்று மக்களையும் இறைவழிகாட்டுதலின் பக்கம் அழைத்தல். இறைவழிகாட்டுதலைப் பின்பற்றுவதன் தொடக்கம் இறைவனை அறிந்து கொள்வதிலிருந்து தொடங்குகிறது. குர்ஆனின் மூலம் சத்தியத்தை அறிந்து கொள்பவர் தனக்குள் ஒரு சிந்தனைப் புரட்சியை ஏற்படுத்திக் கொள்கிறார். அவரது சிந்தனைப் போக்கு மாறிவிடுகிறது. அவரது விருப்பு வெறுப்பு என்பனவற்றின் அடிப்படை மாறிவிடுகிறது. அவரது ஒட்டுமொத்த வாழ்க்கையும் இறைவழிகாட்டுதலால் புதுவடிவத்தைப் பெற்று விடுகிறது. இறைவனை அறிதல் என்பது பல வடிவங்களில் வெளிப்படலாம். அது இறைநினைவு, இறைவணக்கம், நற்குணங்கள் மற்றும் இறையச்சமுள்ள வாழ்க்கை போன்ற வார்த்தைகளில் கூறப்பட்டுள்ளது.

சத்தியத்தை அறிதல் என்பது வாழ்க்கையின் உண்மை நிலையை அறிந்து கொள்வதாகும். சத்தியத்தை அறிவது ஒரு மனிதனுக்கு புதிதாகப் பிறப்பதைப் போன்றதாகும். இந்தப் புதிய பிறப்பு முடிவேயில்லாமல் வளர்ந்து கொண்டிருக்கும் ஒரு மரத்தைப் போன்றதாகும்.

குர்ஆன் வழங்கும் இரண்டாவது பணியான இறைவழிக்கு மக்களை அழைத்தல் என்பது மிகவும் பொறுப்பான பணியாகும். இது முழுமையான அர்ப்பணிப்பை வேண்டும் பணியாகும். அதனால்தான் இது 'ஜிஹாத்' என்றழைக்கப்படுகிறது. குர்ஆனின்படி பார்த்தால் 'ஜிஹாத்' என்பது முற்றிலும் அரசியல் சார்பற்ற பணியாகும். இவ்வகை 'ஜிஹாதின்' நோக்கம் மனிதனின் உள்ளத்தையும் சிந்தனையையும் மாற்றுவதாகும். இவ்வகை மாற்றம் அமைதியான அழைப்புப் பணியின் மூலமாகவே நிகழ்கிறது, தீவிரவாதம் மற்றும் நிர்ப்பந்தத்தின் மூலமாக அல்ல.

குர்ஆன் விரும்பும் மனிதன் இறைவனைச் சார்ந்த மனிதனாவான் (03:79). அதாவது இந்த உலகத்தில் இறையுணர்வுடன் வாழும் மனிதனே குர்ஆன் விரும்பும் மனிதனாவான். இறையுணர்வுடன் வாழும் வாழ்க்கையே தூய்மையான வாழ்க்கை (தஸ்கியா) என்று குர்ஆனில் கூறப்பட்டுள்ளது (02:129). தமது உள்ளத்தைப் பரிசுத்தப்படுத்தியவர்களுக்கே சுவனம் கிட்டும் (20:70) என்று குர்ஆன் கூறுகிறது.

ஆன்மீக உள்ளொளி ஏற்பட்டுவிடுமேயானால் இஸ்லாமிய அடிப்படையின் சரியான அமைதல் இயற்கையாகவே உருவாகிவிடும். ஆனால் அமைப்பு முறை செயல்பாட்டால் ஒருபோதும் ஆன்மீக உள்ளொளியை உருவாக்கி விட இயலாது. அதனால்தான் குர்ஆனின் நோக்கம் என்பது ஒரு மனிதனுள் அறிவுப்பூர்வமான தூண்டலை ஏற்படுத்தி அதனை வளர்ப்பதாக உள்ளது. இதற்கான சொல்லாக

மஃரிஃபா (உண்மையை - ஞானத்தை உணர்தல்) என்ற சொல்லை குர்ஆன் பயன்படுத்துகிறது.

"தூதருக்கு அருளப்பட்ட இவ்வாக்கை அவர்கள் செவியுறும்போது சத்தியத்தை அறிந்துகொண்டதனால் அவர்களது கண்களிலிருந்து கண்ணீர் வடிவதை நீர் காண்பீர். 'எங்கள் இறைவா! நாங்கள் நம்பிக்கைகொண்டோம், எனவே எங்களை சாட்சியாளர்களுடன் பதிவுசெய்வாயாக' (05:83) என்று அவர்கள் பிரார்த்தனை புரிவார்கள் என்று குர்ஆன் கூறுகிறது.

உண்மையை, ஞானத்தை உணரும் நிலையில் அதனைக் கண்டடைய வேண்டியதன் முக்கியத்துவத்தைக் குறித்து குர்ஆன் வலியுறுத்திக் கூறுகிறது. அந்த நிலையில் ஒருவர் அடைவதே உண்மையான இறைநம்பிக்கையிலான மார்க்கமாகும்.

குர்ஆனின் மீது நம்பிக்கை கொண்டவனின் வாழ்க்கையில் தேவையற்றவைகளிலிருந்து தன்னைத் தூய்மைப்படுத்திக் கொள்ளும்பணி அவனது இறுதிமூச்சுவரை தொடர்ந்து நடந்து கொண்டே இருக்கும். பிறக்கும்போது ஒவ்வொரு மனிதனும் திருவாளர் இயற்கையாகவே பிறக்கிறான். ஆனால் இவ்வுலக வாழ்க்கையில் அவன் எதிர்கொள்ளும் அனுபவங்கள் அவனது இயல்பின் மீது எதிர்மறையான கறைகளை ஏற்படுத்தி விடுகிறது. கோபம், வெறுப்பு, பொறாமை, பேராசை, இனவெறி, கர்வம் போன்றவை மனிதனின் இயல்பை களங்கப்படுத்தும் எதிர்மறையான கறைகளாகும். ஒவ்வொரு மனிதனும் சுயபரிசோதனையின் மூலம் தன்னை தூய்மைப்படுத்திக் கொள்ளவேண்டும். அவ்வகையில் மனிதன் தன்னை மீட்டுருவாக்கம் செய்து திருவாளர் இயற்கை என்றாக வேண்டும். இந்த திருவாளர் இயற்கைதான் குர்ஆனிய விதத்தில் இறையுணர்வுடன் வாழும் மனிதனாவான்.

## திருக்குர்ஆனை அணுகும்முறை

"குர்ஆனை மெதுவாகவும் தெளிவாகவும் ஓதுங்கள்" என்று குர்ஆன் (73:04) கூறுகிறது. இதன் பொருள் என்னவென்றால் குர்ஆனை மெதுவாக அளவான, சீரான, தரமான நயத்தில் வாசிக்க வேண்டும் என்பதாகும். அதாவது உள்ளடக்கத்திற்கு முக்கியத்துவம் கொடுத்து முழு கவனத்துடன் வாசிக்க வேண்டும். இப்படி வாசிக்கும்பொழுது குர்ஆனுக்கும் அதனை வாசிப்பவருக்கும் இடையில் இருவழிச் செயல்பாடு நிகழ்கிறது. வாசிப்பவருக்கு குர்ஆன் ஆனது இறைவன் அவரை விளிப்பது அல்லது அவருடன் உரையாற்றுவதாகும். அவருடைய இதயம் ஒவ்வொரு வசனத்துடனான விளிப்பிற்கும் பதிலளிக்கத் தொடங்குகிறது. குர்ஆனில் இறைவனின் உன்னதத்தன்மை குறித்து கூறப்படும்போது இறைவனின் பேராற்றலை உணர்கையில் வாசிப்பவரின் முழு இருத்தலும் வலுவான தாக்கத்திற்கு ஆளாகிறது. இறைவனின் அருள்பற்றி குர்ஆனில் வரும்பொழுது வாசிப்பவரின் உள்ளம் நன்றிப்பெருக்கால் நிறைகிறது. இறைவன் அளிக்கும் தண்டனைகளைப்பற்றி குர்ஆனில் விவரிக்கப்படும்போது, அதனை வாசிப்பவர் நடுநடுங்கிப் போகிறார். குர்ஆனின் ஒரு கட்டளையை ஒருவர் வாசிக்கும்போது வாசிப்பவரின் உணர்ச்சிகள் மேலதிகமாகி, கனமேறி இறைவனின் கட்டளையை எடுத்து நடக்கும் பணிவான அடியானாக அவர் மாற வேண்டும்.

குர்ஆன் என்பது இறைவன் மனிதர்களை எச்சரிக்கை செய்யும் நூலாகும். பல அறிவுரைகளையும், பாடங்களையும் கொண்டு விளங்கும் இந்த நூலை ஞானத்திற்கான நூல் என்று கூறுவது மிகச் சரியானதாக இருக்கும். போதனைகளைக் கூறும் வழக்கமான நூல்களைப்போன்ற மொழிநடையை குர்ஆன் பின்பற்றவில்லை. ஒரு சராசரியான வாசகர் குர்ஆனை வாசிக்கையில்

துண்டுதுண்டான செய்திகளைக் கொண்ட தொகுப்பாக குர்ஆன் அவருக்குத் தெரியும். இப்படித் தோன்றுவது உண்மையானதல்ல. மாறாக குர்ஆனை வாசிப்பவர் அதனை எடுத்து எந்தப் பகுதியை எந்த வசனத்தை வாசித்தாலும் வாசிப்பவருக்கு அது கூறும் உண்மை விளங்கக்கூடிய வகையிலேதான் அதன் அசலான வடிவில் அது அவ்வாறு அமைந்துள்ளது. இது குர்ஆனின் அமைப்புத் திட்ட முறையாகும்.

**வஹீதுத்தீன் கான்**

டிசம்பர் 2015
புது டில்லி.

## திருக்குர்ஆன் மற்றும் இறைத்தூதர்பற்றிய சில தகவல்கள்

| | |
|---|---|
| **கி.பி.** *570* | *அரேபிய பழம்பெரும் நகரமான மக்காவில் முஹம்மது நபி பிறந்தார். நபிகள் நாயகம் என வரலாற்றில் அறியப்பட்ட அவர் பிறப்பதற்கு சில மாதங்களுக்கு முன்னர், தன் தந்தை அப்துல்லாவை இழந்து விட்டார்.* |
| *576* | *இறைத்தூதர் முஹம்மதின் தாயாரான ஆமினா, முஹம்மதுக்கு ஆறு வயது ஆனபோதே இறந்துவிட்டார்.* |
| *578* | *அநாதைச் சிறுவனாகிப்போன இறைத்தூதர் முஹம்மதின் பாட்டனாரான அப்துல்முத்தலிபும் முதுமையால் மரணமடைந்தார்.* |
| *595* | *கதீஜா என்பவரை இறைத்தூதர் முஹம்மது திருமணம் செய்து கொண்டார்.* |
| *610* | *இறைத்தூதர் முஹம்மது தன் 40வது வயதில் மக்காவின் ஒளிமலை என்னும் இடத்தில் இறைவனிடமிருந்து வேதவெளிப்பாடுகளைப் பெறத்தொடங்கினார்.* |
| *613* | *இஸ்லாம் குறித்து பகிரங்கமான பொது அழைப்பு விடுக்கப்பட்டது.* |
| *615* | *மக்காவிலிருந்தவர்கள் ஒடுக்குமுறை செய்தபோது, இறைத்தூதருடைய தோழர்களின் சிறு குழு அதிலிருந்து தப்பிக்க அபிசீனியா (இன்றைய எத்தியோப்பியா)வுக்குப் புலம் பெயர்ந்தது.* |

| | |
|---|---|
| *616 & 619* | இறைத்தூதர் முஹம்மதின் சொந்த இனக்குழுவான பனுஹாஷிம், அன்னாரின் குடும்பத்தை சமூகப் புறக்கணிப்பு செய்தது. |
| *619* | இறைத்தூதர் முஹம்மது அவர்களின் மனைவி கதீஜா மற்றும் சிறியதகப்பனார் அபுதாலிப் ஆகியோர் மரணம் அடைந்தனர். |
| *619* | அழைப்புப்பணிக்காக இறைத்தூதர் தாயிஃப் நகருக்குச் சென்ற போது தாயிஃப் நகர மக்கள் அன்னாரை அவமதித்துத் துன்புறுத்தினர். |
| *620* | இறைத்தூதரது ஜெருசலம் மற்றும் விண்ணகப் பயணம் இந்த ஆண்டில் நிகழ்ந்தது. |
| *622* | மக்காவிலிருந்து மதீனாவுக்கு ஹிஜ்ரா என்கிற புலப்பெயர்வு நிகழ்ந்து, அதுவே இஸ்லாமிய நாட்காட்டியின் துவக்கமானது. |
| *624* | பத்ரு போர் நிகழ்ந்தது.மக்கா நகரத்தின் சிலை வணக்கம் புரிந்தவர்கள் தோற்கடிக்கப்பட்டனர். |
| *625* | உஹத் போர் நிகழ்ந்தது. மதீனாவுக்கு அருகில் முஸ்லிம்களை மக்காவாசிகள் தோற்கடித்தனர். |
| *628* | புகழ்பெற்ற ‘ஹுதைபிய்யா’ அமைதி ஒப்பந்தம் கையெழுத்தானது. பத்து ஆண்டுகளுக்குப் போர் நிறுத்தம் ஏற்பட்டதால் இஸ்லாமிய பிரச்சாரப் பணி தீவிரமடைந்தது. ஏராளமானோர் இஸ்லாத்தை ஏற்றனர். |

| | |
|---|---|
| *630* | அமைதி ஒப்பந்தத்தை சிலை வணக்கம் புரிந்தவர்கள் முறித்து விட்டனர். மக்கா நகரம் சரணடைந்தது. அந்நகரத்தில் இருந்த அனைவருக்கும் இறைத்தூதர் பொது மன்னிப்பு அளித்தார். முழு மக்கள் தொகையும் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டது. |
| *631* | அரேபியாவின் பழங்குடியினர் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டனர். யூத, கிறிஸ்தவ மக்களுடன் இறைத்தூதர் அமைதி ஒப்பந்தம் செய்துகொண்டார். |
| *632* | இறைத்தூதரின் விடைபெறும் ஹஜ் பயணம் நிகழ்ந்தது. |
| *632* | இந்த ஆண்டில் ஜுன் மாதம் 8வது நாளில் இறைத்தூதர் மதீனாவில் இயற்கை எய்தினார். |
| *633* | ‘திருக்குர்ஆன் தொகுக்கும் பணியை’ கலீஃபாவாக தேர்ந்தெடுக்கப்பட்ட அபுபக்கர் முழுமைப்படுத்தினார். |
| *645* | மூன்றாம் கலீஃபாவான உஸ்மான் அதை பிரதிகள் எடுத்து அண்டைநாடுகளில் வினியோகம் செய்தார். |
| *1942* | திருக்குர்ஆனை முதன்முறையாக அல்லாமா அப்துல்ஹமீத் பாகவி முழுமையாகத் தமிழில் மொழிபெயர்த்தார். அதனைத் தொடர்ந்த ஆண்டுகளில் இதுவரை (2015) திருக்குர்ஆனுக்கு 14 மொழிபெயர்ப்புகள் வந்துள்ளன. |

# திருக்குர்ஆன் வெளிப்படுத்தப்பட்ட காலத்தைய (கி.பி. 610-632) அரேபிய தீபகற்பத்தின் வரைபடம்



# 1. ஆரம்பம் (அல்ஃபாத்திஹா)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

1. அனைத்துப் புகழும் அகிலங்களின் அதிபதியான அல்லாஹ்வுக்கே. 2. அவன் அளவிலாக் கருணையாளன்; இணையிலாக் கிருபையாளன்; 3. தீர்ப்பு நாளின் அதிபதி. 4.உன்னையே நாங்கள் வணங்குகிறோம், உன்னிடமே நாங்கள் உதவி தேடுகிறோம். 5. எங்களுக்கு நேரான வழியைக் காட்டுவாயாக. 6. அது நீ யாருக்கெல்லாம் அருள்புரிந்தாயோ அவர்களின் வழி; 7. உன் கோபத்திற்குள்ளானோர் மற்றும் நெறிதவறியோரின் வழியுமல்ல.

# 2. பசு மாடு (அல்பகரா)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

1. அலிஃப்.லாம்.மீம். 2. இது இறைவேதமாகும். இதில் எத்தகைய சந்தேகமும் இல்லை; இறையச்சமுடையோருக்கு நேர்வழிகாட்டியாகும். 3. அவர்கள் மறைவானவற்றை நம்புகிறார்கள். தொழுகையைக் கடைப்பிடிக்கிறார்கள். நாம் அவர்களுக்கு வழங்கியவற்றிலிருந்து செலவும் செய்கிறார்கள். 4. அவர்கள் உமக்கு அருளப்பட்ட வேதத்தின் மீதும் உமக்கு முன்னர் அருளப்பட்ட வேதங்களின் மீதும் நம்பிக்கை கொண்டுள்ளார்கள். மறுமையின் மீதும் உறுதியான நம்பிக்கை கொள்கிறார்கள். 5. இவர்கள்தான் தம் இறைவனின் நேர்வழியைப் பின்பற்றுபவர்கள்; இவர்கள்தான் வெற்றியாளர்கள்.

6. நிராகரிப்பாளர்களை நீர் எச்சரிப்பதும் அல்லது எச்சரிக்காமலிருப்பதும் ஒன்றுதான். அவர்கள் நம்பிக்கைகொள்ள மாட்டார்கள். 7. அல்லாஹ் அவர்களுடைய உள்ளங்களின்

மீதும் செவிப்புலன்களின் மீதும் முத்திரையிட்டு விட்டான். அவர்களுடைய பார்வைகளின் மீதும் திரை உள்ளது. அவர்களுக்குக் கடும் வேதனையும் உண்டு.

8. மனிதர்களில், 'நாங்கள் அல்லாஹ்வின் மீதும் மறுமைநாளின் மீதும் நம்பிக்கை கொண்டுள்ளோம்' என்று கூறும் சிலர் இருக்கிறார்கள். உண்மையில் அவர்கள் நம்பிக்கையாளர்கள் அல்லர். 9. அவர்கள் அல்லாஹ்வையும் நம்பிக்கையாளர்களையும் ஏமாற்ற எண்ணுகிறார்கள். அவர்கள் தம்மைத்தாமே ஏமாற்றிக் கொள்கிறார்கள். அதனை அவர்கள் உணர்ந்து கொள்வதில்லை. 10. அவர்களின் உள்ளங்களில் நோய் இருக்கிறது. அல்லாஹ் அதனை இன்னும் அதிகப்படுத்தி விட்டான். பொய்யுரைத்துக் கொண்டிருந்ததனால் அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு. 11. "நாட்டில் குழப்பம் உண்டாக்காதீர்கள்" என்று அவர்களிடம் கூறப்பட்டால் 'நாங்கள் அமைதியை ஏற்படுத்தக்கூடியவர்கள்தான்' என்று கூறுகிறார்கள். 12. எச்சரிக்கை! இவர்கள்தான் குழப்பவாதிகள். ஆயினும் இவர்கள் உணர்ந்துகொள்வதில்லை. 13. "மற்ற மக்கள் நம்பிக்கை கொண்டதைப்போல நீங்களும் நம்பிக்கைகொள்ளுங்கள்" என்று அவர்களிடம் கூறப்பட்டால் 'மூடர்கள் நம்பிக்கைகொண்டதைப்போல நாங்களும் நம்பிக்கைகொள்ள வேண்டுமா?' என்று கேட்கிறார்கள். நிச்சயமாக இவர்கள்தான் மூடர்கள். ஆயினும் இவர்கள் அறிந்துகொள்வதில்லை. 14. அவர்கள் நம்பிக்கையாளர்களை சந்தித்தால் "நாங்களும் நம்பிக்கை கொண்டுள்ளோம்'' என்று கூறுகிறார்கள். ஆனால் தங்கள் சாத்தான்களுடன் தனித்திருக்கும்போது 'நாங்கள் உங்களுடன்தான் இருக்கிறோம். நாங்கள் அவர்களைப் பரிகாசம் செய்து கொண்டிருக்கிறோம்' என்று கூறுகிறார்கள். 15. அல்லாஹ் அவர்களைப் பரிகசிக்கிறான். அவர்களுடைய

வரம்பு மீறலில் தடுமாறித் திரியுமாறு அவர்களை விட்டுவிடுகிறான். **16.** இவர்கள்தான் நேர்வழிக்குப் பதிலாக வழிகேட்டை விலைக்கு வாங்கிக்கொண்டவர்கள். எனவே இவர்களின் வியாபாரம் பயனளிக்கவில்லை, இவர்கள் நேர்வழிபெற்றவர்களாகவும் இருக்கவில்லை.

**17.** அவர்களுக்கான உதாரணம் (வழிகாட்ட) நெருப்பு மூட்டிய ஒருவனைப் போன்றது. அது அவர்களைச் சுற்றி ஒளி வீசியபோது அல்லாஹ் அவர்களது (கண்களின்) ஒளியைப் பறித்துவிட்டான். எதையும் பார்க்க முடியாத காரிருளில் அவர்களை விட்டுவிட்டான். **18.** அவர்கள் செவிடர்கள், ஊமையர்கள், குருடர்கள். எனவே நேர்வழியின் பக்கம் திரும்ப மாட்டார்கள். **19.** அல்லது அவர்களின் உதாரணம் காரிருளில் இடிமின்னலுடன் வானிலிருந்து பொழியும் மழையைப் போன்றது. இடி முழக்கங்களால் மரணத்திற்கு அஞ்சி அவர்கள் தம் காதுகளில் விரல்களைத் திணித்துக் கொள்கிறார்கள். அல்லாஹ் நிராகரிப்பாளர்களைச் சூழ்ந்து கொண்டிருக்கிறான். **20.** அம்மின்னல் அவர்களின் பார்வைகளைப் பறித்துவிடப் பார்க்கிறது. அது அவர்களுக்கு வெளிச்சம் தரும்போதெல்லாம் அதில் அவர்கள் நடக்கிறார்கள். இருள் அவர்களைச் சூழ்ந்துகொள்ளும்போது நின்று விடுகிறார்கள். அல்லாஹ் நாடினால் அவர்களின் செவிப்புலனையும் பார்வைகளையும் பறித்து விடுவான். நிச்சயமாக அல்லாஹ் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவன்.

**21.** மனிதர்களே! உங்களையும், உங்களுக்கு முன்னிருந்தோரையும் படைத்த உங்கள் இறைவனையே வணங்குங்கள். அதனால் நீங்கள் நரகத்திலிருந்து தப்பித்துக்கொள்ளலாம். **22.** அவனே உங்களுக்காக பூமியை விரிப்பாகவும், வானத்தைக் கூரையாகவும் அமைத்தான்; உங்கள் உணவிற்காக வானிலிருந்து மழை பொழியச்செய்து அதன்மூலம் கனி வகைகளை

வெளிப்படுத்துகிறான். எனவே நீங்கள் அறிந்துகொண்டே அல்லாஹ்வுக்கு இணையாக எதனையும் ஆக்காதீர்கள். 23. நாம் நம் அடியாருக்கு அருளிய இவ்வேதத்தின்மீது நீங்கள் சந்தேகம் கொண்டால் - நீங்கள் உண்மையாளர்களாயின் - இதைப்போன்ற ஒரு அத்தியாயத்தையேனும் கொண்டுவாருங்கள். அல்லாஹ்வைத்தவிர உங்கள் உதவியாளர்களையும் அழைத்துக் கொள்ளுங்கள். 24.நீங்கள் அவ்வாறு செய்யாவிட்டால் - உங்களால் ஒருபோதும் அவ்வாறு செய்ய முடியாது, எனவே மனிதர்களையும் கற்களையும் எரிபொருளாகக் கொண்ட நரகநெருப்பை அஞ்சிக் கொள்ளுங்கள். அது நிராகரிப்பாளர்களுக்காகவே தயார் செய்யப்பட்டுள்ளது. 25.'நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிவோருக்கு சொர்க்கச் சோலைகள் உண்டு. அவற்றில் ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும்' எனும் நற்செய்தியைக் கூறுவீராக. அவர்களுக்கு அங்கிருந்து ஏதேனும் கனி உணவாக வழங்கப்படும்போதெல்லாம் இதற்கு முன்பும் இதுதானே எங்களுக்கு வழங்கப்பட்டது என்று கூறுவார்கள். ஏனெனில் ஒன்றுக்கொன்று ஒத்தவையாக அவை அவர்களுக்கு வழங்கப்படும். அங்கு பரிசுத்தமான துணைகளும் அவர்களுக்கு உண்டு. அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள்.

26. கொசுவையோ, அதைவிட அற்பமானதையோ உதாரணமாகக் கூறுவதற்கு அல்லாஹ் வெட்கப்பட மாட்டான். நம்பிக்கையாளர்கள், “அந்த உதாரணம் தம் இறைவனிடமிருந்து வந்துள்ள சத்தியமே'' என்பதை அறிந்துகொள்வார்கள். நிராகரிப்பாளர்களோ, “இத்தகைய உதாரணங்கள் மூலம் அல்லாஹ் என்னதான் நாடுகின்றான்?” என்று கேட்கிறார்கள். இதன்மூலம் அவன் பலரை வழிதவறச் செய்கிறான், பலருக்கு நேர்வழி காட்டுகிறான். அவன் (தனக்குக்) கீழ்ப்படியாத மக்களைத்தான் வழிதவறச் செய்கிறான். 27. அவர்கள் அல்லாஹ்விடம் செய்த

உடன்படிக்கையை உறுதிப்படுத்தியபின் முறித்து விடுகிறார்கள், அல்லாஹ் இணைத்துவைக்குமாறு கட்டளையிட்டதைத் துண்டித்து உலகத்தில் குழப்பம் விளைவிக்கிறார்கள். இவர்கள்தான் நஷ்டமடைந்தவர்கள். 28. நீங்கள் எப்படி அல்லாஹ்வை நிராகரிக்கிறீர்கள்?! நீங்களோ உயிரற்றவர்களாக இருந்தீர்கள். அவன்தான் உங்களுக்கு வாழ்வளித்தான். பின்னர் உங்களை மரணிக்கச்செய்து மீண்டும் உங்களை உயிர்ப்பிப்பான். பின்னர் அவனிடமே நீங்கள் திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள். 29. அவனே பூமியிலுள்ள அனைத்தையும் உங்களுக்காகப் படைத்துள்ளான். பின்னர் வானத்தின் பக்கம் கவனம் செலுத்தி அவற்றை ஏழு வானங்களாக ஒழுங்குபடுத்தினான். அவன் ஒவ்வொன்றையும் நன்றிந்தவனாக இருக்கின்றான்.

30. உமது இறைவன் வானவர்களிடம், “நான் பூமியில் ஒரு வழித்தோன்றலை ஏற்படுத்தப்போகின்றேன்” என்று கூறியபோது அவர்கள், “நாங்களோ உன்னைப் புகழ்ந்து உன் தூய்மையைப் பறைசாற்றிக் கொண்டிருக்கும்போது பூமியில் குழப்பம் விளைவித்து இரத்தம் சிந்தக்கூடிய மக்களையா நீ ஏற்படுத்தப் போகின்றாய்?”, என்று கேட்டார்கள். அதற்கு அவன், “நீங்கள் அறியாதவற்றையெல்லாம் நான் அறிவேன்” என்று கூறினான். 31. அவன் ஆதமுக்கு அனைத்துப் பெயர்களையும் கற்றுக் கொடுத்தான். பின்னர் அவர்களை வானவர்கள் முன் நிறுத்தி ‘நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் இவர்களின் பெயர்களை எனக்குக் கூறுங்கள்’ என்று கூறினான். 32. அதற்கு அவர்கள், “நீ தூயவன். நீ எங்களுக்கு எதைக் கற்றுக்கொடுத்தாயோ அதை மட்டுமே நாங்கள் அறிவோம். நிச்சயமாக நீ நன்கறிந்தவனாகவும் ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றாய்” என்று கூறினார்கள். 33.“ஆதமே அவர்களின் பெயர்களை இவர்களுக்கு எடுத்துக்கூறும்” என்று அவன்

கூறினான். அந்த மக்களின் பெயர்களை ஆதம் எடுத்துக் கூறியபோது, "வானங்கள் மற்றும் பூமியின் இரகசியங்களை நான் நன்கறிவேன். நீங்கள் வெளிப்படுத்துவதையும், மறைத்துக் கொண்டிருப்பதையும் நான் நன்கறிவேன் என்பதை உங்களிடம் நான் கூறவில்லையா?" என்று அவன் கேட்டான்.

34. "ஆதமுக்குச் சிரம்பணியுங்கள்" என்று நாம் வானவர்களிடம் கூறியபோது சாத்தானைத்தவிர அவர்கள் அனைவரும் சிரம்பணிந்தார்கள். அவன் மறுத்ததோடு ஆணவமும் கொண்டான். அவன் நிராகரித்தவனாகி விட்டான். 35. "ஆதமே, நீரும் உம் மனைவியும் சொர்க்கத்தில் வசியுங்கள். அங்கே நீங்கள் விரும்பியவாறு தாராளமாகப் புசியுங்கள். ஆனால் இந்த மரத்தின் அருகில் செல்லாதீர்கள், சென்றால் அக்கிரமக்காரர்களாகி விடுவீர்கள்" என்று நாம் கூறினோம். 36. ஆனால் அந்த மரத்தின் மூலம் சாத்தான் அவ்விருவரையும் தவறிழைக்கச் செய்துவிட்டான். அவர்கள் இருந்த நிலையிலிருந்து அவ்விருவரையும் அவன் வெளியேற்றி விட்டான். நாம் கூறினோம்: "நீங்கள் இங்கிருந்து இறங்கி விடுங்கள். நீங்கள் ஒருவருக்கொருவர் பகைவர்களாக இருப்பீர்கள். ஒரு குறிப்பிட்ட காலம்வரை உங்களுக்குத் தங்குமிடமும் வாழ்க்கை வசதிகளும் உண்டு". 37. ஆதம் தம் இறைவனிடமிருந்து (பிரார்த்தனைக்கான) சில வார்த்தைகளைக் கற்றுக் கொண்டார். இறைவன் அவரது பாவமன்னிப்புக் கோருதலை ஏற்றுக்கொண்டான். நிச்சயமாக அவன் பாவமன்னிப்பை ஏற்றுக்கொள்பவனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். 38. "நீங்கள் அனைவரும் இங்கிருந்து இறங்கி விடுங்கள். என்னிடமிருந்து உங்களுக்கு வழிகாட்டுதல் வரும்போது யாரெல்லாம் என் வழிகாட்டுதலைப் பின்பற்றுவார்களோ அவர்களுக்கு எவ்வித அச்சமும் இல்லை; அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள். 39. நிராகரித்து நம்

சான்றுகளை மறுப்பவர்கள்தான் நரகவாசிகள். அதில் அவர்கள் என்றென்றும் வீழ்ந்து கிடப்பார்கள்" என்று நாம் கூறினோம். 40. இஸ்ராயீலின் மக்களே! நான் உங்களுக்கு வழங்கிய அருட்கொடைகளை நினைவுகூருங்கள். நீங்கள் எனக்கு அளித்த வாக்குறுதியை நிறைவேற்றுங்கள். நான் உங்களுக்கு அளித்த வாக்குறுதியை நிறைவேற்றுவேன். என்னையே அஞ்சுங்கள். 41. நான் அருளியுள்ளதன் (குர்ஆன்) மீது நம்பிக்கை கொள்ளுங்கள். அது உங்களிடம் உள்ளதை உண்மைப்படுத்துகிறது. அதனை மறுப்பவர்களில் முதன்மையானவர்களாக ஆகிவிடாதீர்கள். என் வசனங்களை அற்ப ஆதாயத்திற்கு விற்று விடாதீர்கள். என்னையே அஞ்சுங்கள். 42. அறிந்துகொண்டே சரியானதைத் தவறானதுடன் கலக்காதீர்கள். உண்மையை மறைத்துவிடாதீர்கள். 43. தொழுகையைக் கடைப்பிடித்து கடமையாக்கப்பட்ட தர்மத்தையும் (ஜகாத்) கொடுத்து வாருங்கள். தொழுகைக்காக குனிபவர்களுடன் நீங்களும் குனியுங்கள். 44. பிற மக்களை நன்மை செய்யும்படி தூண்டிவிட்டு உங்களை நீங்களே மறந்து விடுகிறீர்களா? நீங்களோ வேதத்தை வாசித்துக் கொண்டிருக்கிறீர்கள்! நீங்கள் புரிந்துகொள்ள மாட்டீர்களா? 45. பொறுமை மற்றும் தொழுகையின் மூலம் உதவி தேடுங்கள். நிச்சயமாக அது பாரமான ஒன்றுதான். ஆனால் நிச்சயமாக இது உள்ளச்சமுடையவர்களுக்கே தவிர (மற்றவர்களுக்கு) மிகப் பாரமானதாகவே இருக்கும். 46.அவர்கள் தங்கள் இறைவனைச் சந்திக்க வேண்டும், அவன் பக்கமே திரும்ப வேண்டும் என்பதை உறுதியாக அறிவார்கள்.

47. இஸ்ராயீலின் மக்களே! நான் உங்களுக்கு வழங்கிய அருட்கொடையையும் உலகத்தார் அனைவரையும்விட உங்களைச் சிறப்பாக்கி வைத்ததையும் நினைவுகூருங்கள். 48. நீங்கள் ஒருநாளை அஞ்சிக்கொள்ளுங்கள். அந்நாளில் எந்த உயிரும் மற்றொரு

உயிருக்கு எவ்விதப் பயனையும் அளிக்காது; எவரிடமிருந்தும் எந்தப் பரிந்துரையும் ஏற்றுக்கொள்ளப்படாது; பிணையாக எதுவும் பெறப்பட்டு எவரும் விடுவிக்கப்படவும் மாட்டார்கள்; அவர்களுக்கு எவ்வித உதவியும் கிடைக்காது. 49. பாரோவுடைய கூட்டத்தாரிடமிருந்து நாம் உங்களைக் காப்பாற்றிய சந்தர்ப்பத்தை நினைவுகூருங்கள். அவர்கள் உங்களைக் கொடிய வேதனையில் ஆழ்த்தி வைத்திருந்தார்கள். அவர்கள் உங்களுடைய ஆண் மக்களைக் கொலை செய்துகொண்டும் பெண் மக்களை உயிருடன் விட்டு வைத்துக்கொண்டும் இருந்தார்கள். இதில் உங்கள் இறைவனிடமிருந்து பெரும் சோதனை இருந்தது. 50. நாம் கடலைப் பிளந்து உங்களைக் காப்பாற்றி நீங்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே பாரோவுடைய கூட்டத்தாரை மூழ்கடித்தோம். 51. (வேதத்தை அருள்வதற்காக) நாம் மோசேவுக்கு நாற்பது இரவுகளை வாக்களித்தோம். ஆனால் அவர் இல்லாத சமயத்தில் நீங்கள் காளைக்கன்றைக் கடவுளாக ஆக்கிக் கொண்டீர்கள். நீங்கள் அக்கிரமக்காரர்களாக இருந்தீர்கள். 52. நீங்கள் நன்றியுடையோராக இருப்பீர்கள் என்பதற்காக அதன் பின்னரும் நாம் உங்களை மன்னித்தோம். 53.நீங்கள் நேர்வழி பெறவேண்டும் என்பதற்காக நாம் மோசேவுக்கு வேதத்தையும், நன்மை தீமைகளைப் பிரித்தறியக்கூடியதையும் வழங்கினோம். 54. மோசே தம் சமூகத்தாரிடம், “என் சமூகமே! நீங்கள் காளைக்கன்றைக் கடவுளாக்கிக் கொண்டதன்மூலம் உங்களுக்கு நீங்களே தீங்கிழைத்துக்கொண்டீர்கள். ஆகவே உங்களைப் படைத்தவனிடம் பாவமன்னிப்புக் கோருங்கள். உங்கள் குற்றவாளிகளை உங்கள் கைகளாலேயே கொன்றுவிடுங்கள். இதுவே உங்களைப் படைத்தவனிடம் உங்களுக்குச் சிறந்ததாகும். அவன் உங்கள் பாவமன்னிப்புக் கோரிக்கையை ஏற்றுக் கொண்டான். நிச்சயமாக அவன் பாவமன்னிப்பை ஏற்றுக்கொள்பவனாகவும்

இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்" என்று கூறியபோது **55.** "மோசே! நாங்கள் அல்லாஹ்வை கண்கூடாகக் காணும்வரை உம்மை ஒருபோதும் நம்ப மாட்டோம்" என்று நீங்கள் கூறியதை நினைவுகூருங்கள். அப்போது நீங்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே பேரிடி உங்களைத் தாக்கியது. **56.**மரணித்துவிட்ட பின்னரும் நன்றி செலுத்தும்பொருட்டு மீண்டும் உங்களை உயிர்ப்பித்தோம். **57.** உங்கள் மீது மேகத்தை நிழலிடச் செய்தோம். உங்களுக்கு 'மன்னு, சல்வா' (எனும் உணவுகளை) வழங்கினோம். நாம் உங்களுக்கு வழங்கிய தூய்மையான உணவுகளை உண்ணுங்கள். அவர்கள் நமக்கு எந்த இழப்பையும் ஏற்படுத்தவில்லை. மாறாக தமக்குத்தாமே இழப்பை ஏற்படுத்திக் கொண்டார்கள்.

**58.** இந்நகருக்குள் நுழைந்து நீங்கள் விரும்பியவாறு தாராளமாக உண்ணுங்கள். அதன் வாயிலில் சிரம்பணிந்தவாறு, "இறைவா! எங்கள் பாவங்களை மன்னிப்பாயாக" என்று கூறியவாறு நுழையுங்கள். நாம் உங்கள் பாவங்களை மன்னித்து விடுவோம். நன்மை செய்வோருக்கு அதிகமாகவும் வழங்குவோம். **59.** ஆனால் அக்கிரமக்காரரர்கள் தம்மிடம் கூறப்பட்டதை வேறொரு சொல்லாக மாற்றிவிட்டார்கள். ஆகவே அக்கிரமம் செய்த அவர்கள் மீது அவர்களின் அடிபணியாமையினால் வானத்திலிருந்து வேதனையை நாம் இறக்கினோம். **60.** மோசே தம் சமூகத்தாருக்காகத் தண்ணீர் வேண்டி பிரார்த்தித்தபோது, "உம் கைத்தடியால் பாறையின்மீது அடிப்பீராக" என்று நாம் கூறினோம். அப்போது அதிலிருந்து பன்னிரண்டு ஊற்றுகள் பீறிட்டு வந்தன. ஒவ்வொரு பிரிவினரும் தாம் அருந்தவேண்டிய பகுதியை அறிந்துகொண்டனர். "அல்லாஹ் வழங்கியவற்றிலிருந்து உண்ணுங்கள், பருகுங்கள். ஆனால் பூமியில் குழப்பம் செய்துகொண்டு திரியாதீர்கள்". **61.** "மோசே! நாங்கள்

ஒரே வகையான உணவை உட்கொண்டு சகித்திருக்க முடியாது. ஆகவே எங்களுக்காக உம் இறைவனிடம் பிரார்த்தனை செய்யும். அவன் நிலம் விளைவிக்கின்ற கீரை, வெள்ளரிக்காய், கோதுமை, பருப்பு, வெங்காயம் ஆகியவற்றை எங்களுக்கு வெளிப்படுத்தித் தரட்டும்" என்று நீங்கள் கூறியபோது "சிறந்த பொருளுக்குப் பதிலாக அற்பப் பொருளையா வேண்டுகிறீர்கள்? அப்படியானால் நீங்கள் ஏதாவது ஒரு நகருக்குச் சென்று விடுங்கள். அங்கு நீங்கள் கேட்பவையெல்லாம் கிடைக்கும்" என்று மோசே கூறினார். அவர்கள் மீது இழிவும் வறுமையும் சாட்டப்பட்டன. அவர்கள் இறைக்கோபத்திற்கு ஆளாகிவிட்டார்கள். ஏனெனில் அவர்கள் இறைவனின் சான்றுகளை மறுத்துக்கொண்டும் தூதர்களை அநியாயமாகக் கொலை செய்துகொண்டும் இருந்தார்கள். இதற்குக் காரணம் அவர்கள் அடிபணியாமல் வரம்பு மீறிக்கொண்டு இருந்ததேயாகும்.

**62.** நம்பிக்கை கொண்டவர்கள், யூதர்கள், கிறிஸ்தவர்கள், சாபியீன்கள் ஆகியோரில் யார் அல்லாஹ்வின்மீதும் மறுமைநாளின்மீதும் நம்பிக்கைகொண்டு, நற்செயல்கள் புரிகிறார்களோ அவர்களுக்கு இறைவனிடத்தில் கூலி இருக்கின்றது. அவர்களுக்கு எவ்வித அச்சமும் இல்லை. அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள்.

**63.** நாம் தூர்மலையை உங்கள் மீது உயர்த்தி உங்களிடம் உறுதிமொழி வாங்கியபோது, "உங்களுக்கு வழங்கியவற்றை உறுதியாகப் பற்றிக் கொள்ளுங்கள். அதிலுள்ளவற்றை நினைவில் வையுங்கள். அதனால் நீங்கள் உங்களைக் காத்துக்கொள்ளலாம்'' என்று கூறினோம். **64.** அதன் பின்னரும் நீங்கள் புறக்கணித்து விட்டீர்கள். இறைவனின் அருளும் அவனது கருணையும் உங்கள் மீது இல்லாதிருந்தால் நிச்சயம் நீங்கள் அழிந்து விட்டிருப்பீர்கள்.

*65.* சனிக்கிழமை விஷயத்தில் வரம்பு மீறியவர்களைப்பற்றி நீங்கள் நன்றாக அறிந்திருக்கிறீர்கள். அவர்களை நோக்கி, "நீங்கள் இழிவான குரங்குகளைப் போலாகி விடுங்கள்" என்று கூறினோம். *66.* நாம் அதனை அன்று வாழ்ந்த மக்களுக்கும் அதற்குப்பின் வரக்கூடிய மக்களுக்கும் படிப்பினையாகவும் இறையச்சமுடையோருக்கு அறிவுரையாகவும் ஆக்கினோம்.

*67.* மோசே தம் சமூகத்தாரிடம், "நீங்கள் ஒரு பசுவை அறுக்க வேண்டும்" என்று அல்லாஹ் கட்டளையிடுகிறான் என்று கூறியபோது அவர்கள், "நீர் எங்களைக் கேலி செய்கிறீரா?" என்றார்கள். அதற்கு அவர், "நான் மூடனாக ஆவதை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்பு தேடுகிறேன்" என்றார். *68.* அதற்கு அவர்கள், "அது எத்தகையது என்பதை எங்களுக்கு விளக்குமாறு உம் இறைவனிடம் எங்களுக்காகக் கேட்பீராக" என்றார்கள். அதற்கு அவர், "அது கிழடாகவோ, கன்றாகவோ இல்லாமல் இரண்டிற்கும் இடைப்பட்டதாக இருக்க வேண்டும் என்று இறைவன் கூறுகிறான். ஆகவே உங்களுக்கு இடப்பட்ட கட்டளையை நிறைவேற்றுங்கள்" என்றார். *69.* மீண்டும் அவர்கள், "அதனுடைய நிறம் என்ன என்பதை விளக்கும்படி உம் இறைவனிடம் கேட்பீராக" என்று கேட்டார்கள். அதற்கு அவர், "அது பார்ப்பவர்களைப் பரவசப்படுத்தக்கூடிய தூயமஞ்சள் நிற பசுவாகும் என்று இறைவன் கூறுகிறான்" என்றார். *70.* அப்போது அவர்கள், "அது எத்தகையது என்பதை விளக்கும்படி உம் இறைவனிடம் கேட்பீராக. ஏனெனில் எங்களுக்குப் பசுக்கள் ஒரே மாதிரியாகவே தோன்றுகின்றன. அல்லாஹ் நாடினால் இதில் நாங்கள் நேர்வழி பெறுவோம்" என்று கூறினார்கள். *71.* அதற்கு அவர், "அது நிலத்தை உழுவதற்கோ, பாசனத்திற்குப் பயன்படுத்தப்படாத குறைகளற்ற ஆரோக்கியமான பசுவாக இருக்க வேண்டும் என்று இறைவன் கூறுகிறான்" என்று கூறினார். அதற்கு அவர்கள்,

‘இப்போதுதான் நீர் தெளிவான விஷயத்தை கொண்டு வந்துள்ளீர்’ என்று கூறி அறுக்க மனமின்றியே அறுத்தார்கள். **72.** நீங்கள் ஒருவரைக் கொன்றுவிட்டு ஒருவருக்கொருவர் குற்றம் சாட்டிக் கொண்டிருந்தீர்கள். ஆனால் நீங்கள் மறைக்க விரும்பியவற்றை அல்லாஹ் வெளிப்படுத்த நாடிவிட்டான். **73.** “அதன் ஒரு பாகத்தைக் கொண்டு அந்த சடலத்தின் மீது அடியுங்கள்” என்று நாம் கட்டளையிட்டோம். இவ்வாறே அல்லாஹ் இறந்தவர்களை உயிர்ப்பிக்கின்றான். நீங்கள் புரிந்து கொள்வதற்காக அவன் உங்களுக்குத் தன் சான்றுகளைக் காட்டுகிறான்.

**74.** இதன் பின்னரும் உங்கள் இதயங்கள் இறுகி விட்டன. அவை கற்பாறைகளைப்போல அல்லது அவற்றை விடவும் கடினமாகி விட்டன. ஏனெனில் சில பாறைகளிலிருந்து ஆறுகள் பொங்கி ஓடுகின்றன. சில பாறைகள் பிளந்து அவற்றிலிருந்து தண்ணீர் வெளிப்பட்டு விடுகிறது. அவற்றில் சில இறையச்சத்தால் உருண்டு கீழே விழுந்து விடுகின்றன. நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் கவனிக்காமலில்லை.

**75.** நீங்கள் சொல்வதைக்கேட்டு அவர்கள் நம்பிக்கை கொள்வார்கள் என்று எதிர்பார்க்கிறீர்களா? அவர்களில் ஒரு பிரிவினர் இறைவாக்குகளைச் செவிமடுத்து புரிந்துகொண்ட பின்னரும் வேண்டுமென்றே அதனை மாற்றி விடுகிறார்கள். **76.** அவர்கள் நம்பிக்கை கொண்டோரைச் சந்தித்தால் “நாங்களும் நம்பிக்கை கொண்டுள்ளோம்” என்று கூறுகிறார்கள். ஆனால் அவர்கள் தங்களுக்குள் தனிமையில் சந்தித்துக்கொண்டால் “அல்லாஹ் உங்களுக்கு வெளிப்படுத்தி இருப்பதை அவர்களிடம் கூறி விடுகிறீர்களே! (அதைக்கொண்டு) அவர்கள் உங்கள் இறைவனிடத்தில் உங்களுக்கு எதிராக வாதாடுவதற்காகவா?, உங்களுக்கு அறிவு இல்லையா” என்று கேட்கிறார்கள். **77.** அவர்கள்

மறைப்பதையும் வெளிப்படுத்துவதையும் அல்லாஹ் நன்கறிவான் என்பதை அவர்கள் அறிய மாட்டார்களா என்ன?

78. அவர்களில் படிப்பறிவற்றவர்களும் இருக்கிறார்கள். குருட்டு நம்பிக்கைகளைத்தவிர வேதத்தைப்பற்றி எதையும் அவர்கள் அறிய மாட்டார்கள். அவர்களிடம் வெற்று யூகங்களைத்தவிர வேறொன்றுமில்லை. 79. தங்கள் கைகளாலேயே (சுயமாக) ஒரு வேதத்தை எழுதிக்கொண்டு அற்ப ஆதாயம் பெறுவதற்காக 'இது அல்லாஹ்விடமிருந்து வந்துள்ளது' என்று கூறுவோருக்குக் கேடுதான். அவர்களின் கைகள் எழுதியதனாலும் அவர்களுக்குக் கேடுதான். அவர்கள் சம்பாதித்ததும் அவர்களுக்குக் கேடுதான். 80. "குறிப்பிட்ட சில நாட்களைத்தவிர நரகம் எங்களைத் தீண்டாது" என்று அவர்கள் கூறுகிறார்கள். நீர் கேளும்: "அப்படியொரு உறுதிமொழியை அல்லாஹ்விடமிருந்து பெற்றிருக்கிறீர்களா? அவ்வாறாயின் அல்லாஹ் ஒருபோதும் தன் உறுதிமொழிக்கு மாறுசெய்ய மாட்டான். அல்லது நீங்கள் அறியாததை அல்லாஹ்வின் மீது புனைந்து கூறுகிறீர்களா?" 81. அப்படியல்ல. எவரெல்லாம் தீயசெயல்கள் புரிந்து, தங்களது பாவங்களால் சூழப்பட்டார்களோ அவர்கள்தான் நரகவாசிகள். அதில் அவர்கள் என்றென்றும் வீழ்ந்து கிடப்பார்கள். 82. நம்பிக்கைகொண்டு, நற்செயல்கள் புரிபவர்கள்தான் சொர்க்கவாசிகள். அதில் அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள்.

83. நாம் இஸ்ராயீலின் மக்களிடம், "நீங்கள் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரையும் வணங்கக்கூடாது. பெற்றோர்களுடனும் உறவினர்களுடனும் அநாதைகளுடனும் ஏழைகளுடனும் நல்ல முறையில் நடந்துகொள்ள வேண்டும். மக்களிடம் நல்லவற்றைக் கூறுங்கள். தொழுகையைக் கடைப்பிடித்து, கடமையாக்கப்பட்ட தர்மத்தையும் கொடுத்து வாருங்கள்" என்று வாக்குறுதி வாங்கினோம்.

ஆனால் உங்களில் சிலரைத் தவிர அனைவருமே பின்வாங்கி விட்டீர்கள். நீங்கள் வாக்குறுதி தந்துவிட்டு மாறுசெய்யும் மக்களாக இருக்கிறீர்கள்.

*84.* "நீங்கள் உங்களிடையே இரத்தம் சிந்தக்கூடாது. உங்கள் மக்களை உங்கள் ஊர்களிலிருந்து வெளியேற்றக்கூடாது" என்று நாம் உங்களிடம் வாக்குறுதி வாங்கியபோது நீங்கள் அதனை ஏற்றுக் கொண்டீர்கள். நீங்களே அதற்கு சாட்சியாகவும் இருந்தீர்கள். *85.* இதன் பின்னரும் நீங்கள் சொந்த மக்களையே கொலை செய்கிறீர்கள். உங்களைச் சார்ந்த ஒரு பிரிவினரை அவர்களுடைய ஊர்களிலிருந்து வெளியேற்றுகிறீர்கள். அவர்களுக்கெதிராக அவர்களின் பகைவர்களுக்குப் பாவமான, அநியாயமான காரியங்களில் உதவி செய்கிறீர்கள். அவர்களே உங்களிடம் கைதிகளாகப் பிடிபட்டு வந்தால் அவர்களை மீட்புத்தொகை கொடுத்து விடுவிக்கிறீர்கள். ஆனால் அவர்களை வெளியேற்றுவதே உங்களுக்குத் தடைசெய்யப்பட்டு இருந்ததே! அப்படியென்றால் வேதத்தின் ஒருபகுதியை ஏற்றுக்கொண்டு மறுபகுதியை மறுக்கிறீர்களா? உங்களில் இவ்வாறு செய்பவர்களுக்கு இவ்வுலக வாழ்வில் இழிவைத் தவிர வேறொன்றும் இல்லை. மறுமை நாளிலோ கடும் வேதனையின் பக்கம் அவர்கள் தள்ளப்படுவார்கள். நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் கவனிக்காமலில்லை. *86.* இவர்கள்தான் மறுமைக்குப் பதிலாக இவ்வுலக வாழ்வை விலைக்கு வாங்கிக் கொண்டவர்கள். எனவே இவர்களின் தண்டனை குறைக்கப்படாது. இவர்களுக்கு எவ்வித உதவியும் கிடைக்காது.

*87.* நாம் மோசேவுக்கு வேதத்தை வழங்கினோம். அவருக்குப்பின் தொடர்ந்து தூதர்களை அனுப்பினோம். மரியாளின் மகன் இயேசுவுக்குத் தெளிவான சான்றுகளைக் கொடுத்து பரிசுத்த ஆன்மாவைக்கொண்டு அவரைப் பலப்படுத்தினோம். உங்கள்

மனம் விரும்பாததைத் தூதர்கள் கொண்டு வந்தபோதெல்லாம் நீங்கள் ஆணவம் கொண்டு ஒரு பிரிவினரை மறுத்தீர்கள், ஒரு பிரிவினரைக் கொலை செய்தீர்கள். 88. "எங்களுடைய உள்ளங்கள் மூடப்பட்டுள்ளன" என்று அவர்கள் கூறுகிறார்கள். அப்படியல்ல. அவர்களின் நிராகரிப்பினால் அல்லாஹ் அவர்களைச் சபித்து விட்டான். எனவே அவர்கள் மிகக்குறைவாகவே நம்பிக்கை கொள்கிறார்கள். 89. அவர்களிடம் உள்ளவற்றை உண்மைப்படுத்தக்கூடிய வேதம் இறைவனிடமிருந்து அவர்களிடம் வந்தபோது அதனை அவர்கள் நிராகரித்து விட்டார்கள். இதற்கு முன்பு அவர்கள் நிராகரிப்பாளர்களுக்கு எதிராக வெற்றியளிக்கும்படி பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார்கள். ஆனால் அவர்கள் அறிந்து கொண்டிருந்த ஒன்று அவர்களிடம் வந்தபோது அதனை அவர்கள் நிராகரித்து விட்டார்கள். எனவே நிராகரிப்பாளர்கள் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும்!. 90. அவர்கள் தங்களைத் தாங்களே விற்று பெற்றுக்கொண்டது எவ்வளவு மோசமானது. அதாவது அல்லாஹ் தனது அருளால் தான் விரும்பிய அடியார்களுக்கு அருளியதைப் பொறாமையினால் அவர்கள் மறுக்கிறார்கள். எனவே அவர்கள் கோபத்திற்கு மேல் கோபத்திற்கு ஆளாகி விட்டார்கள். நிராகரிப்பாளர்களுக்கு இழிவுமிக்க வேதனையுண்டு.

91. "அல்லாஹ் அருளிய இவ்வேதத்தின் மீது நம்பிக்கை கொள்ளுங்கள்" என்று அவர்களிடம் கூறப்பட்டால் "எங்களுக்கு அருளப்பட்டவற்றின் மீதுதான் நாங்கள் நம்பிக்கைகொள்வோம்" என்று கூறி அதற்குப் பின்னால் வந்த இவ்வேதத்தை நிராகரிக்கிறார்கள். ஆனால் இதுவோ சத்தியமானதாகவும், அவர்களிடம் உள்ளவற்றை உண்மைப்படுத்தக்கூடியதாகவும் இருக்கின்றது. நீர் கேளும்: "உண்மையில் நீங்கள் நம்பிக்கையாளர்களாக இருந்தால் இதற்கு முன் இறைத்தூதர்களை ஏன் கொலை செய்துகொண்டிருந்தீர்கள்?"

*92.* மோசே உங்களிடம் தெளிவான சான்றுகளைக் கொண்டு வந்தார். ஆனால் அவர் இல்லாத சமயத்தில் நீங்கள் காளைக்கன்றை கடவுளாக்கிக் கொண்டீர்கள். நீங்கள் அநியாயக்காரரர்களாக இருக்கின்றீர்கள். *93.* நாம் தூர்மலையை உங்களுக்கு மேலே உயர்த்தி ''உங்களுக்கு வழங்கிய கட்டளைகளை உறுதியாகப் பற்றிக்கொள்ளுங்கள்; செவிசாயுங்கள்'' என்று உங்களிடம் வாக்குறுதி வாங்கினோம். அவர்களோ, "நாங்கள் செவியேற்றோம், ஆனால் ஏற்றுக்கொள்ளவில்லை" என்று கூறினார்கள். அவர்களின் நிராகரிப்பினால் காளைக்கன்றின் மீதுள்ள விருப்பம் அவர்களின் உள்ளங்களில் ஆழப்பதிந்து விட்டது. நீர் கூறும்: "நீங்கள் நம்பிக்கை கொண்டவர்களாக இருந்தால் உங்களது நம்பிக்கை கற்றுக்கொடுப்பது எவ்வளவு மோசமானது?!". *94.* நீர் கூறும்: "அல்லாஹ்விடம் உள்ள மறுமையின்வீடு (சுவர்க்கம்) மற்ற மக்களுக்கு அன்றி உங்களுக்கு மட்டுமே சொந்தமானது என்பதில் (உங்கள் கூற்றில்) நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் மரணத்தை விரும்புங்கள்". *95.* அவர்களின் கரங்கள் முன்னரே செய்தவற்றினால் ஒருபோதும் அவர்கள் அதனை விரும்ப மாட்டார்கள். அல்லாஹ் அக்கிரமக்காரரர்களை நன்கறிந்தவன். *96.* எல்லா மக்களை விடவும், இணைவைப்பாளர்களை விடவும் வாழ்வின் மீது அதிக பேராசை உடையவர்களாக அவர்களை நீர் காண்பீர். அவர்களில் ஒவ்வொருவரும் ஆயிரம் ஆண்டுகள் வாழவேண்டுமென விரும்புகிறார்கள். ஆயினும் அவர்களது நீண்ட ஆயுள் அவர்களை வேதனையிலிருந்து காப்பாற்றி விடாது. அவர்கள் செய்வதையெல்லாம் அல்லாஹ் பார்த்துக்கொண்டிருக்கிறான்.

*97.* நீர் கூறும்: "ஜிப்ரீலுக்குப் பகைவராக இருப்பவர் அறிந்து கொள்ளட்டும். அவர்தான் இந்த குர்ஆனை இறைக்கட்டளைப்படி உம் உள்ளத்தில் அருளினார். இது தனக்கு முன்னுள்ளவற்றை உண்மைப்படுத்தக்கூடியதாகவும்,

நம்பிக்கையாளர்களுக்கு வழிகாட்டியாகவும், நற்செய்தியாகவும் இருக்கின்றது". 98. யார் அல்லாஹ்வுக்கும் அவனது வானவர்களுக்கும் அவனது தூதர்களுக்கும் கேப்ரியேல் மற்றும் மைக்கேலுக்கும் பகைவர்களாக இருக்கின்றார்களோ அத்தகைய நிராகரிப்பாளர்களுக்கு அல்லாஹ்வும் பகைவனாக இருக்கின்றான். 99. நாம் உமக்குத் தெளிவான சான்றுகளை அருளியுள்ளோம். வரம்பு மீறியவர்களைத்தவிர வேறு எவரும் இதனை மறுக்க மாட்டார். 100. அவர்கள் ஏதேனும் ஒப்பந்தம் செய்யும்போதெல்லாம் அவர்களில் ஒரு பிரிவினர் அதனை முறித்து விடவில்லையா? மாறாக அவர்களில் பெரும்பாலோர் நம்பிக்கைகொள்ள மாட்டார்கள். 101. அவர்களிடம் உள்ளவற்றை உண்மைப்படுத்தக்கூடிய ஒரு தூதர் அல்லாஹ்விடமிருந்து வந்தபோது வேதம் வழங்கப்பட்டவர்களில் ஒரு பிரிவினர் ஏதும் அறியாதவர்களைப்போல் இறைவேதத்தைத் தங்கள் முதுகுகளுக்குப் பின்னால் எறிந்து விட்டார்கள்.

102. அவர்கள் சாலமனுடைய ஆட்சிக்கெதிராக சாத்தான்கள் ஓதியவற்றையே பின்பற்றினார்கள். சாலமன் நிராகரிக்கவில்லை. மாறாக சாத்தான்களே நிராகரித்துக் கொண்டிருந்தனர். அவர்கள் மக்களுக்கு சூனியத்தையும் பாபிலோன் எனும் நகரத்தில் இருந்த ஹாரூத், மாரூத் என்ற வானவர்களுக்கு இறக்கப்பட்டதையும் கற்றுக்கொடுத்துக் கொண்டிருந்தனர். அவ்வானவர்கள் எவருக்கேனும் இக்கலையைக் கற்றுக்கொடுக்க நேர்ந்தால் "நாங்கள் உங்களுக்கு ஒரு சோதனையாகவே இருக்கின்றோம். எனவே இதனைக் கற்று நிராகரிப்பாளராகி விடாதீர்'' என்று கூறிவிடுவார்கள். ஆயினும் அவர்கள் அவ்விருவரிடமிருந்து கணவன், மனைவிக்கிடையே பிளவு ஏற்படுத்தக்கூடிய விஷயத்தைக் கற்றுக்கொண்டார்கள். ஆயினும் அல்லாஹ்வின் அனுமதியின்றி அவர்களால் அதன்மூலம் எவருக்கும் எந்தத் தீங்கும் இழைத்துவிட முடியாது. அவர்கள் தங்களுக்குப்

பயனளிக்காத, தீங்கிழைக்கக்கூடிய ஒன்றையே கற்றுக்கொண்டார்கள். இதனை விலைக்கு வாங்கிக் கொண்டவனுக்கு மறுமையில் எவ்வித பாக்கியமும் இல்லை என்பதை அவர்கள் நன்கு அறிந்திருந்தார்கள். தங்கள் உயிர்களை விற்று அவர்கள் வாங்கிக்கொண்ட பொருள் எவ்வளவு மோசமானது!. இதனை அவர்கள் அறிந்திருக்க வேண்டுமே! **103.** அவர்கள் நம்பிக்கைகொண்டு, இறையச்சத்துடன் செயல்பட்டிருந்தால் அல்லாஹ்விடமிருந்து அவர்களுக்குக் கிடைக்கும் கூலி மேலானதாக இருந்திருக்கும். இதனை அவர்கள் அறிந்திருக்க வேண்டுமே!

**104.** நம்பிக்கையாளர்களே, 'ராயினா' (எங்கள் இடையனே) என்று கூறாதீர்கள்*. மாறாக 'உன்ளுர்னா' (எங்களைக் கவனியுங்கள்) என்று கூறுங்கள். அவர் கூறுவதைக் கவனமாகக் கேளுங்கள். நிராகரிப்பாளர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு. **105.** நிராகரிப்பாளர்கள் அவர்கள் வேதம் வழங்கப்பட்டவர்களாக இருந்தாலும் சரி, இணைவைப்பாளர்களாக இருந்தாலும் சரி - உங்கள் இறைவனிடமிருந்து உங்களுக்கு ஏதேனும் நன்மை அருளப்படுவதை விரும்ப மாட்டார்கள். ஆயினும் அல்லாஹ் தான் நாடியவர்களையே தன் கருணையை வழங்க தேர்ந்தெடுத்துக் கொள்கிறான். அல்லாஹ் மாபெரும் கிருபையாளனாக இருக்கின்றான். **106.** நாம் ஏதேனும் ஒரு வசனத்தை நீக்கினால் அல்லது மறக்கடிக்கச்செய்தால் அதைவிடச் சிறந்த அல்லது

---

*மக்களில் சிலர் இறைத்தூதருக்கருகில் அமர்ந்து கொண்டு அவரது போதனைகளை பரிகசிக்கும் வகையிலான வார்த்தைகளைக் கொண்டு பேசுவார்கள். உதாரணமாக, 'கொஞ்சம் கவனிக்கிறீர்களா' என்று பொருள்படும் அரபு மொழிச் சொல்லான 'உன்ளுர்னா' என்பதற்கு பரிகாசம் செய்யும் விதத்தில் அவர்கள் 'எங்கள் இடையனே' என்று பொருள்படும் 'ராயினா' என்ற வார்த்தையைப் பயன்படுத்துவார்கள்.

அதைப்போன்ற வேறொரு வசனத்தைக் கொண்டு வருவோம். அல்லாஹ் ஒவ்வொரு பொருளின் மீதும் பேராற்றலுடையவன் என்பதை நீங்கள் அறியவில்லையா? 107. வானங்கள் மற்றும் பூமியின் ஆட்சி அல்லாஹ்வுக்கே உரியது என்பதையும் அவனைத்தவிர வேறு எந்தப் பாதுகாவலனும் உதவியாளனும் உங்களுக்கு இல்லை என்பதையும் நீங்கள் அறியவில்லையா? 108. இதற்கு முன்னர் மோசேவிடம் கேள்விகள் கேட்கப்பட்டதைப்போன்று உங்கள் தூதரிடமும் கேட்க விரும்புகிறீர்களா? எவர் நம்பிக்கையை நிராகரிப்பாக மாற்றிக் கொண்டாரோ நிச்சயமாக அவர் நேரான வழியிலிருந்து பிறழ்ந்து விட்டவராவார்.

109. வேதக்காரர்களில் பெரும்பாலோர் நீங்கள் நம்பிக்கைகொண்டபின் எப்படியாவது உங்களை நிராகரிப்பாளர்களாக்கிவிட வேண்டும் என்று விரும்புகிறார்கள். சத்தியம் அவர்களுக்குத் தெளிவான பின்னரும் பொறாமையினால்தான் இவ்வாறு விரும்புகிறார்கள். எனவே அல்லாஹ்வின் தீர்ப்பு வரும்வரை அவர்களை மன்னித்து சகித்துக்கொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் ஒவ்வொன்றின்மீதும் பேராற்றலுடையவன். 110. நீங்கள் தொழுகையைக் கடைப்பிடித்து கடமையாக்கப்பட்ட தர்மத்தையும் கொடுத்து வாருங்கள். நீங்கள் உங்களுக்காக முன்னரே சேர்த்து வைக்கும் நன்மையை அல்லாஹ்விடம் பெற்றுக்கொள்வீர்கள். நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் செய்பவற்றைப் பார்த்துக்கொண்டிருக்கிறான். 111. யூதர்கள் அல்லது கிறிஸ்தவர்களைத் தவிர வேறு எவரும் சொர்க்கத்தில் நுழைய மாட்டார்கள் என்று அவர்கள் கூறுகிறார்கள். இது அவர்களின் வீணான ஆசைகளேயாகும். நீர் கூறும்: “நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் உங்கள் ஆதாரத்தைக் கொண்டு வாருங்கள்”. 112. அப்படியல்ல. எவர் தம்மை முழுமையாக அல்லாஹ்விடம் ஒப்படைத்து தூய

எண்ணத்துடன் நற்செயல் புரிபவராகவும் இருக்கின்றாரோ அவரது கூலி அவரது இறைவனிடத்தில் உள்ளது. இத்தகையோருக்கு எவ்வித அச்சமும் இல்லை. அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள்.

113. "கிறிஸ்தவர்கள் எந்த அடிப்படையிலும் இல்லை" என்று யூதர்கள் கூறுகிறார்கள். "யூதர்கள் எந்த அடிப்படையிலும் இல்லை'' என்று கிறிஸ்தவர்கள் கூறுகிறார்கள். ஆயினும் அவர்கள் அனைவரும் வேதத்தை ஓதிக்கொண்டுதான் இருக்கிறார்கள். அவர்கள் கூறுவதைப்போன்றே, எதையும் அறியாதவர்களும் கூறுகிறார்கள். அவர்கள் முரண்பட்டுக்கொண்டிருக்கும் விஷயங்களில் அல்லாஹ்வே மறுமையில் தீர்ப்பளிப்பான். 114. இறையில்லங்களில் அவனது பெயர் நினைவுகூரப்படுவதைத் தடுத்துக்கொண்டும் அவற்றைப் பாழாக்க முயன்றுகொண்டும் இருப்பவனைவிட மிகப்பெரிய அக்கிரமக்காரன் யார்? இறையச்சம் உடையவர்களாக மட்டுமே அவற்றில் அவர்கள் நுழைந்திருக்க வேண்டும். அவர்களுக்கு இம்மையில் இழிவும் மறுமையில் கடும் வேதனையும் உண்டு. 115. கிழக்கும் மேற்கும் அல்லாஹ்வுக்கே உரியன. நீங்கள் எங்கு திரும்பினாலும் அங்கே அல்லாஹ்வின் முகம் இருக்கிறது. நிச்சயமாக அல்லாஹ் தாராளமானவனாகவும் நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். 116. "இறைவன் ஒரு மகனை ஏற்படுத்திக் கொண்டான்" என்று அவர்கள் கூறுகிறார்கள். மாறாக அவன் இதனை விட்டும் தூய்மையானவன். வானங்கள் மற்றும் பூமியில் உள்ள அனைத்தும் அவனுக்கே உரியன. அனைத்தும் அவனுக்கே அடிபணிகின்றன. 117. அவன் வானங்கள் மற்றும் பூமியை ஆதியில் உருவாக்கியவன். ஏதேனும் ஒரு காரியத்தை செய்யத் தீர்மானித்துவிட்டால் 'ஆகுக' என்றுதான் கூறுவான். அது ஆகிவிடும்.

118. ''அல்லாஹ் ஏன் எங்களுடன் பேசக்கூடாது அல்லது ஏதேனும் ஒருசான்று ஏன் எங்களிடம் வரக்கூடாது'' என்று

அறியாதவர்கள் கேட்கிறார்கள். இவ்வாறே இவர்களுக்கு முன்னிருந்தோரும் கூறினார்கள். இவர்களின் உள்ளங்கள் ஒன்றையொன்று ஒத்ததாகவே இருக்கின்றன. உறுதியாக நம்பிக்கை கொண்டோருக்கு சான்றுகளை மிகத்தெளிவாக நாம் விளக்கி விட்டோம். **119.** உம்மை சத்தியத்துடன் நற்செய்தியாளராகவும் எச்சரிக்கையாளராகவும் அனுப்பியுள்ளோம். நரகவாசிகளைப்பற்றி உம்மிடம் கேட்கப்படாது. **120.** யூதர்களும் கிறிஸ்தவர்களும் அவர்களின் மார்க்கத்தை நீர் பின்பற்றாதவரை உம்மைப்பற்றி ஒருபோதும் திருப்தியடைய மாட்டார்கள். நீர் கூறும்: "அல்லாஹ் காட்டிய வழியே நேரான வழியாகும்". உமக்கு இந்த ஞானம் வந்த பின்னரும் அவர்களின் விருப்பங்களை நீர் பின்பற்றுவீராயின் அல்லாஹ்வுக்கு எதிராக உமக்கு உதவ எந்த நண்பரோ உதவியாளரோ இருக்க மாட்டார். **121.** எவருக்கெல்லாம் நாம் வேதத்தை வழங்கியுள்ளோமோ அவர்கள் அதனைப் படிக்க வேண்டிய முறைப்படி படிக்கிறார்கள். இத்தகையோரே அதன்மீது நம்பிக்கை கொள்கிறார்கள். எவரெல்லாம் அதனை நிராகரிக்கிறார்களோ அவர்கள்தான் நஷ்டமடைந்தவர்கள்.

**122.** இஸ்ராயீலின் மக்களே! நான் உங்களுக்கு வழங்கிய என் அருட்கொடையையும், உலக மக்கள் அனைவரிலும் உங்களைச் சிறப்பாக்கி வைத்திருந்ததையும் நினைவுகூருங்கள். **123.** ஒருநாளை அஞ்சிக்கொள்ளுங்கள். அந்நாளில் ஒருவர் மற்றவருக்கு எவ்விதப் பயனையும் அளிக்க மாட்டார். எவரிடமிருந்தும் ஈடான எதுவும் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது. எவ்விதப் பரிந்துரையும் அவருக்குப் பயனளிக்காது. அவர்களுக்கு எங்கிருந்தும் உதவி கிடைக்காது. **124.** ஆப்ரஹாமை அவரது இறைவன் பல விஷயங்களில் சோதித்தபோது அவர் அவற்றை (வெற்றிகரமாக) நிறைவு செய்தார். அப்போது அவன், "நான் உம்மை மனிதர்களுக்குத்

தலைவராக்கப் போகின்றேன்" என்று கூறினான். அதற்கு அவர், "எனது சந்ததிகளிலிருந்தும் தலைவர்களை ஏற்படுத்துவாயா" என்று கேட்டார். "என் வாக்குறுதி அநியாயக்காரர்களைச் சாராது" என்று அவன் கூறினான்.

**125.** நாம் கஅபா எனும் ஆலயத்தை மக்கள் ஒன்றுகூடும் இடமாகவும் அமைதிக்குரிய இடமாகவும் ஆக்கினோம். வணங்குவதற்காக ஆப்ரஹாம் நின்ற இடத்தைத் தொழுகை புரியும் இடமாக ஆக்குமாறு கட்டளையிட்டோம். என் வீட்டை வலம் வருபவர்கள், அங்கு தங்கியிருப்பவர்கள், தொழுகைக்காக குனிபவர்கள், சிரம்பணிபவர்கள் ஆகியோருக்காக தூய்மையாக வைத்திருங்கள் என்று ஆப்ரஹாமிடமும், இஸ்மவேலிடமும் உறுதிமொழி வாங்கினோம். **126.** ஆப்ரஹாம், "நீ இந்த நகரத்தை அமைதியளிக்கும் நகரமாக ஆக்கி வைப்பாயாக. இங்கு வசிப்பவர்களில் எவரெல்லாம் அல்லாஹ்வையும் மறுமைநாளையும் நம்புகிறார்களோ அவர்களுக்குப் பழவகைகளில் இருந்து உணவளிப்பாயாக" என்று பிரார்த்தனை செய்தார். அதற்கு இறைவன், "நிராகரிப்பவர்களையும் சிறிது காலத்திற்கு நான் அனுபவிக்கச் செய்வேன். பின்னர் அவர்களை நரக வேதனையில் தள்ளிவிடுவேன். அது மிகவும் கெட்ட இருப்பிடமாகும்" என்று கூறினான்.

**127.** ஆப்ரஹாமும், இஸ்மவேலும் இறையில்லத்தின் சுவர்களை உயர்த்திக் கொண்டிருந்தபோது, "எங்கள் இறைவா! எங்களிடமிருந்து (இப்பணியை) ஏற்றுக்கொள்வாயாக. நிச்சயமாக நீ செவியேற்பவனாகவும் நன்கறிபவனாகவும் இருக்கின்றாய். **128.** எங்கள் இறைவா! எங்களை உனக்குக் கீழ்ப்படிந்தவர்களாக ஆக்குவாயாக. எங்கள் சந்ததிகளிலிருந்து முற்றிலும் உனக்கு அடிபணிந்து வாழும் ஒரு சமூகத்தை ஏற்படுத்துவாயாக. நாங்கள்

*நிறைவேற்ற வேண்டிய வழிபாட்டு முறைகளை எங்களுக்குக் காட்டுவாயாக. எங்களை மன்னித்து விடுவாயாக. நிச்சயமாக நீ பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றாய். **129.** எங்கள் இறைவா! அவர்களுக்கு உன் வசனங்களை எடுத்துரைத்து, வேதத்தையும் ஞானத்தையும் கற்றுக்கொடுத்து, அவர்களைத் தூய்மைப்படுத்தக்கூடிய ஒரு தூதரை அவர்களிலிருந்தே அவர்களுக்கு அனுப்புவாயாக. நிச்சயமாக நீ யாவற்றையும் மிகைத்தவனாகவும் ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றாய்" என்று பிரார்த்தனை செய்தார்கள்.*

***130.** தன்னைத்தானே மூடனாக்கிக் கொண்டவனைத்தவிர ஆப்ரஹாமின் மார்க்கத்தை வேறு யார்தான் புறக்கணிப்பார்? நாம் இவ்வுலகில் அவரைத் தேர்ந்தெடுத்துக்கொண்டோம். மறுமையில் அவர் நிச்சயம் நல்லோர்களில் ஒருவராக இருப்பார். **131.** அவரது இறைவன், அவரிடம் 'சரணடைந்து விடு' என்று கூறியபோது, "அகிலங்களின் இறைவனிடம் நான் சரணடைந்து விட்டேன்" என்று அவர் கூறினார். **132.** இதனையே ஆப்ரஹாமும், ஜேக்கபும் தம் மக்களுக்கு, "என் மக்களே, அல்லாஹ் உங்களுக்காக இம்மார்க்கத்தைத் தேர்ந்தெடுத்துக் கொண்டான். எனவே நம்பிக்கையாளர்களாகவே அன்றி நீங்கள் மரணித்து விடாதீர்கள்" என்று அறிவுறுத்தி இருந்தார்கள். **133.** ஜேக்கபுக்கு மரணம் நெருங்கிய நேரத்தில் நீங்கள் அங்கே இருந்தீர்களா? அப்போது அவர் தம் மக்களிடம் "மக்களே! எனக்குப்பின் நீங்கள் யாரை வணங்குவீர்கள்?" என்று கேட்டபோது அவர்கள், "உங்கள் இறைவனும் உங்கள் முன்னோர் ஆப்ரஹாம், இஸ்மவேல், ஈசாக் ஆகியோரின் இறைவனுமான ஒரே இறைவனையே நாங்கள் வணங்குவோம். நாங்கள் அவனுக்கே கீழ்ப்படிந்தவர்களாக இருக்கின்றோம்" என்று கூறினார்கள். **134.** அவர்கள் கடந்து*

போன சமூகம். அவர்கள் சம்பாதித்தது அவர்களுக்கு, நீங்கள் சம்பாதித்தது உங்களுக்கு. அவர்களின் செயல்களைக் குறித்து நீங்கள் விசாரிக்கப்பட மாட்டீர்கள்.

*135.* "யூதர்களாகவோ, கிறிஸ்தவர்களாகவோ ஆகிவிடுங்கள். நீங்கள் நேர்வழி பெறுவீர்கள்" என்று அவர்கள் கூறுகிறார்கள். நீர் கூறும்: "அப்படியல்ல. நாங்கள் ஆப்ரஹாமின் மார்க்கத்தைப் பின்பற்றுகிறோம். அவர் இறைவனின்பக்கம் முழு நம்பிக்கை கொண்டவராக இருந்தார். அவர் இணைவைப்பாளராக இருக்கவில்லை''. *136.* "நாங்கள் அல்லாஹ்வின் மீதும், எங்களுக்கு அருளப்பட்டதும், ஆப்ரஹாம், இஸ்மவேல், ஈசாக், ஜேக்கப் மற்றும் அவருடைய சந்ததிகளுக்கும் அருளப்பட்டதன் மீதும், மோசேவுக்கும், இயேசுவுக்கும் வழங்கப்பட்டதன் மீதும் மற்றும் ஏனைய தூதர்களுக்கும் அவர்களது இறைவனிடமிருந்து வழங்கப்பட்டதன் மீதும் நம்பிக்கை கொண்டோம். நாங்கள் அவர்களுக்கிடையே எவ்வித வேறுபாட்டையும் காட்ட மாட்டோம். நாங்கள் அல்லாஹ்வுக்கே கீழ்ப்படிந்தவர்களாக இருக்கின்றோம்" என்று கூறுங்கள். *137.* நீங்கள் நம்பிக்கை கொண்டதுபோல் அவர்களும் நம்பிக்கைகொண்டால் நிச்சயமாக அவர்கள் நேர்வழி பெற்றவர்களாவர். அவர்கள் புறக்கணித்தால் அவர்கள் பிடிவாதத்தில் இருப்பவர்களாவார்கள். அவர்கள் விஷயத்தில் அல்லாஹ்வே உமக்குப் போதுமானவன். அவன் செவியேற்பவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். *138.* நாங்கள் அல்லாஹ்வுடைய வர்ணத்தை ஏற்றுக்கொண்டோம். (பாவங்களை நீக்குவதற்காக) அல்லாஹ்வுடைய வர்ணத்தைவிட எது சிறந்தது? நாங்கள் அவனையே வணங்குபவர்களாக இருக்கின்றோம்" என்று கூறுங்கள். *139.* அல்லாஹ்வைப்பற்றி நீங்கள் எங்களிடம் தர்க்கம் செய்கிறீர்களா? அவனோ எங்களின் இறைவனும் உங்களின்

இறைவனுமாக இருக்கின்றான். எங்களின் செயல்கள் எங்களுக்கே. உங்களின் செயல்கள் உங்களுக்கே. நாங்கள் அவனுக்கே உரியவர்களாக இருக்கின்றோம். *140.* ஆப்ரஹாம், இஸ்மவேல், ஈசாக், ஜேக்கப், மற்றும் அவரது சந்ததிகள் அனைவருமே யூதர்களாக அல்லது கிறிஸ்தவர்களாக இருந்தார்கள் என்று நீங்கள் கூறுகிறீர்களா? நீர் கேளும், “நீங்கள் நன்கறிவீர்களா? அல்லது அல்லாஹ் நன்கறிவானா?”. அல்லாஹ்விடமிருந்து தன்னிடம் வந்துள்ள சாட்சியத்தை மறைப்பவனைவிட பெரும் அநியாயக்காரன் யார்? நீங்கள் செய்கின்றவற்றை அல்லாஹ் கவனிக்காமல் இல்லை. *141.* அவர்கள் கடந்து போன சமூகம். அவர்கள் சம்பாதித்தது அவர்களுக்கு, நீங்கள் சம்பாதித்தது உங்களுக்கு. அவர்களின் செயல்களைக் குறித்து நீங்கள் விசாரிக்கப்பட மாட்டீர்கள்.

*142.* மக்களில் அறிவீனர்கள், ‘‘முஸ்லிம்களை அவர்கள் முன்னோக்கி நின்ற திசையை விட்டும் திருப்பியது எது?” என்று கேட்பார்கள். நீர் கூறும்: “கிழக்கும் மேற்கும் அல்லாஹ்வுக்கே உரியவை. தான் நாடியோருக்கு அவன் நேரான வழியைக் காட்டுகிறான்”. *143.* இவ்வாறே நாம் உங்களை ஒரு சமநிலைச் சமூகமாக ஆக்கியுள்ளோம். அது நீங்கள் மக்களுக்கு எடுத்துக் கூறுபவர்களாகவும், தூதர் உங்களுக்கு எடுத்துக்கூறுபவராகவும் திகழ வேண்டும் என்பதற்காகத்தான். உங்களில் தூதரைப் பின்பற்றுபவர் யார், வந்த வழியே திரும்பிச்செல்பவர் யார் என்பதை அறிந்து கொள்வதற்காகவே நீங்கள் தொழுது வந்த திசையை முன்னோக்கும் திசையாக ஆக்கினோம். அல்லாஹ் நேர்வழி காட்டியவர்களைத் தவிர மற்றவர்களுக்கு நிச்சயமாக இது பாரமானதாகும். அல்லாஹ் உங்களின் நம்பிக்கையை வீணாக்குபவன் அல்ல. நிச்சயமாக அல்லாஹ் மனிதர்களிடத்தில் மிகுந்த பரிவுடையவனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

*144.* உமது முகம் அடிக்கடி வானத்தை நோக்கித் திரும்புவதை நாம் காண்கிறோம். எனவே நீர் விரும்பும் முன்னோக்கு திசையின் பக்கமே நாம் உம்மைத் திருப்பி விடுவோம். ஆகவே நீர் உம் முகத்தைப் புனித ஆலயத்தின் பக்கம் திருப்பிக் கொள்வீராக. நீர் எங்கிருந்தபோதிலும் உம் முகத்தை அதன் பக்கமே திருப்புவீராக. வேதம் வழங்கப்பட்டவர்கள், “இது தங்கள் இறைவனிடம் இருந்து வந்துள்ள சத்தியமே” என்பதை அறிவார்கள். அவர்கள் செய்பவற்றை அல்லாஹ் கவனிக்காமல் இல்லை. *145.* (முன்பு)வேதம் வழங்கப்பட்டோரிடம் நீர் அனைத்துவிதமான ஆதாரங்களையும் கொண்டு வந்தாலும் அவர்கள் உமது முன்னோக்கு திசையை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். நீரும் அவர்களது முன்னோக்கு திசையை பின்பற்றுபவராக இல்லை. அவர்களிலேயே ஒருவர் மற்றவருடைய முன்னோக்கு திசையை ஏற்றுக்கொள்பவர்களாக இல்லை. உம்மிடம் வந்துள்ள அறிவுக்குப் பின்னரும் அவர்களின் மனஇச்சைகளை நீர் பின்பற்றினால் நிச்சயமாக அநியாயக்காரர்களில் ஒருவராகி விடுவீர். *146.* எவருக்கெல்லாம் நாம் வேதத்தை வழங்கியுள்ளோமோ அவர்கள் அதனைத் தம் மக்களை அறிவதைப்போன்று நன்றாக அறிவார்கள். ஆயினும் அவர்களில் ஒரு பிரிவினர் அறிந்துகொண்டே உண்மையை மறைக்கிறார்கள். *147.* உம் இறைவன் கூறியதே சத்தியமாகும். ஆகவே நீர் ஒருபோதும் சந்தேகம் கொள்வோரில் ஒருவராகி விடாதீர்.

*148.* ஒவ்வொருவருக்கும் ஒரு திசையுண்டு. அதையே அவர் முன்னோக்குவார். எனவே நீங்கள் நன்மைகளின் பக்கம் விரையுங்கள். நீங்கள் எங்கிருந்தபோதிலும் உங்கள் அனைவரையும் அல்லாஹ் கொண்டு வருவான். நிச்சயமாக அல்லாஹ் எல்லாவற்றின்மீதும் பேராற்றலுடையவன். *149.* நீர் எங்கிருந்து புறப்பட்டாலும் உமது முகத்தைப் புனித ஆலயத்தின் பக்கம் திருப்புவீராக. நிச்சயமாக

இது உமது இறைவனிடமிருந்து வந்துள்ள உண்மையாகும். நீங்கள் செய்பவற்றை எல்லாம் அல்லாஹ் கவனிக்காமல் இல்லை. 150. நீர் எங்கிருந்து புறப்பட்டாலும் உமது முகத்தை புனித ஆலயத்தின் பக்கமே திருப்புவீராக. நீங்கள் எங்கிருந்தபோதிலும் உங்கள் முகங்களை அதன் பக்கமே திருப்பிக் கொள்ளுங்கள். ஏனெனில் அநியாயக்காரர்களைத் தவிர மற்ற மக்களிடம் உங்களுக்கு எதிராக வாதம் புரிய எந்த ஆதாரமும் இருக்கக்கூடாது. எனவே நீங்கள் அவர்களுக்கு அஞ்சாதீர்கள், எனக்கே அஞ்சுங்கள். இது ஏனெனில் நான் உங்கள் மீது எனது அருட்கொடையை நிறைவு செய்வதற்காகவும் நீங்கள் நேர்வழி பெறவேண்டும் என்பதற்காகவும்தான். 151. இவ்வாறே நாம் உங்களிலிருந்தே ஒரு தூதரை உங்களிடையே அனுப்பினோம். அவர் உங்களுக்கு நம் வசனங்களை எடுத்துரைத்து உங்களைத் தூய்மைப்படுத்துகின்றார். உங்களுக்கு வேதத்தையும், ஞானத்தையும் போதிக்கின்றார். நீங்கள் அறியாதிருந்தவற்றை அவர் உங்களுக்குக் கற்றுக் கொடுப்பவராகவும் இருக்கின்றார். 152. எனவே நீங்கள் என்னை நினைவுகூருங்கள், நானும் உங்களை நினைவுகூர்கிறேன். நீங்கள் எனக்கு நன்றி செலுத்தி வாருங்கள்; மாறுசெய்யாதீர்கள்.

153. நம்பிக்கையாளர்களே! பொறுமை மற்றும் தொழுகையின் மூலம் உதவி தேடுங்கள். நிச்சயமாக அல்லாஹ் பொறுமையாளர்களுடன் இருக்கின்றான். 154. இறைவழியில் கொல்லப்படுகின்றவர்களை நீங்கள் “இறந்துவிட்டவர்கள்” என்று கூறாதீர்கள். மாறாக அவர்கள் உயிருடன் உள்ளார்கள். ஆனால் நீங்கள் உணர்ந்துகொள்ள மாட்டீர்கள். 155. ஓரளவு அச்சத்தாலும், பசியாலும், செல்வங்கள், உயிர்கள், விளைச்சல்கள் ஆகியவற்றில் இழப்புகளை ஏற்படுத்தியும் நிச்சயம் நாம் உங்களை சோதிப்போம். இதில் பொறுமையுடன் இருப்போருக்கு நற்செய்தி கூறுவீராக.

*156.* அவர்களுக்கு ஏதேனும் துன்பம் ஏற்பட்டால் “நாங்கள் அல்லாஹ்வுக்கே உரியவர்கள், அவன் பக்கமே செல்பவர்களாக இருக்கின்றோம்” என்று கூறுவார்கள். *157.* இத்தகைய மக்கள் மீதுதான் அவர்களது இறைவனிடமிருந்து வாழ்த்துக்களும், கருணையும் இறங்குகின்றன. இவர்கள்தான் நேர்வழியில் உள்ளவர்கள்.

*158.* நிச்சயமாக ஸஃபா, மர்வா ஆகியவை (குன்றுகள்) இறைச்சின்னங்களில் உள்ளவையாகும். எனவே எவர் இறையில்லத்தை ஹஜ் அல்லது உம்ரா செய்கிறாரோ அவற்றை வலம்வருவது அவர்மீது குற்றமாகாது. எவரேனும் ஆர்வத்துடன் நன்மைகள் புரிந்தால் - அல்லாஹ் நன்றியை ஏற்பவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். *159.* நாம் வேதத்தில் மக்களுக்குத் தெளிவுபடுத்திய பின்னரும் எவரெல்லாம் நாம் அருளிய தெளிவான சான்றுகளையும், நேர்வழியையும் மறைக்கின்றனரோ அவர்களை அல்லாஹ் சபிக்கின்றான். சபிக்கின்றவர்களும் அவர்களைச் சபிக்கின்றார்கள். *160.* ஆயினும் எவரெல்லாம் மன்னிப்புக்கோரி, தம்மைச் சீர்திருத்தி, தெளிவாக எடுத்துரைத்து விட்டார்களோ அவர்களை நான் மன்னித்து விடுவேன். நான் பெரும் மன்னிப்பாளன்; இணையிலாக் கிருபையாளன். *161.* நிச்சயமாக எவரெல்லாம் நிராகரித்து அதே நிலையிலேயே இறந்தும் விடுகிறார்களோ அவர்களின் மீதுதான் அல்லாஹ், வானவர்கள் மற்றும் மனிதர்கள் ஆகிய அனைவரின் சாபமும் உண்டாகும். *162.* அதே நிலையிலேயே அவர்கள் நிரந்தரமாக இருப்பார்கள். அவர்களுடைய தண்டனை இலேசாக்கப்படாது. அவர்களுக்கு அவகாசமும் அளிக்கப்படாது.

*163.* உங்கள் இறைவன் ஒரே இறைவன்தான். அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. அவன் அளவிலாக் கருணையாளன்;

இணையிலாக் கிருபையாளன். **164.** நிச்சயமாக வானங்கள் மற்றும் பூமியின் அமைப்பிலும், இரவுபகல் மாறிமாறி வருவதிலும், மக்களுக்குப் பயன்தரக்கூடிய பொருட்களைச் சுமந்துகொண்டு கடலில் செல்கின்ற கப்பல்களிலும், வானத்திலிருந்து அல்லாஹ் இறக்கி வைக்கும் நீரிலும், பின்னர் அதன் மூலம் வறண்ட பூமியைச் செழிக்க வைப்பதிலும், அவன் பூமியில் அனைத்துவிதமான உயிரினங்களைப் பரவச்செய்திருப்பதிலும், காற்றுகளின் சுழற்சியிலும், வானத்திற்கும் பூமிக்குமிடையே வசப்படுத்தப்பட்டுள்ள மேகங்களிலும் சிந்திக்கும் மக்களுக்கு ஏராளமான சான்றுகள் உள்ளன.

**165.** மனிதர்களில் சிலர், அல்லாஹ்வைத் தவிர மற்றவர்களை அவனுக்கு இணையாக்குகிறார்கள். அல்லாஹ்வை நேசிப்பதைப்போன்றே அவர்களையும் நேசிக்கிறார்கள். ஆனால் அனைத்தையும்விட அல்லாஹ்வையே நம்பிக்கையாளர்கள் அதிகமாக நேசிக்கிறார்கள். இந்த அநியாயக்காரர்கள் வேதனையைக் காணும்போது “வல்லமை அனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியது, அவன் தண்டிப்பதில் கடுமையானவன்” என்பதை அறிந்துகொள்வார்கள். **166.** எவருடைய வழிகாட்டுதலின்படி இவர்கள் நடந்து கொண்டார்களோ, அவர்கள் தாம் வழிகாட்டியவர்களை விட்டும் விலகிவிடுவார்கள். அவர்கள், வேதனையைக் காண்பார்கள். அவர்களிடையே இருந்த தொடர்புகள் அனைத்தும் துண்டிக்கப்பட்டுவிடும். **167.** பின்பற்றிச் சென்றவர்கள், “நாங்கள் மீண்டும் உலகத்திற்குத் திரும்பிச்செல்ல நேர்ந்தால் இவர்கள் நம்மை விட்டு விலகி விட்டதைப்போன்று நாங்களும் அவர்களை விட்டு விலகி விடுவோம்” என்று கூறுவார்கள். இவ்வாறு அவர்களது செயல்களை அல்லாஹ் அவர்களுக்கு வருத்தம் அளிப்பவையாக எடுத்துக் காட்டுவான். அவர்கள் நெருப்பை விட்டும் வெளியேற முடியாது.

*168. மனிதர்களே! பூமியிலுள்ள பொருள்களில் அனுமதிக்கப்பட்ட, தூய்மையானவற்றையே உண்ணுங்கள். சாத்தானின் அடிச்சுவடுகளைப் பின்பற்றாதீர்கள். நிச்சயமாக அவன் உங்களுக்கு வெளிப்படையான பகைவனாவான். 169. அவன் உங்களுக்கு தீயவற்றையும், மானக்கேடான காரியங்களையும், நீங்கள் அறியாதவற்றை அல்லாஹ்வின் மீது புனைந்து கூறுவதையும்தான் தூண்டுகிறான். 170. "அல்லாஹ் அருளியதைப் பின்பற்றுங்கள்" என்று அவர்களிடம் கூறப்பட்டால் "நாங்கள் எங்கள் முன்னோர்களை எவ்வழியில் கண்டோமோ அவ்வழியைத்தான் பின்பற்றுவோம்" என்று கூறுகிறார்கள். அவர்களின் முன்னோர்கள் எதையும் புரிந்து கொள்ளாதவர்களாகவும், நேர்வழியில் இல்லாதவர்களாகவும் இருந்தாலுமா? 171. நிராகரிப்பாளர்களுக்கு உதாரணம் (உரத்துக்) கத்துபவனின் வெறும் கூச்சலையையும், ஓசையையும் தவிர வேறெதையும் புரிந்துகொள்ள முடியாத கால்நடையைப் போன்றது. அவர்கள் செவிடர்களாக, ஊமையர்களாக, குருடர்களாக இருக்கின்றனர். எனவே அவர்கள் எதையும் புரிந்துகொள்ள மாட்டார்கள்.*

*172. நம்பிக்கையாளர்களே! நாம் உங்களுக்கு வழங்கிய தூய்மையானவற்றையே உண்ணுங்கள். நீங்கள் அல்லாஹ்வை மட்டுமே வணங்குபவர்களாக இருந்தால் அவனுக்கே நன்றி செலுத்துங்கள். 173. தானாகச்செத்தது, இரத்தம், பன்றியின் மாமிசம், அல்லாஹ் அல்லாதவற்றின் பெயர்கூறி பலியிடப்பட்டது ஆகியவற்றைத்தான் அல்லாஹ் உங்களுக்குத் தடை செய்துள்ளான். ஆயினும் எவரேனும் விரும்பாமலும், வரம்பு மீறாமலும் (இருக்கும் நிலையில்) நிர்ப்பந்தத்திற்குள்ளாக்கப்பட்டால் அவர்மீது குற்றமாகாது. நிச்சயமாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். 174. வேதத்தில்*

அல்லாஹ் அருளியுள்ளதை மறைத்து, அதற்கு விலையாக அற்ப ஆதாயத்தைப் பெற்றுக்கொள்பவர்கள் தம் வயிற்றில் நெருப்பைத்தான் நிரப்புகிறார்கள். மறுமைநாளன்று அல்லாஹ் அவர்களுடன் பேசவும் மாட்டான், அவர்களைத் தூய்மைப்படுத்தவும் மாட்டான். அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையும் உண்டு **175.** இவர்கள்தான் நேர்வழிக்குப் பதிலாக வழிகேட்டையும், மன்னிப்பிற்குப் பதிலாக வேதனையையும் விலைக்கு வாங்கியவர்கள். நரக நெருப்பின் மீது எவ்வளவு சகிப்புத்தன்மை இருக்கிறது இவர்களுக்கு! **176.** ஏனெனில் தன் வேதத்தை சிறந்த முறையில் அல்லாஹ் அருளியுள்ளான். ஆனால் வேதத்தில் பல பிரிவுகளை ஏற்படுத்திக் கொண்டவர்கள் தூரமான வழிகேட்டில் வீழ்ந்து விட்டார்கள்.

**177.** நன்மை என்பது உங்கள் முகங்களைக் கிழக்கிலோ, மேற்கிலோ திருப்பிக்கொள்வதில் இல்லை. மாறாக நன்மை என்பது ஒருவர் அல்லாஹ்வின் மீதும், மறுமைநாளின் மீதும், வானவர்களின் மீதும், வேதத்தின் மீதும், தூதர்களின் மீதும் நம்பிக்கைகொள்வதும், அல்லாஹ்வின் மீதுள்ள அன்பால் உறவினர்களுக்கும், அநாதைகளுக்கும், ஏழைகளுக்கும், வழிப்போக்கர்களுக்கும், யாசிப்போருக்கும், அடிமைகளை விடுதலை செய்வதற்கும் தம் செல்வத்தைச் செலவு செய்வதும், தொழுகையைக் கடைப்பிடித்து கடமையாக்கப்பட்ட தானதர்மத்தை அளிப்பதும், வாக்குறுதி அளித்தால் அதனை நிறைவேற்றுவதும், கடுமையிலும், சிரமத்திலும், போர் சமயத்திலும் பொறுமை காப்பதுமே ஆகும். இத்தகையோர்தான் உண்மையாளர்கள்; இவர்கள்தான் இறையச்சமுடையவர்கள்.

**178.** நம்பிக்கையாளர்களே! கொலை செய்யப் பட்டவர்களுக்காகப் பழிவாங்குவது உங்கள் மீது கடமையாக்கப்பட்டுள்ளது. சுதந்திரமானவனுக்குப் பதிலாக

சுதந்திரமானவன், அடிமைக்குப் பதிலாக அடிமை, பெண்ணுக்குப் பதிலாக பெண். எனினும் கொலை செய்யப்பட்டவருடைய சகோதரரிடமிருந்து அவருக்கு மன்னிப்பு வழங்கப்பட்டு விட்டால் அவர் வழக்கமான முறையைப் பின்பற்றி சிறந்த முறையில் அதனை நிறைவேற்ற வேண்டும். இது உங்கள் இறைவனிடமிருந்து கிடைத்துள்ள எளிதான வழியும், கருணையுமாகும். இதற்குப் பின்னரும் எவர் வரம்பு மீறுகிறாரோ அவருக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு. 179. அறிவுடையோரே, பழிவாங்குவதில் உங்களுக்கு வாழ்வு உள்ளது. இதனால் நீங்கள் தப்பித்துக்கொள்ளலாம். 180. உங்களில் ஒருவருக்கு மரணம் நெருங்கிவிட்டால் - அவர் தமக்குப் பின்னால் பொருளை விட்டுச் செல்பவராக இருப்பின் - முறைப்படி தம் பெற்றோருக்கும், நெருங்கிய உறவினர்களுக்கும் உயில் எழுதிவிட வேண்டும். இறையச்சமுடையோர் மீது இது கடமையாகும். 181. எவரேனும் அதனைக் கேட்ட பிறகு அதனை மாற்றி விட்டால் அதன் பாவமெல்லாம் அதனை மாற்றியவர் மீதுதான். நிச்சயமாக அல்லாஹ் செவியேற்பவனாகவும், அறிந்தவனாகவும் இருக்கின்றான் 182. உயில் எழுதுபவரைக் குறித்து 'அவர் பாரபட்சம் பார்ப்பவர்' அல்லது 'அநீதி இழைப்பவர்' என்று எவரேனும் அஞ்சி அவர்களுக்கிடையே நல்லிணக்கத்தை ஏற்படுத்திவிட்டால் அவர்மீது குற்றமாகாது. அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

183. நம்பிக்கையாளர்களே! உங்களுக்கு முன்னிருந்தவர்கள்மீது கடமையாக்கப்பட்டதைப் போன்றே உங்கள் மீதும் நோன்பு கடமையாக்கப்பட்டுள்ளது. அதனால் நீங்கள் இறையச்சமுடையோராகலாம். 184. இது குறிப்பிட்ட சில நாட்களிலாகும். ஆயினும் உங்களில் எவரேனும் நோயாளியாகவோ, பயணத்திலோ இருந்தால் அவர் வேறு நாட்களில் கணக்கிட்டு

*நோன்பு நோற்றுக்கொள்ள வேண்டும். எவரெல்லாம் அதனை சகிப்பதில் கடினத்தை உணர்கிறார்களோ அவர்கள் ஒரு நோன்புக்குப் பரிகாரமாக ஒரு ஏழைக்கு உணவளிக்க வேண்டும். எவரேனும் அதிக நன்மைகள் புரிந்தால் அது அவருக்கே சிறந்ததாகும். நீங்கள் அறிந்தவர்களாக இருந்தால் நோன்பு நோற்பதே உங்களுக்கு மிகச் சிறந்ததாகும். **185.** ரமலான் மாதத்தில்தான் குர்ஆன் அருளப்பட்டது. அது மக்களுக்கு வழிகாட்டியாகவும், நேர்வழியை தெளிவாக்கக் கூடியதாகவும், சத்தியத்தையும், அசத்தியத்தையும் பிரித்துக்காட்டக்கூடியதாகவும் இருக்கின்றது. எனவே உங்களில் அம்மாதத்தை அடைபவர் நோன்பு நோற்கட்டும். உங்களில் நோயாளியாகவோ, பயணத்தில் இருப்பவராகவோ இருந்தால் அவர் வேறு நாட்களில் கணக்கிட்டு நோன்பு நோற்றுக்கொள்ளட்டும். அல்லாஹ் உங்களுக்கு எளிதானதையே நாடுகின்றான். அவன் உங்களைச் சிரமத்தில் ஆழ்த்த விரும்பவில்லை. ஆகவே எண்ணிக்கையை நிறைவு செய்யுங்கள். அல்லாஹ் உங்களுக்கு நேர்வழிகாட்டியதற்காக அவனைப் பெருமைப்படுத்துங்கள். அதனால் நீங்கள் நன்றியுள்ளவர்களாக ஆவீர்கள்.*

***186.** என் அடியார்கள் என்னைப் பற்றி உம்மிடம் கேட்டால், “நான் மிகச்சமீபமாக இருக்கிறேன். அழைப்பவரின் அழைப்புக்கு - அவர் என்னை அழைக்கும்போது நான் பதிலளிக்கிறேன். எனவே அவர்கள் என் கட்டளையை ஏற்றுக்கொள்ளட்டும், என்மீதே நம்பிக்கை வைக்கட்டும். அதனால் அவர்கள் நேர்வழி அடைந்திடலாம்” (என்று நீர் கூறும்). **187.** நோன்புக்கால இரவில் உங்கள் மனைவியருடன் கூடுவது உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது. அவர்கள் உங்களுக்கு ஆடையாகவும், நீங்கள் அவர்களுக்கு ஆடையாகவும் இருக்கிறீர்கள். நீங்கள் உங்களுக்கே துரோகம் செய்து கொண்டிருந்ததை அல்லாஹ் அறிந்துகொண்டான். எனவே அவன் உங்கள்மீது கருணைபுரிந்து*

*உங்களை மன்னித்து விட்டான். இனி இரவில் நீங்கள் (விரும்பினால்) அவர்களுடன் கூடுங்கள். அல்லாஹ் உங்களுக்காக விதித்திருப்பதைத் தேடிக்கொள்ளுங்கள். இரவின் இருளிலிருந்து அதிகாலையின் வெளிச்சம் பிரியும்வரை உண்ணுங்கள், பருகுங்கள். பின்னர் இரவுவரை நோன்பை நிறைவு செய்யுங்கள். நீங்கள் பள்ளிவாசல்களில் தங்கி (இஃதிகாஃபில்) இருக்கும் நிலையில் மனைவியருடன் கூடாதீர்கள். இவை இறைவரம்புகளாகும், எனவே இவற்றை நெருங்காதீர்கள். மக்கள் தங்களைக் காத்துக்கொள்ளும் பொருட்டு இவ்வாறு தன் வசனங்களை அல்லாஹ் தெளிவுபடுத்துகிறான். **188.** மற்றவருடைய செல்வங்களை தவறான முறையில் உண்ணாதீர்கள். அடுத்தவர்களுடைய பொருள்களில் ஒரு பகுதியை பாவமான முறையில் தின்பதற்காக அறிந்துகொண்டே அதிகாரிகளை அணுகாதீர்கள்.*

*__189.__ அவர்கள் பிறைகளைப்பற்றி உம்மிடம் கேட்கிறார்கள். நீர் கூறும்: "அவை மக்களுக்கு காலங்காட்டியாகவும், ஹஜ்ஜுடைய காலத்தை அறிவிக்கக்கூடியவையாகவும் உள்ளன. நீங்கள் வீடுகளுக்குள் அவற்றின் பின்புறமாக வந்துவிடுவது நன்மையானது அல்ல. மாறாக இறைவனை அஞ்சுவதே நன்மையாகும். வீடுகளுக்குள் அவற்றின் வாசல்கள் வழியாகவே வாருங்கள். அல்லாஹ்வை அஞ்சுங்கள். நீங்கள் வெற்றியடைவீர்கள்". __190.__ உங்களுடன் போர்புரிபவர்களுடன் நீங்களும் இறைவழியில் போர்புரியுங்கள். வரம்புமீறாதீர்கள். வரம்பு மீறுவோரை அல்லாஹ் நேசிப்பதில்லை. __191.__ அவர்களை எங்கு கண்டாலும் கொல்லுங்கள். எங்கிருந்து அவர்கள் உங்களை வெளியேற்றினார்களோ அங்கிருந்து அவர்களை நீங்களும் வெளியேற்றுங்கள். குழப்பம் கொலையைவிடக் கொடியது.*

---

*முன்னுரையைக் காண்க பக். 19

புனித ஆலயத்தில் அவர்கள் உங்களுடன் போர்த்தொடுக்காதவரை நீங்களும் அவர்களுடன் போரிட வேண்டாம். ஆயினும் அவர்கள் உங்களுடன் போர்த்தொடுத்தால் அவர்களைக் கொல்லுங்கள். இதுவே நிராகரிப்பாளர்களுக்கான தண்டனையாகும்*. 192. ஆயினும் அவர்கள் விலகிக் கொண்டால் - அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். 193. மதஒடுக்குமுறை ஒழிந்து மார்க்கம் அல்லாஹ்வுக்கே உரித்தானதாக ஆகும்வரை அவர்களுடன் போரிடுங்கள். அவர்கள் விலகிக்கொண்டால் - அக்கிரமக்காரர்களைத் தவிர வேறு எவரிடமும் அத்துமீறக் கூடாது.

194. புனிதமான மாதத்திற்குப் புனித மாதமே ஈடாகும். புனிதங்களுக்கும் ஈடு உண்டு. எனவே எவரேனும் உங்கள் மீது வரம்பு மீறினால், அவர் வரம்பு மீறியதைப் போன்றே நீங்களும் அவர்மீது வரம்பு மீறுங்கள். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். அல்லாஹ் இறையச்சமுடையோருடன் இருக்கிறான் என்பதை அறிந்துகொள்ளுங்கள். 195. இறைவழியில் செலவு செய்யுங்கள். உங்களை நீங்களே அழித்துக் கொள்ளாதீர்கள். நல்ல முறையில் செயலாற்றுங்கள். நல்ல முறையில் செயல்படுபவர்களையே அல்லாஹ் நேசிக்கிறான்.

196. அல்லாஹ்வுக்காக ஹஜ்ஜையும், உம்ராவையும் நிறைவேற்றுங்கள். ஆனால் நீங்கள் முற்றுகையிடப்பட்டால் உங்களுக்குச் சாத்தியமான பலிப்பிராணியை அனுப்பி வையுங்கள். பலிப்பிராணி தனக்குரிய இடத்தை அடையும்வரை உங்கள் தலைமுடிகளை மழிக்காதீர்கள். ஆனால் உங்களில் எவரேனும் நோயாளியாக அல்லது தனது தலையில் ஏதேனும் பிணி உள்ளவராக இருந்தால் அதற்குப் பரிகாரமாக நோன்பு நோற்கவோ, தானதர்மம் செய்யவோ, பலி கொடுக்கவோ வேண்டும். அமைதி நிலை

ஏற்பட்டு எவரேனும் ஹஜ் காலம்வரை உம்ராவின் பலனை அடைய விரும்பினால் அவர் தமக்குச் சாத்தியமானதைப் பலியிட வேண்டும். பலிப்பிராணி கிடைக்கப் பெறாதவர் ஹஜ்ஜின் காலத்தில் மூன்று நாட்களும் வீடு திரும்பிய பின்னர் ஏழு நாட்களும் நோன்பு நோற்க வேண்டும். இது முழுமையான பத்து நாட்களாகும். இது எவர் புனித ஆலயத்திற்கு அருகில் வசிக்கவில்லையோ அவருக்குரியதாகும். அல்லாஹ்வை அஞ்சுங்கள்; அல்லாஹ் தண்டிப்பதில் கடுமையானவன் என்பதை அறிந்துகொள்ளுங்கள். **197.** ஹஜ் பயணம் குறிப்பிட்ட மாதங்களில்தான் (செய்யப்பட வேண்டும்). எனவே எவரேனும் அந்த மாதங்களில் ஹஜ்செய்ய தீர்மானித்து விட்டால் அவர் ஹஜ்ஜின்போது அருவருப்பான பேச்சு, பாவமான காரியம், மற்றும் சண்டை சச்சரவுகளில் ஈடுபடக்கூடாது. நீங்கள் செய்யும் நற்செயல்களை அல்லாஹ் அறிந்துகொள்வான். நீங்கள் வழித்துணைச் சாதனங்களை எடுத்துச்செல்லுங்கள். மிகச்சிறந்த வழித்துணைச் சாதனம் இறையுணர்வேயாகும். அறிவுடையோரே! என்னையே அஞ்சுங்கள்.

**198.** அந்தப் பயணத்தில் உங்கள் இறைவனின் அருளையும் தேடிக்கொள்வது குற்றமாகாது. நீங்கள் ‘அரஃபா’விலிருந்து திரும்பும்போது, மஷ்அருல் ஹராமில் தங்கி அல்லாஹ்வை நினைவுகூருங்கள். அல்லாஹ் உங்களுக்கு கற்றுத்தந்தவாறே அவனை நினைவுகூருங்கள். இதற்கு முன்னர் நீங்கள் வழிதவறியவர்களாக இருந்தீர்கள். **199.** பின்னர் எல்லோரும் திரும்புகின்ற இடத்திலிருந்து நீங்களும் திரும்புங்கள். அல்லாஹ்விடம் மன்னிப்புக் கோருங்கள். நிச்சயமாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கிறான். **200.** உங்கள் ஹஜ்ஜின் கடமைகளை நீங்கள் நிறைவேற்றி விட்டால் உங்கள் மூதாதையர்களை நினைவுகூர்வது போன்று, ஏன் அதைவிடவும் அதிகமாக

அல்லாஹ்வை நினைவுகூருங்கள். மனிதர்களில் சிலர், "எங்கள் இறைவா, இவ்வுலகிலேயே எங்களுக்குத் தந்துவிடு'' என்று பிரார்த்திக்கின்றனர். அவர்களுக்கு மறுமையில் எந்த பாக்கியமும் இல்லை. ***201.*** அவர்களில் சிலர், "எங்கள் இறைவா, எங்களுக்கு இம்மையிலும், மறுமையிலும் நன்மையை அருள்வாயாக; எங்களை நரகநெருப்பின் வேதனையை விட்டும் காப்பாற்றுவாயாக" என்று பிரார்த்திக்கின்றனர். ***202.*** இத்தகையோருக்குத்தான் அவர்கள் சம்பாதித்ததற்கான பங்கு உண்டு. அல்லாஹ் கணக்கு தீர்ப்பதில் விரைவானவன். ***203.*** குறிப்பிட்ட சில நாட்களில் அல்லாஹ்வை நினைவுகூருங்கள். எவரேனும் அவசரப்பட்டு இரண்டு நாட்களில் மக்காவுக்குத் திரும்பிவிட்டால் அவர் மீது குற்றமாகாது. எவராவது தங்கி தாமதமாகப் புறப்பட்டால் அவர் மீதும் குற்றமாகாது. - இது இறையச்சமுடையோருக்கே ஆகும் - அல்லாஹ்வை அஞ்சுங்கள். அவனிடமே நீங்கள் ஒன்று திரட்டப்படுவீர்கள் என்பதை அறிந்துகொள்ளுங்கள்.

***204.*** மனிதர்களில் ஒருவன் இருக்கின்றான், இவ்வுலக வாழ்க்கையில் அவனது பேச்சு உம்மை ஆச்சர்யத்தில் ஆழ்த்தும். அவன் தன் உள்ளத்தில் உள்ளதைக் குறித்து அல்லாஹ்வை சாட்சியாளனாக்குவான். ஆனால் அவன் கடும் பகைவனாவான். ***205.*** அவன் திரும்பியதும் பூமியில் குழப்பத்தை உண்டாக்குவதிலும், விளைநிலங்களையும், உயிர்களையும் அழிக்கும் முயற்சியிலும்தான் ஈடுபடுவான். அல்லாஹ் குழப்பத்தை விரும்புவதில்லை. ***206.*** "அல்லாஹ்வை அஞ்சிக்கொள்'' என்று அவனிடம் கூறப்பட்டால் அவனது ஆணவம் அவனைப் பாவத்தின்மீது நிலைநிறுத்தி விடுகிறது. எனவே அத்தகையோருக்கு நரகமே போதுமானது. அது மிகவும் கெட்ட இருப்பிடமாகும். ***207.*** மனிதர்களில் இப்படியும் சிலர் இருக்கின்றனர். அவர்கள் இறைதிருப்தியைத் தேடுவதில் தம்

உயிரையே அர்ப்பணித்து விடுகின்றனர். தன் அடியார்களின் மீது அல்லாஹ் மிகுந்த பரிவுடையவனாக இருக்கின்றான்.

208. நம்பிக்கையாளர்களே! நீங்கள் முழுக்க முழுக்க இறைவனிடம் சரணடைந்து விடுங்கள். சாத்தானின் அடிச்சுவடுகளைப் பின்பற்றாதீர்கள். அவன் உங்களுக்கு பகிரங்கமான பகைவானாவான். 209. உங்களிடம் தெளிவான சான்றுகள் வந்த பின்னரும் நீங்கள் தவறிவிடுவீர்களாயின் - அறிந்து கொள்ளுங்கள், "அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவன்; ஞானம் மிக்கவன்". 210. மேகத்தின் நிழல்களில் அல்லாஹ்வும் வானவர்களும் வரவேண்டும், விவகாரம் தீர்க்கப்பட வேண்டும் என்பதைத்தான் அவர்கள் எதிர்பார்க்கிறார்களா? அனைத்து விவகாரங்களும் அல்லாஹ்வின் பக்கமே கொண்டுவரப்படும். 211. இஸ்ராயீலின் மக்களிடம், "நாம் அவர்களுக்கு எவ்வளவு தெளிவான சான்றுகளை வழங்கியிருந்தோம்'' என்று நீர் கேளும். எவர் அல்லாஹ்வின் அருட்கொடை தன்னிடம் வந்த பின்னரும் அதனை மாற்றி விடுகிறாரோ, நிச்சயமாக அல்லாஹ் தண்டிப்பதில் கடுமையானவன் என்பதை (அவர் அறிந்துகொள்ளட்டும்). 212. நிராகரிப்பாளர்களுக்கு இவ்வுலக வாழ்வு அழகாக்கப்பட்டுள்ளது. அவர்கள் நம்பிக்கையாளர்களை கேலி செய்கிறார்கள். ஆனால் இறையச்சமுடையோர் மறுமைநாளில் அவர்களைவிட உயர்ந்த நிலையில் இருப்பார்கள். தான் நாடுவோருக்கு அல்லாஹ் கணக்கின்றி வழங்குகிறான்.

213. மனிதர்கள் ஒரே சமூகமாக இருந்தார்கள். அவர்கள் கருத்துவேறுபாடு கொண்டதனால் தூதர்களை நற்செய்தியாளர்களாகவும், எச்சரிக்கையாளர்களாகவும் அல்லாஹ் அனுப்பி வைத்தான். அவர்கள் முரண்பட்டவற்றில் அவர்களிடையே தீர்ப்பு வழங்க வேண்டும் என்பதற்காக அவர்களுடன் வேதத்தையும்

சத்தியத்துடன் அருளினான். சத்தியம் வழங்கப்பட்டவர்கள் தங்களிடம் தெளிவான வழிகாட்டுதல் வந்த பின்னரும், தங்களுக்கிடையே இருந்த காழ்ப்புணர்வினால்தான் முரண்பட்டுக்கொண்டார்கள். ஆயினும் சத்தியத்தைக் குறித்து அவர்கள் பிணங்கிக்கொண்டவற்றில் தன் அருளினால் அல்லாஹ் நம்பிக்கையாளர்களுக்கு நேர்வழி காட்டினான். தான் நாடியோருக்கு அல்லாஹ் நேரான வழியைக் காட்டுகிறான். **214.** உங்களுக்கு முன்சென்றவர்களுக்கு ஏற்பட்ட நிலைமைகள் உங்களுக்கும் ஏற்படாமலேயே நீங்கள் சுவனம் சென்று விடலாம் என்று எண்ணிக் கொண்டீர்களா? அவர்களுக்கு வறுமையும், துன்பங்களும் ஏற்பட்டன. தூதரும், அவருடன் நம்பிக்கை கொண்டவர்களும், “இறை உதவி எப்போது வரும்” என்று கேட்கும்வரை அலைக்கழிக்கப்பட்டார்கள். நினைவில் வையுங்கள், இறை உதவி மிகச் சமீபத்தில் இருக்கிறது.

**215.** “தாம் என்ன செலவுசெய்ய வேண்டும்” என்று மக்கள் உம்மிடம் கேட்கிறார்கள். நீர் கூறும்: “எப்பொருளை நீங்கள் செலவு செய்தாலும் அதில் உங்கள் பெற்றோருக்கும், நெருங்கிய உறவினர்களுக்கும், அநாதைகளுக்கும், ஏழைகளுக்கும், வழிப்போக்கர்களுக்கும் உரிமை உண்டு. நீங்கள் எந்த நன்மை செய்தாலும் அதனை அல்லாஹ் நன்கறிவான்”. **216.** (தற்காப்பிற்காகப்) போர்புரிவது - அது உங்களுக்கு வெறுப்பாக இருப்பினும் உங்கள்மீது கடமையாக்கப்பட்டுள்ளது, ஒரு பொருள் நன்மையாக இருக்க நீங்கள் அதனை வெறுக்கக்கூடும். ஒரு பொருள் தீமையாக இருக்க நீங்கள் அதனை விரும்பக்கூடும். அல்லாஹ்வே நன்கறிவான், நீங்கள் அறியமாட்டீர்கள்.

**217.** புனித மாதத்தில் போர்புரிவதுபற்றி மக்கள் உம்மிடம் கேட்கிறார்கள். நீர் கூறும்: “அம்மாதத்தில் போர்புரிவது பெரும் குற்றம்தான். ஆயினும் இறைவழியைவிட்டு அடியார்களைத்

தடுப்பதும், இறைவனை நிராகரிப்பதும், புனித ஆலயத்தை விட்டு மக்களைத் தடுப்பதும் இன்னும் அங்கு வசிப்பவர்களை அங்கிருந்து வெளியேற்றுவதும் அல்லாஹ்விடத்தில் அதைவிட பெரும் குற்றமாகும். குழப்பம் விளைவிப்பது கொலையைவிடக் கொடியதாகும்". அவர்களுக்குச் சாத்தியமானால், உங்களை உங்கள் மார்க்கத்தை விட்டுத் திருப்பும்வரை ஓயாமல் உங்களுடன் போரிட்டுக்கொண்டே இருப்பார்கள். உங்களில் எவரேனும் தம் மார்க்கத்தை விட்டுவிலகி நிராகரித்த நிலையிலேயே இறந்தும் விட்டால் இம்மையிலும், மறுமையிலும் அவரது நற்செயல்கள் யாவும் பாழாகிவிடும். அத்தகையவர்கள்தான் நரகவாசிகள். அங்கு அவர்கள் என்றென்றும் வீழ்ந்து கிடப்பார்கள். **218.** நம்பிக்கையாளர்களும், புலம்பெயர்ந்தவர்களும், இறைவழியில் பாடுபடுபவர்களும் அல்லாஹ்வின் கருணையைத்தான் எதிர்பார்க்கிறார்கள். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

**219.** மது மற்றும் சூதாட்டத்தைக் குறித்து மக்கள் உம்மிடம் கேட்கிறார்கள். நீர் கூறும்: "அவ்விரண்டிலும் பெரும் கேடு உள்ளது. மக்களுக்குச் சில பயன்களும் இருக்கின்றன. அவற்றால் ஏற்படும் பயனைவிட அவற்றின் கேடுதான் மிக அதிகம்". "அவர்கள் என்ன செலவு செய்ய வேண்டும்?" என்றும் உம்மிடம் கேட்கிறார்கள். நீர் கூறும்: "உங்கள் தேவைபோக மீதமாக எஞ்சியிருப்பதை செலவு செய்யுங்கள்". இவ்வாறு இம்மை மற்றும் மறுமையின் விஷயங்களைப் பற்றி நீங்கள் சிந்திக்கும் பொருட்டு அல்லாஹ் கட்டளைகளை உங்களுக்குத் தெளிவுபடுத்துகிறான். **220.** அவர்கள் அநாதைகளைப்பற்றி உம்மிடம் கேட்கிறார்கள். நீர் கூறும்: "அவர்களது வாழ்வில் நன்மையை வளர்த்தெடுப்பது மாபெரும் நற்செயலாகும். நீங்கள் அவர்களை உங்களுடன்

சேர்த்துக்கொண்டால் அவர்கள் உங்கள் சகோதரர்களாவர்". சீர்திருத்தம் செய்பவரையும் குழப்பம் உண்டாக்குபவரையும் அல்லாஹ் நன்கறிவான். அல்லாஹ் நாடியிருந்தால் அவன் உங்களை சிரமத்திற்குள்ளாக்கி இருப்பான். அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.

**221.** இணைவைக்கும் பெண்களை அவர்கள் நம்பிக்கைகொள்ளும்வரை நீங்கள் திருமணம் செய்து கொள்ளாதீர்கள். இணைவைக்கும் பெண் உங்கள் மனம்கவர்ந்தவளாக இருந்தபோதிலும் நம்பிக்கைகொண்ட அடிமைப்பெண் அவளை விடச் சிறந்தவளாவாள். இணைவைக்கும் ஆண்களுக்கு - அவர்கள் நம்பிக்கைகொள்ளும்வரை - உங்கள் பெண்களைத் திருமணம் செய்து வைக்க வேண்டாம். அவன் உங்களுக்குப் பிடித்தமானவனாக இருந்தாலும் நம்பிக்கைகொண்ட அடிமையாக உள்ள ஆண் அவனைவிட சிறந்தவராவார். இவர்கள் நரகத்தின் பக்கம் அழைக்கிறார்கள். அல்லாஹ்வோ தன் கட்டளையால் உங்களைச் சுவனத்தின் பக்கமும், மன்னிப்பின் பக்கமும் அழைக்கிறான். மக்கள் அறிவுரை பெறும்பொருட்டு தன் கட்டளைகளை அவன் தெளிவுபடுத்துகிறான். **222.** அவர்கள் உம்மிடம் மாதவிடாய் குறித்துக் கேட்கிறார்கள். நீர் கூறும்: "அது ஒரு அசுத்தமாகும். அச்சமயங்களில் பெண்களை விட்டு விலகியிருங்கள். அவர்கள் தூய்மையடையும்வரை அவர்களை நெருங்க வேண்டாம். அவர்கள் தூய்மையடைந்து விட்டால் அல்லாஹ் உங்களுக்குக் கட்டளையிட்ட முறைப்படி அவர்களிடம் செல்லுங்கள். பாவமன்னிப்புக் கோருபவர்களையும் தூய்மையாக இருப்பவர்களையும் அல்லாஹ் நேசிக்கிறான்". **223.** உங்கள் மனைவியர் உங்கள் விளைநிலங்களாவர். எனவே உங்கள் விளைநிலங்களுக்கு நீங்கள் விரும்பியவாறு செல்லுங்கள். உங்களுக்காக (நற்செயல்களை) முற்படுத்தி வையுங்கள்.

அல்லாஹ்வை அஞ்சுங்கள். அறிந்துகொள்ளுங்கள், "நிச்சயம் நீங்கள் அவனை சந்தித்தே தீரவேண்டும்". நம்பிக்கையாளர்களுக்கு நற்செய்தி கூறி விடுவீராக.

*224.* "நீங்கள் நன்மை செய்வதற்கும் இறையச்சத்தைக் கடைப்பிடிப்பதற்கும், மக்களிடையே சமாதானத்தை ஏற்படுத்துவதற்கும் தடையாக நீங்கள் செய்யும் சத்தியங்களுக்கு அல்லாஹ்வின் பெயரைப் பயன்படுத்திவிடாதீர்கள். அல்லாஹ் செவியேற்பவனாகவும் நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். *225.* நீங்கள் செய்யும் அர்த்தமற்ற சத்தியங்களுக்காக அல்லாஹ் உங்களைக் குற்றவாளியாக்க மாட்டான். ஆனால் உளப்பூர்வமாக நீங்கள் செய்யும் சத்தியங்களுக்காக உங்களைக் குற்றவாளியாக்குவான். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், சகிப்புத்தன்மையுடையவனாகவும் இருக்கின்றான். *226.* தங்கள் மனைவியருடன் சேருவதில்லை என்று சத்தியம் செய்து விலகியிருப்பவர்களுக்கு நான்கு மாதங்கள்வரை அவகாசம் உண்டு. பின்னர் அவர்கள் திரும்பிவிட்டால் - அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கிறான். *227.* ஆனால் அவர்கள் விவாகரத்து செய்ய தீர்மானித்துவிட்டால் - நிச்சயமாக அல்லாஹ் செவியேற்பவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கிறான். *228.* விவாகரத்து அளிக்கப்பட்ட பெண்கள் மூன்று மாதவிடாய்வரை பொறுத்திருக்க வேண்டும். அவர்கள் அல்லாஹ்வின் மீதும், மறுமைநாளின் மீதும் நம்பிக்கை கொண்டவர்களாக இருந்தால் அவர்களின் கருவறையில் அல்லாஹ் படைத்திருப்பதை மறைக்கக் கூடாது. அத்தவணைக்குள் அவர்கள் சமாதானத்தை விரும்பினால் அவர்களின் கணவர்களுக்கு அவர்களை மீண்டும் அழைத்துக்கொள்ள உரிமை உண்டு. அப்பெண்களுக்கு பொதுவான வழக்கப்படி உரிமைகள் இருப்பது போலவே

கடமைகளும் உள்ளன. ஆண்களுக்கு அவர்களைவிட சற்று அதிகமாகவே உள்ளது. அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவனாகவும் ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.

229. மணவிலக்கு (அறிவிப்பை) இருமுறைதான் கூற முடியும். முறைப்படி அவர்களை வைத்துக்கொள்ளலாம் அல்லது நல்ல முறையில் அவர்களை விடுவித்து விடலாம். நீங்கள் உங்கள் மனைவியருக்குக் கொடுத்தவற்றிலிருந்து எதையும் எடுத்துக் கொள்ளக்கூடாது, இறைவரம்புகளைப் பேணமுடியாது என்று இருவரும் அஞ்சினாலே தவிர. அவர்கள் இருவரும் இறைவரம்புகளைப் பேணமாட்டார்கள் என்று நீங்கள் அஞ்சினால் அவள் அதற்கு ஈடாக எதையாவது கொடுத்துவிடுவது அவர்கள் இருவர் மீதும் குற்றமாகாது. இவை இறைவரம்புகளாகும். இவற்றை மீறிவிடாதீர்கள். இறைவரம்புகளை மீறுபவர்கள்தான் அநியாயக்காரரர்கள். 230. அவன் அவளுக்கு விவாகரத்து அளித்து விட்டால் அதன்பிறகு அப்பெண் வேறொரு ஆணை திருமணம் செய்து, அவன் விவாகரத்து அளிக்கும்வரை முதல் கணவனுக்கு அவள் அனுமதிக்கப்பட்டவள் அல்ல. இரண்டாவது கணவன் விவாகரத்து அளித்துவிட்டால், முதல் கணவனும், அவளும் இறைவரம்புகளைப் பேணமுடியும் என்று எண்ணினால் மீண்டும் இணைந்துகொள்வதில் எவ்வித குற்றமுமில்லை. இவை இறைவனின் வரம்புகளாகும். அறிவுள்ள மக்களுக்கு இவற்றை அவன் தெளிவுபடுத்துகிறான். 231. நீங்கள் பெண்களை விவாகரத்து செய்து தமக்குரிய காலக்கெடுவை அவர்கள் அடைந்துவிட்டால் அவர்களை முறைப்படி வைத்துக்கொள்ளுங்கள் அல்லது முறைப்படி விடுவித்துவிடுங்கள். துன்புறுத்துவதற்காகவும் வரம்பு மீறுவதற்காகவும் அவர்களை நீங்கள் தடுத்து நிறுத்தி வைக்காதீர்கள். அவ்வாறு செய்பவர் தமக்குத்தாமே தீங்கிழைத்துக் கொண்டவராவார். இறைவசனங்களைப் பரிகாசமாக

எடுத்துக்கொள்ளாதீர்கள். அல்லாஹ் உங்கள் மீது பொழிந்துள்ள அருட்கொடைகளையும், அவன் உங்களுக்கு அறிவுரையாக அருளிய அவனது வேதத்தையும், ஞானத்தையும் நினைவுகூருங்கள். அல்லாஹ்வை அஞ்சுங்கள். அறிந்து கொள்ளுங்கள், "அல்லாஹ் எல்லாவற்றையும் நன்கறிந்தவன்".

*232.* நீங்கள் உங்கள் மனைவியரை விவாகரத்து செய்து அவர்கள் தங்கள் காலக்கெடுவை பூர்த்திசெய்தபிறகு முறைப்படி தங்களுக்குள் மனம்விரும்பி தங்கள் (முந்தைய) கணவர்களை மணந்துகொள்வதைத் தடுக்காதீர்கள். உங்களில் அல்லாஹ்வின் மீதும், மறுமைநாளின்மீதும் நம்பிக்கை கொண்டவர்களுக்கு இப்படி அறிவுரை கூறப்படுகிறது. இதுவே உங்களுக்கு மிகத் தூய்மையானதும், பரிசுத்தமானதுமாகும். அல்லாஹ்வே நன்கறிவான், ஆனால் நீங்கள் அறிய மாட்டீர்கள். *233.* தந்தையர்கள் விரும்பினால் தாய்மார்கள் தங்கள் குழந்தைகளுக்கு முழுமையாக இரண்டு ஆண்டுகள் பாலூட்ட வேண்டும். தாய்மார்களுக்குரிய உணவையும் உடையையும் முறைப்படி தரவேண்டியது குழந்தையின் தந்தை மீதுள்ள பொறுப்பாகும். எவர் மீதும் அவரது சக்திக்கு உட்பட்டே தவிர பொறுப்பு ஏற்றப்படாது. தாயும் தனது குழந்தையினால் சிரமத்திற்குள்ளாக்கப்பட மாட்டாள். தந்தையும் தனது குழந்தையினால் சிரமத்திற்குள்ளாக்கப்பட மாட்டான். அவ்வாறு இது அவனது வாரிசின் மீதும் பொறுப்பாகும். அவர்கள் இருவரும் தங்களுக்குள் ஆலோசித்து பாலூட்டுவதை மனநிறைவோடு நிறுத்த விரும்பினால் இருவரின் மீதும் எந்தக் குற்றமுமில்லை. உங்கள் குழந்தைகளுக்கு செவிலித்தாய்மார்கள் மூலம் பாலூட்ட விரும்பினால் அப்போதும் உங்கள்மீது எந்தக் குற்றமுமில்லை. ஆனால் அவர்களுக்கு நீங்கள் நிர்ணயித்ததை முறைப்படி கொடுத்துவிட வேண்டும். அல்லாஹ்வை அஞ்சுங்கள். நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

**234.** உங்களில் எவரேனும் மனைவியரை விட்டு மரணித்துவிட்டால் அந்த மனைவியர் நான்கு மாதங்கள், பத்து நாட்கள்வரை காத்திருக்க வேண்டும். தம் காலக்கெடுவை அவர்கள் நிறைவுசெய்த பின்னர் தங்கள் விஷயத்தில் முறைப்படி செயல்படுவதில் (பொறுப்பாளர்களாகிய) உங்கள்மீது குற்றமாகாது. நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவனாக இருக்கிறான். **235.** அப்பெண்களைத் திருமணம் செய்யும் விருப்பத்தை மறைமுகமாகச் சொல்வதிலோ, உங்கள் உள்ளங்களில் மறைத்து வைப்பதிலோ உங்கள்மீது எந்தக் குற்றமுமில்லை. நிச்சயமாக நீங்கள் அவர்களை நினைப்பீர்கள் என்பதை அல்லாஹ் அறிவான். ஆனால் இரகசியமாக அவர்களிடம் வாக்களிக்காதீர்கள். நீங்கள் அவர்களிடம் முறைப்படி ஏதேனும் விஷயத்தைக் கூறலாம். நிர்ணயிக்கப்பட்ட காலக்கெடு நிறைவடையும்வரை நீங்கள் திருமண ஒப்பந்தத்தை உறுதி செய்யாதீர்கள். அறிந்துகொள்ளுங்கள், உங்கள் உள்ளங்களில் உள்ளவற்றையெல்லாம் அல்லாஹ் அறிகிறான். எனவே அவனை அஞ்சுங்கள். அறிந்துகொள்ளுங்கள், “அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், சகிப்புத்தன்மை உடையவனாகவும் இருக்கிறான்”. **236.** பெண்களைத் தீண்டாமலும், மணக்கொடையை நிர்ணயிக்காமலும் இருக்கின்ற நிலையில் நீங்கள் அவர்களை விவகாரத்து செய்து விட்டால் உங்கள்மீது எந்தக் குற்றமுமில்லை. ஆயினும் வசதியுள்ளவர் தமது வசதிக்கேற்பவும், வசதியற்றவர் தமது சக்திக்கேற்பவும் முறைப்படி அவர்களுக்கு ஏதேனும் கொடுத்துவிட வேண்டும். இது நற்செயல் புரிவோர் மீதுள்ள கடமையாகும். **237.** நீங்கள் அவர்களுக்குரிய மணக்கொடையை நிர்ணயித்த பிறகு அவர்களைத் தீண்டுவதற்கு முன்னர் விவாகரத்து அளித்து விட்டால் நிர்ணயித்த மணக்கொடையில் பாதியை அவர்களுக்குக் கொடுத்துவிட வேண்டும். ஆனால் அப்பெண்கள் மன்னித்தாலோ அல்லது திருமணப்பொறுப்பு யார் கையில் உள்ளதோ அவர்

மன்னித்தாலோ தவிர. நீங்கள் மன்னித்து விடுவதே இறையச்சத்திற்கு மிக நெருக்கமானது. நீங்கள் ஒருவருக்கொருவர் நன்மை செய்வதில் அலட்சியமாக இருந்து விடாதீர்கள். நீங்கள் செய்பவற்றையெல்லாம் அல்லாஹ் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

*238.* தொழுகைகளைப் பேணிவாருங்கள். குறிப்பாக நடுத்தொழுகையைப் பேணுங்கள். அல்லாஹ்விற்கு முன்னால் பணிந்தவர்களாக நில்லுங்கள். *239.* உங்களுக்குப் பயம் ஏற்பட்டால் நடந்து கொண்டோ வாகனத்தின் மீது அமர்ந்த நிலையிலோ தொழுது கொள்ளுங்கள். பின்னர் அமைதிநிலை ஏற்பட்டதும் நீங்கள் அறியாதவற்றையெல்லாம் உங்களுக்குக் கற்றுத்தந்த அல்லாஹ்வை அவன் உங்களுக்கு கற்றுத்தந்தவாறே நினைவுகூருங்கள். *240.* உங்களில் மனைவியரை விட்டு மரணமடைவோர் "ஓராண்டு காலம்வரை வீட்டிலிருந்து வெளியேற்றப்படாமல் அவர்களுக்குரிய வாழ்க்கை வசதிகள் அளிக்கப்பட வேண்டும்" என்று தம் மனைவியரைக் குறித்து உயில் எழுதிவிட வேண்டும். ஆனால் அவர்கள் தாமாகவே வீட்டைவிட்டு வெளியேறி தங்கள் விஷயத்தில் முறைப்படி ஏதேனும் செய்துகொண்டால் உங்கள் மீது குற்றமாகாது. அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவன்; ஞானம் மிக்கவன். *241.* விவாகரத்து செய்யப்பட்ட பெண்களுக்கும் முறைப்படி ஏதேனும் வழங்கிவிட வேண்டும். இது இறையச்சமுடையோர் மீது கடமையாகும். *242.* இவ்வாறு நீங்கள் புரிந்துகொள்ளும் பொருட்டு தன் கட்டளைகளை அல்லாஹ் உங்களுக்குத் தெளிவுபடுத்துகிறான்.

*243.* மரண பயத்தால் தங்கள் வீடுகளை விட்டு ஆயிரக்கணக்கில் ஓடிவிட்டவர்களை நீர் பார்க்கவில்லையா? நீங்கள் 'மரணித்துவிடுங்கள்' என்று அல்லாஹ் அவர்களிடம் கூறினான். பின்னர் மீண்டும் அவன் அவர்களை உயிர்ப்பித்தான். நிச்சயமாக அல்லாஹ் மனிதர்களின் மீது பேரருள்புரிபவனாக இருக்கின்றான்.

ஆயினும் மனிதர்களில் பெரும்பாலோர் நன்றி செலுத்துவதில்லை. **244.** (தற்காப்பிற்காக) இறைவழியில் போர்புரியுங்கள். அறிந்துகொள்ளுங்கள், அல்லாஹ் செவியேற்பவனாகவும், அறிந்தவனாகவும் இருக்கிறான். **245.** அல்லாஹ்வுக்கு அழகிய கடன் தருபவர் யார்? அல்லாஹ் அதனை அவருக்குப் பன்மடங்காக்கித் தருவான். அல்லாஹ்வே குறைவாகவும், தாராளமாகவும் வழங்குகிறான். நீங்கள் அனைவரும் அவன் பக்கமே திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள்.

**246.** மோசேவுக்குப்பின் இஸ்ராயீலின் மக்களுடைய தலைவர்களை நீர் பார்க்கவில்லையா? அவர்கள் தம் தூதரிடம் "நாங்கள் இறைவழியில் போர்புரிவதற்காக எங்களுக்கு ஒரு அரசனை நியமியுங்கள்" என்று கேட்டபோது அவர், "உங்களுக்கு போர் புரிவதற்கான கட்டளை இடப்பட்டும் நீங்கள் போரிடாமல் இருந்துவிட்டால்?" என்று கேட்டார். அதற்கு அவர்கள், "நாங்கள் இறைவழியில் போரிடாமல் எப்படி இருக்க முடியும்? நாங்கள் எங்கள் வீடுகளை விட்டு வெளியேற்றப்பட்டு, எங்கள் பிள்ளைகளை விட்டும் பிரிக்கப்பட்டுள்ளோம்" என்று கூறினார்கள். ஆனாலும் அவர்களுக்குப் போர்புரியுமாறு கட்டளை இடப்பட்டபோது அவர்களில் ஒரு சிலரைத்தவிர மற்ற அனைவரும் பின்வாங்கி விட்டார்கள். இத்தகைய அநியாயக்காரரர்களை அல்லாஹ் நன்கறிவான். **247.** அவர்களது தூதர் அவர்களிடம், "தாலூத் என்பவரை அல்லாஹ் உங்களுக்கு அரசராக நியமித்துள்ளான்" என்று கூறியபோது அவர்கள், "எங்கள் மீது ஆட்சிபுரிய அவருக்கு என்ன தகுதியிருக்கிறது? நாங்கள்தான் ஆட்சிபுரிய அவரைவிட அதிகத் தகுதியுடையோராக இருக்கின்றோம். அவருக்குச் செல்வவளமும் வழங்கப்படவில்லையே!" என்று கூறினார்கள். அதற்கு அவர், "அல்லாஹ் உங்களைவிட மேலானவராக அவரைத்

*தேர்ந்தெடுத்துள்ளான். அவருக்கு அறிவாற்றலையும் உடல் வலிமையையும் அதிகமாக வழங்கியுள்ளான். தான் நாடியவர்களுக்கே அல்லாஹ் தன் ஆட்சியதிகாரத்தை வழங்குகிறான். அல்லாஹ் தாராளமானவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான்" என்று கூறினார். **248.** அவர்களது தூதர் அவர்களிடம், "தாலூத் என்பவர் அரசர் என்பதற்கு சான்று என்னவெனில் உங்களிடம் ஒரு பேழை வந்து விடும், அதில் உங்கள் இறைவனிடமிருந்து சாந்தியும், மோசேவின் குடும்பத்தினரும் ஆரோனின் குடும்பத்தினரும் விட்டுச் சென்றவையும் இருக்கும். அந்தப்பேழையை வானவர்கள் கொண்டுவருவார்கள். நீங்கள் நம்பிக்கையாளர்களாக இருப்பின் அதில் உங்களுக்குப் பெரும் சான்று உள்ளது" என்று கூறினார்.*

***249.** தாலூத் படைகளுடன் புறப்பட்டபோது, ''அல்லாஹ் உங்களை ஒரு நதியின் மூலம் சோதிப்பான். எவர் அதன் நீரை அருந்துகிறாரோ அவர் என்னைச் சார்ந்தவரல்லர். எவர் அதன் நீரை ஒரு கையளவைத் தவிர சுவைக்கவில்லையோ அவரே என்னைச் சார்ந்தவராவார்" என்று கூறினார். ஆயினும் அவர்களில் ஒரு சிலரைத் தவிர அனைவரும் அதிலிருந்து தாராளமாக அருந்தினார்கள். தாலூத்தும், அவருடன் நம்பிக்கை கொண்டவர்களும் ஆற்றைக் கடந்தபோது "இன்று கோலியத்துடனும், அவனது படைகளுடனும் போரிடும் சக்தி எங்களிடம் இல்லை'' என்று கூறினார்கள். ஆனால் ''நாம் அல்லாஹ்வை உறுதியாகச் சந்திப்போம்'' என்பதை அறிந்திருந்தவர்கள், "எத்தனையோ சிறுபடைகள் இறைக்கட்டளையால் பெரும்படைகளை வென்றிருக்கின்றன" என்று கூறினார்கள். அல்லாஹ் பொறுமையாளர்களுடன் இருக்கிறான். **250.** கோலியத்தையும் அவனது படைகளையும் அவர்கள் எதிர்கொண்டபோது, "எங்கள் இறைவா! எங்கள் மீது பொறுமையைப் பொழிவாயாக! எங்களை உறுதிப்படுத்துவாயாக!*

*நிராகரிப்பாளர்களை வென்றிட எங்களுக்கு உதவிபுரிவாயாக!' என்று பிரார்த்தனை செய்தார்கள். **251.** இறுதியில் அவர்கள் இறைக்கட்டளையினால் கோலியத்தின் படைகளைத் தோல்வியுறச் செய்தார்கள். தாவீத், கோலியத்தைக் கொன்றார். அல்லாஹ் தாவீதுக்கு ஆட்சியதிகாரத்தையும், ஞானத்தையும் வழங்கினான். தான் நாடியவற்றை அவருக்குக் கற்றுக்கொடுத்தான். இவ்வாறு அல்லாஹ் மக்களில் சிலரை சிலரைக் கொண்டு தடுக்காவிட்டால் பூமி குழப்பத்தால் சீர்குலைந்து போயிருக்கும். ஆயினும் அல்லாஹ் அகிலத்தாரின் மீது பேரருள்புரிபவனாக இருக்கிறான்.*

***252.*** *இவை இறைவசனங்களாகும், இவற்றை நாம் உமக்கு மிகச்சரியாகவே எடுத்துரைக்கிறோம். (முஹம்மதே!) நிச்சயமாக நீர் தூதர்களில் உள்ளவராவீர். **253.** அத்தூதர்களில் சிலரை சிலரைவிட நாம் சிறப்பாக்கி வைத்துள்ளோம். அவர்களில் சிலருடன் அல்லாஹ் உரையாடியிருக்கிறான், சிலருடைய படித்தரத்தை உயர்த்தியும் இருக்கிறான். நாம் மரியாளின் மகன் இயேசுவுக்குத் தெளிவான சான்றுகளை வழங்கினோம். அவரைத் தூய ஆன்மாவைக்கொண்டு வலுப்படுத்தினோம். அல்லாஹ் நாடியிருந்தால் அவர்களுக்குப் பின்வந்தவர்கள் தெளிவான கட்டளை வந்தபின்னரும் சண்டையிட்டிருக்க மாட்டார்கள். ஆயினும் அவர்கள் முரண்பட்டார்கள். அவர்களில் சிலர் நம்பிக்கை கொண்டனர்; சிலர் நிராகரித்தனர். அல்லாஹ் நாடியிருந்தால் அவர்கள் சண்டையிட்டிருக்க மாட்டார்கள். ஆயினும் தான் நாடியதையே அல்லாஹ் செய்கிறான்.*

***254.*** *நம்பிக்கையாளர்களே! எந்தவிதமான பேரமும், நட்பும், பரிந்துரையும் இல்லாத அந்தநாள் வருவதற்குமுன் நாம் உங்களுக்கு வழங்கியவற்றிலிருந்து செலவு செய்யுங்கள். நிராகரிப்பாளர்கள்தான் அநியாயக்காரர்களாவர். **255.** அல்லாஹ்,*

*அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. அவன் நித்திய ஜீவன்; அனைத்தையும் நிலைநிறுத்துபவன். சிறுதூக்கமோ, உறக்கமோ அவனைப் பீடிக்காது. வானங்களிலும், பூமியிலும் உள்ளவை யாவும் அவனுக்கே உரியன. அவனது அனுமதியின்றி அவனிடம் யார்தான் பரிந்து பேச முடியும்? அவர்களுக்கு முன்னால் இருப்பவற்றையும் பின்னால் இருப்பவற்றையும் அவன் அறிவான். அவன் நாடினாலன்றி அவனது அறிவிலிருந்து எவரும் எதையும் அறிந்துகொள்ள முடியாது. அவனது இருக்கை வானங்கள் மற்றும் பூமியின் மீது பரந்து நிற்கின்றது. அவற்றைப் பாதுகாப்பது அவனைச் சோர்வடையச் செய்வதில்லை. அவனே மிக உயர்ந்தவன்; மகத்துவம் மிக்கவன். 256. மார்க்க விஷயத்தில் எவ்வித நிர்ப்பந்தமுமில்லை. தவறான வழியிலிருந்து நேர்வழி தெளிவாகி விட்டது. எனவே எவர் சாத்தானை நிராகரித்து அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொள்கிறாரோ அவர் என்றும் அறுபடாத பலமான கயிற்றைப் பற்றிக்கொண்டவராவார். அல்லாஹ் செவியேற்பவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். 257. அல்லாஹ்வே நம்பிக்கையாளர்களுக்கு பொறுப்பாளனாக இருக்கின்றான். அவன் அவர்களை இருளிலிருந்து வெளியேற்றி வெளிச்சத்தின் பக்கம் கொண்டு வருகிறான். நிராகரிப்பாளர்களுக்கு சாத்தான்களே பொறுப்பாளர்கள். அவர்கள் இவர்களை வெளிச்சத்திலிருந்து வெளியேற்றி இருளின்பக்கம் கொண்டு செல்கிறார்கள். இவர்கள்தான் நரகவாசிகள்; அதில் என்றென்றும் வீழ்ந்து கிடப்பார்கள்.*

*258. ஆப்ரஹாமிடம் அவரது இறைவனைக் குறித்து தர்க்கம் செய்தவனை நீர் பார்க்கவில்லையா? ஏனெனில் அல்லாஹ் அவனுக்கு ஆட்சியதிகாரத்தை வழங்கியிருந்தான். “வாழ்வையும், மரணத்தையும் அளிப்பவனே என் இறைவன்” என்று அவர் கூறியபோது அவன், “நானும்தான் வாழ்வையும், மரணத்தையும் அளிக்கிறேன்” என்று*

*கூறினான். அதற்கு அவர், "அல்லாஹ் சூரியனை கிழக்கிலிருந்து உதிக்கச் செய்கிறான். நீ அதனை மேற்கிலிருந்து உதிக்கச்செய்" என்றார். சத்தியத்தை நிராகரித்த அவன் திகைத்துப்போனான். அல்லாஹ் அநியாயக்காரர்களுக்கு நேர்வழி காட்டுவதில்லை.*

***259.*** *அல்லது அடியோடு அழிந்த ஒரு ஊரினைக் கடந்துசென்ற ஒருவரைப் போன்றது. "அழிந்துவிட்ட பிறகு அல்லாஹ் இந்த ஊரினை எவ்வாறு மீண்டும் உயிர்ப்பிப்பான்" என்று அவர் கேட்டார். எனவே அல்லாஹ் நூறு ஆண்டுகள் அவரை மரணிக்கச் செய்தான். பின்னர் அவன் அவரை மீண்டும் எழுப்பி "நீ எவ்வளவு காலம் இவ்வாறு இருந்தாய்?" என்று அவரிடம் வினவினான். அதற்கு அவர், "ஒருநாள் அல்லது ஒருநாளுக்கும் சற்று குறைவாக" என்றார். "இல்லை, நீ நூறு ஆண்டுகள் இவ்வாறு இருந்தாய். இப்போது நீ உனது உணவையும், பானத்தையும் பார். அவை கெட்டுவிடவில்லை. உனது கழுதையையும் பார். உன்னை மக்களுக்கு ஒரு சான்றாக ஆக்குவதற்காகவே இவ்வாறு செய்தோம். அதன் எலும்புகளை நாம் எவ்வாறு ஒன்றுசேர்த்து பின்னர் அதன்மீது தசையை போர்த்துகின்றோம் என்பதைப் பார்" என்று அல்லாஹ் கூறினான். எனவே அவருக்குத் தெளிவாகிவிட்ட பிறகு, "நிச்சயமாக அல்லாஹ் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவன் என்பதை நான் அறிவேன்" என்று கூறினார்.* ***260.*** *"என் இறைவா! நீ இறந்தவர்களை எவ்வாறு உயிர்ப்பிக்கின்றாய் என்பதை எனக்குக் காட்டுவாயாக" என்று ஆப்ரஹாம் கூறியபோது அவன், "நீ நம்பிக்கை கொள்ளவில்லையா?" என்று கேட்டான். அதற்கு அவர், "நிச்சயமாக நான் நம்புகிறேன். ஆயினும் என் மனம் அமைதியடைவதற்காகவே இவ்வாறு கேட்கிறேன்" என்றார். இறைவன், "நீ நான்கு பறவைகளைப்பிடித்து அவற்றை நீயே அறுத்து பின்னர் அவற்றின் ஒவ்வொரு பகுதியையும் தனித்தனி மலைகளில்*

வைத்துவிட்டு பின்னர் அவற்றை கூப்பிடு. அவை உன்னிடம் விரைந்தோடி வரும். அறிந்துகொள், அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவன்; ஞானம் மிக்கவன்" என்று கூறினான்.

**261.** இறைவழியில் தம் செல்வங்களை செலவு செய்வோருக்கு உதாரணம் ஒரு தானியத்தைப் போன்றது. அதிலிருந்து ஏழு கதிர்கள் முளைக்கின்றன. ஒவ்வொரு கதிரிலும் நூறு தானியங்கள் உள்ளன. தான் நாடியோருக்கு அல்லாஹ் அதனைப் பன்மடங்காக்குகிறான். அல்லாஹ் தாராளமானவன்; நன்கறிந்தவன். **262.** எவரெல்லாம் தம் செல்வங்களை இறைவழியில் செலவு செய்த பின்னர் அதனைச் சொல்லிக் காண்பிக்காமலும், தொல்லை தராமலும் இருக்கிறார்களோ அவர்களது நற்கூலி அவர்களின் இறைவனிடத்தில் இருக்கின்றது. அவர்களுக்கு எவ்வித அச்சமுமில்லை. அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள். **263.** கனிவான சொல்லும், மன்னிப்பும் தொல்லையைத் தொடரும்படிச் செய்யும் தர்மத்தைவிட சிறந்ததாகும். அல்லாஹ் தேவையற்றவனாகவும், சகிப்புத்தன்மை உடையவனாகவும் இருக்கிறான். **264.** நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வின் மீதும், மறுமைநாளின் மீதும் நம்பிக்கைகொள்ளாமல் தன் செல்வத்தை வெளிப்பகட்டிற்காகச் செலவு செய்பவனைப் போன்று நீங்களும் கொடுத்ததை சொல்லிக்காட்டியும், தொல்லைகொடுத்தும் உங்கள் தர்மங்களைப் பாழாக்கி விடாதீர்கள். அவனுக்கு உதாரணம் ஒரு மண்மூடிய பாறையைப் போன்றதாகும். அதன்மீது பெருமழை பெய்து அதனை முற்றிலும் வெறுமையாக்கி விட்டது. இத்தகையோருக்கு அவர்கள் சம்பாதித்தவை எந்தப் பயனும் தராது. அல்லாஹ் நிராகரிப்பாளர்களுக்கு நேர்வழி காட்டுவதில்லை.

**265.** இறைதிருப்தியை நாடியும் தங்கள் உள்ளத்தின் உறுதிக்காகவும் செலவு செய்வோரின் உதாரணம் உயரமான இடத்திலுள்ள ஒரு தோட்டத்தைப் போன்றது. அதன்மீது

பெருமழை பொழிந்தால் அது தனது விளைச்சலை இருமடங்காகத் தருகிறது. பெருமழை பொழியாவிட்டால் அதற்குச் சிறு தூறல்கூட போதுமானதாகும். நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் பார்த்துக் கொண்டிருக்கிறான். **266.** ஒருவரிடம் பேரீச்சைகளும், திராட்சைகளும் கொண்ட ஒரு தோட்டம் உள்ளது, அதில் ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கின்றன, அதில் அவருக்கு எல்லாவகையான கனிகளும் கிடைக்கின்றன. அவரை முதுமை வந்தடைந்து விடுகிறது. அவரது குழந்தைகளோ இன்னும் இயலாதவர்களாகவே இருக்கின்றனர். அப்போது அந்தத் தோட்டத்தில் தீயுடன் கூடிய புயல்காற்று வந்ததால் அத்தோட்டம் எரிந்து விடுகிறது. உங்களில் எவரேனும் இதை விரும்புவாரா? இவ்வாறு நீங்கள் சிந்தித்துணரும் பொருட்டு தன் சான்றுகளை அல்லாஹ் உங்களுக்குத் தெளிவுபடுத்துகிறான்.

**267.** நம்பிக்கையாளர்களே! நீங்கள் சம்பாதித்தவற்றிலிருந்தும், பூமியிலிருந்து நாம் உங்களுக்கு வெளிப்படுத்தித் தந்ததிலிருந்தும் நல்லவற்றையே செலவு செய்யுங்கள். தரக்குறைவான பொருட்களை செலவு செய்ய எண்ணாதீர்கள். நீங்கள் அத்தகைய பொருட்களை கண்களை மூடிக்கொண்டே தவிர வாங்க மாட்டீர்களே! அறிந்துகொள்ளுங்கள், “அல்லாஹ் தேவையற்றவனாகவும், புகழுக்குரியவனாகவும் இருக்கின்றான்”. **268.** சாத்தான் உங்களை வறுமையைக் கொண்டு அச்சமூட்டுகிறான். மானக்கேடானவற்றை செய்யுமாறு தூண்டுகிறான். ஆனால் அல்லாஹ் தன்னிடமிருந்து மன்னிப்பையும், அருளையுமே வாக்களிக்கிறான். அல்லாஹ் தாராளமானவனாகவும் நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். **269.** தான் விரும்பியவருக்கு அவன் ஞானத்தை வழங்குகிறான், எவருக்கு ஞானம் கிடைத்து விட்டதோ அவருக்குப் பெரும்

செல்வம் கிடைத்து விட்டது. அறிவுடையோரே அறிவுரையை பெற்றுக்கொள்வர்.

**270.** நீங்கள் எதைச் செலவு செய்தாலும் அல்லது நேர்ச்சை செய்தாலும் அதனை அல்லாஹ் நன்கறிவான். அநியாயக்காரர்களுக்கு உதவியாளர்கள் எவரும் இல்லை. **271.** நீங்கள் தானதர்மங்களை வெளிப்படையாகச் செய்தால் அதுவும் நல்லதுதான். அதையே நீங்கள் மறைமுகமாக ஏழைகளுக்கு கொடுப்பீர்களாயின் அது இன்னும் சிறந்ததாகும். அல்லாஹ் உங்கள் பாவங்களைப் போக்கி விடுவான். அல்லாஹ் உங்கள் செயல்களை நன்கறிவான். **272.** அவர்களை நேர்வழியில் கொண்டுவருவது உமது பொறுப்பல்ல. மாறாக தான் நாடுவோரை அல்லாஹ்வே நேர்வழியில் செலுத்துகிறான். நீங்கள் எப்பொருளைச் செலவு செய்தாலும் அது உங்களுக்கே நன்மையாக அமையும். நீங்கள் இறைதிருப்திக்காகவே அன்றி செலவு செய்யாதீர்கள். நீங்கள் எதைச் செலவு செய்தாலும் அதற்குரிய கூலி நிறைவாக உங்களுக்கு வழங்கப்படும். அதில் உங்களுக்கு எவ்வித குறைவும் செய்யப்பட மாட்டாது. **273.** பூமியில் ஓடியாடி உழைக்கமுடியா வண்ணம் தங்களை இறைவழியில் அர்ப்பணித்துக்கொண்ட வசதியற்ற ஏழைகளுக்கு தானதர்மங்கள் உரியனவாகும். அவர்கள் யாசிக்காததால் அறியாதவன் அவர்களை செல்வந்தர்கள் என எண்ணி விடுகிறான். நீர் அவர்களை அவர்களின் தோற்றங்களால் அறிந்துகொள்ளலாம். ஆனால் அவர்கள் மக்களிடம் கெஞ்சிக் கேட்பதில்லை. நீங்கள் எப்பொருளைச் செலவு செய்தாலும் அதை அல்லாஹ் நன்கறிபவனாக இருக்கின்றான். **274.** தம் செல்வங்களை இரவிலும், பகலிலும், இரகசியமாகவும், வெளிப்படையாகவும் செலவு செய்பவர்களுக்கு அவர்களது இறைவனிடம் நற்கூலி இருக்கின்றது. அவர்களுக்கு எவ்வித அச்சமுமில்லை. அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள்.

*275. வட்டியை உண்பவர்கள் மறுமைநாளில் சாத்தான் தீண்டியதால் பைத்தியமாகி விட்டவர்களைப் போலல்லாமல் எழ மாட்டார்கள். இதற்குக்காரணம் வியாபாரமும் வட்டியைப் போன்றதுதான் என்று அவர்கள் கூறியதேயாகும். உண்மையில் அல்லாஹ் வியாபாரத்தை அனுமதிக்கப்பட்டதாகவும் வட்டியை தடுக்கப்பட்டதாகவும் ஆக்கியுள்ளான். ஆகவே எவர் தனது இறைவனிடமிருந்து அறிவுரை வந்த பின்னர் விலகிக் கொண்டாரோ அவர் முன்னர் வாங்கியது அவருக்குரியதாகும். அதன் விவகாரம் அல்லாஹ்வின் பொறுப்பில் உள்ளது. யாரேனும் அதனை மீண்டும் செய்தால் அவர்களே நரகவாசிகளாவர். அதில் அவர்கள் என்றென்றும் வீழ்ந்து கிடப்பார்கள். 276. அல்லாஹ் வட்டியை அழிக்கிறான். தர்மங்களை வளர்க்கிறான். நன்றிகெட்டவர்களையும், பாவிகளையும் அல்லாஹ் விரும்புவதில்லை. 277. நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிந்து தொழுகையைக் கடைப்பிடித்து கடமையாக்கப்பட்ட தர்மத்தையும் கொடுத்து வருபவர்களுக்கு அவர்களது இறைவனிடம் நற்கூலி இருக்கின்றது. அவர்களுக்கு எவ்வித அச்சமுமில்லை. அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள்.*

*278. நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். நீங்கள் நம்பிக்கையாளர்களாயின் எஞ்சியுள்ள வட்டியை விட்டு விடுங்கள். 279. நீங்கள் அவ்வாறு செய்யவில்லையெனில் அல்லாஹ்விடமிருந்தும் அவனது தூதரிடமிருந்தும் போருக்கான அறிவிப்பை எதிர்பாருங்கள். நீங்கள் மன்னிப்புக்கோரினால் உங்கள் அசல்மூலதனத்திற்கு நீங்கள் உரிமையாளராவீர்கள். நீங்கள் யார் மீதும் அநீதி இழைக்கக்கூடாது. உங்கள் மீதும் அநீதி இழைக்கப்படமாட்டாது. 280. ஒருவர் கஷ்டத்தில் இருந்தால் அவருக்கு வசதி ஏற்படும்வரை அவகாசம் அளியுங்கள். நீங்கள் அறிந்தவர்களாக இருப்பின் மன்னித்து விடுவதே*

உங்களுக்கு மிகச்சிறந்ததாகும். *281.* அல்லாஹ்வின் பக்கம் திரும்பக்கொண்டு வரப்படும் அந்த நாளை அஞ்சிக் கொள்ளுங்கள். பின்னர் ஒவ்வொருவருக்கும் அவரவர் செய்தவற்றிற்கான கூலி முழுமையாக வழங்கப்பட்டுவிடும். அவர்கள்மீது அநீதி இழைக்கப்படமாட்டாது.

*282.* நம்பிக்கையாளர்களே! நீங்கள் ஒரு குறிப்பிட்ட தவணைக்காகக் கடன் கொடுக்கல்வாங்கலை வைத்துக்கொண்டால் அதனை எழுதிக்கொள்ளுங்கள். உங்களுக்கிடையே யாராவது ஒருவர் அதனை நேர்மையுடன் எழுதிக்கொள்ள வேண்டும். எழுதுபவர் எழுதுவதற்கு மறுப்பு தெரிவிக்கக்கூடாது. அல்லாஹ் அவருக்குக் கற்றுத்தந்தவாறே அவர் அதனை எழுதிவிட வேண்டும். எவர் மீது அந்தப் பொறுப்பு உள்ளதோ அவரே வாசகம் சொல்ல வேண்டும். அவரது இறைவனான அல்லாஹ்வை அவர் அஞ்சிக் கொள்ளட்டும். அதில் எவ்வித குறையும் வைக்கக்கூடாது. எவர் மீது அந்த பொறுப்பு உள்ளதோ அவர் அறிவற்றவராக அல்லது பலவீனராக அல்லது தானே வாசகம் சொல்ல இயலாதவராக இருந்தால் அவரது பொறுப்பாளர் நேர்மையான முறையில் வாசகம் சொல்ல வேண்டும். உங்கள் ஆண்களிலிருந்து இருவரை சாட்சியாக்கிக் கொள்ளுங்கள். இரண்டு ஆண்கள் இல்லையென்றால் நீங்கள் விரும்பும் மக்களில் ஒரு ஆண் மற்றும் இரண்டு பெண்களை சாட்சியாக்கிக் கொள்ளுங்கள், அதில் ஒரு பெண் மறந்து விட்டாலும் இன்னொரு பெண் நினைவூட்டுவாள் என்பதற்காக. சாட்சியாளர்கள் அழைக்கப்பட்டால் அவர்கள் மறுக்கக் கூடாது. விவகாரம் சிறியதோ, பெரியதோ அதனுடைய நிர்ணயிக்கப்பட்ட காலவரையறையுடன் அதனை எழுதிக் கொள்வதில் அலட்சியம் காட்டாதீர்கள். இதுவே உங்களுக்கு அல்லாஹ்விடம் மிக நீதியானதும், சாட்சியத்தை உறுதிப்படுத்தக்கூடியதும் ஆகும்.

நீங்கள் சந்தேகம் கொள்ளாமல் இருப்பதற்கும் இதுவே சிறந்ததாகும். ஆனால் உங்களுக்கிடையே சுற்றிச்சுற்றி வரும் உடனடி ரொக்கவியாபாரமாக இருந்தாலே தவிர. அதனை நீங்கள் எழுதிக்கொள்ளாமல் இருப்பது உங்கள் மீது குற்றமாகாது. ஆயினும் நீங்கள் இந்த வியாபாரத்தை செய்தால் சாட்சியத்தை ஏற்படுத்திக்கொள்ளுங்கள். எழுதுபவரோ சாட்சியாளரோ துன்புறுத்தப்படக்கூடாது. அவ்வாறு செய்வீர்களானால் அது உங்களுக்கு பெரும்பாவமாகும். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். அல்லாஹ்தான் உங்களுக்குக் கற்றுக்கொடுக்கிறான். அல்லாஹ் எல்லாவற்றையும் அறிந்தவனாக இருக்கின்றான். 283. நீங்கள் பயணத்தில் இருக்கும்போது எழுதக்கூடியவர் எவரையும் பெறவில்லையெனில் ஈடாகப் பொருட்களை கொடுத்து விடலாம். உங்களில் ஒருவர் மற்றவரை நம்புகிறார் எனில் நம்பப்பட்டவர் அந்த நம்பிக்கையை காப்பாற்றட்டும். தன் இறைவனாகிய அல்லாஹ்வை அஞ்சிக்கொள்ளட்டும். சாட்சியத்தை மறைத்து விடாதீர்கள். எவர் அதனை மறைக்கின்றாரோ அவரது உள்ளம் பாவத்திற்கு உள்ளாகிவிடும். நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் அறிந்தவனாக இருக்கின்றான்.

284. வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்வுக்கே உரியன. நீங்கள் உங்கள் உள்ளங்களில் உள்ளவற்றை வெளிப்படுத்தினாலும் அல்லது மறைத்தாலும் அல்லாஹ் அது குறித்து உங்களிடம் விசாரணை செய்வான். தான் நாடியவரை அவன் மன்னிப்பான், தான் நாடியவரை தண்டிப்பான். அல்லாஹ் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவன். 285. இத்தூதர் தம் இறைவனிடமிருந்து தமக்கு அருளப்பட்டதை நம்பிக்கை கொண்டுள்ளார். அவரை ஏற்றுக்கொண்டவர்களும் அதன்மீது நம்பிக்கை கொண்டுள்ளார்கள். இவர்கள் அனைவரும் அல்லாஹ்வின்

மீதும், அவனது வானவர்களின் மீதும், அவனது வேதங்களின் மீதும், அவனது தூதர்களின் மீதும் நம்பிக்கை கொண்டுள்ளார்கள். “நாங்கள் அவனது தூதர்களில் எவருக்கிடையிலும் வேற்றுமை காட்ட மாட்டோம்” என்றும், “கேட்டோம். கீழ்ப்படிந்தோம். எங்கள் இறைவா! நாங்கள் உன்னிடம் மன்னிப்பை வேண்டுகிறோம். உன்னிடமே நாங்கள் திரும்ப வேண்டும்” என்றும் கூறுகிறார்கள். **286.** அல்லாஹ் எவர் மீதும் அவரது சக்திக்கு உட்பட்டே தவிர பொறுப்பை ஏற்றுவதில்லை. அவர் சம்பாதித்ததன் பலன் அவருக்கே. அவரது செயலின் விளைவும் அவருக்கே. எங்கள் இறைவா! நாங்கள் மறந்து விட்டாலோ, தவறிழைத்து விட்டாலோ எங்களை தண்டித்து விடாதே! எங்கள் இறைவா! எங்களுக்கு முன்னிருந்தோர் மீது சுமத்தியதைப் போன்று எங்கள் மீதும் சுமத்தி விடாதே! எங்கள் இறைவா! எங்களால் சுமக்க முடியாத சுமையை எங்கள்மீது சுமத்தி விடாதே! எங்களைப் பொறுத்தருள்வாயாக! எங்களை மன்னிப்பாயாக! எங்கள்மீது கருணை காட்டுவாயாக! நீயே எங்களின் பாதுகாவலன். எனவே நிராகரிப்பாளர்களுக்கு எதிராக எங்களுக்கு உதவிபுரிவாயாக. (என்று பிரார்த்திப்பார்கள்)

## 3. இம்ரானின் குடும்பத்தினர் (ஆலுஇம்ரான்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

**1.** அலிஃப். லாம். மீம். **2.** அல்லாஹ்வாகிய அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. அவன் நித்திய ஜீவன்; அனைத்தையும் நிலைநிறுத்துபவன். **3-4.** உண்மையைக் கொண்டுள்ள இவ்வேதத்தை அவனே உமக்கு அருளியுள்ளான். அது தனக்கு முன்னுள்ளவற்றை உண்மைப்படுத்துகிறது. இதற்கு முன்னர் மக்களுக்கு வழிகாட்டியாக தவ்ராத்தையும் இன்ஜீலையும் அருளினான். சத்தியத்தையும் அசத்தியத்தையும் பிரித்துக் காட்டக்கூடியதையும் அருளினான்.

அல்லாஹ்வின் அத்தாட்சிகளை நிராகரித்தோருக்கு கடும் வேதனை உண்டு. அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவனாகவும் தக்க தண்டனையளிப்பவனாகவும் இருக்கின்றான். 5. வானத்திலும் பூமியிலும் உள்ள எதுவும் அல்லாஹ்வுக்கு மறைவானதாக இல்லை. 6. அவனே தாயின் கருவறையில் தான் விரும்பியவாறு உங்களை வடிவமைக்கிறான். அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. அவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும் ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.

7. அவனே உமக்கு வேதத்தை அருளினான். அதில் சில வசனங்கள் தெளிவான பொருள்தரக்கூடியதாக இருக்கின்றன. அவையே வேதத்தின் அடிப்படையாகும். வேறு சில வசனங்கள் முழுமையாக புரிந்துகொள்ள முடியாதவையாக இருக்கின்றன. உள்ளங்களில் கோளாறு உள்ளவர்கள் குழப்பத்தை நாடியும், அதனுடைய விளக்கத்தைத் தேடியும் பூடகமானவற்றுக்குப் பின்னால் அலைகிறார்கள். ஆயினும் அவற்றின் விளக்கத்தை அல்லாஹ்வைத்தவிர வேறு எவரும் அறிய மாட்டார். இதற்கு மாறாக அறிவுமுதிர்ச்சி பெற்றவர்கள் “நாங்கள் இதன்மீது நம்பிக்கைகொண்டோம். இவையனைத்தும் எங்கள் இறைவனிடமிருந்து வந்தவைதான்” என்று கூறுவார்கள். அறிவுடையவர்கள்தான் அறிவுரையை ஏற்றுக்கொள்வர். 8. எங்கள் இறைவா! நீ எங்களை நேர்வழியில் செலுத்திய பின்பு எங்கள் உள்ளங்களைத் தடுமாறச் செய்து விடாதே. எங்களுக்கு உன்னிடமிருந்து கருணையை வழங்குவாயாக. நிச்சயமாக நீயே பெரும் கொடையாளியாவாய். 9. எங்கள் இறைவா! நீ மக்கள் அனைவரையும் ஒருநாள் ஒன்று திரட்டுபவனாக இருக்கின்றாய். அந்நாள் வருவதில் எத்தகைய சந்தேகமும் இல்லை. நிச்சயமாக அல்லாஹ் வாக்குறுதிக்கு மாறுசெய்ய மாட்டான்.

*10.* நிச்சயமாக நிராகரிப்பாளர்களுக்கு அவர்களது செல்வங்களோ, பிள்ளைகளோ அல்லாஹ்விடம் எவ்விதப் பயனையும் அளிக்காது. இவர்கள்தான் நரகத்தின் எரிபொருட்களாவர். *11.* பாரோவைச் சார்ந்தவர்களுக்கும் அவர்களுக்கு முன்னிருந்தவர்களுக்கும் நேர்ந்ததைப் போலவே இவர்களுக்கும் நேரும். அவர்கள் நம் சான்றுகளை நிராகரித்தார்கள். எனவே அவர்களின் பாவங்களினால் அல்லாஹ் அவர்களைத் தண்டித்தான். அல்லாஹ் தண்டிப்பதில் கடுமையானவன். *12.* நிராகரிப்பாளர்களிடம் நீர் கூறும்: “நீங்கள் ஒடுக்கப்பட்டு நரகத்தின் பக்கம் விரட்டிச் செல்லப்படுவீர்கள். அது மிகவும் கெட்ட இருப்பிடமாகும். *13.* (பத்ருப்போரில்) மோதிக்கொண்ட இரு பிரிவினரிடம் நிச்சயமாக உங்களுக்கு ஒரு சான்று இருக்கின்றது. அதில் ஒரு பிரிவினர் இறைவழியில் போரிட்டுக் கொண்டிருந்தார்கள். மற்றொரு பிரிவினர் நிராகரிப்பாளர்களாக இருந்தார்கள். அந்நிராகரிப்பாளர்கள் தம் கண்களால் அவர்களை இரு மடங்காகப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். தான் நாடியோரை அல்லாஹ் தன் உதவியால் வலுப்படுத்துகிறான். இதில் பார்வையுடையோருக்குப் பெரும் படிப்பினை இருக்கிறது.

*14.* பெண்கள், ஆண் பிள்ளைகள், தங்கம் மற்றும் வெள்ளியின் குவியல்கள், உயர் ரகக் குதிரைகள், கால்நடைகள், விளைநிலங்கள் ஆகியவற்றை விரும்புவது மனிதர்களுக்கு அழகாக்கப்பட்டுள்ளது. ஆயினும் இவையனைத்தும் இவ்வுலக வாழ்வின் இன்பங்களேயாகும். அல்லாஹ்விடமே அழகிய தங்குமிடம் இருக்கின்றது. *15.* நீர் கூறும்: “இதைவிடச் சிறந்ததை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா? இறையச்சமுடையோருக்கு அவர்களது இறைவனிடம் சுவனச்சோலைகள் உண்டு. அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும்

*தங்கியிருப்பார்கள். அங்கு தூய துணைகளும், இறைதிருப்தியும் உண்டு. தன் அடியார்களை அல்லாஹ் கண்காணித்துக் கொண்டிருக்கிறான்". 16. அவர்கள், "எங்கள் இறைவா! நாங்கள் நம்பிக்கைகொண்டோம். எனவே நீ எங்கள் பாவங்களை மன்னித்து நரகவேதனையை விட்டும் எங்களைக் காப்பாற்றுவாயாக!'' என்று பிரார்த்தனை செய்து கொண்டிருப்பார்கள். 17. அவர்கள் பொறுமையாளர்களாகவும் உண்மையாளர்களாகவும், கீழ்ப்படிந்தவர்களாகவும் இறைவழியில் செலவு செய்பவர்களாகவும், பின்னிரவில் பாவமன்னிப்புக் கோருபவர்களாகவும் இருக்கின்றார்கள்.*

*18. "அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. அவன் நீதியை நிலைநாட்டக்கூடியவன்" என்று அல்லாஹ்வே சாட்சி கூறுகிறான். அவ்வாறே வானவர்களும் அறிஞர்களும் சாட்சி கூறுகிறார்கள். அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. அவன் யாவற்றையும் மிகைத்தவன். ஞானம் மிக்கவன். 19. 'இஸ்லாம்' மட்டுமே அல்லாஹ்விடத்தில் அங்கீகரிக்கப்பட்ட மார்க்கமாகும். வேதம் வழங்கப்பட்டவர்கள் தெளிவான அறிவு வந்த பின்னரும் தங்களிடையேயுள்ள பொறாமையினால்தான் முரண்பட்டார்கள். இறைவசனங்களை நிராகரிப்பவர்கள் அறிந்துகொள்ளட்டும். நிச்சயமாக அல்லாஹ் விசாரணை செய்வதில் விரைவானவன். 20. அவர்கள் உம்மிடம் தர்க்கம் செய்தால் நீர் கூறிவிடும்: "நானும் என்னைப் பின்பற்றியவர்களும் அல்லாஹ்வுக்கு முற்றிலும் அடிபணிந்து விட்டோம்''. வேதம் வழங்கப்பட்டவர்களிடமும், பாமர மக்களிடமும் "நீங்களும் இவ்வாறு அடிபணிகிறீர்களா?" என்று கேளும். அவர்கள் அடிபணிந்து விட்டால் நேர்வழியைப் பெற்றுவிட்டார்கள். அவர்கள் புறக்கணித்தால் எடுத்துரைத்து விடுவதே உமது பொறுப்பாகும். தன் அடியார்களை அல்லாஹ் கண்காணித்துக் கொண்டிருக்கிறான். 21. எவரெல்லாம்*

*அல்லாஹ்வின் சான்றுகளை நிராகரித்து, தூதர்களை அநியாயமாகக் கொலை செய்கிறார்களோ, மேலும் நீதியின் பக்கம் அழைக்கின்ற மக்களையும் கொலை செய்கிறார்களோ அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு எனும் நற்செய்தியைக் கூறி விடுவீராக! **22.** இவர்களது செயல்கள் இம்மையிலும், மறுமையிலும் வீணாகி விட்டன. இவர்களுக்கு உதவிபுரிவோர் எவருமில்லை.*

***23.** வேதத்தின் ஒரு பகுதி வழங்கப்பட்டோரை நீர் பார்க்கவில்லையா? அவர்களிடையே தீர்ப்பு வழங்குவதற்காக இறைவேதத்தின் பக்கம் அவர்கள் அழைக்கப்படுகிறார்கள். ஆயினும் அவர்களில் ஒரு பிரிவினர் புறக்கணித்தவர்களாக விலகிச்சென்று விடுகிறார்கள். **24.** இதற்குக் காரணம் “குறிப்பிட்ட சில நாட்களைத்தவிர நரக நெருப்பு எங்களை ஒருபோதும் தீண்டாது” என்று அவர்கள் கூறி வந்ததேயாகும். அவர்கள் புனைந்த விஷயங்கள் அவர்களின் சமய விவகாரத்தில் அவர்களை ஏமாற்றத்தில் ஆழ்த்தி விட்டது. **25.** சந்தேகமின்றி நிச்சயமாக வரக்கூடிய ஒருநாளில் நாம் அவர்களை ஒன்று சேர்க்கும்போது அவர்களின் நிலை என்னவாகும்? அந்நாளில் ஒவ்வொரு மனிதனுக்கும் அவனவனது செயலுக்கான கூலி முழுமையாக வழங்கப்படும். அவர்கள் அநீதி இழைக்கப்பட மாட்டார்கள். **26.** நீர் கூறும்: “அல்லாஹ்வே! ஆட்சியதிகாரத்தின் அதிபதியே! நீ நாடியோருக்கு ஆட்சியை வழங்குகின்றாய். நீ நாடியோரிடமிருந்து ஆட்சியைப் பறித்து விடுகின்றாய். நீ நாடியோரைக் கண்ணியப்படுத்துகின்றாய். நீ நாடியோரை இழிவுபடுத்துகின்றாய். நன்மைகள் அனைத்தும் உன் வசமே உள்ளன. நிச்சயமாக நீ எல்லாவற்றின்மீதும் பேராற்றலுடையவன். **27.** நீ இரவைப் பகலில் புகுத்துகின்றாய். பகலை இரவில் புகுத்துகின்றாய். நீ உயிரற்றதிலிருந்து உயிருள்ளதை வெளியாக்குகின்றாய்.*

*உயிருள்ளதிலிருந்து உயிரற்றதை வெளியாக்குகின்றாய். நீ நாடுவோருக்கு கணக்கின்றி வழங்குகின்றாய்".*

***28.** நம்பிக்கையாளர்கள் நம்பிக்கையாளர்களை விடுத்து நிராகரிப்பாளர்களை நேசர்களாக்கிக் கொள்ள வேண்டாம்.* ஆயினும் அவர்களிடமிருந்து உங்களை பாதுகாத்துக்கொள்வதற்காகவே அன்றி. அவ்வாறு நட்புக்கொள்பவருக்கு அல்லாஹ்வுடன் எவ்விதத் தொடர்பும் இல்லை. அல்லாஹ் தன்னைப்பற்றி உங்களை எச்சரிக்கிறான். அனைவரும் அல்லாஹ்வின் பக்கமே திரும்ப வேண்டும். **29.** நீர் கூறும்: "உங்கள் நெஞ்சங்களில் உள்ளவற்றை நீங்கள் மறைத்தாலும் அல்லது வெளிப்படுத்தினாலும் அல்லாஹ் அவற்றை நன்கறிவான். வானங்களிலும் பூமியிலும் உள்ளவற்றை அவன் அறிகிறான். அல்லாஹ் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவன்". **30.** தான் செய்த நன்மைகளையும், தீமைகளையும் ஒவ்வொரு மனிதனும் தன் கண்ணெதிரில் காணும் நாளில் தனக்கும் அந்நாளுக்கும் இடையில் மிக தூரமான இடைவெளி இருக்கக்கூடாதா என்று துடிப்பான். அல்லாஹ் தன்னைப்பற்றி உங்களை எச்சரிக்கிறான். தன் அடியார்களின் மீது அல்லாஹ் மிகுந்த பரிவுடையவனாக இருக்கின்றான். **31.** நீர் கூறும்: "நீங்கள் அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள். அல்லாஹ் உங்களை நேசிப்பான். உங்கள் பாவங்களையும் மன்னிப்பான். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்". **32.** நீர் கூறும்: "அல்லாஹ்வுக்கும், தூதருக்கும்*

---

*ஒரு நம்பிக்கையாளர் முஸ்லிம்கள் முஸ்லிம் அல்லாதவர்கள் என்ற பாகுபாடின்றி நியாயமாகவும் முறையான மரியாதையுடனும் அனைவரையும் நடத்த வேண்டும். ஆனால் இஸ்லாத்திற்கு எதிராக போர் புரிபவர்களுடன் நட்பு பாராட்டக் கூடாது.

கீழ்ப்படியுங்கள்". அவர்கள் புறக்கணித்தால் - (அறிந்து கொள்ளுங்கள்) அல்லாஹ் நிராகரிப்பாளர்களை நேசிப்பதில்லை.

*33.* நிச்சயமாக அல்லாஹ் ஆதமையும், நோவாவையும், ஆப்ரஹாமின் சந்ததியரையும், இம்ரானின் சந்ததியரையும் அகிலத்தார் அனைவரையும்விட மேலாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டான் *34.* இவர்கள் ஒருவர் மற்றவரின் வழித்தோன்றல்களேயாவர். அல்லாஹ் செவியேற்பவனாகவும், அறிந்தவனாகவும் இருக்கிறான். *35.* இம்ரானின் மனைவி, "என் இறைவா! என் வயிற்றில் உள்ளதை உனக்காக அர்ப்பணிக்க நான் நேர்ச்சை செய்துகொண்டேன். எனவே நீ என்னிடமிருந்து ஏற்றுக்கொள்வாயாக! நிச்சயமாக நீ செவியேற்பவனாகவும், அறிபவனாகவும் இருக்கின்றாய்" என்று கூறியதை எண்ணிப் பாருங்கள். *36.* அவள் பெற்றெடுத்தபோது "என் இறைவா! நான் பெண் குழந்தையைப் பெற்றெடுத்து விட்டேனே" என்று கூறினாள். அவள் எதைப் பெற்றெடுத்தாள் என்பதை அல்லாஹ் நன்கறிவான். ஆண் குழந்தை பெண் குழந்தையைப் போலல்ல. "நான் அதற்கு மரியாள் எனப் பெயரிட்டுள்ளேன். நான் அக்குழந்தைக்கும், அதனுடைய வழித்தோன்றல்களுக்கும் விரட்டப்பட்ட சாத்தானை விட்டு உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்". *37.* எனவே அவளது இறைவன் அவளை நல்ல முறையில் ஏற்றுக்கொண்டான். அவளை சிறந்த முறையில் வளரச்செய்தான். அவளுக்கு ஜகரிய்யாவை பொறுப்பாளராக்கினான். மரியாளின் அறைக்கு ஜகரிய்யா செல்லும் போதெல்லாம் அங்கே ஏதேனும் உணவை அவளிடம் காண்பார். "மரியாளே, இது உனக்கு எங்கிருந்து கிடைக்கிறது?" என்று அவர் கேட்பார். அதற்கு மரியாள், "இது அல்லாஹ்விடமிருந்து வந்ததாகும். தான் நாடியோருக்கு அல்லாஹ் கணக்கின்றி வழங்குகிறான்" என்று கூறுவாள். *38.* அப்போது ஜகரிய்யா தம் இறைவனிடம், "என் இறைவா! எனக்கு உன்னிடமிருந்து ஒரு

தூய சந்ததியை அளிப்பாயாக. நிச்சயமாக நீ பிரார்த்தனையைச் செவியேற்பவனாக இருக்கின்றாய்" என்று பிரார்த்தித்தார். 39. அவர் தம் அறையில் நின்று தொழுது கொண்டிருந்தபோது வானவர்கள் அவரை அழைத்து, "அல்லாஹ் உமக்கு 'யஹ்யாவைக்' (ஜான்) கொண்டு நற்செய்தி கூறுகிறான். அவர் அல்லாஹ்வின் வார்த்தையை உண்மைப்படுத்தக்கூடியவராகவும், தலைவராகவும் விளங்குவார். மனக்கட்டுப்பாடு கொண்டவராகவும், நல்லோர்களில் உள்ள தூதராகவும் இருப்பார்" என்று கூறினார்கள். 40. "என் இறைவா! எனக்கு எவ்வாறு மகன் பிறப்பான்? நானோ முதியவனாகி விட்டேன். எனது மனைவியோ மலடியாக இருக்கிறாள்" என்று அவர் வினவினார். அதற்கு அவன், "இவ்வாறே தான் நாடியதை அல்லாஹ் செய்து விடுகிறான்" என்று கூறினான். 41. அதற்கு அவர், "என் இறைவா! எனக்கு ஏதேனும் ஒரு அடையாளத்தை ஏற்படுத்து" என்று வேண்டினார். அதற்கு அவன், "நீர் மூன்று நாட்கள்வரை சைகை மூலமாகவே அன்றி மக்களுடன் பேச மாட்டீர் என்பதே அதன் அடையாளமாகும். உம் இறைவனை அதிகமதிகம் நினைவுகூருவீராக. காலையிலும், மாலையிலும் அவனது புகழைப் பாடுவீராக" என்று கூறினான். 42. வானவர்கள், "மரியாளே! அல்லாஹ் உம்மைத் தேர்ந்தெடுத்துத் தூய்மையாக்கியுள்ளான். உலகிலுள்ள பெண்கள் அனைவரையும்விட உம்மைச் சிறப்பித்துள்ளான். 43. மரியாளே! உமது இறைவனுக்குக் கீழ்ப்படிந்து சிரம் பணிவீராக. குனிந்து தொழுவோருடன் சேர்ந்து நீரும் குனிந்து தொழுவீராக" என்று கூறினார்கள். 44. இவை மறைவான செய்திகள். இவற்றை நாமே உமக்கு அறிவிக்கின்றோம். மரியாளுக்குப் பொறுப்பேற்பவர் யார் என்பதை முடிவு செய்ய அவர்கள் தங்களது எழுதுகோல்களை எறிந்து கொண்டிருந்தபோது நீர் அவர்களுடன் இருக்கவில்லை. அவர்கள் தங்களுக்கிடையே பிணங்கிக் கொண்டிருந்தபோதும் நீர் அவர்களுடன் இருக்கவில்லை.

*45.* வானவர்கள், “மரியாளே! அல்லாஹ் தன்னிடமிருந்து ஒரு வார்த்தையைக் கொண்டு உமக்கு நற்செய்தி கூறுகிறான். அவரது பெயர் மஸீஹ், மரியாளின் மகன் இயேசு என்பதாகும். அவர் இம்மையிலும், மறுமையிலும் உயர்ந்த அந்தஸ்துடையவராகவும் அல்லாஹ்வுக்கு நெருக்கமான அடியாராகவும் இருப்பார். *46.* அவர் தொட்டில் பருவத்தில் இருக்கும்போதும், பக்குவமான வயதை அடைந்த பின்பும் மக்களிடம் பேசுவார். நல்லோர்களில் ஒருவராகவும் இருப்பார்” என்று கூறினார்கள். *47.* அதற்கு அவர், “என் இறைவா! என்னை எந்த ஆணும் தீண்டாதிருக்க எனக்கு எவ்வாறு குழந்தை பிறக்கும்?” என்று வினவினார். அவன், “அப்படித்தான். அல்லாஹ், தான் நாடியதைப் படைக்கிறான். அவன் ஒரு விஷயத்தைத் தீர்மானித்து விட்டால் ‘ஆகு’ என்றுதான் அதற்குக் கூறுவான். அது ஆகிவிடும்” என்று கூறினான். *48.* அல்லாஹ் அவருக்கு வேதத்தையும். ஞானத்தையும், தவ்ராத்தையும் இன்ஜீலையும் கற்றுக் கொடுப்பான். *49.* இஸ்ராயீலின் மக்களுக்கு அவர் தூதராகவும் இருப்பார். “நான் உங்களிடம் உங்கள் இறைவனின் சான்றினைக் கொண்டு வந்துள்ளேன். நான் உங்களுக்காகக் களிமண்ணிலிருந்து பறவையின் வடிவத்தைப்போல செய்து அதில் ஊதுவேன். அது இறைக்கட்டளையினால் உண்மையான பறவையாகி விடும். நான் இறைக்கட்டளையினால் பிறவிக் குருடனையும், தொழுநோயாளியையும் குணப்படுத்துவேன். மரணித்தவர்களையும் இறைக் கட்டளையினால் உயிர்ப்பிப்பேன். நீங்கள் உண்பவற்றையும் உங்கள் வீடுகளில் சேமித்து வைப்பவற்றையும் நான் உங்களுக்கு அறிவிப்பேன். நீங்கள் நம்பிக்கையாளர்களாக இருந்தால் நிச்சயமாக இவற்றில் உங்களுக்கு அத்தாட்சி இருக்கின்றது. *50.* நான் எனக்கு முன்னுள்ள தவ்ராத்தை உண்மைப்படுத்தக்கூடியவனாகவும் உங்கள் மீது தடைசெய்யப்பட்டுள்ள சில பொருட்களை உங்களுக்கு அனுமதிக்கப்பட்டதாக ஆக்குவதற்காகவும் வந்துள்ளேன்.

உங்கள் இறைவனிடமிருந்து உங்களுக்குச் சான்றினைக் கொண்டு வந்துள்ளேன். எனவே நீங்கள் அல்லாஹ்வை அஞ்சுங்கள். எனக்குக் கீழ்ப்படியுங்கள். 51. நிச்சயமாக அல்லாஹ்தான் என் இறைவனும், உங்கள் இறைவனுமாவான். எனவே அவனையே வணங்குங்கள். இதுவே நேரான வழியாகும்" என்று அவர் கூறினார்.

52. அவர்களது நிராகரிப்பை இயேசு கண்டபோது, "இறைவழியில் எனக்கு உதவி செய்வோர் யார்?" என்று வினவினார். அவரது சீடர்கள், "நாங்கள் அல்லாஹ்வின் உதவியாளர்களாக இருக்கின்றோம். நாங்கள் அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொண்டுள்ளோம். நாங்கள் கீழ்ப்படிந்தவர்களாக இருக்கின்றோம் என்பதற்கு நீங்களே சாட்சியாக இருங்கள். 53. எங்கள் இறைவா! நீ அருளியதன் மீது நம்பிக்கைகொண்டு தூதரையும் பின்பற்றினோம். எனவே சாட்சியளிப்போருடன் எங்களையும் நீ சேர்த்து எழுதுவாயாக" என்று கூறினார்கள். 54. அவர்கள் மறைமுகமாகத் திட்டம் தீட்டினார்கள். அல்லாஹ்வும் மறைமுகமாகத் திட்டம் தீட்டினான். திட்டங்கள் தீட்டுவதில் அல்லாஹ்வே மிகச் சிறந்தவன். 55. "இயேசுவே! நான் உம்மைக் கைப்பற்றுபவனாகவும் என் பக்கம் உயர்த்திக் கொள்பவனாகவும், நிராகரிப்பாளர்களை விட்டும் உம்மைத் தூய்மைப்படுத்தக்கூடியவனாகவும் இருக்கின்றேன். உம்மைப் பின்பற்றுவோரை நிராகரிப்பாளர்களைவிட மறுமைநாள்வரை மேலோங்கச் செய்வேன். இறுதியில் நீங்கள் அனைவரும் என் பக்கமே திரும்ப வேண்டியுள்ளது. அப்போது நீங்கள் முரண்பட்டுக் கொண்டிருந்தவற்றில் நான் உங்களிடையே தீர்ப்பளிப்பேன். 56. நிராகரித்தோருக்கு இம்மையிலும், மறுமையிலும் கடுந்தண்டனை அளிப்பேன். அவர்களுக்கு உதவி செய்வோர் யாரும் இருக்க மாட்டார்கள்" என்று அல்லாஹ் கூறினான். 57. நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிந்தோருக்கு அல்லாஹ் அவர்களது கூலியை

*முழுமையாக வழங்கிடுவான். அல்லாஹ் அநியாயக்காரர்களை நேசிக்க மாட்டான். **58.** இவை நாம் எடுத்துரைக்கும் வசனங்களும், ஞானம் நிறைந்த அறிவுரைகளுமாகும்.*

*__59.__ நிச்சயமாக அல்லாஹ்வின் பார்வையில் இயேசுவின் உதாரணம் ஆதமைப் போன்றதாகும். அல்லாஹ் அவரை மண்ணால் படைத்தான். பின்னர் 'ஆகுக' என்று கூறினான். அவர் ஆகிவிட்டார். **60.** இது உம் இறைவனிடமிருந்து வந்துள்ள சத்தியமாகும். எனவே நீர் சந்தேகம் கொள்வோரில் ஒருவராகி விடாதீர். **61.** இது குறித்து தெளிவான அறிவு உம்மிடம் வந்த பின்னரும் யாரேனும் இவ்விஷயத்தில் உம்மிடம் தர்க்கம் செய்தால் அவரிடம் நீர் கூறிவிடும்: "வாருங்கள், எங்கள் மக்களையும், உங்கள் மக்களையும், எங்கள் பெண்களையும் உங்கள் பெண்களையும், அழைத்து இன்னும் எங்களையும் உங்களையும் சேர்த்து "பொய்யர்கள் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும்" என்று நாம் ஒன்றுசேர்ந்து பிரார்த்தனை செய்வோம்". **62.** நிச்சயமாக இதுதான் உண்மையான வரலாறாகும். அல்லாஹ்வைத்தவிர வேறு இறைவன் இல்லை. அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான். **63.** அவர்கள் புறக்கணித்தால்- அல்லாஹ் குழப்பவாதிகளை நன்கறிந்தவன்.*

*__64.__ நீர் கூறும்: "வேதக்காரர்களே! எங்களுக்கும் உங்களுக்கும் இடையிலுள்ள ஒரு பொதுவான விஷயமான 'அல்லாஹ்வைத்தவிர வேறு யாரையும் நாம் வணங்க மாட்டோம். அவனோடு எதனையும் இணையாக்க மாட்டோம். நம்மில் எவரும் அல்லாஹ்வைத்தவிர வேறு யாரையும் இறைவனாக்கக் கூடாது' என்பதன் பக்கம் வாருங்கள். அவர்கள் புறக்கணித்தால் 'நாங்கள் கீழ்ப்படிந்தவர்களாக இருக்கின்றோம் என்பதற்கு நீங்களே சாட்சியாக இருங்கள்' என்று கூறிவிடுங்கள்". **65.** வேதக்காரர்களே! நீங்கள் ஆப்ரஹாமைக்*

*குறித்து ஏன் தர்க்கம் புரிகிறீர்கள்? அவருக்குப் பின்னர்தான் தவ்ராத்தும், இன்ஜீலும் அருளப்பட்டன. நீங்கள் புரிந்துகொள்ள மாட்டீர்களா? **66.** நீங்கள் அறிந்த விஷயத்தில் தர்க்கம் புரிந்து கொண்டிருந்தீர்கள். இப்போது நீங்கள் அறியாத விஷயத்தைப்பற்றி ஏன் தர்க்கம் புரிகிறீர்கள்? அல்லாஹ்வே அறிவான். நீங்கள் அறியமாட்டீர்கள். **67.** ஆப்ரஹாம் யூதராகவோ, கிறிஸ்தவராகவோ இருந்ததில்லை. மாறாக அவர் இறைவனுக்கு முழுமையாகக் கீழ்ப்படிந்தவராக இருந்தார். இணைவைப்பாளர்களில் ஒருவராக அவர் இருந்ததில்லை. **68.** மக்களில் ஆப்ரஹாமுக்கு மிகவும் நெருங்கியவர்கள் அவரைப் பின்பற்றுபவர்களும், இந்தத் தூதரும், இவர் மீது நம்பிக்கை கொண்டவர்களுமே ஆவார்கள். அல்லாஹ் நம்பிக்கையாளர்களின் தோழனாக இருக்கின்றான். **69.** வேதக்காரரர்களில் ஒரு பிரிவினர் எப்படியாவது உங்களை வழிகெடுத்துவிட வேண்டும் என்று விரும்புகிறார்கள். ஆனால் அவர்கள் தம்மைத்தாமே வழிகேட்டில் ஆழ்த்திக் கொள்கிறார்கள். ஆயினும் அவர்கள் உணர்ந்து கொள்வதில்லை. **70.** வேதக்காரரர்களே! நீங்கள் சாட்சியாளர்களாக இருந்துகொண்டே அல்லாஹ்வின் சான்றுகளை ஏன் நிராகரிக்கிறீர்கள்? **71.** வேதக்காரரர்களே! நீங்கள் ஏன் உண்மையைப் பொய்யுடன் கலக்கிறீர்கள்? அறிந்துகொண்டே ஏன் உண்மையை மறைக்கிறீர்கள்?*

***72.** வேதக்காரரர்களில் ஒரு பிரிவினர், “நம்பிக்கையாளர்களுக்கு அருளப்பட்டதன் மீது காலையில் நம்பிக்கைகொண்டு மாலையில் நிராகரித்துவிடுங்கள். இதனால் அவர்கள் (குழப்பத்தில்) தம் நம்பிக்கையை விட்டு திரும்பிவிடக்கூடும், **73.** உங்கள் சமயத்தைப் பின்பற்றுவோரைத்தவிர வேறு யாரையும் நம்பாதீர்கள்” என்று (தங்களுக்குள்) கூறிக்கொள்கிறார்கள். நீர் கூறும்: “அல்லாஹ் காட்டியதே நேரான வழியாகும்”.*

அவர்கள் இவ்வாறு கூறுவதற்கெல்லாம் காரணம் என்னவெனில் "உங்களுக்குக் கொடுக்கப்பட்டதைப்போல மற்றவர்களுக்கும் ஏன் கொடுக்கப்பட்டது? அல்லது உங்கள் இறைவனிடம் அவர்கள் உங்களைவிட மேலோங்கி விட்டார்களா?" என்று அவர்கள் (தங்களுக்குள்) கூறுவதனாலேயாகும். நீர் கூறும்: "சிறப்புகள் அனைத்தும் அல்லாஹ்விடமே உள்ளது. தான் நாடியோருக்கு அதனை அவன் வழங்குகிறான். அல்லாஹ் தாராளமானவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். **74.** அவன் தான் நாடுவோரை தன் கருணைக்கு உரியவர்களாக்குகின்றான். அல்லாஹ் மாபெரும் அருளாளன் ஆவான்". **75.** வேதக்காரர்களில் சிலர் இருக்கிறார்கள். அவர்களிடம் நீங்கள் ஒரு செல்வக் குவியலையே நம்பி ஒப்படைத்தாலும் அதனை அவர்கள் திருப்பிக் கொடுத்து விடுவார்கள். அவர்களில் சிலர் இருக்கிறார்கள். அவர்களிடம் நீங்கள் அற்பத் தொகையை நம்பி ஒப்படைத்தால்கூட - அதற்காக நீங்கள் விடாப்பிடியாக நின்றாலொழிய - அதனை அவர்கள் திருப்பித் தரமாட்டார்கள். இதற்குக்காரணம் "வேதக்காரர்கள் அல்லாதோர் விஷயத்தில் நாங்கள் குற்றம் சாட்டப்பட மாட்டோம்" என்று அவர்கள் கூறி வந்ததேயாகும். அவர்கள் அறிந்துகொண்டே அல்லாஹ்வின் மீது பொய்யுரைக்கிறார்கள். **76.** மாறாக எவர் தம் வாக்குறுதியை நிறைவேற்றி இறைவனை அஞ்சி நடக்கின்றாரோ - நிச்சயமாக அல்லாஹ் அத்தகைய இறையச்சமுடையோரை நேசிக்கிறான்.

**77.** அல்லாஹ்விடம் செய்த உடன்படிக்கையையும், தங்கள் சத்தியங்களையும் அற்ப ஆதாயத்திற்கு விற்றுவிடுபவர்களுக்கு மறுமையின் நன்மையில் எவ்விதப் பங்கும் இல்லை. மறுமைநாளில் அல்லாஹ் அவர்களுடன் பேசவும் மாட்டான், அவர்களைப் பார்க்கவும் மாட்டான், அவர்களைத் தூய்மைப்படுத்தவும்

மாட்டான். அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு. 78. அவர்களில் இப்படியும் சிலர் இருக்கிறார்கள். அவர்கள் கூறுவது வேதத்தில் உள்ளதென நீங்கள் எண்ண வேண்டும் என்பதற்காக திரித்துக் கூறுகிறார்கள். உண்மையில் அவர்கள் கூறுவது வேதத்திலுள்ளவையல்ல. இவை அல்லாஹ்விடமிருந்து வந்தவை என்று கூறுகிறார்கள். உண்மையில் அவை அல்லாஹ்விடமிருந்து வந்தவையல்ல. அவர்கள் அறிந்துகொண்டே அல்லாஹ்வின் மீது பொய்யுரைக்கிறார்கள். 79. ஒரு மனிதருக்கு அல்லாஹ் வேதத்தையும், ஞானத்தையும், தூதுத்துவத்தையும் வழங்கியிருக்க, அவர் மக்களிடம், “நீங்கள் அல்லாஹ்வை விடுத்து எனக்கு அடிமைகளாகி விடுங்கள்” என்று கூறுவது அனுமதிக்கப்பட்டதல்ல. மாறாக “நீங்கள் வேதத்தை மற்றவர்களுக்குக் கற்றுக்கொடுப்பதனாலும், நீங்கள் அதனைக் கற்பதனாலும் இறைவனைச் சார்ந்தவர்களாகி விடுங்கள்”, என்றே அவர் கூறுவார். 80. நீங்கள் வானவர்களையும், தூதர்களையும் இறைவனாக்கிக் கொள்ளுங்கள் என்றும் அவர் உங்களை ஏவ மாட்டார். நீங்கள் இறைவன் ஒருவனுக்கு முற்றிலும் அடிபணிந்த பிறகு அவர் அவனை நிராகரிக்கும்படி உங்களை ஏவுவாரா என்ன?

81. அல்லாஹ் தூதர்களிடம் இவ்வாறு உறுதிமொழி வாங்கியதை நினைவுகூருங்கள்: “நான் உங்களுக்கு வேதத்தையும், ஞானத்தையும் வழங்கிய பிறகு உங்களிடமுள்ள முன்னறிவிப்புகளை உண்மைப்படுத்தக்கூடிய தூதர் வந்தால் அவர்மீது நீங்கள் நம்பிக்கைகொண்டு அவருக்கு உதவிபுரிய வேண்டும். இதை நீங்கள் ஒப்புக் கொண்டீர்களா? இதன்மீது என் வாக்குறுதியை ஏற்றுக்கொண்டீர்களா?” என்று இறைவன் கேட்டான். “நாங்கள் ஒப்புக்கொண்டோம்” என்று அவர்கள் கூறினார்கள். “நீங்கள் சாட்சியாக இருங்கள். நானும் உங்களுடன் சாட்சியாக

இருக்கின்றேன்" என்று அவன் கூறினான். 82. எனவே இதன் பின்னரும் அதனை விட்டுப் பின்வாங்கி விடுபவர்களே அடிபணியாதவர்கள். 83. இவர்கள் இறைமார்க்கத்தைத் தவிர வேறொன்றையா விரும்புகிறார்கள்? உண்மையில் வானங்களிலும், பூமியிலும் உள்ளவை யாவும் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் அவனது கட்டளைப்படியே செயல்படுகின்றன. அனைத்தும் அவன் பக்கமே திரும்பக்கொண்டு வரப்படும். 84. நீர் கூறும்: "நாங்கள் அல்லாஹ்வின் மீதும் எங்களுக்கு அருளப்பட்டதன் மீதும், ஆப்ரஹாம், இஸ்மவேல், ஈசாக், ஜேக்கப் மற்றும் ஜேக்கபின் வழித்தோன்றல்கள் ஆகியோருக்கு அருளப்பட்டதன் மீதும், மோசே, இயேசு மற்றும் ஏனைய தூதர்களுக்கு இறைவனிடமிருந்து அருளப்பட்டதன் மீதும் நம்பிக்கை கொண்டோம். இவர்களுக்கிடையே நாங்கள் எவ்வித வேற்றுமையும் பாராட்ட மாட்டோம். நாங்கள் இறைவனுக்கே கீழ்ப்படிந்து நடப்பவர்களாக இருக்கின்றோம்". 85. எவர் இஸ்லாத்தைத்தவிர வேறொரு மார்க்கத்தை விரும்புகிறாரோ அவரிடமிருந்து ஒருபோதும் அது ஏற்றுக் கொள்ளப்படாது. மறுமையில் அவர் நஷ்டமடைந்தவர்களுடன் இருப்பார். 86. நம்பிக்கைகொண்ட பிறகு நிராகரித்துவிட்ட மக்களுக்கு அல்லாஹ் எப்படி நேர்வழிகாட்டுவான்? அவர்களோ "இவர் உண்மையான தூதர்தான். இவரிடம் தெளிவான சான்றுகள் வந்துள்ளன" என்று சாட்சியம் அளித்திருந்தார்கள். அல்லாஹ் இத்தகைய அநியாயக்காரர்களுக்கு நேர்வழிகாட்டுவதில்லை. 87. இத்தகையவர்களுக்கு அல்லாஹ்வும், வானவர்களும், மக்கள் அனைவரும் இடுகின்ற சாபம்தான் தக்க தண்டனையாகும். 88. அதிலேயே அவர்கள் என்றென்றும் வீழ்ந்து கிடப்பார்கள். அவர்களின் வேதனை குறைக்கப்படாது. அவர்களுக்கு அவகாசமும் அளிக்கப்படாது. 89. ஆனால் இதன் பின்னர் பாவமன்னிப்புக்கோரி தங்களைச் சீர்திருத்திக் கொண்டவர்கள் - (அறிந்துகொள்ளட்டும்) அல்லாஹ் பெரும்

மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். 90. நிச்சயமாக நம்பிக்கைகொண்டபின் நிராகரித்து அந்நிராகரிப்பிலேயே ஆழ்ந்து விடுபவர்களின் பாவமன்னிப்புக் கோரிக்கை ஒருபோதும் ஏற்றுக்கொள்ளப்படாது. அவர்கள்தான் வழிகேடர்கள். 91. நிச்சயமாக நிராகரித்து அந்நிலையிலேயே மரணித்தும் விட்டவர்கள் பூமி நிறைய தங்கத்தை ஈடாகக் கொடுத்தாலும் அது ஏற்றுக்கொள்ளப்படாது. அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு. அவர்களுக்கு உதவி புரிபவர் எவரும் இருக்கமாட்டார்.

92. உங்களுக்குப் பிடித்தமானவற்றிருந்து செலவு செய்யும்வரை நீங்கள் நன்மையின் உயர்நிலையை அடைய முடியாது. நீங்கள் எப்பொருளைச் செலவு செய்தாலும் இறைவன் அதனை நன்கறிந்தவனாகவே இருக்கின்றான். 93. தவ்ராத் அருளப்படுவதற்கு முன்னால் இஸ்ராயீல் தமக்குத்தாமே தடை செய்துகொண்டதைத் தவிர, உணவுப் பொருட்கள் அனைத்தும் இஸ்ராயீலின் மக்களுக்கு அனுமதிக்கப்பட்டிருந்தன. நீர் கூறும்: “நீங்கள் உண்மையாளர்களாயின் தவ்ராத்தைக் கொண்டு வந்து வாசித்துக் காட்டுங்கள்”. 94. இதன் பின்னரும் இறைவனின் மீது பொய்யை புனைபவர்கள்தான் அநியாயக்காரரர்கள். 95. நீர் கூறும்: “அல்லாஹ் உண்மையே கூறினான். எனவே முழுமையான நம்பிக்கை கொண்ட ஆப்ரஹாமின் மார்க்கத்தைப் பின்பற்றுங்கள். அவர் இணைவைப்பவராக இருக்கவில்லை.'' 96. நிச்சயமாக மக்களுக்காக அமைக்கப்பட்ட முதல் ஆலயம் மக்காவில்தான் உள்ளது. அது அருள்வளம் கொண்டதாகவும், அகிலமனைத்திற்கும் வழிகாட்டும் மையமாகவும் உள்ளது. 97. அங்கு தெளிவான அத்தாட்சிகளும், ஆப்ரஹாம் நின்ற இடமும் உள்ளன. அங்கு நுழைந்து விட்டவர் பாதுகாப்பு பெற்றவராகிறார். மக்களில் இறையில்லத்திற்கு (கஅபா)

சென்றுவர சக்தி பெற்றவர் அல்லாஹ்வுக்காக அந்த இல்லத்திற்கு ஹஜ்பயணம் செய்வது கடமையாகும். எவரேனும் இதனை நிராகரித்தால் (அவர் அறிந்துகொள்ளட்டும்) அல்லாஹ் அகிலத்தார் அனைவரைவிட்டும் தேவையற்றவனாக இருக்கின்றான். **98.** நீர் கூறும்: “வேதக்காரர்களே, நீங்கள் அல்லாஹ்வின் அத்தாட்சிகளை ஏன் நிராகரிக்கிறீர்கள்? நீங்கள் செய்வதையெல்லாம் அல்லாஹ் பார்த்துக் கொண்டிருக்கிறான்”. **99.** நீர் கூறும்: “வேதக்காரர்களே, நம்பிக்கையாளர்களை ஏன் இறைவழியை விட்டுத் தடுக்கிறீர்கள்? நீங்கள் சாட்சியாளர்களாக இருந்துகொண்டே அதில் ஏன் குறை ஏற்படுத்த முனைகிறீர்கள்? அல்லாஹ் உங்கள் செயல்களை கவனிக்காமல் இல்லை”.

**100.** நம்பிக்கையாளர்களே! வேதம் வழங்கப்பட்டோரில் ஒரு பிரிவினரின் கருத்துக்களை நீங்கள் ஏற்றுக் கொண்டீர்களானால் உங்களின் நம்பிக்கைக்குப் பின்னரும் உங்களை அவர்கள் நிராகரிப்பாளர்களாக்கி விடுவார்கள். **101.** நீங்கள் எவ்வாறு அல்லாஹ்வை நிராகரிக்கிறீர்கள்? தூதர் உங்களுக்கு மத்தியில் இருக்க, இறைவசனங்களோ உங்களுக்கு எடுத்துரைக்கப்படுகின்றன. எவர் அல்லாஹ்வை உறுதியாகப் பற்றிக்கொள்கிறாரோ அவர் நேரான வழியை அடைந்துவிட்டார். **102.** நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வை அஞ்சவேண்டிய முறைப்படி அஞ்சிக்கொள்ளுங்கள். நீங்கள் கீழ்ப்படிந்தவர்களாகவே அன்றி மரணித்து விடாதீர்கள் **103.** நீங்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து அல்லாஹ்வின் கயிற்றைப் பற்றிக்கொள்ளுங்கள். பிரிந்து விடாதீர்கள். அல்லாஹ் உங்கள் மீது பொழிந்த அருட்கொடையை நினைவுகூருங்கள். நீங்கள் ஒருவருக்கொருவர் பகைவர்களாக இருந்தீர்கள். அவனே உங்கள் உள்ளங்களுக்கிடையில் இணக்கத்தை ஏற்படுத்தினான். எனவே அவனது அருளால் நீங்கள் சகோதரர்களாகி விட்டீர்கள்.

நீங்கள் நரகப்படுகுழியின் விளிம்பில் நின்று கொண்டிருந்தீர்கள். அவனே உங்களை அதிலிருந்து காப்பாற்றினான். இவ்வாறு நீங்கள் நேர்வழிபெறும் பொருட்டு தன் சான்றுகளை அல்லாஹ் உங்களுக்குத் தெளிவுபடுத்துகிறான்.

*104.* மக்களை நன்மையின் பக்கம் அழைக்கக்கூடிய ஒரு கூட்டம் உங்களிடையே கண்டிப்பாக இருக்க வேண்டும். அவர்கள் நன்மை புரியும்படித் தூண்ட வேண்டும், தீமையை விட்டும் தடுக்க வேண்டும். இத்தகைய கூட்டத்தினர்தான் வெற்றியாளர்கள். *105.* தங்களிடம் தெளிவான கட்டளைகள் வந்தபின்னரும் முரண்பட்டு பல பிரிவினர்களாகப் பிரிந்து விட்டவர்களைப் போன்று நீங்களும் ஆகிவிடாதீர்கள். அவர்களுக்குக் கடும் வேதனை உண்டு. *106.* அந்நாளில் சில முகங்கள் பிரகாசமாக இருக்கும். சில முகங்கள் கருத்திருக்கும். எவருடைய முகங்கள் கருத்திருக்குமோ அவர்களிடம், "நீங்கள் நம்பிக்கைகொண்ட பின்னர் நிராகரிப்பாளராகி விட்டீர்கள் அல்லவா? எனவே உங்கள் நிராகரிப்பினால் வேதனையை அனுபவியுங்கள்" என்று கூறப்படும். *107.* எவருடைய முகங்கள் பிரகாசமாக இருக்குமோ அவர்கள் இறைக்கருணையில் இருப்பார்கள். அதில் அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். *108.* இவை இறைவசனங்களாகும். இவற்றை நாம் உமக்கு சத்தியத்தைக்கொண்டு எடுத்துரைக்கிறோம். அல்லாஹ் அகிலத்தாருக்கு அநீதியை நாடுவதில்லை. *109.* வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்வுக்கே உரியன. அனைத்து விவகாரங்களும் அல்லாஹ்வின் பக்கமே திரும்பக் கொண்டுவரப்படும்.

*110.* மனிதர்களுக்காக உருவாக்கப்பட்டிருக்கும் சிறந்த சமூகமாக நீங்கள் இருக்கிறீர்கள். நீங்கள் நன்மையை ஏவுகிறீர்கள். தீமையை விட்டும் தடுக்கிறீர்கள். அல்லாஹ்வின்மீது நம்பிக்கை

*கொண்டுள்ளீர்கள். வேதம் வழங்கப்பட்டோரும் நம்பிக்கை கொண்டிருந்தால் அது அவர்களுக்குச் சிறந்ததாக அமைந்திருக்கும். அவர்களில் சிலர் நம்பிக்கை கொள்பவர்களாக இருக்கிறார்கள். அவர்களில் பெரும்பாலோர் கீழ்ப்படியாதவர்களாகவே இருக்கிறார்கள். **111.** அவர்களால் உங்களுக்கு சிறுசிறு தொல்லைகளைத் தவிர வேறு எந்த தீங்கும் இழைத்துவிட முடியாது. அவர்கள் உங்களுடன் போரிட்டால் புறங்காட்டி ஓடிவிடுவார்கள். அவர்களுக்கு எந்த உதவியும் கிடைக்காது. **112.** அவர்கள் எங்கு இருந்தாலும் அவர்களை இழிவு வந்தடைந்தே தீரும், அல்லாஹ்விடமிருந்து அல்லது மக்களிடமிருந்து ஏதேனும் பாதுகாப்பை பெற்றாலே தவிர. அவர்கள் இறைக்கோபத்திற்கு ஆளாகிவிட்டதோடு வீழ்ச்சியும் அவர்கள் மீது விதிக்கப்பட்டு விட்டது. இவற்றிற்கெல்லாம் காரணம் அவர்கள் அல்லாஹ்வின் அத்தாட்சிகளை மறுத்துக்கொண்டும் தூதர்களை அநியாயமாகக் கொலை செய்து கொண்டிருந்ததுமேயாகும். இவை அவர்கள் அடிபணியாமல் வரம்புமீறியதனால் ஏற்பட்ட விளைவேயாகும்.*

***113.** வேதக்காரரர்கள் அனைவரும் ஒரே மாதிரியானவர்கள் அல்லர். அவர்களில் ஒரு பிரிவினர் வாக்குறுதியில் நிலையாக இருக்கிறார்கள். அவர்கள் இரவு நேரங்களில் இறைவசனங்களை ஓதி, சிரம்பணிபவர்களாக இருக்கிறார்கள். **114.** அவர்கள் அல்லாஹ்வின்மீதும், மறுமைநாளின்மீதும் நம்பிக்கை கொள்கிறார்கள், நன்மை செய்யும்படித் தூண்டி தீமையை விட்டும் தடுக்கிறார்கள், நற்செயல்களின் பக்கம் விரைகிறார்கள். இவர்கள்தான் நேர்மையானவர்கள். **115.** அவர்கள் செய்த நற்செயல்களுக்கான வெகுமதி புறக்கணிக்கப்படாது. அல்லாஹ் இறையச்சமுடையோரை நன்கறிந்தவனாக இருக்கின்றான். **116.** நிச்சயமாக நிராகரிப்பாளர்களுக்கு அவர்களது செல்வங்களோ,*

பிள்ளைகளோ அல்லாஹ்விடத்தில் அவர்களுக்காக எவ்வித பயனையும் அளிக்காது. அவர்கள்தான் நரகவாசிகள். அதில் அவர்கள் என்றென்றும் வீழ்ந்து கிடப்பார்கள். *117.* அவர்கள் இவ்வுலக வாழ்க்கையில் செலவுசெய்ததற்கான உதாரணம் கடுங்குளிர்காற்றைப் போன்றதாகும். அது தமக்குத்தாமே தீங்கிழைத்துக்கொண்ட கூட்டத்தாரின் வயல்களில் வீசி நாசமாக்கிவிட்டது. அல்லாஹ் அவர்கள் மீது அநீதி இழைக்கவில்லை. மாறாக அவர்கள் தமக்குத்தாமே அநீதி இழைத்துக் கொண்டார்கள்.

*118.* நம்பிக்கையாளர்களே! உங்களைச் சார்ந்தவர்களைத்தவிர மற்றவர்களை அந்தரங்க நண்பர்களாக ஆக்கிக்கொள்ளாதீர்கள். அவர்கள் உங்களுக்கு இழப்பை ஏற்படுத்துவதில் எவ்விதக் குறையும் வைக்க மாட்டார்கள். உங்கள் துக்கத்தில் அவர்கள் மகிழ்ச்சியடைவார்கள். அவர்களது பகைமை அவர்களின் வாய்களிலிருந்தே வெளிப்பட்டுவிட்டது. அவர்களின் உள்ளங்களினுள் இருப்பது அதைவிடக் கொடியது. நாம் உங்களுக்கு சான்றுகளைத் தெளிவுபடுத்தி விட்டோம், நீங்கள் அறிவுடையவர்களாயின் (அறிந்து கொள்ளலாம்). *119.* நீங்கள் அவர்களை நேசிக்கிறீர்கள். ஆனால் அவர்களோ உங்களை நேசிப்பதில்லை. நீங்களோ எல்லா வேதங்களையும் ஏற்றுக் கொள்கிறீர்கள். அவர்கள் உங்களைச் சந்தித்தால் “நாங்கள் நம்பிக்கை கொண்டோம்” என்று கூறுகிறார்கள். ஆனால் தனித்திருக்கும்போது உங்கள் மீதுள்ள கோபத்தால் விரல்களைக் கடித்துக் கொள்கிறார்கள். நீர் கூறும்: “உங்கள் கோபத்திலேயே செத்து மடியுங்கள்”. நிச்சயமாக அல்லாஹ் உள்ளங்களில் உள்ளவற்றை நன்கறிந்தவன். *120.* உங்களுக்கு ஏதேனும் நன்மை ஏற்பட்டால் அது அவர்களுக்கு வருத்தத்தை ஏற்படுத்துகிறது. உங்களுக்கு ஏதேனும் தீங்கு நேர்ந்தால் அதனால் அவர்கள் மகிழ்ச்சியடைகிறார்கள். நீங்கள் பொறுமையை

மேற்கொண்டு இறையச்சத்துடன் நடந்தால் அவர்களின் சூழ்ச்சி உங்களுக்கு எவ்விதப் பாதிப்பையும் ஏற்படுத்தாது. அவர்கள் செய்து கொண்டிருக்கும் அனைத்தும் அல்லாஹ்வின் கட்டுப்பாட்டில்தான் உள்ளது.

**121.** நீர் அதிகாலையில் உமது வீட்டிலிருந்து புறப்பட்டு நம்பிக்கையாளர்களைப் போர்க்களத்தில் அவர்களுக்குரிய இடங்களில் நிறுத்திய (சந்தர்ப்பத்தை நினைவுகூர்வீராக). அல்லாஹ் செவியேற்பவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். **122.** உங்களில் இரு பிரிவினர் தைரியத்தை இழக்க நேர்ந்தபோது அல்லாஹ் அவ்விரு பிரிவினருக்கும் உதவியாளனாக இருந்தான். நம்பிக்கையாளர்கள் அல்லாஹ்வையே முற்றிலும் சார்ந்திருக்க வேண்டும். **123.** அல்லாஹ் உங்களுக்கு பத்ர் போரில் உதவி புரிந்துள்ளான். அப்போது நீங்கள் பலவீனர்களாக இருந்தீர்கள். எனவே நீங்கள் நன்றி செலுத்தும்பொருட்டு அல்லாஹ்வையே அஞ்சுங்கள். **124.** உங்கள் இறைவன் மூவாயிரம் வானவர்களை இறக்கி உங்களுக்கு உதவிபுரிவது உங்களுக்குப் போதாதா என்று நம்பிக்கையாளர்களிடம் நீர் கூறியதை நினைவுகூரும். **125.** நீங்கள் பொறுமையை மேற்கொண்டு இறையச்சத்துடன் நடந்தால் எதிரிகள் உங்களை திடீரெனத் தாக்கும்போது அடையாளமிடப்பட்ட ஐயாயிரம் வானவர்களைக்கொண்டு இறைவன் உங்களுக்கு உதவி புரிவான். **126.** உங்களுக்கு நற்செய்தியாகவும், உங்கள் உள்ளங்கள் அமைதி பெறுவதற்காகவுமே அல்லாஹ் இவ்வாறு செய்தான். உதவி என்பது யாவற்றையும் மிகைத்தவனும் ஞானம்மிக்கவனுமாகிய அல்லாஹ்விடமிருந்தே கிடைக்கிறது. **127.** இது நிராகரிப்பாளர்களில் ஒரு பிரிவினரை அழிப்பதற்காகவும் அல்லது அவர்களை இழிவுபடுத்தி தோல்வியுடன் அவர்கள் திரும்பிச் சென்று விடுவதற்காகத்தான். **128.** உமக்கு இவ்விஷயத்தில்

எவ்வித அதிகாரமுமில்லை. அல்லாஹ் அவர்களின் பாவமன்னிப்புக் கோருதலை ஏற்றுக்கொள்ளலாம் அல்லது அவர்களுக்கு தண்டனை அளிக்கலாம். ஏனெனில் அவர்கள் அக்கிரமக்காரரர்களாக இருக்கிறார்கள். **129.** வானங்களிலும், பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்விற்கே உரியனவாகும். தான் நாடியோரை மன்னிக்கிறான். தான் நாடியோரை அவன் தண்டிக்கிறான். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

**130.** நம்பிக்கையாளர்களே! வட்டியைப் பன்மடங்காகப் பெருக்கி உண்ணாதீர்கள். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். அதனால் நீங்கள் வெற்றியடைவீர்கள். **131.** நிராகரிப்பாளர்களுக்காகத் தயார் செய்யப்பட்டுள்ள நெருப்பிற்கு அஞ்சிக்கொள்ளுங்கள். **132.** அல்லாஹ்வுக்கும் தூதருக்கும் கட்டுப்படுங்கள். அதனால் நீங்கள் கருணை காட்டப்படலாம். **133.** உங்கள் இறைவனின் மன்னிப்பு மற்றும் சொர்க்கத்தின் பக்கம் விரையுங்கள். அது வானங்கள் மற்றும் பூமியின் அளவு விசாலமானது. அது இறையச்சமுடையோருக்காகத் தயார் செய்யப்பட்டுள்ளது. **134.** அவர்கள் செல்வ நிலையிலும், வறிய நிலையிலும் இறைவழியில் செலவு செய்வார்கள். கோபத்தை அடக்கி மக்களை மன்னித்து விடுவார்கள். அல்லாஹ் நற்செயல்கள் புரிவோரை நேசிக்கிறான். **135.** அவர்கள் மானக்கேடான காரியத்தைச் செய்து விட்டால் அல்லது தமக்குத்தாமே அநீதி இழைத்துக் கொண்டால் அல்லாஹ்வை நினைவுகூர்ந்து தம் பாவங்களுக்காக மன்னிப்புக் கோருவார்கள். அல்லாஹ்வைத் தவிர வேறு யார் அவர்களின் பாவங்களை மன்னிக்க முடியும்? அறிந்துகொண்டே தாம் செய்தவற்றில் அவர்கள் பிடிவாதமாக நிலைத்திருக்க மாட்டார்கள். **136.** இத்தகையோரின் கூலி அவர்களின் இறைவனிடமிருந்து கிடைக்கின்ற மன்னிப்பும்,

*சுவனங்களுமாகும். அவற்றில் ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். நன்மை செய்வோரின் கூலி எவ்வளவு சிறந்தது! 137. உங்களுக்கு முன்னர் பல (சமூகங்களின்) உதாரண நிகழ்வுகள் கடந்துவிட்டன. எனவே சத்தியத்தை மறுத்தோரின் முடிவு என்னவாயிற்று என்பதை பூமியில் சுற்றித்திரிந்து பாருங்கள். 138. இது மக்களுக்கு விளக்கமாகவும், இறையச்சமுடையோருக்கு வழிகாட்டியாகவும் அறிவுரையாகவும் இருக்கின்றது.*

*139. தைரியத்தை இழந்துவிடாதீர்கள். கவலைப்படாதீர்கள். நீங்கள் நம்பிக்கையாளர்களாயின் நீங்கள்தான் மேலோங்கி நிற்பீர்கள். 140. உங்களுக்குக் காயம் ஏற்பட்டுள்ளதென்றால் எதிரிகளுக்கும் இதுபோன்று காயம் ஏற்படத்தான் செய்தது. இத்தகைய நாட்களை நாம் மக்களிடையே மாறிமாறி வரச்செய்கின்றோம். இது ஏனெனில் நம்பிக்கையாளர்களை அல்லாஹ் அறிந்துகொள்ளவும், உங்களில் சிலரை சாட்சியாளர்களாக ஆக்குவதற்காகவும்தான். அநீதி இழைப்போரை அல்லாஹ் நேசிப்பதில்லை. 141. நம்பிக்கையாளர்களைத் தூய்மைப்படுத்தவும், நிராகரிப்பாளர்களை அழித்து விடுவதற்காகவும்தான் அல்லாஹ் இவ்வாறு செய்கிறான். 142. உங்களில் இறைவழியில் பாடுபடுபவர்கள் யார் என்பதையும், மனஉறுதியோடு நிற்பவர்கள் யார் என்பதையும் அல்லாஹ் அறியாமலேயே நீங்கள் சுவனம் சென்றுவிடலாம் என்று எண்ணுகிறீர்களா? 143. நீங்கள் மரணத்தைச் சந்திக்கும் முன்னரே அதனை விரும்பிக்கொண்டிருந்தீர்கள். இப்பொழுது அதனைக் கண்கூடாகப் பார்த்துவிட்டீர்கள்.*

*144. முஹம்மத் ஒரு தூதரேயாவார். அவருக்கு முன்னரும் தூதர்கள் வந்து சென்றுள்ளார்கள். அவர் இறந்துவிட்டாலோ கொலை செய்யப்பட்டாலோ நீங்கள் வந்தவழியே திரும்பிச்சென்று*

விடுவீர்களா என்ன? அவ்வாறு திரும்பிச்செல்பவர் அல்லாஹ்வுக்கு எவ்விதத் தீங்கும் இழைத்துவிட முடியாது. நன்றி செலுத்துவோருக்கு அல்லாஹ் கூலி வழங்கிடுவான் **145.** எந்த உயிரும் அல்லாஹ்வின் கட்டளையின்றி மரணிக்காது. இது அவனால் எழுதப்பட்ட விதியாகும். எவர் உலகியல் பலனை விரும்புகிறாரோ அவருக்கு நாம் இவ்வுலகிலேயே அதனை அளித்து விடுகிறோம். எவர் மறுமையின் பலனை விரும்புகிறாரோ அவருக்கு நாம் அதனையும் வழங்குவோம். நன்றி செலுத்துவோருக்குரிய கூலியை நிச்சயம் நாம் வழங்கிடுவோம். **146.** எத்தனையோ தூதர்களுடன் இணைந்து இறையடியார்கள் பலரும் போர்புரிந்துள்ளனர். இறைவழியில் தங்களுக்கு ஏற்பட்ட துன்பங்களினால் அவர்கள் மனம் தளர்ந்து விடவுமில்லை, பலவீனப்பட்டு பணிந்துவிடவுமில்லை. இத்தகைய பொறுமையாளர்களையே அல்லாஹ் நேசிக்கிறான். **147.** அவர்களது பிரார்த்தனை, “எங்கள் இறைவா! எங்கள் பாவங்களையும், எங்கள் காரியங்களில் நாங்கள் வரம்புமீறிச் செய்தவற்றையும் மன்னித்து விடுவாயாக. எங்களை உறுதிப்படுத்துவாயாக. நிராகரிப்பாளர்களுக்கு எதிராக எங்களுக்கு உதவிபுரிவாயாக” என்பதாகத்தான் இருந்தது. **148.** எனவே அல்லாஹ் அவர்களுக்கு இவ்வுலக நன்மையையும் மறுமையின் அழகிய நன்மையையும் வழங்கினான். அல்லாஹ் நற்செயல் புரிவோரை நேசிக்கிறான்.

**149.** நம்பிக்கையாளர்களே! நீங்கள் நிராகரிப்பாளர்களுக்குக் கீழ்ப்படிந்து நடந்தால் அவர்கள் உங்களை வந்தவழியே திருப்பிவிடுவார்கள். நீங்கள் தோல்வியடைந்தவர்களாகி விடுவீர்கள். **150.** மாறாக அல்லாஹ்வே உங்களுக்கு உதவுபவனாக இருக்கின்றான். அவனே உதவிசெய்வோரில் மிகச் சிறந்தவன். **151.** நிராகரிப்பாளர்களின் உள்ளங்களில் நாம் உங்களைப்பற்றிய அச்சத்தை ஏற்படுத்தி விடுவோம். ஏனெனில் அவர்கள் அல்லாஹ்வுக்கு

இணைவைத்து விட்டார்கள். இணைவைப்பதற்கு அவன் எவ்வித ஆதாரத்தையும் இறக்கி வைக்கவில்லை. அவர்களது தங்குமிடம் நரகமேயாகும். அக்கிரமக்காரர்களின் தங்குமிடம் எவ்வளவு மோசமானது!. *152.* தன் வாக்குறுதியை அல்லாஹ் உங்களுக்கு உண்மைப்படுத்திக் காட்டினான். நீங்கள் அவனது கட்டளைப்படி அவர்களைக் கொன்று கொண்டிருந்தீர்கள். ஆனால் இறுதியில் பலவீனமடைந்து உங்கள் விஷயத்தில் பிணங்கிக் கொண்டீர்கள். நீங்கள் விரும்பியதை அவன் காட்டிய பின்னரும் நீங்கள் மாறாகச் செய்தீர்கள். உங்களில் சிலர் இம்மையை விரும்புவோராக இருந்தனர். சிலர் மறுமையை விரும்புவோராக இருந்தனர். பின்னர் அவன் உங்களைச் சோதிப்பதற்காக அவர்களை விட்டும் உங்களைத் திருப்பிவிட்டான். அல்லாஹ் உங்களை மன்னித்து விட்டான். அல்லாஹ் நம்பிக்கையாளர்கள் மீது பேரருள் புரிபவனாக இருக்கின்றான். *153.* தூதர் உங்களுக்குப் பின்னாலிருந்து உங்களை அழைத்துக்கொண்டிருக்க நீங்கள் யாரையும் திரும்பிப்பார்க்காமல் ஓடிக்கொண்டிருந்தீர்கள். இதனால் அல்லாஹ் உங்களுக்கு துக்கத்தின் மேல் துக்கத்தை ஏற்படுத்தினான். ஏனெனில் உங்களை விட்டுச்சென்றதைப் பற்றியும், உங்களுக்கு ஏற்பட்ட துன்பத்திற்காகவும் நீங்கள் கவலைப்படக்கூடாது என்பதற்காக. அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை நன்கறிந்தவனாக இருக்கின்றான்.

*154.* பின்னர் இத்துயரத்திற்குப் பிறகு அமைதியளிக்கக்கூடிய சிறு தூக்கத்தை அல்லாஹ் உங்களுக்கு அருளினான். அது உங்களில் ஒரு பிரிவினரைத் தழுவிக்கொண்டது. மற்றொரு பிரிவினரோ தம் உயிரின் மீது கவலைகொண்டு அல்லாஹ்வைக் குறித்து உண்மைக்குப் புறம்பான, அறியாமைக்கால எண்ணங்களைக் கொண்டிருந்தனர். “இவ்விஷயத்தில் நமக்கு ஏதேனும் அதிகாரம் உண்டா?” என்று அவர்கள் கேட்கிறார்கள். நீர் கூறும்: “அனைத்து

அதிகாரங்களும் அல்லாஹ்விடமே உள்ளன". அவர்கள் உம்மிடம் வெளிப்படுத்தாத விஷயங்களையும் தம் உள்ளங்களில் மறைத்து வைத்துள்ளார்கள். "இவ்விஷயத்தில் எங்களுக்கு ஏதேனும் பங்கு இருந்திருந்தால் நாங்கள் இங்கே கொல்லப்பட்டிருக்க மாட்டோம்" என்றும் அவர்கள் கூறுகிறார்கள். அதற்கு நீர் கூறும்: "நீங்கள் உங்கள் வீடுகளில் இருந்திருந்தாலும் எவருடைய விதியில் கொல்லப்பட வேண்டும் என்று எழுதப்பட்டுள்ளதோ அவர்கள் தங்கள் கொலைக்களத்தினை நோக்கி சென்றேயிருப்பார்கள்''. உங்கள் நெஞ்சங்களில் உள்ளவற்றைச் சோதிக்கவும், உங்கள் உள்ளங்களில் உள்ளவற்றைத் தூய்மைப்படுத்தவுமே அல்லாஹ் இவ்வாறெல்லாம் நிகழ்த்துகிறான். அல்லாஹ் உள்ளங்களில் உள்ளவற்றை நன்கறிந்தவன். 155. இரு பிரிவினரும் மோதிக்கொண்ட நாளில் உங்களில் புறங்காட்டி ஓடியவர்களை சாத்தான் அவர்களது சில செயல்களினால்தான் வழிதவறச் செய்தான். ஆயினும் அல்லாஹ் அவர்களை மன்னித்து விட்டான். நிச்சயமாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும். சகிப்புத்தன்மையுடையவனாகவும் இருக்கின்றான்.

156. நம்பிக்கையாளர்களே! நீங்கள் நிராகரிப்பாளர்களைப் போன்று ஆகிவிடாதீர்கள். அவர்கள் போரிலோ பயணத்திலோ இறந்துவிட்ட தங்கள் சகோதரர்களைப்பற்றி "அவர்கள் நம்முடன் இருந்திருந்தால் இறந்திருக்கவும் மாட்டார்கள், கொல்லப்பட்டிருக்கவும் மாட்டார்கள்" என்று கூறுகிறார்கள். அல்லாஹ் அவர்களின் உள்ளங்களில் கவலைக்கான காரணத்தை ஏற்படுத்தவே இவ்வாறு செய்கிறான். அல்லாஹ்வே உயிர்ப்பிக்கிறான். அவனே மரணத்தையும் அளிக்கிறான். நீங்கள் செய்பவற்றையெல்லாம் அல்லாஹ் பார்த்துக் கொண்டிருக்கிறான். 157. நீங்கள் இறைவழியில் கொல்லப்பட்டாலோ, இறந்து விட்டாலோ அல்லாஹ்விடமிருந்து

கிடைக்கும் மன்னிப்பும், கருணையும் அவர்கள் சேர்த்து வைத்திருக்கும் அனைத்தையும்விட சிறந்ததாகும். *158.* நீங்கள் இறந்துவிட்டாலோ கொல்லப்பட்டாலோ அல்லாஹ்விடமே ஒன்றுதிரட்டப்படுவீர்கள். *159.* இறைக்கருணையினால்தான் நீர் இவர்களுடன் மென்மையாக நடந்து கொள்கிறீர். நீர் கடுமையானவராகவோ, கடின மனம் கொண்டவராகவோ இருந்திருந்தால் இவர்கள் உம்மை விட்டு ஓடியிருப்பார்கள். எனவே அவர்களை மன்னித்து அவர்களுக்காக மன்னிப்புக் கோருவீராக. சகல காரியங்களிலும் அவர்களுடன் கலந்தாலோசிப்பீராக. நீர் முடிவு செய்துவிட்டால் அல்லாஹ்வையே முற்றிலும் சார்ந்திருப்பீராக. நிச்சயமாக அல்லாஹ் முற்றிலும் தன்னை சார்ந்திருப்போரை நேசிக்கிறான். *160.* அல்லாஹ் உங்களுக்கு உதவி செய்தால் உங்களை எவராலும் வெல்ல முடியாது. அவன் உங்களைக் கைவிட்டுவிட்டால் அதன் பின்னர் யார்தான் உங்களுக்கு உதவிசெய்வார்? நம்பிக்கையாளர்கள் அல்லாஹ்வையே சார்ந்திருக்க வேண்டும்.

*161.* மோசம் செய்வது எந்த தூதரின் செயலுமல்ல. எவர் அதனை செய்கிறாரோ அவர் மறுமைநாளில் தான் செய்தவற்றுடன் வருவார். பின்னர் ஒவ்வொருவருக்கும் அவரது செயலுக்குரிய முழுமையான கூலி வழங்கப்படும். அவர் மீது எவ்வித அநீதியும் இழைக்கப்பட மாட்டாது. *162.* இறைதிருப்தியை வேண்டி நடப்பவர் இறைக்கோபத்திற்கு ஆளானவரைப்போல் ஆவாரா? அவரது தங்குமிடம் நரகமாகும். அது மிகவும் கெட்ட இருப்பிடமாகும். *163.* அவர்கள் அல்லாஹ்விடத்தில் பல்வேறு அந்தஸ்தைப் பெறுவார்கள். அவர்கள் அனைவரின் செயல்களையும் அல்லாஹ் பார்த்துக் கொண்டிருக்கிறான். *164.* நம்பிக்கையாளர்கள் மீது அல்லாஹ் பேரருள் புரிந்துள்ளான். அதாவது அவர்களிலிருந்தே ஒரு தூதரை அவர்களிடம் அனுப்பியுள்ளான். அவர் அவனது வசனங்களை

அவர்களுக்கு எடுத்துரைத்து அவர்களைத் தூய்மைப்படுத்துகிறார். அவர்களுக்கு வேதத்தையும் ஞானத்தையும் போதிக்கிறார். நிச்சயமாக அவர்கள் இதற்கு முன்னர் வெளிப்படையான வழிகேட்டிலேயே இருந்தார்கள்.

**165.** உங்களை ஒரு துன்பம் வந்தடைந்தபோது - இதைப்போன்ற இருமடங்கு துன்பம் அவர்களுக்கு நீங்கள் அளித்திருக்க - இது எங்கிருந்து வந்தது என்று கேட்கிறீர்கள். நீர் கூறும்: "இது உங்களால்தான் ஏற்பட்டது". நிச்சயமாக அல்லாஹ் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவன். **166.** இரு கூட்டத்தினரும் மோதிக்கொண்ட நாளில் உங்களுக்கு ஏற்பட்ட துன்பமானது இறைக்கட்டளையினால் ஏற்பட்டதேயாகும். அது நம்பிக்கையாளர்கள் யார்? **167.** நயவஞ்சகர்கள் யார்? என்பதை அல்லாஹ் அறிந்துகொள்வதற்காகவே. "வாருங்கள். இறைவழியில் போர் புரியுங்கள் அல்லது எதிரிகளிடமிருந்து தற்காத்துக்கொள்ளுங்கள்" என்று அவர்களிடம் கூறப்பட்டால் "போர் நடக்கும் என்று நாங்கள் அறிந்திருந்தால் கண்டிப்பாக உங்களுடன் வந்திருப்போம்" என்று கூறுகிறார்கள். அவர்கள் அன்று நம்பிக்கையைவிட நிராகரிப்பிற்கே நெருக்கமானவர்களாக இருந்தார்கள்; தம் உள்ளங்களில் இல்லாதவற்றை தம் வாய்களால் வெளிப்படுத்துகிறார்கள். அவர்கள் மறைப்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவனாக இருக்கின்றான். **168.** இவர்கள் போருக்குச் செல்லாமல் தம் வீட்டில் அமர்ந்துகொண்டு தம் சகோதரர்களைப் பற்றி "அவர்கள் நம் பேச்சை கேட்டிருந்தால் கொல்லப்பட்டிருக்க மாட்டார்கள்" என்று கூறுகிறார்கள். நீர் கூறும்: "நீங்கள் உண்மையாளர்களாயின் மரணத்தை விட்டு உங்களைக் காத்துக் கொள்ளுங்கள் பார்க்கலாம்".

*169.* இறைவழியில் கொல்லப்பட்டவர்களை இறந்தவர்களாகக் கருதாதீர்கள். மாறாக அவர்கள் தம் இறைவனிடத்தில் உயிரோடு உள்ளார்கள். அவர்கள் உணவளிக்கப்படுகிறார்கள். *170.* தன் அருளினால் அல்லாஹ் அவர்களுக்கு வழங்கியவற்றைக்கொண்டு அவர்கள் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள். இன்னும் அவர்களுடன் வந்து சேராமல் பின்னால் இருக்கும் மக்களைக் குறித்து "அவர்களுக்கு எவ்வித அச்சமுமில்லை, கவலைப்படவும் மாட்டார்கள்" என்ற நற்செய்தியைப் பெறுபவர்களாகவும் இருக்கிறார்கள். *171.* இறைவன் தனது அருளினாலும், கிருபையினாலும் நம்பிக்கையாளர்களின் கூலியை வீணாக்க மாட்டான் என்பதனால் அவர்கள் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள். *172.* அவர்கள் தங்களுக்குக் காயம் ஏற்பட்ட பின்னரும் அல்லாஹ்வும் தூதரும் இட்ட கட்டளையை ஏற்றுக் கொண்டார்கள். அவர்களில் நற்செயல் புரிபவர்களாகவும், இறையச்சமுடையவர்களாகவும் இருப்பவர்களுக்கு மகத்தான கூலி உண்டு. *173.* அவர்களிடம் மக்கள், "பகைவர்கள் உங்களுக்கெதிராகப் பெரும் படையுடன் திரண்டுள்ளார்கள். எனவே அவர்களுக்கு அஞ்சிக் கொள்ளுங்கள்", என்று கூறியபோது அது அவர்களது நம்பிக்கையை மேலும் அதிகப்படுத்தியது. அப்போது அவர்கள், "அல்லாஹ்வே எங்களுக்குப் போதுமானவன். அவனே சிறந்த பொறுப்பாளன்" என்று கூறினார்கள். *174.* எனவே அவர்கள் இறையருளையும், பாக்கியத்தையும் பெற்றுத் திரும்பினார்கள். அவர்களுக்கு எவ்விதத் தீங்கும் ஏற்படவில்லை. அவர்கள் இறைதிருப்தியின்படி நடந்தார்கள். அல்லாஹ் பேரருள் புரிபவனாவான். *175.* சாத்தான் தன் சகாக்களைக்கொண்டு உங்களை அச்சுறுத்துகிறான். எனவே நீங்கள் அவர்களைக் கண்டு அஞ்சாதீர்கள். நீங்கள் நம்பிக்கையாளர்களாக இருந்தால் என்னையே அஞ்சுங்கள்.

*176.* நிராகரிப்பில் மும்முரமாக ஈடுபட்டுக் கொண்டிருப்போர் உம்மைக் கவலையில் ஆழ்த்திவிட வேண்டாம். அவர்கள் அல்லாஹ்வுக்கு எவ்வித தீங்கையும் செய்துவிட முடியாது. "அவர்களுக்கு மறுமையின் நன்மையில் எவ்விதப் பங்கும் இருக்கக்கூடாது" என்று அல்லாஹ் நாடுகின்றான். அவர்களுக்குப் பெரும் வேதனை உண்டு. *177.* நம்பிக்கைக்குப் பதிலாக நிராகரிப்பை விலைக்கு வாங்கிக் கொண்டவர்கள் அல்லாஹ்வுக்கு எவ்விதத் தீங்கையும் இழைக்க முடியாது. அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு. *178.* நாம் நிராகரிப்பாளர்களுக்கு அவகாசம் அளித்துக் கொண்டிருப்பதை தங்களுக்கு நல்லதென அவர்கள் எண்ணிவிட வேண்டாம். நாம் அவர்களுக்கு அவகாசம் அளிப்பதெல்லாம் அவர்களது பாவங்களை இன்னும் அதிகரித்துக் கொள்ளவேண்டும் என்பதற்காகத்தான். அவர்களுக்கு இழிவுமிக்க வேதனையுண்டு. *179.* இப்பொழுது நீங்கள் எந்த நிலையில் இருக்கின்றீர்களோ, அதே நிலையில் அல்லாஹ் நம்பிக்கையாளர்களை விட்டுவைத்திருக்க மாட்டான். தூய்மையானவர்களை தூய்மையற்றவர்களிடமிருந்து வேறுபடுத்தியே தீருவான். அல்லாஹ் மறைவானவற்றை உங்களுக்கு அறிவித்துத் தருபவன் அல்லன். ஆயினும் தன் தூதர்களிலிருந்து தான் விரும்புவோரை அல்லாஹ் தேர்ந்தெடுத்துக் கொள்கிறான். ஆகவே நீங்கள் அல்லாஹ்வின் மீதும், அவனது தூதர்களின் மீதும் நம்பிக்கை கொள்ளுங்கள். நீங்கள் நம்பிக்கைகொண்டு இறையச்சத்துடன் நடந்தால் உங்களுக்கு மகத்தான கூலி உண்டு.

*180.* தன் அருளினால் அல்லாஹ் தங்களுக்கு வழங்கியவற்றில் கஞ்சத்தனம் செய்பவர்கள் அதனைத் தங்களுக்கு நல்லது என்று எண்ண வேண்டாம். மாறாக அது அவர்களுக்கு மிகவும் கெட்டதாகும். அவர்கள் கஞ்சத்தனம் புரிந்த பொருட்கள் மறுமைநாளில் அவர்களின் கழுத்தில் விலங்காக மாட்டப்படும்.

அல்லாஹ்வே வானங்கள் மற்றும் பூமியின் நிரந்தர உரிமையாளன். நீங்கள் செய்கின்றவற்றை அல்லாஹ் நன்கறிந்தவன். 181. "அல்லாஹ் ஏழை, நாங்கள்தான் செல்வந்தர்கள்" என்று கூறியவர்களின் கூற்றை அல்லாஹ் கேட்டுக்கொண்டான். அவர்கள் கூறியதையும், தூதர்களை அநியாயமாகக் கொன்றதையும் நாம் எழுதிக்கொள்வோம். இதோ நெருப்பின் வேதனையைச் சுவையுங்கள் என்று (அவர்களிடம்) நாம் கூறுவோம். 182. இவை நீங்கள் உங்கள் கைகளால் சம்பாதித்துக் கொண்டவையாகும். தன் அடியார்களுக்கு அல்லாஹ் ஒரு சிறிதும் அநீதியிழைக்க மாட்டான். 183. "நெருப்பு உட்கொள்கின்ற ஒரு பலியை எங்கள் கண்முன்னால் காட்டாதவரை நாங்கள் எந்தத் தூதரையும் ஏற்றுக்கொள்ளக் கூடாது" என்று எங்களுக்கு அல்லாஹ் கட்டளையிட்டுள்ளான் என்று அவர்கள் கூறுகிறார்கள். நீர் அவர்களிடம் கேளும்: "எனக்கு முன்னால் உங்களுக்குத் தெளிவான ஆதாரங்களையும், நீங்கள் கூறியவற்றையும் தூதர்கள் கொண்டுவந்தார்களே! நீங்கள் உண்மையாளர்களாக இருந்தீர்களானால் அவர்களை ஏன் கொலை செய்தீர்கள்?" 184. எனவே அவர்கள் உம்மைப் பொய்யர் எனக்கூறினால் உங்களுக்கு முன்னரும் பல தூதர்கள் பொய்யரெனத் தூற்றப்பட்டுள்ளனர். அவர்கள் தெளிவான அத்தாட்சிகளையும், ஆகமங்களையும், ஒளிரும் வேதத்தையும் கொண்டு வந்திருந்தார்கள். 185. ஒவ்வொரு மனிதனும் மரணத்தை சுவைத்தே தீர வேண்டும். உங்களுக்கு முழுமையான கூலி மறுமையில்தான் கிடைக்கும். எனவே எவர் நரகத்தைவிட்டு அகற்றப்பட்டு, சுவனத்தில் நுழைவிக்கப்படுகிறாரோ அவரே வெற்றி பெற்றவராவார். உலக வாழ்க்கை மயக்கக்கூடிய அற்ப இன்பமேயன்றி வேறில்லை.

186. உங்கள் செல்வங்களிலும் உயிர்களிலும் நிச்சயம் நீங்கள் சோதிக்கப்படுவீர்கள். உங்களுக்கு முன் வேதம் வழங்கப்பட்டோரிடமிருந்தும் இணைவைப்போரிடமிருந்தும்

நிச்சயம் வேதனை தரும் வார்த்தைகளை செவியுறுவீர்கள். நீங்கள் பொறுமையை மேற்கொண்டு இறையச்சத்தோடு இருந்தீர்களானால் - நிச்சயமாக அது மனவுறுதிமிக்க காரியமாகும். *187.* வேதம் வழங்கப்பட்டோரிடம் "வேதத்தை மக்களுக்குத் தெளிவாக எடுத்துரைக்க வேண்டும். அதனை நீங்கள் மறைத்து விடக்கூடாது" என்று அல்லாஹ் உறுதிமொழி வாங்கியதை எண்ணிப்பாருங்கள். ஆனால் அவர்கள் அதனைத் தம் முதுகுக்குப் பின்னால் எறிந்துவிட்டு அற்ப ஆதாயத்திற்காக அதனை விற்று விட்டார்கள். அவர்கள் வாங்கிக்கொண்டது எவ்வளவு மோசமானது! *188.* தாம் செய்த செயல்களுக்காக மகிழ்வடைந்து, தாம் செய்யாத காரியங்களுக்காகப் பாராட்டப்பட வேண்டும் என்று விரும்புபவர்கள் இறைவேதனையை விட்டு தப்பி விடுவார்கள் என்று எண்ணி விடாதீர்கள். அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு. *189.* வானங்கள், பூமியின் ஆட்சி அல்லாஹ்வுக்கே உரியது. அல்லாஹ் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவன்.

*190.* வானங்கள் மற்றும் பூமியின் படைப்பிலும், இரவும் பகலும் மாறிமாறி வருவதிலும் அறிவுடையோருக்குப் பல அத்தாட்சிகள் இருக்கின்றன. *191.* அவர்கள் நின்ற நிலையிலும், அமர்ந்த நிலையிலும், படுக்கையிலும் அல்லாஹ்வை நினைவு கூர்வார்கள்; வானங்கள் மற்றும் பூமியின் படைப்பில் சிந்தனை செலுத்துவார்கள். "எங்கள் இறைவா, நீ இவற்றையெல்லாம் ஒருபோதும் வீணாகப் படைக்கவில்லை. நீ தூய்மையானவன். எனவே எங்களை நரக நெருப்பின் வேதனையை விட்டும் காப்பாற்றுவாயாக". *192.* "எங்கள் இறைவா! எவரை நீ நரகத்தில் புகுத்தினாயோ அவரை உண்மையில் இழிவுபடுத்தி விட்டாய். அக்கிரமக்காரரர்களுக்கு உதவிசெய்வோர் எவரும் இல்லை. *193.* எங்கள் இறைவா! நம்பிக்கையின்பக்கம் அழைக்கும் ஒரு

அழைப்பாளர் "உங்கள் இறைவனின் மீது நம்பிக்கைகொள்ளுங்கள்" என்று அழைப்பு விடுத்ததை நாங்கள் செவியேற்றோம். உடனே நம்பிக்கை கொண்டோம். எங்கள் இறைவா! எங்கள் பாவங்களை மன்னித்தருள்வாயாக. எங்களிடம் உள்ள தீமைகளை அகற்றுவாயாக. எங்களை நல்லோர்களுடன் மரணிக்கச் செய்வாயாக. **194.** எங்கள் இறைவா! உன் தூதர்களின் வாயிலாக நீ எங்களுக்கு அளித்துள்ள வாக்குறுதிகளை நிறைவேற்றுவாயாக. மறுமை நாளில் எங்களை இழிவுக்குள்ளாக்கி விடாதே. நிச்சயமாக நீ வாக்குறுதிக்கு மாறுசெய்ய மாட்டாய்" என்று அவர்கள் பிரார்த்தனை செய்வார்கள்.

**195.** அவர்களின் இறைவன் அவர்களது பிரார்த்தனையை ஏற்றுக்கொண்டு "உங்களில் ஆணாயினும், பெண்ணாயினும் எவரது செயலையும் நான் வீணாக்க மாட்டேன்" என்று கூறினான். நீங்கள் அனைவரும் ஒருவர் மற்றவரிலிருந்து வந்தவர்கள். எனவே புலம்பெயர்ந்தவர்கள், தம் வீடுகளிலிருந்து வெளியேற்றப்பட்டவர்கள், என் பாதையில் துன்புறுத்தப்பட்டவர்கள், போரிட்டவர்கள், அதில் கொல்லப்பட்டவர்கள் ஆகியோரின் பாவங்களை நிச்சயம் நான் அவர்களைவிட்டும் அகற்றி விடுவேன். அவர்களை சுவனச் சோலைகளில் நுழையச் செய்வேன். அவற்றில் ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும். இது அல்லாஹ்விடமிருந்து அவர்களுக்குக் கிடைக்கும் கூலியாகும். மிகச்சிறந்த கூலி அல்லாஹ்விடமே உள்ளது. **196.** நாட்டிற்குள் நிராகரிப்பாளர்களின் நடமாட்டம் உம்மை ஏமாற்றத்தில் ஆழ்த்திவிட வேண்டாம். **197.** அது சிறிதளவு பலன்தான். பின்னர் அவர்களின் இருப்பிடம் நரகமாகும். அது மிகவும் கெட்ட இருப்பிடமாகும். **198.** ஆயினும் தம் இறைவனை அஞ்சுவோருக்கு சொர்க்கச் சோலைகள் இருக்கின்றன. அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். இது அல்லாஹ்விடமிருந்து அவர்களுக்குக்

*கிடைக்கும் உபசரிப்பாகும். நல்லோர்களுக்கு அல்லாஹ்வின் இருப்பில் உள்ளதே மிகச் சிறந்ததாகும். **199.** வேதக்காரர்களில் இப்படியும் சிலர் இருக்கிறார்கள். அவர்கள் அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொள்கிறார்கள். உங்களுக்கு அருளப்பட்ட வேதத்தையும் அவர்களுக்கு அருளப்பட்ட வேதத்தையும் ஏற்றுக்கொள்கிறார்கள். அவர்கள் அல்லாஹ்விற்குப் பணிந்தவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் இறைவசனங்களை அற்ப ஆதாயத்திற்கு விற்று விடுவதில்லை. அவர்களது கூலி இறைவனிடமே உள்ளது. அல்லாஹ் கணக்கு வாங்குவதில் விரைவானவன். **200.** நம்பிக்கையாளர்களே! பொறுமையை மேற்கொள்ளுங்கள்; உறுதியாக நிலைத்திருங்கள்; இணைந்தே இருங்கள்; அல்லாஹ்வை அஞ்சுங்கள். நீங்கள் வெற்றியாளர்களாகத் திகழக்கூடும்.*

# 4. பெண்கள் (அன்னிஸா)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

*1. மனிதர்களே! உங்களை ஒரே ஆன்மாவிலிருந்து படைத்த உங்கள் இறைவனை அஞ்சுங்கள். அவன் அதிலிருந்தே அதனுடைய துணையைப் படைத்தான். அவ்விருவரிலிருந்து ஏராளமான ஆண்களையும், பெண்களையும் பரவச்செய்தான். எவனை முன்னிறுத்தி நீங்கள் ஒருவருக்கொருவர் வேண்டிக் கொள்கிறீர்களோ அந்த அல்லாஹ்வை அஞ்சிக்கொள்ளுங்கள். உறவுகளைப் பேணுவதில் கவனமாக இருங்கள். நிச்சயமாக அல்லாஹ் உங்களை கண்காணித்துக் கொண்டிருக்கிறான்.**

---

*பிறப்பின் அடிப்படையில் அனைவரும் ஒன்றே. ஒவ்வொருவரும் தனது ஆதி தொடக்கத்தை பெண் மற்றும் ஆணிடம் காணமுடியும். ஆகவே அனைவரும் பெரியதொரு குடும்பத்தின் அங்கத்தினர் என்ற வகையில் ஒருவருக்கொருவர் அன்புடனும் நல்லிணக்கத்துடனும் வாழ வேண்டும்.

2. அநாதைகளின் சொத்துக்களை அவர்களிடம் ஒப்படைத்து விடுங்கள். நல்லதற்கு பதிலாக கெட்டதை மாற்றி விடாதீர்கள். அவர்களது செல்வங்களை உங்கள் செல்வங்களுடன் சேர்த்து உண்டு விடாதீர்கள். நிச்சயமாக இது பெரும் பாவமாகும். 3. அநாதைப் பெண்களின் விஷயத்தில் நியாயமாக நடக்க முடியாது என்று நீங்கள் அஞ்சினால் நீங்கள் விரும்பும் பெண்களை சூழ்நிலைக்கேற்ப இரண்டு அல்லது மூன்று அல்லது நான்கு என திருமணம் செய்து கொள்ளுங்கள். (மனைவிகளிடம்) நியாயமாக நடக்க முடியாது என்று நீங்கள் அஞ்சினால் ஒரு திருமணம் மட்டும் செய்து கொள்ளுங்கள் அல்லது உங்களிடம் உள்ள அடிமைப்பெண்களை போதுமாக்கிக் கொள்ளுங்கள். நீங்கள் நீதியை விட்டு விலகாமல் இருப்பதற்கு இதுவே சிறந்த வழியாகும். 4. பெண்களுக்கு அவர்களின் மணக்கொடைகளை மனமுவந்து அளித்து விடுங்கள். ஆனால் அவர்கள் அதிலிருந்து ஏதேனும் உங்களுக்கு மனமுவந்து விட்டுக் கொடுத்தால் நீங்கள் அதனை நல்லெண்ணத்துடனும் மகிழ்ச்சியுடனும் பயன்படுத்திக் கொள்ளுங்கள்.

5. அல்லாஹ் உங்கள் வாழ்க்கைக்கு ஆதாரமாக்கியுள்ள செல்வங்களை விவரம் அறியாதவர்களிடம் கொடுக்காதீர்கள். அதிலிருந்து அவர்களுக்கு உணவளியுங்கள், ஆடை அணிவியுங்கள். அவர்களிடம் நல்ல அறிவுரைகளைக் கூறுங்கள். 6. அநாதைகளை அவர்களின் திருமண வயதை அடையும்வரை சோதித்துக்கொண்டே இருங்கள். அவர்களிடம் நீங்கள் தெளிவான பக்குவத்தைக் கண்டால் அவர்களது செல்வங்களை அவர்களிடம் ஒப்படைத்து விடுங்கள். அவர்களின் செல்வங்களை விரயமாகவோ, அவர்கள் பெரியவர்களாகி விடுவார்களே என்று பயந்தோ அவசரமாக விழுங்கி விடாதீர்கள். செல்வமுடையவர் அநாதைகளின் செல்வங்களை விட்டு தவிர்ந்துகொள்ளட்டும். ஏழ்மை நிலையில் இருப்பவர் நியாயமான

*முறையில் உண்டு கொள்ளட்டும். அநாதைகளின் செல்வங்களை நீங்கள் அவர்களிடம் ஒப்படைக்கும்போது அதற்கு சாட்சிகளை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். கணக்கு கேட்பதற்கு அல்லாஹ் போதுமானவன். 7. பெற்றோர் மற்றும் நெருங்கிய உறவினர் விட்டுச்சென்ற சொத்தில் ஆண்களுக்குப் பங்கு உண்டு. தாய் தந்தையர் மற்றும் நெருங்கிய உறவினர் விட்டுச்சென்ற சொத்தில் பெண்களுக்கும் பங்கு உண்டு. அது குறைவாகவோ, அதிகமாகவோ இருந்தாலும் சரியே. இது ஒரு நிர்ணயிக்கப்பட்ட பங்காகும். 8. பங்கீடு செய்யும்போது உறவினர்கள், அநாதைகள் மற்றும் ஏழைகள் வந்தால் அவர்களுக்கும் அதிலிருந்து ஏதேனும் கொடுங்கள். அவர்களோடு கனிவாகப் பேசுங்கள். 9. தாங்கள் இறந்தால் “தங்கள் பலவீனமான குழந்தைகளின் நிலைமை என்னவாகும்?” என்று அஞ்சுபவர்களைப்போல் அவர்கள் அநாதைகளின் விஷயத்தில் அஞ்சிக்கொள்ளட்டும். எனவே அவர்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சி நீதியுடன் தெளிவான வார்த்தைகளையே பேசட்டும். 10. அநாதைகளின் செல்வங்களை அநியாயமாக உண்பவர்கள் தங்கள் வயிறுகளில் நெருப்பைத்தான் நிரப்பிக்கொள்கிறார்கள். அவர்கள் அதிவிரைவில் கொழுந்து விட்டெரியும் நெருப்பில் வீசி எறியப்படுவார்கள்.*

*11. அல்லாஹ் உங்கள் பிள்ளைகள் விஷயத்தில் உங்களுக்கு பின்வருமாறு கட்டளையிடுகிறான். ஒரு ஆணின் பங்கு இரண்டு பெண்களின் பங்கிற்குச் சமமாகும். இரண்டுக்கும் மேற்பட்ட பெண்கள் இருந்தால் அவர்களுக்கு இறந்தவர் விட்டுச்சென்ற சொத்தில் மூன்றில் இரு பங்கு உண்டு. ஒரே மகளாக இருந்தால் அவளுக்குச் சொத்தில் பாதி உண்டு. இறந்து போனவருக்குக் குழந்தைகள் இருந்து (பெற்றோர்களும் இருந்தால்) அவரது பெற்றோர்கள் ஒவ்வொருவருக்கும் அவர் விட்டுச்சென்ற*

சொத்திலிருந்து ஆறில் ஒரு பங்கு உண்டு. அவருக்குக் குழந்தைகள் இல்லையென்றால், அவரது பெற்றோரே அவருக்கு வாரிசுகளாக இருந்தால், அப்போது அவரது தாய்க்கு மூன்றில் ஒரு பங்கு உண்டு. அவருக்குச் சகோதர சகோதரிகள் இருந்தால் அப்பொழுது அவரது தாய்க்கு ஆறில் ஒரு பங்கு உண்டு. இவையாவும் இறந்தவர் செய்த மரணசாசனத்தை (உயில்) அல்லது கடன்களை நிறைவேற்றிய பிறகுதான். உங்கள் தந்தையர்களோ, உங்கள் பிள்ளைகளோ அவர்களில் உங்களுக்கு அதிக பலன் அளிப்பவர்கள் யார் என்பதை நீங்கள் அறியமாட்டீர்கள். இது அல்லாஹ் நிர்ணயித்துள்ள கடமையாகும். நிச்சயமாக அல்லாஹ் நன்கறிந்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான். 12. உங்கள் மனைவியர் விட்டுச்சென்ற சொத்தில் - அவர்களுக்குப் பிள்ளை இல்லையென்றால் - பாதி உங்களுக்கு உண்டு. அவர்களுக்குப் பிள்ளை இருந்தால் அவர்கள் விட்டுச்சென்றதில் நான்கில் ஒரு பங்குதான் உங்களுக்கு உண்டு. இவை யாவும் அவர்கள் செய்த மரண சாசனத்தை அல்லது கடன்களை நிறைவேற்றிய பிறகுதான். உங்களுக்குப் பிள்ளை இல்லையென்றால் நீங்கள் விட்டுச் சென்றதிலிருந்து உங்கள் மனைவியருக்கு நான்கில் ஒரு பங்கு உண்டு. உங்களுக்குப் பிள்ளை இருந்தால் நீங்கள் விட்டுச்சென்றதில் அவர்களுக்கு எட்டில் ஒரு பங்குதான் உண்டு. இதுவும் நீங்கள் செய்த மரண சாசனத்தை அல்லது கடன்களை நிறைவேற்றிய பிறகுதான். மூல வாரிசுகளோ நேரடி வாரிசுகளோ இல்லாதவராக இறந்துவிட்ட ஆணுக்கோ, பெண்ணுக்கோ ஒரு சகோதரர் அல்லது ஒரு சகோதரி இருந்தால் இருவரில் ஒவ்வொருவருக்கும் ஆறில் ஒரு பங்கு உண்டு. அவர்கள் அதைவிட அதிகமாக இருந்தால் அவர்கள் மூன்றில் ஒரு பங்கில் இணைவார்கள். அதுவும் அவர் செய்த மரணசாசனத்தை அல்லது கடன்களை நிறைவேற்றிய பிறகுதான். அது யாருக்கும் பாதிப்பு ஏற்படாத வகையில் இருக்க

வேண்டும். இது அல்லாஹ்விடமிருந்து வந்த கட்டளையாகும். அல்லாஹ் நன்கறிந்தவனாகவும், சகிப்புத்தன்மையுடையவனாகவும் இருக்கின்றான். *13.* இவை இறைவரம்புகளாகும். அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் கீழ்ப்படிவோரை அவன் சுவனச்சோலைகளில் நுழையச் செய்வான். அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். இதுவே மாபெரும் வெற்றியாகும். *14.* அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் மாறுசெய்து, அவன் விதித்துள்ள வரம்புகளை மீறுபவரை அவன் நெருப்பில் வீசி விடுவான். அதில் அவர் நிரந்தரமாக வீழ்ந்து கிடப்பார். அவருக்கு இழிவுமிக்க வேதனையுண்டு.

*15.* உங்கள் பெண்களில் யாரேனும் மானக்கேடான காரியத்தை செய்துவிட்டால் அதை நிரூபிக்க உங்களிலிருந்து நான்கு ஆண் சாட்சிகளை ஏற்படுத்திக்கொள்ளுங்கள். அவர்கள் சாட்சியம் கூறிவிட்டால் அப்பெண்கள் மரணிக்கும்வரை அல்லது அல்லாஹ் அவர்களுக்கு ஏதேனும் ஒரு வழியை ஏற்படுத்தும்வரை வீட்டிற்குள் அடைத்து வையுங்கள். *16.* அதேபோன்று உங்களில் இரு ஆண்கள் அருவருக்கத்தக்க காரியத்தை செய்துவிட்டால் அவர்களைத் துன்புறுத்துங்கள். அவர்கள் இருவரும் மன்னிப்புக்கோரி தங்களைச் சீர்திருத்திக் கொண்டால் அவர்களை விட்டுவிடுங்கள். நிச்சயமாக அல்லாஹ் பாவமன்னிப்பை ஏற்றுக்கொள்பவனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். *17.* அறியாமையினால் தீய காரியம் செய்துவிட்டு பின்னர் உடனடியாக மன்னிப்புக் கோருகின்றார்களே அவர்களைத்தான் அல்லாஹ் மன்னிப்பான். அல்லாஹ் நன்கறிந்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான். *18.* தொடர்ந்து பாவங்கள் செய்துகொண்டே இருந்து இறுதியில் மரணிக்கும் தருவாயில் “நான் மன்னிப்புக் கோருகிறேன்” என்று கூறுகின்றவர்களுக்கும், நிராகரித்த

நிலையிலேயே மரணமடைபவர்களுக்கும் மன்னிப்புக் கிடையாது. அவர்களுக்காகவே நாம் துன்புறுத்தும் வேதனையைத் தயார்படுத்தி வைத்துள்ளோம்.

*19.* நம்பிக்கையாளர்களே! பெண்களைப் பலவந்தமாக உரித்தாக்கிக் கொள்வது உங்களுக்கு அனுமதிக்கப்பட்டதல்ல. நீங்கள் அவர்களுக்கு வழங்கியவற்றிலிருந்து சிலவற்றை எடுத்துக்கொள்ளும் பொருட்டு அவர்களைத் தடுத்து வைக்காதீர்கள், அவர்கள் பகிரங்கமாக மானக்கேடான காரியத்தை செய்தாலே தவிர. அவர்களுடன் நல்ல முறையில் வாழ்க்கை நடத்துங்கள். நீங்கள் அவர்களை வெறுத்தால் - ஒன்றை நீங்கள் வெறுக்கக்கூடும். அல்லாஹ் அதில் உங்களுக்கு ஏராளமான நன்மைகளை வைத்திருக்கக்கூடும். *20.* நீங்கள் ஒரு மனைவியை விவாகரத்து செய்து வேறொரு மனைவியை மணக்க விரும்பினால் நீங்கள் அவளுக்கு ஏராளமான செல்வங்களை வழங்கியிருந்தாலும் அதிலிருந்து எதையும் திரும்பப் பெறக்கூடாது. நீங்கள் அவதூறு கூறியும், பகிரங்கமாக கொடுமை இழைத்தும் அதனைத் திரும்பப் பெறுவீர்களா என்ன? *21.* அவர்கள் உங்களிடம் உறுதியான வாக்குறுதியைப்பெற்று நீங்கள் ஒருவரோடு ஒருவர் இணைந்து இன்பம் அனுபவித்திருக்கும் நிலையில், நீங்கள் அதனை எவ்வாறு திரும்பப்பெற முடியும்?. *22.* உங்கள் தந்தையர் மணமுடித்துக்கொண்ட பெண்களை நீங்கள் மணந்து கொள்ளாதீர்கள். ஏற்கெனவே நடந்து முடிந்து விட்டதைத் தவிர. நிச்சயமாக இது மானக்கேடான, வெறுக்கத்தக்க மிகவும் தீய செயலாகும்.

*23.* உங்கள் அன்னையர், புதல்வியர், சகோதரிகள், தந்தையின் சகோதரிகள், அன்னையரின் சகோதரிகள், சகோதரனின் புதல்வியர், சகோதரியின் புதல்வியர், உங்களுக்குப் பாலூட்டிய செவிலித் தாய்கள்,

உங்கள் பால்குடி சகோதரிகள், உங்கள் மனைவியரின் அன்னையர், நீங்கள் உடலுறவு கொண்ட மனைவியரின் முந்தைய கணவனுக்குப் பிறந்து உங்கள் பராமரிப்பில் உள்ள புதல்வியர் ஆகியோரைத் திருமணம் செய்வது உங்களுக்குத் தடைசெய்யப்பட்டுள்ளது. ஆனால் உங்கள் வளர்ப்பில் உள்ள புதல்வியரின் அன்னையருடன் இன்னும் நீங்கள் உடலுறவு கொள்ளவில்லையெனில் அவர்களது பெண் மக்களைத் திருமணம் செய்வது உங்கள் மீது குற்றமாகாது. உங்கள் சொந்த மகன்களின் மனைவியரையும், இரண்டு சகோதரிகளை ஒன்றாக சேர்த்து மணமுடிப்பதும் தடுக்கப்பட்டுள்ளது, இதற்குமுன் நடந்து விட்டவற்றைத்தவிர. நிச்சயமாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். **24.** வேறொருவருக்கு மனைவியாக இருக்கும் பெண்களும் உங்களுக்கு தடை செய்யப்பட்டுள்ளனர். ஆயினும் போரில் உங்களால் கைதிகளாகப் பிடிக்கப்பட்டு அடிமையாக்கப்பட்டவர்களைத்தவிர. இது அல்லாஹ் உங்களுக்கு இட்ட கட்டளையாகும். அவர்களைத்தவிர மற்ற எல்லா பெண்களும் உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளார்கள். நீங்கள் உங்கள் செல்வத்தின் மூலம் அவர்களை மணமுடித்து அடைந்து கொள்ளுங்கள்; தகாத உறவில் ஈடுபடக்கூடாது. அவர்களில் நீங்கள் இன்பம் அனுபவித்தவர்களுக்கு நிர்ணயிக்கப்பட்ட மணக்கொடையை அளித்து விடுங்கள். மணக்கொடையை நிர்ணயித்த பின்னர் உங்களிடையே நீங்கள் ஏதேனும் உடன்பாடு செய்துகொண்டால் உங்கள் மீது குற்றம் ஏதுமில்லை. நிச்சயமாக அல்லாஹ் நன்கறிந்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான். **25.** உங்களில் சுதந்திரமான, நம்பிக்கைகொண்ட பெண்களை மணமுடித்துக்கொள்ள வசதியற்றவர்கள் உங்களிடம் உள்ள நம்பிக்கைகொண்ட அடிமைப்பெண்களில் எவரையாவது மணந்துகொள்ளட்டும். அல்லாஹ் உங்கள் நம்பிக்கையை

நன்கறிந்தவனாக இருக்கின்றான். உங்களில் சிலர் சிலரைச் சார்ந்தவர்களே. எனவே அவர்களது உரிமையாளர்களின் அனுமதியுடன் அவர்களை மணந்துகொள்ளுங்கள். நியாயமான முறைப்படி அவர்களுக்குரிய மணக்கொடைகளை அளித்து விடுங்கள். அவர்கள் ஒழுக்கமானவர்களாகவும், மானக்கேடான காரியத்தில் ஈடுபடாதவர்களாகவும் கள்ளக்காதலர்களை ஏற்படுத்திக் கொள்ளாதவர்களாகவும் இருக்க வேண்டும். அவர்கள் திருமண பந்தத்தில் வந்துவிட்டபிறகு அவர்கள் மானக்கேடானவற்றைச் செய்தால் சுதந்திரமான பெண்களுக்கு உள்ள தண்டனையில் பாதி அவர்களுக்கு உண்டு. இது உங்களில் எவர் மானக்கேடான காரியத்தில் விழுந்து விடுவோம் என்று அஞ்சுகிறாரோ அவருக்கே ஆனதாகும். நீங்கள் பொறுமையைக் கடைப்பிடித்தால் அதுவே உங்களுக்கு மிகச் சிறந்ததாகும். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

**26.** அல்லாஹ் உங்களுக்குத் தெளிவாக விளக்கவும், உங்களுக்கு முன்சென்றோரின் வழிமுறைகளைக் காட்டவும், உங்கள்மீது கருணைப் பார்வையை செலுத்தவுமே விரும்புகிறான். அல்லாஹ் நன்கறிந்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான். **27.** அல்லாஹ் உங்கள்மீது கருணைப் பார்வையை செலுத்தவே விரும்புகிறான். ஆனால் தம் மனஇச்சைகளைப் பின்பற்றுபவர்கள் நீங்கள் நேர்வழியைவிட்டு வெகுதூரம் சென்றுவிட வேண்டும் என்று விரும்புகிறார்கள். **28.** அல்லாஹ் உங்கள் மீதுள்ள பாரத்தை குறைக்கவே விரும்புகிறான். ஏனெனில் மனிதன் பலவீனமானவனாகவே படைக்கப்பட்டுள்ளான்.

**29.** நம்பிக்கையாளர்களே! உங்களிடையே இணக்கத்துடன் நடைபெறும் வியாபாரத்தைத்தவிர உங்களின் செல்வங்களை உங்களிடையே தவறான முறையில் உண்ணாதீர்கள். இதற்காக

நீங்கள் ஒருவர் மற்றவரைக் கொலை செய்யாதீர்கள். நிச்சயமாக அல்லாஹ் உங்கள்மீது இணையிலாக் கிருபையாளனாக இருக்கின்றான். 30. எவரேனும் வரம்புமீறி, அநியாயமாக இவ்வாறு செய்தால் அவரை நாம் நெருப்பில் வீசியே தீருவோம். இது அல்லாஹ்வுக்கு மிக எளிதானது. 31. தடுக்கப்பட்டுள்ள பெரும் பாவங்களை விட்டும் நீங்கள் தவிர்ந்து கொண்டால் நாம் உங்களது சிறுபாவங்களை மன்னித்து விடுவோம். உங்களை கண்ணியமான இடத்தில் நுழையச் செய்வோம். 32. அல்லாஹ் உங்களில் சிலரை சிலரைவிட மேன்மையாக்கி வைத்துள்ள விஷயங்களில் ஆசைப்படாதீர்கள். ஆண்களுக்கு அவர்கள் சம்பாதித்ததற்குரிய பங்கு உண்டு. பெண்களுக்கும் அவர்கள் சம்பாதித்தற்குரிய பங்கு உண்டு. அல்லாஹ்விடம் அவனது அருளைக் கேளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் எல்லாவற்றையும் நன்கறிந்தவனாக இருக்கின்றான். 33. தாய்தந்தையர் மற்றும் நெருங்கிய உறவினர் விட்டுச்சென்ற சொத்திலிருந்து ஒவ்வொருவருக்கும் வாரிசுகளை ஏற்படுத்தியுள்ளோம். நீங்கள் உடன்படிக்கை செய்து கொண்டவர்களுக்கு அவர்களுக்குரிய பங்கைக் கொடுத்து விடுங்கள். நிச்சயமாக அல்லாஹ் எல்லாவற்றையும் கண்காணித்துக் கொண்டிருக்கிறான்.

34. ஆண்கள் பெண்களை நிர்வகிப்பவர்கள் ஆவர். இதற்குக் காரணம் அல்லாஹ் சிலரை சிலரைவிட மேன்மையாக்கி வைத்திருப்பதும், ஆண்கள் தங்கள் செல்வத்திலிருந்து அவர்களுக்கு செலவு செய்வதுமேயாகும். எனவே ஒழுக்கமான பெண்கள் கீழ்ப்படிந்து நடப்பார்கள். அல்லாஹ்வின் பாதுகாவல்கொண்டு மறைவானவற்றைப் பாதுகாத்துக் கொள்வார்கள். எந்தப் பெண்களைக் குறித்து அவர்கள் கீழ்ப்படிய மாட்டார்கள் என்று நீங்கள் அஞ்சுகிறீர்களோ அவர்களுக்கு அறிவுரை கூறுங்கள்.

*அவர்களை அவர்களின் படுக்கையில் தனியாக விட்டுவிடுங்கள். அவர்களைத் தண்டியுங்கள். பிறகு அவர்கள் உங்களுக்குக் கீழ்ப்படிந்துவிட்டால் அவர்களுக்கு எதிராக எந்த வழிமுறையையும் தேடாதீர்கள். நிச்சயமாக அல்லாஹ் எல்லாவற்றையும்விட உயர்ந்தவனாகவும் மிகப் பெரியவனாகவும் இருக்கின்றான்.* ***35.*** *கணவன், மனைவிக்கிடையே உறவு முறிந்துவிடுமோ என்று நீங்கள் அஞ்சினால் அவனுடைய உறவினரிலிருந்து ஒரு நடுவரையும் அவளுடைய உறவினரிலிருந்து ஒரு நடுவரையும் ஏற்படுத்திக் கொள்ளுங்கள். இருவரும் சமாதானத்தை விரும்பினால் அல்லாஹ் அவர்களிடையே ஒற்றுமையை ஏற்படுத்திவிடுவான். நிச்சயமாக அல்லாஹ் அனைத்தையும் அறிந்தவனாகவும், தெரிந்தவனாகவும் இருக்கின்றான்.*

***36.*** *அல்லாஹ்வை வணங்குங்கள். அவனுக்கு எதனையும் இணையாக்காதீர்கள். தாய்தந்தையர், உறவினர், அநாதைகள், ஏழைகள், உறவினரான அண்டை வீட்டார், அந்நியரான அண்டை வீட்டார், அருகிலிருக்கும் நண்பர், வழிப்போக்கர், உங்கள் அடிமைகள் ஆகியோருடன் நல்ல முறையில் நடந்து கொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் பெருமையடித்துக் கர்வங்கொள்வோரை நேசிப்பதில்லை.* ***37.*** *அவர்கள் கஞ்சத்தனம் செய்வதுடன் பிற மக்களையும் கஞ்சத்தனம் செய்யுமாறு தூண்டுகிறார்கள். தன் அருளிலிருந்து அல்லாஹ் தங்களுக்கு அளித்தவற்றை அவர்கள் மறைக்கிறார்கள். நிராகரிப்பாளர்களுக்கு இழிவுமிக்க வேதனையை நாம் தயார்படுத்தி வைத்துள்ளோம்.* ***38.*** *தம் செல்வங்களை மக்களுக்குக் காட்டுவதற்காகவே அவர்கள் செலவு செய்கிறார்கள். அல்லாஹ்வின்மீதும், மறுமைநாளின் மீதும் அவர்கள் நம்பிக்கைகொள்வதில்லை. எவருக்கு சாத்தான் நண்பனாகி விடுவானோ - அவன் எவ்வளவு மோசமான நண்பன்!* ***39.*** *அவர்கள்*

அல்லாஹ்வின்மீதும், மறுமைநாளின்மீதும் நம்பிக்கைகொண்டு, அல்லாஹ் அவர்களுக்கு வழங்கியவற்றிலிருந்து செலவு செய்தால் அவர்களுக்கு என்ன கேடு வந்துவிடப்போகிறது? அல்லாஹ் அவர்களை நன்கறிந்தவனாக இருக்கின்றான். 40. நிச்சயமாக அல்லாஹ் எவருக்கும் அணுவளவும் அநீதியிழைக்க மாட்டான். நன்மையாக இருந்தால் அதனை அவன் இரட்டிப்பாக்கி விடுவான். தன்னிடமிருந்து மாபெரும் நன்மைகளையும் வழங்குவான்.

41. நாம் ஒவ்வொரு சமூகத்திலிருந்தும் ஒரு சாட்சியைக் கொண்டு வரும்போதும் உம்மை இவர்களின் மீது சாட்சியாக ஆக்கும்போதும் நிலைமை என்னவாகும்? 42. அந்நாளில் நிராகரித்தவர்களும் தூதருக்கு மாறுசெய்தவர்களும் “பூமி தங்களை ஜீரணித்து விடக்கூடாதா!” என்று ஏங்குவார்கள். அவர்கள் அல்லாஹ்விடம் எந்த விஷயத்தையும் மறைத்துவிட முடியாது. 43. நம்பிக்கையாளர்களே, நீங்கள் கூறுவது உங்களுக்கே விளங்காதவாறு போதையில் இருக்கும்நிலையில் தொழுகையை நெருங்காதீர்கள். (உடலுறவுக்குப்பின்) குளிப்பு அவசியமாக இருக்கும் நிலையிலும் - குளிக்கும்வரை தொழுகையை நெருங்காதீர்கள், ஆயினும் அவ்வழியாக கடந்துசெல்ல வேண்டி வந்தாலே தவிர. நீங்கள் நோயாளியாகவோ, பயணத்திலோ இருந்தால், அல்லது உங்களில் யாராவது மலஜலம் கழித்துவிட்டு வந்தாலோ அல்லது நீங்கள் பெண்களைத் தீண்டியிருந்தாலோ நீங்கள் தண்ணீரைப் பெறவில்லையெனில் சுத்தமான மண்ணால் தயம்மும் செய்து உங்கள் முகங்களையும், கைகளையும் தடவிக்கொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் பிழை பொறுப்பவனாகவும், பெரும் மன்னிப்பாளனாகவும் இருக்கின்றான்.

44. வேதத்திலிருந்து சிறுபகுதி வழங்கப்பட்டோரை நீர் பார்க்கவில்லையா? அவர்கள் வழிகேட்டை விலைக்கு

வாங்குகிறார்கள்; நீங்களும் வழிகெட்டுவிட வேண்டும் என்று விரும்புகிறார்கள். 45. அல்லாஹ் உங்கள் பகைவர்களை நன்கறிவான். பாதுகாப்பதற்கும் அல்லாஹ்வே போதுமானவன், உதவிபுரிவதற்கும் அல்லாஹ்வே போதுமானவன். 46. யூதர்களில் ஒரு பிரிவினர் வேதத்தின் வார்த்தைகளை அவற்றிற்குரிய இடங்களிலிருந்து புரட்டி விடுகின்றனர். “நாங்கள் கேட்டோம். ஆனால் கீழ்ப்படியவில்லை. கேளுங்கள், நீங்கள் கேட்கப்பட மாட்டீர்கள்” என்று கூறுகிறார்கள். மார்க்கத்தைக் குறைகூறி தங்கள் நாவுகளை வளைத்து ‘ராயினா’ (எங்கள் இடையனே) என்றும் கூறுகிறார்கள். “நாங்கள் கேட்டோம். கீழ்ப்படிந்தோம். கேளுங்கள், “உன்ளுர்னா” (எங்களைப் பாருங்கள்)’’ என்று அவர்கள் கூறியிருந்தால் அது அவர்களுக்குச் சிறந்ததாகவும், சீரானதாகவும் அமைந்திருக்கும். ஆயினும் அவர்களின் நிராகரிப்பினால் அல்லாஹ் அவர்களைச் சபித்து விட்டான். எனவே மிகக்குறைவாகவே அன்றி அவர்கள் நம்பிக்கைகொள்ள மாட்டார்கள்.

47. வேதம் வழங்கப்பட்டவர்களே! நாம் முகங்களைச் சிதைத்து, அவற்றை முதுகின் பக்கம் திருப்புவதற்கு முன்பே, அல்லது சனிக்கிழமைக்காரர்களைச் சபித்ததைப் போன்று சபிப்பதற்கு முன்பே நாம் அருளியதன்மீது நம்பிக்கை கொள்ளுங்கள். அது உங்களிடமுள்ளவற்றை உண்மைப்படுத்தக்கூடியதாகும். இறைக்கட்டளை நிறைவேறியே தீரும். 48. நிச்சயமாக அல்லாஹ் தனக்கு இணைவைக்கப்படுவதை மன்னிக்கவே மாட்டான். அதைத்தவிர மற்ற பாவங்களை தான் நாடுவோருக்கு மன்னித்து விடுவான். அல்லாஹ்வுக்கு இணைவைப்பவர் மிகப்பெரும் பாவத்தை செய்தவராவார். 49. தம்மைத்தாமே தூய்மையானவர்கள் என்று கூறுவோரை நீர் பார்க்கவில்லையா? மாறாக தான் நாடியோரை அல்லாஹ்வே தூய்மைப்படுத்துகிறான். அவர்களின்மீது அணுவளவும்

அநீதியிழைக்கப்படாது. **50.** இவர்கள் அல்லாஹ்வின்மீது எவ்வாறு பொய்யைப் புனைகிறார்கள் என்பதைப்பாரும்! பகிரங்கமாக பாவம் செய்வதற்கு இதுவே போதுமானதாகும்.

**51.** வேதத்திலிருந்து சிறுபகுதி வழங்கப்பட்டோரை நீர் பார்க்கவில்லையா? அவர்கள் சூனியம் போன்ற கீழ்த்தரமான பாவங்களையும் சாத்தானிய சக்திகள் மற்றும் தீய ஆவிகளையும் நம்புகிறார்கள். நம்பிக்கையாளர்களைவிட மிகச்சரியான பாதையில் நிராகரிப்பாளர்கள் இருப்பதாக அவர்கள் கூறுகிறார்கள். **52.** இத்தகைய மக்களைத்தான் அல்லாஹ் சபித்துள்ளான். அல்லாஹ் யாரைச் சபித்துள்ளானோ அவர்களுக்கு உதவிபுரிவோர் எவரையும் நீர் காணமாட்டீர். **53.** இறையதிகாரத்தில் இவர்களுக்கும் ஏதாவது பங்கு இருக்கிறதா? அவ்வாறு இருக்குமானால் இவர்கள் மக்களுக்கு எள்ளளவும் எதையும் அளிக்க மாட்டார்கள். **54.** தன் அருளினால் மக்களுக்கு அல்லாஹ் வழங்கியுள்ளதற்காக இவர்கள் பொறாமை கொள்கிறார்களா? நாம் ஆப்ரஹாமின் குடும்பத்தாருக்கு வேதத்தையும், ஞானத்தையும் கொடுத்தோம். நாம் அவர்களுக்கு மாபெரும் அரசாட்சியையும் வழங்கினோம். **55.** அவர்களில் சிலர் அதனை ஏற்றுக்கொண்டனர். சிலர் அதனைப் புறக்கணித்து விட்டனர். இத்தகையோருக்கு நரகத்தின் கொழுந்து விட்டெரியும் நெருப்பே போதுமானதாகும். **56.** நம் சான்றுகளை நிராகரித்தவர்களை நிச்சயம் நாம் நரகத்தில் புகுத்திடுவோம். அவர்களது தோல்கள் கரிந்துவிடும்போதெல்லாம் வேதனையை அனுபவித்துக் கொண்டே இருப்பதற்காக வேறு தோல்களை மாற்றுவோம். நிச்சயமாக அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.

**57.** நம்பிக்கைகொண்டு, நற்செயல்புரிவோரை நாம் சுவனச் சோலைகளில் நுழையச் செய்வோம், அவற்றில் ஆறுகள் ஓடிக்

கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். அங்கே அவர்களுக்குத் தூய்மையான துணைகளும் உண்டு. நாம் அவர்களை அடர்ந்த நிழல்களிலும் நுழையச்செய்வோம். 58. "அடைக்கலமாக அளிக்கப்பட்டவற்றை அவற்றிற்கு உரியவர்களிடம் ஒப்படைத்துவிட வேண்டும்" என்று அல்லாஹ் உங்களுக்குக் கட்டளையிடுகிறான். மக்களிடையே தீர்ப்பு வழங்கினால் நியாயமான முறையில் தீர்ப்பளியுங்கள். அல்லாஹ் உங்களுக்கு நல்ல முறையில் உபதேசிக்கிறான். நிச்சயமாக அல்லாஹ் செவியேற்பவனாகவும், பார்ப்பவனாகவும் இருக்கிறான். 59. நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படியுங்கள். தூதருக்கும் உங்களில் அதிகாரம் உடையோருக்கும் கீழ்ப்படியுங்கள். உங்களிடையே ஏதாவதொரு விஷயத்தில் பிணக்கு ஏற்பட்டால் அதனை அல்லாஹ்விடமும், தூதரிடமும் கொண்டு செல்லுங்கள். நீங்கள் அல்லாஹ்வின் மீதும் மறுமைநாளின் மீதும் நம்பிக்கைகொண்டவர்களாக இருந்தால் இதுவே சரியானதும் சிறந்த முடிவுமாகும். 60. "உமக்கு அருளப்பட்டதையும், உமக்கு முன்னால் அருளப்பட்டதையும் நாங்கள் நம்பிக்கைகொண்டோம்" என்று வாதம்புரிபவர்களை நீர் பார்க்கவில்லையா? ஆனால் அவர்கள் தீர்ப்புக்காக தம் விவகாரங்களை சாத்தானின் பக்கமே கொண்டு செல்ல விரும்புகிறார்கள். எனினும் அவனை நிராகரிக்கும்படியே அவர்கள் ஏவப்பட்டிருந்தார்கள். சாத்தானோ அவர்களை வழிகெடுத்து வெகுதொலைவில் தள்ளிவிட விரும்புகிறான். 61. "அல்லாஹ் அருளியுள்ள வேதத்தின் பக்கமும் தூதரின் பக்கமும் வாருங்கள்" என்று அவர்களிடம் கூறப்பட்டால் நயவஞ்சகர்கள் உம்மை விட்டு விலகிச்செல்வதையே நீர் காண்பீர். 62. அவர்கள் தங்கள் கரங்களால் தேடிக்கொண்ட துன்பங்கள் அவர்களை வந்தடைந்தால் அவர்களது நிலைமை என்னவாகும்? அப்போது அவர்கள் "இறைவன் மீது ஆணையாக, நன்மையையும்,

இணக்கத்தையும் தவிர வேறெதையும் நாங்கள் நாடவில்லை” என்று சத்தியம் செய்தவர்களாக உம்மிடம் வருவார்கள். *63.* அவர்களின் உள்ளங்களில் உள்ளவற்றை அல்லாஹ் நன்கறிவான். எனவே நீர் அவர்களைப் பொருட்படுத்தாமல் அவர்களுக்கு அறிவுரை கூறுவீராக. அவர்களின் உள்ளங்களில் பதிந்து விடும்படியான வார்த்தைகளைக் கூறுவீராக.

*64.* இறைக்கட்டளைப்படி மக்கள் கீழ்ப்படிய வேண்டும் என்பதற்காகவே அன்றி நாம் எந்தத் தூதரையும் அனுப்பவில்லை. மக்கள் தமக்குத்தாமே தீங்கிழைத்துக் கொண்டபோது உம்மிடம் வந்து அல்லாஹ்விடம் மன்னிப்புக்கோரினால், தூதரும் அவர்களுக்காக மன்னிப்புக்கோரினால், நிச்சயமாக அவர்கள் அல்லாஹ்வை பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் காண்பார்கள். *65.* உம் இறைவனின் மீது ஆணையாக, அவர்கள் தங்களுக்கிடையே ஏற்பட்ட சச்சரவுகளில் உம்மை நீதிபதியாக ஏற்று பின்னர் உமது தீர்ப்பைக் குறித்து தங்களது உள்ளங்களில் எவ்வித இறுக்கத்தையும் உணராமல் அதனை மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்ளும்வரை அவர்கள் ஒருபோதும் நம்பிக்கையாளர்களாக முடியாது. *66.* “நீங்கள் உங்களையே கொன்று விடுங்கள் அல்லது உங்கள் வீடுகளை விட்டு வெளியேறி விடுங்கள்” என்று நாம் அவர்களுக்குக் கட்டளையிட்டிருந்தால் அவர்களில் வெகு சிலரே அவ்வாறு செய்திருப்பார்கள். அவர்களுக்கு வழங்கப்பட்ட அறிவுரையின்படி அவர்கள் செயல்பட்டிருந்தால் அது அவர்களுக்குச் சிறந்ததாகவும், நம்பிக்கையை உறுதிப்படுத்துவதாகவும் இருந்திருக்கும். *67.* அப்பொழுது நாம் அவர்களுக்கு நம்மிடமிருந்து மகத்தான கூலியை வழங்கி *68.* நேரான வழியைக் காட்டியிருப்போம். *69.* அல்லாஹ் அருள்புரிந்த தூதர்கள், உண்மையாளர்கள், சாட்சியாளர்கள்,

நல்லோர்கள் ஆகியோருடன் அல்லாஹ்வுக்கும், தூதருக்கும் கீழ்ப்படிகின்றவர்கள் இருப்பார்கள். அவர்களது தோழமை எவ்வளவு சிறப்பானது!. 70. இது அல்லாஹ்வின் அருளாகும். அல்லாஹ்வின் அறிவே போதுமானதாகும்.

71. நம்பிக்கையாளர்களே! நீங்கள் முன்னெச்சரிக்கையாக இருந்து கொள்ளுங்கள். பின்னர் தனித்தனியாகவோ, ஒன்றுசேர்ந்தோ புறப்படுங்கள். 72. உங்களில் பின்தங்கிவிடக்கூடிய சிலரும் இருக்கின்றனர். உங்களுக்கு ஏதேனும் துன்பம் ஏற்பட்டால் "அவர்களுடன் நான் இல்லாமல் இருந்ததனால் அல்லாஹ் என்மீது அருள்புரிந்து விட்டான்" என்று அவர்கள் கூறுகிறார்கள். 73. அல்லாஹ்விடமிருந்து ஏதேனும் அருள் உங்களுக்குக் கிடைத்தால், நிச்சயமாக உங்களுக்கும் அவர்களுக்குமிடையில் எவ்வித நட்பும் இல்லாததுபோல், "நானும் அவர்களுடன் இருந்திருக்கக்கூடாதா! மாபெரும் வெற்றியை பெற்றிருப்பேனே!" என்று அவர்கள் கூறுவார்கள். 74. எனவே மறுமைக்காக இவ்வுலக வாழ்வை விற்றுவிடுபவர்கள் இறைவழியில் போர்புரியட்டும். எவர் இறைவழியில் போரிட்டு அதில் கொல்லப்படுகிறாரோ, அல்லது வெற்றி பெறுகிறாரோ அவருக்கு நாம் பெரும் கூலியை வழங்கிடுவோம்*. 75. பலவீனமான ஆண்கள், பெண்கள், குழந்தைகள் ஆகியோருக்காக இறைவழியில் போர் புரியாமலிருக்க உங்களுக்கென்ன நேர்ந்தது? அவர்களோ, "எங்கள் இறைவா! இந்த ஊரைவிட்டும் எங்களை வெளியேற்றுவாயாக! இதன் குடிமக்கள் அக்கிரமக்காரர்களாக இருக்கிறார்கள். எங்களுக்கு உன்னிடமிருந்து ஒரு பாதுகாவலரை ஏற்படுத்துவாயாக. எங்களுக்கு உன்னிடமிருந்து ஒரு உதவியாளரையும் ஏற்படுத்துவாயாக!" என்று பிரார்த்தனை செய்கிறார்கள். 76. நம்பிக்கையாளர்கள்

---

*முன்னுரையைக் காண்க பக். 19

இறைவழியில் போரிடுவார்கள். நிராகரிப்பாளர்கள் சாத்தானின் பாதையில் போரிடுவார்கள். எனவே நீங்கள் சாத்தானின் கூட்டாளிகளுடன் போரிடுங்கள். நிச்சயமாக சாத்தானின் சூழ்ச்சி மிகவும் பலவீனமானது.

77. “உங்கள் கைகளைத் தடுத்துக் கொள்ளுங்கள். தொழுகையைக் கடைப்பிடித்து கடமையாக்கப்பட்ட தர்மத்தையும் கொடுத்து வாருங்கள்” என்று கூறப்பட்டவர்களை நீர் பார்க்கவில்லையா? பின்னர் அவர்களுக்கு போர் கடமையாக்கப்பட்டபோது அவர்களில் ஒரு பிரிவினர் அல்லாஹ்வுக்கு அஞ்சுவது போன்று, அல்லது அதைவிட அதிகமாக, மக்களுக்கு அஞ்சுகின்றனர். “இறைவா! எங்கள் மீது ஏன் போரை கடமையாக்கினாய்? நீ எங்களுக்கு சிறிது காலம்வரை அவகாசம் அளித்திருக்கக்கூடாதா” என்று அவர்கள் கேட்கிறார்கள். நீர் கூறும்: “இவ்வுலக இன்பம் அற்பமேயாகும். இறையச்சமுடையோருக்கு மறுமையே சிறந்ததாகும். உங்கள்மீது அணுவளவும் அநீதி இழைக்கப்பட மாட்டாது”. 78. நீங்கள் எங்கிருந்தபோதிலும் மரணம் உங்களை அடைந்தே தீரும். நீங்கள் உறுதியான கோட்டைக்குள் இருந்தாலும் சரியே. அவர்களுக்கு ஏதேனும் நன்மை ஏற்பட்டால், “இது அல்லாஹ்விடமிருந்து வந்தது” என்று கூறுகிறார்கள். அவர்களுக்கு ஏதேனும் தீங்கு ஏற்பட்டால், “இது உம்மால்தான் ஏற்பட்டது” என்று கூறுகிறார்கள். நீர் கூறும்: “அனைத்தும் அல்லாஹ்விடமிருந்து வந்தவையே”. இந்த மக்களுக்கு என்ன நேர்ந்தது? எந்த விஷயத்தையும் இவர்கள் புரிந்து கொள்வதாகத் தெரியவில்லையே! 79. உமக்கு ஏதேனும் நன்மை ஏற்பட்டால் அது அல்லாஹ்விடமிருந்து ஏற்பட்டதேயாகும். உமக்கு ஏதேனும் தீங்கு ஏற்பட்டால் அது உம்மால்தான் ஏற்பட்டதாகும். நாம் உம்மை மக்களுக்குத் தூதராக்கி அனுப்பியுள்ளோம். அல்லாஹ்வின் சாட்சியமே போதுமானது.

80. தூதருக்குக் கீழ்ப்படிந்தவர் அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிந்தவராவார். எவரேனும் புறக்கணித்தால் - நாம் உம்மை அவர்களின் மீது கண்காணிப்பாளராக்கி அனுப்பவில்லை. 81. ‘நாங்கள் கீழ்ப்படிந்தோம்’ என்று அவர்கள் கூறுகிறார்கள். ஆனால் உம்மை விட்டுச் சென்றவுடன் அவர்களில் ஒரு பிரிவினர் தாம் கூறியதற்கு மாறாக இரவில் சதித்திட்டம் தீட்டுகின்றனர். அல்லாஹ் அவர்களின் இரகசியத் திட்டங்களைப் பதிவு செய்து கொண்டிருக்கிறான். எனவே அவர்களை நீர் பொருட்படுத்தாமல் அல்லாஹ்வையே சார்ந்திருப்பீராக. சார்ந்திருப்பதற்கு அல்லாஹ்வே போதுமானவன். 82. இவர்கள் இந்த குர்ஆனை ஆராய்ந்து பார்க்க மாட்டார்களா? இது அல்லாஹ்வைத்தவிர வேறொருவரிடமிருந்து வந்திருந்தால் இதில் ஏராளமான முரண்பாடுகளைக் கண்டிருப்பார்கள். 83. அவர்களிடம் அமைதி அல்லது அச்சம் குறித்து ஏதேனும் செய்தி வந்தால் அதனை அவர்கள் பரப்பி விடுகிறார்கள். அதனை அவர்கள் தூதரிடமோ பொறுப்பாளரிடமோ தெரிவித்திருந்தால் அவர்களில் ஆராய்ந்தறிவோர் அதன் உண்மை நிலையினை அறிந்து கொண்டிருப்பார்கள். உங்கள்மீது இறைவனின் அருளும், அவனது கருணையும் இல்லாதிருக்குமானால் உங்களில் சிலரைத் தவிர அனைவரும் சாத்தானைப் பின்பற்றியிருப்பீர்கள்.

84. எனவே நீர் இறைவழியில் போர் புரிவீராக. உம்மைத்தவிர வேறு யாருக்கும் நீர் பொறுப்பாளியல்லர். நம்பிக்கையாளர்களுக்கு ஆர்வமூட்டுவீராக. நிராகரிப்பாளர்களின் பலத்தை அல்லாஹ் முறித்து விடக்கூடும். அல்லாஹ் வல்லமை மிக்கவனாகவும், கடுந்தண்டனையளிப்பவனாகவும் இருக்கின்றான். 85. எவர் நல்ல விஷயத்திற்காகப் பரிந்துரை செய்கிறாரோ அவருக்கு அதில் பங்கு உண்டு. எவர் தீய விஷயத்திற்காகப் பரிந்துரை செய்கிறாரோ அவருக்கும் அதில் பங்கு உண்டு. அல்லாஹ் எல்லாவற்றின்மீதும்

*பேராற்றலுடையவன். **86.** உங்களுக்கு யாராவது முகமன் கூறினால் அதைவிட சிறந்த முறையில் நீங்கள் பதில் கூறுங்கள் அல்லது அதையே திருப்பிக் கூறுங்கள். நிச்சயமாக அல்லாஹ் ஒவ்வொரு விஷயத்திற்கும் கணக்கு தீர்ப்பவனாக இருக்கின்றான். **87.** அல்லாஹ் - அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. உங்கள் அனைவரையும் அவன் மறுமைநாளில் ஒன்று திரட்டுவான். அந்நாள் வருவதில் எத்தகைய சந்தேகமுமில்லை. அல்லாஹ்வின் சொல்லைவிட உண்மையான சொல் வேறு யாருடையதாக இருக்க முடியும்?*

***88.** உங்களுக்கு என்ன ஆயிற்று? நயவஞ்சகர்களின் விஷயத்தில் நீங்கள் இரு பிரிவினராகி விட்டீர்களே! அல்லாஹ் அவர்களின் செயல்களினால் அவர்களைத் தலைகுனியும்படிச் செய்துவிட்டான். அல்லாஹ் வழிதவறச்செய்து விட்டவர்களை நேர்வழிக்குக் கொண்டுவர நீங்கள் விரும்புகிறீர்களா? எவரை அல்லாஹ் வழிதவறச் செய்து விட்டானோ அவருக்கு எவ்வித வழியையும் நீர் காண மாட்டீர். **89.** அவர்கள் நிராகரிப்பாளர்களாகிவிட்டதைப்போன்று நீங்களும் நிராகரிப்பாளர்களாகிவிட வேண்டும், நீங்கள் அனைவரும் நிராகரிப்பில் சமமாகிவிட வேண்டும் என்று அவர்கள் விரும்புகிறார்கள். எனவே அவர்கள் இறைவழியில் புலம்பெயரும்வரை அவர்களில் யாரையும் நீங்கள் நண்பர்களாக்கிக் கொள்ளவேண்டாம். அவர்கள் புறக்கணித்தால் அவர்களை எங்கு கண்டாலும் (கைதியாகப்) பிடியுங்கள். (கைதாகாமல் தப்ப முயற்சிப்பவர்களை) கொன்று விடுங்கள். அவர்களில் யாரையும் நண்பராகவோ, உதவியாளராகவோ ஆக்கிக்கொள்ளாதீர்கள்**, **90.** ஆயினும் நீங்கள் உடன்படிக்கை செய்துகொண்டுள்ள சமூகத்துடன் தொடர்பு கொண்டுள்ளவர்களைத் தவிர.*

---

*முன்னுரையைக் காண்க. பக். 19

அல்லது உங்களுடன் போர்புரியவோ, தம் சமூகத்துடன் போர்புரியவோ மனமில்லாமல் உங்களிடம் வருபவர்களைத் தவிர. அல்லாஹ் நாடியிருந்தால் அவர்களை உங்கள் மீது ஆதிக்கம் செலுத்த வைத்திருப்பான். அவர்களும் உங்களுடன் போரிட்டிருப்பார்கள். எனவே அவர்கள் உங்களை விட்டு விலகி உங்களுடன் போர்புரியாமல் சமாதானத்தைக் கடைப்பிடித்தால் அல்லாஹ் அவர்களுக்கெதிராகச் செயலாற்றுவதற்கு உங்களுக்கு அனுமதியளிக்க மாட்டான். **91.** அடுத்து வேறு சிலரையும் நீங்கள் காண்பீர்கள். அவர்கள் உங்களிடமும் பாதுகாப்புப் பெற வேண்டும், தங்கள் சமூகத்தாரிடமும் பாதுகாப்புப் பெற வேண்டும் என்று விரும்புகிறார்கள். ஆனால் அவர்கள் கலகம் விளைவிக்கின்ற வாய்ப்பைப் பெறும்போதெல்லாம் அதில் தீவிரமாக இறங்கி விடுவார்கள். இத்தகையோர் உங்களுடன் இணக்கமாக இல்லாமலும், உங்களுடன் சமாதானத்தை வேண்டாமலும், (உங்களுடன் போர் புரிவதிலிருந்து) தம் கைகளைத் தடுத்துக் கொள்ளாமலும் இருந்தால் அவர்களைப் பிடியுங்கள்; அவர்களை எதிர்கொள்ளும் இடங்களில் கொன்று விடுங்கள். இவர்களுக்கு எதிராக நாம் உங்களுக்குத் தெளிவான ஆதாரத்தைத் தந்துள்ளோம்.

**92.** நம்பிக்கையாளரைக் கொலை செய்வது ஒரு நம்பிக்கையாளரின் செயலல்ல. ஆனால் தவறுதலாக அவ்வாறு நடைபெற்று விட்டாலே தவிர. எவர் தவறுதலாக ஒரு நம்பிக்கையாளரைக் கொன்றுவிடுவாரோ அவர் நம்பிக்கைகொண்ட ஒரு அடிமையை விடுதலை செய்து கொல்லப்பட்டவரின் வாரிசுதாரர்களுக்கு இழப்பீட்டையும் அளித்துவிட வேண்டும், ஆனால் அவர்கள் அதை மன்னித்துவிட்டாலேதவிர! கொல்லப்பட்டவர் உங்கள் எதிரி சமூகத்தைச் சார்ந்தவராகவும் நம்பிக்கையாளராகவும் இருந்தால் ஒரு நம்பிக்கைகொண்ட

அடிமையை விடுதலை செய்துவிட வேண்டும். கொல்லப்பட்டவர் உங்களுடன் உடன்படிக்கை செய்துகொண்ட சமூகத்தைச் சார்ந்தவராக இருந்தால் அவரது வாரிசுதாரர்களுக்கு இழப்பீட்டை அளித்து நம்பிக்கைகொண்ட ஒரு அடிமையையும் விடுதலை செய்துவிட வேண்டும். அடிமையைப் பெறாதவர் இரண்டு மாதங்கள் தொடர்ந்து (இடைவிடாமல்) நோன்பு நோற்க வேண்டும். இதுவே அல்லாஹ் அளிக்கும் பாவமன்னிப்பாகும். அல்லாஹ் நன்கறிந்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான். *93.* ஒரு நம்பிக்கையாளரை வேண்டுமென்றே கொலை செய்பவனுக்குரிய தண்டனை நரகமேயாகும். அதில் அவன் என்றென்றும் வீழ்ந்து கிடப்பான். அவன் மீது இறைவனின் கோபமும், இறைவனின் சாபமும் உண்டாகும். அல்லாஹ் அவனுக்கு மாபெரும் வேதனையைத் தயார்படுத்தி வைத்துள்ளான்.

*94.* நம்பிக்கையாளர்களே! இறைவழியில் நீங்கள் பயணம் செய்தால் தெளிவாக ஆராய்ந்து கொள்ளுங்கள். யாராவது உங்களுக்கு முகமன் கூறினால் அவரிடம் “நீர் நம்பிக்கையாளர் அல்லர்” என்று கூறிவிடாதீர்கள். நீங்கள் இவ்வுலகப் பொருட்களை விரும்பினால் அல்லாஹ்விடம் ஏராளமான பொருட்கள் இருக்கின்றன. நீங்களும் முன்பு இவ்வாறுதான் இருந்தீர்கள். அல்லாஹ் உங்கள்மீது அருள்புரிந்தான். எனவே ஆராய்ந்து கொள்ளுங்கள். நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவனாகவே இருக்கின்றான். *95.* தக்க காரணம் எதுவுமின்றி இறைவழியில் பாடுபடாமல் அமர்ந்திருக்கும் நம்பிக்கையாளர்களும், இறைவழியில் தங்கள் செல்வங்களாலும், உயிர்களாலும் பாடுபடுபவர்களும் சமமாக மாட்டார்கள். அல்லாஹ் தங்கள் செல்வங்களாலும், உயிர்களாலும் பாடுபடுபவர்களின் அந்தஸ்தை (அப்படி பாடுபடாமல்) வெறுமனே இருப்பவர்களைவிட உயர்த்தியுள்ளான். அல்லாஹ்

ஒவ்வொருவருக்கும் நன்மையையே வாக்களித்துள்ளான். அல்லாஹ் பாடுபடுபவர்களுக்கு வெறுமனே இருப்பவர்களைவிட மகத்தான நன்மையை வழங்கியுள்ளான். 96. அவர்களுக்கு அல்லாஹ்விடமிருந்து உயர்ந்த அந்தஸ்தும், மன்னிப்பும், கருணையும் உண்டு. அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

97. தமக்குத்தாமே தீங்கிழைத்துக் கொண்டவர்களின் உயிர்களை வானவர்கள் கைப்பற்றும்போது, “நீங்கள் எந்நிலையில் இருந்தீர்கள்?” என்று கேட்பார்கள். “நாங்கள் பூமியில் பலவீனர்களாக இருந்தோம்” என்று அவர்கள் கூறுவார்கள். அல்லாஹ்வின் பூமி விசாலமானதாக இருக்கவில்லையா? அதில் நீங்கள் புலம்பெயர்ந்து போயிருக்கலாம் அல்லவா? என்று கேட்பார்கள். இவர்களின் இருப்பிடம் நரகமாகும். அது மிகவும் கெட்ட இருப்பிடமாகும். 98. ஆனால் எவ்வித உபாயத்தையும் வழியையும் பெறாத பலவீனமான ஆண்கள், பெண்கள், மற்றும் குழந்தைகளைத்தவிர. 99. அவர்களை அல்லாஹ் மன்னித்து விடக்கூடும். அல்லாஹ் பிழைகளைப் பொறுப்பவனாகவும், பெரும் மன்னிப்பாளனாகவும் இருக்கின்றான். 100. இறைவழியில் புலம்பெயர்பவர் பூமியில் எண்ணற்ற புகலிடங்களையும், விசாலத்தையும் பெறுவார். எவர் தம் வீட்டிலிருந்து அல்லாஹ்வையும் அவனது தூதரையும் நோக்கி புலம்பெயர்ந்தவராக புறப்பட்ட பின்னர் அவருக்கு மரணம் ஏற்பட்டுவிட்டால் அவரது கூலி அல்லாஹ்விடத்தில் உறுதியாகி விட்டது. அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

101. பூமியில் பயணம் செய்யும்போது நிராகரிப்பாளர்கள் உங்களுக்குத் தொல்லை தருவார்கள் என்று நீங்கள் அஞ்சினால் தொழுகையைச் சுருக்கிக்கொள்வது உங்கள் மீது குற்றமாகாது.

நிச்சயமாக நிராகரிப்பாளர்கள் உங்களுக்கு வெளிப்படையான எதிரிகளாக இருக்கிறார்கள். **102.** நீர் நம்பிக்கையாளர்களிடையே இருந்து அவர்களுக்குத் தொழுகை நடத்தினால் அவர்களில் ஒரு பிரிவினர் உம்முடன் நிற்கட்டும். அவர்கள் தம் ஆயுதங்களையும் தயாராக வைத்துக் கொள்ளட்டும். சிரம்பணிந்தபின் அவர்கள் உம்மை விட்டுச் சென்றுவிடட்டும். தொழாமல் இருக்கும் அடுத்த பிரிவினர் வந்து உம்முடன் தொழுது கொள்ளட்டும். அவர்களும் தம்முடன் பாதுகாப்புக்குரிய ஆயுதங்களை வைத்திருக்கட்டும். நீங்கள் உங்கள் ஆயுதங்களையும் தளவாடங்களையும் விட்டு கவனமற்று இருக்கும் நேரத்தில் திடீரென உங்களைத் தாக்கிவிட நிராகரிப்பாளர்கள் நாடுகின்றார்கள். ஆயினும் மழையால் உங்களுக்கு ஏதேனும் சிரமம் இருந்தாலோ, நீங்கள் நோயாளியாக இருந்தாலோ உங்கள் ஆயுதங்களைக் களைந்துவிடுவது உங்கள் மீது குற்றமாகாது. எனினும் எச்சரிக்கையாக இருங்கள். நிச்சயமாக அல்லாஹ் நிராகரிப்பாளர்களுக்கு இழிவுமிக்க வேதனையைத் தயார்படுத்தி வைத்துள்ளான். **103.** நீங்கள் தொழுகையை நிறைவேற்றி விட்டால் நின்றவாறும், அமர்ந்தவாறும், படுத்தவாறும் அல்லாஹ்வை நினைவுகூருங்கள். அச்சம் நீங்கி அமைதி ஏற்பட்டுவிட்டால் நீங்கள் தொழுகையை நிலைநிறுத்துங்கள். நிச்சயமாக தொழுகை நம்பிக்கையாளர்களின்மீது நேரங்குறிக்கப்பட்ட கடமையாகும். **104.** பகைவர்களை விரட்டிச்செல்வதில் தளர்ந்து விடாதீர்கள். நீங்கள் துன்பப்படுகிறீர்கள் என்றால் அவர்களும் உங்களைப்போன்றே துன்பப்படுகிறார்கள். ஆனால் அல்லாஹ்விடமிருந்து அவர்கள் எதிர்பார்க்காததை நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள். அல்லாஹ் நன்கறிந்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.

**105.** அல்லாஹ் உமக்கு காட்டிய முறைப்படி மக்களிடையே நீர் தீர்ப்பு வழங்குவதற்காக இவ்வேதத்தை நாம் சத்தியத்துடன்

*உமக்கு அருளியுள்ளோம். எனவே நீர் துரோகிகளுக்கு ஆதரவாக வாதாடுபவராக ஆகிவிடாதீர். **106.** அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருவீராக. நிச்சயமாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். **107.** தமக்குத்தாமே துரோகம் இழைப்பவர்களுக்காக நீர் வாதிடாதீர். பாவிகளையும் துரோகிகளையும் அல்லாஹ் நேசிப்பதில்லை. **108.** அவர்கள் மக்களுக்கு வெட்கப்படுகிறார்கள். ஆனால் அல்லாஹ்வுக்கு வெட்கப்படுவதில்லை. அவனுக்கு விருப்பமில்லாத பேச்சுக்களை அவர்கள் இரகசியமாகப் பேசும்போது அவன் அவர்களுடனேயே இருக்கின்றான். அவர்கள் செய்பவற்றை அல்லாஹ் சூழ்ந்தவனாக இருக்கின்றான்.*

***109.** நீங்கள் இவ்வுலக வாழ்க்கையில் அவர்களுக்காக வாதாடி விட்டீர்கள். ஆனால் மறுமைநாளன்று அவர்களுக்காக அல்லாஹ்விடம் யார் வாதாடுவார்? அல்லது அவர்களுக்கு பொறுப்பேற்பவர் யார்? **110.** குற்றம் புரிந்துவிட்டு அல்லது தமக்குத்தாமே அநீதி இழைத்துவிட்டு பின்னர் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருபவர் அல்லாஹ்வை பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் காண்பார். **111.** பாவம் செய்பவர் தமக்குக் கேடாகவே அதனைச் செய்கிறார். அல்லாஹ் நன்கறிந்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான். **112.** ஒரு தவறையோ, பாவத்தையோ செய்துவிட்டு அதன் பழியை குற்றமற்ற ஒருவரின் மீது சுமத்திவிடுபவர் பெரும் அவதூறையும், பகிரங்கமான பாவத்தையும் தம் தலையில் சுமந்தவராவார். **113.** அல்லாஹ்வின் அருளும், அவனது கருணையும் உம்மீது இல்லாதிருக்குமானால் - அவர்களில் ஒரு பிரிவினர் உம்மை வழிகெடுத்தே தீர வேண்டும் என்று நாடியிருந்தார்கள். ஆனால் அவர்கள் தம்மைத்தாமே வழிகெடுத்துக் கொண்டார்கள்.*

அவர்கள் உமக்கு எந்தத் தீங்கையும் இழைத்துவிட முடியாது. அல்லாஹ் உமக்கு வேதத்தையும், ஞானத்தையும் அருளியுள்ளான். நீர் அறிந்திராதவற்றையும் அவன் உமக்கு கற்றுக்கொடுத்துள்ளான். அல்லாஹ் உம்மீது பேரருள் புரிந்துள்ளான்.

*114.* தானதர்மம் செய்யத் தூண்டுதல், நன்மையை ஏவுதல், மக்களிடையே நல்லிணக்கத்தை ஏற்படுத்துதல் ஆகியவற்றிற்காகப் பேசப்படும் இரகசியப் பேச்சுக்களைத் தவிர அவர்களின் பெரும்பாலான இரகசியப் பேச்சுகளில் எவ்வித நன்மையும் இல்லை. இறைதிருப்தியை நாடி அவ்வாறு செய்பவருக்கு நாம் பெரும் கூலியை வழங்கிடுவோம். *115.* தமக்கு நேர்வழி தெளிவான பின்னரும் தூதருக்கு மாறுசெய்து நம்பிக்கையாளர்களின் பாதையை விட்டு வேறொரு பாதையில் செல்பவரை நாம் அவர் சென்ற திசையிலேயே செலுத்தி நரகத்தில் சேர்த்திடுவோம். அது மிகவும் கெட்ட இருப்பிடமாகும்.

*116.* நிச்சயமாக அல்லாஹ் தனக்கு இணைவைக்கப்படுவதை மன்னிக்கவே மாட்டான். அதைத்தவிர மற்ற பாவங்களை தான் நாடியோருக்கு மன்னித்து விடுகிறான். எவர் அல்லாஹ்வுக்கு இணைவைக்கிறாரோ அவர் தூரமான வழிகேட்டில் வீழ்ந்து விட்டார். *117.* அல்லாஹ்வை விடுத்து பெண் (தேவதை)களையும் வரம்புமீறிய சாத்தானையுமே அவர்கள் அழைக்கிறார்கள். *118.* அல்லாஹ் அவனைச் சபித்துள்ளான். அவன் அல்லாஹ்விடம், “உன் அடியார்களில் கணிசமான எண்ணிக்கையினரை நான் எடுத்தே தீருவேன். *119.* அவர்களை நான் வழிகெடுப்பேன்; அவர்களுக்கு ஆசையூட்டுவேன்; தங்கள் கால்நடைகளின் காதுகளை அறுக்கும்படி கட்டளையிடுவேன். அதன்படி அவர்கள் அறுப்பார்கள். அல்லாஹ்வின் படைப்பை மாற்றும்படி கட்டளையிடுவேன். அதன்படி அவர்கள் மாற்றுவார்கள்” என்று

கூறினான். அல்லாஹ்வை விடுத்து சாத்தானை தன் நண்பனாக்கிக் கொள்பவர் பகிரங்கமான இழப்பில் வீழ்ந்து விட்டவராவார். **120.** அவன் அவர்களுக்கு வாக்குறுதியளிக்கிறான்; ஆசையூட்டுகிறான். சாத்தானின் வாக்குறுதிகள் அனைத்தும் ஏமாற்றமே அன்றி வேறில்லை. **121.** அத்தகையோரின் தங்குமிடம் நரகமேயாகும். அதிலிருந்து தப்புவதற்கான எந்த வழியையும் அவர்கள் காணமாட்டார்கள். **122.** நம்பிக்கைகொண்டு நற்செயல்புரிவோரை நாம் சொர்க்கச்சோலைகளில் நுழையச் செய்வோம். அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானது. தன் சொல்லில் அல்லாஹ்வைவிட உண்மையாளர் வேறு யார்?

**123.** உங்கள் விருப்பப்படியோ, வேதக்காரர்களின் விருப்பப்படியோ அல்ல. தீமை செய்தவர் அதற்குரிய தண்டனையைப் பெறுவார். அவர் அல்லாஹ்வைத்தவிர வேறு எவரையும் பொறுப்பாளனாகவோ, உதவுபவனாகவோ காணமாட்டார். **124.** ஆணாயினும், பெண்ணாயினும் நம்பிக்கைகொண்ட நிலையில் நற்செயல்கள் புரிந்தவர்கள் சொர்க்கம் புகுவார்கள். அவர்கள் மீது அணுவளவும் அநீதி இழைக்கப்பட மாட்டாது. **125.** எவர் அல்லாஹ்விற்கு முற்றிலும் அடிபணிந்து நற்செயல்புரிபவராக, முழுமையான நம்பிக்கைகொண்ட ஆப்ரஹாமின் மார்க்கத்தைப் பின்பற்றுவாரோ அவரைவிட அழகிய மார்க்கத்தை உடையவர் யார்? அல்லாஹ் ஆப்ரஹாமை தன் நண்பனாக ஆக்கிக்கொண்டான். **126.** வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்வுக்கே உரியன. அனைத்தும் அல்லாஹ்வின் கட்டுப்பாட்டில்தான் உள்ளது.

**127.** பெண்களைக் குறித்து மக்கள் உம்மிடம் கேட்கிறார்கள். “அவர்களைக் குறித்தும், அநாதைப் பெண்களுக்கு அளிக்க

*வேண்டியதை நீங்கள் அவர்களுக்கு வழங்காது அவர்களை மணந்து கொள்வதிலும், பலவீனமான சிறார்கள் குறித்தும், அநாதைகளுடன் நீதத்தோடு நடந்து கொள்வதைக் குறித்தும் இவ்வேதத்தில் உங்களுக்குப் பரிந்துரைக்கப்பட்டவற்றிலும் அல்லாஹ் உங்களுக்கு கட்டளையிடுகிறான். நீங்கள் எந்த ஒரு நன்மையைச் செய்தாலும் அதனை அல்லாஹ் நன்கறியக்கூடியவன்". 128. ஒரு பெண் "தன் கணவன் தன்னை வெறுத்து விடுவான், அல்லது புறக்கணித்து விடுவான்" என்று அஞ்சினால் அவ்விருவரும் தங்களிடையே ஏதேனும் ஒரு சமாதானத்தை ஏற்படுத்திக் கொள்வது குற்றமாகாது. சமாதானமே சிறந்ததாகும். பேராசை மனித இயல்பில் கலந்துள்ளது. நீங்கள் நல்ல முறையில் நடந்து இறையச்சத்தோடு செயல்பட்டீர்களானால் - நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவனாக இருக்கின்றான். 129. நீங்கள் என்னதான் விரும்பினாலும் மனைவியருக்கு மத்தியில் ஒருபோதும் நீதி செலுத்த முடியாது. ஆகவே ஒருத்தியின் பக்கம் சாய்ந்து அடுத்தவளை அந்தரத்தில் தொங்கவிடப்பட்டவள்போல் ஆக்கிவிடாதீர்கள். நீங்கள் சமாதானம் செய்து இறையச்சத்துடன் நடந்தால் (அறிந்துகொள்ளுங்கள்) அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். 130. அவர்கள் இருவரும் பிரிந்துவிட்டால் தன் தாராளத்தன்மையினால் அல்லாஹ் ஒவ்வொருவரையும் தேவையற்றவராக ஆக்கிவிடுவான். அல்லாஹ் தாராளமானவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.*

*131. வானங்களிலும், பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்வுக்கே உரியன. உங்களுக்கு முன் வேதம் வழங்கப்பட்டோருக்கும், உங்களுக்கும் "அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்" என்றே கட்டளையிடப்பட்டுள்ளது. நீங்கள் நிராகரித்தால் (அறிந்துகொள்ளுங்கள்) வானங்களிலும் பூமியிலும்*

உள்ளவை யாவும் அல்லாஹ்வுக்கே உரியவையாகும். அல்லாஹ் தேவையற்றவனாகவும், புகழுக்குரியவனாகவும் இருக்கின்றான். *132.* வானங்களிலும், பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்வுக்கே உரியன. சார்ந்திருப்பதற்கு அல்லாஹ்வே போதுமானவன். *133.* மனிதர்களே! அவன் நாடினால் உங்கள் அனைவரையும் அகற்றிவிட்டு மற்றவர்களைக் கொண்டு வருவான். இவ்வாறு செய்வதற்கு அல்லாஹ் முழு ஆற்றலுடையவன். *134.* எவர் இவ்வுலக நன்மையை விரும்புகிறாரோ (அவர் அறிந்துகொள்ளட்டும்) அல்லாஹ்விடம் இவ்வுலக நன்மையும், மறுமையின் நன்மையும் உள்ளன. அல்லாஹ் செவியேற்பவனாகவும், பார்ப்பவனாகவும் இருக்கின்றான்.

*135.* நம்பிக்கையாளர்களே! நீதியைக் கடைப்பிடிப்பவர்களாகவும் அல்லாஹ்வுக்காக சான்று பகர்பவர்களாகவும் ஆகிவிடுங்கள். அது உங்களுக்கோ, உங்கள் தாய்தந்தையருக்கோ, உறவினர்களுக்கோ பாதகமாக இருந்தாலும் சரியே. அவர் செல்வந்தராக அல்லது ஏழையாக இருந்தால் - உங்களைவிட அல்லாஹ்வே அவ்விருவருக்கும் நலம்விரும்பியாக இருக்கின்றான். எனவே நீங்கள் மனஇச்சையைப் பின்பற்றி நீதியை விட்டு விலகிவிடாதீர்கள். நீங்கள் தவறிவிட்டாலோ, புறக்கணித்து விட்டாலோ - நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் அறிந்தவனாக இருக்கின்றான்.

*136.* நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வின் மீதும், அவனது தூதரின் மீதும், அவன் தன் தூதருக்கு அருளியுள்ள வேதத்தின் மீதும், அவன் முன்னர் அருளியுள்ள வேதங்களின் மீதும் நம்பிக்கைகொள்ளுங்கள். எவர் அல்லாஹ்வையும், அவனது வானவர்களையும், அவனது வேதங்களையும், அவனது தூதர்களையும், மறுமைநாளையும் நிராகரிக்கின்றாரோ அவர் வழிதவறி வெகுதூரம்

சென்றுவிட்டவராவார். **137.** நிச்சயமாக நம்பிக்கைகொண்டு பின்னர் நிராகரித்து பின்னர் நம்பிக்கைகொண்டு, மீண்டும் நிராகரித்து பின்னர் அந்நிராகரிப்பிலேயே மூழ்கிவிடுபவர்களை அல்லாஹ் மன்னிக்கவே மாட்டான். அவர்களுக்கு நேர்வழியும் காட்ட மாட்டான். **138.** "நயவஞ்சகர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு" எனும் நற்செய்தியைக் கூறிவிடுவீராக. **139.** அவர்கள் நம்பிக்கையாளர்களை விடுத்து நிராகரிப்பாளர்களை நண்பர்களாக ஆக்கிக்கொள்பவர்கள். இவர்கள் அவர்களிடம் கண்ணியத்தைத் தேடுகிறார்களா? கண்ணியம் அனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியது.

**140.** இறைவசனங்கள் நிராகரிக்கப்படுவதையும், பரிகாசம் செய்யப்படுவதையும் நீங்கள் செவியுற்றால் அதை விட்டுவிட்டு அவர்கள் வேறுபேச்சில் மூழ்கும்வரை அவர்களுடன் நீங்கள் அமர வேண்டாம் என்று அல்லாஹ் இந்த வேதத்தில் கட்டளையிட்டுள்ளான். இல்லையெனில் நீங்களும் அவர்களைப்போன்று ஆகிவிடுவீர்கள். நயவஞ்சகர்களையும், நிராகரிப்பாளர்களையும் அல்லாஹ் நரகத்தில் ஒன்று சேர்ப்பவனாக இருக்கின்றான். **141.** அந்த நயவஞ்சகர்கள் உங்களுக்கு என்ன நேரப்போகிறது என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். உங்களுக்கு அல்லாஹ்விடமிருந்து ஏதேனும் வெற்றி கிடைத்தால் "நாங்களும் உங்களுடன் இருக்கவில்லையா?" என்று கேட்கிறார்கள். நிராகரிப்பாளர்களுக்கு ஏதேனும் ஒருபங்கு கிடைத்துவிட்டால், "நாங்கள் உங்களுக்கெதிராகப் போர்புரிவதற்கு ஆற்றல் பெற்றிருந்தும் உங்களை நம்பிக்கையாளர்களிடமிருந்து காப்பாற்றவில்லையா?" என்று அவர்களிடம் கேட்பார்கள். மறுமைநாளில் அல்லாஹ்வே உங்களிடையே தீர்ப்பளிப்பான். அல்லாஹ் ஒருபோதும் நம்பிக்கையாளர்களுக்கு எதிராக நிராகரிப்பாளர்களுக்கு எந்த வழியையும் ஏற்படுத்த மாட்டான்.

*142.* இந்நயவஞ்சகர்கள் அல்லாஹ்வை ஏமாற்ற எண்ணுகிறார்கள். ஆனால் அவன்தான் அவர்களை ஏமாற்றத்தில் ஆழ்த்தியுள்ளான். அவர்கள் தொழுகையில் நிற்கும்போது வேண்டா வெறுப்புடன், மக்களுக்குக் காட்டுவதற்காகவே நிற்கிறார்கள். அவர்கள் அல்லாஹ்வை மிகக்குறைவாகவே நினைவுகூருகிறார்கள். *143.* அவர்கள் அங்கும் இல்லாமல், இங்கும் இல்லாமல், இரண்டிற்குமிடையே ஊசலாடிக் கொண்டிருக்கிறார்கள். எவரை அல்லாஹ் வழிதவறச் செய்துவிடுகிறானோ நீர் அவருக்காக எந்த வழியையும் காணமாட்டீர். *144.* நம்பிக்கையாளர்களே, நீங்கள் நம்பிக்கையாளர்களை விடுத்து (உங்களுடன் போரிடும்) நிராகரிப்பாளர்களை உங்கள் நண்பர்களாக்கிக் கொள்ளாதீர்கள். உங்களுக்கு எதிராக அல்லாஹ்விடம் தெளிவான ஆதாரத்தை ஏற்படுத்திக்கொள்ள நீங்கள் விரும்புகிறீர்களா? *145.* நிச்சயமாக நயவஞ்சகர்கள் நரகத்தின் அடித்தளத்தில்தான் இருப்பார்கள். அவர்களுக்கு உதவிசெய்வோர் எவரையும் நீர் காணமாட்டீர். *146.* ஆயினும் மன்னிப்புக்கோரி, தம்மைச் சீர்திருத்திக்கொண்டு அல்லாஹ்வை உறுதியாகப் பற்றிப்பிடித்துக் கொண்டவர்களும், தங்கள் மார்க்கத்தை அல்லாஹ்வுக்கு உரித்தாக்கி கொண்டவர்களும் நம்பிக்கையாளர்களுடன் இருப்பார்கள். அல்லாஹ் நம்பிக்கையாளர்களுக்கு நற்கூலி வழங்குவான். *147.* நீங்கள் நன்றி செலுத்துபவர்களாகவும், நம்பிக்கையாளர்களாகவும் இருந்தால் அல்லாஹ் உங்களுக்கு வேதனையை அளித்து என்ன செய்யப்போகிறான்? அல்லாஹ் நன்றியை அங்கீகரிப்பவனாகவும், அனைத்தையும் அறிந்தவனாகவும் இருக்கின்றான்.

*148.* அநீதி இழைக்கப்பட்டவரைத்தவிர வேறுயாரும் தீய வார்த்தையை பகிரங்கமாகக் கூறுவதை அல்லாஹ் விரும்புவதில்லை. அல்லாஹ் செவியேற்பவனாகவும், நன்கறிந்தவனாகவும்

இருக்கின்றான். *149.* நீங்கள் நன்மையை வெளிப்படுத்தினாலும் அல்லது அதனை மறைத்துக்கொண்டாலும் அல்லது தீமையை மன்னித்துவிட்டாலும் - அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், பேராற்றலுடையவனாகவும் இருக்கின்றான். *150.* அல்லாஹ்வையும், அவனது தூதர்களையும் நிராகரித்து அல்லாஹ்வுக்கும் அவனது தூதர்களுக்குமிடையே வேற்றுமை பாராட்டுபவர்கள், "நாங்கள் சிலரை ஏற்றுக்கொள்வோம், சிலரை ஏற்றுக்கொள்ள மாட்டோம்" என்று கூறுபவர்கள் அந்த வேற்றுமைகளுக்கிடையில்(அவர்களின் மனஇச்சைப்படி) ஒரு நிலைப்பாட்டை எடுக்க விரும்புகிறார்கள். *151.* இவர்கள்தான் உண்மையில் நிராகரிப்பாளர்கள். நாம் நிராகரிப்பாளர்களுக்காக இழிவுமிக்க வேதனையைத் தயார்படுத்தி வைத்துள்ளோம். *152.* அல்லாஹ்வின் மீதும் அவனது தூதர்களின் மீதும் நம்பிக்கைகொண்டு அவர்களிடையே பாரபட்சம் காட்டாதவர்களுக்கு அல்லாஹ் அவர்களுக்குரிய கூலிகளை வழங்குவான். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கிறான்.

*153.* "நீர் வானத்திலிருந்து ஒரு வேதத்தை இறக்கி தங்களிடம் கொண்டுவர வேண்டும்" என்று வேதக்காரர்கள் உம்மிடம் கேட்கிறார்கள். மோசேவிடமோ அவர்கள் இதைவிட பெரியதைக் கேட்டு விட்டார்கள். "எங்களுக்கு அல்லாஹ்வைக் கண்முன்னால் காட்டுவீராக" என்று அவர்கள் கூறினார்கள். அவர்கள் செய்த அக்கிரமத்தினால் பேரிடி அவர்களைத் தாக்கியது. அவர்கள் தெளிவான சான்றுகள் வந்துவிட்ட பின்னரும் காளைக்கன்றைக் கடவுளாக்கிக் கொண்டார்கள். நாம் அதையும் மன்னித்தோம். மோசேவுக்கு நாம் தெளிவான ஆதாரத்தை வழங்கியிருந்தோம். *154.* அவர்களிடம் வாக்குறுதி வாங்குவதற்காக நாம் அவர்களின் மீது தூர்மலையை உயர்த்தினோம். வாயிலில் சிரம்பணிந்தவர்களாக

நுழையுங்கள் என்று நாம் அவர்களிடம் கூறினோம். சனிக்கிழமையின் விவகாரத்தில் வரம்புமீறிவிட வேண்டாம் என்றும் அவர்களிடம் கூறினோம். நாம் அவர்களிடம் உறுதியான வாக்குறுதியை வாங்கினோம்.

*155.* அவர்கள் தங்கள் வாக்குறுதியை முறித்து விட்டதாலும், அல்லாஹ்வின் சான்றுகளை நிராகரித்து விட்டதாலும், தூதர்களை அநியாயமாகக் கொலை செய்ததாலும், “எங்கள் உள்ளங்கள் மூடப்பட்டு விட்டன” என்று அவர்கள் கூறியதாலும் அவர்களை நாம் தண்டித்தோம். மாறாக அல்லாஹ் அவர்களது நிராகரிப்பினால் அவர்களின் உள்ளங்களில் முத்திரையிட்டு விட்டான். எனவே அவர்கள் மிகக்குறைவாகவே நம்பிக்கை கொள்வார்கள். *156.* அவர்கள் நிராகரித்ததாலும், மரியாளின்மீது பெரும் அவதூறைக் கூறியதாலும், *157.* இறைத்தூதராகிய மரியாளின் மகன் இயேசுவை நாங்கள் கொன்று விட்டோம் என்று அவர்கள் கூறியதற்காகவும் (நாம் அவர்களைத் தண்டித்தோம்). உண்மையில் அவர்கள் அவரைக் கொல்லவுமில்லை, சிலுவையில் அறையவுமில்லை. மாறாக அவ்விவகாரம் அவர்களுக்குக் குழப்பத்திற்குள்ளாக்கப்பட்டது. அவர்கள் முரண்பட்ட விஷயங்களில் சந்தேகத்தில் வீழ்ந்து கிடக்கிறார்கள். வெறும் யூகத்தைத் தவிர அவர்களிடம் வேறு அறிவு இல்லை. நிச்சயமாக அவர்கள் அவரைக் கொலை செய்யவில்லை. *158.* மாறாக அல்லாஹ் அவரைத் தன் பக்கம் உயர்த்திக்கொண்டான். அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.

*159.* வேதக்காரர்களில் எவரும் அவரது மரணத்திற்கு முன்னால் இதன்மீது நம்பிக்கைகொள்ளாமல் இருக்க மாட்டார்கள். மறுமைநாளன்று அவர் இவர்களின்மீது சாட்சியாளராக இருப்பார். *160.* எனவே யூதர்களின் அக்கிரமத்தினாலும், அதிகமானோரை

அவர்கள் இறைவழியைவிட்டுத் தடுத்துக்கொண்டிருந்ததனாலும் அவர்களுக்கு அனுமதிக்கப்பட்டிருந்த தூய்மையான பொருட்களை நாம் அவர்கள்மீது தடைசெய்து விட்டோம். **161.** அது ஏனெனில், வட்டி அவர்களுக்குத் தடுக்கப்பட்டிருக்க - அதனை அவர்கள் வாங்கிக் கொண்டிருந்ததனாலும், மக்களின் செல்வங்களைத் தவறான முறையில் அவர்கள் புசித்துக் கொண்டிருந்ததனாலுமேயாகும். அவர்களில் நிராகரிப்பாளர்களுக்கு நாம் துன்புறுத்தும் வேதனையைத் தயார்படுத்தி வைத்துள்ளோம். **162.** ஆயினும் அவர்களில் அறிவில் முதிர்ச்சி பெற்றவர்களும், நம்பிக்கையாளர்களும் உமக்கு அருளப்பட்டதையும், உமக்கு முன்னர் அருளப்பட்டதையும் நம்புகிறார்கள். அவர்கள் தொழுகையைக் கடைப்பிடிப்பவர்களாகவும், கடமையாக்கப்பட்ட தர்மத்தை நிறைவேற்றுபவர்களாகவும், அல்லாஹ்வின்மீதும், மறுமைநாளின்மீதும் நம்பிக்கைகொள்பவர்களாகவும் இருக்கிறார்கள். இத்தகையோருக்கு நிச்சயமாக நாம் மகத்தான கூலியை வழங்குவோம்.

**163.** நோவாவுக்கும், அவருக்குப் பின்னால் வந்த தூதர்களுக்கும் நாம் அறிவித்தது போலவே உமக்கும் அறிவித்தோம். ஆப்ரஹாம், இஸ்மவேல், ஈசாக், ஜேக்கப் மற்றும் அவரது புதல்வர்கள், இயேசு, அய்யூப், ஜோனா, ஆரோன், சாலமன் ஆகியோருக்கும் நாம் அறிவித்தோம். நாம் தாவீதுக்கு ஆகமத்தை அளித்தோம். **164.** நாம் அனுப்பிய சில தூதர்களைப்பற்றி முன்னரே உமக்கு எடுத்துரைத்து விட்டோம். இன்னும் சில தூதர்களைப் பற்றி நாம் உமக்கு எடுத்துரைக்கவில்லை. அல்லாஹ் மோசேவுடன் பேசியும் இருக்கிறான். **165.** தூதர்களுக்குப்பின் வருகின்ற மக்கள் ‘எங்களுக்கு எதுவும் தெரியாது, யாரும் கூறவில்லை’ என்று அல்லாஹ்விடம் கூறாதிருக்கும் பொருட்டு தூதர்களை அல்லாஹ் நற்செய்தி

*கூறுபவர்களாகவும், அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவர்களாகவும் அனுப்பியுள்ளான். அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்**.*

***166.** ஆயினும் அல்லாஹ் உமக்கு அருளியதைக் குறித்து அவனே சாட்சி கூறுகிறான். அவன் அதனைத் தனது அறிவுடன் அருளினான். வானவர்களும் சாட்சி சொல்கிறார்கள். சாட்சியத்திற்கு அல்லாஹ்வே போதுமானவன். **167.** சத்தியத்தை நிராகரித்து, இறைவழியைவிட்டும் மக்களைத் தடுத்துக் கொண்டிருந்தவர்கள் வழிதவறி வெகுதூரம் சென்று விட்டார்கள். **168.** சத்தியத்தை நிராகரித்து, அக்கிரமம் செய்தவர்களை அல்லாஹ் மன்னிக்கவே மாட்டான். அவர்களுக்கு எந்த வழியையும் காட்ட மாட்டான், **169.** நரகத்தின் வழியைத் தவிர. அதில் அவர்கள் என்றென்றும் வீழ்ந்து கிடப்பார்கள். இவ்வாறு செய்வது அல்லாஹ்விற்கு மிக எளிதானது. **170.** மனிதர்களே! உங்கள் இறைவனிடமிருந்து சத்தியத்துடன் தூதர் உங்களிடம் வந்துள்ளார். எனவே நம்பிக்கை கொள்ளுங்கள். அது உங்களுக்கு நன்மையாகும். நீங்கள் நம்பிக்கைகொள்ளவில்லையெனில் - வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்வுக்கே*

---

*இறைவன் முதலில் மனிதனைப் படைத்து அதன்பிறகு சொர்க்கம், நரகம் ஆகியவற்றைப் படைத்தான். பின்னர் வந்த காலகட்டத்தில் மனிதனை பூமியில் வசிக்கச் செய்தான். தான் விரும்பியதைச் செய்யும் சுதந்திரம் மனிதனுக்கு இங்கே உள்ளது. ஆனால் இந்த சுதந்திரம் என்றென்றைக்கும் நிரந்தரமானதல்ல. அது தற்காலிகமானதும் அவனுக்கான சோதனையுமாகும். நல்லதையும் கெட்டதையும் பிரித்தறிந்து செயல்படவேண்டும் என்பதாக அந்த சோதனை அமைந்துள்ளது. எதனையும் செய்வதற்கான சுதந்திரம் இருந்தும் சரியான எண்ணத்தைக் கொண்டு எவர் செயல்படுகிறார்கள், இறைவனிடம் தங்களை அர்ப்பணிக்கிறார்கள் என்பதை இறைவன் கண்காணித்துக் கொண்டே இருக்கிறான்.

உரியன. அல்லாஹ் நன்கறிந்தவனாகவும், ஞானம்மிக்கவனாகவும் இருக்கின்றான்.

**171.** வேதக்காரரர்களே! நீங்கள் உங்கள் மார்க்கத்தில் மிகைப்படுத்தி விடாதீர்கள். அல்லாஹ்வைக் குறித்து உண்மையைத்தவிர வேறு எதையும் கூறாதீர்கள். மரியாளின் மகனாகிய இயேசு மஸீஹ் இறைத்தூதரும், அவனது வார்த்தையுமாவார். அதை அவன் மரியாளிடம் அனுப்பினான். அது அவனிடமிருந்து வந்த ஒரு ஆன்மாவாகும். எனவே அல்லாஹ்வின்மீதும் அவனது தூதர்களின்மீதும் நம்பிக்கைகொள்ளுங்கள். "கடவுள் மூவர்" என்று கூறுவதை விட்டும் விலகிக்கொள்ளுங்கள், இதுவே உங்களுக்குச் சிறந்ததாகும். அல்லாஹ்தான் ஒரே இறைவன். அவன் தனக்கு மகனை ஏற்படுத்திக்கொள்வதை விட்டும் பரிசுத்தமானவன். வானங்களிலும், பூமியிலும் உள்ளவை யாவும் அவனுக்கே உரியன. பொறுப்பேற்பதற்கு அல்லாஹ்வே போதுமானவன். **172.** அல்லாஹ்வின் அடியாராக இருப்பதை மஸீஹ் ஒருபோதும் இழிவாக எண்ணமாட்டார். நெருக்கமான வானவர்களும் இழிவாக எண்ண மாட்டார்கள். எவர் அல்லாஹ்வை வணங்குவதை இழிவெனக்கருதி கர்வம் கொள்கிறாரோ நிச்சயமாக அல்லாஹ் அவர்கள் அனைவரையும் ஒன்றுதிரட்டி தன்பக்கம் கொண்டு வருவான். **173.** நம்பிக்கைகொண்டு, நற்செயல்கள் புரிவோருக்கு அவர்களின் கூலியை அவன் நிறைவாக வழங்கிடுவான். தன் அருளால் அவர்களுக்கு அதிகப்படுத்தியும் தருவான். ஆனால் இழிவெனக்கருதி கர்வம் கொள்பவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு. அவர்கள் அல்லாஹ்விற்கு எதிராக யாரையும் நண்பர்களாகவோ, உதவியாளர்களாகவோ காண மாட்டார்கள்.

*174.* மனிதர்களே! உங்கள் இறைவனிடமிருந்து உங்களிடம் ஒரு ஆதாரம் வந்து விட்டது. நாம் உங்கள்மீது ஒரு தெளிவான ஒளியை அருளியுள்ளோம்.

*175.* எனவே அல்லாஹ்வின்மீது நம்பிக்கைகொண்டு அவனை உறுதியாகப் பற்றிக் கொண்டவர்களை நிச்சயம் அல்லாஹ் தனது கருணையிலும், அருளிலும் நுழையச் செய்வான். அவர்களுக்குத் தன் பக்கம் வருவதற்கான நேரான வழியையும் காட்டுவான். *176.* அவர்கள் உம்மிடம் தீர்ப்பு கேட்கிறார்கள். நீர் கூறும், "அல்லாஹ் உங்களுக்கு நேரடி வாரிசற்ற சொத்தைப்பற்றி (கலாலாவைப் பற்றி) இவ்வாறு கட்டளையிடுகிறான். ஒருவர் இறந்து அவருக்குக் குழந்தைகள் யாரும் இல்லாதிருந்து ஒரு சகோதரி மட்டும் இருந்தால் அவளுக்கு அவனது சொத்தில் பாதி பங்கு உண்டு. அவளுக்குக் குழந்தைகள் யாரும் இல்லையெனில் அந்த ஆண் அவளுக்கு வாரிசாவான். இரண்டு சகோதரிகள் இருந்தால் அவர்களுக்கு அவனது சொத்தில் மூன்றில் இரண்டு பங்கு உண்டு. ஆண்கள் பெண்கள் என உடன்பிறந்தோரில் பலர் இருந்தால் அவர்களில் இரண்டு பெண்களுக்கு சமமான பங்கு ஒரு ஆணுக்கு உண்டு. நீங்கள் வழிதவறிச் சென்று விடக்கூடாது என்பதற்காக அல்லாஹ் உங்களுக்கு தெளிவுபடுத்துகிறான். அல்லாஹ் அனைத்தையும் அறிந்தவன்".

# *5. உணவுத்தட்டு (அல்மாயிதா)*

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

*1. நம்பிக்கையாளர்களே! ஒப்பந்தங்களை முழுமையாக நிறைவேற்றுங்கள். பின்னால் கூறப்படுபவை தவிர கால்நடைகள் அனைத்தும் உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளன. ஆனால் நீங்கள் புனிதப்பயணத்தில் இருக்கும்போது வேட்டையாடுவதை அனுமதிக்கப்பட்டதென எண்ணி விடாதீர்கள். தான் நாடியதை அல்லாஹ் கட்டளையிடுகிறான். 2. நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வின் சின்னங்களையும், புனிதமான மாதங்களையும், புனிதத்தலத்தில் பலியிடப்படும் பிராணிகளையும், அடையாளமிடப்பட்ட நேர்ச்சை பிராணிகளையும், இறையருளையும் திருப்தியையும் தேடி புனித இல்லத்தை நாடி வருவோரையும் அவமதிக்காதீர்கள். நீங்கள் புனிதப்பயண ஆடையிலிருந்து விடுபட்டுவிட்டால் வேட்டையாடலாம். புனித ஆலயத்தைவிட்டும் உங்களைத் தடுத்துவிட்ட ஒரு சமூகத்தின்மீதுள்ள பகைமை உங்களை வரம்புமீறச் செய்துவிடக் கூடாது. நன்மையிலும், இறையச்சத்திலும் நீங்கள் ஒருவருக்கொருவர் உதவி செய்து கொள்ளுங்கள். ஆனால் பாவத்திலும், அக்கிரமத்திலும் நீங்கள் ஒருவருக்கொருவர் உதவக்கூடாது. அல்லாஹ்வை அஞ்சுங்கள். நிச்சயமாக அல்லாஹ் தண்டிப்பதில் கடுமையானவன்.*

*3. தானாக செத்தது, இரத்தம், பன்றியின் மாமிசம், அல்லாஹ் அல்லாதவற்றின் பெயரால் பலியிடப்பட்ட பிராணி, கழுத்து நெரிபட்டு அல்லது அடிபட்டு அல்லது உயரத்திலிருந்து கீழே விழுந்து அல்லது கொம்பால் முட்டப்பட்டு செத்தவை, மிருகங்களால் கடித்துக் குதறப்பட்டவை - ஆனால் முறையாக நீங்கள் அறுத்து விட்டவற்றைத்தவிர பலிபீடங்களில்*

அறுக்கப்பட்டவை, அம்புகள் மூலம் குறிகேட்டு நிர்ணயிக்கப்படுதல் ஆகியவை உங்களுக்குத் தடைசெய்யப்பட்டுள்ளது. இவை பாவமான காரியங்களாகும். இன்று நிராகரிப்பாளர்கள் உங்கள் மார்க்கத்தைக் கண்டு விரக்தியடைந்து விட்டார்கள். எனவே நீங்கள் அவர்களுக்கு அஞ்ச வேண்டாம், என்னையே அஞ்சுங்கள். நான் இன்று உங்களுக்காக உங்கள் மார்க்கத்தை முழுமையாக்கி விட்டேன். உங்கள்மீது என் அருட்கொடைகளை நிறைவுபடுத்தி விட்டேன். உங்களுக்காக இஸ்லாத்தை மார்க்கமாக ஏற்றுக் கொண்டுவிட்டேன். ஆயினும் எவரேனும் பாவம் செய்யும் எண்ணமின்றி பசியினால் நிர்பந்தத்திற்குள்ளாகி விட்டால் - அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

4. “தங்களுக்கு எவை அனுமதிக்கப்பட்டுள்ளது” என்று அவர்கள் கேட்கிறார்கள். நீர் கூறும்: “தூய்மையான பொருட்கள் அனைத்தும் உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளன. வேட்டைப் பிராணிகளில் நீங்கள் பயிற்சியளித்தவையும் - (அல்லாஹ் உங்களுக்குக் கற்றுக்கொடுத்ததை நீங்கள் அவற்றிற்குக் கற்றுக் கொடுக்கிறீர்கள்) - உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளன. எனவே அவை வேட்டையாடி உங்களுக்காகப் பிடித்துவந்ததை உண்ணுங்கள். அதன்மீது அல்லாஹ்வின் பெயரைக் கூறுங்கள். அல்லாஹ்வை அஞ்சுங்கள். நிச்சயமாக அல்லாஹ் விசாரணை செய்வதில் விரைவானவன்”. 5. இன்றைய தினம் தூய்மையான பொருட்கள் அனைத்தும் உங்களுக்கு அனுமதிக்கப்பட்டு விட்டன. வேதம் வழங்கப்பட்டோரின் உணவு உங்களுக்கும், உங்களின் உணவு அவர்களுக்கும் ஆகுமானதாகும். நம்பிக்கைகொண்ட ஒழுக்கமுள்ள பெண்களும், முன்னர் வேதம் வழங்கப்பட்டோரிலுள்ள ஒழுக்கமுள்ள பெண்களும் உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளனர். அவர்களுக்கு நீங்கள்

மணக்கொடை அளித்துவிட்டு, அவர்களை மணந்துகொள்ளலாம். ஆனால் அவர்களுடன் பகிரங்கமான விபச்சாரத்திலோ, கள்ளக்காதலிலோ ஈடுபடக்கூடாது. எவர் நம்பிக்கையுடன் நிராகரிப்பைக் கலந்துவிடுகிறாரோ அவரது செயல்கள் அனைத்தும் வீணாகிவிடும். அவர் மறுமையில் நஷ்டமடைந்தவராகத்தான் இருப்பார். 6. நம்பிக்கையாளர்களே, நீங்கள் தொழுகைக்குத் தயாரானால் உங்கள் முகங்களையும், முழங்கைகள்வரை உங்கள் கைகளையும் கழுவிக் கொள்ளுங்கள். உங்கள் தலைகளை தடவிக் கொள்ளுங்கள். உங்கள் கால்களை கணுக்கால்கள்வரை கழுவிக் கொள்ளுங்கள். உங்களுக்கு குளிப்பு அவசியமாகிவிட்டால் குளித்துக் கொள்ளுங்கள். நீங்கள் நோயாளியாகவோ, பயணத்திலோ இருந்தால் அல்லது மலஜலம் கழித்துவிட்டு வந்திருந்தால் அல்லது நீங்கள் பெண்களைத் தீண்டியிருந்தால் அப்போது நீங்கள் தண்ணீரைப் பெறவில்லையெனில் நீங்கள் சுத்தமான மணலைக் கொண்டு (தயம்மும்) செய்துகொள்ளுங்கள். உங்கள் முகங்களையும் கைகளையும் தடவிக்கொள்ளுங்கள். அல்லாஹ் உங்களுக்கு எவ்விதச் சிரமத்தையும் ஏற்படுத்த விரும்பவில்லை. மாறாக நீங்கள் நன்றி செலுத்தும்பொருட்டு உங்களைத் தூய்மைப்படுத்தவும், உங்கள்மீது தன் அருட்கொடைகளை முழுமைப்படுத்தவுமே விரும்புகின்றான்.

7. அல்லாஹ் உங்கள்மீது பொழிந்த அருட்கொடையையும், உங்களிடம் அவன் பெற்ற வாக்குறுதியையும் நினைவுகூருங்கள். அப்போது நீங்கள் “நாங்கள் கேட்டோம். கீழ்ப்படிந்தோம்” என்று கூறினீர்கள். அல்லாஹ்வை அஞ்சுங்கள். நிச்சயமாக அல்லாஹ் உள்ளங்களில் உள்ளவற்றையும் நன்கறிந்தவனாக இருக்கின்றான். 8. நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்காக உறுதியானவர்களாகவும், நியாயமாக சாட்சி கூறுபவர்களாகவும்

ஆகிவிடுங்கள். ஒரு சமூகத்தின்மீதுள்ள பகைமை உங்களை நீதி செலுத்தாமலிருக்கத் தூண்டிவிட வேண்டாம். நீதி செலுத்துங்கள். இதுவே இறையச்சத்திற்கு மிக நெருக்கமானது. அல்லாஹ்வை அஞ்சுங்கள். நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை நன்கறிந்தவன். **9.** நம்பிக்கைகொண்டு, நற்செயல் புரிவோருக்கு மன்னிப்பும், மகத்தான கூலியும் உண்டு என்று அல்லாஹ் வாக்களித்துள்ளான். **10.** சத்தியத்தை நிராகரித்து நம் சான்றுகளை மறுப்பவர்கள்தான் நரகவாசிகள். **11.** நம்பிக்கையாளர்களே! அல்லாஹ் உங்கள்மீது பொழிந்த அருட்கொடையை நினைத்துப் பாருங்கள். ஒரு சமூகத்தினர் உங்களைத் தாக்க நாடியபோது அல்லாஹ் அவர்களின் கைகளை உங்களைவிட்டும் தடுத்துக் கொண்டான். அல்லாஹ்வை அஞ்சுங்கள். நம்பிக்கையாளர்கள் அல்லாஹ்வையே சார்ந்திருக்க வேண்டும்.

**12.** அல்லாஹ் இஸ்ராயீலின் மக்களிடம் உறுதிமொழி வாங்கினான். நாம் அவர்களில் பன்னிரெண்டு தலைவர்களை நியமித்தோம். அல்லாஹ் அவர்களிடம், “நான் உங்களுடன் இருக்கின்றேன். நீங்கள் தொழுகையைக் கடைப்பிடித்து, கடமையாக்கப்பட்ட தர்மத்தையும் வழங்கி, என் தூதர்களின் மீது நம்பிக்கைகொண்டு அவர்களுக்கு உதவியும் புரிந்து, அல்லாஹ்வுக்கு அழகிய கடனும் அளித்து வருவீர்களாயின், நான் உங்கள் பாவங்களைப் போக்கி சொர்க்கச் சோலைகளில் உங்களை நுழையச் செய்வேன். அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். எனவே உங்களில் இதற்குப் பின்னரும் நிராகரிப்பவர் நேர்வழியை விட்டும் பிறழ்ந்து விட்டவராவார்” என்று கூறினான். **13.** எனவே அவர்கள் வாக்குமீறியதால் நாம் அவர்களை சபித்து அவர்களின் இதயங்களை இறுகச் செய்து விட்டோம். அவர்கள் (வேதத்தின்) வார்த்தைகளை அவற்றிற்குரிய பொருள்களிலிருந்து

புரட்டுகிறார்கள். அவர்களுக்கு வழங்கப்பட்ட அறிவுரைகளில் பெரும்பகுதியை மறந்து விட்டார்கள். அவர்களில் சிலரைத்தவிர மற்றவர்களிடம் நீர் துரோகத்தைக் கண்டுகொண்டே இருப்பீர். அவர்களை மன்னித்து கண்டுகொள்ளாமல் விட்டு விடுவீராக. அல்லாஹ் நன்மை செய்வோரை நேசிக்கிறான்.

**14.** தங்களைத்தாங்களே 'நாங்கள் கிறிஸ்தவர்கள்' என்று கூறியவர்களிடமும் நாம் உறுதிமொழி வாங்கினோம். அவர்களும் தங்களுக்கு வழங்கப்பட்ட அறிவுரைகளில் பெரும்பகுதியை மறந்து விட்டார்கள். எனவே நாம் அவர்களிடையே பகைமையையும், வெறுப்பையும் மறுமைநாள்வரை உண்டாக்கி விட்டோம். அவர்கள் செய்து கொண்டிருந்தவற்றைப்பற்றி அல்லாஹ் அவர்களுக்கு அறிவிப்பான்.

**15.** வேதக்காரர்களே! உங்களிடம் நம் தூதர் வந்துள்ளார். நீங்கள் மறைத்துக்கொண்டிருந்த வேதத்தின் பல விஷயங்களை அவர் உங்களுக்குத் தெளிவாக எடுத்துரைக்கிறார். பெரும்பாலானவற்றை மன்னித்தும் விடுகிறார். நிச்சயமாக உங்களிடம் அல்லாஹ்விடமிருந்து ஒரு ஒளியும், தெளிவுபடுத்தும் வேதமும் வந்துவிட்டது. **16.** இதன்மூலம் அல்லாஹ் அவனது திருப்தியைத் தேடுவோருக்கு அமைதிக்கான வழிகளைக் காட்டுகிறான். அவன் தன் அருளால் அவர்களை இருளிலிருந்து வெளியேற்றி வெளிச்சத்தின்பக்கம் கொண்டு வருகிறான். அவர்களுக்கு நேரான வழியையும் காட்டுகிறான். **17.** "மரியாளின் மகன் மஸீஹ்தான் இறைவன்" என்று கூறியவர்கள் நிச்சயமாக நிராகரித்து விட்டார்கள். நீர் கூறும்: "மரியாளின் மகன் மஸீஹையும், அவரது தாயையும், இன்னும் பூமியிலுள்ள அனைவரையும் அல்லாஹ் அழித்துவிட நாடினால் அதனை யாரால் தடுத்துவிட முடியும்? வானங்கள், பூமி மற்றும் அவற்றிற்கிடையில் உள்ளவற்றின் ஆட்சியதிகாரம் அல்லாஹ்வுக்கே

உரியது. தான் நாடியதை அவன் படைக்கிறான். அல்லாஹ் அனைத்தின் மீதும் பேராற்றலுடையவனாக இருக்கின்றான்".

*18.* யூதர்களும், கிறிஸ்தவர்களும் "நாங்கள் இறைவனின் பிள்ளைகள், அவனது நேசர்கள்" என்று கூறுகிறார்கள். நீர் கூறும்: "அவ்வாறாயின் உங்கள் குற்றங்களுக்காக அவன் ஏன் உங்களைத் தண்டிக்கிறான்? மாறாக நீங்களும் அவன் படைத்துள்ள மனிதர்களாகவே இருக்கிறீர்கள். தான் நாடியவர்களை அவன் மன்னிப்பான், தான் நாடியவர்களைத் தண்டிப்பான். வானங்களிலும் பூமியிலும் அவற்றிற்கு இடையிலும் உள்ளவற்றின் ஆட்சியதிகாரம் அல்லாஹ்வுக்கே உரியது. அவன் பக்கமே திரும்பச் செல்ல வேண்டும். *19.* வேதக்காரரர்களே! தூதர்கள் வருகையின் ஒரு இடைவெளிக்குப் பின்னர், உங்களிடம் நம்முடைய தூதர் வந்திருக்கின்றார். அவர் உங்களுக்குத் தெளிவாக எடுத்துரைக்கிறார். ஏனெனில் நற்செய்தி கூறுபவரோ, எச்சரிக்கை செய்பவரோ யாரும் எங்களிடம் வரவில்லை என்று நீங்கள் கூறக்கூடாது என்பதற்காக. நற்செய்தி கூறுபவரும், எச்சரிக்கை செய்பவரும் உங்களிடம் வந்து விட்டார். அல்லாஹ் எல்லாவற்றின்மீதும் பேராற்றலுடையவன்.

*20.* மோசே தம் சமூகத்திடம், "என் சமூகமே, அல்லாஹ் உங்கள் மீது பொழிந்த அருட்கொடையை நினைவுகூருங்கள். அவன் உங்களிடையே தூதர்களைத் தோற்றுவித்து உங்களை அரசர்களாகவும் ஆக்கினான். உலகில் எவருக்கும் வழங்காததை எல்லாம் அவன் உங்களுக்கு வழங்கினான். *21.* என் சமூகமே! அல்லாஹ் உங்களுக்கு விதித்த புனிதமான பூமியில் நுழைந்து விடுங்கள். புறங்காட்டி ஓடி விடாதீர்கள். இழப்புக்கு ஆளாகி விடுவீர்கள்" என்று கூறினார். *22.* அதற்கு அவர்கள், "மோசேயே, அங்கு வலிமைமிக்க ஒரு சமூகத்தினர் இருக்கின்றனர். அவர்கள் அங்கிருந்து வெளியேறாதவரை நாங்கள் ஒருபோதும் அங்கு

நுழைய மாட்டோம். அவர்கள் அங்கிருந்து வெளியேறிவிட்டால் நாங்கள் நுழைந்து விடுவோம்" என்று கூறினார்கள். *23.* அப்போது அல்லாஹ்வை அஞ்சும் இரு மனிதர்கள் அவர்கள் இருவரின் மீதும் அல்லாஹ் அருள் புரிந்திருந்தான் - "நீங்கள் அவர்களை எதிர்த்து நகரத்தின் வாயிலில் நுழைந்து விடுங்கள். அங்கு நீங்கள் நுழைந்துவிட்டால் நீங்கள்தான் வெற்றி பெறுவீர்கள். நீங்கள் நம்பிக்கையாளர்களாக இருந்தால் அல்லாஹ்வையே சார்ந்திருங்கள்" என்று கூறினார்கள். *24.* மோசேயின் சமூகத்தினர், "மோசேயே, அவர்கள் அங்கு இருக்கும்வரை நாங்கள் ஒருபோதும் நுழைய மாட்டோம். ஆகவே நீரும், உமது இறைவனும் சென்று போரிடுங்கள். நாங்கள் இங்கே அமர்ந்திருக்கிறோம்" என்று கூறினார்கள்.

*25.* "என் இறைவனே! என்னையும், என் சகோதரரையும்தவிர வேறு எவர் மீதும் எனக்கு அதிகாரமில்லை. எனவே அடிபணியாத இந்த மக்களிடமிருந்து எங்களை விலக்கி விடுவாயாக" என்று மோசே கூறினார். *26.* அதற்கு அல்லாஹ், "நாற்பதாண்டு காலம்வரை அந்த நிலப்பகுதி அவர்களுக்கு தடுக்கப்பட்டு விட்டது. அம்மக்கள் பூமியில் தடுமாறித் திரிவார்கள். எனவே அடிபணியாத மக்களுக்காக நீர் அனுதாபப்படாதீர்" என்று கூறினான்.

*27.* ஆதமுடைய இரண்டு புதல்வர்களின் வரலாற்றை அவர்களுக்கு சத்தியத்துடன் எடுத்துரைப்பீராக. அவர்கள் இருவரும் காணிக்கையை முன்வைத்தபோது அவர்களில் ஒருவரிடமிருந்து அது ஏற்றுக்கொள்ளப்பட்டது. மற்றவரிடமிருந்து ஏற்றுக்கொள்ளப்படவில்லை. இரண்டாமவர் "நான் உன்னைக் கொன்று விடுவேன்" என்று கூறினார். அதற்கு முதலாமவர், "இறையச்சமுடையோரிடமிருந்துதான் அல்லாஹ் ஏற்றுக் கொள்கிறான். *28.* நீர் என்னைக் கொல்வதற்காகக் கையை

நீட்டினாலும் நான் உம்மைக் கொல்வதற்காகக் கையை நீட்ட மாட்டேன். அகிலமனைத்திற்கும் இறைவனாகிய அல்லாஹ்வை நான் அஞ்சுகிறேன். **29.** என் பாவத்தையும், உன் பாவத்தையும் நீயே சுமந்துகொண்டு நரகவாசிகளுடன் நீ இணைந்து விடுவதையே நான் விரும்புகிறேன். அக்கிரமக்காரர்களுக்கு இதுவே தண்டனையாகும்" என்று கூறினார்.

**30.** இறுதியில் தன் சகோதரரைக் கொலை செய்வதையே அவரது மனம் அவருக்கு அழகாக்கிக் காட்டியது. அவர் முதலாமவரைக் கொன்று விட்டார். எனவே அவர் நஷ்டமடைந்தவராகி விட்டார். **31.** பின்னர் ஒரு காகத்தை அல்லாஹ் அனுப்பினான், தன் சகோதரரின் சடலத்தை எவ்வாறு புதைப்பது என்பதை அவருக்குக் கற்றுக்கொடுப்பதற்காக அது பூமியில் தோண்டிற்று. "அந்தோ! நான் இந்தக் காகத்தைப்போலகூட இல்லாமல் ஆகிவிட்டேனே!. அப்படியிருந்திருந்தால் என் சகோதரனின் சடலத்தை நான் மறைத்திருப்பேனே" என்று கூறி அவர் வருத்தப்பட்டார்.

**32.** இதன் காரணமாகவே இஸ்ராயீலின் மக்களுக்கு நாம் விதித்து விட்டோம்: "எவர் கொலைக்குப் பதிலாகவோ, பூமியில் கலகம் விளைவித்த காரணத்திற்காகவோ அன்றி ஒருவரைக் கொலை செய்கிறாரோ அவர் மனிதர்கள் அனைவரையும் கொன்றவரைப் போலாவார். எவர் ஒருவரை வாழவைக்கிறாரோ அவர் மனிதர்கள் அனைவரையும் வாழ வைத்தவரைப் போலாவார்". நம் தூதர்கள் அவர்களிடம் தெளிவான கட்டளைகளைக் கொண்டு வந்தார்கள். அதன் பின்னரும் அவர்களில் பெரும்பாலோர் பூமியில் வரம்புமீறுபவர்களாகவே இருக்கிறார்கள். **33.** எவரெல்லாம் அல்லாஹ்வுடனும் அவனது தூதருடனும் போரிட்டுப் பூமியில் குழப்பம் விளைவிக்க தீவிரமாக முயற்சி செய்கிறார்களோ அவர்களுக்குரிய தண்டனை இதுதான்: "அவர்கள் கொல்லப்பட

வேண்டும் அல்லது தூக்கிலிடப்பட வேண்டும் அல்லது அவர்களின் மாறுகை மாறுகால் வெட்டப்பட வேண்டும் அல்லது அவர்கள் நாடு கடத்தப்பட வேண்டும்". இது அவர்கள் இவ்வுலகில் அடையும் இழிவாகும். மறுமையிலோ அவர்களுக்குக் கடுமையான தண்டனையுண்டு. *34.* ஆயினும் உங்களிடம் அகப்பட்டுக் கொள்வதற்கு முன்னரே பாவமன்னிப்பு தேடிக்கொள்பவர்களைத் தவிர. அறிந்து கொள்ளுங்கள், அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

*35.* நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். அவனது நெருக்கத்தைத் தேடுங்கள். அவனது பாதையில் பாடுபடுங்கள். அதனால் நீங்கள் வெற்றியடையலாம். *36.* நிச்சயமாக நிராகரிப்பாளர்களிடம் பூமியில் உள்ளவை அனைத்தும், அத்துடன் அதேபோன்று இன்னும் இருந்து மறுமைநாளின் வேதனையிலிருந்து தப்பிக்க அவற்றை அவர்கள் ஈடாகக் கொடுத்தாலும் அவர்களிடமிருந்து அது ஏற்றுக்கொள்ளப்படாது. அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனை உண்டு. *37.* நரகத்தைவிட்டு வெளியேறிவிட அவர்கள் விரும்புவார்கள். ஆனால் அவர்களால் வெளியேற முடியாது. அவர்களுக்கு நிலையான வேதனை உண்டு. *38.* திருடன், திருடி இருவரின் கைகளையும் துண்டித்து விடுங்கள். இது அவர்கள் செய்தவற்றுக்கான கூலியும் அல்லாஹ்விடமிருந்து கிடைக்கும் படிப்பினைமிக்க தண்டனையுமாகும். அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவனாகவும். ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான். *39.* எவரேனும் அக்கிரமம் செய்தபின்னர் பாவமன்னிப்புக்கோரி தம்மைச் சீர்படுத்திக்கொண்டால் நிச்சயமாக அல்லாஹ் அவரை மன்னிப்பான். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். *40.* "வானங்கள் மற்றும்

*பூமியின் ஆட்சியதிகாரம் அல்லாஹ்வுக்கே உரியது" என்பதை நீர் அறியவில்லையா? தான் நாடியோரை அவன் தண்டிப்பான். தான் நாடியோரை அவன் மன்னிப்பான். அல்லாஹ் எல்லாவற்றின்மீதும் பேராற்றலுடையவன்.*

***41.*** *தூதரே, நிராகரிப்பின் பாதையில் விரைந்து செல்வோர் உம்மைக் கவலையில் ஆழ்த்திவிட வேண்டாம். அவர்கள் "நாங்கள் நம்பிக்கைகொண்டோம்" என்று வாயளவில் கூறிவிட்டு உள்ளங்களில் நம்பிக்கைகொள்ளாமல் இருப்பவர்களில் உள்ளவர்களாக இருந்தாலும் சரி, அல்லது யூதர்களைச் சார்ந்தவர்களாக இருந்தாலும் சரி. அவர்கள் பொய்யை அதிகமாக செவிமடுப்பவர்கள்; உம்மிடம் வராத வேறு கூட்டத்தினருக்காக உளவுபார்ப்பவர்கள். அவர்கள் வார்த்தைகளை அவற்றின் பொருள்களிலிருந்து மாற்றி மக்களிடம் "இன்ன கட்டளை உங்களுக்குக் கொடுக்கப்பட்டால் அதை ஏற்றுக்கொள்ளுங்கள். இன்ன கட்டளை உங்களுக்குக் கொடுக்கப்படவில்லையெனில் அதை விட்டும் விலகியிருங்கள்" என்று புரட்டிக் கூறுகிறார்கள். எவரை அல்லாஹ் குழப்பத்தில் ஆழ்த்த நாடுகிறானோ அவரது விஷயத்தில் அல்லாஹ்விடம் உங்களால் ஒன்றுமே செய்ய முடியாது. அவர்களது உள்ளங்களை அல்லாஹ் தூய்மைப்படுத்த விரும்பவில்லை. அவர்களுக்கு இவ்வுலகில் இழிவும் மறுமையில் கடும் வேதனையும் உண்டு.*

***42.*** *அவர்கள் பொய்யையே அதிகமாக செவிமடுப்போராகவும் விலக்கப்பட்டதையே அதிகமாக உண்போராகவும் இருக்கிறார்கள். அவர்கள் உம்மிடம் வந்தால் அவர்களிடையே நீர் தீர்ப்பு வழங்கலாம் அல்லது அவர்களைப் புறக்கணித்து விடலாம். நீர் அவர்களைப் புறக்கணித்து விடுவீராயின் அவர்கள் உமக்கு யாதொரு தீங்கும் இழைத்துவிட முடியாது. நீர் தீர்ப்பு வழங்கினால் அவர்களிடையே நியாயமாகத் தீர்ப்பு வழங்குவீராக. நிச்சயமாக அல்லாஹ்*

நீதிசெலுத்துவோரை நேசிக்கிறான். **43.** இவர்கள் உம்மை தீர்ப்பு கூறுபவராக எவ்வாறு எடுத்துக் கொள்வார்கள்? இவர்களிடமோ இறைக்கட்டளைகள் அடங்கியுள்ள தவ்ராத் இருக்கிறது. ஆனாலும் இவர்கள் அதனைவிட்டு முகம் திருப்பிக்கொள்கிறார்கள். இவர்கள் ஒருபோதும் நம்பிக்கையாளர்களாக மாட்டார்கள்.

**44.** நிச்சயமாக நாம் தவ்ராத்தை அருளினோம். அதில் நேர்வழியும் இருக்கின்றது. ஒளியும் இருக்கின்றது. இறைவனுக்கு கீழ்ப்படிந்த தூதர்களும், இறையடியார்களும், அறிஞர்களும் இதே தவ்ராத்தின்படியே யூதர்களுக்கு தீர்ப்பளித்துக் கொண்டிருந்தார்கள். ஏனெனில் அவர்கள் இறைவேதத்திற்குப் பாதுகாவலர்களாக நியமிக்கப்பட்டிருந்தார்கள். அதற்கு அவர்களே சாட்சியாளர்களாகவும் இருந்தார்கள். “எனவே நீங்கள் மக்களுக்கு அஞ்சாதீர்கள். எனக்கே அஞ்சுங்கள். என் வசனங்களை அற்ப ஆதாயத்திற்கு விற்று விடாதீர்கள்”. அல்லாஹ் அருளியதன்படி தீர்ப்பு வழங்காதவர்கள்தான் நிராகரிப்பாளர்கள். **45.** நாம் அந்த வேதத்தில் “உயிருக்கு உயிர், கண்ணுக்கு கண், மூக்குக்கு மூக்கு, காதுக்குக் காது, பல்லுக்குப் பல் என்றும் காயங்களுக்கு சமமான அளவு காயப்படுத்துதல்” என்றும் அவர்கள்மீது விதித்து விட்டோம். ஆயினும் எவர் மன்னித்து விடுகிறாரோ, அது அவரது பாவங்களுக்குப் பரிகாரமாகி விடும். அல்லாஹ் அருளியதன்படி தீர்ப்பு வழங்காதவர்கள்தான் அக்கிரமக்காரர்கள். **46.** நாம் அவர்களுக்குப்பின் மரியாளின் மகன் இயேசுவை அவருக்கு முன்னுள்ள தவ்ராத்தை உண்மைப்படுத்தக்கூடியவராக அனுப்பினோம். நாம் அவருக்கு இன்ஜீலை வழங்கினோம். அதில் நேர்வழியும், ஒளியும் இருந்தது. அது தனக்கு முன்னுள்ள வேதமான தவ்ராத்தை உண்மைப்படுத்துவதாகவும், இறையச்சமுடையோருக்கு வழிகாட்டியாகவும், அறிவுரையாகவும்

இருந்தது. 47. இன்ஜீல் வேதத்தை உடையவர்கள் அல்லாஹ் அருளியதன்படி தீர்ப்பளிக்கட்டும். அல்லாஹ் அருளியதன்படி தீர்ப்பளிக்காதவர்கள்தான் கீழ்ப்படியாதவர்கள்.

48. நாம் உமக்கு வேதத்தை சத்தியத்துடன் அருளியுள்ளோம். அது தனக்கு முன்னுள்ள வேதத்தை உண்மைப்படுத்தக்கூடியதாகவும், அதிலுள்ள கருத்துக்களை பாதுகாக்கக்கூடியதாகவும் இருக்கின்றது. எனவே நீர் அவர்களிடையே அல்லாஹ் அருளியதன்படி தீர்ப்பளிப்பீராக. உம்மிடம் வந்துள்ள சத்தியத்தை விட்டுவிட்டு அவர்களின் மனஇச்சைகளைப் பின்பற்றாதீர். நாம் உங்களில் ஒவ்வொருவருக்கும் ஒரு மார்க்கத்தையும், வழிமுறையையும் ஏற்படுத்தியுள்ளோம். அல்லாஹ் நாடியிருந்தால் உங்களை ஒரே சமூகமாக ஆக்கியிருப்பான். ஆனால் அவன் உங்களுக்கு வழங்கியவற்றில் உங்களை சோதிக்க நாடுகிறான். எனவே நீங்கள் நன்மைகளின் பக்கம் விரையுங்கள். நீங்கள் அனைவரும் அல்லாஹ்விடமே திரும்பிச் செல்ல வேண்டும். அப்போது நீங்கள் முரண்பட்டுக்கொண்டிருந்த விஷயங்களைப்பற்றி அவன் உங்களுக்கு அறிவிப்பான்.

49. அவர்களிடையே அல்லாஹ் அருளியதன்படி தீர்ப்பளிப்பீராக. அவர்களின் விருப்பங்களைப் பின்பற்றாதீர். அல்லாஹ் உமக்கு அருளியவற்றில் சிலவற்றைவிட்டும் அவர்கள் உம்மைத் திருப்பி விடக்கூடும். அவர்களிடம் எச்சரிக்கையாக இருந்து கொள்ளும். அவர்கள் புறக்கணித்தால் (அறிந்துகொள்ளும்) அல்லாஹ் அவர்களின் சில பாவங்களினால் அவர்களை தண்டிக்க விரும்புகிறான். நிச்சயமாக மக்களில் பெரும்பாலோர் அடிபணியாதவர்களாகவே இருக்கிறார்கள். 50. இவர்களென்ன அறியாமைக்காலத்து தீர்ப்பையா விரும்புகிறார்கள்? உறுதியாக நம்பிக்கைகொள்ளும் மக்களுக்கு அல்லாஹ்வைவிட தீர்ப்பளிப்பதில் சிறந்தவன் யார்?

**51.** நம்பிக்கையாளர்களே! யூதர்களையும், கிறிஸ்தவர்களையும் நண்பர்களாக்கிக் கொள்ளாதீர்கள். அவர்கள் ஒருவருக்கொருவர் நண்பர்களாக இருக்கிறார்கள். உங்களில் எவரேனும் அவர்களை நண்பர்களாக்கிக் கொண்டால் அவரும் அவர்களைச் சார்ந்தவராவார். அல்லாஹ் அக்கிரமக்காரர்களுக்கு நேர்வழிகாட்ட மாட்டான்*. **52.** உள்ளங்களில் நோயுள்ளவர்கள் அவர்களின் பக்கம் விரைந்தோடுவதை நீர் காண்பீர். "எங்களுக்கு ஏதேனும் பாதிப்பு ஏற்படுமோ என்று நாங்கள் அஞ்சுகிறோம்" என்று அவர்கள் கூறுகிறார்கள். அல்லாஹ் வெற்றியையோ, தன்னிடமிருந்து ஏதேனும் சாதகமானதையோ அளித்து விடலாம். அப்போது அவர்கள் தங்கள் உள்ளங்களில் மறைத்து வைத்தவற்றிற்காக வருந்துவார்கள். **53.** அச்சமயம் நம்பிக்கையாளர்கள், "இவர்கள்தானே அல்லாஹ்வின்மீது உறுதியாக ஆணையிட்டு நாங்களும் உங்களுடன் இருக்கிறோம் என்று நம்பிக்கையூட்டியவர்கள்" என்று கேட்பார்கள். அவர்களது செயல்கள் அனைத்தும் வீணாகி விட்டன. அவர்கள் இழப்பிற்குள்ளாகி விட்டார்கள்.

**54.** நம்பிக்கையாளர்களே! உங்களில் எவரேனும் தன் மார்க்கத்தை விட்டுத் திரும்பி விட்டாரானால் - அல்லாஹ் விரைவில் வேறொரு சமூகத்தினரைக் கொண்டு வருவான். அவன் அவர்களை நேசிப்பான். அவர்களும் அவனை நேசிப்பார்கள். அவர்கள் நம்பிக்கையாளர்களிடம் மென்மையாகவும், நிராகரிப்பாளர்களிடம் கண்டிப்பாகவும் நடந்து கொள்வார்கள். அவர்கள் இறைவழியில் பாடுபடுவார்கள். பழிப்பவனின் பழிப்புக்கு அஞ்ச மாட்டார்கள். இது அல்லாஹ்வின் அருளாகும். தான் நாடுவோருக்கு இதனை அவன் வழங்குகிறான். அல்லாஹ் தாராளமானவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். **55.** உங்களுடைய நண்பர்கள்

---

*இதற்கான குறிப்பு 003:028க்கானதே.

அல்லாஹ்வும் அவனது தூதரும், இன்னும் நம்பிக்கையாளர்களும் ஆவர். அந்நம்பிக்கையாளர்கள் தொழுகையைக் கடைப்பிடித்து கடமையாக்கப்பட்ட தானதர்மத்தையும் அளித்து அல்லாஹ்வுக்குப் பணிபவர்களாவும் இருப்பார்கள். **56.** அல்லாஹ்வையும், அவனது தூதரையும் மற்றும் நம்பிக்கையாளர்களையும் நேசர்களாக்கிக் கொண்டோர் (அறிந்துகொள்ளட்டும்) நிச்சயமாக அல்லாஹ்வின் கூட்டத்தினரே வெற்றிபெறக்கூடியவர்கள்.

**57.** நம்பிக்கையாளர்களே! உங்களுக்கு முன்னால் வேதம் வழங்கப்பட்டவர்களில் உங்கள் மார்க்கத்தைக் கேலியாகவும், விளையாட்டாகவும் ஆக்கிக்கொண்டவர்களையும், நிராகரிப்பாளர்களையும் நீங்கள் நண்பர்களாக்கிக் கொள்ளாதீர்கள்*. நீங்கள் நம்பிக்கையாளர்களாக இருந்தால் அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள். **58.** நீங்கள் தொழுகைக்காக அழைக்கும்போது அவர்கள் அதைக் கேலியாகவும் விளையாட்டாகவும் எடுத்துக் கொள்கிறார்கள். இதற்குக் காரணம் அவர்கள் அறிவற்ற மக்களாக இருப்பதேயாகும். **59.** நீர் கூறும்: “வேதக்காரரர்களே! ‘நாங்கள் அல்லாஹ்வின்மீதும், எங்களுக்கு அருளப்பட்டதன்மீதும், எங்களுக்கு முன்னர் அருளப்பட்டதன்மீதும் நம்பிக்கை கொண்டுள்ளோம்’ என்பதற்காகவா எங்களை வெறுக்கிறீர்கள்?” உங்களில் பெரும்பாலோர் கீழ்ப்படியாதவர்களாகவே இருக்கிறார்கள். **60.** நீர் கூறும்: “அல்லாஹ்விடத்தில் இதைவிட மிக மோசமான விளைவைச் சந்தித்தவர்களைப்பற்றி நான் உங்களுக்குக் கூறட்டுமா? அவர்களை அல்லாஹ் சபித்துள்ளான். அவர்கள்மீது கோபம்கொண்டு அவர்களில் சிலரை குரங்குகள் மற்றும் பன்றிகளைப்போன்ற (பண்புள்ளவர்களாக) ஆக்கிவிட்டான். அவர்கள்தான் சாத்தானை

---

*இதற்கான குறிப்பு 003:028க்கானதே.

*வணங்கியவர்கள். இத்தகைய மனிதர்கள் மிகவும் தரங்கெட்டவர்கள். நேர்வழியை விட்டும் வெகுதூரமானவர்கள்"**.

***61.*** *அவர்கள் உம்மிடம் வந்தால் "நாங்கள் நம்பிக்கைகொண்டோம்" என்று கூறுகிறார்கள். உண்மையில் அவர்கள் நிராகரிப்பாளர்களாகவே உங்களிடம் வந்தார்கள்; நிராகரிப்பாளர்களாகவே சென்றார்கள். அவர்கள் மறைப்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவனாக இருக்கின்றான்.* ***62.*** *அவர்களில் பெரும்பாலோர் பாவத்திலும், அக்கிரமத்திலும், தடுக்கப்பட்டதை உண்பதிலும் விரைந்து செல்வதை நீர் காண்பீர். அவர்கள் செய்து கொண்டிருப்பது எவ்வளவு மோசமான காரியம்!* ***63.*** *பாவமான வார்த்தைகளைக் கூறுவதை விட்டும், விலக்கப்பட்டதை உண்பதை விட்டும் அவர்களது குருமார்களும், அறிஞர்களும் அவர்களைத் தடுக்க வேண்டாமா? அவர்கள் செய்துகொண்டிருப்பது எவ்வளவு மோசமான காரியம்.!*

***64.*** *"அல்லாஹ்வின் கைகள் கட்டப்பட்டுள்ளன" என்று யூதர்கள் கூறுகிறார்கள். ஆனால் அவர்களது கைகளே கட்டப்பட்டுள்ளன. இவ்வாறு கூறியதனால் அவர்கள் சபிக்கப்பட்டு விட்டார்கள். இறைவனது கைகள் திறந்தே இருக்கின்றன. தான் நாடியவாறு அவன் வாரி வழங்குகிறான். உம் இறைவனிடமிருந்து உமக்கு அருளப்பட்டவை அவர்களில் பெரும்பாலோருக்கு அக்கிரமத்தையும், நிராகரிப்பையுமே அதிகப்படுத்துகின்றன. நாம் அவர்களுக்கிடையே மறுமைநாள்வரை பகைமையையும்*

---

*இது நேரடியாக பொருள் கொள்ளக்கூடியதல்ல. மாறாக அவர்களுடைய கீழ்மையான பண்புகளை குறியீடாக விளக்குவதேயாகும். அவர்கள் அந்த விலங்குகளைப்போல உருவத்தில் மாறுவதில்லை. ஆனால் அவர்களுடைய குணநலன்கள் அந்த விலங்குகளைப் போலாகி விடும்.

வெறுப்பையும் விதைத்து விட்டோம். அவர்கள் போருக்குரிய நெருப்பை மூட்டும்போதெல்லாம் அல்லாஹ் அதனை அணைத்து விடுகிறான். அவர்கள் பூமியில் குழப்பம் செய்துகொண்டு திரிகிறார்கள். அல்லாஹ் குழப்பம் விளைவிப்போரை விரும்புவதில்லை.

*65.* வேதக்காரர்கள் நம்பிக்கைகொண்டு, இறையச்சத்துடன் நடந்திருந்தால் நாம் அவர்களின் பாவங்களை அவர்களைவிட்டும் அகற்றி அருட்கொடைகள் நிறைந்த சொர்க்கச் சோலைகளில் அவர்களை நுழையச் செய்திருப்போம். *66.* அவர்கள் தவ்ராத்தையும், இன்ஜீலையும், தங்கள் இறைவனிடமிருந்து அருளப்பட்டதையும் பின்பற்றியிருந்தால் தங்களுக்கு மேலிருந்தும் கீழிருந்தும் புசித்திருப்பார்கள். அவர்களில் சிலர் நேரான வழியில் இருக்கின்றனர். ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் தீய காரியங்கள் செய்பவர்களாகவே இருக்கிறார்கள்.

*67.* தூதரே! உம் இறைவனிடமிருந்து உமக்கு அருளப்பட்டதை எடுத்துரைத்து விடுவீராக. அவ்வாறு நீர் செய்யாவிடில் அவனது தூதை நிறைவேற்றியவராக ஆக மாட்டீர். அல்லாஹ் உம்மை மக்களின் தீங்குகளிலிருந்து காப்பாற்றுவான். நிச்சயமாக அல்லாஹ் நிராகரிக்கும் மக்களுக்கு நேர்வழிகாட்டுவதில்லை.

*68.* நீர் கூறும்: "வேதக்காரர்களே! தவ்ராத்தையும், இன்ஜீலையும், உங்கள் இறைவனிடமிருந்து உங்களுக்கு அருளப்பட்டதையும் நீங்கள் பின்பற்றும்வரை நீங்கள் எதிலும் சேர்ந்தவர்கள் அல்லர்". உம் இறைவனிடமிருந்து உமக்கு அருளப்பட்டவை அவர்களில் பெரும்பாலோருக்கு வரம்புமீறலையும், நிராகரிப்பையுமே அதிகப்படுத்துகின்றன. எனவே நீர் நிராகரிப்பாளர்களுக்காகக் கவலைப்படாதீர். *69.* நம்பிக்கையாளர்கள், யூதர்கள், சாபியீன்கள், கிறிஸ்தவர்கள் ஆகியோரில் எவரெல்லாம் அல்லாஹ்வின்மீதும்,

மறுமைநாளின் மீதும் நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிந்தார்களோ அவர்களுக்கு எவ்வித அச்சமுமில்லை. அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள்.

70. நாம் இஸ்ராயீலின் மக்களிடம் வாக்குறுதி வாங்கினோம். அவர்களிடம் பல தூதர்களை அனுப்பினோம். மனம் விரும்பாததை தூதர்கள் அவர்களிடம் கொண்டுவந்தபோதெல்லாம் சிலரை மறுத்தார்கள், சிலரை கொலை செய்தார்கள். 71. இதனால் எந்தத் தீமையும் ஏற்படாது என்று அவர்கள் எண்ணினார்கள். எனவே அவர்கள் குருடர்களாகவும், செவிடர்களாகவும் ஆகி விட்டார்கள். ஆயினும் அல்லாஹ் அவர்கள்மீது கருணை காட்டினான். அதன் பின்னரும் அவர்களில் பெரும்பாலோர் குருடர்களாகவும், செவிடர்களாகவும் ஆகிவிட்டார்கள். அவர்கள் செய்பவற்றை எல்லாம் அல்லாஹ் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

72. “மரியாளின் மகன் மஸீஹ்தான் இறைவன்” என்று கூறியவர்கள் நிச்சயமாக நிராகரித்து விட்டார்கள். ஆனால் மஸீஹ், “இஸ்ராயீலின் மக்களே, என் இறைவனும், உங்கள் இறைவனுமாகிய அல்லாஹ்வையே வணங்குங்கள். எவர் அல்லாஹ்வுக்கு இணைவைக்கிறாரோ அவருக்கு அல்லாஹ் சொர்க்கத்தைத் தடை செய்து விட்டான். அவரது தங்குமிடம் நரகமாகும். அக்கிரமக்காரர்களுக்கு உதவிசெய்வோர் யாரும் இல்லை” என்றுதான் கூறியிருந்தார். 73. “இறைவன் மூவரில் ஒருவன்” என்று கூறியவர்களும் நிச்சயமாக நிராகரித்து விட்டார்கள். உண்மையில் அவன் ஒருவனைத் தவிர, வேறு இறைவன் இல்லை. இவ்வாறு கூறுவதைவிட்டும் அவர்கள் விலகாவிட்டால் அவர்களிலுள்ள நிராகரிப்பாளர்களை துன்புறுத்தும் வேதனை வந்தடைந்தே தீரும். 74. இவர்கள் அல்லாஹ்வின் பக்கம் மீண்டு அவனிடம் பாவமன்னிப்புக் கோர வேண்டாமா? அல்லாஹ்

பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். **75.** மரியாளின் மகன் மஸீஹ் ஒரு தூதராகவே இருக்கின்றார். அவருக்கு முன்னரும் பல தூதர்கள் வந்து சென்றுள்ளனர். அவரது தாய் வாய்மையான பெண்மணியாவார். இருவரும் உணவு உண்போராகவே இருந்தனர். அவர்களுக்கு நாம் எவ்வாறு ஆதாரங்களைத் தெளிவுபடுத்துகிறோம் என்பதைப் பாரும். பின்னர் அவர்கள் எங்கே திரும்பிச்செல்கிறார்கள் என்பதையும் பாரும். **76.** நீர் கூறும்: "அல்லாஹ்வைவிடுத்து உங்களுக்கு எவ்விதத் தீங்கையோ, நன்மையையோ அளிக்க முடியாத ஒன்றையா நீங்கள் வணங்குகிறீர்கள்?" அல்லாஹ்வே செவியேற்பவனாகவும் நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான்.

**77.** நீர் கூறும்: "வேதக்காரர்களே! உங்கள் மார்க்கத்தில் அநியாயமாக மிகைப்படுத்தி விடாதீர்கள். இதற்கு முன்னர் தானும் கெட்டு, பலரையும் வழிகெடுத்து நேரான பாதையை விட்டும் பிறழ்ந்து விட்ட மக்களின் மனஇச்சைகளைப் பின்பற்றாதீர்கள்".

**78.** இஸ்ராயீலின் மக்களில் நிராகரித்தோர் தாவீத் மற்றும் மரியாளின் மகன் இயேசுவின் நாவினால் சபிக்கப்பட்டு விட்டார்கள். ஏனெனில் அவர்கள் கீழ்ப்படியாமல் வரம்புமீறியவர்களாகவும் **79.** தாம் செய்துகொண்டிருந்த தீமைகளைவிட்டு ஒருவரையொருவர் தடுக்காமலும் இருந்தார்கள். அவர்கள் செய்து வந்தது மிகவும் தீய காரியமாகும். **80.** அவர்களில் பெரும்பாலோர் நிராகரிப்பாளர்களுடன் நட்பு கொண்டிருப்பதை நீர் காண்பீர். அல்லாஹ் அவர்கள்மீது கோபம் கொள்ளும்படி தங்களுக்காக அவர்கள் சேர்த்து வைத்திருந்தது எவ்வளவு மோசமானது! அவர்கள் என்றென்றும் வேதனையில் வீழ்ந்து கிடப்பார்கள். **81.** அவர்கள் அல்லாஹ்வின்மீதும், தூதரின் மீதும், அவருக்கு அருளப்பட்டதன்மீதும் நம்பிக்கை கொண்டவர்களாக இருந்திருந்தால் நிராகரிப்பாளர்களை

நண்பர்களாக ஆக்கிக்கொண்டிருக்க மாட்டார்கள். ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் அடிபணியாதவர்களாகவே இருக்கிறார்கள்.

82. மற்ற மக்களைவிட யூதர்கள் மற்றும் இணைவைப்பாளர்களே நம்பிக்கையாளர்களுக்குக் கடும் பகைவர்களாக இருப்பதை நீர் காண்பீர். மற்ற மக்களைவிட தங்களைக் கிறிஸ்தவர்கள் என கூறுபவர்களே நம்பிக்கையாளர்களுக்கு நேசம்கொள்வதில் மிக நெருக்கமாக இருப்பதை நீர் காண்பீர். ஏனெனில் அவர்களில் குருமார்களும், துறவிகளும் இருக்கின்றனர். அவர்கள் கர்வம் கொள்வதில்லை. 83. தூதருக்கு அருளப்பட்ட இவ்வாக்கை அவர்கள் செவியுறும்போது சத்தியத்தை அறிந்துகொண்டதனால் அவர்களது கண்களிலிருந்து கண்ணீர் வடிவதை நீர் காண்பீர். ‘எங்கள் இறைவா! நாங்கள் நம்பிக்கைகொண்டோம். எனவே நீ எங்களை சாட்சியாளர்களுடன் பதிவுசெய்வாயாக’, என்று அவர்கள் பிரார்த்தனை புரிவார்கள். 84. அல்லாஹ்வின்மீதும் எங்களிடம் வந்துள்ள சத்தியத்தின்மீதும் நம்பிக்கை கொள்ளாமலிருக்க எங்களுக்கு என்ன நேர்ந்தது? எங்கள் இறைவன் எங்களை நல்லோர்களுடன் சேர்த்து விடவேண்டும் என்று நாங்கள் பேராவல் கொண்டிருக்கிறோம். 85. அவர்கள் இவ்வாறு கூறியதனால் அல்லாஹ் அவர்களை சொர்க்கச் சோலைகளில் நுழையச் செய்வான். அவற்றில் ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். இதுவே நன்மை புரிவோருக்கான கூலியாகும். 86. சத்தியத்தை நிராகரித்து நம் சான்றுகளை மறுப்பவர்கள்தான் நரகவாசிகள்.

87. நம்பிக்கையாளர்களே! அல்லாஹ் உங்களுக்கு அனுமதித்த தூய பொருட்களை தடுக்கப்பட்டவையாக ஆக்கிக்கொள்ளாதீர்கள். வரம்பு மீறாதீர்கள். வரம்பு மீறுவோரை

அல்லாஹ் நேசிப்பதில்லை. 88. அல்லாஹ் உங்களுக்கு வழங்கிய அனுமதிக்கப்பட்ட பொருட்களிலிருந்து உண்ணுங்கள். நீங்கள் நம்பிக்கை கொண்டுள்ள அல்லாஹ்வையே அஞ்சுங்கள். 89. உங்கள் அர்த்தமற்ற சத்தியங்களுக்காக அல்லாஹ் உங்களைக் குற்றவாளியாக்க மாட்டான். ஆனால் நீங்கள் உறுதியாக செய்த சத்தியங்களுக்காக அவன் உங்களைக் குற்றவாளியாக்குவான். எனவே அதற்குப் பரிகாரமாக நீங்கள் உங்கள் குடும்பத்தினருக்கு அளிக்கும் உணவுகளில் நடுத்தரமான உணவை பத்து ஏழைகளுக்கு அளிக்க வேண்டும் அல்லது ஆடை வழங்க வேண்டும் அல்லது ஒரு அடிமையை விடுதலை செய்துவிட வேண்டும். இவ்வாறு செய்வதற்கு வசதி பெறாதவர்கள் மூன்று நாட்கள் நோன்பு நோற்க வேண்டும். நீங்கள் சத்தியம் செய்துகொண்டால் இதுவே உங்கள் சத்தியங்களுக்குப் பரிகாரமாகும். உங்கள் சத்தியங்களைப் பேணிக்கொள்ளுங்கள். இவ்வாறு அல்லாஹ் உங்களுக்குத் தனது கட்டளைகளைத் தெளிவுபடுத்துகிறான், நீங்கள் நன்றிசெலுத்துபவர்களாகத் திகழ வேண்டும் என்பதற்காக.

90. நம்பிக்கையாளர்களே! மது, சூதாட்டம், நடுகல் மற்றும் குறிபார்க்கும் அம்புகள் ஆகிய அனைத்தும் சாத்தானின் அருவருக்கத்தக்க காரியங்களாகும். எனவே நீங்கள் வெற்றிபெறும் பொருட்டு அதனைவிட்டு விலகிக்கொள்ளுங்கள். 91. மது மற்றும் சூதாட்டத்தின் மூலம் சாத்தான் உங்களிடையே பகைமையையும், குரோதத்தையும் உண்டாக்கவும் உங்களை இறைநினைவிலிருந்தும் தொழுகையிலிருந்தும் தடுக்கவுமே நாடுகின்றான். நீங்கள் இவற்றைவிட்டும் விலகிக்கொள்வீர்களா? 92. அல்லாஹ்வுக்கு கீழ்ப்படியுங்கள். தூதருக்கும் கீழ்ப்படியுங்கள். எச்சரிக்கையாக இருங்கள். நீங்கள் புறக்கணித்து விடுவீர்களாயின் - அறிந்துகொள்ளுங்கள். நம் தூதருடைய பொறுப்பு தெளிவாக

எடுத்துரைத்து விடுவதேயாகும். ***93.*** நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிந்தவர்கள் முன்னர் உண்டதில் எவ்விதக் குற்றமுமில்லை. அவர்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சி, நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிந்துவிட்டார்கள். பின்னரும் அல்லாஹ்வுக்கு அஞ்சி, நம்பிக்கை கொண்டு விட்டார்கள். பின்னரும் அல்லாஹ்வுக்கு அஞ்சி நன்மை செய்து விட்டார்கள். அல்லாஹ் நன்மை செய்வோரை நேசிக்கிறான்.

***94.*** நம்பிக்கையாளர்களே! உங்கள் கைகளுக்கும், ஈட்டிகளுக்கும் எட்டும் வகையில் இருக்கும் வேட்டையின் வாயிலாக அல்லாஹ் உங்களைச் சோதிப்பான். ஏனெனில் மறைவில் தன்னை யார் அஞ்சுகிறார்கள் என்பதை அல்லாஹ் அறிந்துகொள்வதற்காக. இதன் பின்னரும் எவர் வரம்புமீறுகிறாரோ அவருக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு. ***95.*** நம்பிக்கையாளர்களே! நீங்கள் புனிதப் பயண இஹ்ராம் ஆடையில் இருக்கும்போது வேட்டையாடி பிராணிகளைக் கொல்லாதீர்கள். உங்களில் வேண்டுமென்றே அதனைக் கொன்றவர் அதற்கு ஈடாக அவர் கொன்றதைப்போன்ற பிராணியையே கொடுக்க வேண்டும். உங்களில் நியாயமான இரு சாட்சிகள் இதனை முடிவு செய்வார்கள். இந்த நேர்ச்சையைக் கஅபாவிற்கு அனுப்பிவிட வேண்டும். அல்லது அதற்குப் பரிகாரமாக சில ஏழைகளுக்கு உணவளிக்க வேண்டும். அல்லது தான் செய்த செயலின் விளைவை அனுபவிப்பதற்காக அதற்கு ஈடாக நோன்பு நோற்க வேண்டும். இதுவரை நடந்துவிட்டதை அல்லாஹ் மன்னித்து விட்டான். எனவே எவரேனும் மீண்டும் இவ்வாறு செய்தால் அல்லாஹ் அவரை தண்டிப்பான். அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவனாகவும், தக்க தண்டனையளிப்பவனாகவும் இருக்கின்றான்.

***96.*** உங்களுக்கும், பயணிகளுக்கும் பயன்படும்பொருட்டு கடலில் வேட்டையாடுவதும், அதிலிருந்து உண்பதும் உங்களுக்கு

அனுமதிக்கப்பட்டுள்ளது. ஆயினும் நீங்கள் புனிதப் பயண (இஹ்ராம்) ஆடையில் இருக்கும்வரை தரையில் வேட்டையாடுவது உங்களுக்குத் தடுக்கப்பட்டுள்ளது. அல்லாஹ்வை அஞ்சுங்கள். அவனிடமே நீங்கள் ஒன்றுசேர்க்கப்படுவீர்கள். 97. புனித இல்லமான கஅபாவை மனிதர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் இடமாக அல்லாஹ் ஆக்கியுள்ளான். அவ்வாறே புனிதமான மாதங்களையும், பலி பிராணிகளையும், கழுத்தில் பட்டை அணிவிக்கப்பட்ட பிராணிகளையும் மக்களுக்காகப் பாதுகாப்புப் பெற்றவையாக அவன் ஆக்கியுள்ளான். இது வானங்களிலும், பூமியிலும் உள்ளவை அனைத்தையும் அல்லாஹ் அறிவான் என்பதை நீங்கள் அறிந்துகொள்வதற்காகத்தான். அல்லாஹ் எல்லாப் பொருட்களையும் நன்கறிந்தவன். 98. அறிந்துகொள்ளுங்கள், அல்லாஹ் தண்டிப்பதில் கடுமையானவன். ஆயினும் அவன் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். 99. எடுத்துரைத்து விடுவதே தூதர்மீதுள்ள கடமையாகும். நீங்கள் வெளிப்படுத்துவதையும், மறைத்து வைப்பதையும் அல்லாஹ் நன்கறிவான். 100. நீர் கூறும்: “நல்லவையும், தீயவையும் சமமாக முடியாது, தீயவற்றின் பெருக்கம் உம்மை வியப்பில் ஆழ்த்தினாலும் சரியே”. எனவே அறிவுடையோரே! அல்லாஹ்வையே அஞ்சுங்கள், அதனால் நீங்கள் வெற்றிபெறக்கூடும்,

101. நம்பிக்கையாளர்களே! சில விஷயங்களைக் குறித்துக் கேள்வி கேட்காதீர்கள். அவை வெளிப்படுத்தப்பட்டால் உங்களுக்கு மனவருத்தத்தை உண்டாக்கும். அவற்றைக் குறித்து நீங்கள் குர்ஆன் அருளப்படுகின்ற வேளையில் கேள்வி எழுப்பினால் அவை உங்களுக்கு வெளிப்படுத்தப்பட்டுவிடும். அல்லாஹ் அவற்றை மன்னித்து விட்டான். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், சகிப்புத்தன்மை உடையவனாகவும் இருக்கின்றான். 102. உங்களுக்கு முந்திய

*சமூகத்தினரும் இதேபோன்றுதான் கேள்வி கேட்டனர். பின்னர் அவர்கள் அதனை நிராகரிப்பவர்களாக ஆகிவிட்டனர். 103. பஹீரா, ஸாயிபா, வஸீலா, ஹாம் (சிலைகளின் பெயரில் நேர்ந்து விடப்பட்ட பிராணிகள்) ஆகியவற்றை அல்லாஹ் ஏற்படுத்தவில்லை. ஆனால் நிராகரிப்பாளர்கள்தான் அல்லாஹ்வின் மீது பொய்யாகப் புனைந்து கூறுகிறார்கள். அவர்களில் பெரும்பாலோர் அறிவற்றவர்களாகவே இருக்கிறார்கள்*. 104. "அல்லாஹ் உங்களுக்கு அருளியதன் பக்கமும், தூதரின் பக்கமும் வாருங்கள்" என்று அவர்களிடம் கூறப்பட்டால் "எங்கள் முன்னோர்களை எதில் கண்டோமோ அதுவே எங்களுக்குப் போதுமானது" என்று கூறுகிறார்கள். அவர்களது முன்னோர்கள் ஒன்றும் அறியாதவர்களாகவும், நேர்வழி பெறாதவர்களாகவும் இருந்தாலுமா?. 105. நம்பிக்கையாளர்களே! நீங்கள் உங்களைப்பற்றிக் கவலைப்படுங்கள். நீங்கள் நேர்வழியில் இருந்தால் மற்றவர்களின் வழிகேடு உங்களுக்கு எவ்வித இழப்பையும் ஏற்படுத்தாது. நீங்கள் அனைவரும் அல்லாஹ்வின் பக்கமே திரும்ப வேண்டும், அப்போது நீங்கள் செய்து கொண்டிருந்தவற்றைப்பற்றி அவன் உங்களுக்கு அறிவிப்பான்.*

*106. நம்பிக்கையாளர்களே! உங்களில் எவருக்கேனும் மரணவேளை நெருங்கிவிட்டால் மரணசாஸனம் செய்யும்போது உங்களிலிருந்து நம்பிக்கைக்குரிய இரு சாட்சிகளை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். அல்லது நீங்கள் பயணத்தில் இருக்கும்போது மரணம் உங்களை வந்தடைந்து விட்டால் உங்களைத்தவிர மற்றவர்களிலிருந்து இரு சாட்சியங்களை எடுத்துக்கொள்ளலாம். பின்னர் உங்களுக்கு சந்தேகம் ஏற்பட்டால் இரு சாட்சியங்களையும்*

---

*இவை இஸ்லாத்திற்கு முந்தைய காலகட்டத்தில் வாழ்ந்த அரேபியர்கள் தங்கள் கடவுட் சிலைகளுக்கு நேர்ந்துவிடும் கால்நடைகளுக்கு வைத்துக்கொண்ட பெயர்கள்.

தொழுகைக்குப் பின்னர் நிறுத்தி, அவர்கள் இருவரும் “நாங்கள் ஒருபோதும் எந்த விலைக்கும் அதனை விற்றுவிட மாட்டோம். அவர்கள் நெருங்கிய உறவினர்களாக இருந்தாலும் சரியே. நாங்கள் அல்லாஹ்வின் சாட்சியத்தை மறைக்க மாட்டோம். அவ்வாறு நாங்கள் செய்வோமேயானால் நிச்சயமாக நாங்கள் பாவிகளாகி விடுவோம்” என்று அல்லாஹ்வின் மீது ஆணையிட்டுக் கூற வேண்டும். **107.** அவர்கள் இருவரும் நேர்மைக்கு மாறாக செயல்பட்டார்கள் என்று தெரியவந்தால் அப்போது பாதிக்கப்பட்டவர்களின் சார்பில் வேறு இருவர் சாட்சி கூற வேண்டும். அவர்கள் “எங்களின் சாட்சியம் அவ்விரு சாட்சியங்களைவிட வாய்மையானது. நாங்கள் எவ்வித வரம்பு மீறலிலும் ஈடுபடவில்லை. அவ்வாறு செய்தால் நாங்கள் அக்கிரமக்காரர்களாகி விடுவோம்” என்று அல்லாஹ்வின் மீது ஆணையிட்டுக் கூறவேண்டும். **108.** மக்கள் சரியான முறையில் சாட்சி கூறுவதற்கும் அல்லது நம்முடைய சத்தியம் அவர்களுடைய சத்தியத்தினால் மறுதலிக்கப்பட்டுவிடுமோ என்று அவர்கள் அஞ்சுவதற்கும் இதுவே மிக நெருக்கமான வழிமுறையாகும். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். செவிசாயுங்கள். கீழ்ப்படியாதோரை அல்லாஹ் நேர்வழியில் செலுத்துவதில்லை.

**109.** தூதர்கள் அனைவரையும் ஒன்றுசேர்க்கும் நாளில், “உங்களுக்கு என்ன எதிர்வினை கிடைத்தது?” என்று அல்லாஹ் கேட்பான். அவர்கள் கூறுவார்கள்: “எங்களுக்கு ஒன்றும் தெரியாது. மறைவாக உள்ளவற்றை நீயே அறியக்கூடியவன்”. **110.** அப்போது அல்லாஹ் கூறுவான்: “மரியாளின் மகன் இயேசுவே! உனக்கும் உனது தாயாருக்கும் நான் அருளிய அருட்கொடைகளை நினைவு கூர்வாயாக; தூய ஆன்மாவைக்கொண்டு நான் உனக்கு உதவிபுரிந்தேன். நீ குழந்தையாக மடியில் இருந்தபோதும், வாலிபப் பருவத்திலும் மக்களிடம் பேசினாய். நாம் உனக்கு வேதத்தையும்,

ஞானத்தையும், தவ்ராத்தையும், இன்ஜீலையும் போதித்தோம். எனது கட்டளைப்படி மண்ணைக்கொண்டு பறவைகளின் வடிவத்தை உண்டாக்கி அதில் நீ ஊதியதும் என் கட்டளைப்படி அது பறவையாகி விட்டது. நீ குருடனையும், தொழுநோயாளியையும் என் கட்டளைப்படி குணப்படுத்தினாய். என் கட்டளைப்படி நீ இறந்தவர்களை மீண்டும் உயிர்ப்பித்து எழச்செய்தாய். இஸ்ராயீலின் மக்களிடம் நீ தெளிவான அத்தாட்சிகளைக் கொண்டுவந்தபோது அவர்களில் நிராகரிப்பாளர்கள் “இது தெளிவான ஒரு சூனியமேயாகும்” என்று கூறிய வேளையில் நான் அவர்களின் தீங்கை விட்டும் உன்னைக் காப்பாற்றினேன்’’.

*111.* என் மீதும் என் தூதர்களின் மீதும் நம்பிக்கை கொள்ளுங்கள் என்று உன் சீடர்களுக்கு நான் உணர்த்தியபோது, “நாங்கள் நம்பிக்கைகொண்டோம். நாங்கள் அடிபணிந்தவர்கள் என்பதற்கு நீயே சாட்சியாக இருப்பாயாக‘” என்று அவர்கள் கூறினார்கள்.

*112.* மரியாளின் மகன் இயேசுவே! உம் இறைவன் எங்களுக்காக வானத்திலிருந்து ஒரு உணவுத்தட்டை இறக்கி வைப்பானா? என்று சீடர்கள் கேட்டபோது “நீங்கள் நம்பிக்கை கொண்டவர்களாக இருப்பின். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்” என்று அவர் கூறினார். *113.* அதற்கு அவர்கள் நாங்கள் விரும்புவதெல்லாம் இதுதான். “நாங்கள் அதிலிருந்து உண்ண வேண்டும். எங்கள் உள்ளங்கள் அமைதியடைய வேண்டும். நீர் எங்களிடம் உண்மையே கூறினீர் என்பதை அறிந்து அதற்கு நாங்கள் சாட்சியாகவும் இருக்க வேண்டும்” என்று கூறினார்கள். *114.* “அல்லாஹ்வே! எங்கள் இறைவனே, நீ வானத்திலிருந்து எங்களுக்கு ஒரு உணவுத்தட்டை இறக்குவாயாக! அது எங்களுக்கும், எங்கள் முன்னோர்களுக்கும், எங்களுக்குப்பின் வருவோருக்கும் திருநாளாகவும் உன்னிடமிருந்து

ஒரு சான்றாகவும் அமையட்டும். எங்களுக்கு வழங்குவாயாக, நீயே வழங்குபவர்களில் மிகச் சிறந்தவனாக இருக்கின்றாய்'' என்று மரியாளின் மகன் இயேசு பிரார்த்தனை செய்தார். *115.* அதற்கு அல்லாஹ் "நிச்சயமாக நான் உங்களுக்கு அதை இறக்குவேன். ஆனால் அதன் பின்னரும் உங்களில் யாரேனும் நிராகரித்தால் அவருக்கு நான் உலகில் யாருக்கும் வழங்காத கடுந்தண்டனையை வழங்குவேன்" என்று கூறினான்.

*116.* "மரியாளின் மகன் இயேசுவே, அல்லாஹ்வையன்றி என்னையும், என் தாயையும் வணக்கத்திற்குரியவர்களாக ஆக்கிக் கொள்ளுங்கள் என்று நீர் மக்களிடம் கூறினீரா?" என்று அல்லாஹ் கேட்கும்போது, அவர் கூறுவார்: "நீ மிகத்தூய்மையானவன். எனக்கு தகுதியில்லாத விஷயத்தைக் குறித்து கூறுவது எனது பணியல்ல. அவ்வாறு நான் கூறியிருந்தால் நிச்சயம் அது உனக்குத் தெரிந்திருக்கும். என் உள்ளத்தில் இருப்பதை நீ நன்கறிவாய். ஆனால் உன் உள்ளத்தில் இருப்பதை நான் அறிய மாட்டேன். நிச்சயமாக நீயே மறைவான விஷயங்களை அறிந்தவனாக இருக்கின்றாய்".

*117.* "என் இறைவனும், உங்கள் இறைவனுமாகிய அல்லாஹ்வையே வணங்குங்கள்" என்று நீ எனக்கு கட்டளை இட்டதையே நான் அவர்களிடம் கூறினேன். அவர்களிடையே நான் இருந்தவரை அவர்களின்மீது சாட்சியாக இருந்தேன். என்னை நீ கைப்பற்றியபிறகு அவர்களை நீயே கண்காணிப்பவனாக இருந்தாய். நீயே எல்லாவற்றின்மீதும் சாட்சியாளனாக இருக்கின்றாய். *118.* நீ அவர்களுக்குத் தண்டனை அளித்தால் அவர்கள் உன் அடியார்கள்தான். அவர்களை நீ மன்னித்து விட்டால் - நிச்சயமாக நீ யாவற்றையும் மிகைத்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றாய். *119.* அல்லாஹ் கூறுவான்; "இன்றைய நாள் வாய்மையாளர்களின் வாய்மை அவர்களுக்குப்

பயனளிக்கக்கூடிய நாளாகும். அவர்களுக்கு சுவனங்கள் உண்டு. அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அவற்றில் அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். அல்லாஹ் அவர்களைக் குறித்து திருப்தியடைந்தான். அவர்களும் அல்லாஹ்வைக் குறித்து திருப்தியடைந்தார்கள். இதுவே மாபெரும் வெற்றியாகும்". 120. வானங்கள், பூமி மற்றும் அவற்றிலுள்ள அனைத்தின் ஆட்சி அல்லாஹ்வுக்கே உரியது. அவன் எல்லாவற்றின்மீதும் பேராற்றலுடையவன்.

## 6. கால்நடைகள் (அல்அன்ஆம்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

1. அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே. அவனே வானங்களையும், பூமியையும் படைத்தான். இருளையும், ஒளியையும் உண்டாக்கினான். இவ்வாறு இருந்தும் சத்தியத்தை நிராகரிப்பவர்கள் மற்றவற்றை தம் இறைவனுக்கு இணையாக்குகிறார்கள். 2. அவனே உங்களை மண்ணிலிருந்து படைத்துப் பின்னர் (உங்களுக்கு) ஒரு தவணையை நிர்ணயித்தான். அக்குறிப்பிட்ட தவணையை அவன் மட்டுமே அறிவான். அவ்வாறிருந்தும் நீங்கள் சந்தேகிக்கிறீர்களா? 3. வானங்களிலும், பூமியிலும் அவனே இறைவன். நீங்கள் மறைப்பதையும், வெளிப்படுத்துவதையும் அவன் அறிவான். நீங்கள் செய்பவற்றையும் அவன் அறிவான்.

4. இருந்தபோதும் தங்கள் இறைவனிடமிருந்து ஒரு சான்று வரும்போதெல்லாம் அவர்கள் புறக்கணிக்கவே செய்கிறார்கள். 5. எனவே தங்களிடம் வந்துள்ள சத்தியத்தையும் அவர்கள் மறுத்து விட்டார்கள். அவர்கள் பரிகாசம் செய்து கொண்டிருந்தவற்றின் விளைவுகள் விரைவில் அவர்களிடம் வந்தே தீரும். 6. அவர்களுக்கு முன்னர் நாம் எத்தனையோ சமூகங்களை அழித்திருக்கின்றோம்

என்பதை அவர்கள் பார்க்கவில்லையா? பூமியில் உங்களுக்கு வழங்காத வசதிகளையெல்லாம் அவர்களுக்கு வழங்கியிருந்தோம். நாம் அவர்களின்மீது வானத்திலிருந்து நன்கு மழை பொழியச்செய்து ஆறுகளை ஓடச்செய்தோம். ஆயினும் அவர்களது பாவங்களினால் அவர்களை அழித்து விட்டோம். அவர்களுக்குப் பின்னர் வேறொரு சமூகத்தினரை உருவாக்கினோம்.

7. காகிதத்தில் எழுதப்பட்ட ஒரு வேதத்தை நாம் உமக்கு அருளி தம் கைகளால் அதனைத் தொட்டுப் பார்த்தாலும் "இது தெளிவான ஒரு சூனியமே" என்றுதான் நிராகரிப்பாளர்கள் கூறுவார்கள். 8. "இவருடன் ஒரு வானவர் இறக்கப்பட்டிருக்க வேண்டாமா?" என்று அவர்கள் கேட்கிறார்கள். அவ்வாறு நாம் ஒரு வானவரை இறக்கியிருந்தால் விவகாரம் முடிந்திருக்கும். பிறகு அவர்களுக்கு சிறிதும் அவகாசம் அளிக்கப்பட்டிருக்காது. 9. நாம் ஒரு வானவரைத் தூதராக அனுப்பியிருந்தால் அவரையும் மனித உருவத்திலேயே அனுப்பியிருப்போம். அவர்கள் இப்போது வீழ்ந்து கிடக்கும் சந்தேகத்திலேயே அவர்களை ஆழ்த்தியிருப்போம். 10. உங்களுக்கு முன்னரும் தூதர்கள் பலர் பரிகசிக்கப்பட்டார்கள். முடிவில் எதனைக்கொண்டு அவர்கள் பரிகாசம் செய்தார்களோ அந்த பரிகாசம் செய்தவர்களை (அந்த வேதனை) சூழ்ந்து கொண்டது. 11. நீர் கூறும்: "நிராகரித்தோரின் கதி என்னவாயிற்று என்பதைப் பூமியில் சுற்றித் திரிந்து பாருங்கள்".

12. "வானங்களிலும், பூமியிலும் உள்ளவை யாருக்குரியவை?" என்று நீர் கேளும். "எல்லாம் அல்லாஹ்வுக்கே உரியவை" என்று நீர் கூறும். அவன் கருணை புரிவதை தன்மீது கடமையாக்கிக் கொண்டான். மறுமைநாளில் நிச்சயமாக அவன் உங்கள் அனைவரையும் ஒன்று சேர்ப்பான். அதில் எத்தகைய சந்தேகமுமில்லை. எவரெல்லாம் தமக்குத்தாமே இழப்பை ஏற்படுத்திக் கொண்டார்களோ அவர்கள்

இதன்மீது நம்பிக்கை கொள்ள மாட்டார்கள். *13.* இரவிலும், பகலிலும் இருப்பவை அல்லாஹ்வுக்கே உரியவையாகும். அவன் செவியேற்பவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். *14.* நீர் கூறும்: "வானங்களையும், பூமியையும் படைத்தவனாகிய அல்லாஹ்வைத்தவிர வேறு எவரையும் நான் பாதுகாவலனாக எடுத்துக் கொள்வேனா? அவனே அனைவருக்கும் உணவளிக்கிறான், எவரும் அவனுக்கு உணவளிப்பதில்லை". நீர் கூறும்: "கீழ்ப்படிந்தவர்களில் முதன்மையானவனாக இருக்க வேண்டும் என்று நான் ஏவப்பட்டுள்ளேன்". ஒருபோதும் இணைவைப்போரில் ஒருவராக நீர் ஆகி விடாதீர். *15.* நீர் கூறும்: "நான் என் இறைவனுக்கு மாறு செய்தால் மாபெரும் ஒரு நாளின் வேதனையை அஞ்சுகிறேன்". *16.* எவர் அந்நாளின் வேதனையை விட்டும் காக்கப்படுகிறாரோ உண்மையில் அவர்மீது அவன் பெருங்கருணை புரிந்து விட்டான். இதுவே தெளிவான வெற்றியாகும்.

*17.* அல்லாஹ் உமக்கு ஏதேனும் துன்பத்தை ஏற்படுத்தினால் அவனைத்தவிர யாராலும் அதனை நீக்க முடியாது. அவன் உமக்கு ஏதேனும் நன்மையை அளித்தால் - அவன் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவன். *18.* தன் அடியார்கள்மீது அவன் ஆதிக்கம் செலுத்துகிறான். அவன் ஞானம் மிக்கவனாகவும், அனைத்தையும் அறிந்தவனாகவும் இருக்கின்றான். *19.* நீர் கேளும்: "மிகப்பெரிய சாட்சி யாருடையது?". நீர் கூறும்: "அல்லாஹ்தான் எனக்கும் உங்களுக்கும் இடையே சாட்சியாக இருக்கின்றான். உங்களுக்கும், இந்த குர்ஆன் சென்றடைபவர்களுக்கும் எச்சரிக்கை செய்வதற்காகவே எனக்கு குர்ஆன் அருளப்பட்டுள்ளது. அல்லாஹ்வுடன் வேறு கடவுள்களும் இருக்கின்றார்கள் என்பதற்கு நீங்கள் சாட்சி கூறுகிறீர்களா?. நான் அவ்வாறு சாட்சி கூற மாட்டேன்" என்று நீர் கூறும். "அவன் ஒருவனே இறைவன். உங்களின்

இணைவைப்பைவிட்டும் நான் விலகியவனாக இருக்கின்றேன்” என்றும் நீர் கூறுவீராக.

*20.* நம்மால் வேதம் வழங்கப்பட்டவர்கள் தம் புதல்வர்களை அறிந்து கொள்வதைப்போல இதனையும் நன்கறிந்து கொள்வார்கள். ஆயினும் தமக்குத்தாமே இழப்பை ஏற்படுத்திக் கொண்டவர்கள்தான் இதனை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். *21.* அல்லாஹ்வின் மீது பொய்யைப் புனைபவனைவிட அல்லது அவனது சான்றுகளை மறுப்பவனைவிட மிகப்பெரிய அக்கிரமக்காரன் யார்? நிச்சயமாக அக்கிரமக்காரரர்கள் வெற்றி பெற மாட்டார்கள். *22.* அவர்கள் அனைவரையும் ஒன்று சேர்க்கும் அந்நாளில் இணைவைப்பாளர்களிடம், நீங்கள் வாதிட்டுக் கொண்டிருந்த உங்கள் இணைத்தெய்வங்கள் எங்கே, என்று நாம் கேட்போம். *23.* அப்போது “எங்கள் இறைவனாகிய அல்லாஹ்வின் மீது ஆணையாக, நாங்கள் இணைவைப்பாளர்களாக இருக்கவில்லை” என்று கூறுவதைத் தவிர அவர்களிடம் வேறு எந்த பொய்க்காரணமும் இருக்காது. *24.* இவர்கள் தங்கள் மீதே எவ்வாறு பொய்யுரைக்கிறார்கள் என்பதைப் பாரும். அவர்கள் கற்பனை செய்து கொண்டிருந்தவை யாவும் மறைந்து விடும்.

*25.* அவர்களில் சிலர் உமது பேச்சைக் காது கொடுத்துக் கேட்கிறார்கள். ஆயினும் அவர்கள் அதனைப் புரிந்துகொள்ள முடியாதவாறு நாம் அவர்களின் உள்ளங்களில் திரைகளையும் அவர்களது காதுகளில் செவிட்டுத்தன்மையையும் ஏற்படுத்தி விட்டோம். சான்றுகள் அனைத்தையும் அவர்கள் பார்த்து விட்டாலும் அவற்றின்மீது நம்பிக்கை கொள்ள மாட்டார்கள். உம்முடன் தர்க்கிக்க வந்தால் “இது முன்னோர்களின் கட்டுக்கதைகள்தான்” என்று அந்நிராகரிப்பாளர்கள் கூறுகிறார்கள். *26.* அவர்கள் மக்களைத் தடுத்துத் தாமும் அதனை விட்டு

விலகிவிடுகிறார்கள். அவர்கள் தம்மைத்தாமே அழிவுக்குள்ளாக்கிக் கொள்கிறார்கள். ஆயினும் அவர்கள் உணர்ந்து கொள்வதில்லை. **27.** அவர்கள் நரகத்திற்குமுன் நிறுத்தப்படும்போது நீர் பார்க்க வேண்டுமே! "எங்கள் கேடே, நாங்கள் திரும்ப அனுப்பப்பட வேண்டுமே! நாங்கள் எங்கள் இறைவனின் சான்றுகளை மறுக்காமல் நம்பிக்கை கொண்டோர்களாக ஆகியிருக்க வேண்டுமே" என்று புலம்புவார்கள். **28.** அப்படியில்லை. இதற்குமுன் அவர்கள் மறைத்துக் கொண்டிருந்தவை யாவும் அவர்களிடம் வெளிப்பட்டு விட்டது. ஒருவேளை அவர்கள் திரும்ப அனுப்பப்பட்டாலும் தடுக்கப்பட்ட செயல்களையே மீண்டும் செய்வார்கள். நிச்சயமாக அவர்கள் பொய்யர்களே.

**29.** 'வாழ்க்கை என்பது நம்முடைய இவ்வுலக வாழ்க்கைதான், நாம் மீண்டும் எழுப்பப்படப் போவதில்லை' என்று அவர்கள் கூறுகிறார்கள். **30.** தம் இறைவனுக்கு முன் அவர்கள் நிறுத்தப்படும்போது நீர் காண வேண்டுமே! "இது உண்மை இல்லையா" என்று அவன் அவர்களிடம் கேட்பான். அதற்கு அவர்கள், ஆம், எங்கள் இறைவனின் மீது ஆணையாக! இது உண்மையே! என்பார்கள். "நீங்கள் நிராகரித்துக் கொண்டிருந்ததனால் இப்போது வேதனையைச் சுவையுங்கள்" என்று அவன் கூறுவான். **31.** அல்லாஹ்வின் சந்திப்பை மறுத்தவர்கள் உறுதியாக இழப்புக்குள்ளாகி விட்டார்கள். இறுதியில் அந்நேரம் திடீரென வந்துவிடும்போது அவர்கள், "அந்தோ! இவ்விஷயத்தில் நாங்கள் எவ்வளவு அலட்சியமாக இருந்து விட்டோம்" என்று புலம்புவார்கள். அவர்கள் தம் சுமைகளைத் தம் முதுகின் மீது சுமந்தவர்களாக இருப்பார்கள். பாருங்கள், எத்தகைய ஒரு மோசமான சுமையை அவர்கள் சுமந்து கொண்டிருக்கிறார்கள்! **32.** இவ்வுலக வாழ்க்கை வீணும், விளையாட்டுமேயாகும். இறையச்சமுடையோருக்கு மறுமையின் வீடு (சொர்க்கம்) சிறந்ததாகும். நீங்கள் புரிந்துகொள்ள மாட்டீர்களா?

*33.* அவர்கள் கூறுவது உம்மை வருத்தமடையச் செய்கிறது என்பதை நாம் அறிவோம். அவர்கள் உம்மை மறுக்கவில்லை; மாறாக இந்த அக்கிரமக்காரர்கள் உண்மையில் அல்லாஹ்வின் அத்தாட்சிகளைத்தான் மறுக்கிறார்கள். *34.* உமக்கு முன்னரும் தூதர்கள் நிராகரிக்கப்பட்டார்கள். நம்முடைய உதவி வரும்வரை அவர்கள் மறுக்கப்பட்டதையும், துன்புறுத்தப்பட்டதையும் பொறுத்துக் கொண்டார்கள். இறைவாக்குகளை மாற்றுபவர் எவரும் இல்லை. தூதர்களின் சில செய்திகள் உம்மிடம் வந்தே உள்ளன. *35.* அவர்களின் புறக்கணிப்பு உமக்கு கஷ்டமாகத் தோன்றினால் - உம்மால் முடியுமானால் - பூமியில் ஏதேனும் சுரங்கத்தின் மூலமோ, வானத்தில் ஏணி வைத்தோ அவர்களிடம் ஒரு சான்றினைக் கொண்டு வாரும். அல்லாஹ் நாடியிருந்தால் அவர்கள் அனைவரையும் நேர்வழியில் ஒன்று சேர்த்திருப்பான். எனவே நீர் அறிவீனர்களில் ஒருவராக ஆகி விடாதீர். *36.* செவியேற்பவர்கள்தான் ஏற்றுக் கொள்வார்கள். இறந்தவர்களை அல்லாஹ் எழுப்புவான். பின்னர் அவர்கள் அவன் பக்கமே கொண்டு வரப்படுவார்கள்.

*37.* “அவரது இறைவனிடமிருந்து ஏதேனும் ஒரு சான்று அவருக்கு அருளப்பட்டிருக்க வேண்டாமா?” என்று அவர்கள் கேட்கிறார்கள். நீர் கூறும், “சான்றினை அருள்வதற்கு அல்லாஹ் ஆற்றலுடையவனே”. ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் அறிந்து கொள்வதில்லை. *38.* பூமியில் ஊர்ந்து செல்லும் பிராணிகளும், தமது இரு இறக்கைகளால் பறந்து செல்லும் பறவைகளும் உங்களைப்போன்ற இனங்கள்தான். நாம் பதிவேட்டில் குறிப்பிடாமல் எந்த ஒன்றையும் விட்டுவைக்கவில்லை. பின்னர் அவையனைத்தும் தங்கள் இறைவனிடமே ஒன்று திரட்டப்படும். *39.* நம் சான்றுகளை மறுப்பவர்கள் காரிருளில் தத்தளிக்கும் செவிடர்களும் ஊமையர்களும் ஆவர். தான் நாடுவோரை அல்லாஹ்

வழிதவறச்செய்து விடுகிறான்; தான் நாடுவோரை நேரான வழியில் செலுத்துகிறான்.

40. நீர் கேளும்: "இறைவேதனை உங்களிடம் வந்து விட்டால் அல்லது 'அந்நேரம்' வந்து விட்டால் நீங்கள் அல்லாஹ்வையன்றி வேறு எதையேனும் அழைப்பீர்களா? நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் கூறுங்கள்". 41. மாறாக நீங்கள் அவனையே அழைப்பீர்கள். நீங்கள் எதற்காக அவனை அழைக்கிறீர்களோ அத்துன்பத்தை, அவன் நாடினால் நீக்கி விடுவான். உங்கள் இணைத்தெய்வங்களை நீங்கள் மறந்து விடுவீர்கள்.

42. உமக்கு முன்னர் பல சமூகத்தாரிடம் நாம் தூதர்களை அனுப்பினோம். அவர்கள் பணிந்திட வேண்டும் என்பதற்காக அவர்களை நாம் வேதனையாலும், துன்பத்தாலும் தண்டித்தோம். 43. நமது தண்டனை அவர்களிடம் வந்தபோது அவர்கள் ஏன் பணியவில்லை? உண்மையில் அவர்களின் இதயங்கள் இறுகி விட்டன. அவர்களின் செயல்களை சாத்தான் அவர்களுக்கு அழகாக்கிக் காட்டி விட்டான். 44. தங்களுக்கு வழங்கப்பட்ட அறிவுரைகளை அவர்கள் மறந்து விட்டபோது நாம் அவர்களுக்கு எல்லாவற்றின் வாசல்களையும் திறந்து விட்டோம். தங்களுக்கு வழங்கப்பட்டதைக்கொண்டு அவர்கள் மகிழ்ச்சியுற்ற சமயத்தில் திடீரென நாம் அவர்களைத் தண்டித்தோம். அப்போது அவர்கள் நிராசையடைந்து விட்டார்கள். 45. எனவே அக்கிரமக்கார மக்கள் அடியோடு அழிக்கப்பட்டார்கள். அகிலங்களின் இறைவனாகிய அல்லாஹ்வுக்கே அனைத்துப் புகழும்.

46. நீர் கேளும்: "அல்லாஹ் உங்கள் செவிகளையும், கண்களையும் பறித்து உங்கள் இதயங்களின் மீதும் முத்திரையிட்டுவிட்டால் அல்லாஹ்வைத்தவிர வேறு எந்த இறைவனால் அவற்றைத்

திருப்பிக்கொண்டு வர முடியும்?". நாம் எவ்வாறு சான்றுகளைப் பல்வேறு கோணங்களில் தெளிவுபடுத்துகிறோம் என்பதைப் பாரும். ஆயினும் அவர்கள் புறக்கணித்தே வருகிறார்கள். 47. நீர் கேளும்: "இறைவேதனை உங்களிடம் திடீரென்றோ, முன்னறிவிப்புடனோ வந்துவிட்டால் அக்கிரமக்காரர்களைத்தவிர வேறு யார்தான் அழிவார்கள்?" 48. தூதர்களை நாம் நற்செய்தி கூறுபவர்களாகவும், எச்சரிக்கை செய்பவர்களாகவுமே அனுப்பியுள்ளோம். நம்பிக்கைகொண்டு தன்னைச் சீர்படுத்திக் கொள்பவர்களுக்கு எவ்வித அச்சமுமில்லை, அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள். 49. ஆனால் நமது சான்றுகளை மறுப்பவர்களைத்தான் - அவர்களது கீழ்ப்படியாமையினால் - வேதனை பிடித்துக்கொள்ளும். 50. நீர் கூறும்: "என்னிடம் அல்லாஹ்வின் பொக்கிஷங்கள் இருப்பதாகவோ, மறைவானவற்றை நான் அறிவேன் என்றோ உங்களிடம் நான் கூறவில்லை. நான் ஒரு வானவர் என்றும் உங்களிடம் கூறவில்லை. எனக்கு இறைவனிடமிருந்து அறிவிக்கப்படுவதையே நான் பின்பற்றுகிறேன்". நீர் கேளும்: "பார்வையற்றவனும், பார்வையுள்ளவனும் சமமாவார்களா? நீங்கள் சிந்திக்க மாட்டீர்களா?"

51. தம் இறைவனைத்தவிர வேறு பாதுகாவலனோ, பரிந்துரையாளனோ இல்லாத நிலையில் இறைவனிடம் ஒன்று திரட்டப்படுவதைக் குறித்து அஞ்சுவோருக்கு இந்த வேதத்தின் மூலம் எச்சரிக்கை செய்வீராக. இதனால் அவர்கள் இறைவனை அஞ்சக்கூடும். 52. இறைதிருப்தியை நாடி காலையிலும் மாலையிலும் தங்கள் இறைவனை அழைப்பவர்களை நீர் உம்மை விட்டு விரட்டி விடாதீர். அவர்களது கேள்வி கணக்குகளைப் பற்றி உம்மிடமோ, உமது கேள்வி கணக்குகளைப் பற்றி அவர்களிடமோ எந்தப் பொறுப்பும் இல்லை. அவர்களை நீர்

விரட்டி விட்டால் அக்கிரமக்காரர்களில் ஒருவராக ஆகி விடுவீர். **53.** இவ்வாறு “நமக்கிடையே இவர்கள் மீதுதான் அல்லாஹ் அருள் புரிந்துள்ளானா?” என்று அவர்கள் கூறுவதற்காக நாம் அவர்களில் சிலரை சிலரைக்கொண்டு சோதித்தோம். நன்றி செலுத்துவோரை அல்லாஹ் நன்கறிந்தவன் இல்லையா?

**54.** நம்முடைய வசனங்களின்மீது நம்பிக்கை கொண்டோர் உம்மிடம் வந்தால் “உங்கள்மீது சாந்தி உண்டாகட்டும்” என்று நீர் கூறும். உங்கள் இறைவன் கருணை புரிவதை தன் மீது கடமையாக்கிக் கொண்டான். உங்களில் எவரேனும் அறியாமையினால் பாவம் செய்துவிட்டு அதன் பின்னர் மன்னிப்புக்கோரி தன்னை சீர்திருத்திக் கொண்டால் (அறிந்துகொள்ளுங்கள்) அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். **55.** குற்றவாளிகளின் பாதை அம்பலமாகிவிட வேண்டும் என்பதற்காக நாம் நம் சான்றுகளை இவ்வாறு தெளிவாக விவரிக்கின்றோம்.

**56.** நீர் கூறும்: “அல்லாஹ்வை அன்றி நீங்கள் அழைக்கின்றவற்றை வணங்குவதை விட்டும் நான் தடுக்கப்பட்டுள்ளேன்”. நீர் கூறும்: “உங்களின் விருப்பங்களை நான் பின்பற்ற மாட்டேன், அவ்வாறு செய்தால் நான் வழிதவறி நேர்வழி பெறுவோரில் இல்லாதவனாகி விடுவேன்”. **57.** நீர் கூறும்: “நான் என் இறைவனிடமிருந்து வந்துள்ள தெளிவான ஒரு சான்றின் மீது இருக்கின்றேன். ஆயினும் நீங்கள் அதனை மறுத்து விட்டீர்கள். நீங்கள் அவசரப்படும் விஷயம் என்னிடம் இல்லை. தீர்ப்பளிக்கும் அதிகாரம் அல்லாஹ்வுக்கு மட்டுமே உரியது. அவனே சத்தியத்தைத் தெளிவுபடுத்துகிறான். அவனே சிறப்பான தீர்ப்பை வழங்குபவன்”. **58.** நீர் கூறும்: “நீங்கள் அவசரப்படும் விஷயம் என்னிடம் இருந்திருந்தால் எனக்கும் உங்களுக்குமிடையேயுள்ள விவகாரம் முடிந்திருக்கும்.

அல்லாஹ் அநியாயக்காரர்களை நன்கறிவான்". *59.* அவனிடமே மறைவானவற்றின் திறவுகோல்கள் இருக்கின்றன. அவனைத்தவிர வேறு எவரும் அவற்றை அறிய மாட்டார்கள். நிலத்திலும், நீரிலும் உள்ளவற்றை அவன் அறிவான். மரத்திலிருந்து ஒரு இலை உதிர்ந்தால்கூட அதையும் அவன் அறிவான். பூமியின் இருளில் விழும் விதைகள் - அது பசுமையானதோ, காய்ந்ததோ - அனைத்தும் தெளிவான புத்தகத்தில் பதியப்படாமல் இல்லை.

*60.* அவனே இரவில் (நீங்கள் உறங்கும்போது) உங்கள் உயிரைக் கைப்பற்றுகிறான். பகலில் நீங்கள் செய்பவற்றை அவன் அறிகிறான். பின்னர் நிர்ணயிக்கப்பட்ட தவணையை நிறைவு செய்வதற்காக உங்களை மீண்டும் அவன் எழுப்புகிறான். பின்னர் அவன் பக்கமே நீங்கள் திரும்பிச் செல்ல வேண்டும். அப்போது நீங்கள் செய்து கொண்டிருந்ததை அவன் உங்களுக்கு அறிவிப்பான். *61.* தன் அடியார்களின் மீது அதிகாரம் கொண்டவனாக அவன் இருக்கிறான். அவன் உங்கள்மீது பாதுகாவலர்களை அனுப்புகிறான். இறுதியில் உங்களில் எவருக்கேனும் மரணவேளை வந்துவிட்டால் நாம் அனுப்பிய வானவர்கள் அவரது உயிரைக் கைப்பற்றிக் கொள்கிறார்கள். தங்கள் கடமையில் ஒருபோதும் அவர்கள் தவறுவதில்லை. *62.* பின்னர் அனைவரும் தம்முடைய உண்மையான அதிபதியாகிய அல்லாஹ்வின்பக்கமே கொண்டு வரப்படுவார்கள். அறிந்துகொள்ளுங்கள். அதிகாரம் அவனுக்கே உரியது. அவன் கணக்கு தீர்ப்பதில் விரைவானவன்.

*63.* நீர் கேளும்: "இந்த துன்பத்திலிருந்து அவன் எங்களைக் காப்பாற்றி விட்டால் நாங்கள் அவனுக்கு நன்றி செலுத்தும் அடியார்களாக மாறி விடுவோம்" என்று நீங்கள் பணிவாகவும், இரகசியமாகவும் அவனை அழைக்கும்போது நிலம் மற்றும் நீரின் இருளிலிருந்து உங்களைக் காப்பாற்றுபவன் யார்?.

***64.*** *அவற்றிலிருந்தும், இன்னும் அனைத்து துன்பங்களிலிருந்தும் அல்லாஹ்தான் உங்களைக் காப்பாற்றுகிறான், இருப்பினும் நீங்கள் இணைவைக்கிறீர்கள்.* ***65.*** *நீர் கூறும்: "அவன் உங்களுக்கு மேலிருந்தும் அல்லது உங்கள் பாதங்களின் கீழிருந்தும் உங்கள்மீது ஏதேனும் ஒரு வேதனையை அனுப்பிவிடவும் அல்லது உங்களைப் பல பிரிவுகளாக்கி ஒருவருக்கு மற்றவருடைய பலத்தை சுவைக்கச் செய்திடவும் ஆற்றல் படைத்தவன்". அவர்கள் விளங்கிக்கொள்ள வேண்டும் என்பதற்காக எவ்வாறு நாம் பல்வேறு கோணங்களில் ஆதாரங்களைத் தெளிவுபடுத்துகிறோம் என்பதைப் பாருங்கள்.* ***66.*** *அது உண்மையாக இருந்தபோதிலும் உம் சமூகத்தினர் அதனை மறுத்து விட்டனர். நீர் கூறும்: "நான் உங்களுக்குப் பொறுப்பாளன் அல்லன்.* ***67.*** *ஒவ்வொரு விஷயத்திற்கும் ஒரு நேரம் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. விரைவில் நீங்கள் அறிந்துகொள்வீர்கள்".*

***68.*** *நம்முடைய வசனங்களில் குறைகாண்பதற்காக வீண் விவாதங்களில் மூழ்குவோரைக் கண்டால் அவர்கள் வேறுபேச்சில் ஈடுபடும்வரை அவர்களை விட்டு நீர் விலகிவிடும். சாத்தான் உம்மை மறக்கடித்துவிட்டால் அது நினைவுக்குவந்த பின்னர் இத்தகைய அநியாயக்கார மக்களுடன் அமராதீர்.* ***69.*** *அவர்களது கேள்விக்கணக்கில் இறையச்சமுடையோர்மீது எந்தப் பொறுப்பும் இல்லை. ஆயினும் அவர்கள் இறையச்சத்துடன் நடக்கும்பொருட்டு நினைவூட்ட வேண்டியது அவசியமாகும்.* ***70.*** *தங்கள் மார்க்கத்தை வேடிக்கையாகவும், விளையாட்டாகவும் எடுத்துக் கொண்டவர்களை விட்டுவிடும். இவ்வுலக வாழ்க்கை அவர்களை ஏமாற்றத்தில் ஆழ்த்திவிட்டது. ஒவ்வொருவரும் தம் செயல்களினால் தண்டிக்கப்படாமல் இருக்கும்பொருட்டு இந்த குர்ஆனைக் கொண்டு அறிவுறுத்திக் கொண்டே இருப்பீராக. அல்லாஹ்விடமிருந்து காப்பாற்றும் உதவியாளர்களோ, பரிந்துரை*

செய்பவர்களோ யாரும் இருக்க மாட்டார்கள். உலகில் உள்ள அனைத்தையும் ஈடாகக் கொடுத்தாலும் அவர்களிடமிருந்து அது ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது. இவர்கள்தான் தம்முடைய செயல்களின் காரணமாக தண்டிக்கப்பட்டவர்கள். அவர்கள் நிராகரித்துக் கொண்டிருந்ததனால் அவர்களுக்குக் கொதிக்கும் நீரும், துன்புறுத்தும் வேதனையும் உண்டு.

*71.* நீர் கேளும்: "அல்லாஹ்வை விடுத்து எங்களுக்குப் பலனளிக்கவோ, தீங்கிழைக்கவோ இயலாதவற்றையா நாங்கள் அழைக்க வேண்டும்? அல்லாஹ் எங்களுக்கு நேர்வழிகாட்டிய பிறகு நாங்கள் பின்வாங்கித் திரும்பிச் சென்றுவிட வேண்டுமா? ஒருவருக்கு அவரது தோழர்கள் "எங்களிடம் வந்து விடு" என்று நேர்வழியின் பக்கம் அழைத்துக் கொண்டிருக்க, ஆனால் அவரோ சாத்தான்களால் வழிகெடுக்கப்பட்டு பூமியில் தடுமாறித் திரிவதைப்போன்று நாங்கள் ஆகி விடுவோமா என்ன?" நீர் கூறும்: "அல்லாஹ்வின் வழியே நேரான வழியாகும். நாங்கள் அகிலங்களின் இறைவனிடம் சரணடைந்து விட வேண்டும் என்றே ஏவப்பட்டுள்ளோம். *72.* தொழுகையைக் கடைப்பிடியுங்கள். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்". அவன் பக்கமே நீங்கள் ஒன்று திரட்டப்படுவீர்கள். *73.* அவனே வானங்களையும், பூமியையும் உண்மையான நோக்கத்தோடு படைத்துள்ளான். அவன் "ஆகுக" என்று கூறும் நாளில் அது ஆகிவிடும். அவனது சொல்லே உண்மையானது. எக்காளம் (மகா ஊதுகுழல்) ஊதப்படும் நாளில் ஆட்சியதிகாரம் அவனுடையதாகவே இருக்கும். மறைவானதையும், வெளிப்படையானதையும் அவன் அறிந்தவன். அவன் ஞானம் மிக்கவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான்.

*74.* ஆப்ரஹாம் தம் தந்தை ஆஸரிடம், "சிலைகளையா நீங்கள் கடவுளாக்கிக் கொண்டீர்கள்? நான் உங்களையும், உங்கள்

சமூகத்தினரையும் பகிரங்கமான வழிகேட்டில் காண்கிறேன்" என்று கூறியதை நினைவுகூர்வீராக. 75. இவ்வாறு ஆப்ரஹாமுக்கு நாம் வானங்கள் மற்றும் பூமியிலுள்ள நம் ஆட்சியதிகாரத்தைக் காட்டினோம், உறுதியான நம்பிக்கையாளராக அவர் திகழ வேண்டும் என்பதற்காக. 76. எனவே இரவு அவரை மூடிக்கொண்டபோது அவர் ஒரு நட்சத்திரத்தைக் கண்டார். "இதுதான் என் இறைவன்" என்றார். ஆனால் அது மறைந்தபோது, மறையக்கூடியவற்றை நான் விரும்ப மாட்டேன் என்று கூறினார். 77. பின்னர் அவர் சந்திரன் ஒளிர்வதைக் கண்டபோது "இதுதான் என் இறைவன்" என்றார். ஆனால் அதுவும் மறைந்தபோது, என் இறைவன் எனக்கு நேர்வழிகாட்டவில்லையென்றால் நான் வழிதவறிய மக்களில் ஒருவனாகிவிடுவேன் என்று கூறினார். 78. பிறகு அவர் சூரியன் ஒளிர்வதைக் கண்டபோது "இதுதான் என் இறைவன். இது எல்லாவற்றையும்விடப் பெரியது" என்று கூறினார். ஆனால் அதுவும் மறைந்துவிடவே அவர் தம் சமூகத்தாரை நோக்கி, "மக்களே! நீங்கள் செய்கின்ற இணைவைப்பைவிட்டும் நான் விலகியவனாக இருக்கின்றேன். 79. நான் முழு நம்பிக்கையுடன் என் முகத்தை வானங்களையும், பூமியையும் படைத்தவனின் பக்கம் திருப்பிக் கொண்டேன். நான் இணைவைப்பாளர்களில் ஒருவன் அல்லன்" என்று கூறினார்.

80. அவரது சமூகத்தார் அவருடன் தர்க்கம் புரிந்தார்கள். அல்லாஹ்வின் விஷயத்தில் நீங்கள் என்னுடன் தர்க்கம் செய்கிறீர்களா? அவன் எனக்கு நேர்வழிகாட்டி விட்டான். உங்கள் இணைத்தெய்வங்களைக்கண்டு நான் அஞ்சமாட்டேன், ஆயினும் ஏதேனும் ஒரு விஷயத்தை என் இறைவன் நாடினாலே தவிர. என் இறைவனின் ஞானம் எல்லாவற்றையும் வியாபித்துள்ளது. நீங்கள் சிந்திக்க மாட்டீர்களா? 81. அல்லாஹ்வுக்கு இணைவைக்கும் நீங்களே

அஞ்சாதபோது - அவன் அதற்கு எவ்வித ஆதாரத்தையும் உங்களுக்கு இறக்கி வைக்கவில்லை - உங்கள் இணைத்தெய்வங்களைக்கண்டு நான் ஏன் அஞ்ச வேண்டும்? நீங்கள் அறிந்தவர்களாக இருந்தால் கூறுங்கள், இரு பிரிவினரில் அச்சமற்று இருக்கத் தகுதியுடையவர் யார் என்று? 82. யாரெல்லாம் நம்பிக்கைகொண்டு, தம் நம்பிக்கையை அநியாயத்தால் களங்கப்படுத்தவில்லையோ அவர்களுக்குத்தான் உண்மையில் அமைதி உண்டு, அவர்கள்தான் நேர்வழிபெற்றவர்கள். 83. இதுதான் ஆப்ரஹாம் தன் சமூகத்திற்கு எதிராக வாதாட நாம் வழங்கிய ஆதாரம். நாம் நாடுவோருக்கு தகுதிகளை உயர்த்தி விடுகிறோம். நிச்சயமாக உம் இறைவன் ஞானம் மிக்கவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான்.

84. நாம் அவருக்கு ஈசாக்கையும், ஜேக்கபையும் அளித்தோம். ஒவ்வொருவருக்கும் நேர்வழி காட்டினோம். இதற்கு முன்னர் நோவாவுக்கும் நேர்வழி காட்டினோம். அவரது சந்ததியிலிருந்து தாவீத், சாலமன், அய்யூப், ஜோஸஃப், மோசே மற்றும் ஆரோனுக்கும் நேர்வழி காட்டினோம். நாம் நல்லோர்களுக்கு இவ்வாறுதான் கூலி வழங்குகிறோம். 85. ஜகரிய்யா, யஹ்யா (ஜான்), இயேசு, இல்யாஸ் ஆகியோருக்கும் நேர்வழி காட்டினோம். அவர்கள் அனைவரும் நல்லோர்களாக இருந்தார்கள். 86. இஸ்மவேல், அல்யஸ, ஜோனா, லோத் ஆகியோருக்கும் நேர்வழி காட்டினோம். அவர்கள் அனைவரையும் நாம் அகிலத்தார் அனைவரையும்விட சிறப்பாக்கினோம். 87. அவர்களின் மூதாதையர்கள், சந்ததிகள், சகோதரர்கள் ஆகியோரிலிருந்தும் பலரை நாம் தேர்ந்தெடுத்து அவர்களுக்கு நேரான வழியைக் காட்டினோம். 88. இது அல்லாஹ்வின் வழிகாட்டுதலாகும். தன் அடியார்களில் தான் நாடுவோரை இதன்மூலம் அவன் நேர்வழியில் செலுத்துகிறான். அவர்கள் இணைவைத்தால் அவர்களது செயல்கள் அனைத்தும்

நாசமாகிவிடும். *89.* இவர்களுக்குத்தான் நாம் வேதத்தையும், ஞானத்தையும், தூதுத்துவத்தையும் வழங்கினோம். எனவே இந்த மக்காவாசிகள் இதனை நிராகரித்து விட்டால் நிராகரிக்காத வேறு மக்களிடம் நாம் ஒப்படைத்து விடுவோம். *90.* இவர்களுக்குத்தான் அல்லாஹ் நேர்வழி காட்டியுள்ளான். எனவே நீரும் இவர்களின் வழியிலேயே செல்வீராக. நீர் கூறும்: "இதற்காக நான் உங்களிடம் எவ்விதக் கூலியையும் கேட்கவில்லை. இது உலகமக்கள் அனைவருக்கும் ஒரு அறிவுரையேயாகும்".

*91.* அவர்கள் அல்லாஹ்வை மதிப்பிட வேண்டிய முறைப்படி மதிப்பிடவில்லை. அதனால்தான் அவர்கள் "அல்லாஹ் எந்த மனிதர்மீதும் எதையும் அருளவில்லை" என்று கூறுகிறார்கள். நீர் கேளும்: "ஒளியாகவும், மக்களுக்கு வழிகாட்டியாகவும் மோசே கொண்டுவந்த வேதத்தை அருளியவன் யார்?". அதனை நீங்கள் தனித்தனி ஏடுகளாக ஆக்கிக்கொண்டீர்கள். சிலவற்றை வெளிப்படுத்துகிறீர்கள், பெரும்பாலானவற்றை மறைத்து விடுகிறீர்கள். நீங்களும், உங்கள் முன்னோர்களும் அறியாததையெல்லாம் நீங்கள் கற்றுக்கொடுக்கப்பட்டீர்கள். நீர் கூறும்: "அல்லாஹ்தான் அதனை அருளினான்". எனவே தங்கள் வீண் விவாதங்களிலேயே மூழ்கிக்கிடக்குமாறு அவர்களை விட்டுவிடும். *92.* இது அருள்வளம்மிக்க, தனக்கு முன்னுள்ளதை உண்மைப்படுத்தக்கூடிய வேதமாகும். மக்காவாசிகளையும் அதனைச் சூழ உள்ளவர்களையும் நீர் எச்சரிக்கை செய்வதற்காகவே நாம் இதனை அருளியுள்ளோம். மறுமையின்மீது நம்பிக்கை கொள்பவர்கள்தான் இதன்மீது நம்பிக்கை கொள்வார்கள். தம் தொழுகையைப் பேணுபவர்களாக அவர்கள் இருப்பார்கள்.

*93. அல்லாஹ்வின்மீது பொய்யைப் புனைபவனைவிட, அல்லது தனக்கு இறைவனிடமிருந்து அறிவிக்கப்படாத நிலையில் எனக்கு இறைவனிடமிருந்து செய்தி அறிவிக்கப்படுகிறது என்று கூறுபவனைவிட, இன்னும் அல்லாஹ் அருளியுள்ள வசனங்களைப்போலவே நானும் அருளுவேன் என்று கூறுபவனைவிட மிகப்பெரிய அநியாயக்காரன் யார்? அந்தோ! இந்த அநியாயக்காரர்கள் மரண வேதனையில் கிடக்கும்போது நீர் காண வேண்டுமே! அப்போது வானவர்கள் தங்கள் கரங்களை நீட்டியவர்களாக, உங்கள் உயிர்களை நீங்களே வெளியேற்றுங்கள் என்று கூறுவார்கள். நீங்கள் அல்லாஹ்வின்மீது பொய்யான விஷயங்களை புனைந்து கொண்டிருந்ததாலும், அல்லாஹ்வின் அத்தாட்சிகளைவிட்டும் கர்வம் கொண்டிருந்ததாலும் இன்று உங்களுக்கு இழிவுமிக்க வேதனை அளிக்கப்படும். 94. நாம் உங்களை முதன்முறையாகப் படைத்ததைப்போன்றே நீங்கள் என்னிடம் தன்னந்தனியாக வந்துள்ளீர்கள். நாம் உங்களுக்கு வழங்கியவற்றையெல்லாம் உங்களுக்குப் பின்னால் விட்டுவிட்டீர்கள். “உங்கள் காரியத்தில் அவர்களது பங்கும் உள்ளது” என்று நீங்கள் கூறிக்கொண்டிருந்த பரிந்துரையாளர்களையும் நாம் காணவில்லை. உங்களிடையே உறவு முற்றிலும் முறிந்து விட்டது. நீங்கள் கூறிக்கொண்டிருந்த வாதங்களெல்லாம் உங்களை விட்டும் மறைந்து விட்டன.*

*95. நிச்சயமாக அல்லாஹ்தான் தானியத்தையும், விதையையும் வெடிக்கச் செய்பவன். அவனே உயிரற்றதிலிருந்து உயிருள்ளதையும், உயிருள்ளதிலிருந்து உயிரற்றதையும் வெளிப்படுத்துகிறான். அவனே உங்கள் இறைவன். பிறகு நீங்கள் எங்கே தடுமாறிச் செல்கிறீர்கள்? 96. அவனே விடியலை ஏற்படுத்துபவன். அவன் இரவை அமைதிக்கான நேரமாக ஆக்கியுள்ளான். சூரியனையும் சந்திரனையும் கணக்கின்படியே வைத்துள்ளான். இது யாவற்றையும் மிகைத்த,*

*நன்கறிந்த இறைவனின் ஏற்பாடாகும். **97.** அவனே உங்களுக்காக நட்சத்திரங்களை உருவாக்கினான். அவற்றைக்கொண்டு தரை மற்றும் கடலின் இருளில் நீங்கள் வழியை அறிந்து கொள்வதற்காக. நிச்சயமாக நாம் புரிந்துகொள்ளும் மக்களுக்காக ஆதாரங்களைத் தெளிவுபடுத்துகிறோம்*.*

*98. அவனே ஒரு உயிரிலிருந்து உங்களைப் படைத்தான். ஒவ்வொருவருக்கும் ஒரு தங்குமிடமும், ஒப்படைக்கப்படும் இடமும் உண்டு. புரிந்துகொள்ளும் மக்களுக்காக நாம் ஆதாரங்களைத் தெளிவுபடுத்தி விட்டோம். 99. அவனே வானத்திலிருந்து மழையைப் பொழிவித்தான். அதன்மூலம் எல்லாவகையான விளைச்சல்களையும் நாம் வெளிப்படுத்தினோம். பின்னர் அதிலிருந்து பசுமையான கிளைகளை வெளிப்படுத்தி அவற்றிலிருந்து அடுக்கடுக்கான தானியங்களை உருவாக்கினோம். பேரீச்சை மரத்தின் பாளைகளிலிருந்து தொங்குகின்ற பழக்குலைகளையும் அமைத்து திராட்சை, ஆலிவ், மாதுளை ஆகியவற்றின் தோட்டங்களையும் அமைத்தோம். அவை ஒன்றுக்கொன்று ஒப்பானவையாகவும், தனித்தனித் தன்மை கொண்டவையாகவும் உள்ளன. அவை கனியும்போது அவற்றின் கனிகளையும், அவை கனிவதையும் பாருங்கள், நிச்சயமாக நம்பிக்கைகொண்ட மக்களுக்கு அவற்றினுள் ஏராளமான அத்தாட்சிகள் இருக்கின்றன.*

*100. அவர்கள் ஜின்களை அல்லாஹ்வுக்கு இணையாக ஆக்கி விட்டார்கள். உண்மையில் அந்த ஜின்களையும் அவனே படைத்தான். அவர்கள் அறிவில்லாமல் அவனுக்குப் புதல்வர்களையும்,*

---

***இந்த பிரபஞ்சத்தின் மாபெரும் செயல்பாடு பல கோடானுகோடி ஆண்டுகளாக எந்தவித தவறும் இன்றி மிகச்சரியாக நிகழ்ந்துகொண்டு இருக்கிறது. இது பேரிறையின் எல்லையற்ற வல்லமையை நிரூபிப்பதாக உள்ளது.**

*புதல்விகளையும் கற்பித்துக் கொண்டார்கள். இவ்வாறு அவர்கள் கற்பிதமாகக் கூறுவதைவிட்டும் அவன் மிகத்தூய்மையானவன்; மிக உயர்ந்தவன். 101. அவனே வானங்களையும் பூமியையும் தோற்றுவித்தவன். அவனுக்கு மனைவியே இல்லாதபோது எவ்வாறு மகன் இருக்க முடியும்? அவன் அனைத்தையும் படைத்தவன். அனைத்தையும் நன்கறிந்தவன். 102. அவனே உங்கள் இறைவனாகிய அல்லாஹ். அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. அவனே அனைத்துப் பொருட்களின் படைப்பாளன். எனவே அவனையே வணங்குங்கள். அவனே எல்லாவற்றிற்கும் பொறுப்பாளனாவான். 103. பார்வைகள் அவனை அடைய முடியாது. ஆனால் அவனோ பார்வைகளை அடைந்து கொள்கிறான். அவன் நுட்பமானவனும், அனைத்தையும் அறிந்தவனுமாவான்*. 104. உங்கள் இறைவனிடமிருந்து உங்களுக்குத் தெளிவான அகப்பார்வை வந்துவிட்டது. எனவே எவர் பார்க்கின்றாரோ அது அவருக்கே நன்மையானதாகும். எவர் குருடராகிப் போகின்றாரோ*

---

*தொட்டுணரக்கூடிய வடிவத்தில் இறைவன் இருக்க வேண்டும் என மனிதன் விரும்புகிறான். இவ்வகையில் இறைவன் தன்னை வெளிப்படுத்தாதபொழுது, தொட்டுணரக் கூடியவற்றை இறைவன் என்று மனிதன் எடுத்துக்கொண்டு, அதன் வழியாக உருவங்களை விரும்பும் தன் உணர்ச்சியை திருப்திபடுத்திக் கொள்கிறான். எல்லாவற்றிற்கும் மேலாக, மாபெரும் பிரபஞ்சத்தைப் படைத்து பரிபாலிப்பவனான இறைவன், பார்த்து, தொட்டுணரக் கூடிய சாதாரண வடிவத்தில் பலவீனமான படைப்பான மனிதன் முன்பு எப்படி வெளிப்படுவான்? மனிதன் தனது இதயத்தால் இறைவனைக் கண்டறிந்து, தான் கொண்டிருக்கும் இறைநம்பிக்கை மூலமாக இறைவனைப் பார்க்க வேண்டும். அகப்பார்வை மூலமாக இறைவனைக் காண்பவனே இறைவனைக் கண்டறிய முடியும். நறுமணத்தைக்கொண்டு மலரை அறிய முடியாத மனிதன் அதன் வேதியியல் தரங்களை கேட்டு வற்புறுத்துவது போன்றதே, இறைவனைப் புறக்கண்களால் பார்ப்பதை வலியுறுத்தும் மனிதனின் நிலையாகும்.

அவர் தமக்கே இழப்பை ஏற்படுத்திக்கொள்கிறார். நீர் கூறும்: "நான் ஒன்றும் உங்களுக்குப் பாதுகாவலன் அல்லன்"*.

*105.* "இதனை நீர் மற்றவர்களிடமிருந்து கற்றுக்கொண்டீர்" என்று அவர்கள் கூறுவதனாலும், அறிந்துகொள்ளும் மக்களுக்கு தெளிவுபடுத்த வேண்டும் என்பதற்காகவும் இவ்வாறு நாம் நம்முடைய ஆதாரங்களை பல்வேறு கோணங்களில் தெளிவுபடுத்துகிறோம். *106.* உம் இறைவனிடமிருந்து உமக்கு அறிவிக்கப்படுகின்றவற்றை நீர் பின்பற்றுவீராக. அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. இணைவைப்பாளர்களைப் புறக்கணித்து விடுவீராக. *107.* அல்லாஹ் நாடியிருந்தால் அவனுக்கு அவர்கள் இணைவைத்திருக்க மாட்டார்கள். நாம் உம்மை அவர்களுக்குப் பாதுகாவலனாக ஆக்கவில்லை. நீர் அவர்களுக்குப் பொறுப்பாளருமல்லர். *108.* இவர்கள் அல்லாஹ்வை விடுத்து யாரை அழைக்கின்றார்களோ அவர்களை நீங்கள் இழிவாகப் பேசாதீர்கள். இல்லையேல் இவர்கள் அறிவில்லாமல் வரம்புமீறி அல்லாஹ்வை இழிவாகப் பேசுவார்கள். இதேபோன்று நாம் ஒவ்வொரு சமூகத்திற்கும் அவர்களது செயல்களை அழகாக்கிக் காட்டியுள்ளோம். பின்னர் அவர்கள் அனைவரும் தங்கள் இறைவனிடமே திரும்ப வேண்டும். அப்போது அவர்கள் செய்து கொண்டிருந்தவற்றை அவன் அவர்களுக்கு அறிவிப்பான்.

*109.* தங்களிடம் ஏதேனும் சான்று வருமானால் நிச்சயம் நாங்கள் நம்பிக்கைகொள்வோம் என்று அவர்கள் அல்லாஹ்வின் மீது உறுதியாக ஆணையிட்டுக் கூறுகிறார்கள். நீர் கூறும்: "சான்றுகள் அனைத்தும் அல்லாஹ்விடமே உள்ளன". உமக்கு என்ன தெரியும்? அவை அவர்களிடம் வந்துவிட்டாலும் அவர்கள் நம்பிக்கைகொள்ள மாட்டார்கள். *110.* அவர்கள் ஆரம்பத்தில் இதன்மீது நம்பிக்கை கொள்ளாததைப்போலவே நாம் அவர்களின் உள்ளங்களையும்,

*பார்வைகளையும் புரட்டி அவர்களது வரம்பு மீறலிலேயே தடுமாறித் திரியுமாறு அவர்களை விட்டுவிடுவோம். **111.** நாம் அவர்களின்மீது வானவர்களை இறக்கினாலும், இறந்தவர்களை அவர்களுடன் பேசும்படிச் செய்தாலும் இன்னும் அனைத்துப் பொருட்களையும் அவர்களின் கண்முன்னால் கொண்டு வந்தாலும் - அல்லாஹ் நாடினாலே ஒழிய - அவர்கள் நம்பிக்கைகொள்ள மாட்டார்கள். ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் அறிவற்றவர்களாகவே இருக்கிறார்கள்.*

***112.*** *இவ்வாறே நாம் கேடுகெட்ட மனிதர்களையும் ஜின்களையும் ஒவ்வொரு தூதருக்கும் பகைவர்களாக ஆக்கினோம். அவர்கள் ஒருவர் மற்றவரை ஏமாற்றுவதற்காக வஞ்சகமான பேச்சுகளைக் கற்றுக்கொடுக்கிறார்கள். உம் இறைவன் நாடியிருந்தால் அவர்கள் அவ்வாறு செய்திருக்க மாட்டார்கள். எனவே நீர் அவர்களையும், அவர்கள் புனைந்து கூறுபவற்றையும் விட்டு விடுவீராக. **113.** ஏனெனில் மறுமையை நம்பாதவர்களின் உள்ளங்கள் இதன் பக்கம் சாய வேண்டும், அவர்கள் இதனை ஏற்றுக்கொண்டு, சம்பாதிக்க வேண்டிய பாவங்களை சம்பாதிக்க வேண்டும் என்பதற்காகவேயாகும்.*

***114.*** *அல்லாஹ்வைத்தவிர வேறு ஒருவனையா நான் நீதிபதியாக ஆக்குவேன்? அவனே உங்களுக்குத் தெளிவான வேதத்தை அருளியுள்ளான். எவருக்கெல்லாம் நாம் வேதத்தை வழங்கினோமோ அவர்கள் "இது உம் இறைவனிடமிருந்து சத்தியத்துடன் அருளப்பட்டுள்ளது" என்பதை அறிவார்கள். எனவே நீர் சந்தேகம் கொள்வோரில் ஒருவராகிவிட வேண்டாம். **115.** உம் இறைவனின் வார்த்தைகள் முழுவதும் உண்மையானதும், நீதியானதுமாகும். அவனது வார்த்தைகளை மாற்றுபவர் எவருமிலர். அவன் செவியேற்பவனாகவும், அறிந்தவனாகவும் இருக்கின்றான்.*

*116.* உலகத்தில் பெரும்பான்மையினரின் சொற்படி நீர் நடந்தீரானால் அவர்கள் இறைவழியிருந்து உம்மை பிறழச்செய்து விடுவார்கள். அவர்கள் வெறும் யூகத்தையே பின்பற்றுகிறார்கள். அவர்கள் அனுமானம் செய்பவர்களாகவே இருக்கிறார்கள். *117.* நிச்சயமாக உம் இறைவன் அவனது பாதையை விட்டும் பிறழ்ந்து விட்டவர்களை நன்கறிவான். நேர்வழியை அடைந்தவர்களையும் நன்கறிவான்.

*118.* அவனது வசனங்களின் மீது நீங்கள் நம்பிக்கை கொண்டவர்களாக இருந்தால் அல்லாஹ்வின் பெயர் கூறப்பட்டு அறுக்கப்பட்டதை உண்ணுங்கள். *119.* அல்லாஹ்வின் பெயர் கூறி அறுக்கப்பட்டதை உண்ணாமலிருக்க உங்களுக்கு என்ன நேர்ந்தது? நீங்கள் நிர்ப்பந்திக்கப்பட்டாலே தவிர. தடை செய்யப்பட்டதை அல்லாஹ் உங்களுக்கு விரிவாக விளக்கி விட்டானே! ஆனால் பெரும்பாலோர் தம் மன இச்சைகளின் அடிப்படையில் அறிவில்லாமல் மக்களை வழிகெடுக்கிறார்கள். நிச்சயமாக வரம்புமீறுவோரை உம் இறைவன் நன்கறிவான். *120.* வெளிப்படையான, அந்தரங்கமான பாவங்கள் அனைத்தையும் விட்டு விடுங்கள். பாவங்களைச் சம்பாதிப்பவர்கள், தாம் செய்தவற்றின் கூலியை விரைவில் பெற்றுக் கொள்வார்கள். *121.* அல்லாஹ்வின் பெயர் கூறி அறுக்கப்படாதவற்றை உண்ணாதீர்கள். நிச்சயமாக அது பாவமாகும். சாத்தான்கள் தங்கள் கூட்டாளிகளை உங்களுடன் தர்க்கம் செய்யுமாறு தூண்டுகிறார்கள். அவர்கள் சொல்வதை நீங்கள் ஏற்றுக்கொண்டால் நீங்களும் இணைவைப்பாளர்களாகி விடுவீர்கள்.

*122.* இறந்துவிட்ட ஒருவனுக்கு நாம் உயிர் கொடுத்து, ஒளியையும் வழங்கினோம். அதன்மூலம் அவன் மக்களிடையே நடமாடுகிறான். அத்தகையவனும், இருளில் சிக்கி அதைவிட்டு வெளியேற முடியாமலிருக்கும் ஒருவனும் சமமாக முடியுமா?

இவ்வாறுதான் நிராகரிப்பாளர்களுக்கு அவர்களின் செயல்கள் அழகாக்கப்பட்டுள்ளன. **123.** இவ்வாறே ஒவ்வொரு ஊரிலும் நாம் குற்றவாளிகளின் தலைவர்களை ஏற்படுத்தியுள்ளோம், அங்கே அவர்கள் சதிசெய்வதற்காக. அவர்கள் தங்களுக்கு எதிராகவே சதிசெய்கிறார்கள். ஆயினும் அவர்கள் உணர்ந்துகொள்வதில்லை. **124.** அவர்களிடம் ஏதேனும் சான்று வந்தால் "இறைத்தூதர்களுக்கு வழங்கப்பட்டது போன்று எங்களுக்கும் வழங்கப்படாதவரை நாங்கள் ஒருபோதும் ஏற்றுக்கொள்ள மாட்டோம்" என்று கூறுகிறார்கள். தன்னுடைய தூதுத்துவத்தை யாருக்கு வழங்க வேண்டும் என்பதை அல்லாஹ்வே நன்கறிவான். குற்றவாளிகளுக்கு - அவர்கள் சூழ்ச்சி செய்து கொண்டிருந்ததனால் - அல்லாஹ்விடம் இழிவும், கடுந்தண்டனையும் உண்டு.

**125.** எவருக்கு அல்லாஹ் நேர்வழிகாட்ட நாடுகிறானோ அவரது உள்ளத்தை இஸ்லாத்திற்காக விரிவாக்குகிறான். எவரை அவன் வழிகெடுக்க நாடுகிறானோ அவரது இதயத்தை வானத்தில் ஏறுபவரைப்போன்று, மிகவும் இறுக்கமாக ஆக்கிவிடுகிறான். இவ்வாறு அல்லாஹ் நம்பிக்கை கொள்ளாதோரை (மனநெருக்கடிக்குள்ளாக்கி) தண்டிக்கிறான். **126.** இதுவே உங்கள் இறைவனின் நேரான வழியாகும். சிந்தித்துணரும் மக்களுக்கு நாம் சான்றுகளை தெளிவுபடுத்தி விட்டோம். **127.** அவர்களது இறைவனிடம் அவர்களுக்கு அமைதியின் இல்லம் உண்டு. அவர்களின் செயல்களினால் அவன் அவர்களின் பாதுகாவலனாக இருக்கின்றான்.

**128.** அவர்கள் அனைவரையும் அல்லாஹ் ஒன்றுசேர்க்கும் நாளில், "ஜின் சமூகமே! நீங்கள் மனிதர்களில் அதிகமானோரை உங்களுடன் சேர்த்துக்கொண்டீர்கள்" என்று கூறுவான். அதற்கு மனிதர்களிலுள்ள ஜின்களின் கூட்டாளிகள், "எங்கள் இறைவனே!

நாங்கள் ஒருவரையொருவர் பயன்படுத்திக் கொண்டோம். நீ எங்களுக்காக ஏற்படுத்தியிருந்த தவணையையும் நாங்கள் அடைந்து விட்டோம்" என்று கூறுவார்கள். அப்போது அல்லாஹ் கூறுவான்: "இனி நரகம்தான் உங்கள் இருப்பிடமாகும்". அல்லாஹ் நாடினாலே அன்றி நீங்கள் அதில் என்றென்றும் வீழ்ந்து கிடப்பீர்கள். நிச்சயமாக உங்கள் இறைவன் ஞானம் மிக்கவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். *129.* இவ்வாறு நாம் குற்றவாளிகளை - அவர்களின் செயல்களினால் - ஒருவருக்கொருவரை நெருக்கமாக்கி விடுவோம். *130.* ஜின் மற்றும் மனித சமூகமே, உங்களிலிருந்தே தூதர்கள் உங்களிடம் வரவில்லையா? அவர்கள் என் வசனங்களை எடுத்துரைத்து, இந்நாளின் சந்திப்பைக் குறித்து உங்களுக்கு எச்சரிக்கை செய்யவில்லையா?. அதற்கு அவர்கள் கூறுவார்கள்: "நாங்கள் எங்களுக்கு எதிராக சாட்சி கூறுகிறோம்". இவ்வுலக வாழ்வு அவர்களை ஏமாற்றத்தில் ஆழ்த்தி விட்டது. "நாங்கள் நிராகரிப்பாளர்களாகத்தான் இருந்தோம்" என்று அவர்கள் தங்களுக்கு எதிராகத் தாங்களே சாட்சி கூறுவார்கள். *131.* (இவ்வாறு தூதர்களை அனுப்புவது) ஏனெனில் உம் இறைவன் எந்த ஊரையும் அவர்கள் செய்துவிட்ட அநியாயத்திற்காக அவர்கள் அறியாமல் இருக்கும் நிலையில் அழிப்பவனாக இல்லை என்பதனால்தான்.

*132.* ஒவ்வொருவருக்கும் அவர்களின் செயல்களுக்கேற்ப அந்தஸ்துகள் உள்ளன. உம் இறைவன் அவர்களின் செயல்களைக் கவனிக்காமல் இல்லை. *133.* உம் இறைவன் தேவையற்றவனாகவும், கருணையாளனாகவும் இருக்கின்றான். அவன் நாடினால் உங்கள் அனைவரையும் அகற்றிவிட்டு உங்களுக்குப்பின் தான் நாடுவோரை உங்கள் இடத்தில் கொண்டு வருவான், வேறொரு சந்ததியிலிருந்து உங்களை உருவாக்கியதைப்போல. *134.* உங்களுக்கு எச்சரிக்கப்படுவது வந்தே தீரும். நீங்கள் இறைவனை வெல்ல

முடியாது. *135.* நீர் கூறும்: “என் சமூகத்தார்களே! நீங்கள் உங்கள் வழியில் செயல்படுங்கள். நானும் என் வழியில் செயல்படுவேன். மறுமையில் யாருக்குச் சாதகமாக முடிவு அமையும் என்பதை விரைவில் நீங்கள் அறிந்துகொள்வீர்கள்”. நிச்சயமாக அக்கிரமக்காரர்கள் ஒருபோதும் வெற்றியடைய மாட்டார்கள்.

*136.* அல்லாஹ் உருவாக்கிய பயிர்கள், கால்நடைகள் ஆகியவற்றிலிருந்து அவர்கள் இறைவனுக்காக ஒரு பங்கை ஏற்படுத்தி - அவர்களின் எண்ணப்படி - இது அல்லாஹ்வுக்குரியது என்றும், இது எங்கள் இணைத்தெய்வங்களுக்குரியது என்றும் கூறுகிறார்கள். அவர்களது இணைத்தெய்வங்களுக்குரியது அல்லாஹ்வைச் சேருவதில்லை. ஆனால் அல்லாஹ்வுக்குரியதோ அவர்களது இணைத்தெய்வங்களைச் சேர்ந்து விடுகிறது. இவர்கள் எடுக்கும் முடிவு எவ்வளவு மோசமானது.! *137.* இவ்வாறு தங்கள் குழந்தைகளைக் கொலை செய்வதை இணைவைப்பாளர்களில் பெரும்பாலோருக்கு அவர்களின் இணைத்தெய்வங்கள் அழகாக்கிக் காட்டின. அது ஏனெனில் அவர்களை அழிவுக்குள்ளாக்கி, அவர்களின் மார்க்கத்தைக் குழப்பத்திற்குள்ளாக்க வேண்டும் என்பதற்காகவே. அல்லாஹ் நாடியிருந்தால் அவர்கள் அவ்வாறு செய்திருக்க மாட்டார்கள். எனவே அவர்களை விட்டுவிடும். அவர்கள் தங்கள் கற்பனையிலேயே மூழ்கிக்கிடக்கட்டும்.

*138.* “இந்தக் கால்நடைகளும் பயிர்களும் தடைசெய்யப்பட்டுள்ளன. நாங்கள் நாடுவோரைத்தவிர வேறு யாரும் இவற்றை உண்ணக்கூடாது” என்று அவர்கள் கற்பனைசெய்து கூறுகிறார்கள். சில கால்நடைகளின் முதுகுகள் தடை செய்யப்பட்டுள்ளன என்றும், சில கால்நடைகளை அறுக்கும்போது அவற்றின்மீது அல்லாஹ்வின் பெயரை கூறக்கூடாது என்றும் அவர்களாகவே புனைந்து கூறுகிறார்கள். அவர்கள் புனைந்து

கொண்டிருந்தனால் மிக விரைவில் அவர்களை அவன் தண்டிப்பான். ***139.*** “இன்ன கால்நடைகளின் வயிற்றில் இருப்பவை எங்கள் ஆண்களுக்கு மட்டுமே உரியவை. அவை எங்கள் பெண்களுக்குத் தடுக்கப்பட்டவையாகும். ஆனால் அவை செத்துப் பிறந்தால் அனைவருக்கும் அதில் பங்கு உண்டு” என்று அவர்கள் கூறுகிறார்கள். இவ்வாறு கூறியதற்காக விரைவில் அவன் அவர்களைத் தண்டிப்பான். நிச்சயமாக அல்லாஹ் ஞானம் மிக்கவனாகவும் நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். ***140.*** அறிவில்லாமல் மூடத்தனத்தால் தங்கள் குழந்தைகளைக் கொன்றவர்கள் பெரும் இழப்புக்குள்ளாகி விட்டார்கள். அல்லாஹ் தங்களுக்கு வழங்கியவற்றை அவர்கள் அவன்மீதே இட்டுக்கட்டி தடுக்கப்பட்டதாக ஆக்கிவிட்டார்கள். அவர்கள் வழிகெட்டு விட்டார்கள். நேர்வழி பெற்றவர்களாகவும் அவர்கள் இருக்கவில்லை.

***141.*** அவனே படரும் கொடிகள், படராத செடிகள் ஆகியவற்றைக் கொண்ட தோட்டங்களையும், பேரீச்சை மரங்களையும், உண்ணக்கூடிய பலவகை பொருள்களைக்கொண்ட பயிர்களையும், ஒரே மாதிரியாகவும், வேறுபட்டும் இருக்கக்கூடிய ஆலிவ், மாதுளை ஆகியவற்றையும் படைத்தான். அவை விளையும்போது அவற்றின் விளைச்சலை உண்ணுங்கள். அதன் அறுவடை நாளில் அல்லாஹ்வின் பங்கை அளித்து விடுங்கள். வீண்விரயம் செய்யாதீர்கள், நிச்சயமாக அல்லாஹ் வீண்விரயம் செய்வோரை நேசிக்க மாட்டான். ***142.*** அவன் கால்நடைகளில் சிலவற்றை சுமப்பதற்காகவும், சிலவற்றை உணவுக்காகவும் படைத்துள்ளான். அல்லாஹ் உங்களுக்கு வழங்கியவற்றிலிருந்து உண்ணுங்கள். சாத்தானின் அடிச்சுவடுகளைப் பின்பற்றாதீர்கள். நிச்சயமாக சாத்தான் உங்களுக்கு வெளிப்படையான பகைவனாவான்.

*143.* ஆடு, மாடு, ஒட்டகம் ஆகிய உண்ணக்கூடிய கால்நடைகளில் எட்டு வகைகள் உள்ளன. அவற்றில் செம்மறியாட்டு வகையில் இரண்டும் வெள்ளாட்டு வகையில் இரண்டும் உள்ளன. நீர் கேளும்: அவன் இரண்டு ஆண் இனங்களைத் தடை செய்தானா? அல்லது பெண் இனங்களையா? அல்லது அந்த இருவகை ஆடுகளின் கருவறையில் இருக்கும் குட்டிகளையா? நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் எனக்கு ஆதாரத்துடன் விளக்குங்கள். *144.* இவ்வாறு ஒட்டகத்திலும் இரு வகைகள் உள்ளன. மாடுகளிலும் இரு வகைகள் உள்ளன. நீர் கேளும். அவன் இரு ஆண் இனங்களைத் தடை செய்தானா? அல்லது பெண் இனங்களையா? அல்லது ஒட்டகம் மற்றும் மாட்டின் கருவறையில் இருக்கும் குட்டிகளையா? அல்லாஹ் இவ்வாறு உங்களுக்குக் கட்டளையிட்ட சமயத்தில் நீங்கள் அங்கு இருந்தீர்களா? அறிவில்லாமல், மக்களை வழிகெடுப்பதற்காக அல்லாஹ்வின்மீது பொய்யைப் புனைபவனைவிட மிகப்பெரிய அநியாயக்காரன் யார்? நிச்சயமாக அல்லாஹ் அநியாயக்காரர்களுக்கு நேர்வழி காட்டமாட்டான். *145.* நீர் கூறும்: “எனக்கு அறிவிக்கப்பட்டவற்றில் உண்பவர்களுக்குத் தடை செய்யப்பட்டதாக எதனையும் நான் காணவில்லை, ஆனால் செத்த பிராணி, வடியும் இரத்தம், பன்றியின் மாமிசம் ஆகியவற்றைத் தவிர”. ஏனெனில் இவை அசுத்தமானவையாகும். அல்லது அல்லாஹ் அல்லாதவற்றுக்காக பலியிடப்பட்டவையும் தடை செய்யப்பட்டவையாகும். எவரேனும் மாறுசெய்யாமலும் வரம்பு மீறாமலும் பசியின் மிகுதியினால் புசித்து விட்டால் - நிச்சயமாக உம் இறைவன் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

*146.* யூதர்களுக்கு நகங்களுடைய பிராணிகள் அனைத்தையும் நாம் தடைசெய்தோம். மாடு மற்றும் ஆட்டின்

கொழுப்புகளையும் தடைசெய்திருந்தோம். ஆனால் அவற்றின் முதுகுகளிலோ, குடல்களிலோ, எலும்புகளிலோ ஒட்டியிருக்கும் கொழுப்புகளைத்தவிர. அவர்கள் வரம்பு மீறியதனால்தான் நாம் அவர்களுக்கு இத்தண்டனையை அளித்தோம். நிச்சயமாக நாம் உண்மையாளராக இருக்கின்றோம். 147. எனவே அவர்கள் உம்மை நிராகரித்தால் நீர் கூறிவிடும், "உங்கள் இறைவன் கருணையில் தாராளமானவன். ஆயினும் குற்றவாளிகள் அவனது தண்டனையிலிருந்து தப்ப முடியாது".

148. "அல்லாஹ் நாடியிருந்தால் நாங்களும், எங்கள் முன்னோர்களும் இணைவைத்திருக்க மாட்டோம். எந்தப் பொருளையும் தடைசெய்யப்பட்டதாக ஆக்கியிருக்க மாட்டோம்" என்று இணைவைப்பாளர்கள் கூறுவார்கள். இப்படித்தான் இவர்களுக்கு முன்னிருந்தவர்களும் மறுத்தார்கள். இறுதியில் நம் வேதனையை அவர்கள் அனுபவித்தார்கள். நீர் கேளும்: "நம் முன் எடுத்து வைப்பதற்கு உங்களிடம் ஏதேனும் ஆதாரம் இருக்கிறதா? நீங்கள் யூகத்தையே பின்பற்றுகிறீர்கள். அனுமானத்தின்படியே செயல்படுகிறீர்கள்". 149. நீர் கூறும்: "முழுமையான ஆதாரம் அல்லாஹ்விற்கே உரியது. அல்லாஹ் நாடியிருந்தால் உங்கள் அனைவருக்கும் நேர்வழி காட்டியிருப்பான்". 150. நீர் கூறும்: "அல்லாஹ்தான் இவற்றைத் தடுத்துள்ளான் என்று சாட்சி கூறும் உங்கள் சாட்சிகளை அழையுங்கள்". அவர்கள் பொய்சாட்சி கூறினாலும் அவர்களுடன் நீரும் சாட்சி கூறாதீர். நம் சான்றுகளை மறுப்பவர்கள், மறுமையின் மீது நம்பிக்கை கொள்ளாதவர்கள் ஆகியோரின் விருப்பங்களை நீர் பின்பற்றாதீர். அவர்கள்தான் தம் இறைவனுக்கு இணைவைக்கிறார்கள்.

151. நீர் கூறும்: "வாருங்கள். உங்கள் இறைவன் உங்களுக்குத் தடைசெய்துள்ள விஷயங்களைக் கூறுகிறேன். நீங்கள் அல்லாஹ்வுடன்

*எப்பொருளையும் இணையாக்காதீர்கள். தாய், தந்தையருடன் நல்ல முறையில் நடந்து கொள்ளுங்கள். உங்கள் குழந்தைகளை வறுமைக்கு அஞ்சி கொன்று விடாதீர்கள். ஏனெனில் உங்களுக்கும் அவர்களுக்கும் நாமே உணவளிக்கிறோம். மானக்கேடான காரியங்களின் பக்கம் நெருங்காதீர்கள், அது வெளிப்படையாக இருந்தாலும் சரி, மறைவாக இருந்தாலும் சரி. அல்லாஹ் தடைசெய்துள்ள எந்த உயிரையும் அநியாயமாகக் கொன்று வீடாதீர்கள். நீங்கள் சிந்தித்துணரும்பொருட்டு அல்லாஹ் இவ்விஷயங்களை உங்களுக்கு அறிவுறுத்தியுள்ளான்".*

***152.*** *"அநாதைகளின் சொத்தை அவர்கள் பருவவயதை அடையும் வரை நியாயமான முறையில் அன்றி நெருங்காதீர்கள். அளவையிலும் நிறுவையிலும் நியாயமாக நடந்து கொள்ளுங்கள். நாம் ஒருவர்மீது அவரால் தாங்க முடிந்த அளவுக்கே பொறுப்பைச் சுமத்துவோம். பேசினால் நியாயமாகப் பேசுங்கள், அது உங்கள் உறவினர்களுடைய விவகாரமாக இருந்தாலும் சரி. அல்லாஹ்வின் வாக்குறுதியை நிறைவேற்றுங்கள். நீங்கள் படிப்பினை பெறும்பொருட்டு இவ்விஷயங்களை அல்லாஹ் உங்களுக்குக் கட்டளையிட்டுள்ளான்".* ***153.*** *இதுவே எனது நேரான வழியாகும், எனவே இதனையே நீங்கள் பின்பற்றுங்கள். வேறு வழிகளில் செல்லாதீர்கள். அவை அவனது பாதையை விட்டும் உங்களை விலகவைத்து விடும். இது நீங்கள் உங்களைக் காத்துக்கொள்ளும் பொருட்டு அல்லாஹ் உங்களுக்கு இட்ட கட்டளையாகும்.*

***154.*** *அவர்கள் தம் இறைவனின் சந்திப்பை நம்புவதற்காக நாம் மோசேவுக்கு வேதத்தை வழங்கினோம். அது நற்செயல்கள் புரிவோர் மீது நம் அருட்கொடைகளை நிறைவுசெய்வதாகவும், அனைத்தையும் தெளிவுபடுத்தக்கூடியதாகவும், வழிகாட்டியாகவும், கருணையாகவும் இருக்கின்றது.* ***155.*** *இவ்வேதத்தை பாக்கியம்மிக்கதாக நாம்*

அருளியுள்ளோம். இதனையே நீங்கள் பின்பற்றுங்கள். அல்லாஹ்வை அஞ்சுங்கள். அதனால் உங்கள் மீது இரக்கம் காட்டப்படும். **156.** எங்களுக்கு முன்சென்ற இரு கூட்டத்தினருக்குத்தான் வேதம் வழங்கப்பட்டிருந்தது. அவர்களின் போதனைகளை நாங்கள் அறியாமலிருந்தோம் என்று நீங்கள் கூறாமல் இருப்பதற்காக, அல்லது, **157.** "எங்களுக்கு வேதம் வழங்கப்பட்டிருந்தால் நாங்கள் அவர்களைவிட சிறந்த முறையில் அவ்வழிகாட்டுதலைப் பின்பற்றியிருப்போம்" என்றும் நீங்கள் கூறாமல் இருப்பதற்காக. உங்களிடம் உங்கள் இறைவனிடமிருந்து தெளிவான ஆதாரமும், வழிகாட்டுதலும், கருணையும் வந்துவிட்டது. அல்லாஹ்வின் அத்தாட்சிகளை பொய்யெனக்கூறி புறக்கணிப்பவனைவிட மிகப்பெரிய அநியாயக்காரன் யார்? நம்முடைய அத்தாட்சிகளை புறக்கணிப்பவர்களை - அவர்கள் புறக்கணித்ததனால் - கொடிய வேதனையில் ஆழ்த்துவோம். **158.** அவர்களிடம், "வானவர்கள் வரவேண்டும்", அல்லது "உமது இறைவன் வர வேண்டும்" அல்லது "உமது இறைவனின் சான்றுகளில் ஏதேனும் ஒரு சான்று வெளிப்பட வேண்டும்" என்றுதான் எதிர்பார்க்கிறார்களா? உம் இறைவனின் சான்றுகளில் சில வெளிப்படும்நாளில் முன்னரே நம்பிக்கை கொள்ளாதவருக்கும் அல்லது தனது நம்பிக்கையில் யாதொரு நன்மையையும் சம்பாதிக்காதவருக்கும் அவரது நம்பிக்கை பயனளிக்காது. நீர் கூறும்: "நீங்கள் எதிர்பாருங்கள். நாங்களும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்".

**159.** தங்கள் மார்க்கத்தில் பிரிவினையை ஏற்படுத்தி பல்வேறு குழுக்களாகப் பிரிந்து விட்டவர்களுடன் உமக்கு எவ்வித சம்பந்தமுமில்லை. அவர்களது விவகாரம் அல்லாஹ்விடம் உள்ளது. அவர்கள் செய்து கொண்டிருந்தவற்றை அவனே அவர்களுக்கு அறிவித்து விடுவான். **160.** எவரேனும் ஒரு நன்மையைச் செய்தால்

*அவருக்கு அதைப்போன்று பத்து மடங்கு நன்மை உண்டு. எவரேனும் ஒரு தீமையைச் செய்தால் அவருக்கு அதே அளவிலான தண்டனை கிடைக்கும். அவர்கள் அநீதி இழைக்கப்பட மாட்டார்கள்.*

***161.*** *நீர் கூறும்: "என் இறைவன் எனக்கு நேரான வழியைக் காட்டினான். அது உறுதியான மார்க்கமாகும், முழு நம்பிக்கைகொண்ட ஆப்ரஹாம் கடைப்பிடித்த மார்க்கமுமாகும். அவர் இணைவைப்பவராக இருக்கவில்லை".* ***162.*** *நீர் கூறும்: "எனது தொழுகையும், எனது தியாகமும், எனது வாழ்வும், எனது மரணமும் அகிலங்களின் இறைவனாகிய அல்லாஹ்வுக்கே உரியவையாகும்.* ***163.*** *அவனுக்கு யாரும் கூட்டாளி இல்லை. இவ்வாறே நான் கட்டளையிடப்பட்டுள்ளேன். நான் கீழ்ப்படிவோரில் முதன்மையானவன் ஆவேன்".* ***164.*** *நீர் கூறும்: "அல்லாஹ்வைத்தவிர வேறொருவனை நான் இறைவனாக தேடிக்கொள்வேனா? அவனே அனைத்திற்கும் இறைவனாக இருக்கின்றான். ஒவ்வொருவரும் தாம் சம்பாதித்ததன் விளைவின்மீதே இருக்கிறார்கள். ஒருவரது சுமையை மற்றவர் சுமக்க மாட்டார். பின்னர் உங்கள் இறைவனின் பக்கமே நீங்கள் திரும்ப வேண்டும். அப்போது நீங்கள் முரண்பட்டுக் கொண்டிருந்த விஷயங்களைப்பற்றி அவன் உங்களுக்கு அறிவித்து விடுவான்.* ***165.*** *அவனே பூமியில் உங்களை வழித்தோன்றல்களாக்கினான். உங்களுக்கு வழங்கியவற்றில் அவன் உங்களைச் சோதிப்பதற்காக உங்களில் சிலரை உங்களில் சிலரைவிட உயர்த்தியுள்ளான். உங்கள் இறைவன் தண்டிப்பதில் விரைவானவன். ஆயினும் நிச்சயமாக அவன் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்".*

# 7. சிகரங்கள் (அல்அஃ◦ராஃ◦ப்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

*1. அலிஃப். லாம். மீம். ஸாத். 2. இது உமக்கு அருளப்பட்ட வேதமாகும். இதனால் உமக்கு எவ்வித மனபாரமும் ஏற்பட்டுவிட வேண்டாம். மக்களுக்கு நீர் எச்சரிக்கை செய்வதற்காகவும், நம்பிக்கையாளர்களுக்கு நினைவூட்டலாக அமைய வேண்டும் என்பதற்காகவும்தான் (இது அருளப்பட்டது). 3. உங்கள் இறைவனிடமிருந்து உங்களுக்கு அருளப்பட்டுள்ளதைப் பின்பற்றுங்கள். அவனைத்தவிர வேறு பாதுகாவலர்களைப் பின்பற்றாதீர்கள். மிக அரிதாகவே நீங்கள் நல்லுணர்ச்சி பெறுகிறீர்கள். 4. எத்தனையோ ஊர்களை நாம் அழித்திருக்கின்றோம். இரவிலோ, நண்பகலிலோ அவர்கள் தூக்கத்தில் ஆழ்ந்திருந்தபோது திடீரென நம் வேதனை அவர்களைத் தாக்கியது. 5. நம் வேதனை அவர்களை வந்தடைந்தபோது 'நாங்கள் உண்மையிலேயே அநியாயக்காரர்கள்தான்' என்பதைத்தவிர அவர்களால் வேறொன்றும் கூற முடியவில்லை. 6. எவருக்கெல்லாம் தூதர்கள் அனுப்பப்பட்டார்களோ அவர்களை நிச்சயம் நாம் விசாரிப்போம். தூதர்களையும் விசாரிப்போம். 7. நாம் அவர்களிடம் எல்லாவற்றையும் முழு அறிவுடன் எடுத்துரைப்போம். நாம் மறைவானவர்களாக இல்லை. 8. அந்நாளில் சத்தியம் மட்டுமே கனமானதாக இருக்கும். எனவே யாருடைய எடை கனமாக இருக்குமோ அவர்கள்தான் வெற்றியாளர்கள். 9. யாருடைய எடை குறைவாக இருக்குமோ அவர்கள்தான் - நமது சான்றுகளுக்கு அநீதி இழைத்துக் கொண்டிருந்ததனால் - தம்மைத்தாமே இழப்புக்கு ஆளாக்கிக் கொண்டவர்கள்.*

*10. நாம் உங்களை பூமியில் வசிக்கச் செய்தோம். அதில் உங்களுக்காக வாழ்க்கை வசதிகளையும் ஏற்படுத்தினோம்.*

*ஆயினும் நீங்கள் மிகக்குறைவாகவே நன்றி செலுத்துகிறீர்கள். **11.** நாம் உங்களைப் படைத்து, உங்களை வடிவமைத்தோம். பின்னர் 'ஆதமுக்கு சிரம்பணியுங்கள்' என்று வானவர்களிடம் கூறினோம். அவர்கள் அனைவரும் சிரம்பணிந்தார்கள். ஆனால் இப்லீஸ் சிரம்பணியவில்லை. **12.** சிரம்பணியும்படி நான் உனக்குக் கட்டளையிட்டபோது அதைச் செய்யவிடாமல் உன்னைத் தடுத்தது எது? என்று இறைவன் கேட்டான். அதற்கு இப்லீஸ், "நான் அவரைவிடச் சிறந்தவன். நீ என்னை நெருப்பினால் படைத்தாய். அவரை நீ மண்ணால்தான் படைத்துள்ளாய்" என்று கூறினான். **13.** இறைவன், "நீ இங்கிருந்து இறங்கிவிடு. இங்கு பெருமையடிக்க உனக்கு உரிமை இல்லை. எனவே வெளியேறிவிடு. நிச்சயமாக நீ இழிவடைந்து விட்டாய்" என்று கூறினான். **14.** "அவர்கள் எழுப்பப்படும் நாள்வரை எனக்கு நீ அவகாசம் அளிப்பாயாக" என்று இப்லீஸ் வேண்டினான். **15.** அதற்கு இறைவன், "உனக்கு அவகாசம் அளிக்கப்பட்டு விட்டது" என்றான். **16.** அதற்கு இப்லீஸ், "நீ என்னை வழிதவறச் செய்து விட்டதால் நானும் மக்களை வழிகெடுப்பதற்காக உன்னுடைய நேரான வழியில் (தடையாக) அமர்ந்து கொள்வேன். **17.** பின்னர் அவர்களின் முன்னாலும், பின்னாலும், வலப்புறமாகவும், இடப்புறமாகவும் அவர்களிடம் நான் வருவேன். அவர்களில் பெரும்பாலோரை நன்றியுள்ளவர்களாக நீ காணமாட்டாய்" என்று கூறினான். **18.** அதற்கு இறைவன், "இழிவுபடுத்தப்பட்டவனாகவும், துரத்தப்பட்டவனாகவும் இங்கிருந்து நீ வெளியேறி விடு. அவர்களில் யாரேனும் உன் வழியில் நடந்தால் - நான் உங்கள் அனைவராலும் நரகத்தை நிரப்பி விடுவேன்" என்று கூறினான்.*

***19.** "ஆதமே, நீரும் உமது மனைவியும் சொர்க்கத்தில் வசியுங்கள். நீங்கள் விரும்பியவாறு எங்கிருந்து வேண்டுமானாலும் புசியுங்கள். ஆனால் இந்த மரத்தின் அருகில் செல்லாதீர்கள்,*

அநியாயக்காரர்களாகி விடுவீர்கள்" என்று இறைவன் கூறினான். ***20.*** சாத்தான் மறைக்கப்பட்டிருந்த அவர்களது வெட்கத்தலங்களை வெளிப்படுத்துவதற்காக அவர்கள் இருவருக்குள்ளும் ஊசலாட்டத்தை உண்டாக்கினான். "நீங்கள் இருவரும் வானவர்களாகவோ, நிரந்தரமாக இருப்பவர்களாகவோ ஆகிவிடக்கூடாது என்பதற்காகத்தான் உங்கள் இறைவன் உங்களை இந்த மரத்தினைவிட்டும் தடுத்துள்ளான்" என்று அவர்களிடம் கூறினான். ***21.*** "நான் உங்கள் இருவருக்கும் நலம்விரும்பியாக இருக்கின்றேன்" என்றும் அவன் சத்தியம் செய்து கூறினான்.

***22.*** அவன் அவர்களை மயக்கி ஏமாற்றி விட்டான். எனவே அவர்கள் இருவரும் அந்த மரத்தின் கனியை சுவைத்தபோது அவர்களது வெட்கத்தலங்கள் அவர்களுக்கு வெளிப்பட்டு விட்டன. அவர்கள் தம்மை சுவனத்தின் இலைகளால் மறைக்க முயன்றனர். அப்போது அவர்களது இறைவன் அவர்களை அழைத்து, "இந்த மரத்தைவிட்டும் நான் உங்களைத் தடுக்கவில்லையா? சாத்தான் உங்களுக்கு பகிரங்கமான பகைவன் என்றும் உங்களிடம் நான் கூறவில்லையா?" என்று கேட்டான். ***23.*** அதற்கு அவர்கள், "எங்கள் இறைவா! எங்களுக்கு நாங்களே அநீதியிழைத்துக் கொண்டோம். நீ எங்களை மன்னித்து எங்கள்மீது கருணைகாட்டவில்லையெனில் நாங்கள் நிச்சயம் இழப்பிற்குள்ளாகி விடுவோம்" என்று கூறினார்கள். ***24.*** அதற்கு இறைவன், "நீங்கள் இங்கிருந்து இறங்கி விடுங்கள். நீங்கள் ஒருவருக்கொருவர் பகைவர்களாக இருப்பீர்கள். பூமியில் உங்களுக்கு குறிப்பிட்ட காலம்வரை தங்குமிடமும், வாழ்க்கை வசதியும் உண்டு" என்று கூறினான். ***25.*** "அங்குதான் நீங்கள் வாழ்வீர்கள். அங்குதான் நீங்கள் மரணிப்பீர்கள். அங்கிருந்துதான் நீங்கள் வெளிப்படுத்தப்படுவீர்கள்" என்றும் அவன் கூறினான்.

*26.* ஆதமின் மக்களே, உங்கள் உடலின் வெட்கத்தலங்களை மறைப்பதற்காகவும், அலங்காரத்திற்காகவும் நாம் உங்களுக்கு ஆடையை அருளியுள்ளோம். ஆயினும் இறையச்சமெனும் ஆடையே மிகச்சிறந்தாகும். இது அல்லாஹ்வின் சான்றுகளில் ஒன்றாகும். இதனால் மக்கள் சிந்திக்கக்கூடும். *27.* ஆதமின் மக்களே, சாத்தான் உங்கள் தாய் தந்தையரை சொர்க்கத்திலிருந்து வெளியேற்றி, அவர்களை ஒருவருக்கொருவர் நிர்வாணமாகக் காட்ட அவர்களது ஆடைகளைச் களையச்செய்தவாறு உங்களையும் அவன் வழிதவறச்செய்துவிட வேண்டாம். அவனும், அவனது கூட்டாளிகளும் உங்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். நீங்கள் அவர்களைப் பார்க்க முடியாது. நம்பிக்கை கொள்ளாதோருக்கு சாத்தான்களை நாம் நண்பர்களாக்கி விட்டோம்.

*28.* (நம்பிக்கைகொள்ளாத) அவர்கள் மானக்கேடான காரியத்தைச் செய்தால், “எங்கள் முன்னோர்களை இவ்வாறே கண்டோம். அல்லாஹ்வும் எங்களுக்கு இதனையே கட்டளையிட்டுள்ளான்” என்று கூறுகிறார்கள். நீர் கேளும், “அல்லாஹ் ஒருபோதும் மானக்கேடானவற்றை ஏவமாட்டான். நீங்கள் அறியாதவற்றை அல்லாஹ்வின் மீது இட்டுக்கட்டுகிறீர்களா?” *29.* நீர் கூறும்: “என் இறைவன் நீதியாக நடக்கும்படி கட்டளையிட்டுள்ளான். ஒவ்வொரு தொழுகை நேரத்திலும் உங்கள் முகங்களை இறைவனை நோக்கித் திருப்பிக் கொள்ளுங்கள். உளத்தூய்மையுடன் அவனையே வழிபட்டு பிரார்த்தியுங்கள். உங்களை முதன்முறையாக அவன் படைத்ததைப் போன்றே மீண்டும் நீங்கள் திரும்புவீர்கள். *30.* ஒரு பிரிவினருக்கு அவன் வழிகாட்டினான். மற்றொரு பிரிவினர் மீதோ வழிகேடு உறுதியாகி விட்டது. அவர்கள் அல்லாஹ்வை விடுத்து சாத்தான்களை நண்பர்களாக்கிக் கொண்டார்கள். தாங்கள்தான் நேர்வழி பெற்றவர்கள் என்றும் அவர்கள் எண்ணுகிறார்கள்.

*31.* ஆதமின் மக்களே, ஒவ்வொரு தொழுகை நேரத்திலும் முறையாக ஆடை அணிந்து கொள்ளுங்கள். உண்ணுங்கள், பருகுங்கள். ஆனால் வீண்விரயம் செய்யாதீர்கள். நிச்சயமாக அல்லாஹ் வீண்விரயம் செய்வோரை நேசிக்க மாட்டான். *32.* நீர் கேளும்: "தன் அடியார்களுக்காக அல்லாஹ் வெளிப்படுத்திய அலங்காரத்தையும், தூய்மையான உணவையும் தடைசெய்தது யார்?" இவ்வுலக வாழ்வில் அது நம்பிக்கையாளர்களுக்கு உரியது. மறுமையிலோ அது அவர்களுக்கு மட்டுமே உரித்தானது. இவ்வாறு அறிந்துகொள்ளும் மக்களுக்கு நம் வசனங்களை நாம் தெளிவுபடுத்துகிறோம். *33.* நீர் கூறும்: "மானக்கேடானவற்றையும் - அவை வெளிப்படையாகவோ மறைமுகமாவோ இருந்தாலும் சரி - பாவங்களையும், நியாயமின்றி வரம்பு மீறுவதையும், எவ்வித ஆதாரத்தையும் அல்லாஹ் இறக்கி வைக்காத நிலையில் அவனுக்கு நீங்கள் இணைவைப்பதையும், நீங்கள் அறியாதவற்றை அல்லாஹ்வின்மீது புனைவதையுமே என் இறைவன் தடைசெய்துள்ளான்".

*34.* ஒவ்வொரு சமூகத்திற்கும் ஒரு குறிப்பிட்ட தவணையுண்டு. அவர்களது தவணை வந்துவிட்டால் அவர்கள் ஒரு நொடியும் முந்தவோ, பிந்தவோ மாட்டார்கள். *35.* ஆதமின் மக்களே! உங்களிடம் உங்களிலிருந்தே தூதர்கள் வந்து என் வசனங்களை உங்களுக்கு எடுத்துரைக்கும்போது யாரெல்லாம் இறையச்சத்துடன் தம்மை சீர்திருத்திக் கொண்டார்களோ அவர்களுக்கு எவ்வித அச்சமுமில்லை, அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள். *36.* என் வசனங்களை மறுத்து அவற்றைவிட்டும் கர்வம் கொள்பவர்கள்தான் நரகவாசிகள். அதில் அவர்கள் என்றென்றும் வீழ்ந்து கிடப்பார்கள். *37.* அல்லாஹ்வின்மீது பொய்யைப் புனைபவனைவிட அல்லது அவனது சான்றுகளை மறுப்பவனைவிட பெரும் அக்கிரமக்காரன் யார்? அவர்களுக்கு விதிக்கப்பட்டது அவர்களை அடைந்தே

தீரும். இறுதியில் நம் வானவர்கள் அவர்களின் உயிரைக் கைப்பற்ற வரும்போது, “அல்லாஹ்வைத்தவிர நீங்கள் அழைத்துக் கொண்டிருந்தவர்கள் எங்கே?” என்று அவர்கள் கேட்பார்கள். அதற்கு அவர்கள், “எங்களைவிட்டும் அவர்களெல்லாம் காணாமல் போய் விட்டார்கள்” என்று கூறுவார்கள். நிச்சயமாக தாங்கள் நிராகரிப்பாளர்களாகவே இருந்ததாக அவர்கள் தங்களுக்கு எதிராக சாட்சி கூறுவார்கள்.

38. (அவர்களிடம்) அவன், “உங்களுக்கு முன்னர் சென்றுவிட்ட ஜின் மற்றும் மனித சமூகங்களோடு நீங்களும் நரகத்தில் நுழைந்து விடுங்கள்” என்று கூறுவான். ஏதேனும் ஒரு கூட்டம் நரகத்தில் நுழையும்போதெல்லாம் அவர்கள் தங்கள் சகோதர கும்பலைச் சபிப்பார்கள். இறுதியில் அங்கு அவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்துவிடும்போது அவர்களில் பிந்தியவர்கள் தங்களுக்கு முந்தியவர்களைப்பற்றி, “எங்கள் இறைவனே! இவர்கள்தான் எங்களை வழிகெடுத்தவர்கள், எனவே நீ இவர்களுக்கு நரகத்தின் இரு மடங்கு வேதனையை அளிப்பாயாக” என்று கூறுவார்கள். அதற்கு அவன் கூறுவான், “அனைவருக்கும் இரு மடங்குதான். ஆனால் நீங்கள் அதனை அறிய மாட்டீர்கள்”. 39. அவர்களில் முந்தியவர்கள் தங்களுக்குப் பிந்தியவர்களிடம் “உங்களுக்கு எங்களைவிட எந்தச் சிறப்பும் இல்லை. எனவே உங்கள் சம்பாத்தியத்தின் விளைவாக வேதனையைச் சுவையுங்கள்” என்று கூறுவார்கள்.

40. நிச்சயமாக யாரெல்லாம் நம் சான்றுகளை மறுத்து அவற்றை விட்டும் கர்வம் கொண்டார்களோ, அவர்களுக்கு வானத்தின் கதவுகள் திறக்கப்பட மாட்டாது. ஊசியின் துவாரத்தில் ஒட்டகம் நுழையும்வரை அவர்கள் சொர்க்கத்தில் நுழைய மாட்டார்கள். இவ்வாறே நாம் குற்றவாளிகளுக்குத் தண்டனை

வழங்குகிறோம். **41.** அவர்களுக்கு நெருப்பாலான விரிப்பும், போர்வையும் உண்டு. இவ்வாறே நாம் அநியாயக்காரரர்களுக்குத் தண்டனை வழங்குகிறோம். **42.** ஆனால் நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிபவர்கள்தான் சுவனவாசிகள். அதில் அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். நாம் ஒருவர் மீது அவரது சக்திக்குட்பட்டே பொறுப்பை ஏற்படுத்துகிறோம். **43.** அவர்களின் உள்ளங்களிலுள்ள எல்லாவகையான குரோதத்தையும் நாம் நீக்கி விடுவோம். அவர்கள் இருக்கும் இடத்தில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். "எங்களுக்கு இதன் பக்கம் வழிகாட்டிய அல்லாஹ்வுக்கே அனைத்துப் புகழும். அல்லாஹ் எங்களுக்கு நேர்வழி காட்டவில்லையென்றால் நாங்கள் நேர்வழி அடைந்திருக்க மாட்டோம். எங்கள் இறைவனின் தூதர்கள் சத்தியத்தையே கொண்டு வந்தார்கள்" என்று அவர்கள் கூறுவார்கள். நீங்கள் புரிந்த செயல்களுக்கு கூலியாக உங்களுக்கு உரிமையாக்கப்பட்ட சொர்க்கம் இதுதான் என்று அவர்களுக்கே கூறப்படும்.

**44.** சொர்க்கவாசிகள் நரகவாசிகளை அழைத்து, "எங்கள் இறைவன் எங்களுக்கு அளித்த வாக்குறுதியை நாங்கள் உண்மையாகப் பெற்றுக்கொண்டோம். நீங்களும் உங்கள் இறைவனின் வாக்குறுதியை உண்மையாகப் பெற்றுக்கொண்டீர்களா?'' என்று கேட்பார்கள். அதற்கு அவர்கள் 'ஆம்' என்பார்கள். அவர்களிடையே அறிவிப்பாளர் ஒருவர் "அநியாயக்காரரர்கள் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும்" என்று அறிவிப்பார். **45.** அவர்கள் இறைவழியைவிட்டும் மக்களைத்தடுத்து அதனைக் கோணலாக்க விரும்பினார்கள். அவர்கள் மறுமையையும் மறுத்தார்கள்.

**46.** அவ்விரு பிரிவினரிடையே ஒரு தடுப்பு இருக்கும். சிகரங்களின் மீது சில மனிதர்கள் இருப்பார்கள். அவர்கள் ஒவ்வொருவரையும் அவர்களின் அடையாளங்களைக் கொண்டே

அறிந்துகொள்வார்கள். அவர்கள் சொர்க்கவாசிகளை அழைத்து "உங்கள் மீது சாந்தி உண்டாகட்டும்" என்று கூறுவார்கள். அவர்கள் இன்னும் சொர்க்கத்தில் நுழைந்திருக்கவில்லை. ஆயினும் ஆவலுடன் இருப்பார்கள். *47.* நரகவாசிகளின் பக்கம் அவர்களின் பார்வை திருப்பப்பட்டால் "எங்கள் இறைவா! இந்த அக்கிரமக்கார மக்களுடன் எங்களைச் சேர்த்து விடாதே" என்று கூறுவார்கள். *48.* சிகரங்களில் இருப்பவர்கள் சில மனிதர்களை அவர்களின் அடையாளங்களினால் அறிந்துகொண்டு "உங்கள் கூட்டமும், நீங்கள் அடித்த பெருமையும் உங்களுக்குப் பயனளிக்கவில்லையே", என்று கூறுவார்கள். *49.* இவர்களைப்பற்றித்தானே நீங்கள் "அல்லாஹ் இவர்களுக்குக் கருணை புரியவே மாட்டான்" என்று சத்தியமிட்டுக் கூறிக்கொண்டிருந்தீர்கள்? "சொர்க்கத்தில் நுழைந்து விடுங்கள், இனி உங்களுக்கு எவ்வித அச்சமுமில்லை. நீங்கள் கவலைப்படவும் மாட்டீர்கள்" (என்று கூறப்படும்).

*50.* நரகவாசிகள் சொர்க்கவாசிகளை அழைத்து "எங்கள் மீது சிறிது தண்ணீராவது ஊற்றுங்கள் அல்லது அல்லாஹ் உங்களுக்கு வழங்கியுள்ள உணவிலிருந்து சிறிதளவாவது கொடுங்கள்" என்று கேட்பார்கள். அதற்கு அவர்கள், "அல்லாஹ் அவ்விரண்டையும் நிராகரிப்பாளர்களுக்குத் தடை செய்துவிட்டான்" என்று கூறுவார்கள். *51.* அவர்கள் தங்கள் மார்க்கத்தை வேடிக்கையாகவும், விளையாட்டாகவும், ஆக்கிக்கொண்டார்கள். இவ்வுலக வாழ்வு அவர்களை ஏமாற்றத்தில் ஆழ்த்தி விட்டது. அவர்கள் இந்நாளின் சந்திப்பை மறந்து நம் வசனங்களை மறுத்துக் கொண்டிருந்ததைப் போன்று நாமும் இன்று அவர்களை மறந்து விடுவோம்.

*52.* நாம் அவர்களிடம் ஒரு வேதத்தைக் கொண்டுவந்துள்ளோம். அதனை அறிவுப்பூர்வமாக தெளிவுபடுத்தியுள்ளோம். அது நம்பிக்கைகொள்ளும் மக்களுக்கு வழிகாட்டியாகவும்,

கருணையாகவும் இருக்கின்றது. **53.** அவர்கள் இவ்வேதம் எச்சரிக்கின்ற இறுதி விளைவைத்தான் எதிர்பார்க்கிறார்களா? அதன் முடிவு வெளிப்பட்டுவிடும் நாளில் அதை முன்னரே மறந்து விட்டவர்கள், “நிச்சயமாக எங்கள் இறைவனின் தூதர்கள் உண்மையையே கொண்டு வந்தார்கள், எங்களுக்காகப் பரிந்து பேசுவதற்கு யாரேனும் இருக்கிறார்களா? அல்லது நாங்கள் முன்னர் செய்து கொண்டிருந்ததற்கு மாறாக செயல்படும்படி திருப்பி அனுப்பப்பட மாட்டோமா?”, என்று புலம்புவார்கள். அவர்கள் தமக்குத்தாமே இழப்பை ஏற்படுத்திக் கொண்டார்கள். அவர்கள் கற்பனையாகக் கூறியவை யாவும் அவர்களைவிட்டு மறைந்துவிடும்.

**54.** நிச்சயமாக உங்கள் இறைவன் அல்லாஹ்தான். அவனே வானங்களையும், பூமியையும் ஆறு நாட்களில் படைத்தான். பின்னர் அவன் அரியணையின்மீது நிலைகொண்டான். அவன் இரவால் பகலை மூடுகிறான். பகல் அதனைப் பின்தொடர்கிறது. அவன் சூரியனையும், சந்திரனையும், நட்சத்திரங்களையும் படைத்தான், அனைத்தும் அவனது கட்டளைக்குக் கட்டுப்பட்டே இருக்கின்றன. நினைவில் வையுங்கள். படைப்பதும், கட்டளையிடுவதும் அவனுக்கே உரிய செயலாகும். அகிலமனைத்திற்கும் இறைவனாகிய அல்லாஹ் பெரும் பாக்கியமுடையவன். **55.** பணிவாகவும், அந்தரங்கமாகவும் உங்கள் இறைவனிடம் பிரார்த்தியுங்கள். நிச்சயமாக அவன் வரம்புமீறுவோரை நேசிக்க மாட்டான். **56.** பூமியில் சீர்திருத்தம் ஏற்பட்ட பின் அதில் குழப்பம் உண்டாக்காதீர்கள். அச்சத்தோடும், ஆசையோடும் அவனிடமே பிரார்த்தியுங்கள். நிச்சயமாக இறையருள் நன்மை செய்வோருக்கு நெருக்கமாகவே உள்ளது.

**57.** அவனே தனது கருணைக்கு முன்னர் காற்றுகளை நற்செய்தியாக அனுப்புகிறான். அவை கனமான மேகங்களைச் சுமந்து

செல்லும்போது நாம் அவற்றை வறண்டுகிடக்கும் பூமியின் பக்கம் ஓட்டிச் செல்கின்றோம். அங்கு மழையைப் பொழிவித்து அதன்மூலம் எல்லாவகையான கனிகளையும் நாம் வெளிப்படுத்துகிறோம். இவ்வாறே நாம் இறந்தவர்களை உயிர்ப்பிக்கின்றோம். இதனால் நீங்கள் படிப்பினை பெறக்கூடும். *58.* வளம்மிக்க பூமி தன் இறைவனின் கட்டளைப்படி நல்ல விளைச்சலைத் தருகிறது. வளம்குன்றிய பூமியின் விளைச்சல் குறைவாகத்தான் இருக்கும். இவ்வாறு நன்றி செலுத்தும் மக்களுக்கு நம் சான்றுகளைப் பல்வேறு கோணங்களில் நாம் தெளிவுபடுத்துகின்றோம்.

*59.* நாம் நோவாவை அவரது சமூகத்திடம் அனுப்பினோம். அவர், "என் சமூகமே, அல்லாஹ்வை வணங்குங்கள். அவனைத்தவிர உங்களுக்கு வேறு இறைவன் இல்லை. நான் உங்கள்மீது மாபெரும் நாளின் வேதனையை அஞ்சுகிறேன்" என்று கூறினார். *60.* அவரது சமூகத்தின் பிரமுகர்கள் "நாங்கள் உம்மைத் தெளிவான வழிகேட்டிலேயே காண்கிறோம்'' என்று கூறினார்கள். *61.* அதற்கு அவர், "என் சமூகமே, என்னிடம் எவ்வித வழிகேடும் இல்லை, மாறாக நான் அகிலங்களின் இறைவனால் அனுப்பப்பட்டுள்ள தூதராவேன். *62.* உங்களுக்கு என் இறைவனின் செய்திகளை எடுத்துரைப்பதோடு உங்கள் நலம்விரும்பியாகவும் நான் இருக்கின்றேன். நீங்கள் அறியாதவற்றை அல்லாஹ்விடமிருந்து நான் அறிகிறேன். *63.* உங்களை எச்சரிப்பதற்காகவும், நீங்கள் தப்பித்துக் கொள்வதற்காகவும், உங்கள்மீது கருணை காட்டப்படுவதற்காகவும் உங்களிலுள்ள ஒருவரின்மீது இறைவனின் அறிவுரை வருகிறதே என்பதற்காகவா நீங்கள் வியப்படைகிறீர்கள்?" என்று கூறினார். *64.* ஆயினும் அவர்கள் அவரை மறுத்துவிட்டார்கள். எனவே நாம் நோவாவையும் அவருடன் கப்பலில் இருந்த மக்களையும் காப்பாற்றினோம். நம் சான்றுகளை மறுத்தவர்களை மூழ்கடித்து

விட்டோம். நிச்சயமாக அவர்கள் குருட்டுச் சமூகமாக இருந்தார்கள்.

*65.* ‘ஆத்’ சமூகத்தாரிடம் அவர்களது சகோதரர் ஹூதை நாம் அனுப்பினோம். அவர், “என் சமூகமே! அல்லாஹ்வை வணங்குங்கள். அவனைத்தவிர உங்களுக்கு வேறு இறைவன் இல்லை. நீங்கள் அஞ்ச மாட்டீர்களா?” என்று கூறினார். *66.* அவரது சமூகத்தில் இருந்த இறைவனை நிராகரித்த பிரமுகர்கள், “உம்மை நாங்கள் மடமையிலேயே காண்கிறோம். உம்மைப் பொய்யர் என்றும் கருதுகிறோம்” என்று கூறினார்கள். *67.* அதற்கு அவர், “என் சமூகமே! என்னிடம் மடமை இல்லை. மாறாக நான் அகிலங்களின் இறைவனால் அனுப்பப்பட்ட தூதராவேன். *68.* உங்களுக்கு என் இறைவனின் செய்திகளை எடுத்துரைத்து விடுகிறேன். நான் உங்கள் நலம்விரும்பியாகவும், நம்பிக்கைக்குரியவனாகவும் இருக்கின்றேன். *69.* உங்களை எச்சரிப்பதற்காக உங்கள் இறைவனின் அறிவுரை உங்களில் உள்ள ஒருவருக்கு வருகிறதே என்பதற்காகவா நீங்கள் ஆச்சர்யப்படுகிறீர்கள்? நோவாவின் சமூகத்திற்குப் பின்னர் அவன் உங்களை சந்ததிகளாக பரவச் செய்ததையும், படைப்பில் உங்களை வலுவானவர்களாக ஆக்கியதையும் நினைவுகூருங்கள். எனவே நீங்கள் வெற்றிபெறும்பொருட்டு அல்லாஹ்வின் அருட்கொடைகளை நினைவுகூருங்கள்” என்று கூறினார்.

*70.* அதற்கு அவர்கள், “நாங்கள் அல்லாஹ்வை மட்டும் வணங்க வேண்டும், எங்கள் முன்னோர்கள் வணங்கி வந்தவற்றை விட்டுவிட வேண்டும் என்பதற்காகத்தான் நீ எங்களிடம் வந்துள்ளாயா? எனவே நீ உண்மையாளனாக இருந்தால் நீ எச்சரிக்கும் வேதனையை எங்களிடம் கொண்டு வா” என்று கூறினார்கள். *71.* அதற்கு அவர், “உங்களுக்கு உங்கள் இறைவனிடமிருந்து துன்பமும், கோபமும் உறுதியாகிவிட்டது. நீங்களும், உங்கள்

முன்னோர்களும் சூட்டிக்கொண்ட பெயர்களுக்காகவா நீங்கள் என்னிடம் வாதம் புரிகிறீர்கள்? இறைவன் அதற்கு எவ்வித ஆதாரத்தையும் இறக்கிவைக்கவுமில்லை. எனவே நீங்கள் எதிர்பாருங்கள், நானும் உங்களுடன் எதிர்பார்க்கிறேன்" என்று கூறினார். 72. எனவே நாம் நம் கருணையினால் அவரையும், அவருடன் இருந்தவர்களையும் காப்பாற்றினோம். நம் சான்றுகளைப் பொய்யெனக் கூறி ஏற்றுக்கொள்ளாமல் இருந்தவர்களை நாம் அடியோடு அழித்து விட்டோம்.

73. நாம் 'ஸமூத்' சமூகத்தாரிடம் அவர்களது சகோதரர் 'சாலிஹை' அனுப்பினோம். அவர், "என் சமூகமே! அல்லாஹ்வை வணங்குங்கள். அவனைத்தவிர உங்களுக்கு வேறு இறைவன் இல்லை. உங்கள் இறைவனிடமிருந்து ஒரு தெளிவான ஆதாரம் உங்களிடம் வந்துள்ளது. இது உங்களுக்குச் சான்றாக அமைந்த அல்லாஹ்வின் ஒட்டகமாகும். எனவே அதனை அல்லாஹ்வின் பூமியில் மேய விடுங்கள். அதற்கு எவ்விதத் தீங்கும் இழைக்காதீர்கள். அவ்வாறு செய்தால் துன்புறுத்தும் வேதனை உங்களைப் பிடித்துக்கொள்ளும்" என்று கூறினார். 74. ஆத் சமூகத்திற்குப்பின் இறைவன் உங்களை சந்ததிகளாக்கியதையும், பூமியில் உங்களை வசிக்கச் செய்ததையும் நினைவுகூருங்கள். நீங்கள் அதன் சமவெளிகளில் மாளிகைகளை கட்டுகிறீர்கள். மலைகளைக் குடைந்து வீடுகளை அமைக்கிறீர்கள். எனவே அல்லாஹ்வின் அருட்கொடைகளை நினைவுகூருங்கள். பூமியில் குழப்பம் செய்துகொண்டு திரியாதீர்கள்.

75. அவரது சமூகத்தில் ஆணவங்கொண்ட பிரமுகர்கள் பலவீனமாகக் கருதப்பட்ட நம்பிக்கையாளர்களிடம், "சாலிஹ் தன்னுடைய இறைவனால் அனுப்பப்பட்ட தூதர் என்று நீங்கள் நம்புகிறீர்களா?" என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், "அவர் கொண்டுவந்துள்ள தூதை நாங்கள் நம்புகிறோம்'' என்று

கூறினார்கள். 76. அதற்கு அந்த ஆணவக்காரர்கள் “நீங்கள் நம்புவதை நாங்கள் நிராகரிக்கிறோம்'' என்று கூறினார்கள். 77. பின்னர் அவர்கள் அந்த பெண்ஒட்டகத்தை அறுத்து தங்கள் இறைவனின் கட்டளையை மீறியதோடு “சாலிஹே, நீ தூதராக இருந்தால் நீ எச்சரிப்பதை எங்களிடம் கொண்டு வா'' என்றும் கூறினார்கள். 78. எனவே அவர்களை பூகம்பம் பிடித்துக்கொண்டது. அவர்கள் தங்கள் வீடுகளில் முகங்குப்புற வீழ்ந்து கிடந்தார்கள். 79. “என் சமூகத்தினரே, நான் உங்களுக்கு என் இறைவனின் செய்தியை எடுத்துரைத்ததோடு உங்கள் நலம்விரும்பியாகவும் இருந்தேன், ஆனால் நீங்களோ நலம்நாடுவோரை நேசிப்பவர்களாக இல்லை” என்று கூறிவிட்டு அவர்களின் ஊரை விட்டு வெளியேறிச் சென்றார்.

80. நாம் 'லோத்தை' அனுப்பினோம். அவர் தம் சமூகத்தாரிடம், “உங்களுக்கு முன் உலகில் யாருமே செய்திராத மானக்கேடான காரியத்தையா நீங்கள் செய்கிறீர்கள்? 81. நீங்கள் பெண்களை விடுத்து ஆண்களிடம் உங்கள் இச்சைகளைத் தணித்துக் கொள்கிறீர்கள். உண்மையில் நீங்கள் வரம்புமீறும் மக்களாக இருக்கிறீர்கள்” என்று கூறினார். 82. “இவர்களை உங்கள் ஊரைவிட்டு வெளியேற்றுங்கள். இவர்கள்தான் பரிசுத்தவான்களாம்”, என்பதுதான் அதற்கான அவரது சமூத்தாருடைய பதிலாக இருந்தது. 83. எனவே நாம் லோத்தையும், அவரது குடும்பத்தையும் காப்பாற்றினோம், அவரது மனைவியைத் தவிர. அவள் பின்தங்கியவர்களில் ஆகிவிட்டாள். 84. நாம் அவர்கள் மீது கல்மழையைப் பொழிவித்தோம். குற்றவாளிகளின் முடிவு என்னவாயிற்று என்பதைப் பாரும்.

85. 'மத்யனை' நோக்கி நாம் அவர்களது சகோதரர் ஷுஐபை அனுப்பினோம். அவர், “என் சமூகமே! அல்லாஹ்வையே வணங்குங்கள், அவனைத்தவிர உங்களுக்கு வேறு இறைவன்

இல்லை. உங்கள் இறைவனிடமிருந்து தெளிவான ஆதாரம் உங்களிடம் வந்துவிட்டது. எனவே அளவையும், எடையையும் நிறைவாக்குங்கள். மக்களுக்கு அவர்களின் பொருட்களைக் குறைத்து விடாதீர்கள். உலகில் சீர்திருத்தம் ஏற்பட்டபிறகு குழப்பம் உண்டாக்காதீர்கள். நீங்கள் நம்பிக்கையாளர்களாக இருந்தால் இதுவே உங்களுக்குச் சிறந்ததாகும். 86. மக்களை பயமுறுத்துவதற்காகவும், நம்பிக்கையாளர்களை இறைவழியை விட்டுத் தடுப்பதற்காகவும், அவ்வழியில் கோணலை ஏற்படுத்துவதற்காகவும் நீங்கள் வழிகளில் அமராதீர்கள். நீங்கள் மிகவும் குறைவானவர்களாக இருந்தீர்கள். அவனே உங்களை அதிகரிக்கச் செய்தான் என்பதை எண்ணிப்பாருங்கள். குழப்பம் செய்தோரின் விளைவு என்னவாயிற்று என்பதைப் பாருங்கள். 87. நான் கொண்டுவந்துள்ள தூதின் மீது உங்களில் சிலர் நம்பிக்கைகொண்டும் சிலர் நம்பிக்கை கொள்ளாமலும் இருந்தால் - அல்லாஹ் நமக்கிடையே தீர்ப்பளிக்கும்வரை காத்திருங்கள். அவன் தீர்ப்பளிப்பதில் மிகச்சிறந்தவன்" என்று கூறினார்.

88. அவரது சமூகத்தில் ஆணவங்கொண்ட பிரமுகர்கள், "ஷுஐபே, உன்னையும், உன்னுடன் நம்பிக்கைகொண்டோரையும் எங்கள் ஊரிலிருந்து வெளியேற்றி விடுவோம் அல்லது நீ எங்கள் வழிமுறைக்குத் திரும்பிவிட வேண்டும்'' என்று கூறினார்கள். அதற்கு அவர், "நாங்கள் வெறுத்தாலுமா? 89. அல்லாஹ் எங்களை உங்கள் வழிமுறையிலிருந்து காப்பாற்றிய பிறகும் நாங்கள் அதன்பக்கம் திரும்பினால் நாங்கள் அல்லாஹ்வின்மீது பொய்யைப் புனைந்தவர்களாவோம். ஆனால் எங்கள் இறைவனாகிய அல்லாஹ் அவ்வாறு நாடினாலே தவிர. நாங்கள் உங்கள் வழிமுறைக்குத் திரும்பிவருவது சாத்தியமற்றது. எங்கள் இறைவன் தன் அறிவால் அனைத்தையும் சூழ்ந்துள்ளான். நாங்கள் எங்கள் இறைவனையே

சார்ந்துள்ளோம். எங்கள் இறைவா! எங்களுக்கும் எங்கள் சமூகத்துக்கும் இடையே சத்தியத்துடன் தீர்ப்பளிப்பாயாக. நீயே மிகச் சிறந்தமுறையில் தீர்ப்பளிப்பவனாக இருக்கின்றாய்" என்று கூறினார். **90.** அவரது சமூகத்தில் நிராகரித்துவிட்ட பிரமுகர்கள், "நீங்கள் ஷுஐபைப் பின்பற்றினால் அழிந்து போவீர்கள்" என்று கூறினார்கள். **91.** எனவே அவர்களை பூகம்பம் தாக்கியது. அவர்கள் தம் வீடுகளில் முகங்குப்புற வீழ்ந்து கிடந்தார்கள். **92.** ஷுஐபை மறுத்தவர்கள் அங்கு வசிக்காதவர்கள்போல (எந்த அடையாளமுமின்றி) ஆகிவிட்டார்கள். ஷுஐபை மறுத்தவர்கள்தான் இழப்பிற்குள்ளாகி விட்டார்கள். **93.** அப்போது ஷுஐப், "என் சமூகத்தினரே! நான் உங்களுக்கு என் இறைவனின் செய்தியை எடுத்துரைத்ததோடு உங்கள் நலம்விரும்பியாகவும் இருந்தேன். இனி நிராகரிப்பாளர்களுக்காக நான் எப்படி கவலை கொள்வேன்?" என்று கூறிவிட்டு முகம் திருப்பியவாறு சென்றுவிட்டார்.

**94.** நாம் எந்த ஊருக்குத் தூதர்களை அனுப்பினாலும் - அங்கு வசிக்கின்ற மக்கள் பணிய வேண்டும் என்பதற்காக அவர்களை வறுமையாலும், துன்பத்தாலும் பீடித்தோம். **95.** பின்னர் நாம் அத்துன்பத்தை இன்பமாக மாற்றிவிட்டோம். அவர்கள் பல்கிப்பெருகியபோது எங்கள் முன்னோர்களுக்கும் இன்பமும், துன்பமும் ஏற்படத்தான் செய்தன என்று கூறினார்கள். எனவே அவர்கள் உணராதவகையில் திடீரென அவர்களைப் பிடித்துக் கொண்டோம். **96.** இவ்வூர்வாசிகள் நம்பிக்கைகொண்டு, இறையச்சத்துடன் நடந்திருந்தால் நாம் அவர்களுக்காக வானம் மற்றும் பூமியின் அருட்கொடைகளைத் திறந்து விட்டிருப்போம். ஆனால் அவர்கள் மறுத்துவிட்டார்கள். ஆகவே அவர்களின் செயல்களினால் நாம் அவர்களைப் பிடித்துக்கொண்டோம். **97.** இவ்வூர்வாசிகள் இரவுநேரத்தில் உறங்கிக் கொண்டிருக்கும்போது

*நம் வேதனை அவர்களை வந்தடையாது என்று அச்சமற்று இருக்கிறார்களா? **98.** அல்லது இவ்வூர்வாசிகள் பகல்நேரத்தில் அலட்சியமாக இருக்கும்போது நம் வேதனை அவர்களை வந்தடையாது என்று அச்சமற்று இருக்கிறார்களா? **99.** இவர்கள் அல்லாஹ்வின் திட்டங்களை விட்டும் அச்சமற்று இருக்கின்றார்களா? அழிந்து போகக்கூடியவர்கள்தான் அல்லாஹ்வின் திட்டங்களை விட்டும் அச்சமற்று இருப்பார்கள்.*

***100.** பூமியில் முன்பு வாழ்ந்துசென்ற மக்களுக்குப்பின்வந்த வாரிசுகளான இவர்கள் படிப்பினை பெறவில்லையா? நாம் நாடினால் அவர்களின் பாவங்களினால் அவர்களை தண்டித்து இருப்போம். நாம் அவர்களின் உள்ளங்களில் முத்திரையிட்டு விட்டோம். எனவே அவர்கள் புரிந்துகொள்ள மாட்டார்கள். **101.** இவ்வூர்வாசிகளின் வரலாற்றை நாம் உமக்கு எடுத்துரைக்கிறோம். அவர்களிடம் நம் தூதர்கள் தெளிவான ஆதாரங்களைக் கொண்டுவந்தார்கள். ஆயினும் அவர்கள் முன்னர் மறுத்துக் கொண்டிருந்ததனால் அதனை ஏற்றுக் கொள்பவர்களாக இல்லை. இவ்வாறு அல்லாஹ் நிராகரிப்பாளர்களின் உள்ளங்களில் முத்திரையிட்டு விடுகிறான். **102.** நாம் அவர்களில் பெரும்பாலோரை வாக்குறுதியை நிறைவேற்றுபவர்களாகக் காணவில்லை. அவர்களில் பெரும்பாலோரை கீழ்ப்படியாதவர்களாகவே கண்டோம்.*

***103.** அவர்களுக்குப்பின் நாம் மோசேயை பாரோவிடமும் அவனது பிரமுகர்களிடமும் நம் சான்றுகளுடன் அனுப்பி வைத்தோம். ஆனால் அவர்கள் அவற்றை நிராகரித்தார்கள். எனவே குழப்பம் செய்தோரின் முடிவு என்னவாயிற்று என்பதைப் பாரும். **104.** மோசே, "பாரோவே, நான் அகிலங்களின் இறைவனால் அனுப்பப்பட்டுள்ள தூதராவேன். **105.** அல்லாஹ்வைக் குறித்து உண்மையைக் கூறுவதே எனது கடமையாகும். நான் உங்கள்*

இறைவனிடமிருந்து தெளிவான அத்தாட்சிகளை உங்களிடம் கொண்டு வந்துள்ளேன். எனவே நீ இஸ்ராயீலின் மக்களை என்னுடன் அனுப்பி விடு" என்று கூறினார். 106. அதற்கு பாரோ, "நீ ஏதேனும் சான்றினைக் கொண்டுவந்திருந்தால் அதனை எடுத்து வை, நீ உண்மையானவனாக இருப்பின்", என்று கூறினான். 107. அப்போது மோசே தம் கைத்தடியைப் போட்டார். உடனே அது உண்மையிலேயே பாம்பாகி விட்டது. 108. தம் கையை அவர் வெளியே எடுத்தபோது சட்டென்று அது பார்ப்பவர்களுக்கு பளிச்சிட்டுக் கொண்டிருந்தது. 109. இதனைக்கண்ட பாரோவின் சமூகத்திலுள்ள பிரமுகர்கள், "இவன் திறமையான சூனியக்காரனாக இருக்கின்றானே என்றார்கள். 110. இவர் உங்களை உங்கள் பூமியிலிருந்து வெளியேற்றிவிட நாடுகின்றார். எனவே உங்கள் ஆலோசனை என்ன?" என்று பாரோ கேட்டான். 111. அவர்கள், "மோசேவுக்கும் அவரது சகோதரருக்கும் அவகாசம் அளியுங்கள். நகரங்களில் ஆட்களை அனுப்பி வையுங்கள்.112. அவர்கள் உங்களிடம் திறமையான அனைத்து சூனியக்காரர்களையும் அழைத்து வருவார்கள்" என்று கூறினார்கள்.

113. சூனியக்காரர்கள் பாரோவிடம் வந்து "நாங்கள் வென்றுவிட்டால் எங்களுக்கு ஏதேனும் வெகுமதி உண்டா?'' என்று கேட்டார்கள். 114. அதற்கு பாரோ, "ஆம், நிச்சயமாக நீங்கள் எமக்கு நெருக்கமானவர்களாக ஆகிவிடுவீர்கள்'' என்று கூறினான். 115. மோசேயே, "நீ போடுகிறாயா அல்லது நாங்கள் போடட்டுமா'' என்று சூனியக்காரர்கள் கேட்டார்கள். 116. "நீங்களே போடுங்கள்'' என்று அவர் கூறினார். அவர்கள் போட்டபோது மக்களின் கண்களை மயக்கி மருளச் செய்துவிட்டார்கள். பெரும் சூனியத்தை அவர்கள் செய்து காட்டினார்கள். 117. 'உமது கைத்தடியைப் போடும்' என்று நாம் மோசேவுக்கு கட்டளையிட்டோம். உடனே அது அவர்களது

சூனியங்கள் அனைத்தையும் விழுங்கிவிட்டது. 118. அவர்கள் செய்து கொண்டிருந்தவை அனைத்தும் வீணாகி, சத்தியம் வெளிப்பட்டு விட்டது. 119. அங்கேயே அவர்கள் தோற்று இழிவடைந்து விட்டார்கள். 120. சூனியக்காரர்கள் சிரம்பணிந்தவர்களாக, 121. "அகிலங்களின் இறைவனின் மீது நாங்கள் நம்பிக்கை கொண்டோம். 122. அவனே மோசே மற்றும் ஆரோனின் இறைவனாவான்" என்று கூறினார்கள்.

123. அதற்கு பாரோ, "நான் உங்களுக்கு அனுமதியளிப்பதற்கு முன்பே நீங்கள் மோசேயின்மீது நம்பிக்கைகொண்டு விட்டீர்களா? இது இந்நகரவாசிகளை இங்கிருந்து வெளியேற்றுவதற்காக நீங்கள் செய்த சூழ்ச்சியாகும். நீங்கள் மிக விரைவில் அறிந்துகொள்வீர்கள். 124. நான் உங்கள் மாறுகை, மாறுகால்களை வெட்டி விடுவேன். பின்னர் உங்கள் அனைவரையும் சிலுவையில் அறைந்து விடுவேன்" என்று கூறினான். 125. அதற்கு அவர்கள், "நாங்கள் எங்கள் இறைவனிடமே திரும்பிச் செல்பவர்களாக இருக்கின்றோம், 126. எங்கள் இறைவனின் சான்றுகள் எங்களிடம் வந்தபோது நாங்கள் அதன்மீது நம்பிக்கை கொண்டோம் என்பதற்காகவா நீ எங்களைத் தண்டிக்க விரும்புகிறாய்?" என்று கூறினார்கள். "எங்கள் இறைவா, எங்கள்மீது பொறுமையைப் பொழிவாயாக. உனக்கு முற்றிலும் கீழ்ப்படிந்த நிலையில் எங்களை மரணிக்கச் செய்வாயாக" என்று அவர்கள் இறைவனிடம் பிரார்த்தித்தார்கள்.

127. பாரோவின் சமூகத்திலுள்ள பிரமுகர்கள் அவனிடம், "மோசேவையும், அவரது சமூகத்தினரையும் நாட்டில் குழப்பம் விளைவிக்கும்படியும், உங்களையும், உங்கள் தெய்வங்களையும் புறக்கணித்துவிடும்படியும் நீங்கள் விட்டுவிடுகிறீர்களா?" என்று கேட்டார்கள். அதற்கு பாரோ, "நாம் அவர்களது ஆண் மக்களைக் கொன்றுவிட்டு அவர்களது பெண் மக்களை

உயிருடன் விட்டுவிடுவோம். நாம் அவர்களின்மீது முழுமையாக ஆதிக்கம் கொண்டுள்ளோம்" என்று கூறினான். *128.* மோசே தம் சமூகத்தாரிடம், "அல்லாஹ்விடம் உதவி தேடுங்கள். பொறுமையை மேற்கொள்ளுங்கள். பூமி அல்லாஹ்விற்கே சொந்தமானது. தன் அடியார்களில் தான் நாடுவோருக்கு அதனை அவன் சொந்தமாக்கி வைக்கிறான். இறுதி வெற்றி இறையச்சமுடையோருக்கே" என்று கூறினார். *129.* அதற்கு மோசேயின் சமூகத்தினர், "நீங்கள் வருவதற்கு முன்பும் நாங்கள் துன்புறுத்தப்பட்டோம். நீங்கள் வந்தபிறகும் துன்புறுத்தப்படுகிறோம்" என்றார்கள். அதற்கு மோசே, "உங்கள் இறைவன் மிக விரைவில் உங்கள் எதிரியை அழித்துவிட்டு, அவர்களுக்குப் பதிலாக உங்களை இந்த பூமியின் அதிபதியாக்கி விடக்கூடும், நீங்கள் எவ்வாறு செயல்படுகிறீர்கள் என்பதை அவன் பார்ப்பதற்காக" என்று கூறினார்.

*130.* பாரோவைச் சார்ந்தவர்களைப் பஞ்சத்தினாலும், விளைபொருளின் குறைபாட்டினாலும் நாம் தண்டித்தோம், அவர்கள் படிப்பினை பெற வேண்டும் என்பதற்காக. *131.* அவர்களுக்கு ஏதேனும் நன்மை ஏற்பட்டால் 'இது எங்களுக்கு உரியதுதான்' என்று கூறுகிறார்கள். ஆனால் அவர்களுக்கு ஏதேனும் துன்பம் ஏற்பட்டு விட்டால் அதனை மோசேயாலும் அவருடன் இருப்பவர்களாலும் ஏற்பட்ட பீடையாகக் கருதுகிறார்கள். அறிந்துகொள்ளுங்கள், அவர்களது பீடை அல்லாஹ்விடமே உள்ளது, ஆனால் அவர்களில் பெரும்பாலானோர் அறிந்துகொள்வதில்லை. *132.* அவர்கள் மோசேயிடம் கூறினார்கள்: "நீ எங்களை வசப்படுத்த என்னதான் சான்றுகளைக் கொண்டு வந்தாலும் நாங்கள் உன்னை நம்பப்போவதில்லை".

*133.* நாம் அவர்களின்மீது புயல்காற்று, வெட்டுக்கிளி, பேன், தவளைகள், இரத்தம் ஆகியவற்றை தனித்தனி சான்றுகளாக

அனுப்பினோம். ஆயினும் அவர்கள் ஆணவங்கொண்டார்கள். அவர்கள் குற்றவாளிகளாகவே இருந்தார்கள். *134.* தங்களுக்கு வேதனை ஏற்பட்டபோது அவர்கள், "மோசேயே, உம் இறைவன் உமக்களித்த வாக்குறுதிப்படி எங்களுக்காக அவனிடம் பிரார்த்தனை செய்யும். நீர் இந்த வேதனையை எங்களை விட்டும் நீக்கிவிட்டால் நிச்சயமாக நாங்கள் உம்மீது நம்பிக்கைகொண்டு இஸ்ராயீலின் மக்களையும் உம்முடன் அனுப்பி வைப்போம்" என்று கூறினார்கள். *135.* அவர்கள் அடைய வேண்டிய ஒரு குறிப்பிட்ட காலம்வரை அவர்களைவிட்டும் நாம் வேதனையை விலக்கி வைத்தால் தம் வாக்குறுதிகளை அவர்கள் முறித்து விடுகிறார்கள்.

*136.* அவர்கள் நம் சான்றுகளை மறுத்து அலட்சியமாக இருந்ததனால் நாம் அவர்களைத் தண்டித்துக் கடலில் மூழ்கடித்து விட்டோம். *137.* பலவீனர்கள் என்று கருதப்பட்டவர்களை நாம் அருள்செய்திருந்த பூமியின் கிழக்கிற்கும், மேற்கிற்கும் உரிமையாளர்களாக்கினோம். இஸ்ராயீலின் மக்கள் பொறுமையாக இருந்ததனால் அவர்களுக்கு உம் இறைவன் அளித்த அழகிய வாக்குறுதி நிறைவேறி விட்டது. பாரோவையும், அவனது சமூகம் உருவாக்கியவற்றையும், அவர்கள் உயர்த்தி இருந்தவற்றையும் நாம் அழித்து விட்டோம்.

*138.* நாம் இஸ்ராயீலின் மக்களைக் கடலைக் கடக்கச் செய்தோம். பின்னர் தங்களுடைய சிலைகளை வணங்கிக் கொண்டிருந்த ஒரு சமூகத்தினரை அவர்கள் கடந்து சென்றபோது 'மோசேயே, இவர்களுக்கு சிலைகள் இருப்பதைப்போல எங்களுக்கும் ஒரு சிலை ஏற்படுத்தித் தாரும்' என்று கேட்டார்கள். அதற்கு மோசே, "நீங்கள் அறிவுகெட்ட கூட்டமாக இருக்கிறீர்களே" என்று கூறினார். *139.* இவர்கள் ஈடுபட்டிருக்கும் காரியம் அழியக்கூடியதே. இவர்கள் செய்துகொண்டிருப்பது வீணானதேயாகும்.

*140.* “அல்லாஹ்வைவிடுத்து வேறு இறைவனையா உங்களுக்கு நான் தேட வேண்டும்? அவனோ அகிலத்தார் அனைவரையும்விட உங்களைச் சிறப்பாக்கி வைத்துள்ளான்” என்றும் அவர் கூறினார். *141.* நாம் உங்களை பாரோவின் கூட்டத்தாரிடமிருந்து காப்பாற்றியதை நினைவுகூருங்கள். அவர்கள் உங்களைக் கொடிய வேதனையில் ஆழ்த்தி வைத்திருந்தார்கள். அவர்கள் உங்கள் ஆண் மக்களைக் கொலைசெய்து பெண்மக்களை உயிரோடு விட்டுவந்தார்கள். இதில் உங்களுக்கு உங்கள் இறைவனிடமிருந்து பெரும் சோதனை ஏற்பட்டிருந்தது.

*142.* நாம் மோசேயிடம் முப்பது இரவுகளை வாக்களித்தோம். மேலும் பத்து இரவுகளுடன் அதனை முழுமைப்படுத்தினோம். அவரது இறைவன் நிர்ணயித்த காலஅளவு நாற்பது இரவுகளாக முழுமையடைந்தது. மோசே தம் சகோதரர் ஆரோனிடம், “நீர் என் சமூகத்தில் என் பிரதிநிதியாக இருந்து, சீர்திருத்தம் செய்துகொண்டு இருப்பீராக. குழப்பம் விளைவிப்போரின் வழியைப் பின்பற்றாதீர்” என்று கூறினார். *143.* மோசே நாம் குறிப்பிட்ட நேரத்தில் வந்தபோது இறைவன் அவருடன் பேசினான். அப்போது மோசே, “என் இறைவனே! உன்னை எனக்குக் காட்டுவாயாக. நான் உன்னைப் பார்க்க வேண்டும்” என்று கூறினார். அதற்கு அவன், “நீர் என்னைப் பார்க்கவே முடியாது. எனினும் இந்த மலையைப் பாரும். அது தன் இடத்தில் நிலைத்திருந்தால் நீர் என்னைப் பார்க்க முடியும்” என்று கூறினான். அவரது இறைவன் மலையின்மீது தன் பேரொளியைத் தோற்றுவித்தபோது அது அம்மலையைத் தூள்தூளாக்கி விட்டது. மோசே மயக்கமுற்று கீழே விழுந்து விட்டார். அவர் மயக்கம் தெளிந்தபோது, “நீ தூய்மையானவன், நான் உன் பக்கமே மீண்டு விட்டேன். நான் நம்பிக்கையாளர்களில் முதன்மையானவனாக இருக்கின்றேன்” என்று கூறினார்.

*144.* அதற்கு அவன், “மோசேயே, தூதுப்பணிக்காகவும், என்னுடன் உரையாடுவதற்காகவும் ஏனைய மக்களைவிடவும் உம்மைத் தேர்ந்தெடுத்துள்ளேன். எனவே நான் உமக்கு வழங்கியதை பெற்றுக்கொண்டு நன்றிசெலுத்துபவராகத் திகழ்வீராக” என்று கூறினான். *145.* நாம் பலகைகளில் எல்லாவிதமான அறிவுரைகளையும், ஒவ்வொரு பொருளின் விளக்கத்தையும் எழுதி, “நீர் அதனை உறுதியாகப் பற்றிப்பிடித்துக் கொள்வீராக. அதில் சிறந்தவற்றைப் பின்பற்றுமாறு உம் சமூகத்தினரை ஏவுவீராக. அடிபணியாதோரின் இருப்பிடங்களை நாம் உமக்கு மிக விரைவில் காட்டுவோம்” (என்று அவருக்குக் கூறினோம்).

*146.* உலகில் உரிமையின்றி பெருமையடித்துக்கொண்டு திரிவோரை நான் என் சான்றுகளைவிட்டும் திருப்பிவிடுவேன். அவர்கள் அனைத்துவிதமான சான்றுகளைக் கண்டாலும் அவற்றை நம்பமாட்டார்கள். அவர்கள் நேர்வழியைக் கண்டாலும் அதனைத் தமக்குரிய வழியாக எடுத்துக்கொள்ள மாட்டார்கள். ஆனால் தவறான வழியைக் கண்டால் அதனைத் தமதாக்கிக் கொள்வார்கள். இது ஏனெனில் அவர்கள் நம் சான்றுகளை மறுத்து அலட்சியமாக இருந்ததனாலேயாகும். *147.* நம் சான்றுகளையும், மறுமையின் சந்திப்பையும் மறுப்பவர்களின் செயல்கள் அனைத்தும் நாசமாகி விடும். அவர்கள் செய்ததற்கான கூலியைத்தான் பெறுவார்கள்.

*148.* மோசேயின் சமூகத்தார் அவர் இல்லாத சமயத்தில் தங்கள் ஆபரணங்களால் தாழ்ந்த குரலில் சப்தமிடக்கூடிய ஒரு காளைக்கன்றை உருவாக்கிக்கொண்டார்கள். அது அவர்களிடம் பேசவுமில்லை, அவர்களுக்கு எந்த வழியையும் காட்டவுமில்லை என்பதை அவர்கள் பார்க்கவில்லையா? அதனை அவர்கள் கடவுளாக்கிக் கொண்டார்கள். அவர்கள் அநியாயக்காரர்களாக இருந்தார்கள். *149.* அவர்கள் வருத்தப்பட்டு தாங்கள் வழிகேட்டில்

விழுந்து விட்டதை உணர்ந்தபோது, “எங்கள் இறைவன் எங்கள் மீது கருணை காட்டி, எங்களை மன்னிக்கவில்லையென்றால் நிச்சயம் நாங்கள் அழிந்து விடுவோம்” என்று கூறினார்கள். 150. மோசே தம் சமூகத்தாரிடம் கோபத்துடனும், கடும் வருத்தத்துடனும் திரும்பி வந்தபோது, “நான் இல்லாத சமயத்தில் நீங்கள் செய்த காரியம் மிகவும் கெட்டதாகும். நீங்கள் உங்கள் இறைவனின் கட்டளைக்கு முன்னரே அவசரப்பட்டு விட்டீர்களா?” என்று கூறினார். அவர் பலகைகளைக் கீழே போட்டுத் தம் சகோதரரின் தலையைப் பிடித்து இழுத்தார். ஆரோன் , “என் தாயின் மகனே, மக்கள் என்னை பலவீனப்படுத்தி என்னைக் கொல்லவும் நெருங்கி விட்டார்கள். எனவே எதிரிகள் என்னைப்பார்த்து ஏளனமாகச் சிரிக்குமாறு செய்துவிடாதீர். என்னை அநியாயக்காரரர்களுடன் இணைத்து விடாதீர்” என்று கூறினார். 151. அப்போது மோசே, “என் இறைவனே! என்னையும், என் சகோதரரையும் மன்னித்து விடுவாயாக. உன் கருணையில் எங்களையும் நுழையச் செய்வாயாக. நீயே அளவிலாக் கருணையாளன்” என்று பிரார்த்தித்தார்.

152. நிச்சயமாக காளைக்கன்றைத் தெய்வமாக்கிக் கொண்டவர்கள் தம் இறைவனின் கோபத்திற்கு ஆளாகி இவ்வுலக வாழ்வில் இழிவையும் அடைவார்கள். இட்டுக்கட்டுவோரை நாம் இவ்வாறே தண்டிக்கிறோம். 153. ஆயினும் பாவங்கள் புரிந்தோர் மனம்திருந்தி மன்னிப்புக்கோரி, நம்பிக்கைகொண்டால் - அதன் பிறகு நிச்சயமாக உம் இறைவன் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

154. மோசேயின் கோபம் தணிந்தபின்னர் அவர் பலகைகளை எடுத்துக்கொண்டார். தங்கள் இறைவனை அஞ்சுவோருக்கு அதில் வழிகாட்டுதலும், கருணையும் எழுதப்பட்டிருந்தன. 155. மோசே தம் சமூகத்தில் எழுபது ஆண்களை நாம் நிர்ணயித்த நேரத்திற்காக

*தேர்ந்தெடுத்துக்கொண்டார். அவர்களை பூகம்பம் பிடித்துக் கொண்டபோது மோசே கூறினார்: "இறைவனே, நீ நாடியிருந்தால் அவர்களையும், என்னையும் முன்பே அழித்திருப்பாய். எங்களில் மூடர்கள் செய்த காரியத்திற்காகவா நீ எங்கள் அனைவரையும் அழிக்கின்றாய்? இவை யாவும் உன் சோதனையேயாகும். இதன்மூலம் நீ நாடியோரை வழிதவறச் செய்கின்றாய், நீ நாடியோரை நேர்வழியில் செலுத்துகிறாய். நீயே எங்களின் பொறுப்பாளன். எனவே நீ எங்களை மன்னித்து எங்கள் மீது இரக்கம் காட்டுவாயாக. நீயே மிகச்சிறந்த மன்னிப்பாளன். **156.** எங்களுக்கு இவ்வுலகிலும், மறுவுலகிலும் நன்மையை எழுதி விடுவாயாக. நாங்கள் உன் பக்கமே மீண்டு விட்டோம்". அல்லாஹ் கூறினான்: "நான் நாடுவோரைத் தண்டிப்பேன். ஆயினும் எனது கருணை அனைத்துப் பொருட்களையும் வியாபித்துள்ளது. இறையச்சத்துடன் கடமையாக்கப்பட்ட தானதர்மத்தையும் கொடுத்து வருவோருக்கும், நம் சான்றுகளை நம்புவோருக்கும் நன்மையை அளிப்போம்".*

*__157.__ அவர்கள் எழுதவும் படிக்கவும் அறியாத நபியாகிய இத்தூதரைப் பின்பற்றுகிறார்கள். அவரைக் குறித்து தங்களிடமுள்ள தவ்ராத்திலும், இன்ஜீலிலும் எழுதப்பட்டுள்ளதைக் காண்கிறார்கள். அவர் அவர்களுக்கு நன்மையை ஏவுகின்றார், தீமையைவிட்டும் தடுக்கின்றார். தூய்மையான பொருட்களை அனுமதித்ததாக்கி தூய்மையற்ற பொருட்களை அவர்களுக்குத் தடைசெய்கின்றார். அவர்களின்மீதுள்ள சுமைகளைக் களைந்து அவர்களைப் பிணைத்திருக்கும் விலங்குகளையும் நீக்குகின்றார். எனவே யாரெல்லாம் அவர் மீது நம்பிக்கைகொண்டு அவரைக் கண்ணியப்படுத்தி அவருக்கு உதவியும் புரிந்து அவருக்கு அருளப்பட்ட ஒளியையும் பின்பற்றினார்களோ அவர்கள்தான் வெற்றியாளர்கள்.*

*158.* நீர் கூறும்: “மக்களே! நிச்சயமாக நான் உங்கள் அனைவர்பாலும் அனுப்பப்பட்டுள்ள அல்லாஹ்வின் தூதராவேன்”. வானங்களிலும், பூமியிலும் அவனது ஆட்சியே உள்ளது. அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. அவனே வாழ்வையும், மரணத்தையும் அளிக்கின்றான். எனவே அல்லாஹ்வின்மீதும், எழுதவும் படிக்கவும் தெரியாத அவனது தூதரின்மீதும் நம்பிக்கைகொள்ளுங்கள். அவர் அல்லாஹ்வின்மீதும் அவனது வாக்குகளின்மீதும் நம்பிக்கை கொண்டுள்ளார். நீங்கள் நேர்வழி பெறும்பொருட்டு அவரையே பின்பற்றுங்கள். *159.* மோசேயின் சமூகத்தாரில் சத்தியத்தின் அடிப்படையில் வழிகாட்டி அதன்படி நீதி செலுத்தக்கூடிய ஒரு பிரிவினர் இருக்கின்றனர்.

*160.* நாம் அவர்களைப் பன்னிரெண்டு குலங்களாகப் பிரித்து தனித்தனி கூட்டங்களாக்கினோம். மோசேயின் சமூகம் தண்ணீர் வேண்டியபோது, ‘உம் தடியைக்கொண்டு அப்பாறையில் அடியும்’ என்று மோசேவுக்கு நாம் கட்டளையிட்டோம். அதிலிருந்து பன்னிரெண்டு நீரூற்றுகள் பொங்கி எழுந்தன. ஒவ்வொரு பிரிவினரும் தாம் அருந்த வேண்டிய பகுதியை அறிந்து கொண்டனர். நாம் அவர்களுக்காக மேகங்களை நிழலிடச் செய்து மன்னு, ஸல்வா (எனும் உணவுகளை) இறக்கி வைத்தோம். உங்களுக்கு நாம் வழங்கிய தூய்மையான பொருட்களை உண்ணுங்கள் (என்று கூறினோம்). இருந்தும் அவர்கள் நமக்கொன்றும் தீங்கிழைக்கவில்லை, மாறாக தமக்குத்தாமே தீங்கிழைத்துக் கொண்டிருந்தார்கள். *161.* “அவ்வூரில் சென்று குடியிருங்கள். அங்கு நீங்கள் விரும்பியவாறு உண்ணுங்கள். ‘எங்களை மன்னித்து விடுவாயாக’ என்று கூறி பணிந்தவர்களாக வாயிலில் நுழையுங்கள். நாம் உங்கள் பாவங்களை மன்னித்து விடுவோம். நன்மை புரிவோருக்கு நாம் அதிகமாக வழங்குவோம்” என்று அவர்களிடம் கூறப்பட்டபோது,

***162.*** *அவர்களில் அநியாயக்காரரர்கள் தங்களுக்குக் கூறப்பட்டதை வேறொரு சொல்லாக மாற்றி விட்டார்கள். எனவே அவர்கள் செய்த அநியாயத்தினால் நாம் அவர்களின்மீது வானத்திலிருந்து வேதனையை அனுப்பினோம்.*

***163.*** *கடற்கரையோரத்தில் இருந்த ஊரைப்பற்றி அவர்களிடம் கேளும். அவர்கள் சனிக்கிழமை விஷயத்தில் வரம்புமீறிக் கொண்டிருந்தார்கள். சனிக்கிழமையன்று மீன்கள் தண்ணீருக்கு மேல்மட்டத்தில் அவர்களிடம் வந்தன. சனிக்கிழமை அல்லாத நாட்களில் அவை வருவதில்லை. அவர்கள் அடிபணியாமல் இருந்ததனால் நாம் அவர்களை இவ்வாறு சோதித்தோம்.* ***164.*** *அவர்களில் ஒரு பிரிவினர், "அல்லாஹ் அழிக்கப்போகின்ற அல்லது கடும் வேதனைக்குட்படுத்தப்போகின்ற மக்களுக்கு நீங்கள் ஏன் உபதேசம் செய்கிறீர்கள்?'' என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், 'உங்கள் இறைவனிடம் காரணம் கூறி நாங்கள் தப்பித்துக் கொள்வதற்காகவும், இவர்கள் இறையச்சம் கொள்வதற்காகவும்தான்' என்று கூறினார்கள்.*

***165.*** *அவர்களுக்கு நினைவூட்டப்பட்ட அறிவுரைகளை அவர்கள் மறந்தபோது அவர்களில் தீமையைவிட்டுத் தடுத்துக் கொண்டிருந்தவர்களை நாம் காப்பாற்றி தமக்குத்தாமே அநீதியிழைத்துக் கொண்டிருந்தவர்களை - அவர்களின் அடிபணியாமையினால் - கடும் வேதனையைக்கொண்டு தண்டித்தோம்.* ***166.*** *அவர்கள் தடுக்கப்பட்ட காரியத்தில் மும்முரமாக ஈடுபட்டபோது "நீங்கள் இழிவடைந்த குரங்குகளைப் போலாகி விடுங்கள்'' என்று நாம் அவர்களிடம் கூறினோம்.*

***167.*** *உம் இறைவன் பிரகடனம் செய்து விட்டான்: "அவன் மறுமைநாள்வரை கொடிய வேதனையில் ஆழ்த்தக்கூடியவர்களை*

யூதர்களின்மீது அனுப்பிக்கொண்டே இருப்பான்". நிச்சயமாக உம் இறைவன் தண்டிப்பதில் விரைவானவன். ஆயினும் அவன் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். 168. நாம் பூமியில் அவர்களைப் பல பிரிவினர்களாக்கி விட்டோம். அவர்களில் சிலர் நல்லவர்களாக இருக்கின்றனர். சிலர் அதற்கு மாறாகவும் இருக்கின்றனர். அவர்கள் மீளவேண்டும் என்பதற்காக நாம் அவர்களை நல்லவற்றாலும் தீயவற்றாலும் சோதித்தோம்.

169. அவர்களுக்குப் பின் தகுதியற்றவர்கள் வேதத்திற்கு வாரிசானார்கள். அவர்கள் இவ்வுலகின் அற்ப ஆதாயத்தைப் பெற்றுக்கொண்டு "நாம் மன்னிக்கப்பட்டு விடுவோம்" என்று கூறுகிறார்கள். அதேபோன்ற அற்ப ஆதாயம் அவர்களிடம் மீண்டும் கொண்டு வரப்பட்டாலும் அதையும் அவர்கள் பெற்றுக் கொள்கிறார்கள். அல்லாஹ்வின்மீது உண்மையையே கூற வேண்டும் என்று வேதத்தில் அவர்களிடம் வாக்குறுதி பெறப்படவில்லையா? அதிலுள்ளதை அவர்கள் கற்றுள்ளார்களா? இறையச்சமுடையோருக்கு மறுமையின் வீடே சிறந்தது. நீங்கள் புரிந்துகொள்ள மாட்டீர்களா? 170. யாரெல்லாம் இறைவேதத்தை உறுதியாகப் பற்றிக்கொண்டு, தொழுகையையும் கடைப்பிடித்து வருகின்றார்களோ அத்தகைய சீர்திருத்தவாதிகளின் கூலியை நிச்சயமாக நாம் வீணாக்கிவிட மாட்டோம். 171. நாம் மலையை அவர்களுக்கு மேல் நிழற்குடையைப்போன்று உயர்த்தியபோது அது அவர்களின்மீது விழுந்து விடுமோ என்று எண்ணினார்கள். அப்போது, "உங்களுக்கு வழங்கியுள்ள வேதத்தை உறுதியுடன் பற்றிக்கொள்ளுங்கள். நீங்கள் தப்பித்துக்கொள்ளும் பொருட்டு அதிலுள்ளதை நினைவில் வையுங்கள்" என்று நாம் கூறினோம்.

*172. உம் இறைவன் ஆதமுடைய மக்களின் முதுகுத்தண்டிலிருந்து அவர்களின் சந்ததிகளை வெளியாக்கியபோது அவர்களுக்கு அவர்களையே சாட்சியாக்கி "நான் உங்கள் இறைவனல்லவா?" என்று கேட்டான். அதற்கு அவர்கள், "ஆம். இதற்கு நாங்களே சாட்சியாக இருக்கின்றோம்'' என்றார்கள். இது ஏனெனில் நீங்கள் மறுமை நாளன்று இதைப்பற்றி எங்களுக்கு எதுவும் தெரியாது நாங்கள் கவனமற்று இருந்து விட்டோம் என்று கூறிவிடக்கூடாது என்பதற்காகவும், 173. அல்லது எங்கள் முன்னோர்கள் ஆரம்பத்திலிருந்தே இணைவைத்து வந்தார்கள், அவர்களுக்குப்பின் நாங்கள் அவர்களின் சந்ததிகளாகவே இருந்தோம், தவறானவர்கள் செய்த காரியத்திற்காக எங்களையா அழிக்கப் போகின்றாய்? என்று நீங்கள் கூறிவிடக்கூடாது என்பதற்காகவும்தான். 174. இவ்வாறு அவர்கள் திரும்பிவிடும்பொருட்டு நம் சான்றுகளை நாம் தெளிவாக எடுத்துரைக்கின்றோம்.*

*175. அவர்களுக்கு ஒருவனின் நிலையை எடுத்துரைப்பீராக; அவனுக்கு நாம் நம் சான்றுகளை வழங்கியிருந்தோம். ஆனால் அவன் அவற்றைப் புறந்தள்ளி விட்டான். எனவே சாத்தான் அவனைப் பின்தொடர்ந்தான். அவன் வழிகெட்டு விட்டான். 176. நாம் நாடியிருந்தால் அவற்றின் மூலம் அவனுக்கு உயர்வை அளித்திருப்போம். ஆனால் அவனோ இவ்வுலகமே நிரந்தரம் என எண்ணி தன் மனஇச்சைகளைப் பின்பற்றினான். அவனது உதாரணம் ஒரு நாயைப் போன்றது. அதனை நீங்கள் துரத்தினாலும் நாக்கைத் தொங்கவிட்டுக்கொள்ளும், துரத்தாவிட்டாலும் நாக்கை தொங்கவிட்டுக்கொள்ளும். இது நம் சான்றுகளை மறுப்போருக்கான உதாரணமாகும். அவர்கள் சிந்திக்கும்பொருட்டு அவர்களுக்கு சம்பவங்களை எடுத்துரைப்பீராக. 177. நம் சான்றுகளை மறுத்து தமக்குத்தாமே அநீதியிழைத்துக் கொண்டவர்களின்*

உதாரணம் எவ்வளவு மோசமானது! *178.* அல்லாஹ் யாருக்கு நேர்வழி காட்டுகிறானோ அவரே நேர்வழி பெற்றவராவார். யாரை அவன் வழிதவறச் செய்துவிடுகிறானோ அவர்கள்தான் இழப்பிற்குரியவர்கள்.

*179.* ஜின்களிலும், மனிதர்களிலும் பெரும்பாலோரை நாம் நரகத்திற்காகவே படைத்துள்ளோம். அவர்களுக்கு இதயங்கள் இருக்கின்றன, ஆனால் அவற்றைக்கொண்டு அவர்கள் உணர்ந்து கொள்ள மாட்டார்கள். அவர்களுக்குக் கண்கள் இருக்கின்றன, ஆனால் அவற்றைக்கொண்டு அவர்கள் பார்க்க மாட்டார்கள். அவர்களுக்குக் காதுகள் இருக்கின்றன, ஆனால் அவற்றைக்கொண்டு அவர்கள் கேட்க மாட்டார்கள். அவர்கள் கால்நடையைப் போன்றவர்கள். ஏன், அவற்றைவிடவும் வழிகெட்டவர்கள். அவர்கள்தான் அலட்சியத்தில் இருப்பவர்கள். *180.* அழகிய பெயர்கள் அல்லாஹ்வுக்கே உரியன. எனவே அவற்றைக்கொண்டே அவனை அழையுங்கள். அவனது பெயர்களில் தவறிழைப்பவர்களை விட்டுவிடுங்கள். அவர்களது செயல்களுக்கான கூலியை அவர்கள் பெற்றே தீருவார்கள். *181.* நாம் படைத்தவர்களில் ஒருபிரிவினர் சத்தியத்தின்படி மக்களுக்கு வழிகாட்டிக்கொண்டும், சத்தியத்தின்படி தீர்ப்பளித்துக்கொண்டும் இருக்கின்றனர். *182.* நம் சான்றுகளை மறுப்பவர்களை அவர்களே அறியாதவிதத்தில் மெல்ல மெல்ல நாம் பிடிப்போம். *183.* நான் அவர்களுக்கு அவகாசம் அளிக்கிறேன். நிச்சயமாக எனது திட்டம் மிகவும் உறுதியானது.

*184.* அவர்களது தோழருக்கு எவ்வித மனநோயும் இல்லை. அவர் தெளிவான எச்சரிக்கையை செய்பவராகவே இருக்கின்றார் என்பதை அவர்கள் சிந்திக்க மாட்டார்களா? *185.* வானங்கள் மற்றும் பூமியின் அமைப்பையும், அல்லாஹ் படைத்துள்ள ஏனைய பொருட்களையும், அவர்களது தவணை நெருங்கிவிடக்கூடும்

என்பதையும் அவர்கள் சிந்திக்க மாட்டார்களா? இதன் பின்னரும் அவர்கள் எந்த விஷயத்தைத்தான் நம்பப்போகிறார்கள்? **186.** அல்லாஹ் யாரை வழிதவறச் செய்துவிடுகிறானோ அவருக்கு வழிகாட்டுபவர் யாரும் இல்லை. அவர்களின் வரம்புமீறலிலேயே தடுமாறித் திரியுமாறு அவர்களை அவன் விட்டுவிடுகிறான். **187.** அவர்கள் உம்மிடம் மறுமையைக் குறித்து 'அது எப்போது நிகழும்' என்று கேட்கிறார்கள். நீர் கூறும்: "அதைப்பற்றிய அறிவு என் இறைவனிடமே உள்ளது. அதற்குரிய நேரத்தில் அவனே அதனை வெளிப்படுத்துவான். அது வானங்களிலும், பூமியிலும் கனமானதாக இருக்கும். அது திடீரென்று உங்களை வந்தடையும்". நீர் அதனை நன்கறிந்துவிட்டதைப்போல அவர்கள் உம்மிடம் கேட்கிறார்கள். நீர் கூறும்: "அதைப்பற்றிய அறிவு அல்லாஹ்விடமே உள்ளது" என்று. ஆயினும் மக்களில் பெரும்பாலோர் இதனை அறிவதில்லை. **188.** நீர் கூறும்: "அல்லாஹ் நாடினாலே தவிர எனக்கே நான் நன்மையோ தீமையோ செய்வதற்கு சக்திபெற மாட்டேன். நான் மறைவானவற்றை அறிந்தவனாக இருந்தால் பல நன்மைகளை எனக்காகப் பெற்றிருப்பேன். எனக்கு எவ்வித இழப்பும் ஏற்பட்டிருக்காது. நானோ நம்பிக்கைகொள்ளும் மக்களுக்கு எச்சரிக்கை செய்பவனாகவும், நற்செய்தி கூறுபவனாகவுமே இருக்கின்றேன்".

**189.** அவனே உங்களை ஒரே மனிதரிலிருந்து படைத்தான். அவர் மனஅமைதியைப் பெற்றுக்கொள்வதற்காக அந்த மனிதரிலிருந்தே அவருக்கான துணையைப் படைத்தான். அவர் அவளுடன் கூடியபோது அவள் இலேசாக கர்ப்பமுற்று அதைச் சுமந்து நடமாடிக் கொண்டிருந்தாள். அது கனமாகிவிட்டபோது இருவரும் சேர்ந்து தங்கள் இறைவனிடம், "நீ எங்களுக்கு ஆரோக்கியமான குழந்தையை வழங்கினால் நாங்கள் உனக்கு

நன்றி செலுத்துவோராக இருப்போம்” என்று பிரார்த்தனை செய்தார்கள். **190.** அல்லாஹ் அவர்களுக்கு ஆரோக்கியமான குழந்தையை வழங்கியபோது அதில் அவனுக்கு கூட்டாளிகளை ஏற்படுத்தி விட்டார்கள். அவர்களின் இணைவைப்பைவிட்டும் அல்லாஹ் மிக உயர்ந்தவன். **191.** எந்த ஒரு பொருளையும் படைக்க முடியாதவர்களையா அவர்கள் இணையாக்குகிறார்கள்? மாறாக அவையே படைக்கப்பட்டவைதானே? **192.** அவை அவர்களுக்கு எவ்வித உதவியும் செய்ய முடியாது. ஏன் தமக்குத்தாமே கூட அவற்றால் உதவிக்கொள்ள முடியாது. **193.** நீங்கள் அவர்களை நேர்வழியின்பக்கம் அழைத்தால் அவர்கள் உங்களைப் பின்பற்ற மாட்டார்கள். அவர்களை நீங்கள் அழைப்பதும் அல்லது அழைக்காமல் மௌனமாக இருப்பதும் சமமே. **194.** நீங்கள் அல்லாஹ்வைத்தவிர யாரை அழைக்கிறீர்களோ அவர்களும் உங்களைப்போன்ற அடியார்கள்தான். எனவே நீங்கள் அழைப்பவற்றில் உண்மையாளர்களாக இருந்தால் அவர்களை அழையுங்கள், அவர்கள் உங்களுக்குப் பதிலளிக்கட்டும்.

**195.** அவற்றிற்கு நடக்கக்கூடிய கால்கள் இருக்கின்றனவா? பிடிக்கக்கூடிய கைகள் இருக்கின்றனவா? பார்க்கக்கூடிய கண்கள் இருக்கின்றனவா? கேட்கக்கூடிய காதுகள் இருக்கின்றனவா? நீர் கூறும்: “நீங்கள் உங்கள் இணைத்தெய்வங்களை அழைத்து எனக்கு எதிராகத் திட்டம் தீட்டுங்கள். எனக்கு அவகாசமும் தர வேண்டாம். **196.** நிச்சயமாக வேதத்தை அருளிய அல்லாஹ்தான் என் பாதுகாவலன். அவனே நல்லடியார்களைப் பாதுகாத்து வருகிறான். **197.** அவனையன்றி யாரை நீங்கள் அழைக்கிறீர்களோ அவர்கள் உங்களுக்கு உதவிசெய்ய சக்திபெற மாட்டார்கள். ஏன் தமக்குத்தாமே கூட அவர்களால் உதவிக்கொள்ள முடியாது”. **198.** நீர் அவர்களை நேர்வழியின்பக்கம் அழைத்தாலும் அவர்கள் உம் பேச்சைக் கேட்க

மாட்டார்கள். அவர்கள் உம்மைப் பார்ப்பதைப்போலத் தோன்றும். ஆனால் உம்மைப் பார்க்க மாட்டார்கள்.

**199.** மன்னித்து விடுவீராக. நன்மையை ஏவுவீராக. மூடர்களை விட்டும் விலகிவிடுவீராக. **200.** சாத்தானிடமிருந்து உமக்கு ஏதேனும் ஊசலாட்டம் ஏற்பட்டால் நீர் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடிக்கொள்ளும். நிச்சயமாக அவன் செவியேற்பவனாகவும், அறிந்தவனாகவும் இருக்கின்றான். **201.** இறையச்சமுடையோருக்கு சாத்தானிடமிருந்து ஏதேனும் தவறான எண்ணம் ஏற்பட்டால் உடனே அவர்கள் விழிப்படைந்து விடுவார்கள். அது அப்போதே அவர்களுக்கு புலப்பட்டு விடும். **202.** ஆனால் சாத்தானின் சகோதரர்கள் அவர்களை வழிகேட்டில் இழுத்துச் செல்கிறார்கள்; அதில் அவர்கள் எந்தக் குறையும் வைப்பதில்லை.

**203.** அவர்களிடம் ஏதேனும் ஒரு சான்றினை நீர் கொண்டு வரவில்லையெனில் 'நீர் ஒரு சான்றினை ஏன் கொண்டு வரவில்லை?' என்று கேட்கிறார்கள். நீர் கூறும்: "என் இறைவனிடமிருந்து எனக்கு அறிவிக்கப்படுகின்றவற்றையே நான் பின்பற்றுகிறேன்". இது உங்கள் இறைவனிடமிருந்து வந்துள்ள தெளிவான சான்றுகளாகவும் நம்பிக்கைகொள்ளும் மக்களுக்கு வழிகாட்டியாகவும், கருணையாகவும் இருக்கின்றது. **204.** குர்ஆன் ஓதப்பட்டால் செவிசாய்த்துக் கேளுங்கள். மௌனமாக இருங்கள். உங்கள் மீது கருணை காட்டப்படலாம். **205.** உங்களது உள்ளத்தில் பணிவுடனும், பயத்துடனும், மெதுவான குரலிலும் உங்கள் இறைவனைக் காலையிலும், மாலையிலும் நினைவுகூருங்கள். அலட்சியமாக இருப்பவராகி விடாதீர்கள். **206.** உம் இறைவனிடம் இருப்பவர்கள் (வானவர்கள்) அவனை வணங்குவதை விட்டும் கர்வம் கொள்ள மாட்டார்கள். அவர்கள் அவனைப் புகழ்ந்து அவனுக்கே சிரம் பணிகிறார்கள்.

# 8. போரில் கைப்பற்றப்பட்ட செல்வங்கள் (அல்அன்ஃபால்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

*1. அவர்கள் உம்மிடம் போரில் கைப்பற்றப்பட்ட செல்வங்கள் குறித்துக் கேட்கிறார்கள். நீர் கூறும்: "போரில் கைப்பற்றப்பட்ட செல்வங்கள் அல்லாஹ்வுக்கும் தூதருக்கும் உரியவையாகும். எனவே நீங்கள் அல்லாஹ்வை அஞ்சுங்கள். உங்களுக்கிடையேயுள்ள தொடர்புகளைச் சீர்படுத்திக் கொள்ளுங்கள். நீங்கள் நம்பிக்கையாளர்களாக இருந்தால் அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் கீழ்ப்படியுங்கள்". 2. நம்பிக்கையாளர்கள் யாரெனில் அல்லாஹ்வைப்பற்றி நினைவுகூரப்பட்டால் அவர்களது உள்ளங்கள் நடுநடுங்கிவிடும். அவர்களுக்கு முன்னால் அவனது வசனங்கள் எடுத்துரைக்கப்பட்டால் அது அவர்களது நம்பிக்கையை இன்னும் அதிகப்படுத்தும். அவர்கள் தங்கள் இறைவனையே சார்ந்திருப்பார்கள். 3. தொழுகையைக் கடைப்பிடித்து நாம் அவர்களுக்கு வழங்கியவற்றிலிருந்து செலவும் செய்வார்கள். 4. அவர்கள்தான் உண்மையான நம்பிக்கையாளர்கள். அவர்களுக்கு அவர்களது இறைவனிடம் உயர்ந்த அந்தஸ்துகளும், மன்னிப்பும், கண்ணியமான ஆகாரமும் உண்டு.*

*5. உம் இறைவன் உம்மை ஒரு நோக்கத்துடன் உம் வீட்டைவிட்டு வெளியேற்றிய சமயத்தில் நம்பிக்கையாளர்களில் ஒரு பிரிவினர் அதனை வெறுத்துக் கொண்டிருந்ததைப்போன்றே, 6. சத்தியம் தெளிவான பின்னரும் அது குறித்து அவர்கள் உம்மிடம் தர்க்கம் செய்து கொண்டிருந்தனர், பார்த்துக் கொண்டிருக்கும்போதே மரணத்தை நோக்கி அவர்களை இழுத்துச்செல்லப்படுவதைப் போன்று. 7. "இரு கூட்டங்களில் ஒன்று உங்களுக்குக் கிடைத்து*

*விடும்" என்று இறைவன் உங்களுக்கு வாக்களித்த சமயத்தில் ஆயுதம் தரிக்காத கூட்டமே உங்களுக்குக் கிடைக்க வேண்டும் என்று நீங்கள் விரும்பினீர்கள். அல்லாஹ்வோ தன் வார்த்தைகளால் சத்தியத்தை சத்தியம் எனக் காட்டவும் நிராகரிப்பாளர்களை வேரோடு அழித்து விடவுமே விரும்புகிறான். **8.** அது சத்தியம் சத்தியமாக இருக்க வேண்டும், அசத்தியம் அசத்தியமாக இருந்துவிட வேண்டும் என்பதற்காகத்தான் - குற்றவாளிகளுக்கு அது எவ்வளவுதான் வெறுப்பாக இருந்தாலும் சரியே.*

***9.*** *நீங்கள் இறைவனிடம் உதவிகோரி முறையிட்டுக் கொண்டிருந்தபோது அவன், "உங்களுக்கு உதவிபுரிய ஓராயிரம் வானவர்களைத் தொடர்ச்சியாக அனுப்புகிறேன்" என்று உங்களுக்குப் பதிலளித்தான். **10.** உங்களுக்கு நற்செய்தியாகவும், உங்கள் உள்ளம் அதன்மூலம் அமைதியடைய வேண்டும் என்பதற்காகவுமே அல்லாஹ் இவ்வாறு செய்தான். உதவியோ அல்லாஹ்விடமிருந்தே வருகின்றது. நிச்சயமாக அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான். **11.** நீங்கள் அமைதியடைவதற்காகத் தன்னிடமிருந்து உங்களுக்கு சிற்றுறக்கம் ஏற்படச்செய்தான். உங்களைத் தூய்மைப்படுத்திடவும், உங்களை விட்டு சாத்தானின் அசுத்தத்தைப் போக்கிடவும், உங்கள் உள்ளங்களைப் பலப்படுத்திடவும், அதன்மூலம் பாதங்களை உறுதிப்படுத்திடவும் அவன் வானத்திலிருந்து உங்கள்மீது மழையையும் பொழியச்செய்தான். **12.** உம் இறைவன் வானவர்களுக்கு, "நான் உங்களுடன் இருக்கின்றேன். எனவே நீங்கள் நம்பிக்கையாளர்களைப் பலப்படுத்துங்கள்" என்று கட்டளையிட்டு "நான் நிராகரிப்பாளர்களின் உள்ளங்களில் பீதியை ஏற்படுத்திடுவேன். அவர்களின் பிடரிகளில் தாக்குங்கள். அவர்களின்*

---

*முன்னுரையைக் காண்க. பக். 19

ஒவ்வொரு விரல்மூட்டுகளிலும் அடியுங்கள்" என்று அறிவித்ததை எண்ணிப் பாருங்கள்*. 13. ஏனெனில் அவர்கள் அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் மாறுசெய்தார்கள். அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் மாறுசெய்பவர்கள் அறிந்து கொள்ளட்டும், அல்லாஹ் தண்டிப்பதில் மிகக்கடுமையானவன். 14. "இப்போது இந்த தண்டனையைச் சுவையுங்கள்" (என்று அவர்களிடம் கூறப்படும்). அறிந்துகொள்ளுங்கள், நிராகரிப்பாளர்களுக்கு நரக வேதனையுண்டு.

15. நம்பிக்கையாளர்களே, போர்க்களத்தில் நீங்கள் நிராகரிப்பாளர்களைச் சந்திக்க நேர்ந்தால் புறங்காட்டி ஓடிவிடாதீர்கள். 16. போர்த்தந்திரத்திற்காகவோ, வேறொரு அணியில் சேர்ந்து விடுவதற்காகவோ அன்றி புறங்காட்டி ஓடிவிடுபவர் இறைக்கோபத்திற்கு ஆளாகி விடுவார். அவரது இருப்பிடம் நரகமாகும். அது மிகவும் கெட்ட இருப்பிடமாகும்.

17. நீங்கள் அவர்களைக் கொல்லவில்லை, மாறாக அல்லாஹ்தான் அவர்களைக் கொன்றான். நீர் அவர்களின்மீது மண்ணை எறிந்தபோது நீர் அதனை எறியவில்லை, மாறாக அல்லாஹ்தான் எறிந்தான். இது அல்லாஹ் தன்னிடமிருந்து நம்பிக்கையாளர்களுக்கு ஏராளமான நன்மைகளை வழங்க வேண்டும் என்பதற்காகத்தான். நிச்சயமாக அல்லாஹ் செவியேற்பவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கிறான். 18. இதுவே நிகழ்ந்தது. அல்லாஹ் நிராகரிப்பாளர்களின் திட்டங்கள் அனைத்தையும் நிச்சயமாக பலவீனமாக்கிவிடுவான். 19. நீங்கள் தீர்ப்பைத் தேடினீர்களேயானால், இதோ தீர்ப்பு உங்கள் முன் வந்துவிட்டது. நீங்கள் விலகிக்கொண்டீர்களானால் அது உங்களுக்கு நல்லதாகும். நீங்கள் மீண்டும் அதையே செய்தால் நாமும் மீண்டும் அதையே செய்வோம். உங்கள் படை எவ்வளவுதான் அதிகமாக இருந்தாலும்

அது உங்களுக்கு எவ்விதப் பலனையும் அளிக்காது. நிச்சயமாக அல்லாஹ் நம்பிக்கையாளர்களுடன் இருக்கிறான்.

*20.* நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் கீழ்ப்படியுங்கள். செவியேற்றுக்கொண்டே அதனைப் புறக்கணித்து விடாதீர்கள். *21.* செவியேற்காமல் இருந்துகொண்டே ‘நாங்கள் செவியேற்றோம்’ என்று கூறியோரைப்போன்று ஆகிவிடாதீர்கள். *22.* சிந்தித்துணராத செவிடர்களாகவும், ஊமைகளாகவும் இருக்கும் மனிதர்களே அல்லாஹ்விடத்தில் மிக மோசமான விலங்குகளாவர். *23.* அவர்களிடம் ஏதேனும் நன்மை இருப்பதாக அல்லாஹ் அறிந்திருந்தால் நிச்சயம் அவர்களுக்கு செவியேற்கும் பாக்கியத்தை அளித்திருப்பான். இனி அவர்களை அவன் செவியுறச்செய்தாலும் அவர்கள் புறக்கணித்தவர்களாக முகம் திருப்பிக்கொள்வார்கள்.

*24.* நம்பிக்கையாளர்களே! உங்களுக்கு வாழ்வளிப்பதன் பக்கம் தூதர் உங்களை அழைக்கின்றபோது அல்லாஹ்வுக்கும் தூதருக்கும் பதிலளியுங்கள். மனிதனுக்கும் அவனது உள்ளத்திற்குமிடையே அல்லாஹ் குறுக்கிட்டுவிடுகிறான் என்பதையும், அவனிடமே நீங்கள் ஒன்றுதிரட்டப்படுவீர்கள் என்பதையும் அறிந்து கொள்ளுங்கள். *25.* உங்களில் அநியாயக்காரர்களை மட்டுமே தாக்கும் என்பதல்லாத வேதனையை அஞ்சிக்கொள்ளுங்கள். அல்லாஹ் தண்டிப்பதில் கடுமையானவன் என்பதையும் அறிந்து கொள்ளுங்கள்.

*26.* நீங்கள் குறைந்த எண்ணிக்கையினராக இருந்ததையும், பூமியில் பலவீனர்களாகக் கருதப்பட்டதையும், பிற மக்கள் திடீரென உங்களை வாரிச் சென்று விடுவார்களோ என்று நீங்கள் அஞ்சிக் கொண்டிருந்ததையும் எண்ணிப் பாருங்கள். அவனே உங்களுக்குப் புகலிடம் அளித்து தனது உதவியினால் உங்களை

*வலுப்படுத்தினான். உங்களுக்குத் தூய்மையான ஆகாரங்களையும் அளித்தான், நீங்கள் நன்றி செலுத்துபவர்களாகத் திகழக்கூடும் என்பதற்காக. **27.** நம்பிக்கையாளர்களே, அல்லாஹ்வுக்கும், தூதருக்கும் மோசம் செய்யாதீர்கள். நீங்கள் அறிந்துகொண்டே உங்களை நம்பி ஒப்படைக்கப்பட்டவற்றில் மோசடி செய்யாதீர்கள். **28.** உங்களின் செல்வங்களும், பிள்ளைகளும் சோதனையே என்பதையும், அல்லாஹ்விடமே மகத்தான கூலி இருக்கின்றது என்பதையும் அறிந்துகொள்ளுங்கள்.*

***29.** நம்பிக்கையாளர்களே! நீங்கள் அல்லாஹ்வை அஞ்சுவீர்களானால் பகுத்தறியும் ஆற்றலை அவன் உங்களுக்கு வழங்குவான். அவன் உங்களை விட்டு உங்கள் பாவங்களைப்போக்கி உங்களை மன்னித்து விடுவான். அல்லாஹ் மகத்தான அருளாளன். **30.** நீர் நினைவுகூரும்: "உம்மைச் சிறைப்படுத்த வேண்டும் அல்லது கொன்றுவிட வேண்டும் அல்லது ஊரிலிருந்து வெளியேற்றிவிட வேண்டும்" என்பதற்காக நிராகரிப்பாளர்கள் உம் விஷயத்தில் சதிசெய்து கொண்டிருந்தார்கள். அவர்கள் திட்டம் தீட்டிக் கொண்டிருந்தார்கள். அல்லாஹ்வும் திட்டம் தீட்டிக் கொண்டிருந்தான். திட்டம் தீட்டுவதில் அல்லாஹ்வே மிகச்சிறந்தவன்.*

***31.** அவர்களிடம் நம் வசனங்கள் எடுத்துரைக்கப்பட்டால் "நாங்கள் முன்னரே செவியேற்றுள்ளோம். நாங்கள் நினைத்தால் நாங்களும் இதைப்போன்ற வசனங்களைக் கூறுவோம். இவை முன்னோர்களின் கட்டுக்கதைகளே அன்றி வேறில்லை" என்று கூறுகிறார்கள். **32.** "அல்லாஹ்வே! இதுதான் உன்னிடமிருந்து வந்துள்ள உண்மையானால் எங்கள்மீது கல்மாரி பொழிந்துவிடு அல்லது துன்புறுத்தும் வேதனையை எங்களிடம் கொண்டு வா" என்று அவர்கள் கூறினார்கள். **33.** நீர் அவர்களிடையே இருக்கும்*

நிலையில் அல்லாஹ் அவர்களைத் தண்டிக்கமாட்டான். அவர்கள் பாவமன்னிப்புத் தேடுபவர்களாக இருக்கும்போதும் அல்லாஹ் அவர்களைத் தண்டிக்க மாட்டான். 34. அல்லாஹ் ஏன் அவர்களைத் தண்டிக்க மாட்டான்? அவர்கள் புனித ஆலயத்தின் பொறுப்பாளர்களாக இல்லாதிருந்தும் அதனைவிட்டும் மக்களைத் தடுக்கிறார்களே!. இறையச்சமுடையோர்தான் அதன் பொறுப்பாளர்களாவர். ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் அறிந்துகொள்வதில்லை. 35. இறையில்லத்தில் சீழ்க்கையொலி எழுப்புவதும், கைதட்டுவதுமே அவர்களது தொழுகையாகும். எனவே நீங்கள் நிராகரித்துக் கொண்டிருந்ததனால் வேதனையைச் சுவையுங்கள் (என்று அவர்களுக்குக் கூறப்படும்).

36. நிராகரிப்பாளர்கள் மக்களை இறைவழியைவிட்டும் தடுப்பதற்காகத் தம் செல்வங்களைச் செலவு செய்கிறார்கள். அவர்கள் செலவு செய்துகொண்டேயிருப்பார்கள். இறுதியில் அதுவே அவர்களுக்கு பேரிழப்பாக அமைந்து விடும். பின்னர் அவர்கள் வெற்றி கொள்ளப்படுவார்கள். நிராகரிப்பாளர்கள் நரகத்தின்பால் ஒன்றுதிரட்டப்படுவார்கள். 37. இது நல்லவர்களிலிருந்து தீயவர்களை அல்லாஹ் பிரித்தெடுத்து அவர்களை ஒருவர்மீது ஒருவராக அடுக்கி நரகத்தில் வீசுவதற்காகத்தான். இவர்கள்தான் இழப்பிற்குரியவர்கள்.

38. நிராகரிப்பாளர்களிடம், “அவர்கள் விலகிக் கொள்வார்களாயின் நடந்தவற்றிற்காக மன்னிக்கப்படுவார்கள். ஆனால் அவர்கள் மீண்டும் அதனையே செய்தால் - முன்னோர்களின் முன்மாதிரி முன்பே நடந்துள்ளது”, என்று நீர் கூறும். 39. மதஒடுக்குமுறை நீங்கி மார்க்கம் முழுவதும் அல்லாஹ்வுக்கே உரித்தாகும்வரை நீங்கள் அவர்களுடன் போரிடுங்கள். அவர்கள் விலகிக்கொண்டால் - அல்லாஹ் அவர்களது செயல்களை

பார்த்துக் கொண்டிருக்கிறான்*. **40.** அவர்கள் புறக்கணித்தால் அறிந்துகொள்ளுங்கள், அல்லாஹ் உங்களுக்குப் பாதுகாவலனாக இருக்கின்றான். அவனே மிகச்சிறந்த பாதுகாவலன், மிகச்சிறந்த உதவியாளன்.

**41.** நீங்கள் அல்லாஹ்வின்மீதும், இரு படைகளும் மோதிக்கொண்ட தீர்ப்பளிக்கப்பட்ட நாளில் நம்முடைய அடியார்(முஹம்மத்) மீது இறக்கிவைக்கப்பட்டவற்றின் மீதும் நம்பிக்கை கொண்டவர்களாக இருந்தால் - அறிந்துகொள்ளுங்கள். போரில் நீங்கள் கைப்பற்றிய செல்வங்களில் ஐந்தில் ஒருபங்கு அல்லாஹ்விற்கும், தூதருக்கும், அவரது உறவினர்களுக்கும், அநாதைகளுக்கும், ஏழைகளுக்கும், வழிப்போக்கருக்கும் உரியதாகும். அல்லாஹ் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவன்.

**42.** நீங்கள் பள்ளத்தாக்கின் அருகிலுள்ள எல்லையிலும், அவர்கள் தொலைவிலுள்ள எல்லையிலும் இருந்தபோது வர்த்தகக்கூட்டம் உங்களுக்குக் கீழ்ப்பகுதியில் இருந்தது. நீங்களும், அவர்களும் சந்திக்கும் நேரத்தை நிர்ணயம் செய்திருந்தால் நிச்சயம் அது குறித்துப் பிணங்கியிருப்பீர்கள். ஆயினும் ஆகவேண்டிய காரியத்தை அல்லாஹ் நிறைவேற்றிவிட வேண்டும் என்பதற்காக (உங்களை மோதச்செய்தான்). இது ஏனெனில் வீழ்பவர் தெளிவான ஆதாரத்துடன் வீழ்ந்துவிட வேண்டும், வாழ்பவர் தெளிவான ஆதாரத்துடன் வாழ வேண்டும் என்பதற்காகத்தான். நிச்சயமாக அல்லாஹ் செவியேற்பவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். **43.** அப்போது அல்லாஹ் உம் கனவில் அவர்களைக் குறைவான எண்ணிக்கையில் காட்டிக் கொண்டிருந்தான். அவன் அவர்களை அதிகமாகக் காட்டியிருந்தால் நீங்கள் தைரியமிழந்து

---

*முன்னுரையைக் காண்க. பக். 19

அவ்விஷயத்தில் ஒருவருக்கொருவர் பிணங்கியிருப்பீர்கள். ஆனால் அல்லாஹ் உங்களைக் காத்துக்கொண்டான். நிச்சயமாக அவன் உள்ளங்களில் உள்ளவற்றை நன்கறிந்தவன். 44. அல்லாஹ் அவர்களை உங்கள் பார்வைக்குக் குறைத்துக் காட்டியபோது அவர்களின் பார்வைக்கு உங்களைக் குறைத்துக் காட்டினான். அது ஏனெனில் ஆகவேண்டிய காரியத்தை அல்லாஹ் நிறைவேற்றிவிட வேண்டும் என்பதற்காக. அனைத்து விவகாரங்களும் அல்லாஹ்வின் பக்கமே திரும்புகின்றன.

45. நம்பிக்கையாளர்களே! ஏதேனும் ஒரு படையோடு நீங்கள் மோதினால் உறுதியாக நில்லுங்கள். நீங்கள் வெற்றி பெறும்பொருட்டு அல்லாஹ்வை அதிகமதிகம் நினைவுகூருங்கள். 46. அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் கீழ்ப்படியுங்கள். ஒருவருக்கொருவர் பிணங்கிக் கொள்ளாதீர்கள். அவ்வாறு செய்தால் பலவீனம் ஏற்பட்டு நீங்கள் வலுவிழந்து போய்விடுவீர்கள். பொறுமையைக் கடைப்பிடியுங்கள். நிச்சயமாக அல்லாஹ் பொறுமையாளர்களுடன் இருக்கின்றான். 47. ஆணவத்துடனும், பிற மக்களுக்குக் காட்டுவதற்காகவும் தம் வீடுகளிலிருந்து புறப்பட்டு இறைவழியைவிட்டும் மக்களைத் தடுத்துக் கொண்டிருப்பவர்களைப்போன்று ஆகிவிடாதீர்கள். உண்மையில் அல்லாஹ் அவர்கள் செய்கின்றவற்றை சூழ்ந்து கொண்டுள்ளான்.

48. சாத்தான் அவர்களது செயல்களை அவர்களுக்கு அழகாக்கிக் காட்டினான். "இன்று மக்களில் உங்களை மிகைப்பவர்கள் எவரும் இல்லை. நான் உங்களுடன் இருக்கின்றேன்" என்று அவன் கூறினான். ஆயினும் இரு படையினரும் நேருக்குநேர் மோதிக்கொண்டபோது "நான் உங்களை விட்டும் விலகிவிட்டேன். நீங்கள் பார்க்காததையெல்லாம் நான் பார்த்துக் கொண்டிருக்கிறேன். நான் அல்லாஹ்வை அஞ்சுகிறேன்" என்றுகூறி அவன் புறங்காட்டி

ஓடிவிட்டான். அல்லாஹ் தண்டிப்பதில் கடுமையானவன். *49.* நயவஞ்சகர்களும், உள்ளங்களில் நோயுள்ளவர்களும் 'இவர்களது மார்க்கம் இவர்களை ஏமாற்றத்தில் ஆழ்த்தி விட்டது' என்று கூறிக்கொண்டிருந்தார்கள். அல்லாஹ்வின்மீது முழுமையான நம்பிக்கையுள்ளவர்கள் அறிந்துகொள்ளட்டும், அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.

*50.* நிராகரிப்பாளர்களின் முகங்களிலும் முதுகுகளிலும் அடித்தவாறு, "சுட்டெரிக்கும் வேதனையைச் சுவையுங்கள்" என்று அவர்களின் உயிரை வானவர்கள் பறிக்கும்போது கூறுவதை நீர் பார்க்க வேண்டுமே!. *51.* நீங்கள் உங்கள் கரங்களால் முன்னரே செய்தவற்றின் விளைவுதான் இது. அல்லாஹ் அடியார்களின்மீது ஒருபோதும் அநீதியிழைக்க மாட்டான். *52.* இது பாரோவைச் சார்ந்தவர்கள் மற்றும் அவர்களுக்கு முன்னிருந்தவர்களின் நிலையைப் போன்றதுதான். அவர்கள் அல்லாஹ்வின் சான்றுகளை நிராகரித்தார்கள். எனவே அவர்களது பாவங்களினால் அல்லாஹ் அவர்களைத் தண்டித்தான். நிச்சயமாக அல்லாஹ் வல்லமைமிக்கவனாகவும் தண்டிப்பதில் கடுமையானவனாகவும் இருக்கின்றான். *53.* எந்தச் சமூகமும் தம் உள்ளங்களில் உள்ளவற்றை மாற்றிக்கொள்ளாதவரை அல்லாஹ் அவர்கள்மீது பொழிந்த அருட்கொடையை மாற்றுவதில்லை என்பதே இதற்குக் காரணமாகும். நிச்சயமாக அல்லாஹ் செவியேற்பவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். *54.* பாரோவைச் சார்ந்தவர்கள் மற்றும் அவர்களுக்கு முன்னிருந்தவர்களைப்போன்று அவர்கள் தம் இறைவனின் சான்றுகளை மறுத்தார்கள். எனவே அவர்களது பாவங்களினால் நாம் அவர்களை அழித்து விட்டோம், பாரோவைச்

சார்ந்தவர்களையும் மூழ்கடித்து விட்டோம். அவர்கள் அனைவரும் அக்கிரமக்காரர்களாகவே இருந்தார்கள்.

55. நிச்சயமாக அல்லாஹ்விடத்தில் விலங்குகளிலேயே தீயவை நிராகரிப்பாளர்கள்தான். அவர்கள் நம்பிக்கைகொள்ள மாட்டார்கள். 56. அவர்களுடன் நீர் உடன்படிக்கை செய்தீர். ஆனாலும் ஒவ்வொரு முறையும் அவர்கள் தம் உடன்படிக்கையை முறித்து விடுகிறார்கள். அவர்கள் இறைவனை அஞ்சுவதில்லை. 57. எனவே நீர் அவர்களைப் போர்க்களத்தில் கண்டால் அவர்களுக்குப் பின்னால் இருப்பவர்களும் விலகிஓடும் அளவுக்கு அவர்களைத் தண்டிப்பீராக. அதனால் அவர்கள் படிப்பினை பெறக்கூடும். 58. ஏதேனும் ஒரு சமூகத்தைக் குறித்து ‘அவர்கள் துரோகம் இழைத்து விடுவார்கள்’ என்று நீர் அஞ்சினால் நீரும் சரிசமமாக அவர்களது உடன்படிக்கையை அவர்களிடமே எறிந்து விடுவீராக. நிச்சயமாக அல்லாஹ் துரோகிகளை நேசிப்பதில்லை.

59. தாம் தப்பித்துவிட்டதாக நிராகரிப்பாளர்கள் ஒருபோதும் எண்ண வேண்டாம். அவர்கள் அல்லாஹ்விடமிருந்து தப்பிவிட முடியாது. 60. அவர்களை எதிர்ப்பதற்காக உங்களால் இயன்ற அளவு பலத்தையும், பழக்கப்பட்ட குதிரைகளையும் தயாராக வைத்துக் கொள்ளுங்கள். அதன்மூலம் அல்லாஹ்வின் எதிரியையும், உங்களின் எதிரியையும் அவர்கள் அல்லாத மற்றவர்களையும் நீங்கள் பயமுறச்செய்யலாம். அவர்களை நீங்கள் அறிய மாட்டீர்கள். அல்லாஹ்வே அவர்களை அறிவான். நீங்கள் இறைவழியில் எதைச் செலவுசெய்தாலும் அது உங்களுக்கு நிறைவாக வழங்கப்படும். உங்களுக்கு அநீதி இழைக்கப்பட மாட்டாது. 61. அவர்கள் சமாதானத்தின் பக்கம் சாய்ந்தால் நீரும் அதன்பக்கம் சாய்ந்து விடும். நீர் அல்லாஹ்வையே சார்ந்திருப்பீராக. நிச்சயமாக அவன் செவியேற்பவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான்.

**62.** அவர்கள் உம்மை ஏமாற்ற எண்ணினால் அல்லாஹ் உமக்குப் போதுமானவனாக இருக்கின்றான். அவனே தனது உதவியாலும் நம்பிக்கையாளர்களாலும் உம்மை பலப்படுத்தினான். **63.** அவனே அவர்களின் உள்ளங்களுக்கிடையே இணக்கத்தை ஏற்படுத்தினான். பூமியில் உள்ள அனைத்தையும் நீர் செலவுசெய்தாலும் அவர்களின் உள்ளங்களுக்கிடையே உம்மால் இணக்கத்தை ஏற்படுத்த முடியாது. ஆயினும் அல்லாஹ் அவர்களிடையே இணக்கத்தை ஏற்படுத்தினான். நிச்சயமாக அவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.

**64.** தூதரே! உமக்கும், உம்மைப் பின்பற்றிய நம்பிக்கையாளர்களுக்கும் அல்லாஹ்வே போதுமானவன். **65.** தூதரே! நம்பிக்கையாளர்களைப் போர்புரியத் தூண்டுவீராக. உங்களில் உறுதிவாய்ந்த இருபது நபர்கள் இருந்தால் இருநூறு நபர்களை வென்றுவிடலாம்; உங்களில் நூறு நபர் இருந்தால் ஆயிரம் நிராகரிப்பாளர்களை வென்றுவிடலாம். ஏனெனில் அவர்கள் புரிந்துகொள்ளாத மக்களாக இருக்கிறார்கள்*. **66.** இப்போது அல்லாஹ் உங்கள்மீதுள்ள சுமையைக் குறைத்து விட்டான். உங்களிடம் பலவீனம் உள்ளது என்பதை அவன் அறிந்து கொண்டான். எனவே உங்களில் உறுதிவாய்ந்த நூறு நபர்கள் இருந்தால் அவர்களில் இருநூறு நபர்களை வென்றுவிடலாம். ஆயிரம் நபர்கள் இருந்தால் இறைக்கட்டளையினால் இரண்டாயிரம் நபர்களை வென்றுவிடலாம். அல்லாஹ் உறுதிவாய்ந்தவர்களுடன் இருக்கிறான்.

**67.** களத்தில் எதிரிகளைக் கொன்று குவிக்கும்வரை அவர்களைக் கைதிகளாகப் பிடிப்பது தூதருக்கு உகந்ததல்ல. நீங்கள்

---

*முன்னுரையைக் காண்க. பக். 19

இவ்வுலகப் பொருட்களை விரும்புகிறீர்கள்; அல்லாஹ் மறுமையை விரும்புகிறான். அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவனாகவும் ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான். 68. அல்லாஹ்விடம் (உங்களுக்கு மன்னிப்பு) உறுதி செய்யப்படாமலிருப்பின் (பத்ருப்போரில் கைதிகளிடமிருந்து பிணைத்தொகையை வாங்கியதில்) உங்களைக் கடும்வேதனை தீண்டியிருக்கும். 69. எனவே நீங்கள் கைப்பற்றிய பொருட்களை உண்ணுங்கள். அது உங்களுக்கு அனுமதிக்கப்பட்டதும், தூய்மையானதுமாகும். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். நிச்சயமாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

70. தூதரே! உங்களிடம் இருக்கும் கைதிகளிடம், “அல்லாஹ் உங்கள் உள்ளங்களில் ஏதேனும் நன்மையைக் கண்டால் உங்களிடமிருந்து பெறப்பட்டதைவிட சிறப்பானதை அவன் உங்களுக்கு வழங்கிடுவான். உங்களை மன்னித்தும் விடுவான். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்” என்று கூறுவீராக. 71. அவர்கள் உமக்கு துரோகமிழைத்தால் ஏற்கனவே அவர்கள் அல்லாஹ்வுக்கு துரோகமிழைத்து விட்டார்கள் - இறைவன் அவர்கள் விஷயத்தில் உமக்கு அதிகாரம் அளித்து விட்டான். அல்லாஹ் நன்கறிந்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.

72. நம்பிக்கைகொண்டு, புலம்பெயர்ந்து, இறைவழியில் தம் உயிர்களாலும், செல்வங்களாலும் பாடுபட்டவர்களும், புகலிடம் அளித்து உதவிபுரிந்தவர்களும் ஒருவருக்கொருவர் உற்ற தோழர்களாவர். ஆனால் யாரெல்லாம் நம்பிக்கைகொண்ட பின்பும் புலம்பெயரவில்லையோ அவர்கள் புலம்பெயரும்வரை அவர்களுடன் உங்களுக்கு எவ்வித நட்புறவும் இல்லை. அவர்கள் மார்க்க விஷயத்தில் உங்களிடம் உதவிகோரினால்

அவர்களுக்கு உதவிபுரிவது உங்கள் மீது கடமையாகும். ஆனால் உங்களுடன் உடன்படிக்கை செய்துகொண்ட சமூகத்தினருக்கு எதிராக அது இருக்கக்கூடாது. நீங்கள் செய்பவற்றையெல்லாம் அல்லாஹ் பார்த்துக் கொண்டிருக்கிறான். **73.** நிராகரிப்பாளர்கள் ஒருவருக்கொருவர் உற்ற நண்பர்களாக இருக்கிறார்கள். நீங்கள் அவ்வாறு செய்யவில்லையெனில் உலகில் குழப்பமும் பெரும் சீர்குலைவும்தான் ஏற்படும்.

**74.** நம்பிக்கைகொண்டு, புலம்பெயர்ந்து, இறைவழியில் பாடுபட்டவர்களும், புகலிடம் அளித்து உதவிபுரிந்தவர்களும்தான் உண்மையான நம்பிக்கையாளர்கள். அவர்களுக்கு மன்னிப்பும், கண்ணியமான உணவும் உண்டு. **75.** யாரெல்லாம் பின்னர் நம்பிக்கைகொண்டு, புலம்பெயர்ந்து, உங்களுடன் இணைந்து பாடுபட்டார்களோ அவர்களும் உங்களைச் சார்ந்தவர்களே. இறைவேதப்படி இரத்தபந்த உறவினர்களே ஒருவருக்கொருவர் அதிக உரிமை பெற்றவர்கள். நிச்சயமாக அல்லாஹ் எல்லாவற்றையும் நன்கறிந்தவனாக இருக்கின்றான்.

## 9. பாவமன்னிப்பு (அத்தவ்பா)

**1.** “இது அல்லாஹ்வும் அவனது தூதரும் நீங்கள் ஒப்பந்தம் செய்துகொண்ட இணைவைப்பாளர்களிடமிருந்து விலகிக்கொண்டார்கள்” என்பதற்கான பிரகடனமாகும். **2.** எனவே உலகில் நான்கு மாதங்கள் நீங்கள் சுற்றித் திரியலாம். ‘அல்லாஹ்வை உங்களால் ஒருபோதும் முறியடிக்க முடியாது’ என்பதையும் ‘அல்லாஹ் நிராகரிப்பாளர்களை இழிவுபடுத்தியே தீருவான்’ என்பதையும் அறிந்துகொள்ளுங்கள். **3.** இது அல்லாஹ்வும் அவனது தூதரும் இணைவைப்பாளர்களைவிட்டும் விலகிக் கொண்டார்கள் என்று மாபெரும் ஹஜ்ஜுடைய நாளில் மக்களுக்கு

அல்லாஹ்விடமிருந்தும் அவனது தூதரிடமிருந்தும் செய்யப்படும் பிரகடனமாகும். எனவே நீங்கள் மன்னிப்புக் கோரினால் அது உங்களுக்குத்தான் நல்லது. நீங்கள் புறக்கணிப்பீர்களாயின் நீங்கள் அல்லாஹ்விடமிருந்து தப்ப முடியாது என்பதை அறிந்துகொள்ளுங்கள். நிராகரிப்பாளர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு எனும் நற்செய்தியைக் கூறி விடுவீராக. *4.* ஆனால் நீங்கள் ஒப்பந்தம் செய்துகொண்ட இணைவைப்பாளர்களில் உங்களுக்கு எவ்வித குறையும் வைக்காமலும், உங்கள் எதிரிகளில் யாருக்கும் உதவி செய்யாமலும் இருந்தாலே தவிர. அவர்களது ஒப்பந்தத்தை உரிய தவணைவரை நிறைவேற்றுங்கள். நிச்சயமாக அல்லாஹ் இறையச்சமுடையோரை நேசிக்கிறான்.

*5.* புனிதமான மாதங்கள் கடந்து விட்டால் (உங்களுடன் போர் புரிந்துகொண்டிருக்கும்) இணைவைப்பாளர்களை எங்கு கண்டாலும் கொல்லுங்கள். அவர்களைப் பிடியுங்கள்; முற்றுகையிடுங்கள்; அனைத்து இடங்களிலும் அவர்களைக் குறிவைத்துக் காத்திருங்கள். ஆனால் அவர்கள் மன்னிப்புக்கோரி, தொழுகையைக் கடைப்பிடித்து, கடமையாக்கப்பட்ட தானதர்மத்தையும் வழங்கிவந்தால் அவர்களை விட்டுவிடுங்கள். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்*. *6.* இணைவைப்பாளர்களில் யாரேனும் உம்மிடம் பாதுகாப்புக் கோரினால் அவர் இறைவாக்கைச் செவியுறும்பொருட்டு அவருக்குப் பாதுகாப்பு அளிப்பீராக. பின்னர் பாதுகாப்பான அவரது இடத்தில் அவரைச் சேர்த்து விடுவீராக. ஏனெனில் அவர்கள் அறியாத மக்களாக இருக்கிறார்கள்.

*7.* இணைவைப்பாளர்களுக்கு அல்லாஹ்விடமும் அவனது தூதரிடமும் எவ்வாறு உடன்படிக்கை இருக்க முடியும்? ஆனால்

---

*முன்னுரையைக் காண்க. பக். 19

நீங்கள் புனித ஆலயத்தில் உடன்படிக்கை செய்து கொண்டீர்களே, அவர்களைத் தவிர. அவர்கள் உங்களுடன் நேர்மையாக நடந்து கொள்ளும்வரை நீங்களும் அவர்களுடன் நேர்மையாக நடந்து கொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் இறையச்சமுடையோரை நேசிக்கிறான். 8. (அவர்களுடன்) எவ்வாறு உடன்படிக்கை இருக்க முடியும்? அவர்கள் உங்களை வென்றுவிட்டால் உங்களுக்கிடையேயுள்ள உறவையோ, உடன்படிக்கையையோ பொருட்படுத்த மாட்டார்கள். அவர்கள் தங்கள் வாய்ப்பேச்சுகளால் உங்களைத் திருப்திப்படுத்த முனைகிறார்கள். ஆனால் அவர்களின் உள்ளங்களோ மறுக்கின்றன. அவர்களில் பெரும்பாலோர் வாக்கு மீறுபவர்களாகவே இருக்கிறார்கள். 9. அவர்கள் இறைவசனங்களை அற்ப ஆதாயத்திற்கு விற்று அவனது பாதையை விட்டும் மக்களைத் தடுத்தார்கள். அவர்கள் செய்துகொண்டிருப்பது எவ்வளவு மோசமான காரியம்!. 10. அவர்கள் எந்த நம்பிக்கையாளரின் விஷயத்திலும் உறவுமுறையையோ, உடன்படிக்கையையோ பொருட்படுத்துவதில்லை. இவர்கள்தான் வரம்புமீறியவர்கள். 11. அவர்கள் மன்னிப்புக்கோரி, தொழுகையைக் கடைப்பிடித்து, கடமையாக்கப்பட்ட தர்மத்தையும் அளித்து வருவார்களாயின், அவர்கள் உங்கள் மார்க்கத்தில் சகோதரர்களாவர். அறிந்துகொள்ளும் மக்களுக்கு நாம் வசனங்களை தெளிவாக எடுத்துரைக்கிறோம்.

12. உடன்படிக்கைக்குப் பின்னர் அவர்கள் தம் சத்தியங்களை முறித்துவிட்டு உங்கள் மார்க்கத்தைக் குறை கூறினால் அவர்கள் விலகிக்கொள்ளும் பொருட்டு நிராகரிப்பின் தலைவர்களுடன் போரிடுங்கள். அவர்களது சத்தியங்களுக்கு எவ்வித மதிப்புமில்லை. 13. தங்கள் வாக்குறுதிகளை முறித்துவிட்டு, தூதரை வெளியேற்ற துணிந்தவர்களுடன் நீங்கள் போர்புரிய வேண்டாமா? அவர்கள்தான் போரை முதலில் ஆரம்பித்தார்கள். நீங்கள் அவர்களுக்கு

*அஞ்சுகிறீர்களா? நீங்கள் நம்பிக்கையாளர்களாக இருந்தால் அஞ்சுவதற்கு அல்லாஹ்வே மிகத்தகுதியானவன். 14. அவர்களுடன் போரிடுங்கள். அல்லாஹ் உங்கள் கரங்களால் அவர்களைத் தண்டிப்பான். அவர்களை இழிவுபடுத்தி அவர்களை வென்றுவிட உங்களுக்கு உதவி புரிவான். நம்பிக்கையாளர்களின் உள்ளங்களையும் குளிரச் செய்வான். 15. அவர்களுடைய உள்ளங்களின் கோபத்தைப் போக்கிடுவான். தான் நாடுவோருக்கு அல்லாஹ் பாவமன்னிப்புப் பேற்றை வழங்கிடுவான். அல்லாஹ் நன்கறிந்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.*

*16. உங்களில் இறைவழியில் பாடுபடுபவர்களையும், அல்லாஹ்வையும், தூதரையும், நம்பிக்கையாளர்களையும் தவிர்த்து மற்றவர்களை நண்பர்களாக ஆக்கிக் கொள்ளாதவர்களையும் அல்லாஹ் அறிந்துகொள்ளாமல் நீங்கள் அப்படியே விட்டுவிடப்படுவீர்கள் என்று எண்ணிக் கொண்டீர்களா? நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவன்.*

*17. தங்களின் நிராகரிப்பிற்குத் தாங்களே சாட்சிகளாக இருக்கும் இணைவைப்பாளர்களுக்கு இறையில்லங்களைப் பராமரிக்கும் உரிமை இல்லை. அவர்களின் செயல்கள் அனைத்தும் வீணாகி விட்டன. அவர்கள் என்றென்றும் நரகத்தில் வீழ்ந்து கிடப்பார்கள். 18. அல்லாஹ்வின்மீதும், மறுமைநாளின்மீதும் நம்பிக்கைகொண்டு, தொழுகையைக் கடைப்பிடித்து, கடமையாக்கப்பட்ட தானதர்மத்தையும் அளித்து, அல்லாஹ்வைத்தவிர வேறு யாருக்கும் அஞ்சாமல் இருப்பவர்கள்தான் இறையில்லங்களைப் பராமரிக்கத் தகுதியுடையவர்கள். இத்தகையவர்கள்தான் நேர்வழி பெற்றவர்களாக இருக்கக்கூடும். 19. ஹஜ் செய்வோருக்குத் தண்ணீர் புகட்டுவதையும், புனித ஆலயத்தைப் பராமரிப்பதையும் அல்லாஹ்வின்மீதும், மறுமைநாளின்மீதும்*

*நம்பிக்கைகொண்டு இறைவழியில் பாடுபடுபவர்களின் பணிக்குச் சமமாக்கி விட்டீர்களா? இவையிரண்டும் அல்லாஹ்விடத்தில் சமமாகாது. அநியாயக்கார மக்களுக்கு அல்லாஹ் நேர்வழி காட்டுவதில்லை. **20.** நம்பிக்கைகொண்டு, புலம்பெயர்ந்து இறைவழியில் தம் உயிர்களாலும், செல்வங்களாலும் பாடுபடுபவர்கள் அல்லாஹ்விடத்தில் உயர்ந்த அந்தஸ்தைப் பெறுவார்கள். இவர்கள்தான் வெற்றியாளர்கள். **21.** அவர்களது இறைவன் கருணையையும், திருப்தியையும், நிலையான அருட்கொடைகளைக் கொண்ட சுவனச் சோலைகளையும்கொண்டு அவர்களுக்கு நற்செய்தி கூறுகிறான். **22.** அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். நிச்சயமாக அல்லாஹ்விடத்தில்தான் மகத்தான கூலி உண்டு.*

***23.** நம்பிக்கையாளர்களே! உங்கள் தந்தையர்களும் சகோதரர்களும், நம்பிக்கையைவிட நிராகரிப்பை விரும்பக்கூடியவர்களாக இருந்தால் அவர்களை நண்பர்களாக்கிக் கொள்ளாதீர்கள். உங்களில் அவர்களை நண்பர்களாக்கிக் கொள்பவர்கள்தான் அக்கிரமக்காரர்கள். **24.** நீர் கூறும்: "உங்கள் தந்தையரும், பிள்ளைகளும், சகோதரர்களும், மனைவியரும், குடும்பத்தினரும், நீங்கள் ஈட்டிய செல்வங்களும், நஷ்டமாகி விடுமோ என்று நீங்கள் அஞ்சுகின்ற வியாபாரமும், நீங்கள் விரும்புகின்ற உங்கள் வீடுகளும் அல்லாஹ்வைவிடவும் அவனது தூதரைவிடவும் அவனது பாதையில் பாடுபடுவதைவிடவும் உங்களுக்குப் பிரியமானதாக இருந்தால் இறைக்கட்டளையை எதிர்பாருங்கள்". அடிபணியாத மக்களுக்கு அல்லாஹ் நேர்வழி காட்டுவதில்லை.*

***25.** அல்லாஹ் உங்களுக்குப் பல்வேறு சந்தர்ப்பங்களில் உதவி புரிந்துள்ளான். ஹுனைன் போர் தினத்தில் உங்களின் அதிக எண்ணிக்கை உங்களைப் பூரிப்பில் ஆழ்த்தியிருந்தது. ஆயினும்*

அது உங்களுக்கு எவ்விதப் பலனையும் அளிக்கவில்லை. பூமியானது விசாலமானதாக இருந்தும் உங்களுக்கு குறுகி விட்டிருந்தது. நீங்கள் புறங்காட்டி ஓடிவிட்டீர்கள். 26. பின்னர் தன் தூதர்மீதும், நம்பிக்கையாளர்கள்மீதும் அல்லாஹ் அமைதியை அருளினான். நீங்கள் காணாத படைகளையும் இறக்கி நிராகரிப்பாளர்களைத் தண்டித்தான். இதுவே நிராகரிப்பாளர்களுக்கான கூலியாகும். 27. அதன் பின்னர் தான் நாடுவோருக்கு அவன் பாவமன்னிப்புப் பேற்றினை அளிக்கிறான். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். 28. நம்பிக்கையாளர்களே, இணைவைப்பாளர்கள் கொள்கைரீதியில் முற்றிலும் அசுத்தமானவர்கள். எனவே அவர்கள் இந்த ஆண்டுக்குப் பிறகு புனித ஆலயத்தின் அருகில் வரக்கூடாது. நீங்கள் வறுமையை அஞ்சினால் அல்லாஹ் நாட்டப்படி தன் அருளால் உங்களைத் தன்னிறைவாக்குவான். அல்லாஹ் நன்கறிந்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.

29. அல்லாஹ்வையும், இறுதிநாளையும் நம்பாமலும், அல்லாஹ்வும், அவனது தூதரும் விலக்கியவற்றை விலக்கிக்கொள்ளாமலும் சத்திய மார்க்கத்தை ஏற்றுக்கொள்ளாமலும் இருக்கும் வேதக்காரர்களுடன் அவர்கள் கீழ்ப்படிந்து விருப்பத்துடன் வரி கட்டும்வரை போரிடுங்கள்*. 30. உஸைரை இறைவனின் மகன் என்று யூதர்கள் கூறுகிறார்கள். மஸீஹை இறைவனின் மகன் என்று கிறிஸ்தவர்கள் கூறுகிறார்கள். இவர்கள் தம் நாவுகளால் கூறும் இக்கூற்றானது இதற்கு முன்னர் நிராகரித்தோரின் கூற்றையே ஒத்திருக்கிறது. அல்லாஹ் அவர்களை அழிக்கட்டும்! அவர்கள் எங்கே தடுமாறிச் செல்கிறார்கள்?

---

*முன்னுரையைக் காண்க.

*31.* அவர்கள் அல்லாஹ்வைத்தவிர தங்கள் மதகுருக்களையும், துறவிகளையும், மரியாளின் மகன் மஸீஹையும் கடவுள்களாக்கிக் கொண்டார்கள். ஆனால் அவர்கள் ஒரே இறைவனையே வணங்க வேண்டும் என்றுதான் கட்டளையிடப்பட்டுள்ளார்கள். அவனைத்தவிர வணக்கத்திற்குரியவன் வேறு இல்லை. அவர்களின் இணைவைப்பைவிட்டும் அவன் பரிசுத்தமானவன்.

*32.* அல்லாஹ்வின் ஒளியை தம் வாய்களால் ஊதி அணைத்துவிட அவர்கள் நாடுகின்றார்கள். அல்லாஹ்வோ தனது ஒளியை பரிபூரணப்படுத்தியே தீருவான். அது நிராகரிப்பாளர்களுக்கு எவ்வளவு வெறுப்பானதாக இருந்தாலும் சரியே. *33.* அவனே தனது தூதரை நேர்வழியுடனும், சத்திய மார்க்கத்துடனும் அனுப்பி வைத்தான், ஏனைய அனைத்து மார்க்கங்களைவிட அதனை மேலோங்கச் செய்வதற்காக - அது இணைவைப்பாளர்களுக்கு எவ்வளவு வெறுப்பானதாக இருந்தாலும் சரியே.

*34.* நம்பிக்கையாளர்களே! வேதக்காரர்களில் பெரும்பாலான மதகுருக்களும், துறவிகளும் மக்களின் செல்வங்களை தவறான முறையில் விழுங்குகிறார்கள். மக்களை இறைவழியைவிட்டும் தடுக்கிறார்கள். பொன்னையும், வெள்ளியையும் இறைவழியில் செலவழிக்காமல் சேர்த்து வைப்பவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு எனும் நற்செய்தியைக் கூறி விடுவீராக. *35.* அந்நாளில் அச்செல்வங்கள் நரக நெருப்பில் பழுக்கக் காய்ச்சப்பட்டு அவற்றால் அவர்களது நெற்றிகளிலும், விலாப்புறங்களிலும், முதுகுகளிலும் சூடு போடப்படும். இதுதான் நீங்கள் உங்களுக்காக சேகரித்து வைத்தவை. எனவே நீங்கள் சேகரித்து வைத்ததைச் சுவையுங்கள் (என்று கூறப்படும்).

*36.* மாதங்களின் எண்ணிக்கை அல்லாஹ்விடம் பன்னிரெண்டு ஆகும். வானங்களையும், பூமியையும் படைத்த நாளிலிருந்து இது அல்லாஹ்வின் பதிவேட்டில் உள்ளது. அதில் நான்கு மாதங்கள் புனிதமானவை. இதுவே சீரான மார்க்கம். எனவே அவற்றில் நீங்களே உங்களுக்கு அநீதியிழைத்துக் கொள்ளாதீர்கள். (எனவே இணைவைப்பாளர்கள் அம்மாதங்களில் உங்களுடன் போர்தொடுத்தால்) அவர்கள் ஒன்றிணைந்து போரிடுவதைப் போன்று நீங்கள் அனைவரும் ஒன்றிணைந்து போரிடுங்கள். அறிந்துகொள்ளுங்கள். அல்லாஹ் இறையச்சமுடையோருடன் இருக்கின்றான்*. *37.* மாதங்களை (அவை இருக்கும் நிலையிருந்து) தள்ளிப்போடுவது நிராகரிப்பை இன்னும் அதிகப்படுத்தும் ஒன்றாகும். இதனால் நிராகரிப்பாளர்கள் வழிகெடுக்கப்படுகிறார்கள். இப்படி தள்ளிப் போட்டுக்கொள்ளும் மாதங்களை ஓராண்டில் அனுமதிக்கப்பட்டதாகவும் மற்றொரு ஆண்டில் தடைசெய்யப்பட்டதாகவும் அவர்கள் ஆக்கிக்கொள்கிறார்கள். இது அல்லாஹ் புனிதப்படுத்தியுள்ள மாதங்களை போர்செய்ய அனுமதிக்கப்பட்டதென்று மாற்றிக்கொள்ளலாம் என்பதற்காகத்தான். அவர்களது தீய செயல்கள் அவர்களுக்கு அழகாக்கப்பட்டுள்ளன. அல்லாஹ் நிராகரிப்பாளர்களுக்கு நேர்வழி காட்டுவதில்லை.

*38.* நம்பிக்கையாளர்களே! உங்களுக்கு என்ன ஆயிற்று? இறைவழியில் புறப்படுங்கள் என்று உங்களிடம் கூறப்பட்டால் உலகியல் இன்பங்களில் சிக்கிக் கொள்கிறீர்களே? மறுமையைவிட இவ்வுலக வாழ்வில் திருப்தியடைந்து விட்டீர்களா? மறுமைக்குமுன் உலக வாழ்வின் இன்பங்கள் அனைத்தும் அற்பமானவையே. *39.* நீங்கள் புறப்படவில்லையெனில் அவன் உங்களுக்குத் துன்புறுத்தும் வேதனையை அளிப்பான். உங்களுக்குப் பதிலாக

---

*முன்னுரையைக் காண்க. பக். 19

வேறொரு சமூகத்தைக் கொண்டு வருவான். நீங்கள் அவனுக்கு எவ்விதத் தீங்கையும் இழைக்க முடியாது. ஏனெனில் அல்லாஹ் எல்லாவற்றின்மீதும் பேராற்றலுடையவன். *40.* நீங்கள் தூதருக்கு உதவிபுரியவில்லையெனில் - நிராகரிப்பாளர்கள் அவரை வெளியேற்றியபோது - அல்லாஹ் அவருக்கு உதவிபுரிந்துள்ளான். அவர்கள் இருவரும் குகையில் இருந்தபோது இருவரில் இரண்டாமவராக இருந்த அவர், தம் தோழரிடம் “கவலைப்படாதீர், அல்லாஹ் நம்முடன் இருக்கிறான்” என்று கூறினார். எனவே அல்லாஹ் அவர்மீது அமைதியை அருளி பார்வைக்குப் புலப்படாத படைகளின்மூலம் அவருக்கு உதவி புரிந்தான். அல்லாஹ் நிராகரிப்பாளர்களின் வாக்கைத் தாழ்த்தி விட்டான். இறைவாக்கே உயர்வானது. அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவனாகவும் ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.

*41.* (சாதனங்கள்) இலேசாக இருந்தாலும், கனமாக இருந்தாலும் புறப்படுங்கள். உங்கள் செல்வங்களாலும், உயிர்களாலும் இறைவழியில் பாடுபடுங்கள். நீங்கள் அறிவுடையவர்களாயின் இதுவே உங்களுக்குச் சிறந்ததாகும். *42.* உடனடி பலன் கிடைக்கும் என்றும், பயணம் எளிதானது என்றும் இருந்தால் நிச்சயம் அவர்கள் உம்மைப் பின்தொடர்ந்திருப்பார்கள். ஆனால் இப்பயணம் அவர்களுக்கு சிரமமாகத் தோன்றியது. ‘எங்களால் இயன்றிருப்பின் நாங்களும் உங்களுடன் வந்திருப்போம்’ என்று அவர்கள் சத்தியம் செய்வார்கள். அவர்கள் தம்மைத்தாமே அழிவுக்குள்ளாக்கிக் கொள்கிறார்கள். அவர்கள்தான் பொய்யர்கள் என்பதை அல்லாஹ் நன்கறிவான்.

*43.* அல்லாஹ் உம்மை மன்னிக்கட்டும்! உண்மையாளர்கள் யார் என்பது உமக்குத் தெளிவாகி பொய்யர்களை நீர் அறிந்து

கொள்வதற்கு முன்பே அவர்களுக்கு ஏன் அனுமதியளித்தீர்? 44. அல்லாஹ்வின்மீதும், மறுமைநாளின்மீதும் நம்பிக்கை கொண்டவர்கள் தம் செல்வங்களாலும், உயிர்களாலும் இறைவழியில் பாடுபடாமல் இருக்க அனுமதிகோர மாட்டார்கள். அல்லாஹ் இறையச்சமுடையோரை நன்கறிந்தவன். 45. அல்லாஹ்வின்மீதும், மறுமை நாளின் மீதும் நம்பிக்கை கொள்ளாமல் உள்ளங்களில் சந்தேகங்களை உடையவர்கள்தான் உம்மிடம் அனுமதி கோருவார்கள். தம் சந்தேகங்களிலேயே அவர்கள் தடுமாறிக் கொண்டிருக்கிறார்கள். 46. அவர்கள் புறப்பட நாடியிருந்தால் நிச்சயம் அதற்கான முன்னேற்பாடுகளைச் செய்திருப்பார்கள். ஆனால் அல்லாஹ் அவர்கள் புறப்படுவதை விரும்பவில்லை. எனவே அவன் அவர்களை அப்படியே நிறுத்திவிட்டான். "தங்கியிருப்போருடன் சேர்ந்து நீங்களும் தங்கியிருங்கள்" என்று அவர்களுக்குக் கூறப்பட்டது.

47. அவர்கள் உங்களுடன் புறப்பட்டிருந்தாலும் பூசல்களைத்தான் அதிகப்படுத்தியிருப்பார்கள்; உங்களிடையே குழப்பம் விளைவிக்கவே முயற்சித்திருப்பார்கள். அவர்களின் வார்த்தைகளைச் செவியேற்போரும் உங்களிடையே இருக்கிறார்கள். அல்லாஹ் அநியாயக்காரர்களை நன்கறிந்தவன். 48. அவர்கள் இதற்கு முன்னரும் குழப்பம் விளைவிக்க நாடி உம் விவகாரங்களை புரட்டிக் கொண்டிருந்தார்கள். இறுதியில் அவர்கள் வெறுத்தபோதிலும் சத்தியம் வந்தது. இறைக்கட்டளை வெளிப்பட்டது.

49. 'எனக்கு அனுமதி தாரும், என்னைக் குழப்பத்தில் ஆழ்த்தி விடாதீர்' என்று கூறுவோரும் அவர்களில் இருக்கிறார்கள். அறிந்துகொள்ளுங்கள். ஏற்கனவே அவர்கள் குழப்பத்தில் வீழ்ந்து விட்டார்கள். நரகம் நிராகரிப்பாளர்களை சூழ்ந்துள்ளது. 50. உமக்கு ஏதேனும் நன்மை ஏற்பட்டால் அது அவர்களை

வருத்தமுறச் செய்கிறது. உமக்கு ஏதேனும் தீங்கு ஏற்பட்டால் 'நாங்கள் முன்னரே எங்களைக் காத்துக்கொண்டோம்' என்று கூறி மகிழ்ச்சியடைந்தவர்களாகத் திரும்புகிறார்கள். **51.** நீர் கூறும்: "அல்லாஹ் எங்களுக்கு விதித்தது மட்டுமே எங்களை வந்தடையும். அவனே எங்களின் அதிபதி". நம்பிக்கையாளர்கள் அல்லாஹ்வையே முழுமையாகச் சார்ந்திருக்க வேண்டும். **52.** நீர் கூறும்: "எங்கள் விஷயத்தில் சிறந்த இருமுடிவுகளில் (வெற்றி அல்லது மறுமையில் சொர்க்கம்) ஒன்றைத்தான் நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள். நாங்கள் எதிர்பார்ப்பதெல்லாம் அல்லாஹ் தன்னிடமிருந்து வேதனையைக் கொண்டோ, எங்கள் கைகளாலோ உங்களைத் தண்டிப்பதைத்தான். எனவே எதிர்பாருங்கள். நாங்களும் உங்களுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்".

**53.** நீர் கூறும்: "நீங்கள் விரும்பியோ, விரும்பாமலோ செலவு செய்யுங்கள். ஆனால் உங்களிடமிருந்து ஒருபோதும் அது ஏற்றுக்கொள்ளப்படாது. நிச்சயமாக நீங்கள் அடிபணியாத மக்களாக இருக்கிறீர்கள்". **54.** அவர்களது தானதர்மங்கள் ஏற்றுக் கொள்ளப்படாததற்கான காரணம், அவர்கள் அல்லாஹ்வையும், அவனது தூதரையும் நிராகரித்ததும், தொழுகைக்கு வந்தாலும் அரைமனதாக வருவதும், மனமின்றியே செலவு செய்வதுமாகும். **55.** அவர்களது செல்வங்களும், பிள்ளைகளும் உம்மை ஆச்சர்யத்தில் ஆழ்த்திவிட வேண்டாம். அவற்றின் மூலம் அவர்களை இவ்வுலக வாழ்வில் தண்டித்து விடவும், நிராகரித்த நிலையிலேயே அவர்களின் உயிர்கள் பிரிந்து விடுவதையுமே அல்லாஹ் நாடுகின்றான். **56.** "நாங்களும் உங்களைச் சார்ந்தவர்கள்தான்" என்று அவர்கள் அல்லாஹ்வின்மீது ஆணையிட்டுக் கூறுகிறார்கள். ஆனால் அவர்கள் உங்களைச் சார்ந்தவர்கள் அல்லர். மாறாக (தங்களின் உண்மை நிலையை வெளிப்படுத்த) அஞ்சும் மக்களாவர். **57.** ஏதேனும்

புகலிடத்தையோ, குகையையோ, பதுங்குமிடத்தையோ கண்டால் அவர்கள் ஓடிஒளிந்து கொள்வார்கள்.

*58.* அவர்களில் சிலர் தானதர்மங்களைப் பங்கீடு செய்யும் விஷயத்தில் உம்மைக் குறை கூறுகிறார்கள். அவர்களுக்கு கொடுக்கப்பட்டால் திருப்தியடைகிறார்கள். அவ்வாறு கொடுக்கப்படாவிட்டால் கோபம் கொள்கிறார்கள். *59.* அல்லாஹ்வும் அவனது தூதரும் அவர்களுக்கு வழங்கியவற்றில் அவர்கள் திருப்திகொண்டு, ‘அல்லாஹ்வே எங்களுக்குப் போதுமானவன். அல்லாஹ்வும் அவனது தூதரும் தம் அருளிலிருந்து எங்களுக்கு வழங்குவார்கள், நாங்கள் அல்லாஹ்வின் பக்கமே விருப்பம் கொண்டுள்ளோம்’ என்று கூறி இருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்! *60.* கடமையாக்கப்பட்ட தானதர்மங்கள் உண்மையில் ஏழைகளுக்கும், வசதியற்றவர்களுக்கும், தானதர்மங்களை வசூலிப்பதில் ஈடுபட்டுள்ள பணியாளர்களுக்கும், உள்ளங்கள் வென்றெடுக்கப்பட வேண்டியவர்களுக்கும், அடிமைகளை விடுதலை செய்வதற்கும், கடனாளிகளுக்கும், இறைவழியில் செலவு செய்வதற்கும், தேவையுள்ள வழிப்போக்கர்களுக்கும் உரியனவாகும். இது அல்லாஹ்வினால் விதிக்கப்பட்ட ஒரு கடமையாகும். அல்லாஹ் நன்கறிந்தவனாகவும், ஞானம் மிக்கவனுமாகவும் இருக்கின்றான்.

*61.* (இறைத்தூதரிடம் எவர் எதைக் கூறினாலும் அதற்குச்) “செவிகொடுக்கக்கூடியவராக அவர் இருக்கிறார்” என்று கூறி தூதரை துன்புறுத்துபவர்களும் அவர்களில் பலர் இருக்கிறார்கள். அதற்கு நீர் கூறும்; “(அவ்வாறு அவர்) செவிகொடுப்பது உங்களுக்கே நல்லது. அவர் அல்லாஹ்வின் மீது நம்பிக்கைகொண்டு நம்பிக்கையாளர்களை நம்புகின்றார். உங்களில் நம்பிக்கைகொண்டோருக்கு கருணையாகவும் இருக்கின்றார்”. அல்லாஹ்வின் தூதருக்கு தொல்லை

அளிப்போருக்கு துன்புறுத்தும் வேதனையுண்டு. **62.** உங்களைத் திருப்திப்படுத்துவதற்காக அவர்கள் உங்களிடம் அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்கிறார்கள். அவர்கள் நம்பிக்கையாளர்களாக இருந்தால் அல்லாஹ்வும் அவனது தூதருமே திருப்திப்படுத்துவதற்கு மிகத்தகுதியானவர்கள். **63.** “எவர் அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் மாறுசெய்கிறாரோ அவருக்கு நரகநெருப்புதான் உண்டு. அதில் அவர் என்றென்றும் வீழ்ந்து கிடப்பார். இது பெரும் இழிவாகும்” என்பதை அவர்கள் அறியவில்லையா? **64.** தம் உள்ளங்களில் உள்ளவற்றை வெளிப்படுத்தக்கூடிய ஏதேனும் ஒரு அத்தியாயம் நம்பிக்கையாளர்களுக்கு அருளப்பட்டுவிடுமோ என்று இந்நயவஞ்சகர்கள் அஞ்சுகிறார்கள். நீர் கூறும்: “நீங்கள் பரிகாசம் செய்துகொள்ளுங்கள். நீங்கள் அஞ்சுவதை அல்லாஹ் வெளிப்படுத்தியே தீருவான்”. **65.** நீர் அவர்களைக் கேட்டால் “நாங்கள் விளையாட்டாகவும், வேடிக்கையாகவும்தான் பேசிக்கொண்டிருந்தோம்” என்று கூறுவார்கள். நீர் கேளும்: “அல்லாஹ்வையும், அவனது வசனங்களையும் அவனது தூதரையுமா நீங்கள் பரிகாசம் செய்து கொண்டிருக்கிறீர்கள்?” **66.** சாக்குப்போக்குகள் கூறாதீர்கள். நீங்கள் நம்பிக்கைகொண்டபின் நிராகரித்து விட்டீர்கள். நாம் உங்களில் ஒரு சாராரை மன்னித்தாலும் மற்றொரு சாராரை - அவர்கள் குற்றம் புரிந்து கொண்டிருந்ததனால் - தண்டித்தே தீருவோம்.

**67.** நயவஞ்சக ஆண்கள், பெண்கள் அனைவரும் ஒரே விதமானவர்கள்தான். அவர்கள் தீமையை செய்யத்தூண்டி நன்மையை விட்டும் தடுக்கிறார்கள். கஞ்சத்தனம் செய்கிறார்கள். அவர்கள் அல்லாஹ்வை மறந்துவிட்டதனால் அல்லாஹ்வும் அவர்களை மறந்துவிட்டான். நிச்சயமாக நயவஞ்சகர்கள்தான் அடிபணியாதவர்கள். **68.** நயவஞ்சக

ஆண்களுக்கும் பெண்களுக்கும், நிராகரிப்பாளர்களுக்கும் அல்லாஹ் நரகநெருப்பை வாக்களித்துள்ளான். அதில் அவர்கள் என்றென்றும் வீழ்ந்து கிடப்பார்கள். அதுவே அவர்களுக்குப் போதுமானதாகும். மேலும் அல்லாஹ் அவர்களை சபித்துள்ளான். அவர்களுக்கு நிலையான வேதனையும் உண்டு. 69. உங்களுக்கு முன்னிருந்தவர்களைப்போன்றுதான் நீங்களும் இருக்கிறீர்கள். அவர்கள் உங்களைவிட வலிமைமிக்கவர்களாகவும், அதிக செல்வங்களையும், பிள்ளைகளையும் உடையவர்களாகவும் இருந்தார்கள். அவர்கள் தம் பங்கினை அனுபவித்தார்கள். உங்கள் முன்னோர்கள் தம் பங்கினை அனுபவித்தது போன்றே நீங்களும் உங்கள் பங்கினை அனுபவித்தீர்கள். அவர்கள் வீண்பேச்சுகளில் மூழ்கிக் கிடந்ததைப் போன்றே நீங்களும் வீண்பேச்சுகளில் மூழ்கிக் கிடந்தீர்கள். இவர்களது செயல்கள்தான் இம்மையிலும், மறுமையிலும் நாசமாகி விட்டன. இவர்கள்தான் நஷ்டமடைந்தவர்கள். 70. இவர்களுக்கு முன்சென்ற நோவாவின் சமூகம், ஆத் மற்றும் ஸமூத் ஆகியோரின் சமூகம், ஆப்ரஹாமுடைய சமூகம், மத்யன்வாசிகள், மற்றும் தலைகீழாக புரட்டப்பட்ட ஊர்களைச் சேர்ந்தவர்கள் ஆகியோரின் செய்தி இவர்களிடம் வரவில்லையா? அவர்களிடம் அவர்களது தூதர்கள் தெளிவான ஆதாரங்களை கொண்டு வந்தார்கள். அல்லாஹ் அவர்களின்மீது அநீதியிழைக்கவில்லை. மாறாக அவர்கள் தமக்குத்தாமே அநீதியிழைத்துக் கொண்டிருந்தார்கள்.

71. நம்பிக்கைகொண்ட ஆண்களும் பெண்களும் ஒருவருக்கொருவர் உதவியாளர்களாக இருக்கிறார்கள். அவர்கள் நன்மை செய்யும்படித் தூண்டி தீமையை விட்டும் தடுக்கிறார்கள். தொழுகையைக் கடைப்பிடித்து கடமையாக்கப்பட்ட தானதர்மத்தையும் அளித்து அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும்

கீழ்ப்படிந்து நடக்கிறார்கள். இவர்களுக்குத்தான் அல்லாஹ் கருணை காட்டுவான். அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான். **72.** நம்பிக்கைகொண்ட ஆண்களுக்கும் பெண்களுக்கும் அல்லாஹ் சுவனச்சோலைகளை வாக்களித்துள்ளான். அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். நிலையான சுவனச்சோலைகளில் தூய்மையான வசிப்பிடங்களும் உண்டு. ஆயினும் இவை அனைத்தைவிடவும் இறைதிருப்தியே மேலானது. அதுவே மாபெரும் வெற்றியாகும்.

**73.** தூதரே, நிராகரிப்பாளர்கள் மற்றும் நயவஞ்சகர்களுக்கு எதிராக கடும்முயற்சி செய்வீராக. அவர்களுடன் கண்டிப்பாக நடந்து கொள்வீராக. அவர்களின் இருப்பிடம் நரகமாகும். அது மிகவும் கெட்ட இருப்பிடமாகும். **74.** "தாம் கூறவில்லை" என்று அவர்கள் இறைவனின் மீது சத்தியம் செய்கிறார்கள். எனினும் அவர்கள் இஸ்லாத்தை ஏற்ற பின்னரும் நிராகரிப்பிற்கான வார்த்தையைக் கூறி நிராகரித்து விட்டார்கள். அவர்களுக்கு சாத்தியமில்லாத காரியத்தைச் செய்ய முயற்சித்தார்கள். அல்லாஹ்வும், அவனது தூதரும் தமது அருளால் அவர்களை செல்வந்தர்களாக ஆக்கியதற்காகவா அவர்கள் வெறுக்கிறார்கள்? அவர்கள் மன்னிப்புக் கோரினால் அது அவர்களுக்குத்தான் நல்லது. அவர்கள் புறக்கணித்து விட்டால் இம்மையிலும், மறுமையிலும் துன்புறுத்தும் வேதனையால் அல்லாஹ் அவர்களைத் தண்டிப்பான். உலகத்தில் அவர்களுக்கு பாதுகாவலரோ, உதவுபவர்களோ இருக்க மாட்டார்கள்.

**75.** அவர்களில் சிலர், "அல்லாஹ் தனது அருளிலிருந்து எங்களுக்கு வழங்கினால் நிச்சயம் நாங்கள் தர்மங்கள் செய்து நல்லோர்களாகி விடுவோம்'' என்று அவனிடம் வாக்களித்தார்கள். **76.** ஆனால் அல்லாஹ் தனது

அருளிலிருந்து அவர்களுக்கு வழங்கியபோது அவர்கள் கஞ்சத்தனம் செய்பவர்களாகி விட்டார்கள். புறக்கணித்தவர்களாக முகம் திருப்பிக்கொண்டார்கள். 77. அல்லாஹ் அவர்களது உள்ளங்களில் தன்னைச் சந்திக்கும் நாள்வரை நயவஞ்சகத்தை விதைத்து விட்டான். காரணம் அவர்கள் அல்லாஹ்விடம் செய்த வாக்குறுதிக்கு மாறுசெய்ததும் பொய்யுரைத்துக் கொண்டிருந்ததுமேயாகும். 78. அல்லாஹ் அவர்களின் இரகசியங்களையும், அந்தரங்க உரையாடலையும் அறிவான் என்பதையும் நிச்சயமாக அவன் மறைவானவற்றை நன்கறியக்கூடியவன் என்பதையும் அவர்கள் அறியவில்லையா? 79. நம்பிக்கையாளர்களில் தாராளமாக தர்மம் செய்பவர்களையும், தங்களது உழைப்பினால் கிடைக்கும் கூலியைத்தவிர வேறெதையும் பெறாதவர்கள் செய்யும் தர்மத்தையும் இவர்கள் குறைகூறி ஏளனம் செய்கிறார்கள். இவர்களை அல்லாஹ் ஏளனம் செய்கிறான். அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு. 80. நீர் அவர்களுக்காக மன்னிப்புக்கோரினாலும் கோராவிட்டாலும் - நீர் அவர்களுக்காக எழுபது முறை மன்னிப்புக்கோரினாலும் - அல்லாஹ் ஒருபோதும் அவர்களை மன்னிக்கவே மாட்டான். காரணம் அவர்கள் அல்லாஹ்வையும், அவனது தூதரையும் நிராகரித்தார்கள். அல்லாஹ் அடிபணியாத மக்களுக்கு நேர்வழிகாட்டுவதில்லை.

81. (போருக்குச் செல்லாமல்) பின்தங்கிவிட்டவர்கள் அல்லாஹ்வின் தூதர் புறப்பட்டதற்குப் பின்னால் தம் வீடுகளில் தங்கிவிட்டதனால் மகிழ்ச்சியடைந்தார்கள். தம் செல்வங்களாலும், உயிர்களாலும் இறைவழியில் பாடுபடுவதை அவர்கள் வெறுத்தார்கள். “வெப்பம் நிறைந்த காலத்தில் நீங்கள் புறப்படாதீர்கள்” என்று அவர்கள் கூறுகிறார்கள். நீர் கூறும்: “நரகநெருப்பு அதைவிடக் கடுமையானது”. அந்தோ அவர்கள் புரிந்துகொள்ள மாட்டார்களா! 82. எனவே அவர்கள் செய்து கொண்டிருந்ததற்குக் கூலியாக

குறைவாகச் சிரிக்கட்டும்; அதிகமாக அழட்டும். 83. எனவே அவர்களில் ஒரு சாராரிடம் அல்லாஹ் உம்மை திரும்ப வரச்செய்து, அவர்கள் இறைவழியில் புறப்பட உம்மிடம் அனுமதி கோரினால் அவர்களிடம் நீர் கூறும்: "நீங்கள் என்னுடன் ஒருபோதும் புறப்பட வேண்டாம், என்னுடன் சேர்ந்து எந்த எதிரியிடமும் போரிட வேண்டாம். நீங்கள் ஆரம்பத்தில் (வீடுகளில்) தங்கிவிடுவதையே விரும்பினீர்கள், ஆகவே பின்தங்கிவிடுவோருடன் நீங்களும் தங்கிவிடுங்கள்". 84. அவர்களில் யாரேனும் இறந்துவிட்டால் அவருக்காக ஒருபோதும் நீர் தொழுகை நடத்தாதீர். அவரது சவக்குழியிலும் நிற்காதீர். நிச்சயமாக அவர்கள் அல்லாஹ்வையும், அவனது தூதரையும் நிராகரித்து அடிபணியாத நிலையிலேயே மரணித்தும் விட்டார்கள்.

85. அவர்களது செல்வங்களும், பிள்ளைகளும் உம்மை ஆச்சர்யத்தில் ஆழ்த்திவிட வேண்டாம். அவற்றின்மூலம் அல்லாஹ் அவர்களை இவ்வுலகில் தண்டிக்கவும், நிராகரித்த நிலையிலேயே அவர்களின் உயிர்கள் பிரிந்து விடுவதையுமே நாடுகின்றான் 86. "அல்லாஹ்வின்மீது நம்பிக்கைகொண்டு அவனது தூதருடன் இணைந்து இறைவழியில் பாடுபடுங்கள்" என்று கூறும் ஏதேனும் அத்தியாயம் அருளப்பட்டால் அவர்களில் வசதிபடைத்தோர் உம்மிடம், "எங்களை விட்டுவிடும். (வீட்டில்) தங்கியிருப்போருடன் நாங்களும் தங்கிவிடுகிறோம்'' என்று அனுமதி கோருகிறார்கள். 87. வீட்டில் தங்கியிருக்கும் பெண்களுடன் சேர்ந்து தங்கிவிடவே அவர்கள் விரும்பினார்கள். அவர்களது உள்ளங்களின்மீது முத்திரையிடப்பட்டு விட்டது. எனவே அவர்கள் எதையும் புரிந்துகொள்ள மாட்டார்கள் 88. ஆனால் தூதரும், அவருடன் நம்பிக்கைகொண்டவர்களும் தம் செல்வங்களாலும், உயிர்களாலும் இறைவழியில் பாடுபட்டார்கள். அவர்களுக்குத்தான்

நன்மைகள் இருக்கின்றன. அவர்கள்தான் வெற்றியாளர்கள். **89.** அல்லாஹ் அவர்களுக்காக சொர்க்கச் சோலைகளை தயார்படுத்தி வைத்துள்ளான். அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். இதுவே மாபெரும் வெற்றியாகும்.

**90.** நாட்டுப்புற அரேபியர்களில் சிலர் சாக்குப்போக்குகள் கூறி தங்களுக்கு அனுமதியளிக்கப்பட வேண்டும் என்பதற்காக வந்தார்கள். அல்லாஹ்விடமும் அவனது தூதரிடமும் பொய் கூறியோர் (வீட்டிலேயே) தங்கி விட்டார்கள். அவர்களில் நிராகரித்தோரை விரைவில் துன்புறுத்தும் வேதனை வந்தடையும். **91.** பலவீனர்கள், நோயாளிகள், செலவு செய்வதற்குத் தங்களிடம் எதுவும் இல்லாதவர்கள் ஆகியோர்மீது எவ்விதக் குற்றமுமில்லை. ஆயினும் அவர்கள் அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் உண்மையாளர்களாக இருக்க வேண்டும். நன்மை புரிவோர்மீது எவ்விதக் குற்றமுமில்லை. அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். **92.** தங்களுக்கு வாகனம் வேண்டும் என்று உம்மிடம் வந்தவர்களிடம் ‘நீங்கள் பயணம் செய்வதற்கு என்னிடம் எதுவும் இல்லையே’ என்று நீர் கூறியபோது “தங்களிடம் செலவு செய்வதற்கு எதுவும் இல்லையே” என்ற கவலையால் கண்ணீர் சிந்தியவாறு அவர்கள் திரும்பிச் சென்றார்கள். இத்தகைய மக்கள்மீதும் எவ்விதக் குற்றமுமில்லை. **93.** வசதியானவர்களாக இருந்தும் (போருக்குச் செல்லாமல் இருக்க) உம்மிடம் அனுமதி கோருபவர்கள்தான் பழிப்பிற்குரியவர்கள். (வீட்டில்)தங்கி இருக்கும் பெண்களுடன் சேர்ந்து தங்கிவிடுவதையே அவர்கள் விரும்பினார்கள். அல்லாஹ் அவர்களது உள்ளங்களின்மீது முத்திரையிட்டு விட்டான். எனவே அவர்கள் அறிந்து கொள்ள மாட்டார்கள்.

*94. நீங்கள் அவர்களிடம் திரும்பிவந்தால் உங்களிடம் அவர்கள் சாக்குப்போக்கு கூறுவார்கள். நீர் கூறும்: "சாக்குபோக்கு கூறாதீர்கள். நாங்கள் உங்களை ஒருபோதும் நம்ப மாட்டோம். உங்களைப்பற்றி அல்லாஹ் எங்களுக்கு அறிவித்து விட்டான். இனி அல்லாஹ்வும், தூதரும் உங்கள் செயல்களைப் பார்ப்பார்கள். பின்னர் வெளிப்படையானவற்றையும், மறைவானவற்றையும் அறிந்த அவன் பக்கமே நீங்கள் திரும்பக் கொண்டுவரப்படுவீர்கள். அப்போது நீங்கள் செய்துகொண்டிருந்ததை அவன் உங்களுக்கு அறிவிப்பான்". 95. நீங்கள் திரும்பிவந்த பின்னர் அவர்களை நீங்கள் பொருட்படுத்தாமல் விட்டுவிடுவதற்காக உங்களிடம் அவர்கள் அல்லாஹ்வின்மீது சத்தியமிட்டுக் கூறுவார்கள். எனவே நீங்கள் அவர்களைப் பொருட்படுத்தாமல் விட்டுவிடுங்கள். நிச்சயமாக அவர்கள் அசுத்தமானவர்கள். அவர்கள் செய்தவற்றுக்குக் கூலியாக நரகமே அவர்களின் இருப்பிடமாக்கப்படும். 96. நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதற்காக அவர்கள் உங்களிடம் சத்தியம் செய்கிறார்கள். நீங்கள் அவர்களை ஏற்றுக் கொண்டாலும் அடிபணியாத மக்களை நிச்சயம் அல்லாஹ் ஏற்றுக்கொள்ள மாட்டான்.*

*97. நாட்டுப்புற அரபியேர்கள் நிராகரிப்பிலும், நயவஞ்சகத்திலும் கடுமையானவர்கள். தன் தூதருக்கு அல்லாஹ் அருளியுள்ள வரம்புகளை அறிவதற்கு அவர்கள் தகுதியற்றவர்கள். அல்லாஹ் நன்கறிந்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான். 98. நாட்டுப்புற அரேபியர்களில் சிலர், இறைவழியில் செலவு செய்வதை அபராதமாகக் கருதி நீங்கள் காலஓட்டத்தின் கேட்டில் சிக்கிவிட வேண்டும் என எதிர்பார்க்கின்றனர். அவர்களுக்குத்தான் அது ஏற்படும். அல்லாஹ் செவியேற்பவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். 99. நாட்டுப்புற அரேபியர்களில்*

சிலர் அல்லாஹ்வின் மீதும், மறுமைநாளின்மீதும் நம்பிக்கைகொண்டு இறைவழியில் செலவிடுவதை இறைநெருக்கத்தைப் பெறுவதற்கும், தூதரின் பிரார்த்தனையைப் பெறுவதற்குமான வழியாக எடுத்துக்கொள்கிறார்கள். ஆம். நிச்சயமாக அது இறைநெருக்கத்தைப் பெற்றுத்தரும். தன் கருணையில் அல்லாஹ் அவர்களை நுழையச் செய்வான். நிச்சயமாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

*100.* புலம்பெயர்ந்தோர், உதவிபுரிந்தோர் ஆகியோரில் முதன்மையானவர்களையும் அவர்களை சிறந்தமுறையில் பின்பற்றியவர்களையும் அல்லாஹ் ஏற்றுக் கொண்டான். அவர்களும் அல்லாஹ்வை ஏற்றுக் கொண்டார்கள். அவன் அவர்களுக்காக சொர்க்கச்சோலைகளை தயார்படுத்தி வைத்துள்ளான். அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். இதுவே மாபெரும் வெற்றியாகும். *101.* உங்களைச் சுற்றியுள்ள நாட்டுப்புற அரேபியர்கள், மதீனாவாசிகள் ஆகியோரில் நயவஞ்சகர்களும் இருக்கிறார்கள். அவர்கள் நயவஞ்சகத்தில் ஊறிப்போனவர்கள். நீர் அவர்களை அறியமாட்டீர். நாமே அவர்களை அறிவோம். நாம் அவர்களுக்கு இருமடங்கு வேதனையை அளிப்போம். இறுதியில் அவர்கள் பெரும் வேதனைக்கு உட்படுத்தப்படுவார்கள்.

*102.* வேறு சிலரும் இருக்கின்றனர். அவர்கள் தம் பாவங்களை ஒப்புக்கொண்டுள்ளார்கள். ஆயினும் நல்லவற்றோடு தீயவற்றையும் கலந்து விட்டார்கள். அல்லாஹ் அவர்களை மன்னித்து விடக்கூடும். நிச்சயமாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். *103.* அவர்களின் செல்வங்களிலிருந்து கடமையாக்கப்பட்ட தானதர்மத்தின் பங்கைப்பெற்று அதன்மூலம் அவர்களின்

அசுத்தங்களை நீக்கி அவர்களைத் தூய்மைப்படுத்துவீராக. அவர்களுக்காக நீர் பிரார்த்தனை செய்வீராக. நிச்சயமாக உமது பிரார்த்தனை அவர்களின் நிம்மதிக்கு வழிவகுக்கும். அல்லாஹ் அனைத்தையும் செவியேற்பவனாகவும் அறிந்தவனாகவும் இருக்கின்றான். 104. தன் அடியார்களின் பாவமன்னிப்பை அல்லாஹ் ஏற்றுக்கொள்கிறான். அவனே தானதர்மங்களை அங்கீகரிக்கிறான் என்பதையும் அவன் பாவமன்னிப்பை ஏற்பவனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான் என்பதையும் அவர்கள் அறியவில்லையா? 105. நீர் கூறும்: “நீங்கள் செய்பவற்றைச் செய்யுங்கள். அல்லாஹ்வும், அவனது தூதரும், நம்பிக்கையாளர்களும் உங்கள் செயல்பாடுகளைக் கவனிப்பார்கள். வெளிப்படையானதையும், மறைவானதையும் அறிந்தவனிடமே விரைவில் நீங்கள் கொண்டு செல்லப்படுவீர்கள். அப்போது நீங்கள் செய்து கொண்டிருந்தவற்றை அவன் உங்களுக்கு அறிவித்து விடுவான்”. 106. வேறு சிலர் இருக்கின்றனர். இறைக்கட்டளைக்காக அவர்களது விவகாரம் நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது. அவர்களை அவன் தண்டிக்கலாம் அல்லது மன்னித்து விடலாம். அல்லாஹ் நன்கறிந்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.

107. அவர்களில் இப்படியும் சிலர் இருக்கின்றனர். அவர்கள் தீங்கிழைப்பதற்காகவும், நிராகரிப்பதற்காகவும், நம்பிக்கையாளர்களிடையே பிரிவினையை ஏற்படுத்துவதற்காகவும், அல்லாஹ்வுடனும், அவனது தூதருடனும் முன்னர் போரிட்டுக் கொண்டிருந்தவர்கள் பதுங்கிக் கொள்வதற்காகவும் ஒரு பள்ளிவாசலை ஏற்படுத்தியுள்ளனர். நாங்கள் நன்மையைத்தான் நாடியுள்ளோம் என்று அவர்கள் சத்தியமிட்டுக் கூறுவார்கள். அவர்கள் பொய்யர்கள் என்பதற்கு அல்லாஹ்வே சாட்சி கூறுகிறான். 108. நீர் அங்கு ஒருபோதும் தொழுகைக்காக நிற்க வேண்டாம். ஆரம்பநாள்

முதலே இறையச்சத்தின் அடிப்படையில் நிறுவப்பட்டதுதான் நீர் நின்று வணங்குவதற்குத் தகுதியான பள்ளியாகும். அங்கு தூய்மையை விரும்பக்கூடிய மக்கள் இருக்கிறார்கள். அல்லாஹ் தூய்மையாளர்களை நேசிக்கிறான். 109. இறையச்சத்தையும், இறைதிருப்தியையும் அடிப்படையாகக்கொண்டு தனது கட்டடத்தை அமைத்தவர் சிறந்தவரா? அல்லது நரகநெருப்பில் விழுந்து விடுமாறு சரியப்போகின்ற ஓடையின் ஓரத்தில் தனது கட்டடத்தை அமைத்தவரா? அல்லாஹ் அநியாயக்கார மக்களுக்கு நேர்வழி காட்டுவதில்லை. 110. அவர்களின் உள்ளங்கள் சிதைந்துபோகும்வரை அவர்கள் எழுப்பிய அக்கட்டடம் அவர்களது உள்ளங்களில் சந்தேகத்தை ஏற்படுத்திக்கொண்டே இருக்கும். அல்லாஹ் நன்கறிந்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.

111. நிச்சயமாக அல்லாஹ் நம்பிக்கையாளர்களின் உயிர்களையும், செல்வங்களையும் சொர்க்கத்திற்குப் பகரமாக(பதிலாக) விலைக்கு வாங்கிக்கொண்டான். அவர்கள் இறைவழியில் போரிடுகிறார்கள், கொல்கிறார்கள், கொல்லப்படுகிறார்கள். இது தவ்ராத்திலும், இன்ஜீலிலும், குர்ஆனிலும் அல்லாஹ் தன்மீது கடமையாக்கிக்கொண்ட உண்மையான வாக்குறுதியாகும். அல்லாஹ்வைவிட தன் வாக்குறுதியை முழுமையாக நிறைவேற்றுபவர் யார்? நீங்கள் அல்லாஹ்விடம் செய்துகொண்ட வியாபாரப் பரிமாற்றத்தைக் குறித்து மகிழ்ச்சியடையுங்கள். இதுவே மாபெரும் வெற்றியாகும்*. 112. அவர்கள் இறைவனிடம் மன்னிப்புக்கோருபவர்கள், அவனை வணங்குபவர்கள், அவன் புகழ்பாடுபவர்கள், அவனது பாதையில் பயணிப்பவர்கள், அவன் முன் குனிந்து சிரம்பணிபவர்கள், நன்மை புரியத் தூண்டி தீமையைவிட்டும் தடுப்பவர்கள், இறைவரம்புகளைப்

---

*முன்னுரையைக் காண்க. பக். 19

*பேணுபவர்கள் ஆவார்கள். இத்தகைய நம்பிக்கையாளர்களுக்கு நற்செய்தி கூறி விடுவீராக.*

***113.*** *நரகவாசிகள் என்று தெளிவாகிவிட்ட பின்னரும் இணைவைப்பவர்களுக்காக தூதரும், நம்பிக்கையாளர்களும் மன்னிப்புக்கோரி பிரார்த்தனை செய்வது தகுமானதல்ல, அவர்கள் நெருங்கிய உறவினர்களாக இருந்தாலும் சரியே.* ***114.*** *ஆப்ரஹாம் தம் தந்தைக்காக மன்னிப்புக்கோரியது அவருக்கு நாம் அளித்த வாக்குறுதியினால்தான். ஆனால் அவரது தந்தை அல்லாஹ்வின் பகைவன் என்று தெளிவானபின்னர் அவரைவிட்டு ஆப்ரஹாம் விலகிக்கொண்டார். நிச்சயமாக ஆப்ரஹாம் இளகியமனம் உடையவராகவும், சகிப்புத்தன்மைமிக்கவராகவும் இருந்தார்.* ***115.*** *ஒரு சமூகத்திற்கு அல்லாஹ் நேர்வழி காட்டியபின் அவர்கள் தவிர்த்துக் கொள்ள வேண்டியவற்றைத் தெளிவாக அவர்களுக்கு எடுத்துரைக்கும்வரை அவன் அவர்களை வழிதவறும்படி விட்டுவிடுவதில்லை. நிச்சயமாக அல்லாஹ் ஒவ்வொரு பொருளையும் நன்கறிந்தவன்.* ***116.*** *வானங்களிலும், பூமியிலும் ஆட்சியதிகாரம் அல்லாஹ்வுக்கே உரியது. அவனே வாழ்வையும், மரணத்தையும் அளிக்கிறான். அல்லாஹ்வைத் தவிர உங்களுக்கு எந்த நண்பரோ, உதவியாளரோ இல்லை.*

***117.*** *இந்தத் தூதரையும் நெருக்கடியான சமயத்தில் அவருக்கு உறுதுணையாக இருந்த புலம்பெயர்ந்தவர்களையும் உதவியாளர்களையும் அல்லாஹ் மன்னித்து விட்டான். அவர்களில் சிலருடைய உள்ளங்கள் தடுமாறிவிட்ட பின்னரும் மீண்டும் அவன் அவர்களை மன்னித்து விட்டான். நிச்சயமாக அல்லாஹ் அவர்களின்மீது மிகுந்த பரிவுடையவனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.* ***118.*** *விவகாரம் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த மூவரையும் அவன் மன்னித்து*

விட்டான். அவர்களின் நிலைமை எவ்வாறு இருந்ததெனில் பூமி விசாலமாக இருந்தும் அது அவர்களுக்கு நெருக்கடியாகி உயிர்வாழ்வதே அவர்களுக்குச் சிரமமாகி விட்டது. “அல்லாஹ்வின் (தண்டனையிலிருந்து) தப்புவதற்கு அவனைத்தவிர வேறு புகலிடம் இல்லை” என்பதை அவர்கள் புரிந்துகொண்டார்கள். பின்னர் தன்பக்கம் அவர்கள் மீளவேண்டும் என்பதற்காக அல்லாஹ் அவர்களை மன்னித்து விட்டான். நிச்சயமாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

**119.** நம்பிக்கையாளர்களே, அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள், உண்மையாளர்களுடன் இணைந்திருங்கள். **120.** மதீனாவாசிகள் மற்றும் அவர்களைச் சுற்றியுள்ள நாட்டுப்புற அரேபியர்கள் ஆகியோருக்கு இறைத்தூதரை விட்டுப் பின்தங்கி இருப்பதும், அவரது உயிரைவிட தம் உயிர்களையே நேசிப்பதும் தகுமானதல்ல. ஏனெனில் இறைவழியில் அவர்களுக்கு ஏற்படும் தாகம், களைப்பு, பசி மற்றும் நிரகாரிப்பாளர்களை ஆத்திரமூட்டுவதற்காக அவர்கள் எடுத்து வைக்கும் காலடிகள், எதிரிகளிடமிருந்து கைப்பற்றும் பொருட்கள் ஆகிய ஒவ்வொன்றுக்காகவும் அவர்களுக்கு ஒரு நன்மை எழுதப்பட்டு விடுகிறது. நன்மைபுரிவோரின் கூலியை அல்லாஹ் வீணாக்க மாட்டான். **121.** சிறியதோ, பெரியதோ அவர்கள் எதைச் செலவு செய்தாலும், எந்த நிலப்பகுதியைக் கடந்தாலும் அவை யாவும் அவர்களது செயல்களுக்குரிய நற்கூலியை அல்லாஹ் அவர்களுக்கு வழங்கிடுவதற்காக பதிவு செய்யப்படும்.

**122.** நம்பிக்கையாளர்கள் அனைவரும் புறப்பட்டுவிட வேண்டியதில்லை. அவர்களில் ஒவ்வொரு கூட்டத்திலும் ஒரு பிரிவினர் மார்க்கத்தின் ஆழ்ந்த கருத்தை புரிந்து கொள்வதற்காகவும், தம் சமூக மக்களிடம் சென்று அவர்களை எச்சரிக்கை

*செய்வதற்காகவும் புறப்பட வேண்டாமா? இதன்மூலம் அவர்கள் தம்மைத் தீயவற்றிலிருந்து காத்துக் கொள்ளலாம்.*

*123. நம்பிக்கையாளர்களே, உங்கள் அருகிலுள்ள நிராகரிப்பாளர்களுடன் போரிடுங்கள். அவர்கள் உங்களிடம் கடுமையை உணரட்டும். அல்லாஹ் இறையச்சமுடையோருடன் இருக்கின்றான் என்பதை அறிந்துகொள்ளுங்கள் 124. ஏதேனும் ஒரு அத்தியாயம் அருளப்பட்டால் அவர்களில் சிலர், 'இது உங்களில் யாருடைய நம்பிக்கையை அதிகப்படுத்தியது' என்று பரிகாசமாகக் கேட்கின்றனர். ஆயினும் நம்பிக்கையாளர்களுக்கு அது நம்பிக்கையை இன்னும் அதிகப்படுத்தியே விட்டது. அதனால் நம்பிக்கையாளர்கள் மகிழ்ச்சியடைகிறார்கள். 125. ஆனால் உள்ளங்களில் நோயுள்ளவர்களுக்கு அது மென்மேலும் அசுத்தத்தையே அதிகரித்தது. அவர்கள் நிராகரித்த நிலையிலேயே இறந்தும் விட்டார்கள். 126. ஒவ்வொரு ஆண்டும் அவர்கள் ஒருமுறையோ இருமுறையோ சோதனைக்குள்ளாக்கப்படுகிறார்கள் என்பதை அவர்கள் கவனிக்கவில்லையா? ஆயினும் அவர்கள் பாவமன்னிப்புக்கோருவதுமில்லை, படிப்பினை பெறுவதுமில்லை. 127. ஏதேனும் அத்தியாயம் அருளப்பட்டால் அவர்கள் ஒருவரையொருவர் பார்த்து "உங்களை யாரேனும் பார்க்கின்றார்களா?" என்று கூறி திரும்பிச்சென்று விடுகிறார்கள். அவர்கள் புரிந்துகொள்ளாத மக்களாக இருப்பதால் அல்லாஹ் அவர்களது உள்ளங்களை திருப்பி விட்டான்.*

*128. உங்களிலிருந்தே ஒரு தூதர் உங்களிடம் வந்துள்ளார். நீங்கள் துன்பப்படுவது அவருக்கு வேதனையாக இருக்கிறது. அவர் உங்கள் நன்மையைப் பெரிதும் விரும்புபவர், நம்பிக்கையாளர்களிடம் மிகுந்த பரிவும், இரக்கமும் உடையவர். 129. இனியும் அவர்கள் புறக்கணித்தால் நீர் கூறிவிடும்: "அல்லாஹ்வே எனக்குப்*

போதுமானவன். அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. அவனையே நான் முழுமையாகச் சார்ந்துள்ளேன். அவனே மகத்தான அரியணையின் அதிபதி''.

## 10. ஜோனா [யூனுஸ்]

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

1. அலிஃப். லாம். ரா. இவை ஞானம் நிறைந்த வேதத்தின் வசனங்களாகும். **2.** மக்களை எச்சரிப்பதற்காகவும், நம்பிக்கையாளர்களுக்கு தங்கள் இறைவனிடம் உண்மையான அந்தஸ்து உண்டு எனும் நற்செய்தியைக் கூறுவதற்காகவும் அவர்களிலிருந்து ஒருவரைத் தேர்ந்தெடுத்து நாம் அறிவிப்பது அவர்களுக்கு ஆச்சர்யத்தை ஏற்படுத்துகிறதா? ஆயினும் நிராகரிப்பாளர்கள் 'இவர் தெளிவான சூனியக்காரராக இருக்கின்றார்' என்று கூறுகிறார்கள்.

**3.** நிச்சயமாக உங்கள் இறைவன் அல்லாஹ்தான். அவனே வானங்களையும், பூமியையும் ஆறு நாட்களில் படைத்தான். பின்னர் அரியணையின்மீது நிலைகொண்டு அனைத்துக் காரியங்களையும் நிர்வகிக்கிறான். அவனது அனுமதியின்றி பரிந்துரை செய்பவர் யாருமில்லை. அல்லாஹ்வே உங்கள் இறைவன். எனவே அவனையே வணங்குங்கள். நீங்கள் சிந்திக்க மாட்டீர்களா? **4.** (இறந்த பின்னர்) நீங்கள் அனைவரும் அவனிடமே செல்ல வேண்டியிருக்கிறது. அல்லாஹ்வுடைய இவ்வாக்குறுதி உண்மையானதே. நிச்சயமாக அவனே படைப்பை ஆரம்பம் செய்கிறான். பின்னர் மீண்டும் உயிர்ப்பிப்பான், நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிந்தோருக்கு நிச்சயமாக கூலி வழங்குவதற்காக. நிராகரிப்பாளர்களுக்கு அவர்களின் நிராகரிப்பினால் கொதிக்கும் நீரும் துன்புறுத்தும் வேதனையும் உண்டு.

*5. அவனே சூரியனைப் பிரகாசமானதாக ஆக்கி சந்திரனுக்கு ஒளியைக் கொடுத்தான். ஆண்டுகளின் எண்ணிக்கையையும், கணக்கையும் நீங்கள் அறிந்துகொள்ளும்பொருட்டு அதன் நிலைகளை நிர்ணயம் செய்தான். இவற்றையெல்லாம் அல்லாஹ் வீணாகப் படைக்கவில்லை. அறிந்துகொள்ளும் மக்களுக்கு அவன் சான்றுகளைத் தெளிவுபடுத்துகிறான். 6. நிச்சயமாக இரவுபகல் மாறிமாறி வருவதிலும், வானங்கள் மற்றும் பூமியில் அல்லாஹ் படைத்திருப்பவற்றிலும் இறையச்சமுடையோருக்கு சான்றுகள் இருக்கின்றன*.*

*7. நமது சந்திப்பை நம்பாமல் இவ்வுலக வாழ்வை விரும்பி அதிலேயே திருப்தியடைந்தவர்களும், நம் சான்றுகளைவிட்டு அலட்சியமாக இருப்பவர்களும் 8. தம் செயல்களின் விளைவாக நரகத்தையே தம் தங்குமிடமாகப் பெறுவார்கள். 9. ஆனால் நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிபவர்களை அவர்களின் இறைவன் - அவர்களின் நம்பிக்கையினால் - அருட்கொடைகள் நிறைந்த சொர்க்கச் சோலைகளில் சேர்த்திடுவான். அங்கே ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். 10. “அல்லாஹ்வே, நீயே தூயவன்” என்பதே அங்கு அவர்களின் பிரார்த்தனையாக இருக்கும். “அமைதி நிலவட்டும்” என்பதே அவர்களின் வாழ்த்தாக இருக்கும்.*

---

*வானத்திலும் பூமியிலும் இறைவனின் எண்ணற்ற சான்றுகள் உள்ளன. ஆனால் அவை இறையச்சம் கொண்டவர்களுக்கு மட்டுமே பாடங்களாக விளங்கும். அச்சமோ அல்லது புரிந்து கொள்ள வேண்டும் என்ற உணர்வோதான் மனிதர்களை கவனமுள்ளவர்களாக, சிரத்தையுள்ளவர்களாக ஆக்குகிறது. சிரத்தையோ – கவனமோ கொள்ளவில்லையென்றால் மனிதர்கள் முக்கியத்துவம் அளிக்க வேண்டியவற்றிக்கு முக்கியத்துவம் அளித்து முழு கவனத்தை செலுத்த மாட்டார்கள். அவைபற்றிய பல்வேறு அம்சங்களையும் புரிந்து கொள்ள மாட்டார்கள்.

“அகிலங்களின் இறைவனாகிய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்” என்பதே அவர்களின் இறுதி வார்த்தையாக இருக்கும்.

**11.** அல்லாஹ் மக்களுக்கு அருள்புரிவதில் வேகம் காட்டுவதைப் போன்று அவர்களைத் தண்டிப்பதில் அவசரம் காட்டினால் அவர்களின் தவணை முடிக்கப்பட்டிருக்கும். ஆயினும் நமது சந்திப்பை நம்பாதவர்களை அவர்களின் வரம்புமீறலிலேயே தடுமாறித் திரியுமாறு விட்டு விடுகிறோம். **12.** மனிதனுக்கு ஏதேனும் துன்பம் ஏற்பட்டால் நின்றவாறும், அமர்ந்தவாறும், படுத்தவாறும் நம்மை அழைக்கிறான். ஆனால் அவனது துன்பத்தை நாம் அவனைவிட்டும் நீக்கிவிட்டால் தனக்கு ஏற்பட்ட துன்பத்திற்கு நம்மை அழைக்காதவனைப்போன்று ஆகிவிடுகிறான். இவ்வாறு வரம்புமீறும் மக்களுக்கு அவர்களின் செயல்கள் அழகாக்கப்பட்டுள்ளது.

**13.** உங்களுக்கு முன்னுள்ள சமூகங்கள் அநியாயம் செய்தபோது நாம் அவர்களை அழித்து விட்டோம். அவர்களின் தூதர்கள் அவர்களிடம் தெளிவான சான்றுகளைக் கொண்டு வந்தார்கள். ஆயினும் அவர்கள் நம்பிக்கை கொள்ளவில்லை. இவ்வாறே நாம் குற்றவாளிகளுக்குக் கூலி வழங்குகிறோம். **14.** பின்னர் நீங்கள் எவ்வாறு செயல்படுகிறீர்கள் என்பதைப் பார்ப்பதற்காக அவர்களுக்குப்பின் நாம் உங்களைப் பூமியில் சந்ததிகளாக்கினோம்.

**15.** அவர்களிடம் நமது தெளிவான வசனங்கள் எடுத்துரைக்கப்பட்டால் நமது சந்திப்பை நம்பாதவர்கள், “இது அல்லாத வேறு குர்ஆனைக் கொண்டு வாருங்கள் அல்லது இதனை மாற்றிவிடுங்கள்” என்று கூறுகிறார்கள். நீர் கூறும்: “என் விருப்பப்படி இதனை மாற்றி விடுவது என் பணியல்ல. எனக்கு

அறிவிக்கப்படுவதைத்தான் நான் பின்பற்றுகிறேன். நான் என் இறைவனுக்கு மாறுசெய்தால் மாபெரும் நாளின் வேதனையை அஞ்சுகிறேன்". 16. நீர் கூறும்: "அல்லாஹ் நாடியிருந்தால் நான் இதனை உங்களுக்குக் கூறியிருக்க மாட்டேன். அல்லாஹ்வும் இதனை உங்களுக்கு அறிவித்திருக்க மாட்டான். நான் இதற்கு முன்னர் உங்களிடையே நீண்டகாலம் வாழ்ந்துள்ளேன். நீங்கள் சிந்திக்க மாட்டீர்களா?". 17. அல்லாஹ்வின்மீது பொய்யை இட்டுக்கட்டுபவனைவிட அல்லது அவனது சான்றுகளை மறுப்பவனைவிட பெரும் அநியாயக்காரன் யார்? நிச்சயமாக குற்றவாளிகள் வெற்றிபெற மாட்டார்கள்.

18. அவர்கள் அல்லாஹ்வைத்தவிர தங்களுக்குப் பலனையோ, தீங்கையோ அளிக்க இயலாதவற்றை வணங்குகிறார்கள். "இவை அல்லாஹ்விடத்தில் எங்களுக்காகப் பரிந்து பேசும்" என்றும் கூறுகிறார்கள். நீர் கேளும்: "வானங்களிலும் பூமியிலும் அல்லாஹ் அறியாதவற்றையா நீங்கள் அவனுக்கு அறிவிக்கிறீர்கள்? அவர்கள் செய்யும் இணைவைப்பை விட்டும் அல்லாஹ் தூய்மையானவன்; மிக உயர்ந்தவன்". 19. மனிதர்கள் ஒரே சமூகமாக இருந்தார்கள். பின்னர் கருத்துவேறுபாடு கொண்டார்கள். உம் இறைவனிடமிருந்து முன்னரே ஒரு விஷயம் முடிவு செய்யப்பட்டிருக்காவிட்டால் அவர்கள் பிணங்கிக் கொண்ட விஷயங்களில் அவர்களிடையே தீர்ப்பளிக்கப்பட்டிருக்கும்.

20. "அவரது இறைவனிடமிருந்து ஏதேனும் ஒரு சான்று அவருக்கு வழங்கப்பட்டிருக்கக் கூடாதா?" என்று அவர்கள் கேட்கிறார்கள். நீர் கூறும்: "மறைவானவற்றின் அறிவு அல்லாஹ்விடமே உள்ளது. எனவே நீங்கள் எதிர்பாருங்கள். நானும் உங்களுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்". 21. மக்களைத் தீண்டிய துன்பத்திற்குப் பிறகு நாம் அவர்களுக்குக் கருணையை

*சுவைக்கச் செய்தால் அவர்கள் நம் சான்றுகள் விஷயத்தில் சூழ்ச்சி செய்ய ஆரம்பித்து விடுகிறார்கள். நீர் கூறும்: "சூழ்ச்சி செய்வதில் அல்லாஹ்வே விரைவானவன். நம் வானவர்கள் உங்களின் சூழ்ச்சிகளை பதிவுசெய்து கொண்டிருக்கிறார்கள்".*

***22.*** *அவனே நிலத்திலும், நீரிலும் உங்களைப் பயணிக்கச் செய்கிறான். எனவே நீங்கள் கப்பலில் பயணிக்கும்போது சாதகமான காற்று அதனை வழிநடத்திச் சென்றால் அதில் பயணிப்பவர்கள் மகிழ்ச்சியடைகிறார்கள். அப்போது திடீரென வீசும் புயல் காற்றால் அலைகள் அவர்களை நாலாபுறமும் தாக்கும்போது (ஆபத்தால்) சூழ்ந்து கொள்ளப்பட்டதாக அவர்கள் எண்ணிக் கொள்கிறார்கள். அச்சமயத்தில் அவர்கள் தங்கள் மார்க்கத்தை அல்லாஹ்வுக்கு மட்டுமே உரித்தாக்கிய வண்ணம் முழுமனதுடன் 'நீ எங்களை இதிலிருந்து காப்பாற்றினால் நிச்சயம் நாங்கள் நன்றியுள்ளவர்களாக ஆகி விடுவோம்' என்று பிரார்த்தனை செய்கிறார்கள்.* ***23.*** *ஆனால் அல்லாஹ் அவர்களைக் காப்பாற்றி விட்டால் பூமியில் அநியாயமாக வரம்பு மீறுகிறார்கள். "மக்களே, உங்களின் வரம்பு மீறல் உங்களுக்குத்தான் கேடாக அமையும். இவ்வுலக வாழ்வை அனுபவித்துக் கொள்ளுங்கள். பின்னர் நீங்கள் நம்மிடமே திரும்ப வேண்டும். அப்போது நீங்கள் செய்து கொண்டிருந்தவற்றை நாம் உங்களுக்கு அறிவிப்போம்".*

***24.*** *உலக வாழ்க்கையின் உதாரணம் வானிலிருந்து நாம் பொழியச் செய்கின்ற நீரைப் போன்றது. அதன்மூலம் மனிதர்களும், கால்நடைகளும் உண்ணக்கூடிய தாவரங்கள் செழித்து வளர்கின்றன. அவற்றால் பூமி தனது அழகைப்பெற்று அலங்கரித்துக் கொள்ளும்போது அதன் உரிமையாளர்கள் அது தங்களின் கட்டுப்பாட்டில் இருக்கிறது என்று எண்ணிக் கொள்கிறார்கள். அப்போது திடீரென இரவிலோ, பகலிலோ நம் கட்டளை வந்து*

*விடுகிறது. நாம் அங்கு நேற்றுவரை ஒன்றும் இல்லாததைப்போல் அதனை அழித்து விடுகிறோம். இவ்வாறு நாம் சிந்திக்கும் மக்களுக்கு சான்றுகளைத் தெளிவுபடுத்துகிறோம்.*

*25. அல்லாஹ் அமைதி இல்லத்திற்கு அழைக்கிறான். தான் நாடியோருக்கு அவன் நேர்வழிகாட்டுகிறான். 26. நன்மை செய்தோருக்கு நன்மையும் இன்னும் அதிகமான நன்மையும் உண்டு. அவர்களது முகங்களில் கவலையோ, இழிவோ படிந்துவிடாது. அவர்கள்தான் சுவனவாசிகள். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். 27. தீமைகளை சம்பாதித்துக் கொண்டோருக்கு அதைப்போன்ற தீமையே கூலியாகும். இழிவு அவர்களை சூழ்ந்திருக்கும். அவர்களை அல்லாஹ்விடமிருந்து காப்பாற்றுபவர் யாரும் இல்லை. அவர்களது முகங்கள் இருளான இரவின் பகுதிகளால் மூடப்பட்டதைப் போலிருக்கும். இவர்கள்தான் நரகவாசிகள். அதில் அவர்கள் என்றென்றும் வீழ்ந்து கிடப்பார்கள்.*

*28. அவர்கள் அனைவரையும் நாம் ஒன்றுதிரட்டும் நாளில் இணைவைத்தோரிடம், 'நீங்களும் உங்கள் இணைத்தெய்வங்களும் உங்கள் இடத்திலேயே நில்லுங்கள்' என்று கூறுவோம். அவர்களிடையே நாம் பிரிவை ஏற்படுத்தி விடுவோம். அப்போது அவர்களின் இணைத்தெய்வங்கள் 'நீங்கள் எங்களை வணங்கிக் கொண்டிருக்கவில்லை' என்று கூறுவார்கள். 29. எங்களுக்கும் உங்களுக்குமிடையே சாட்சி கூற அல்லாஹ்வே போதுமானவன். நீங்கள் எங்களை வணங்கியதை நாங்கள் அறவே அறியாதிருந்தோம். 30. அச்சமயத்தில் ஒவ்வொருவரும் தாம் செய்த செயல்களைக் கண்டுகொள்வார்கள். மக்கள் தங்கள் உண்மையான அதிபதியாகிய அல்லாஹ்வின்பக்கமே கொண்டு வரப்படுவார்கள். அவர்கள் புனைந்து கொண்டிருந்தவை யாவும் அவர்களை விட்டு மறைந்து விடும்.*

*31.* அவர்களிடம், “வானத்திலிருந்தும், பூமியிலிருந்தும் உங்களுக்கு உணவளிப்பவன் யார்? உங்களின் செவிகளும், கண்களும் யாருடைய கட்டுப்பாட்டில் உள்ளன? உயிரற்றதிலிருந்து உயிருள்ளதையும், உயிருள்ளதிலிருந்து உயிரற்றதையும் வெளிப்படுத்துபவன் யார்? விவகாரங்களை நிர்வகிப்பவன் யார்?” என்று நீர் கேளும். “அல்லாஹ்தான்” என்று அவர்கள் கூறுவார்கள். ‘அவ்வாறாயின் நீங்கள் அஞ்ச மாட்டீர்களா?’ என்று கேளும். *32.* எனவே அல்லாஹ்தான் உங்கள் உண்மையான இறைவன். நேர்வழிக்கு எதிரானதாக வழிகேட்டைத்தவிர வேறென்ன இருக்க முடியும்? நீங்கள் எங்கே திருப்பப்படுகிறீர்கள்? *33.* இவ்வாறு வரம்பு மீறுபவர்ளைப்பற்றி “அவர்கள் நம்பிக்கை கொள்ள மாட்டார்கள்” எனும் உமது இறைவனின் வாக்கு உண்மையாகி விட்டது.

*34.* நீர் கேளும்: “உங்கள் இணைத்தெய்வங்களில் முதலில் படைத்து, பின்னர் மீண்டும் அதனைப் படைப்பவர் யாராவது இருக்கிறார்களா?” நீர் கூறும்: “அல்லாஹ்வே முதலில் படைத்து பின்னர் மீண்டும் அதனைப் படைக்கிறான். நீங்கள் எங்கே வழிதவறிச் செல்கிறீர்கள்?”. *35.* நீர் கேளும்: “உங்கள் இணைத்தெய்வங்களில் சத்தியத்தின் பக்கம் வழிகாட்டுபவர் யாரேனும் இருக்கிறார்களா?”. நீர் கூறும்: “அல்லாஹ்வே சத்தியத்தின் பக்கம் வழிகாட்டுகிறான். சத்தியத்தின் பக்கம் வழிகாட்டுபவன் பின்பற்றத் தகுதியானவனா? அல்லது வழிகாட்டப்பட்டாலன்றி தானாக நேர்வழி பெற முடியாதவன் பின்பற்றத் தகுதியானவனா? உங்களுக்கு என்ன நேர்ந்து விட்டது? நீங்கள் எவ்வாறு தீர்ப்பளிக்கிறீர்கள்?”. *36.* அவர்களில் பெரும்பாலோர் யூகத்தைத்தான் பின்பற்றுகிறார்கள். யூகம் சத்திய விவகாரங்களில் எப்பயனையும் அளிக்காது. அவர்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவன்.

***37.*** இந்தக் குர்ஆன் அல்லாஹ் அல்லாதவர்களால் புனைந்துரைக்கப்பட்டதல்ல. மாறாக இது தனக்கு முன்னுள்ள முன்னறிவிப்புகளை உண்மைப்படுத்தக்கூடியதாகவும், அகிலங்களின் இறைவனிடமிருந்து வந்துள்ள சந்தேகமற்ற வேதத்தின் விளக்கமாகவும் உள்ளது. ***38.*** "அவரே இதனைச் சுயமாகப் புனைந்துகொண்டார்" என்று அவர்கள் கூறுகிறார்களா? நீர் கூறும்: "நீங்கள் உண்மையாளர்களாயின் இதுபோன்ற ஒரு அத்தியாயத்தைக் கொண்டு வாருங்கள். அல்லாஹ்வைத்தவிர நீங்கள் அழைக்க முடிந்தவர்களையெல்லாம் அழைத்துக் கொள்ளுங்கள்". ***39.*** மாறாக அவர்கள் தம் அறிவால் புரிந்துகொள்ள முடியாததையும், எதனுடைய உண்மை நிலையை அவர்கள் அறியவில்லையோ அதனையும் மறுத்து விட்டார்கள். இவ்வாறுதான் இவர்களுக்கு முன்னுள்ளவர்களும் மறுத்தார்கள். அநியாயக்காரரர்களின் முடிவு என்னவாயிற்று என்பதைப் பாரும்.

***40.*** அவர்களில் இந்தக் குர்ஆனை நம்புவோரும் இருக்கிறார்கள். இதனை நம்பாதோரும் இருக்கிறார்கள். குழப்பம் விளைவிப்போரை உம் இறைவன் நன்கறிவான். ***41.*** அவர்கள் உம்மைப் பொய்யர் எனக்கூறினால், "என் செயல் எனக்குரியது; உங்கள் செயல் உங்களுக்குரியது. நான் செய்பவற்றை விட்டும் நீங்கள் விலகிக்கொண்டீர்கள். நீங்கள் செய்பவற்றை விட்டும் நானும் விலகிக்கொண்டேன்" என்று நீர் கூறிவிடும். ***42.*** அவர்களில் சிலர் நீர் கூறுவதைக் கவனமாகக் கேட்கிறார்கள். விளங்கிக்கொள்ள முடியாத செவிடர்களை உம்மால் செவியுறச் செய்ய முடியுமா? ***43.*** அவர்களில் சிலர் உம்மைப் பார்க்கிறார்கள். நேர்வழியைப் பார்க்க முடியாத குருடர்களுக்கு உம்மால் வழிகாட்ட முடியுமா? ***44.*** அல்லாஹ் மனிதர்களுக்கு எவ்வித அநீதியும் இழைப்பதில்லை. ஆயினும் அவர்கள் தமக்குத்தாமே அநீதி இழைத்துக் கொள்கிறார்கள்.

*45.* அவர்களை அல்லாஹ் ஒன்றுதிரட்டும் நாளில் பகலின் சில மணித்துளிகளே உலகில் வாழ்ந்ததாக அவர்களுக்குத் தோன்றும். அவர்கள் ஒருவரையொருவர் அறிந்தும்கொள்வார்கள். அல்லாஹ்வின் சந்திப்பை மறுத்தவர்கள் நிச்சயமாக பேரிழப்பிற்குள்ளாகி விட்டார்கள். அவர்கள் நேர்வழி பெற்றவர்களாகவும் இருக்கவில்லை. *46.* நாம் அவர்களுக்கு எச்சரித்த வேதனையின் ஒரு பகுதியை உமக்குக் காட்டினாலோ அல்லது (அதற்கு முன்னர்) உம்மை மரணிக்கச் செய்தாலோ எவ்வாறாயினும் அவர்கள் நம்மிடமே திரும்ப வேண்டியுள்ளது. அவர்கள் செய்பவற்றிற்கு அல்லாஹ்வே சாட்சியாளன். *47.* ஒவ்வொரு சமூகத்திற்கும் ஒரு தூதர் இருக்கின்றார். அவர்களின் தூதர் வந்து விட்டால் அவர்களிடையே நீதியுடன் தீர்ப்பளிக்கப்பட்டுவிடும். அவர்கள் அநீதி இழைக்கப்பட மாட்டார்கள்.

*48.* "நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் இந்த வாக்குறுதி எப்போது நிறைவேறும்" என்று அவர்கள் கேட்கிறார்கள். *49.* நீர் கூறும்: "நான் எனக்குக்கூட பலனளிக்கவோ, தீங்கிழைக்கவோ சக்தி பெற மாட்டேன், ஆயினும் அல்லாஹ் நாடியதைத்தவிர". ஒவ்வொரு சமூகத்திற்கும் ஒரு தவணை உண்டு. அவர்களுக்கான தவணை வந்துவிட்டால் அவர்கள் சிறிது நேரம்கூட முந்தவோ, பிந்தவோ மாட்டார்கள். *50.* நீர் கேளும்: "நீங்களே கூறுங்கள், இறைவேதனை இரவிலோ, பகலிலோ உங்களை வந்தடைந்துவிட்டால் குற்றவாளிகள் அதற்குமுன் எப்படித் தப்பிக்க முடியும், என்பதை நீங்கள் கவனிக்கவில்லையா? *51.* அது உங்களைத் தாக்கும்போதுதான் அதனை நம்புவீர்களா?" இப்பொழுதுதான் நம்புகிறீர்களா? இதற்குத்தானே நீங்கள் அவசரப்பட்டுக் கொண்டிருந்தீர்கள்?!. *52.* பின்னர் அநியாயக்காரர்களிடம் கூறப்படும்: "நிரந்தர வேதனையைச்

சுவையுங்கள். நீங்கள் சம்பாதித்துக் கொண்டிருந்ததற்குத்தான் நீங்கள் கூலி கொடுக்கப்படுகிறீர்கள்".

**53.** இந்த விஷயம் உண்மைதானா? என்று அவர்கள் உம்மிடம் கேட்கிறார்கள். நீர் கூறும்: "ஆம், என் இறைவன்மீது ஆணையாக, அது உண்மையே. உங்களால் அவனிடமிருந்து தப்பிவிட முடியாது". **54.** அக்கிரமம் செய்த ஒவ்வொருவரும் தம்மிடம் பூமியிலுள்ள அனைத்தும் இருந்தாலும் அவற்றை ஈடாகக் கொடுத்து விடவே விரும்புவார்கள். அவர்கள் வேதனையைக் காணும்போது தம் உள்ளத்தில் பெரிதும் வருந்துவார்கள். அவர்களிடையே நீதமாகத் தீர்ப்பளிக்கப்படும். அவர்கள் அநீதி இழைக்கப்பட மாட்டார்கள். **55.** நினைவில் வையுங்கள்: வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்வுக்கே உரியன. நினைவில் வையுங்கள்: நிச்சயமாக அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானது. ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் அறிந்து கொள்வதில்லை. **56.** அவனே வாழ்க்கையையும், மரணத்தையும் அளிக்கிறான். நீங்கள் அனைவரும் அவனிடமே திரும்ப கொண்டுவரப்படுவீர்கள்.

**57.** மனிதர்களே! உங்கள் இறைவனிடமிருந்து உங்களுக்கு அறிவுரை வந்துள்ளது. அது உள்ளங்களில் உள்ளவற்றிற்கு நிவாரணமாகவும் நம்பிக்கையாளர்களுக்கு வழிகாட்டியாகவும், கருணையாகவும் இருக்கின்றது. **58.** நீர் கூறும்: "இது இறைவனின் அருளாலும், அவனது கருணையினாலும் உள்ளதாகும். எனவே அவர்கள் மகிழ்ச்சியடையட்டும். இது அவர்கள் சேர்த்து வைப்பவற்றைவிட சிறந்ததாகும்". **59.** நீர் கூறும்: "அல்லாஹ் உங்களுக்கு வழங்கிய உணவுப்பொருட்களில் சிலவற்றை தடுக்கப்பட்டதாகவும், சிலவற்றை அனுமதிக்கப்பட்டதாகவும் ஆக்கிக்கொண்டீர்களே". நீர் கேளும்: "அல்லாஹ்தான் உங்களுக்கு இவ்வாறு கட்டளை இட்டானா? அல்லது நீங்கள் அல்லாஹ்வின்மீது

இட்டுக்கட்டுகிறீர்களா?". *60.* அல்லாஹ்வின்மீது பொய்யைப் புனைபவர்கள் மறுமைநாளைப் பற்றி என்னதான் நினைக்கிறார்கள்? நிச்சயமாக அல்லாஹ் மனிதர்களின்மீது பெரும் கிருபையுடையவன். ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் நன்றி செலுத்துவதில்லை.

*61.* நீர் எந்த நிலையில் இருந்தாலும், குர்ஆனிலிருந்து எந்தப் பகுதியை எடுத்துரைத்தாலும், நீங்கள் எந்தச் செயலில் ஈடுபட்டுக் கொண்டிருந்தாலும், நாம் உங்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறோம், பூமியிலும், வானத்திலும் உள்ளவற்றில் ஒரு அணுவளவுகூட உம் இறைவனைவிட்டும் மறைவானதாக இல்லை. அதைவிட சிறியதோ, பெரியதோ அனைத்தும் ஒரு தெளிவான பதிவேட்டில் பதியப்படாமல் இல்லை.

*62.* அறிந்துகொள்ளுங்கள்! இறைநேசர்களுக்கு எவ்வித அச்சமும் இல்லை. அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள். *63.* அவர்கள்தான் நம்பிக்கைகொண்டு இறைவனை அஞ்சி நடப்பவர்கள். *64.* அவர்களுக்கு இவ்வுலக வாழ்விலும், மறுமையிலும் நற்செய்தி உள்ளது. இறைவாக்குகளில் எவ்வித மாற்றமும் இல்லை. இதுதான் மாபெரும் வெற்றியாகும். *65.* அவர்களின் பேச்சு உம்மைக் கவலையில் ஆழ்த்திவிட வேண்டாம். கண்ணியம் அனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியது, அவன் செவியேற்பவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான்.

*66.* அறிந்துகொள்ளுங்கள்! வானங்களிலும், பூமியிலும் உள்ளவர்கள் அனைவரும் அல்லாஹ்வுக்கே உரியவர்கள். அல்லாஹ்வைத்தவிர வேறு இணைத்தெய்வங்களை அழைப்பவர்கள் எதைப் பின்பற்றுகிறார்கள்? அவர்கள் வெறும் யூகங்களைத்தான் பின்பற்றுகிறார்கள்; கற்பனைகளில் மூழ்கிக் கிடக்கிறார்கள். *67.* அவனே இரவை நீங்கள் அமைதி பெறுவதற்காகவும்

(அனைத்தையும் பார்க்கும்படி) பகலைப் பிரகாசமானதாகவும் ஆக்கினான். நிச்சயமாக செவியேற்கும் மக்களுக்கு இதில் சான்றுகள் இருக்கின்றன.

*68.* "அல்லாஹ் தனக்கு ஒரு மகனை ஏற்படுத்திக் கொண்டான்" என்று அவர்கள் கூறுகிறார்கள். அவன் தூய்மையானவன்; தேவைகளற்றவன். வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அவனுக்கே உரியவை. உங்களிடம் இதற்கான ஆதாரம் எதுவுமில்லை. நீங்கள் அறியாத ஒரு விஷயத்தை அல்லாஹ்வின்மீது இட்டுக்கட்டி கூறுகிறீர்களா? *69.* நீர் கூறும்: "அல்லாஹ்வின் மீது பொய்யை இட்டுக்கட்டுவோர் வெற்றி பெற மாட்டார்கள்". *70.* அவர்கள் இவ்வுலகில் கொஞ்சம் அனுபவித்துக் கொள்ளலாம். ஆனால் நம்மிடமே அவர்கள் திரும்பி வரவேண்டும். பின்னர் அவர்களின் நிராகரிப்பினால் கடுமையான வேதனையை நாம் அவர்களைச் சுவைக்கச் செய்வோம்.

*71.* அவர்களுக்கு நோவாவின் வரலாற்றைக் கூறுவீராக. அவர் தம் சமூகத்திடம், "என் சமூகமே, நான் இங்கு இருப்பதும், இறைவசனங்களின் மூலம் அறிவுறுத்துவதும் உங்களுக்குப் பாரமாக இருக்குமென்றால், நான் அல்லாஹ்வையே சார்ந்துள்ளேன். நீங்கள் ஒருமித்து தீர்மானித்துக்கொள்ளுங்கள், உங்கள் இணைத்தெய்வங்களையும் சேர்த்துக்கொள்ளுங்கள். உங்கள் தீர்மானத்தில் எவ்விதக் குறையும் இருக்க வேண்டாம். பின்னர் என் விஷயத்தில் செய்ய விரும்புவதைச் செய்து கொள்ளுங்கள். எனக்கு அவகாசமும் அளிக்க வேண்டாம். *72.* நீங்கள் புறக்கணித்தால் நினைவில் வையுங்கள், நான் உங்களிடம் எந்தக் கூலியையும் கேட்கவில்லை. எனது கூலி அல்லாஹ்விடமே உள்ளது. நான் கீழ்ப்படிந்தோரில் இருக்க வேண்டும் என்றே கட்டளையிடப்பட்டுள்ளேன்" என்று கூறினார். *73.* அவர்கள்

அவரை மறுத்து விட்டார்கள். எனவே நாம் அவரையும், அவருடன் கப்பலில் இருந்தவர்களையும் காப்பாற்றி அவர்களை சந்ததிகளாக ஆக்கினோம். நம் சான்றுகளை மறுத்தவர்களை மூழ்கடித்து விட்டோம். எச்சரிக்கப்பட்டோரின் முடிவு என்ன ஆயிற்று என்பதைப் பாரும்.

74. நாம் அவருக்குப்பின் பல தூதர்களை அவர்களது சமூகங்களின் பக்கம் அனுப்பி வைத்தோம். அவர்கள் தெளிவான சான்றுகளைத் தம் மக்களிடம் கொண்டு வந்தார்கள். ஆயினும் அவர்கள் இதற்கு முன்னர் மறுத்தவற்றின் மீது நம்பிக்கை கொள்வதாக இல்லை. இவ்வாறே நாம் வரம்புமீறியோரின் உள்ளங்களில் முத்திரையிட்டு விடுகிறோம்.

75. அவர்களுக்குப்பின் பாரோவிடமும் அவனது பிரமுகர்களிடமும் நம் சான்றுகளுடன் மோசேவையும், ஆரோனையும் அனுப்பி வைத்தோம். ஆனால் அவர்கள் ஆணவம் கொண்டார்கள். அவர்கள் குற்றவாளிகளாகவே இருந்தார்கள். 76. நம்மிடமிருந்து சத்தியம் அவர்களை வந்தடைந்தபோது ‘இது தெளிவான சூனியமே’ என்று அவர்கள் கூறினார்கள். 77. அதற்கு மோசே, “உங்களிடம் வந்துள்ள சத்தியத்தையா சூனியம் என்கிறீர்கள்? இது என்ன சூனியமா? உண்மையில் சூனியக்காரர்கள் வெற்றி பெறுவதில்லை” என்று கூறினார். 78. அதற்கு அவர்கள், “எங்கள் முன்னோர்களை எவ்வழியில் கண்டோமோ அவ்வழியிலிருந்து எங்களைத் திருப்பி இந்த நாட்டில் உங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டத்தான் நீர் எங்களிடம் வந்துள்ளீரா? நாங்கள் ஒருபோதும் உங்கள் இருவரையும் நம்ப மாட்டோம்” என்று கூறினார்கள்.

79. பாரோ, “திறமையான சூனியக்காரர்கள் அனைவரையும் என்னிடம் கொண்டு வாருங்கள்” என்று கூறினான். 80.

சூனியக்காரர்கள் வந்தபோது மோசே அவர்களிடம், "நீங்கள் போடுவதைப் போடுங்கள்" என்றார். *81.* அவர்கள் போட்டபோது, மோசே, "நீங்கள் செய்துகாட்டியவை அனைத்தும் சூனியமே. நிச்சயமாக அல்லாஹ் அவற்றை அழித்து விடுவான். அல்லாஹ் குழப்பவாதிகளின் செயலைச் சீராக்க மாட்டான்" என்று கூறினார். *82.* தன் கட்டளையினால் அல்லாஹ் சத்தியத்தை சத்தியம் என காட்டி விடுகிறான், குற்றவாளிகளுக்கு அது எவ்வளவு வெறுப்பாக இருந்தாலும் சரியே! *83.* பாரோவும், தம் சமூகத்துப் பிரமுகர்களும் தங்களைத் துன்புறுத்துவார்கள் என்ற அச்சத்தால் மோசேயின் சமூகத்தில் சில இளைஞர்களைத்தவிர வேறு யாரும் அவர்மீது நம்பிக்கை கொள்ளவில்லை. நிச்சயமாக பாரோ பூமியில் ஆதிக்கம் கொண்டவனாகவும், வரம்பு மீறுபவனாகவும் இருந்தான். *84.* "என் சமூகமே! நீங்கள் அல்லாஹ்வின்மீது நம்பிக்கைகொண்டு அவனுக்கே கட்டுப்படுபவர்களாக இருந்தால் அவனையே முழுமையாகச் சார்ந்திருங்கள்" என்று மோசே கூறினார். *85.* அதற்கு அவர்கள், "நாங்கள் அல்லாஹ்வையே சார்ந்துள்ளோம். எங்கள் இறைவா! அநியாயக்கார மக்களுக்கு எங்களை ஒரு சோதனையாக ஆக்கி விடாதே. *86.* உனது கருணையினால் எங்களை நிராகரிக்கும் மக்களை விட்டும் காப்பாற்றுவாயாக" என்று கூறினார்கள்.

*87.* மோசேவுக்கும் அவரது சகோதரருக்கும், "உங்கள் சமூகத்திற்காக எகிப்தில் வீடுகளை அமைத்து உங்கள் வீடுகளையே முன்னோக்கும் திசையாக ஆக்கிக்கொள்ளுங்கள். தொழுகையைக் கடைப்பிடியுங்கள். நம்பிக்கையாளர்களுக்கு நற்செய்தி கூறிவிடுங்கள்" என்று நாம் அறிவித்தோம்.

*88.* "எங்கள் இறைவா! நீ பாரோவுக்கும், அவனது பிரமுகர்களுக்கும் இவ்வுலக வாழ்வில் அலங்காரத்தையும், செல்வங்களையும் வழங்கியுள்ளாய். எங்கள் இறைவா, அவை,

உன் பாதையைவிட்டு மக்களை அவர்கள் வழிகெடுப்பதற்காகவா? எங்கள் இறைவா! அவர்களின் செல்வங்களை அழித்து விடுவாயாக! அவர்கள் துன்புறுத்தும் வேதனையைக் காணும்வரை நம்பிக்கை கொள்ளாதவாறு அவர்களின் உள்ளங்களை கடினமாக்கி விடுவாயாக!" என்று மோசே பிரார்த்தனை செய்தார். 89. அதற்கு அல்லாஹ், "உங்கள் இருவரின் பிரார்த்தனையும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. எனவே நீங்கள் உறுதியாக இருங்கள். அறியாதவர்களின் வழியை ஒருபோதும் பின்பற்றாதீர்கள்" என்று கூறினான்.

90. இஸ்ராயீலின் மக்களை நாம் கடலைக் கடக்கச் செய்தோம். பாரோவும், அவனது படைகளும் அநியாயமும், அக்கிரமமும் இழைப்பதற்காக அவர்களைப் பின்தொடர்ந்தார்கள். இறுதியில் பாரோ மூழ்கும்போது, "இஸ்ராயீலின் மக்கள் யார் மீது நம்பிக்கை கொண்டார்களோ அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை என்று நானும் நம்பிக்கை கொண்டேன். அவனைக் கீழ்ப்படிவோர்களில் நானும் ஒருவனாக இருக்கிறேன்" என்று கூறினான். 91. இப்போதுதானா நம்பிக்கை கொள்கிறாய்? இதற்கு முன்னர் நீ மாறுசெய்து குழப்பம் விளைவிப்போரில் ஒருவனாக இருந்தாயே! 92. எனவே உனக்குப் பின்னால் வருவோர்க்கு ஒரு அத்தாட்சியாகத் திகழும்பொருட்டு இன்றைய தினம் உனது உடலை நாம் பாதுகாப்போம். நிச்சயமாக மக்களில் பெரும்பாலோர் நம் சான்றுகளைவிட்டும் அலட்சியமாகவே இருக்கிறார்கள்.

93. இஸ்ராயீலின் மக்களை நாம் மிகச்சிறந்த இடத்தில் வசிக்கச் செய்தோம். அவர்களுக்குத் தூய்மையான உணவுகளை உண்ணக் கொடுத்தோம். அவர்களிடம் அறிவு (வேதம்) வந்தபின்னரே அவர்கள் முரண்பட்டார்கள். அவர்கள் முரண்பட்டவற்றில் மறுமைநாளன்று அவர்களிடையே உம் இறைவன் தீர்ப்பளித்திடுவான்.

*94.* நாம் உமக்கு அருளியுள்ளதைக் குறித்து நீர் சந்தேகத்தில் இருப்பீரானால் உமக்கு முன்னர் வேதத்தை வாசித்துக் கொண்டிருப்போரிடம் கேட்டுப்பாரும். நிச்சயமாக உமக்கு உமது இறைவனிடமிருந்து சத்தியம் வந்துள்ளது. எனவே நீர் சந்தேகம் கொள்வோரில் ஒருவராகி விடாதீர். *95.* இறைவசனங்களை மறுத்தோருடன் நீர் இணைந்துவிடாதீர். அவ்வாறாயின் பேரிழப்பிற்குரியவராகி விடுவீர்.

*96.* நிச்சயமாக எவரெவர் மீது உம் இறைவனின் வாக்கு உறுதியாகி விட்டதோ அவர்கள் நம்பிக்கைகொள்ள மாட்டார்கள். *97.* அனைத்து அத்தாட்சிகளும் அவர்களிடம் வந்துவிட்டாலும் துன்புறுத்தும் வேதனையைக் காணும்வரை அவர்கள் நம்பிக்கை கொள்ள மாட்டார்கள். *98.* ஜோனாவின் சமூகத்தைத்தவிர வேறு ஊரிலிருந்த மக்களும் கொண்டிருந்த நம்பிக்கை ஏன் அவர்களுக்குப் பயனளிக்கவில்லை? அவர்கள் நம்பிக்கை கொண்டபோது இவ்வுலக வாழ்வில் இழிவுதரும் வேதனையை நாம் அவர்களைவிட்டும் நீக்கினோம். குறிப்பிட்ட காலகட்டம்வரை அவர்களை சுகம் அனுபவிக்கச் செய்தோம்.

*99.* உம் இறைவன் நாடியிருந்தால் உலகிலுள்ள அனைவரும் நம்பிக்கை கொண்டிருப்பார்கள். நீர் மக்களை நம்பிக்கை கொள்ளும்படி நிர்ப்பந்தப்படுத்துவீரா என்ன? *100.* அல்லாஹ்வின் அனுமதியின்றி எவரும் நம்பிக்கை கொண்டுவிட முடியாது. அறிவைப் பயன்படுத்தாத மக்களிடம் அல்லாஹ் (சந்தேகம் எனும்) அசுத்தத்தை உண்டாக்கி விடுகிறான்.

*101.* நீர் கூறும்: “வானங்களிலும், பூமியிலும் உள்ளவற்றைக் கவனித்துப் பாருங்கள். நம்பிக்கைகொள்ளாத மக்களுக்கு சான்றுகளும், எச்சரிக்கைகளும் எந்தப் பயனையும் அளித்து

*விடாது". **102.** இவர்களுக்கு முன்சென்றோர் அனுபவித்த வேதனையைப்போன்ற வேதனையைத்தான் இவர்கள் எதிர்பார்க்கிறார்களா? நீர் கூறும்: "எதிர்பாருங்கள், நானும் உங்களுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்". **103.** பின்னர் நாம் நம் தூதர்களையும், நம்பிக்கையாளர்களையும் காப்பாற்றி விடுகின்றோம். இவ்வாறு நம்பிக்கையாளர்களைக் காப்பாற்றுவது நமது கடமையாகும்.*

*104. நீர் கூறும்: "மக்களே, எனது மார்க்கத்தைக் குறித்து நீங்கள் சந்தேகத்தில் இருப்பீர்களானால் (அறிந்துகொள்ளுங்கள்) அல்லாஹ்வைத்தவிர நீங்கள் வணங்குபவற்றை நான் வணங்க மாட்டேன். மாறாக உங்களை மரணிக்கச் செய்பவனான அல்லாஹ்வையே நான் வணங்குவேன். நம்பிக்கையாளர்களில் ஒருவனாக நான் இருக்க வேண்டும் என்றும் **105.** எனது முகத்தை முழு நம்பிக்கையுடன் நேரான மார்க்கத்தின் பக்கமே திருப்ப வேண்டும் என்றும் இணைவைப்பாளர்களில் ஒருவனாகி விடக்கூடாது என்றும் நான் கட்டளையிடப்பட்டுள்ளேன்". **106.** அல்லாஹ்வைத்தவிர உமக்குப் பலனையோ, தீங்கையோ அளிக்க இயலாதவற்றை நீர் அழைக்காதீர். நீர் அவ்வாறு செய்தீரானால் அநியாயக்காரர்களில் உள்ளவராவீர். 107. அல்லாஹ் ஏதேனும் ஒரு துன்பத்தை உமக்கு ஏற்படுத்தினால் அவனைத்தவிர அதனை நீக்குபவர் யாருமில்லை. அவன் உமக்கு ஏதேனும் நன்மையை அளிக்க நாடினால் அவனது அருளைத் தடுப்பவர் யாருமில்லை; தன் அடியார்களில் தான் நாடியோருக்கு அதனை வழங்குகிறான்; அவன் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.*

*108. நீர் கூறும்: "மக்களே! உங்கள் இறைவனிடமிருந்து சத்தியம் உங்களிடம் வந்து விட்டது. ஆகவே யாரேனும்*

நேர்வழியை ஏற்றுக்கொண்டால் அது அவருக்கே நன்மை பயக்கும். எவர் வழிதவறிச் செல்கிறாரோ அவர் தமக்குக் கேட்டை ஏற்படுத்திக் கொள்ளவே வழிதவறிச் செல்கிறார். நான் உங்களுக்குப் பொறுப்பாளன் அல்லன்". *109.* உமக்கு அறிவிக்கப்படுவதைப் பின்பற்றுவீராக. அல்லாஹ் தீர்ப்பளிக்கும்வரை பொறுமையுடன் இருப்பீராக. அவனே தீர்ப்பளிப்பவர்களில் மிகச் சிறந்தவன்.

## *11.* ஹூத்

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

*1.* அலிஃப். லாம். ரா. இது வேதமாகும். யாவற்றையும் அறிந்த ஞானம்மிக்கவனால் இதன் வசனங்கள் உறுதி செய்யப்பட்டு பின்னர் தெளிவாக்கப்பட்டுள்ளது. *2.* நீங்கள் அல்லாஹ்வைத்தவிர வேறு யாரையும் வணங்காதீர்கள். நான் அவன் புறத்திலிருந்து உங்களை எச்சரிப்பவனாகவும், நற்செய்தியாளனாகவும் இருக்கின்றேன். *3.* நீங்கள் உங்கள் இறைவனிடம் மன்னிப்புக்கோரி அவனிடமே மீண்டு விடுங்கள். அவன் குறிப்பிட்ட காலகட்டம்வரை நல்லமுறையில் உங்களை சுகம் அனுபவிக்கச் செய்வான். தகுதியான ஒவ்வொருவருக்கும் தன்னிடமிருந்து அதிகம் வழங்குவான். நீங்கள் புறக்கணித்தால் - நான் உங்கள்மீது மாபெரும் நாளின் வேதனையை அஞ்சுகிறேன். *4.* நீங்கள் அனைவரும் அல்லாஹ்வின் பக்கமே திரும்ப வேண்டும். அவன் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவன்.

*5.* பாருங்கள், அவர்கள் அல்லாஹ்விடமிருந்து மறைத்துக் கொள்வதற்காக எப்படி தங்கள் நெஞ்சங்களை மூடிக் கொள்கிறார்கள். எச்சரிக்கை! அவர்கள் தங்களை ஆடைகளால் போர்த்திக் கொண்டாலும் அவர்கள் மறைப்பதையும், வெளிப்படுத்துவதையும் அல்லாஹ் நன்கறிவான். அவன் உள்ளங்களில் உள்ளவற்றையும் நன்கறிந்தவன். *6.* பூமியில் உள்ள உயிரினங்கள் அனைத்திற்கும்

உணவளிப்பது அல்லாஹ்வின் கடமையாகும். அவற்றின் தங்குமிடத்தையும், அவை சென்றடையும் இடத்தையும் அவன் அறிவான். அனைத்தும் ஒரு தெளிவான பதிவேட்டில் உள்ளது.

7. அவனே வானங்களையும், பூமியையும் ஆறுநாட்களில் (காலகட்டங்களில்) படைத்தான். அது உங்களில் நற்செயல் புரிபவர் யார் என்பதை சோதிப்பதற்காகத்தான். (அதற்கு முன்னர்) அவனது அரியணை நீரின் மீதிருந்தது. "மரணித்த பின்னர் நீங்கள் எழுப்பப்படுவீர்கள்" என்று நீர் கூறினால், "இது தெளிவான சூனியமே" என்று நிராகரிப்பாளர்கள் கூறுவார்கள். 8. ஒரு குறிப்பிட்ட காலம்வரை நாம் அவர்களின் வேதனையைத் தாமதப்படுத்தினால் 'எது அதனைத் தடுத்துள்ளது?' என்று அவர்கள் கேட்கிறார்கள். அறிந்து கொள்ளுங்கள், அது அவர்களை வந்தடையும்நாளில் அவர்களைவிட்டும் தடுக்கப்படாது. எதனை அவர்கள் பரிகாசம் செய்து கொண்டிருந்தார்களோ அதுவே அவர்களைச் சூழ்ந்துகொள்ளும்.

9. நாம் மனிதனுக்கு நம்மிடமிருந்து ஏதேனும் அருளை வழங்கி பின்னர் அதனை அவனிடமிருந்து பறித்துக்கொண்டால் அவன் நம்பிக்கை இழந்து, நன்றிகெட்டவனாகி விடுகிறான். 10. அவனுக்கு ஏற்பட்ட துன்பத்திற்குப்பின் அவனுக்கு நாம் கருணை காட்டினால் 'எல்லாத் துன்பங்களும் என்னைவிட்டு நீங்கி விட்டன' என்று அவன் கூறுகிறான். அவன் பூரிப்பில் திளைத்தவனாகவும், கர்வம் கொண்டவனாகவும் ஆகிவிடுகிறான். 11. ஆயினும் பொறுமையை மேற்கொண்டு நற்செயல்கள் புரிந்தவர்களைத் தவிர. அவர்களுக்கு மன்னிப்பும், பெரும் கூலியும் உண்டு.

12. 'இவருக்கு ஒரு பொக்கிஷம் அருளப்பட்டிருக்க வேண்டாமா? அல்லது இவருடன் ஒரு வானவர் வந்திருக்க வேண்டாமா?' என்று அவர்கள் கூறுவதால் உமக்கு

*அறிவிக்கப்பட்டவற்றில் சிலவற்றை நீர் விட்டுவிடுவீர் போலும், அதனால் உமது மனம் இறுகிவிடும் போலும். நீர் எச்சரிக்கை செய்பவர்தான். அல்லாஹ்வே அனைத்திற்கும் பொறுப்பாளனாக இருக்கின்றான். 13.* "தூதர்தான் இவ்வேதத்தைப் புனைந்துள்ளார்" என்று அவர்கள் கூறுகிறார்கள். நீர் கூறும்: "நீங்கள் உண்மையாளர்களாயின் இதுபோன்ற பத்து அத்தியாயங்களையேனும் புனைந்துகொண்டு வாருங்கள். அல்லாஹ்வைத்தவிர உங்களால் அழைக்க முடிந்தவர்களை எல்லாம் அழைத்துக் கொள்ளுங்கள்". *14.* அவர்கள் உங்களுக்கு பதிலளிக்காவிட்டால் "இது அல்லாஹ்வின் அறிவைக்கொண்டே அருளப்பட்டுள்ளது. அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை" என்பதை அறிந்துகொள்ளுங்கள். இனியாவது நீங்கள் அடிபணிவீர்களா?

*15.* இவ்வுலக வாழ்வையும், அதன் அலங்காரத்தையும் விரும்புவோருக்கு நாம் இவ்வுலகிலேயே அவர்களின் செயல்களுக்குரிய கூலியை முழுமையாக வழங்கிடுவோம். அதில் அவர்களுக்கு எவ்விதக் குறையும் வைக்கப்படாது. *16.* ஆனால் இவர்களுக்கு மறுமையில் நரக நெருப்பைத்தவிர வேறொன்றும் இருக்காது. அங்கு அவர்கள் செய்தவை யாவும் நாசமாகி விடும். அவர்கள் சம்பாதித்தவை யாவும் வீணாகி விடும்.

*17.* ஒருவர் தம் இறைவனிடமிருந்து தெளிவான சான்றுடன் உள்ளார். அதன் பின்னர் அவனிடமிருந்து அவருக்கு ஒருவர் சாட்சியாக வந்துவிட்டார். இதற்கு முன்னர் மோசேயின் வேதம் வழிகாட்டியாகவும், கருணையாகவும் இருந்தது. (இத்தகையவர் நிராகரிப்பவரைப் போலாவாரா?) இத்தகைய மக்கள்தான் இதன்மீது நம்பிக்கை கொள்கிறார்கள். மக்களில் இதனை நிராகரிப்போருக்கு நரகமே வாக்களிக்கப்பட்ட இடமாகும். எனவே நீர் இது குறித்து சந்தேகம் கொள்ளாதீர். இது உமது இறைவனிடமிருந்து வந்த

*சத்தியமாகும். ஆயினும் மக்களில் பெரும்பாலோர் நம்பிக்கை கொள்வதில்லை.*

*18. அல்லாஹ்வின்மீது பொய்யைப் புனைபவனைவிட மிகப்பெரிய அநியாயக்காரன் யார்? அத்தகையவர்கள் தம் இறைவனுக்கு முன்னால் நிறுத்தப்படுவார்கள். அப்போது சாட்சியாளர்கள் 'இவர்கள்தான் தம் இறைவனின் மீது பொய்யுரைப்பவர்கள்' என்று கூறுவார்கள். அறிந்துகொள்ளுங்கள். அநியாயக்காரர்களின்மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகும். 19. அவர்கள் இறைவழியைவிட்டும் மக்களைத் தடுத்து அதில் குறைகளைத் தேடுகிறார்கள். இவர்கள்தான் மறுமையை மறுப்பவர்கள். 20. இவர்களால் பூமியில் அல்லாஹ்விடமிருந்து தப்பிக்க முடியாது. அவனைத்தவிர இவர்களுக்கு வேறு உதவியாளர்களும் இல்லை. இவர்களுக்கு இரு மடங்கு வேதனையளிக்கப்படும். இவர்களால் செவியேற்கவோ, பார்க்கவோ இயலாது. 21. இவர்கள்தான் தம்மைத்தாமே இழப்புக்கு ஆளாக்கிக் கொண்டவர்கள். இவர்கள் புனைந்தவை யாவும் இவர்களை விட்டும் மறைந்து விட்டன. 22. உறுதியாக இவர்கள்தான் மறுமையில் பேரிழப்பிற்குரியவர்கள்.*

*23. நம்பிக்கைகொண்டு, நற்செயல்கள் புரிந்து, தங்கள் இறைவனுக்குப் பணிபவர்கள்தான் சொர்க்கவாசிகள். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள்*. 24. அவ்விரு பிரிவினருக்கும் உதாரணம், ஒருவன் குருடனாகவும் செவிடனாகவும் மற்றொருவன் பார்ப்பவனாகவும் கேட்பவனாகவும் இருப்பதைப்*

---

*உண்மை, பணிவு மற்றும் நற்செயல்கள் ஆகிய மூன்றும் ஒரே தன்மையுடையவே. உண்மை (இறைநம்பிக்கை) என்பது இறைவனை மனோரீதியாக கண்டடைதலாகும். பணிவுடைமை என்பது இறைவனைக் கண்டடைந்ததன் விளைவாக ஒருவரின் மனதில் உருவாவதாகும்.

*போன்றதாகும். அவ்விருவரும் சமமாகிவிட முடியுமா? நீங்கள் சிந்திக்க மாட்டீர்களா?*

*25. நாம் நோவாவை அவரது சமூகத்திடம் அனுப்பினோம். அவர், "நான் உங்களைப் பகிரங்கமாக எச்சரிப்பவனாக இருக்கின்றேன். 26. நீங்கள் அல்லாஹ்வைத்தவிர வேறு யாரையும் வணங்கக்கூடாது. நான் உங்கள் விஷயத்தில் துன்புறுத்தும் நாளின் வேதனையை அஞ்சுகிறேன்" என்று கூறினார். 27. அவரது சமூகத்திலுள்ள நிராகரித்த பிரமுகர்கள், "நாங்கள் உம்மை எங்களைப்போன்ற ஒரு மனிதராகவே காண்கிறோம். எங்களில் அறிவற்ற இழிவானவர்களே உம்மைப் பின்பற்றுவதையும் காண்கிறோம். எங்களைவிட உங்களுக்கு எந்தச் சிறப்பும் இருப்பதாக எங்களுக்குத் தெரியவில்லை. மாறாக உங்களைப் பொய்யர்களாகவே நாங்கள் கருதுகிறோம்" என்று கூறினார்கள்.*

*28. அதற்கு அவர், "என் சமூகமே, நீங்கள் கவனித்தீர்களா? நான் என் இறைவனிடமிருந்துள்ள தெளிவான ஆதாரத்தின்மீதிருந்து அவன் தன்னிடமிருந்து எனக்கு அருளையும் வழங்கியிருந்து ஆனால் அது உங்கள் கண்களுக்குப் புலப்படாமல் இருக்குமானால் - நீங்கள் அதனை வெறுப்பவர்களாக இருக்க -அதனை உங்கள்மீது நிர்ப்பந்திக்கவா முடியும்? 29. என் சமூகமே! நான் இதற்காக உங்களிடம் எந்தப் பொருளையும் கேட்கவில்லை. எனது கூலி அல்லாஹ்விடமே உள்ளது. நம்பிக்கையாளர்களை நான் ஒருபோதும் விரட்ட மாட்டேன். அவர்கள் தங்கள் இறைவனை சந்திக்கக்கூடியவர்கள். ஆனால் உங்களைத்தான் அறிவற்ற சமூகமாகக் காண்கிறேன். 30. என் சமூகமே! நான் அவர்களை விரட்டிவிட்டால் (இறைவன் என்னைத் தண்டிக்கும்போது) அவனுக்கு எதிராக எனக்கு உதவுபவர் யார்? நீங்கள் சிந்திக்க மாட்டீர்களா? 31. என்னிடம் அல்லாஹ்வின் கருவூலங்கள் இருப்பதாகவோ, நான்*

மறைவானவற்றை அறிவேன் என்றோ உங்களிடம் கூற மாட்டேன். நான் ஒரு வானவர் என்றோ, உங்கள் பார்வையில் இழிவாகத் தோன்றுபவர்களுக்கு அல்லாஹ் ஒருபோதும் நன்மையை அளிக்க மாட்டான் என்றோ உங்களிடம் கூறமாட்டேன். அவர்களது உள்ளங்களில் உள்ளவற்றை அல்லாஹ்வே நன்கறிவான். நான் அவ்வாறு கூறினால் அநியாயக்காரர்களில் ஒருவராகி விடுவேன்" என்று கூறினார்.

**32.** அதற்கு அவர்கள், "நோவாவே! நீ எங்களுடன் தர்க்கம்செய்து விட்டாய். அதிகமாகவே தர்க்கம் செய்துவிட்டாய். நீ உண்மையாளனாக இருந்தால் நீ எங்களுக்கு எச்சரிப்பதை எங்களிடம் கொண்டு வா" என்று கூறினார்கள். **33-34.** அதற்கு அவர், "அல்லாஹ் நாடினால் அவனே உங்களிடம் கொண்டு வருவான். நீங்கள் அவனது பிடியிலிருந்து தப்பிவிட முடியாது. அல்லாஹ் உங்களை வழிகெடுக்க நாடிவிட்டால், நான் உங்களுக்கு உபதேசிக்க விரும்பினாலும் எனது உபதேசம் உங்களுக்குப் பயன்தராது. அவனே உங்கள் இறைவன், அவனிடமே நீங்கள் திரும்ப வேண்டும்" என்று கூறினார்.

**35.** 'தூதர்தான் இதனைப் புனைந்துள்ளார்' என்று கூறுகிறார்களா? நீர் கூறும்: "இதனை நான் புனைந்திருந்தால் என் குற்றம் என்னையே சாரும். நீங்கள் செய்யும் குற்றங்களைவிட்டும் நான் விலகிக் கொண்டேன்".

**36.** "ஏற்கனவே நம்பிக்கை கொண்டவர்களைத்தவிர உமது சமூகத்தாரில் இனி யாரும் நம்பிக்கை கொள்ள மாட்டார்கள். எனவே நீர் அவர்களின் செயல்களுக்காகக் கவலைப்படாதீர். **37.** நம்முடைய கண்காணிப்பில் நம் கட்டளைக்கேற்ப நீர் ஒரு கப்பலை நிர்மாணிப்பீராக. அநியாயக்காரர்களைக் குறித்து

என்னிடம் பேசாதீர். நிச்சயமாக அவர்கள் மூழ்கடிக்கப்படுவார்கள்" என்று நோவாவிற்கு அறிவிக்கப்பட்டது. **38.** அவர் கப்பலை நிர்மாணிக்கத் தொடங்கினார். அவரது சமூகத்தைச் சார்ந்த பிரமுகர்கள் அவரைக் கடந்து செல்லும்போதெல்லாம் அவரைக் கேலி செய்வார்கள். அவர் கூறினார்: "நீங்கள் எங்களைக் கேலி செய்தால் நீங்கள் கேலி செய்வதைப்போல நாங்களும் உங்களைக் கேலி செய்வோம். **39.** இழிவுபடுத்தும் வேதனை யாரை வந்தடையும் என்பதையும் நிலையான வேதனை யார்மீது இறங்கும் என்பதையும் நீங்கள் விரைவில் அறிந்துகொள்வீர்கள்".

**40.** இறுதியில் நம் கட்டளை வந்து விட்டது. வெள்ளம் பொங்கியது. அப்போது நாம் நோவாவிடம், "அனைத்துவகை உயிரினங்களிலிருந்தும் இரு இணைகளையும், உமது குடும்பத்தினரையும் - யாரைக் குறித்து முன்னரே கூறப்பட்டு விட்டதோ அவர்களைத்தவிர - நம்பிக்கையாளர்கள் அனைவரையும் ஏற்றிக்கொள்வீராக" என்று கூறினோம். குறைவான மக்களே அவருடன் நம்பிக்கை கொண்டிருந்தார்கள். **41.** நோவா, "கப்பலில் ஏறிக்கொள்ளுங்கள். அது செல்வதும், நிலைகொள்வதும் அல்லாஹ்வின் பெயர் கொண்டேயாகும். நிச்சயமாக என் இறைவன் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்" என்று கூறினார். **42.** அது மலைகளைப்போன்ற அலைகளுக்கிடையே அவர்களைக் கொண்டு சென்றது. அப்போது அவர் தன்னைவிட்டும் விலகி இருந்த தம் மகனை அழைத்து, "என் மகனே, எங்களுடன் வந்து ஏறிக்கொள், நிராகரிப்பாளர்களுடன் இருந்து விடாதே!" என்று கூறினார். **43.** அதற்கு அவன், "நான் ஏதேனும் ஒரு மலையின் பக்கம் ஒதுங்கிக் கொள்வேன். அது என்னை நீரிலிருந்து பாதுகாக்கும்" என்று கூறினான். அதற்கு அவர், "இன்றைய தினம் அல்லாஹ்வின் கட்டளையிலிருந்து பாதுகாப்பவர்

எவரும் இல்லை, ஆயினும் அவன் கருணை காட்டியவர்களைத்தவிர" என்று கூறிக் கொண்டிருக்க இருவருக்கும் மத்தியில் அலையொன்று குறுக்கிட்டது. அவனும் மூழ்கிவிடுவோரில் ஒருவனாகிவிட்டான். *44.* "பூமியே, உனது நீரை நீ விழுங்கி விடு. வானமே, நீ நிறுத்தி விடு" என்று கூறப்பட்டது. நீர் வற்றியது. காரியம் முடிந்து விட்டது. கப்பல் ஜூதி என்னும் மலையில் நிலைகொண்டது. "அநியாயக்கார கூட்டமே, தூர விலகி விடுங்கள்" என்றும் கூறப்பட்டது.

*45.* நோவா தன் இறைவனிடம் பிரார்த்தித்து, "என் இறைவனே, என் மகனும் என் குடும்பத்திலுள்ளவன்தான். நிச்சயமாக உன் வாக்குறுதி உண்மையானது. நீ அனைவரிலும் மிகச்சிறந்த நீதிபதியாக இருக்கின்றாய்" என்று கூறினார். *46.* அதற்கு அவன், "நோவாவே, அவன் உன் குடும்பத்தைச் சார்ந்தவன் அல்லன். ஏனெனில் அவனது செயல் சீர்கெட்டது. உமக்கு அறிவில்லாத விஷயங்களைப்பற்றி என்னிடம் கேட்காதீர். நீர் மூடர்களில் ஒருவராகிவிட வேண்டாம் என்று நான் உம்மை அறிவுறுத்துகிறேன்" என்று கூறினான். *47.* அதற்கு அவர் கூறினார்: "என் இறைவனே, எனக்கு அறிவில்லாத விஷயங்களை உன்னிடம் கேட்பதைவிட்டும் நான் உன்னிடம் பாதுகாப்பு தேடுகிறேன். நீ என்னை மன்னித்து இரக்கம் காட்டவில்லையென்றால் நான் அழிந்து விடுவேன்".

*48.* "நோவாவே, நீரும், உம்முடன் இருக்கின்ற சமூகமும் நம்மிடமிருந்து அமைதியையும், அருள்வளங்களையும் பெற்று இறங்குவீராக! (அவர்களின் மூலம் வெளிப்படப்போகும்) சமூகத்திற்கு நாம் வசதிவாய்ப்புகளை வழங்குவோம். பின்னர் நம்மிடமிருந்து துன்புறுத்தும் வேதனை அவர்களைப் பிடித்துக் கொள்ளும்" என்று கூறப்பட்டது. *49.* தூதரே, இவை மறைவான செய்திகளாகும். இவற்றை நாம் உமக்கு அறிவிக்கின்றோம். இதற்கு முன்னர் நீரும், உம் சமூகமும் இவற்றை அறிந்திருக்கவில்லை.

எனவே பொறுமையை மேற்கொள்வீராக. நிச்சயமாக நல்ல முடிவு இறையச்சமுடையோருக்கேயாகும்.

*50.* 'ஆத்' சமூகத்தில் (அவர்களது) சகோதரராகிய ஹூதை அவர்களிடம் அனுப்பினோம். அவர், "என் சமூகமே! அல்லாஹ்வை வணங்குங்கள். அவனைத்தவிர உங்களுக்கு வேறு இறைவன் இல்லை. நீங்கள் பொய்யானவற்றையே புனைந்து வைத்துள்ளீர்கள்". *51.* "என் சமூகமே! நான் இதற்காக உங்களிடம் எந்த கூலியையும் கேட்கவில்லை. எனது கூலி என்னைப் படைத்தவனிடமே உள்ளது. நீங்கள் புரிந்துகொள்ள மாட்டீர்களா?" *52.* "என் சமூகமே! உங்கள் இறைவனிடம் மன்னிப்புக்கோரி அவனிடமே மீளுங்கள். அவன் உங்கள்மீது வானிலிருந்து நன்கு மழை பொழியச்செய்வான். உங்கள் வலிமையை இன்னும் அதிகப்படுத்துவான். குற்றவாளிகளாகப் புறக்கணித்து விடாதீர்கள்" என்று கூறினார்.

*53.* அதற்கு அவர்கள், "ஹூதே, நீ எங்களிடம் எந்தத் தெளிவான சான்றையும் கொண்டுவரவில்லை. உனது பேச்சை நம்பி எங்கள் தெய்வங்களை நாங்கள் விட்டுவிட மாட்டோம். நாங்கள் உன்னை ஏற்றுக்கொள்ளவும் மாட்டோம். *54.* எங்கள் தெய்வங்களில் ஏதோ ஒன்று உனக்கு கேடு விளைவித்து விட்டது என்றுதான் நாங்கள் சொல்வோம்" என்று கூறினார்கள். அதற்கு அவர், "நான் அல்லாஹ்வை சாட்சியாக்குகிறேன். நீங்களும் சாட்சியாக இருங்கள். அவனையன்றி நீங்கள் இணைவைப்பவற்றைவிட்டும் நான் விலகி விட்டேன். *55.* எனவே நீங்கள் அனைவரும் எனக்கெதிராகத் திட்டம் தீட்டுங்கள். எனக்கு அவகாசமும் அளிக்க வேண்டாம். *56.* என் இறைவனும், உங்கள் இறைவனுமான அல்லாஹ்வையே நான் முற்றிலும் சார்ந்துள்ளேன். எந்த உயிரானாலும் அதன் நெற்றிமுடி அவன் பிடியிலேயே உள்ளது. நிச்சயமாக என் இறைவன் நேரான வழியில் இருக்கிறான்" என்று கூறினார்.

*57.* நீங்கள் இதனைப் புறக்கணித்தால் - நான் உங்களிடம் எதைக்கொண்டு அனுப்பப்பட்டேனோ அந்தத் தூதுச் செய்தியை உங்களுக்கு எடுத்துரைத்து விட்டேன். என் இறைவன் உங்களுக்குப் பதிலாக வேறொரு சமூகத்தை ஏற்படுத்தி விடுவான். நீங்கள் அவனுக்கு எந்தத் தீமையையும் இழைத்துவிட முடியாது. நிச்சயமாக என் இறைவன் எல்லாவற்றையும் பாதுகாப்பவனாக இருக்கின்றான் (என்றும் அவர் கூறினார்). *58.* நம்முடைய கட்டளை வந்தபோது நம் கருணையினால் ஹூதையும், அவருடன் நம்பிக்கை கொண்டவர்களையும் நாம் காப்பாற்றினோம். நாம் அவர்களைக் கடுமையான வேதனையிலிருந்தும் காப்பாற்றினோம்.

*59.* அவர்கள்தான் ஆத் சமூகத்தினர். அவர்கள் தங்கள் இறைவனின் சான்றுகளை நிராகரித்து அவனது தூதர்களுக்கு மாறு செய்தார்கள். வரம்புமீறிய பகைவர்கள் ஒவ்வொருவரின் பேச்சையும் அவர்கள் பின்பற்றினார்கள். *60.* இவ்வுலகிலும், மறுமையிலும் சாபமே அவர்களைப் பின்தொடரும். அறிந்துகொள்ளுங்கள், ஆத் சமூகம் தங்கள் இறைவனை நிராகரித்தது. அறிந்துகொள்ளுங்கள். ஹூதுடைய மக்களான ‘ஆத்’ மீது சாபம் உண்டாகட்டும்.

*61.* ஸமூத் சமூகத்தில் (அவர்களது) சகோதரர் சாலிஹை அவர்களிடம் அனுப்பினோம். அவர், “என் சமூகமே! அல்லாஹ்வை வணங்குங்கள். அவனைத்தவிர உங்களுக்கு வேறு இறைவன் இல்லை. அவனே பூமியிலிருந்து உங்களைப் படைத்து அதில் உங்களை வசிக்கச் செய்தான். எனவே நீங்கள் அவனிடம் மன்னிப்புக்கோரி அவன் பக்கமே மீளுங்கள். நிச்சயமாக என் இறைவன் அருகில் இருப்பவனாகவும், ஏற்றுக்கொள்பவனாகவும் இருக்கின்றான்” என்று கூறினார். *62.* அதற்கு அவர்கள், “சாலிஹே! இதற்கு முன் நாங்கள் உன்னைப் பெரிதாக நம்பிக் கொண்டிருந்தோம். எங்கள் முன்னோர்கள் வணங்கி வந்ததை நாங்கள் வணங்குவதைவிட்டும் நீ

*தடுக்கின்றாயா? நீ எங்களை அழைப்பதன்மீது நாங்கள் மிகப்பெரிய சந்தேகத்தில் இருக்கின்றோம்" என்று கூறினார்கள். **63.** அதற்கு அவர், "என் சமூகமே! நீங்களே கூறுங்கள். நான் என் இறைவனிடமிருந்து தெளிவான சான்றினைப்பெற்று அவன் எனக்குத் தன்னிடமிருந்து கருணையையும் வழங்கியிருக்க நான் அவனுக்கு மாறு செய்தால் என்னை அவனிடமிருந்து காப்பாற்றுபவர் யார்? உங்களால் இழப்பைத்தவிர வேறெதையும் எனக்கு அதிகப்படுத்த முடியாது. **64.** என் சமூகமே! இது உங்களுக்குச் சான்றாக அமைந்த அல்லாஹ்வின் பெண் ஒட்டகமாகும். எனவே அதனை அல்லாஹ்வின் பூமியில் மேய விடுங்கள். அதற்கு எவ்விதத் தீங்கும் இழைத்து விடாதீர்கள். அப்படிச்செய்தால் விரைவில் உங்களை வேதனை பிடிக்கும்" என்று கூறினார்.*

***65.** ஆயினும் அவர்கள் அதனை வெட்டி விட்டார்கள். அப்போது சாலிஹ், "மூன்று நாட்களுக்கு உங்கள் வீடுகளில் சுகம் அனுபவித்துக் கொள்ளுங்கள். இது பொய்க்காத வாக்குறுதியாகும்" என்று கூறினார். **66.** இறுதியில் நம் கட்டளை வந்தபோது நாம் நம் கருணையினால் சாலிஹையும், அவருடன் நம்பிக்கை கொண்டவர்களையும் அன்றையநாளின் இழிவிலிருந்து காப்பாற்றினோம். நிச்சயமாக உம் இறைவன் வல்லமை மிக்கவனாகவும் யாவற்றையும் மிகைத்தவனாகவும் இருக்கின்றான். **67.** அநியாயக்காரர்களை ஒரு பயங்கர சப்தம் பிடித்துக்கொண்டது. எனவே அவர்கள் காலையில் தம் வீடுகளில் முகங்குப்புற வீழ்ந்து கிடந்தார்கள். **68.** அவர்கள் அங்கு வசிக்காதவர்களைப்போல் ஆகிவிட்டார்கள். அறிந்துகொள்ளுங்கள், ஸமூத் சமூகத்தினர் தம் இறைவனை நிராகரித்தார்கள். அறிந்துகொள்ளுங்கள், ஸமூத் சமூகத்திற்கு அழிவுதான் (நேர்ந்தது).*

***69.** ஆப்ரஹாமிடம் நம் வானவர்கள் நற்செய்தியுடன் வந்து "உங்கள் மீது சாந்தி நிலவட்டும்'' என்று கூறினார்கள்.*

*அதற்கு அவர் "உங்கள் மீதும் சாந்தி நிலவட்டும்'' என்று கூறி சற்று நேரத்தில் பொறித்த கன்றின் மாமிசத்தைக் கொண்டு வந்தார். **70.** அவர்களின் கைகள் உணவின் பக்கம் செல்லாததைக் கண்டபோது துணுக்குற்ற அவர் மனதுக்குள் அவர்களைப்பற்றி பயந்தார். "பயப்படாதீர், நாங்கள் லோத்துடைய சமூகத்தின் பக்கம் அனுப்பப்பட்டுள்ளோம்'' என்று அவர்கள் கூறினார்கள். **71.** அப்போது அவரின் மனைவி நின்று கொண்டிருந்தார். நாம் அவருடைய மனைவிக்கு ஈசாக்கின் நற்செய்தியும் ஈசாக்கிற்குப் பின் ஜேக்கபின் நற்செய்தியும் கூறினோம். **72.** அதற்கு சிரித்துக் கொண்டே, "என் கேடே! நான் பிள்ளை பெறுவேனா? நானோ கிழவியாகி விட்டேன். இதோ என் கணவரும் கிழவராாக இருக்கின்றார். இது ஒரு ஆச்சர்யமான விஷயமாக இருக்கின்றதே!" என்றார். **73.** அதற்கு, "அல்லாஹ்வின் கட்டளையைக் குறித்தா ஆச்சர்யமடைகின்றீர்? ஆப்ரஹாமின் குடும்பத்தாரே! உங்கள்மீது அல்லாஹ்வின் கருணையும் அருள்வளங்களும் உண்டாகட்டும். நிச்சயமாக அவன் புகழுக்குரியவனாகவும் மகத்துவமிக்கவனாகவும் இருக்கின்றான்" என்று வானவர்கள் கூறினார்கள்.*

***74.** அவரைவிட்டும் பயம் அகன்று நற்செய்தி வந்தபோது அவர் நம்முடன் லோத்துடைய சமூகத்தினரைக் குறித்து தர்க்கம் செய்யலானார். **75.** நிச்சயமாக ஆப்ரஹாம் சகிப்புத்தன்மை உடையவராகவும், இளகிய மனம் கொண்டவராகவும், இறைவனின் பக்கம் மீளக்கூடியவராகவும் இருந்தார். **76.** ஆப்ரஹாமே, தர்க்கிப்பதை விட்டுவிடும். உம் இறைவனின் கட்டளை வந்து விட்டது. அவர்களின் மீது தடுக்கமுடியா வேதனை வந்தே தீரும்.*

***77.** நம் வானவர்கள் லோத்திடம் வந்தபோது அவர் திடுக்கிட்டார். அவர்களின் வருகையால் மனநெருக்கடிக்குள்ளாகி அவர், "இது மிகவும் கடுமையான நாள்" என்றார். **78.** அவரது*

*சமூகத்தவர்கள் அவரிடம் ஓடோடி வந்தார்கள். அவர்கள் முன்பிருந்தே தீய காரியங்களைத்தான் செய்து கொண்டிருந்தார்கள். அவர், "என் சமூகமே! இவர்கள் என் புதல்விகள். இவர்கள் உங்களுக்கு மிகத் தூய்மையானவர்கள். எனவே அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள். என் விருந்தினர் விஷயத்தில் என்னைக் கேவலப்படுத்தி விடாதீர்கள். உங்களில் நேர்மையான மனிதரே இல்லையா?" என்று கேட்டார். 79. அதற்கு அவர்கள், "உன் புதல்விகளில் எங்களுக்கு எவ்விதத் தேவையும் இல்லை என்பதை நீ அறிவாய். நாங்கள் விரும்புவதையும் நீ அறிவாய்" என்று கூறினார்கள்.*

*80. "அந்தோ! உங்களை எதிர்த்து நிற்க என்னிடம் பலம் இருந்திருக்கக்கூடாதா? அல்லது உறுதியான புகலிடத்தை நான் பெற்றிருக்கக்கூடாதா!" என்று அவர் கூறினார். 81. அப்போது வானவர்கள், "லோத்தே! நாங்கள் உம் இறைவனின் தூதர்களாவோம். அவர்களால் உம்மை ஒருபோதும் நெருங்கிவிட முடியாது. எனவே நீர் இரவின் ஒரு பகுதியில் உம் மக்களை அழைத்துக்கொண்டு வெளியேறி விடுவீராக. உங்களில் எவரும் திரும்பிப் பார்க்கக்கூடாது, ஆனால் உமது மனைவியைத்தவிர. அவர்களுக்கு நேரப்போவதுதான் அவளுக்கும் நேரும். அவர்களுக்கு நிர்ணயிக்கப்பட்ட நேரம் அதிகாலையாகும். அதிகாலை அருகில் இல்லையா என்ன?" என்றனர். 82. இறுதியில் நம் கட்டளை வந்தபோது அந்த ஊரை தலைகீழாகப் புரட்டி விட்டோம். அதன்மீது சுட்ட களிமண்ணை தொடர்ந்து பொழியச் செய்தோம். 83. அது உங்கள் இறைவனிடமிருந்து அடையாளமிடப்பட்டதாக இருந்தது. இந்த தண்டனை அநியாயக்காரர்களைவிட்டும் தூரமாக இல்லை.*

*84.* மத்யன்வாசிகளுக்கு அவர்களது சகோதரர் ஷுஐபை அனுப்பினோம். அவர், "என் சமூகமே! அல்லாஹ்வை வணங்குங்கள். அவனைத்தவிர உங்களுக்கு வேறு இறைவன் இல்லை. அளவையிலும், நிறுவையிலும் குறைவு செய்யாதீர்கள். நான் உங்களை நல்லநிலையில் காண்கிறேன். ஆனால் உங்கள்மீது சூழ்ந்துகொள்ளும் ஒரு நாளின் வேதனையைக் குறித்து அஞ்சுகிறேன். *85.* என் சமூகமே! அளவையையும், நிறுவையையும் நேர்மையாக முழுமையாக்குங்கள். மக்களுக்கு அவர்களின் பொருட்களைக் குறைத்துக் கொடுக்காதீர்கள். பூமியில் குழப்பம் செய்துகொண்டு திரியாதீர்கள். *86.* நீங்கள் நம்பிக்கையாளர்களாக இருந்தால் அல்லாஹ் வழங்கியவற்றில் மீதமாவதே உங்களுக்குச் சிறந்ததாகும். நான் உங்களைக் கண்காணிப்பவன் அல்லன்" என்று கூறினார்.

*87.* அதற்கு அவர்கள், "ஷுஐபே, எங்கள் முன்னோர் வணங்கி வந்தவற்றை விட்டுவிடும்படி அல்லது எங்கள் செல்வத்தில் நாங்கள் விருப்பம்போல் செலவுசெய்வதை விட்டுவிடும்படியா உன் தொழுகை உனக்குக் கற்று தருகிறது? நீ மட்டும்தான் அறிவாளியாகவும் நன்னடத்தை கொண்டவனாகவும் இருக்கின்றாயா!" என்றார்கள்.

*88.* அதற்கு ஷுஐப், "என் சமூகமே! நீங்களே கூறுங்கள். நான் என் இறைவனிடமிருந்து தெளிவான ஆதாரத்தைப் பெற்று அவன் எனக்குத் தன்னிடமிருந்து நல்ல உணவும் வழங்கியிருக்க - நான் உங்களைத் தடுக்கும் விஷயங்களில் உங்களுக்கு மாறு செய்ய விரும்பவில்லை. என்னால் இயன்றவரை நான் சீர்திருத்தம் செய்வதையே விரும்புகிறேன். அல்லாஹ்வின் உதவியின்றி இதை நான் செய்ய முடியாது. அவனையே நான் சார்ந்துள்ளேன். அவன் பக்கமே நான் மீளுகின்றேன். *89.* என் சமூகமே, என் மீதுள்ள வெறுப்பால் நோவாவின் சமூகம் அல்லது ஹூதின் சமூகம்

அல்லது சாலிஹின் சமூகத்திற்கு ஏற்பட்ட துன்பத்தைப்போல் உங்களுக்கும் ஏற்பட்டு விடக்கூடாது. லோத்தின் சமூகம் உங்களைவிட்டும் வெகுதொலைவில் இல்லை. 90. உங்கள் இறைவனிடம் மன்னிப்புக்கோரி அவனிடமே மீண்டு விடுங்கள். நிச்சயமாக என் இறைவன் இணையிலாக் கிருபையாளனாகவும் நிகரற்ற அன்புடையவனாகவும் இருக்கின்றான்" என்று கூறினார்.

91. அதற்கு அவர்கள், "ஷுஐபே, நீ கூறும் பெரும்பாலானவை எங்களுக்குப் புரிவதில்லை. எங்களில் பலவீனமானவனாகவே உன்னைக் காண்கிறோம். உனது குலத்தார்மட்டும் இல்லையெனில் உன்னைக் கல்லால் அடித்தே கொன்றிருப்போம். நீ ஒன்றும் எங்களுக்குக் கடினமானவனில்லை" என்று கூறினார்கள். 92. அதற்கு ஷுஐப், "என் மக்களே, அல்லாஹ்வைவிடவா என் குலத்தார் உங்களுக்குக் ஆற்றல் மிக்கவர்களாகி விட்டார்கள்? நீங்கள் அவனை முதுகுக்குப் பின்னால் வீசிவிட்டீர்கள். நிச்சயமாக நீங்கள் செய்வதையெல்லாம் என் இறைவன் சூழ்ந்துகொண்டு இருக்கிறான்". 93. "என் சமூகமே! நீங்கள் உங்கள் வழியில் செயல்படுங்கள். நானும் என் வழியில் செயல்படுவேன். இழிவுதரும் வேதனை யாரை வந்தடையும் என்பதையும் யார் பொய்யர் என்பதையும் வெகுவிரைவில் நீங்கள் அறிந்துகொள்வீர்கள். எதிர்பாருங்கள். நானும் உங்களுடன் எதிர்பார்க்கிறேன்" என்று கூறினார்.

94. இறுதியில் நம் கட்டளை வந்தபோது, நாம் ஷுஐபையும், அவருடன் நம்பிக்கை கொண்டவர்களையும் நம் கருணையினால் காப்பாற்றினோம். அநியாயக்காரர்களை இடிமுழக்கம் பிடித்துக் கொண்டது. எனவே அவர்கள் தங்கள் வீடுகளில் முகங்குப்புற வீழ்ந்து கிடந்தார்கள். 95. அங்கு அவர்கள் என்றும் வசிக்காதவர்களைப்போன்று (எந்த

அடையாளமுமின்றி) அழிந்துவிட்டார்கள். அறிந்து கொள்ளுங்கள், ஸமூத் சமூகம் சபிக்கப்பட்டதைப் போன்று மத்யன்வாசிகளும் சபிக்கப்பட்டார்கள்.

96. நாம் மோசேவை பாரோவிடமும், அவனது பிரமுகர்களிடமும் நம் சான்றுகளுடனும் தெளிவான ஆதாரத்துடனும் அனுப்பி வைத்தோம். 97. அப்பிரமுகர்கள் பாரோவின் கட்டளையைப் பின்பற்றினார்கள். பாரோவின் கட்டளையோ நேர்மையானதாக இருக்கவில்லை. 98. மறுமைநாளில் அவன் தன் சமூகத்தை வழிநடத்தி அவர்களை நரகத்தில் கொண்டுபோய்ச் சேர்ப்பான். அவர்கள் சென்றடையும் இடம் எவ்வளவு மோசமானது! 99. இவ்வுலகிலும், மறுவுலகிலும் அவர்களைச் சாபம் பின்தொடரும். அவர்களுக்கு வழங்கப்படும் சன்மானம் எவ்வளவு மோசமானது!.

100. இவை சில ஊர்களைப்பற்றிய செய்திகள். இவற்றை நாம் உமக்கு எடுத்துரைக்கிறோம். அவற்றில் சில இன்றும் நிலைத்திருக்கின்றன. சில அழிந்து விட்டன. 101. நாம் அவர்களுக்கு அநீதி இழைக்கவில்லை. மாறாக அவர்கள் தமக்குத்தாமே அநீதி இழைத்துக்கொண்டார்கள். உம் இறைவனின் கட்டளை வந்தபோது அல்லாஹ்வைத்தவிர அவர்கள் அழைத்துக் கொண்டிருந்த தெய்வங்கள் அவர்களுக்கு எவ்விதப் பலனும் அளிக்கவில்லை; அவை இழப்பைத்தவிர வேறெதையும் அவர்களுக்கு அதிகரிக்கவில்லை.

102. அக்கிரமம் புரியும் ஊர்களை உம் இறைவன் பிடித்தால் அவனது பிடி இவ்வாறுதான் இருக்கும். நிச்சயமாக அவனது பிடி வேதனைமிக்கது; மிகக்கடுமையானது. 103. மறுமையின் வேதனையை அஞ்சுவோருக்கு இதில் சான்று உள்ளது. அது(மறுமைநாள்) மக்கள் அனைவரும் ஒன்றுகூட்டப்படும்

நாளாகும், அனைவரும் முன் நிறுத்தப்படும் நாளாகும். *104.* அதனை நாம் நிர்ணயிக்கப்பட்ட தவணைக்காகவே தாமதப்படுத்துகிறோம். *105.* அந்நாள் வரும்போது எந்த மனிதனும் அவனது அனுமதியின்றி பேச முடியாது. அவர்களில் சிலர் துர்பாக்கியசாலிகளாகவும் சிலர் நற்பேறு பெற்றவர்களாகவும் இருப்பார்கள்.

*106.* துர்பாக்கியசாலிகள் நரகத்தில் இருப்பார்கள். அங்கே அவர்கள் கூக்குரலிட்டுக் கதறுவார்கள். *107.* வானங்களும், பூமியும் நிலைத்திருக்கும்வரை அங்கே அவர்கள் கிடப்பார்கள், ஆனால் உம் இறைவன் நாடினாலே தவிர. நிச்சயமாக தான் நாடியதை உம் இறைவன் செய்து விடுகிறான். *108.* நற்பேறு பெற்றவர்கள் சுவனம் செல்வார்கள். வானங்களும், பூமியும் நிலைத்திருக்கும்வரை அங்கே அவர்கள் தங்கியிருப்பார்கள், ஆனால் உம் இறைவன் நாடினாலே தவிர. அவர்களுக்கு என்றும் முடிவுறாத அருட்கொடைகள் உண்டு.

*109.* இவர்கள் வணங்குகின்ற தெய்வங்கள் குறித்து நீர் சந்தேகப்பட வேண்டாம். இதற்குமுன் இவர்களின் முன்னோர்கள் வணங்கியதைப் போலவே இவர்களும் வணங்குகிறார்கள். நாம் இவர்களின் பங்கைக் குறைவில்லாமல் நிறைவாகக் கொடுத்து விடுவோம்.

*110.* நாம் மோசேவுக்கு வேதத்தை வழங்கினோம். ஆனால் அதில் கருத்து வேறுபாடு கொள்ளப்பட்டது. உம் இறைவனின் வாக்கு முந்தியிராவிட்டால் அவர்களிடையே தீர்ப்பளிக்கப்பட்டிருக்கும். அது குறித்து குழப்பத்தில் ஆழ்த்தும் சந்தேகத்திலேயே அவர்கள் வீழ்ந்து கிடந்தார்கள். *111.* நிச்சயமாக உம் இறைவன் ஒவ்வொருவருக்கும் அவர்களது செயல்களுக்கான

கூலியை முழுமையாக வழங்கிடுவான். அவர்கள் செய்பவற்றை அவன் நன்கறிந்தவனாக இருக்கின்றான்.

*112.* நீரும், உம்முடன் இறைவனின் பக்கம் மீண்டவர்களும் உமக்கு கட்டளையிடப்பட்டவாறு உறுதியாக இருங்கள். வரம்புமீறி விடாதீர்கள். நிச்சயமாக நீங்கள் செய்பவற்றை அவன் பார்த்துக் கொண்டிருக்கிறான். *113.* அநியாயக்காரரர்களின் பக்கம் சாய்ந்து விடாதீர்கள். அவ்வாறு சாய்ந்தால் நரகநெருப்பு உங்களைத் தீண்டிவிடும். அல்லாஹ்வைத்தவிர உங்களுக்கு உதவுபவர்கள் யாருமில்லை. உங்களால் வேறெங்கும் உதவிபெற முடியாது. *114.* பகலின் இரு நேரங்களிலும், இரவின் சில பகுதிகளிலும் தொழுகையைக் கடைப்பிடியுங்கள். நிச்சயமாக நன்மைகள் தீமைகளை போக்கிவிடும். நினைவுகூர்வோருக்கு இது ஒரு நினைவூட்டலாகும். *115.* பொறுமையை மேற்கொள்ளுங்கள். அல்லாஹ் நன்மைசெய்வோரின் கூலியை வீணாக்குவதில்லை.

*116.* உங்களுக்கு முன்சென்ற சமூகங்களில் உலகில் குழப்பத்தைத் தடுக்கக்கூடிய நேர்மையாளர்கள் - அவர்களில் நாம் காப்பாற்றிய சிலரைத்தவிர - ஏன் இல்லாமல் போனார்கள்? அநியாயக்காரரர்கள் தங்களுக்கு வழங்கப்பட்ட ஆடம்பர வாழ்வில் திளைத்திருந்தார்கள். அவர்கள் குற்றவாளிகளாக இருந்தார்கள். *117.* ஊர்களில் வசிக்கும் மக்கள் சீர்திருத்துபவர்களாக இருக்கும் நிலையில் அவ்வூர்களை உம் இறைவன் அநியாயமாக அழித்து விடுபவன் அல்லன்.

*118.* உம் இறைவன் நாடியிருந்தால் மக்கள் அனைவரையும் ஒரே சமூகமாக ஆக்கியிருப்பான். ஆனால் அவர்கள் எப்போதும் முரண்பட்டுக் கொண்டேயிருப்பார்கள், *119.* ஆயினும் உம் இறைவன் கருணை புரிந்தவர்களைத் தவிர. இதற்காகவே அவன்

அவர்களைப் படைத்துள்ளான். “ஜின்கள் மற்றும் மனிதர்கள் அனைவரையும்கொண்டு நான் நரகத்தை நிரப்பி விடுவேன்” என்ற உமது இறைவனின் வாக்கு நிறைவேறி விட்டது.

*120.* நாம் தூதர்களின் செய்திகளிலிருந்து எல்லாவற்றையும் உமக்கு எடுத்துக்கூறி அதன்மூலம் உமது உள்ளத்தைப் பலப்படுத்துகிறோம். இவற்றில் உண்மையும் நம்பிக்கையாளர்களுக்கு அறிவுரையும், நினைவூட்டலும் உம்மிடம் வந்துள்ளன. *121.* நம்பிக்கை கொள்ளாதவர்களிடம் நீர் கூறும், “நீங்கள் உங்கள் வழியில் செயல்படுங்கள். நாங்களும் எங்கள் வழியில் செயல்படுகிறோம். *122.* எதிர்பாருங்கள், நாங்களும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்”. *123.* வானங்களிலும், பூமியிலும் மறைந்துள்ள அனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியன. அவனிடமே அனைத்தும் திருப்பப்படுகின்றன. எனவே நீர் அவனை வணங்கி அவனையே சார்ந்திருப்பீராக. உம் இறைவன் நீங்கள் செய்பவற்றைக் கவனிக்காமல் இல்லை.

## 12. ஜோஸஃப் (யூஸுஃப்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

*1.* அலிஃப். லாம். ரா. இவை தெளிவான வேதத்தின் வசனங்களாகும். *2.* நீங்கள் புரிந்துகொள்ளும்பொருட்டு அரபு மொழியில் குர்ஆனை அருளியுள்ளோம். *3.* நாம் உமக்கு அறிவித்துள்ள இந்த குர்ஆனின் மூலம் சிறந்த வரலாற்றை உமக்கு எடுத்துரைக்கிறோம். இதற்கு முன்னர் நீர் இவற்றைப் பற்றி அறியாதவராக இருந்தீர்.

*4.* ஜோஸஃப் தம் தந்தையிடம் (ஜேக்கப்பிடம்) “என் தந்தையே! நான் கனவில் பதினோரு நட்சத்திரங்களையும்,

சூரியனையும், சந்திரனையும் கண்டேன். அவை எனக்கு சிரம்பணியவும் கண்டேன்" என்று கூறினார். 5. அதற்கு அவர், "என் அருமை மகனே! உனது கனவை நீ உன் சகோதரர்களிடம் கூறிவிடாதே. அவர்கள் உனக்கெதிராக சதி செய்து விடுவார்கள். நிச்சயமாக சாத்தான் மனிதனுக்கு வெளிப்படையான பகைவனாவான். 6. இவ்வாறே உன் இறைவன் உன்னைத் தேர்ந்தெடுத்து விஷயங்களின் உண்மை நிலையை உனக்குக் கற்றுக் கொடுப்பான். இதற்கு முன்னர் உன்னுடைய முன்னோர்களான ஆப்ரஹாம் மற்றும் ஈசாக்கின்மீது தனது அருட்கொடையை அவன் நிறைவாக்கியதைப்போன்று உன்மீதும், ஜேக்கபின் குடும்பத்தினர்மீதும் நிறைவுபடுத்துவான். நிச்சயமாக உன் இறைவன் நன்கறிந்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்" என்று கூறினார்.

7. நிச்சயமாக ஜோஸஃப் மற்றும் அவரது சகோதரர்களின் வரலாற்றில் கேட்பவர்களுக்கு பெரும் சான்றுகள் இருக்கின்றன. 8. அவர்கள் தங்களுக்குள், "நாம் ஒரு குழுவாக இருந்தும் ஜோஸஃபும் அவரது சகோதரரும் நம்மைவிட நம் தந்தைக்கு மிகப்பிரியமானவர்களாக இருக்கிறார்கள். நிச்சயமாக நம் தந்தை வெளிப்படையான தவறில் இருக்கிறார்". 9. "ஜோஸஃபைக் கொன்று விடுங்கள் அல்லது எங்காவது ஓரிடத்தில் அவரைப் போட்டு விடுங்கள். அப்போதுதான் உங்கள் தந்தையின் கவனம் உங்கள் பக்கம் மட்டுமே திரும்பும். அதன் பின்னர் நீங்கள் நல்லவர்களாகி விடுங்கள்" என்று பேசிக் கொண்டார்கள். 10. அவர்களில் ஒருவர், "ஜோஸஃபைக் கொல்லாதீர்கள். நீங்கள் ஏதாவது செய்வதாக இருந்தால் அவரை ஏதேனும் பாழடைந்த கிணற்றில் தள்ளி விடுங்கள். அவ்வழியே செல்லும் பயணிகளில் எவரேனும் அவரை எடுத்துக் கொள்வார்கள்" என்று கூறினார்.

*__11.__ அவர்கள் தம் தந்தையிடம், “எங்கள் தந்தையே! நீங்கள் ஜோஸஃபின் விஷயத்தில் ஏன் எங்களை நம்பவில்லை? நாங்கள் அவரது நலம்விரும்பியாக இருக்கின்றோம்”. __12.__ “நாளை எங்களுடன் அவரை அனுப்பி வையுங்கள். அவர் உண்டு விளையாடட்டும். நாங்கள் அவரைப் பாதுகாத்துக் கொள்வோம்” என்றார்கள். __13.__ அதற்கு அவர், “நீங்கள் அவரை அழைத்துச் செல்வது என்னைக் கவலைக்குள்ளாக்குகிறது. அவரைவிட்டும் நீங்கள் கவனக்குறைவாக இருக்கும்போது ஓநாய் அவரைத் தின்றுவிடுமோ என்று நான் அஞ்சுகிறேன்” என்று கூறினார். __14.__ அதற்கு அவர்கள், “நாங்கள் ஒரு கூட்டமாக இருக்கும்போது ஓநாய் அவரைத் தின்றுவிடுமானால் நிச்சயம் நாங்கள் இழப்பிற்குரியவர்களாகி விடுவோம்” என்று கூறினார்கள்.*

*__15.__ அவர்கள் ஜோஸஃபை அழைத்துச் சென்றபோது ஒரு பாழுங்கிணற்றில் அவரைத் தள்ளிவிட வேண்டுமென முடிவு செய்துகொண்டார்கள். அப்போது நாம் அவருக்கு அறிவித்தோம், ‘அவர்களின் இக்காரியத்தைக் குறித்து அவர்கள் அறியாதிருக்கும் நிலையில் நீர் அவர்களிடம் அறிவிப்பீர்’. __16.__ அவர்கள் இரவில் அழுதவர்களாக தங்கள் தந்தையிடம் வந்து, __17.__ “எங்கள் தந்தையே, நாங்கள் ஓடி விளையாடிக் கொண்டிருந்தோம். ஜோஸஃபை எங்கள் பொருட்களுக்கு அருகில் விட்டிருந்தோம். அப்போது ஓநாய் அவரைத் தின்று விட்டது. நாங்கள் உண்மையாளர்களாக இருந்தாலும் நீங்கள் எங்களை நம்ப மாட்டீர்கள்” என்று கூறினார்கள். __18.__ அவர்கள் ஜோஸஃபுடைய சட்டையில் பொய்யான இரத்தத்தைத் தடவிக்கொண்டு வந்தார்கள். அதற்கு அவர், “இல்லை. உங்களது உள்ளம் ஒரு விஷயத்தை உங்களுக்கு அழகாக்கி விட்டது. இனி பொறுமையே சிறந்ததாகும். நீங்கள் வெளிப்படுத்தும் விஷயத்திற்கு அல்லாஹ்விடமே நான் உதவி கோருகிறேன்” என்று கூறினார்.*

*19.* ஒரு பயணக்கூட்டம் வந்தது. அது தங்களுக்குத் தண்ணீர் எடுத்து வருபவரை அனுப்பி வைத்தது. அவர் தனது வாளியை கிணற்றில் போட்டதும் "நற்செய்தி! இதோ ஒரு சிறுவன்" என்று கூறினார். அவர்கள் அவரை ஒரு வியாபாரப் பொருளாகக் கருதி பாதுகாத்துக் கொண்டார்கள். அவர்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவன். *20.* அவர்கள் அவரை அற்ப விலைக்கு - சில வெள்ளிக் காசுகளுக்கு - விற்றுவிட்டார்கள். அவர்கள் அவரை மிகக்குறைவாகவே மதிப்பிட்டவர்களாக இருந்தார்கள்.

*21.* எகிப்தில் அவரை வாங்கியவர் தம் மனைவியிடம், "இவரை நல்ல முறையில் கவனித்துக்கொள். இவர் நமக்குப் பயனுள்ளவராக இருக்கலாம் அல்லது இவரை நாம் நம் மகனாக தத்தெடுத்துக் கொள்ளலாம்'' என்று கூறினார். விஷயங்களின் உண்மை நிலையைக் கற்றுக் கொடுப்பதற்காக இவ்வாறு நாம் ஜோஸஃபிற்கு அந்நாட்டில் இடமளித்தோம். அல்லாஹ் தன் காரியத்தில் மேலோங்கியவனாக இருக்கின்றான். ஆயினும் மக்களில் பெரும்பாலோர் அறிந்துகொள்வதில்லை. *22.* அவர் தம் வாலிபத்தை அடைந்ததும் நாம் அவருக்கு தீர்ப்பளிக்கும் திறனையும், ஞானத்தையும் வழங்கினோம். நன்மை புரிவோருக்கு நாம் இவ்வாறே கூலி வழங்குகிறோம்.

*23.* ஜோஸஃப் எந்தப் பெண்ணின் வீட்டில் இருந்தாரோ அவள் அவரை தன் விருப்பத்திற்கு இணங்குமாறு தூண்டலானாள். ஒருநாள் அவள் கதவுகளைத் தாழிட்டு விட்டு 'வா' என்றழைத்தாள். அதற்கு அவர், "அல்லாஹ்விடம் பாதுகாப்பு தேடுகிறேன். எனது எஜமானர் என்னை நல்ல முறையில் வைத்துள்ளார். நிச்சயமாக அநியாயக்காரர்கள் ஒருபோதும் வெற்றியடைவதில்லை" என்றார். *24.* அவள் அவரை அடைய நாடினாள். அவரும் தம் இறைவனின் சான்றினைக் கண்டிராவிட்டால் அவளை அடைய நாடியிருப்பார்.

தீமையையும், மானக்கேடானவற்றையும் அவரைவிட்டும் திருப்பிவிடவே நாம் இவ்வாறு செய்தோம். நிச்சயமாக அவர் நம்மால் தேர்ந்தெடுக்கப்பட்ட அடியார்களில் உள்ளவராக இருந்தார்.

25. இருவரும் கதவின் பக்கம் ஓடினார்கள். அவள் ஜோஸஃபைப் பின்தொடர்ந்து அவரது சட்டையைப் பின்புறமாகப் பிடித்துக் கிழித்து விட்டாள். இருவருமே அவளது கணவனைக் கதவருகில் கண்டார்கள். உடனே, "உங்கள் மனைவியுடன் தவறான முறையில் நடக்க நாடியவனுக்குரிய தண்டனை என்ன? அவன் சிறையிலடைக்கப்பட வேண்டும் அல்லது கடுமையாகத் தண்டிக்கப்பட வேண்டும் என்பதைத் தவிர வேறென்ன இருக்க முடியும்?" என்று அவள் கூறினாள். 26. அதற்கு அவர் "இவள்தான் என்னை அடைய முயன்றாள்" என்றார். அவளின் குடும்பத்திலிருந்து ஒருவர் "அவரது சட்டை முன்புறமாகக் கிழிந்திருந்தால் இவள் உண்மை சொல்கிறாள், அவர் பொய் கூறியவராவார். 27. அவரது சட்டை பின்புறமாகக் கிழிந்திருந்தால் இவள் பொய் சொல்கிறாள், அவர் உண்மை கூறியவராவார்" என்று சாட்சியம் கூறினார். 28. அவரது சட்டை பின்புறமாகக் கிழிக்கப்பட்டிருப்பதைக் கண்ட அவளது கணவன், "நிச்சயமாக இது பெண்களாகிய உங்களின் சூழ்ச்சியாகும். உங்களின் சூழ்ச்சி மிகக் கடுமையானதாகும். 29. ஜோஸஃபே, இதனைக் கண்டுகொள்ளாமல் விட்டுவிடும். பெண்ணே, நீ உனது குற்றத்திற்காக மன்னிப்புக் கேள். நிச்சயமாக நீயே தவறிழைத்தவள்" என்று கூறினார்.

30. நகரத்திலுள்ள பெண்கள் தங்களுக்குள் பேசிக்கொண்டார்கள்; "அரசனின் மனைவி தன்னிடம் அடிமையாய் உள்ள இளைஞரின்மீது மோகங்கொண்டுள்ளாள். அவர்மீது கொண்ட காதலில் மயங்கி விட்டாள். அவள் வெளிப்படையான தவறில் இருப்பதாகவே

*நாங்கள் கருதுகிறோம்''. **31.** அந்தப் பெண்களின் இரகசியப் பேச்சுக்களை அவள் கேள்விப்பட்டபோது அவர்களை அழைத்துவரச்செய்து அவர்களுக்காக ஒரு விருந்தையும் ஏற்பாடு செய்தாள். அவர்களில் ஒவ்வொருவருக்கும் ஒரு கத்தியைக் கொடுத்தாள். "இவர்களுக்கு முன்னால் செல்" என்று ஜோஸஃபிடம் கூறினாள். அப்பெண்கள் அவரைப் பார்த்தபோது அப்படியே பிரமித்துப் போய் தங்கள் கைகளை வெட்டிக் கொண்டார்கள். "அல்லாஹ் எங்களைக் காப்பாற்றுவானாக! இவர் மனிதரே அல்லர். இவர் கண்ணியத்திற்குரிய ஒரு வானவரேயாவார்" என்று அவர்கள் கூறினார்கள். **32.** "இவர் விஷயத்தில்தான் நீங்கள் என்னைப் பழித்துப் பேசினீர்கள். நான் அவரைக் கவர்ந்து கொள்ள முயன்றேன். ஆனால் அவர் தப்பி விட்டார். நான் சொல்வதை அவர் செய்யாவிட்டால் சிறையிலடைக்கப்பட்டு இழிவுபடுத்தப்படுவார்" என்று அவள் கூறினாள். **33.** ஜோஸஃப், "என் இறைவனே! இவர்கள் அழைக்கும் செயலைவிட சிறைச்சாலையே எனக்கு விருப்பமானது. இவர்களின் சூழ்ச்சியை என்னைவிட்டும் நீ தடுக்கவில்லையென்றால் நான் இவர்களின் பக்கம் சாய்ந்து அறிவற்றவனாகி விடுவேன்" என்று கூறினார். **34.** எனவே அவரது இறைவன் அவரது பிரார்த்தனையை ஏற்றுக்கொண்டு அவர்களது சூழ்ச்சியை அவரைவிட்டும் நீக்கி விட்டான். நிச்சயமாக அவன் செவியேற்பவனாகவும் நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான்.*

***35.** சான்றுகளை அவர்கள் கண்டபின்னரும், ஒரு குறிப்பிட்ட காலம்வரை அவரைச் சிறையிலடைக்க வேண்டும் என்றே அவர்களுக்குத் தோன்றியது. **36.** அவருடன் இரு இளைஞர்களும் சிறைக்குச் சென்றனர். அவர்களில் ஒருவர் (ஒருநாள்) "நான் கனவில் திராட்சை ரசம் பிழிந்து கொண்டிருப்பதாகக் கண்டேன்" என்று கூறினார். மற்றொருவர், "என் தலைமீது ரொட்டியைச்*

சுமந்து கொண்டிருக்க, அவற்றைப் பறவைகள் தின்பதாக நான் கனவு கண்டேன்" என்று கூறினார். "இவற்றின் விளக்கத்தை நீர் எங்களுக்குக் கூறுவீராக. நாங்கள் உம்மை ஒரு நேர்மையான மனிதராகக் காண்கிறோம்" என்றனர்.

**37.** அதற்கு ஜோஸஃப், "உங்களுக்கு வழங்கப்படும் உணவு உங்களிடம் வருவதற்கு முன்பே இவற்றின் விளக்கத்தை நான் உங்களுக்குக் கூறி விடுவேன். இது என் இறைவன் எனக்கு கற்றுத் தந்ததாகும். அல்லாஹ்வின்மீது நம்பிக்கை கொள்ளாமலும் மறுமையை மறுத்தும் வாழ்கின்ற மக்களின் வழிமுறையை நான் விட்டுவிட்டேன். **38.** நான் என் முன்னோர்களான ஆப்ரஹாம், ஈசாக் மற்றும் ஜேக்கபுடைய வழிமுறையைப் பின்பற்றுகிறேன். எப்பொருளையும் அல்லாஹ்வுக்கு இணைவைப்பது எங்களுக்குத் தகுமானதல்ல. இது எங்கள் மீதும், மனிதர்கள் அனைவரின் மீதும் அல்லாஹ் புரிந்துள்ள அருளாகும். ஆயினும் மனிதர்களில் பெரும்பாலோர் நன்றி செலுத்துவதில்லை. **39.** என் சிறைத் தோழர்களே, பல்வேறு தெய்வங்கள் சிறந்தவையா? அல்லது அடக்கியாளும் ஏகனான அல்லாஹ்வா? **40.** அல்லாஹ் எவ்வித ஆதாரத்தையும் இறக்கி வைக்காத, நீங்களும் உங்கள் முன்னோர்களும் சூட்டிக்கொண்ட பெயர்களைத்தான் நீங்கள் வணங்குகிறீர்கள். அதிகாரம் அனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியது. நீங்கள் அவனைத்தவிர வேறு யாரையும் வணங்கக்கூடாது என்று அவன் கட்டளையிட்டுள்ளான். இதுவே நேரான மார்க்கமாகும். ஆயினும் மக்களில் பெரும்பாலோர் அறிந்துகொள்வதில்லை. **41.** என் சிறைத்தோழர்களே, உங்களில் ஒருவர் தனது எஜமானருக்கு மதுவைப் பரிமாறுவார். மற்றொருவர் தூக்கிலிடப்படுவார். அவரது தலையைப் பறவைகள் கொத்தித் தின்னும். நீங்கள் என்னிடம்

கேட்கின்ற விஷயம் முடிவு செய்யப்பட்டு விட்டது" என்று கூறினார்.

*42.* அவ்விருவரில் எவரைக் குறித்து அவர் விடுதலையடைவார் என்று ஜோஸஃப் கருதினாரோ அவரிடம், 'என்னைப்பற்றி உம் எஜமானரிடம் குறிப்பிடும்' என்று கூறினார். ஆனால் சாத்தான் அவரை தம் எஜமானரிடம் கூறுவதை விட்டும் மறக்கடித்து விட்டான். எனவே ஜோஸஃப் சிறையில் பல ஆண்டுகள் தங்கி விட்டார்.

*43.* அரசன் கூறினான்: "ஏழு கொழுத்த பசுக்களை ஏழு மெலிந்த பசுக்கள் தின்றுகொண்டு இருந்ததையும், ஏழு பசுமையான கதிர்களையும், மற்றொரு ஏழு காய்ந்த கதிர்களையும் நான் கனவில் கண்டேன். என் அவையோரே, நீங்கள் கனவுக்கு விளக்கம் கூறுவோராக இருந்தால் என் கனவுக்குரிய விளக்கத்தைக் கூறுங்கள்". *44.* அதற்கு அவர்கள், "இவை கற்பனையான கனவுகளாகும். இவ்வகையான கனவுகளுக்கு நாங்கள் விளக்கம் அறிந்தவர்கள் அல்லர்" என்று கூறினார்கள்.

*45.* அந்த இரு கைதிகளில் விடுதலையடைந்தவர் நீண்ட காலத்திற்குப்பின் நினைவுபடுத்திக்கொண்டவராக, "இதன் விளக்கத்தை உங்களுக்கு நான் கூறுகிறேன், என்னை (ஜோஸஃபிடம்) அனுப்பி வையுங்கள்" என்றார்.

*46.* "ஜோஸஃபே! உண்மையாளரே! ஏழு கொழுத்த பசுக்களை ஏழு மெலிந்த பசுக்கள் தின்று கொண்டிருப்பதையும் ஏழு பசுமையான கதிர்களையும், ஏழு காய்ந்த கதிர்களையும் கனவில் கண்டால் அதன் விளக்கம் என்ன என்பதை எங்களுக்குக் கூறுவீராக. மக்கள் அறிந்துகொள்வதற்காக நான் அவர்களிடம் திரும்பச் செல்லக்கூடும்" (என்று கேட்டார்).

*47.* அதற்கு ஜோஸஃப், "ஏழு ஆண்டுகள்வரை வழக்கம்போல் நீங்கள் பயிரிடுவீர்கள். நீங்கள் அறுவடை செய்யும்போது, நீங்கள் உண்பதற்கு வேண்டிய சிறிதளவைத் தவிர, மற்றவற்றை அவற்றின் கதிர்களிலேயே விட்டுவிடுங்கள். *48.* அதன் பின்னர் கடினம் (பஞ்சம்) நிறைந்த ஏழு ஆண்டுகள் வரும். அப்போது அந்நேரத்திற்காக நீங்கள் முன்பே பத்திரப்படுத்தி வைத்தவற்றில் சிறிதளவைத் தவிர அனைத்தையும் அவை தின்றுவிடும். *49.* அதன் பின்னர் வரக்கூடிய ஒரு ஆண்டில் மக்கள் நல்ல மழையைப் பெறுவார்கள். அதில் அவர்கள் பழரசம் பிழிவார்கள்" என்று கூறினார்.

*50.* "அவரை என்னிடம் அழைத்து வாருங்கள்" என்று அரசர் கூறினார். தூதுவன் அவரிடம் வந்தபோது, "நீர் உம் எஜமானரிடம் திரும்பிச் சென்று, தம் கைகளை அறுத்துக் கொண்ட அந்தப் பெண்களின் நிலை என்னவாயிற்று? என்று கேளும்" என்று கூறி "நிச்சயமாக என் இறைவன் அவர்களின் சூழ்ச்சியை நன்கறிந்தவன்" என்றும் கூறினார். *51.* அரசர் அப்பெண்களிடம், "நீங்கள் ஜோஸஃபைக் கவர்வதற்கு முயன்றபோது உங்களுக்கு நேர்ந்ததென்ன?" என்று விசாரித்தார். அதற்கு அவர்கள், "அல்லாஹ் எங்களைக் காப்பாற்றுவானாக! நாங்கள் அவரிடம் எந்தத் தீய அம்சத்தையும் காணவில்லை" என்றார்கள். அரசனின் மனைவி கூறினாள், "இப்போது உண்மை வெளிப்பட்டு விட்டது. நான்தான் அவரைக் கவர முயன்றேன். நிச்சயமாக அவர் உண்மையாளராக இருக்கின்றார்".

*52.* "இது ஏனெனில் நான் அவருக்கு (எகிப்திய அரசனுக்கு) மறைவில் துரோகம் இழைக்கவில்லை என்பதை அவர் அறிந்து கொள்வதற்கேயாகும். நிச்சயமாக அல்லாஹ் துரோகிகளின் சூழ்ச்சியை நடைபெற விடுவதில்லை. *53.* நான் என் மனதைத் தூய்மையானது என்று கூற மாட்டேன். நிச்சயமாக மனித

மனம் தீமையைத்தான் தூண்டும், ஆயினும் என் இறைவன் கருணை புரிந்தாலே அன்றி. நிச்சயமாக என் இறைவன் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான் (என்று ஜோஸஃப் கூறினார்)''.

*54.* "அவரை என்னிடம் அழைத்து வாருங்கள். அவரை நான் எனது தனிப்பட்ட சேவைக்காக வைத்துக் கொள்கிறேன்" என்று அரசர் கூறினார். ஜோஸஃப் அவரிடம் பேசியபோது, "இன்று முதல் நீர் எங்களிடம் மதிப்பிற்குரியவராகவும், நம்பிக்கைக்குரியவராகவும் ஆகிவிட்டீர்" என்று கூறினார். *55.* அதற்கு ஜோஸஃப் "என்னை நாட்டின் கருவூலங்களுக்குப் பொறுப்பாளராக்குங்கள். நான் பாதுகாப்பவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கிறேன்" என்று கூறினார். *56.* இவ்வாறு நாம் ஜோஸஃபிற்கு நாட்டில் அனைத்து வசதிகளையும் வழங்கினோம். அங்கு அவர் எங்கு விரும்பினாலும் வசித்துக் கொள்ளலாம். நாம் நாடியோர் மீது நம் கருணையைப் பொழிகின்றோம். நன்மை செய்வோரின் கூலியை நாம் வீணாக்குவதில்லை. *57.* நம்பிக்கைகொண்டு இறையச்சத்துடன் வாழ்பவர்களுக்கு மறுமையின் கூலியே மிகச்சிறந்ததாகும்.

*58.* ஜோஸஃபின் சகோதரர்கள் எகிப்துக்கு வந்து அவரிடம் சென்றார்கள். அவர் அவர்களை அறிந்துகொண்டார். ஆனால் அவர்கள் அவரை அறிந்துகொள்ளவில்லை. *59.* அவர்களுக்கான பொருட்களை ஏற்பாடு செய்துவிட்டு அவர், "உங்கள் தந்தை(யின் இன்னொரு மனைவியின் மூலம் பிறந்த) சகோதரனையும் என்னிடம் அழைத்து வாருங்கள். நான் தானியங்களை முழுமையாக அளந்து தருபவனாகவும் சிறந்த முறையில் உபசரிப்பவனாகவும் இருக்கிறேன் என்பதை நீங்கள் பார்க்கவில்லையா? *60.* அவரை நீங்கள் என்னிடம் அழைத்து வராவிட்டால் என்னிடம் உங்களுக்குத் தானியமும் கிடைக்காது; நீங்கள் என்னிடம் வரவும் வேண்டாம்" என்று

கூறினார். ***61.*** அதற்கு அவர்கள், “நாங்கள் அவர் குறித்து தந்தையை இணங்க வைக்க முயற்சிப்போம். நாங்கள் இதனைச் செய்ய வேண்டியவர்களாக இருக்கின்றோம்” என்று கூறினார்கள்.

***62.*** அவர் தம் பணியாளர்களிடம், “அவர்களின் பொருட்களை அவர்களின் பொதிகளிலேயே வைத்து விடுங்கள். அவர்கள் தம் வீட்டை அடைந்ததும் அவற்றை அறிந்துகொண்டு அநேகமாக திரும்பி வரக்கூடும்” என்று கூறினார். ***63.*** அவர்கள் தம் தந்தையிடம் திரும்பிச் சென்றதும், “தந்தையே! எங்களுக்குத் தானியம் தடுக்கப்பட்டு விட்டது. எனவே எங்கள் சகோதரரை (புன்யாமீன்) எங்களுடன் அனுப்பி வையுங்கள், நாங்கள் தானியங்களை வாங்கி வருகிறோம். நாங்கள் அவருக்கு பாதுகாவலர்களாவோம்” என்று கூறினார்கள். ***64.*** அதற்கு ஜேக்கப், “இதற்கு முன்னர் இவரது சகோதரரின் விஷயத்தில் உங்களை நம்பியதைப்போல இவர் விஷயத்திலும் உங்களை நான் நம்ப வேண்டுமா? அல்லாஹ்வே சிறந்த பாதுகாவலன். அவன் கருணையாளர்களில் எல்லாம் மிகச்சிறந்த கருணையாளனாக இருக்கின்றான்” என்று கூறினார்.

***65.*** அவர்கள் தம் பொதிகளைத் திறந்தபோது தங்களின் பொருட்கள் தங்களிடமே திருப்பித் தரப்பட்டுள்ளதைக் கண்டு “எங்கள் தந்தையே, நமக்கு வேறென்ன வேண்டும்? நமது பொருட்கள் நம்மிடமே திருப்பித் தரப்பட்டுள்ளன. நாங்கள் சென்று நம் குடும்பத்தினருக்குத் தேவையான உணவுப்பொருட்களை வாங்கி வருவோம். எங்கள் சகோதரரையும் பாதுகாத்துக் கொள்வோம். ஒரு ஒட்டகச் சுமையளவு தானியமும் அதிகம் கொண்டு வருகிறோம். இது மிகக் குறைவானதுதான்” என்று கூறினார்கள். ***66.*** அதற்கு ஜேக்கப், “நீங்கள் அவரை நிச்சயம் என்னிடம் அழைத்து வருவீர்கள் என்று அல்லாஹ்வின் பெயரால் உறுதிமொழி அளிக்காதவரை நான் அவரை உங்களுடன் அனுப்ப மாட்டேன், ஆனால் நீங்கள்

அனைவரும் ஏதேனும் ஆபத்தில் சிக்கிக் கொண்டாலே தவிர" என்று கூறினார். எனவே அவர்கள் அவரிடம் தங்கள் உறுதிமொழியை அளித்தபோது 'நாம் கூறும் விஷயத்திற்கு அல்லாஹ்வே காவலனாக இருக்கின்றான்' என்று அவர் கூறினார்.

67. "என் மக்களே, நீங்கள் அனைவரும் ஒரே வாசல் வழியாக நுழையாதீர்கள். மாறாக வெவ்வேறு வாசல் வழியாக நுழையுங்கள். அல்லாஹ்வின் கட்டளையைவிட்டும் சிறிதளவும் நான் உங்களைக் காப்பாற்றிவிட முடியாது. அதிகாரம் அல்லாஹ்வுக்கே உரியது. நான் அவனையே சார்ந்துள்ளேன். நம்பிக்கையாளர்கள் அவனையே சார்ந்திருக்க வேண்டும்" என்றும் அவர் கூறினார். 68. அவர்களின் தந்தை கூறியதைப் போலவே அவர்கள் சென்றபோது ஜேக்கபுடைய மனதில் உள்ள ஒரு தேவையை நிறைவேற்றியதைத்தவிர அது அல்லாஹ்வின் எந்தக் கட்டளையை விட்டும் சிறிதளவும் அவர்களைக் காப்பாற்றி விடவில்லை. நிச்சயமாக நாம் கற்றுக் கொடுத்ததனால் ஜேக்கப் அறிவுடையவராக இருந்தார். ஆயினும் மக்களில் பெரும்பாலோர் அறிந்துகொள்வதில்லை.

69. அவர்கள் ஜோஸஃபிடம் சென்றபோது அவர் தம் சகோதரரை தம்முடன் வைத்துக் கொண்டார். "நான் உமது சகோதரன்தான். எனவே அவர்கள் செய்துகொண்டிருப்பதைப் பற்றிக் கவலைப்படாதீர்" என்று கூறினார். 70. அவர்களுக்குத் தேவையான ஏற்பாடுகளைச் செய்தபோது தம் சகோதரரின் பொதியினுள் நீரருந்தும் குவளையை வைத்து விட்டார். பிறகு ஒரு அறிவிப்பாளர், "பயணக் கூட்டத்தினரே! நீங்கள்தான் திருடர்கள்" என்று உரக்கக் கூவினார். 71. அவர்கள் இவர்களை நோக்கிவந்து "எதை நீங்கள் இழந்து விட்டீர்கள்?" என்று கேட்டார்கள். 72. அதற்கு அவர்கள், "அரசரின் அளவுக் குவளையைக் காணவில்லை" என்று கூறினார்கள். "அதனைக் கொண்டுவருபவருக்கு

ஒரு ஒட்டகம் நிறைய தானியம் உண்டு. அதற்கு நானே பொறுப்பாவேன்” என்று அவர்களில் ஒருவர் கூறினார். **73.** அதற்கு அவர்கள், “அல்லாஹ்வின்மீது ஆணையாக, நாங்கள் இந்த நாட்டில் குழப்பம் விளைவிக்க வரவில்லை என்பதை நீங்கள் அறிவீர்கள், நாங்கள் திருடர்களும் அல்லர்” என்று கூறினார்கள். **74.** அதற்கு அவர்கள், “நீங்கள் பொய்யர்களாக இருந்தால் திருடனுக்குரிய தண்டனை என்ன?” என்று கேட்டார்கள். **75.** “யாருடைய பொதியில் அது கண்டெடுக்கப்படுகிறதோ அவரே அதற்குரிய பரிகாரமாவார். இவ்வாறுதான் நாங்கள் அநியாயக்காரர்களைத் தண்டிக்கிறோம்” என்று அவர்கள் கூறினார்கள். **76.** எனவே அவர் தமது இளைய சகோதரனின் பொதிக்கு முன்னதாக அவர்களின் பொதிகளைச் சோதிக்கத் தொடங்கி இறுதியில் தமது சகோதரனின் பொதியிலிருந்து அதனை வெளியே எடுத்தார். இவ்வாறே நாம் ஜோஸஃபுக்காகத் திட்டம் தீட்டினோம். அரசரின் சட்டப்படி அவர் தம் சகோதரனைத் தடுத்து வைத்துக்கொள்ள முடியாதவராக இருந்தார், ஆனால் அல்லாஹ் நாடினாலே தவிர. நாம் நாடுவோரின் அந்தஸ்துகளை உயர்த்தி விடுகிறோம். ஒவ்வோர் அறிவாளிக்கும் மேலாக ஒரு அறிவாளி இருக்கின்றார்.

**77.** “இவர் திருடியிருந்தால் இதற்குமுன் இவரது ஒரு சகோதரரும் திருடியிருக்கிறார்” என்று அவர்கள் கூறினார்கள். ஆனால் விஷயத்தை அவர்களிடம் வெளிப்படுத்தாமல் ஜோஸஃப் தம் மனதில் மறைத்துக் கொண்டார். “நீங்கள்தான் கெட்ட மனிதர்கள். நீங்கள் கூறுவதை அல்லாஹ் நன்கறிவான்” என்று தம் மனதிற்குள்ளாகவே கூறிக்கொண்டார். **78.** “அரசரே! இவருக்கு வயது முதிர்ந்த தந்தை இருக்கிறார். ஆகவே இவருக்குப் பதிலாக எங்களில் ஒருவரைப் பிடித்துக் கொள்ளுங்கள். நாங்கள் உங்களை நல்லவராகக் காண்கிறோம்” என்று அவர்கள் கூறினார்கள். **79.** அதற்கு அவர்,

“நமது பொருளை எவரிடம் கண்டெடுத்தோமோ அவரைத்தவிர மற்றவரைப் பிடிப்பதைவிட்டும் நாங்கள் அல்லாஹ்விடம் பாதுகாப்பு தேடுகிறோம். நாங்கள் அவ்வாறு செய்தால் அநியாயக்காரர்களாகி விடுவோம்” என்று கூறினார்.

*80.* அவரிடம் அவர்கள் நம்பிக்கை இழந்தபோது தனியாகச்சென்று தங்களுக்குள் ஆலோசனை செய்தார்கள். அவர்களில் மூத்தவர், “உங்களின் தந்தை அல்லாஹ்வின் பெயரால் உங்களிடம் உறுதிமொழி பெற்றுள்ளார் என்பதையும் இதற்குமுன் ஜோஸஃபின் விஷயத்திலும் வரம்பு மீறினீர்கள் என்பதையும் நீங்கள் அறிய மாட்டீர்களா? ஆகவே என் தந்தை எனக்கு அனுமதியளிக்கும்வரை அல்லது அல்லாஹ் எனக்கு ஏதேனும் தீர்ப்பளிக்கும்வரை நான் இந்த நாட்டை விட்டு அகலவே மாட்டேன். தீர்ப்பளிப்பதில் அவனே மிகச் சிறந்தவன்” என்று கூறினார். *81.* “நீங்கள் உங்கள் தந்தையிடம் சென்று கூறுங்கள். எங்கள் தந்தையே! உங்கள் மகன் திருடி விட்டான். நாங்கள் அறிந்ததைத்தான் கூறுகிறோம். மறைவானவற்றை நாங்கள் கண்காணிப்பவர்கள் அல்லர்”. *82.* “நாங்கள் இருந்த ஊரின் மக்களையும், எங்களுடன் வந்த பயணக் கூட்டத்தாரிடமும் கேட்டுப் பாருங்கள். நிச்சயமாக நாங்கள் உண்மையைத்தான் கூறுகிறோம்” (என்றும் கூறினார்).

*83.* “இல்லை. உங்களின் உள்ளம் ஒரு விஷயத்தை உங்களுக்கு அழகாக்கி விட்டது. எனவே நான் பொறுமையை மேற்கொள்வேன். அல்லாஹ் அவர்கள் அனைவரையும் என்னிடம் கொண்டு வரக்கூடும். அவன் நன்கறிந்தவனாகவும் ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்” என்று ஜேக்கப் கூறினார். *84.* அவர் அவர்களை விட்டுவிலகி “அந்தோ! ஜோஸஃபே!” என்று அழ ஆரம்பித்து விட்டார். கவலையால் அவரது கண்கள்

வெளுத்து விட்டன. அவர் துக்கத்தை அடக்கிக் கொண்டிருந்தார். *85.* அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின்மீது ஆணையாக, நீங்கள் ஜோஸஃபின் நினைவிலேயே உருகிப் போய் விடுவீர்கள் அல்லது அழிந்து விடுவீர்கள் போலும்" என்று கூறினார்கள். *86.* அதற்கு அவர், "என் கவலையையும், துக்கத்தையும் நான் அல்லாஹ்விடமே முறையிடுகிறேன். அல்லாஹ்விடமிருந்து நீங்கள் அறியாதவற்றை நான் அறிவேன்" என்று கூறினார். *87.* "என் மக்களே, நீங்கள் சென்று ஜோஸஃபையும், அவரது சகோதரரையும் தேடுங்கள். அல்லாஹ்வின் கருணையில் நம்பிக்கையிழந்து விடாதீர்கள். நிராகரிக்கும் மக்கள்தான் அவனது கருணையைக் குறித்து நம்பிக்கையிழந்து விடுவார்கள்" (என்றும் அவர் கூறினார்).

*88.* அவர்கள் ஜோஸஃபிடம் சென்று, "மேலானவரே, எங்களையும், எங்கள் குடும்பத்தாரையும் பெருந்துன்பம் பீடித்துள்ளது. நாங்கள் சிறிதளவு பொருளையே கொண்டு வந்துள்ளோம். எனவே எங்களுக்கு தானியத்தை நிறைவாக வழங்கி தானமும் செய்யுங்கள். நிச்சயமாக அல்லாஹ் தானம் செய்வோருக்கு அதற்குரிய கூலியை வழங்கிடுவான்" என்று கூறினார்கள். *89.* அப்போது அவர், "நீங்கள் அறியாதிருந்தபோது ஜோஸஃபையும் அவரது சகோதரரையும் என்ன செய்தீர்கள் என்று தெரியுமா?" என்று கேட்டார். *90.* "உண்மையில் நீங்கள்தான் ஜோஸஃபா?" என்று அவர்கள் ஆச்சர்யமாகக் கேட்டார்கள். "ஆம், நான்தான் ஜோஸஃப். இவர் என் சகோதரர். அல்லாஹ் எங்கள்மீது அருள் புரிந்துள்ளான். இறையச்சத்துடன் பொறுமையை மேற்கொண்டு நற்செயல் புரிவோரின் கூலியை அல்லாஹ் ஒருபோதும் வீணாக்க மாட்டான்" என்று அவர் கூறினார்.

*91.* அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின்மீது ஆணையாக! அல்லாஹ் எங்களைவிட உம்மைச் சிறப்பித்துள்ளான். நிச்சயமாக

நாங்கள் தவறிழைத்து விட்டோம்” என்று கூறினார்கள். **92.** அதற்கு ஜோஸஃப், “இன்று உங்கள் மீது எந்தக் குற்றமுமில்லை. அல்லாஹ் உங்களை மன்னிப்பானாக. அவன் அனைவரையும்விட பெரும் கருணையாளன். **93.** நீங்கள் எனது இந்தச் சட்டையைக் கொண்டுசென்று என் தந்தையின் முகத்தில் போடுங்கள். அவர் பார்வையுடையவராக ஆகிவிடுவார். உங்கள் குடும்பத்தார் அனைவரையும் என்னிடம் அழைத்து வாருங்கள்” என்று கூறினார்.

**94.** பயணக் கூட்டம் (எகிப்திலிருந்து) புறப்பட்டபோது (கன்ஆன் எனும் ஊரில் இருந்த) அவரது தந்தை, “நான் ஜோஸஃபின் வாடையை உணர்கிறேன். முதுமையினால் நான் புலம்புவதாக நீங்கள் எண்ணி விடக்கூடாதே” என்று கூறினார். **95.** (அங்கிருந்த) மக்கள், “அல்லாஹ்வின் மீது ஆணையாக! பழைய தேடலிலேயே நீங்கள் மூழ்கிக் கிடக்கிறீர்கள்” என்று கூறினார்கள். **96.** எனவே நற்செய்தி கூறுபவர் வந்தபோது, அவர் அச்சட்டையை ஜேக்கபுடைய முகத்தில் போட்டார். உடனே அவர் பார்வையுடையவராகி விட்டார். அப்போது அவர், “நீங்கள் அறியாதவற்றை அல்லாஹ்விடமிருந்து நான் அறிவேன் என்று உங்களிடம் கூறவில்லையா?” என்று கேட்டார். **97.** “எங்கள் தந்தையே, எங்களுக்காக மன்னிப்புக் கோரி பிரார்த்தனை செய்யுங்கள். நிச்சயமாக நாங்கள் குற்றவாளிகளாக இருந்தோம்” என்று ஜோஸஃபின் சகோதரர்கள் கூறினார்கள். **98.** அதற்கு அவர், “நான் உங்களுக்காக என் இறைவனிடம் மன்னிப்புக் கோருவேன். நிச்சயமாக அவன் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்” என்று கூறினார்.

**99.** அவர்கள் ஜோஸஃபிடம் வந்தபோது அவர் தம் பெற்றோரைத் தம்மிடம் அழைத்துக் கொண்டார். “அல்லாஹ்வின்

நாட்டப்படி எகிப்தில் நீங்கள் அச்சமற்றவர்களாக இருங்கள்" என்று அவர் அவர்களிடம் கூறினார். 100. அவர் தம் பெற்றோரை அரியணையின் மீது அமர வைத்தார். அனைவரும் அவருக்குச் சிரம்பணிந்தார்கள். "என் தந்தையே! இதுதான் நான் முன்னர் கண்ட கனவின் விளக்கம். என் இறைவன் அதனை உண்மையாக்கி விட்டான். அவன் என்மீது பேருபகாரம் புரிந்துள்ளான். அதாவது சிறையிலிருந்து என்னை விடுவித்து எனக்கும், என் சகோதரர்களுக்குமிடையே சாத்தான் குழப்பத்தை ஏற்படுத்தியபின்னரும் அவன் உங்கள் அனைவரையும் பாலைவனத்திலிருந்து இங்கு கொண்டுவந்து சேர்த்துள்ளான். நிச்சயமாக என் இறைவன் தான் நாடும் விஷயத்திற்கு சிறந்த முறையில் திட்டமிட்டுக் கொள்கிறான். அவன் நன்கறிந்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்" (என்று கூறி),

101. "என் இறைவா! நீ எனக்கு ஆட்சியதிகாரத்தில் சிறிதளவு வழங்கி விஷயங்களின் உட்கருத்தையும் கற்றுக் கொடுத்தாய். வானங்களையும் பூமியையும் படைத்தவனே! நீயே எனக்கு இவ்வுலகிலும், மறுவுலகிலும் பாதுகாவலன். உனக்கு அடிபணிந்த நிலையிலேயே என்னை மரணிக்கச் செய்வாயாக. நல்லோர்களுடன் என்னைச் சேர்த்தருள்வாயாக" (என்று பிரார்த்தித்தார்).

102. (தூதரே) இவை மறைவான செய்திகளாகும். இவற்றை நாம் உமக்கு அறிவிக்கிறோம். ஜோஸஃபின் சகோதரர்கள் திட்டம் தீட்டி ஏகமனதாக அதனை முடிவு செய்தபோது நீர் அவர்களுடன் இருக்கவில்லை. 103. நீர் எவ்வளவுதான் விரும்பினாலும் மக்களில் பெரும்பாலோர் நம்பிக்கைகொள்ள மாட்டார்கள். 104. நீர் அதற்காக அவர்களிடம் எந்தக் கூலியையும் கேட்பதில்லை. இது உலக மக்கள் அனைவருக்கும் ஒரு அறிவுரையே ஆகும்.

*105.* வானங்களிலும் பூமியிலும் எத்தனையோ சான்றுகள் இருக்கின்றன. ஆனால் அவற்றைப் புறக்கணித்தவர்களாகவே அவர்கள் கடந்து செல்கிறார்கள். *106.* அவர்களில் பெரும்பாலோர் இறைவனை ஏற்றுக்கொள்கிறார்கள். ஆயினும் அவர்கள் இணைவைக்கிறார்கள். *107.* சூழ்ந்துகொள்ளும் இறைவேதனை அவர்களை வந்தடையாதென்றோ, அவர்கள் அறியாதிருக்கும் நிலையில் திடீரென அவர்களிடம் மறுமை வந்து விடாதென்றோ அவர்கள் நிம்மதியாக இருக்கின்றார்களா? *108.* நீர் கூறும்: "இதுதான் என் வழி. நானும் என்னைப் பின்பற்றியவர்களும் தெளிவான அறிவுடன் அல்லாஹ்வின் பக்கம் அழைக்கின்றோம். அல்லாஹ் தூய்மையானவன். நான் இணைவைப்பவர்களில் உள்ளவன் அல்லன்".

*109.* உமக்கு முன்னர் பல்வேறு ஊர்களைச் சேர்ந்த ஆண்களையே நாம் தூதர்களாக அனுப்பி அவர்களுக்கு அறிவித்துக் கொண்டிருந்தோம். அவர்கள் பூமியில் பயணம் செய்து அவர்களுக்கு முன்னால் இருந்தவர்களின் முடிவு என்னவாயிற்று என்பதைப் பார்க்க வேண்டாமா? இறையச்சமுடையோருக்கு மறுமையின் (சொர்க்க) வீடு சிறந்தது. நீங்கள் புரிந்துகொள்ள மாட்டீர்களா? *110.* இறுதியில் தூதர்கள் நிராசையடைந்து தங்களிடம் பொய்தான் கூறப்பட்டதுஎன்று எண்ணியபோது நம் உதவி அவர்களிடம் வந்தது. நாம் நாடியோர் காப்பாற்றப்பட்டார்கள். குற்றம் புரியும் மக்களைவிட்டு நம் வேதனை அகற்றப்படாது.

*111.* அவர்களின் வரலாறுகளில் புரிந்துகொள்ளும் மக்களுக்கு பெரும் படிப்பினை இருக்கின்றது. இது புனைந்துரைக்கப்பட்ட செய்தியல்ல. மாறாக இது தனக்கு முன்னுள்ளவற்றை உண்மைப்படுத்தக்கூடியதாகவும், ஒவ்வொன்றின் விரிவுரையாகவும்,

*நம்பிக்கைகொள்ளும் மக்களுக்கு வழிகாட்டியாகவும், கருணையாகவும் இருக்கின்றது.*

## *13. இடி (அர்ரஃது)*

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

*1. அலிஃப். லாம். மீம். ரா. இவை வேத வசனங்களாகும். உம் இறைவனிடமிருந்து உமக்கு அருளப்பட்டது சத்தியமானதாகும். ஆயினும் மக்களில் பெரும்பாலோர் நம்பிக்கை கொள்வதில்லை. 2. அல்லாஹ்வே உங்கள் பார்வைக்குப் புலப்படும் தூண்களின்றி வானங்களை உயர்த்தினான். பின்னர் அவன் அரியணையின் மீது நிலைகொண்டான். அவன் சூரியனையும், சந்திரனையும் ஒரு நியதிக்குட்படுத்தியுள்ளான். ஒவ்வொன்றும் ஒரு குறிப்பிட்ட தவணைவரை இயங்கிக் கொண்டிருக்கும். அவனே அனைத்துக் காரியங்களையும் நிர்வகிக்கிறான். உங்கள் இறைவனின் சந்திப்பை நீங்கள் உறுதியாக நம்பும்பொருட்டு அவன் சான்றுகளைத் தெளிவுபடுத்துகிறான்.*

*3. அவனே பூமியை விரித்து அதில் மலைகளையும் ஆறுகளையும் ஏற்படுத்தியுள்ளான். ஒவ்வொரு கனி வகையிலும் இணைகளை ஏற்படுத்தியுள்ளான். அவனே இரவால் பகலை மூடுகிறான். சிந்திக்கும் மக்களுக்கு நிச்சயமாக இதில் ஏராளமான சான்றுகள் இருக்கின்றன.*

*4. பூமியில் அருகருகே பல பகுதிகள் உள்ளன. திராட்சைத் தோட்டங்களும், தானியப்பயிர் நிலங்களும், ஒற்றையாகவும் இரட்டையாகவும் இருக்கின்ற பேரீச்சைகளும் உள்ளன. அனைத்திற்கும் ஒரே தண்ணீர்தான் பாய்ச்சப்படுகிறது. ஆனாலும் நாம் அவற்றில் சிலவற்றை சிலவற்றைவிட சுவையில் சிறப்பித்துள்ளோம்.*

சிந்திக்கும் மக்களுக்கு நிச்சயமாக இதில் ஏராளமான சான்றுகள் இருக்கின்றன.

5. நீர் ஆச்சர்யப்பட்டால் அதைவிட ஆச்சர்யமானது, "நாங்கள் மண்ணோடு மண்ணாகி விட்டாலும் மீண்டும் புதிதாக படைக்கப்படுவோமா?" எனும் அவர்களின் கூற்றுதான். இவர்கள்தான் தம் இறைவனை நிராகரித்தவர்கள். இவர்களின் கழுத்துகளில் விலங்குகள் மாட்டப்பட்டுள்ளன. இவர்கள்தான் நரகவாசிகள். அதில் என்றென்றும் வீழ்ந்து கிடப்பார்கள்.

6. அவர்கள் நன்மைக்கு முன்பாக தீமையைக் கொண்டுவரும்படி உம்மை அவசரப்படுத்துகிறார்கள். ஆயினும் அவர்களின் காலத்திற்கு முன் நடந்து முடிந்த பல உதாரணங்கள் இருக்கின்றன. மக்கள் அநீதி இழைத்தபோதிலும் உமது இறைவன் அவர்களை மன்னிக்கக்கூடியவன்தான். ஆயினும் அவன் தண்டிப்பதில் கடுமையானவன்.

7. "அவருக்கு அவரது இறைவனிடமிருந்து ஏதேனும் சான்று அருளப்பட்டிருக்கக்கூடாதா?" என்று நிராகரிப்பாளர்கள் கேட்கிறார்கள். நீர் எச்சரிக்கை செய்பவர்தான். ஒவ்வொரு சமூகத்திற்கும் ஒரு வழிகாட்டி இருக்கின்றார்.

8. ஒவ்வொரு பெண் சுமந்திருப்பதையும் கருவறைகளில் சுருங்கி விரிவதையும் அல்லாஹ் நன்கறிவான். ஒவ்வொரு பொருளுக்கும் அவனிடமே ஒரு அளவு உள்ளது. 9. அவன் மறைவானதையும் வெளிப்படையானதையும் நன்கறிந்தவன். மிகப்பெரியவன்; மிகவும் உயர்ந்தவன். 10. உங்களில் இரகசியமாகப் பேசுபவரும், உரக்கப் பேசுபவரும், இரவில் மறைந்திருப்பவரும், பகலில் நடந்து திரிபவரும் அவனுக்குச் சமமானவர்கள்தான்.

*11.* ஒவ்வொரு மனிதனுக்கு முன்னும் பின்னும் பாதுகாவலர்கள் இருக்கிறார்கள். அவர்கள் இறைக்கட்டளைப்படி அவரைப் பாதுகாக்கிறார்கள். எந்தச் சமூகமும் தம் உள்ளங்களில் உள்ளவற்றை மாற்றாதவரை அல்லாஹ் அதனுடைய நிலையை மாற்றுவதில்லை. அல்லாஹ் ஒரு சமூகத்திற்கு ஏதேனும் துன்பத்தை நாடிவிட்டால் அதனை யாராலும் தடுக்க முடியாது. அவனைத்தவிர அவர்களுக்கு உதவியாளர்கள் யாருமில்லை.

*12.* அவனே அச்சத்தையும் ஆர்வத்தையும் ஏற்படுத்தக்கூடிய மின்னலை உங்களுக்குக் காட்டுகிறான். அவனே (நீர் நிறைந்த) கனமான மேகத்தையும் உருவாக்குகிறான். *13.* இடிமுழக்கம் அவனைப் புகழ்வதுடன் அவனது தூய்மையையும் பறைசாற்றுகிறது. வானவர்களும் அவன்மீதுள்ள அச்சத்தால் அவனைப் புகழ்கிறார்கள். அவனே இடிகளை அனுப்பி தான் நாடியோர் மீது அவற்றை விழச் செய்கிறான். அவர்கள் இறைவனைப்பற்றி தர்க்கித்துக் கொண்டிருக்கிறார்கள். அவனோ வல்லமைமிக்கவனாக இருக்கின்றான்.

*14.* உண்மையான பிரார்த்தனை அவனுக்கே உரியது. அவனைத்தவிர மக்கள் அழைக்கும் தெய்வங்கள் அவர்களுக்குப் பதிலளிக்க மாட்டாது. அவர்களின் அழைப்பிற்கு உதாரணம் தண்ணீர் தன் வாய்க்குள் செல்ல வேண்டும் என்பதற்காக அதனை நோக்கி தன் இரு கைகளையும் விரித்து வைத்திருப்பவனைப் போன்றதாகும். அது அவனது வாயினுள் தானாகச் சென்று விடாது. நிராகரிப்பாளர்களின் பிரார்த்தனைகள் யாவும் வீணானவையே.

*15.* வானங்களிலும், பூமியிலும் உள்ளவை யாவும் விரும்பியோ, விரும்பாமலோ இறைவனுக்குச் சிரம்பணிகின்றன, அவற்றின் நிழல்களும் காலையிலும், மாலையிலும்

*சிரம்பணிகின்றன. 16.* “வானங்கள் மற்றும் பூமியின் இறைவன் யார்?” என்று கேளும். “அல்லாஹ்தான்” என்று நீரே கூறும். “அவ்வாறிருக்க அவனைத்தவிர தமக்கே எவ்விதப் பலனையோ தீங்கையோ செய்ய இயலாதவற்றையா நீங்கள் உதவியாளர்களாக ஆக்கிக் கொண்டீர்கள்?” என்று கேளும். “பார்வையற்றவரும், பார்வையுள்ளவரும் சமமாவார்களா? அல்லது இருளும் ஒளியும் ஒன்றாகிவிட முடியுமா?” என்று கேளும். அல்லது அவர்களின் இணைத்தெய்வங்கள் அல்லாஹ் படைத்துள்ளதைப்போன்று ஏதேனும் படைத்ததனால் இவர்கள் குழப்பத்திற்குள்ளாகி விட்டார்களா?. நீரே கூறும்: “அல்லாஹ்தான் அனைத்தையும் படைத்தவன். அவன் தனித்தவன்; அடக்கியாள்பவன்”.

*17.* அவனே வானத்திலிருந்து நீரை இறக்கினான். ஆறுகள் அதன் அளவுக்கேற்ப நிரம்பி வழிகின்றன. வெள்ளம் வந்து மேலெழும் நுரையைச் சுமந்து செல்கிறது. ஆபரணங்கள் அல்லது வேறு சாதனங்களைச் செய்வதற்காக மக்கள் நெருப்பில் உருக்கும்போது இதே போன்றுதான் நுரை மேலெழுகிறது. இவ்வாறே அல்லாஹ் சத்தியத்திற்கும் அசத்தியத்திற்கும் உதாரணம் கூறுகிறான். நுரையோ காய்ந்து காணாமல் போய் விடுகிறது. மக்களுக்குப் பயனளிப்பது மட்டுமே பூமியில் தங்கி விடுகிறது. இவ்வாறே அல்லாஹ் உதாரணங்களைக் கூறுகிறான்.

*18.* தம் இறைவனின் அழைப்பை ஏற்றுக்கொண்டோருக்கு நன்மைகள் உண்டு. அவனது அழைப்பை ஏற்றுக்கொள்ளாதோர் பூமியிலுள்ள அனைத்தையும் இன்னும் அது போன்றதையும் பெற்றிருந்தாலும் (அந்நாளின் தண்டனையிலிருந்து தப்பிக்க) அவற்றை ஈடாகக் கொடுத்துவிடவே விரும்புவார்கள். அவர்களின் விசாரணை கடுமையானதாக இருக்கும். அவர்களின் தங்குமிடம் நரகமாகும். அது மிகவும் கெட்ட இருப்பிடமாகும்.

*19.* ‘உம் இறைவனிடமிருந்து உமக்கு அருளப்பட்டது உண்மையானது’ என்பதை அறிந்துள்ளவர் குருடரைப் போலாவாரா? அறிவுடையோர்தான் அறிவுரையை ஏற்றுக்கொள்வர்.

*20.* அவர்கள் அல்லாஹ்வுடன் செய்துகொண்ட வாக்குறுதியை நிறைவேற்றுவார்கள். அவனது உடன்படிக்கையை முறித்துவிட மாட்டார்கள். *21.* அல்லாஹ் இணைத்துக் கொள்ளும்படி கட்டளையிட்டதை இணைத்துக் கொள்வார்கள். தங்கள் இறைவனை அஞ்சுவார்கள். கடுமையான விசாரணையைப் பற்றியும் பயந்து கொண்டிருப்பார்கள். *22.* இன்னும் அவர்கள் தங்கள் இறைவனின் திருப்தியை நாடி பொறுமையை மேற்கொள்வார்கள். தொழுகையைக் கடைப்பிடித்து நாம் அவர்களுக்கு வழங்கியவற்றிலிருந்து வெளிப்படையாகவும், மறைமுகமாகவும் செலவும் செய்வார்கள். தீமையை நன்மையால் எதிர்கொள்வார்கள். இவர்களுக்குத்தான் மறுமையின் முடிவு சாதகமாக அமையும். *23.* நிலையான சுவனங்களில் அவர்களும், அவர்களின் மூதாதையர்கள், மனைவியர், குழந்தைகள் ஆகியோரில் அதற்குத் தகுதியானவர்களும் நுழைவார்கள். வானவர்கள் ஒவ்வொரு வாசல் வழியாகவும் அவர்களிடம் வருவார்கள். *24.* நீங்கள் பொறுமையை மேற்கொண்டதனால் உங்கள்மீது சாந்தி நிலவட்டும். மறுமையின் முடிவு உங்களுக்கு எவ்வளவு சிறப்பானது! (என்று கூறப்படும்).

*25.* அல்லாஹ்விடம் செய்துகொண்ட உடன்படிக்கையை உறுதிபடுத்தியபின் முறித்து விடுபவர்களும், அல்லாஹ் இணைத்து வாழும்படி கட்டளையிட்டதைத் துண்டித்தும், உலகில் குழப்பம் செய்துகொண்டு திரிபவர்களும் சாபத்திற்குத்தான் தகுதியானவர்கள். அவர்களுக்கு மறுமையில் கெட்ட முடிவுதான் உண்டு. *26.* தான் நாடியோருக்கு அல்லாஹ் தாராளமாக வாழ்வாதாரத்தை வழங்குகிறான், தான் நாடியோருக்கு சுருக்கியும் விடுகிறான்.

அவர்கள் இவ்வுலக வாழ்வைக் கொண்டு மகிழ்ச்சியடைகிறார்கள். மறுமைக்கு முன்னால் இவ்வுலக வாழ்வு அற்ப இன்பமேயாகும்.

*27.* 'அவருக்கு அவரது இறைவனிடமிருந்து ஒரு அத்தாட்சி அருளப்பட்டிருக்கக் கூடாதா?' என்று நிராகரிப்பாளர்கள் கேட்கிறார்கள். நீர் கூறும்: "தான் நாடியோரை அல்லாஹ் வழிதவறச் செய்து விடுகிறான். தன்னிடம் திரும்புவோருக்கு அவன் நேர்வழியைக் காட்டுகிறான்". *28.* அவர்கள்தான் நம்பிக்கை கொண்டவர்கள். அவர்களின் உள்ளங்கள் இறைநினைவால் அமைதியடைகின்றன. அறிந்துகொள்ளுங்கள், இறைநினைவால்தான் உள்ளங்கள் அமைதியடைகின்றன. *29.* நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிபவர்களுக்கு நற்செய்தியும் அழகிய தங்குமிடமும் உண்டு.

*30.* இவ்வாறே நாம் உம்மை ஒரு சமூகத்தின் பக்கம் அனுப்பியுள்ளோம். அது ஏனெனில் நாம் உமக்கு அறிவிப்பதை நீர் அவர்களுக்கு எடுத்துரைப்பதற்காக. அவர்களுக்கு முன்னரும் பல சமூகங்கள் கடந்து விட்டன. அவர்கள் கருணைமிக்க இறைவனை மறுத்துக் கொண்டிருக்கிறார்கள். நீர் கூறும்: "அவனே என் இறைவன். அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. அவனையே நான் சார்ந்துள்ளேன். அவன் பக்கமே நீங்கள் திரும்ப வேண்டும்".

*31.* (இதைப்போன்று) ஒரு குர்ஆனின்மூலம் மலைகள் நகர்த்திச் செல்லப்பட்டாலும் அல்லது பூமி துண்டு துண்டாக்கப்பட்டாலும் அல்லது இறந்தவர்களை பேசிடச் செய்தாலும் (இவர்கள் நம்பிக்கை கொள்ள மாட்டார்கள்). மாறாக அதிகாரம் அனைத்தும் அல்லாஹ்விடமே உள்ளது. அல்லாஹ் நாடினால் மக்கள் அனைவருக்கும் வழிகாட்டிவிடுவான் என்பதைக் குறித்து நம்பிக்கையாளர்கள் திருப்தியடையவில்லையா?

நிராகரிப்பாளர்களுக்கு அவர்களின் செயல்களினால் ஏதேனும் ஒரு ஆபத்து வந்துகொண்டே இருக்கும் அல்லது அவர்களது ஊருக்கருகில் எங்காவது இறங்கிக்கொண்டே இருக்கும். அல்லாஹ்வின் வாக்குறுதி வரும்வரை இவ்வாறு நிகழ்ந்து கொண்டேயிருக்கும். நிச்சயமாக அல்லாஹ் தன் வாக்குறுதிக்கு மாறுசெய்வதில்லை. *32.* உமக்கு முன்னரும் தூதர்கள் பரிகசிக்கப்பட்டார்கள். ஆயினும் நான் நிராகரிப்பாளர்களுக்கு அவகாசம் அளித்து இறுதியில் அவர்களைப் பிடித்துக் கொண்டேன். என் தண்டனை எவ்வாறு இருந்தது என்பதைப் பாருங்கள்.

*33.* ஒவ்வொருவரும் செய்கின்ற செயல்களைக் கண்காணிப்பவனும் எதற்கும் ஆற்றல் பெறாதவையும் சமமாவார்களா? ஆனாலும் அவர்கள் அல்லாஹ்வுக்கு இணைத்தெய்வங்களை ஏற்படுத்திக் கொண்டார்கள். நீர் அவர்களிடம் கேளும்: "நீங்கள் அவற்றின் பெயர்களைக் கூறுங்கள். அல்லது பூமியில் அல்லாஹ் அறியாதவற்றையா நீங்கள் அவனுக்கு அறிவிக்கிறீர்கள்? அல்லது வெறும் வார்த்தைகளைக் கூறுகிறீர்களா?" மாறாக நிராகரிப்பாளர்களுக்கு அவர்களது சூழ்ச்சி அழகாக்கப்பட்டு நேர்வழியைவிட்டும் அவர்கள் தடுக்கப்பட்டு விட்டார்கள். அல்லாஹ் யாரை வழிகெடுத்து விடுவானோ அவருக்கு வழி காட்டுபவர் யாருமில்லை. *34.* இவ்வுலக வாழ்வில் அவர்களுக்கு வேதனை உண்டு. மறுமையின் வேதனையோ மிகக் கடுமையானதாகும். அவர்களை அல்லாஹ்விடமிருந்து காப்பாற்றுபவர் யாரும் இல்லை.

*35.* இறையச்சமுடையோருக்கு வாக்களிக்கப்பட்ட சுவனமானது, ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும், கனிகளும், நிழலும் என்றென்றும் இருக்கும் தன்மையானதாகும். இதுதான்

இறையச்சமுடையோரின் முடிவாகும். நிராகரிப்பாளர்களின் முடிவு நரகமேயாகும்.

*36.* நாம் யாருக்கு வேதத்தை வழங்கியுள்ளோமோ அவர்கள் உமக்கு அருளப்பட்டுள்ளதைக் குறித்து மகிழ்ச்சியடைகிறார்கள். வேதங்களில் சிலவற்றை நிராகரிக்கக்கூடியவர்களும் அக்குழுக்களில் இருக்கிறார்கள். நீர் கூறும், "நான் அல்லாஹ்வை மட்டுமே வணங்க வேண்டும் என்றும் அவனுக்கு இணைவைக்கக்கூடாது என்றும் கட்டளையிடப்பட்டுள்ளேன். அவன்பக்கமே நான் அழைக்கிறேன். அவனிடமே நான் திரும்ப வேண்டும்". *37.* இவ்வாறே நாம் இதனை ஒரு கட்டளையாக அரபி மொழியில் அருளியுள்ளோம். உம்மிடம் அறிவு வந்துவிட்ட பின்னரும் அவர்களின் விருப்பங்களை நீர் பின்பற்றினால் அல்லாஹ்வுக்கு எதிராக உமக்கு உதவி புரிபவரோ, காப்பாற்றுபவரோ இருக்க மாட்டார்கள்.

*38.* உமக்கு முன்னால் பல தூதர்களை நாம் அனுப்பியுள்ளோம். அவர்களுக்கு மனைவி மக்களையும் வழங்கியிருந்தோம். அல்லாஹ்வின் அனுமதியின்றி எந்தத்தூதரும் எந்தவொரு அத்தாட்சியையும் கொண்டுவர முடியாது. ஒவ்வொரு காலகட்டத்துக்கும் ஒரு வேதம் இருக்கிறது. *39.* தான் நாடுவதை அல்லாஹ் அழித்து விடுகிறான், தான் நாடுவதை நிலைத்திருக்கச் செய்கிறான். அவனிடமே மூலப்பதிவேடு உள்ளது.

*40.* உமக்கு நாம் வாக்களித்தவற்றில் சிலவற்றை உமக்குக் காட்டினாலும் அல்லது உமது உயிரைக் கைப்பற்றிவிட்டாலும் எடுத்துரைப்பது மட்டுமே உமது கடமையாகும். விசாரணை செய்வது நமது பொறுப்பாகும். *41.* நாம் பூமியை அதன் சுற்றளவிலிருந்து குறைத்துக்கொண்டே வருவதை அவர்கள் பார்க்கவில்லையா? அல்லாஹ்வே தீர்ப்பளிக்கிறான், அவனது

*தீர்ப்பை நீக்குபவர் யாரும் இல்லை. அவன் விசாரணை செய்வதில் விரைவானவன். **42.** அவர்களுக்கு முன்னிருந்தவர்களும் திட்டங்கள் தீட்டினார்கள். ஆனால் திட்டங்கள் அனைத்தும் அல்லாஹ்வின் கட்டுப்பாட்டில்தான் உள்ளன. ஒவ்வொருவரும் என்னென்ன செய்து கொண்டிருக்கிறார்கள் என்பதை அவன் அறிவான். மறுமையின் வீடு யாருக்குச் சொந்தம் என்பதை நிராகரிப்பாளர்கள் விரைவில் அறிந்துகொள்வார்கள்.*

***43.*** *“நீ இறைவனால் அனுப்பப்பட்டவர் அல்ல” என்று நிராகரிப்பாளர்கள் கூறுகிறார்கள். நீர் கூறும்: “எனக்கும், உங்களுக்குமிடையே சாட்சி கூற அல்லாஹ்வும், வேத அறிவு உடையவர்களும் போதுமானவர்கள்”.*

## 14. ஆப்ரஹாம் (இப்ராஹீம்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

***1.*** *அலிஃப். லாம். ரா. இது நாம் உமக்கு அருளியுள்ள வேதமாகும். அது நீர் மக்களை இருளிலிருந்து வெளியேற்றி - அவர்களது இறைவனின் கட்டளைப்படி - வெளிச்சத்தின் பக்கம் கொண்டு வருவதற்காக. அதாவது புகழுக்குரியவனும் வல்லமைமிக்கவனுமாகிய அல்லாஹ்வின் பாதையின் பக்கம் அவர்களைக் கொண்டு வருவதற்காக. **2.** வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அவனுக்கே உரியன. நிராகரிப்பாளர்களுக்கு கடுமையான வேதனையினால் கேடுதான் உண்டாகும். **3.** அவர்கள் மறுமையைவிட இவ்வுலக வாழ்வை விரும்புகிறார்கள். மக்களை இறைவழியைவிட்டும் தடுத்து அதில் குறை தேடுகிறார்கள். இவர்கள் வழிகெட்டு வெகுதூரம் சென்று விட்டார்கள்.*

4. நாம் அனைத்துத் தூதர்களையும் அவரவரின் சமூக மொழியிலேயே அனுப்பி வைத்தோம், அவர்களுக்குத் தெள்ளத்தெளிவாய் அவர் எடுத்துரைக்க வேண்டும் என்பதற்காக. தான் நாடியோரை அல்லாஹ் வழிதவறச் செய்கிறான், தான் நாடியோருக்கு நேர்வழி காட்டுகிறான். அவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும் ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.

5. நாம் மோசேவை நம் சான்றுகளுடன் "உம் சமூகத்தை இருளிலிருந்து வெளியேற்றி வெளிச்சத்தின் பக்கம் கொண்டு வாரும். அவர்களுக்கு அல்லாஹ்வின் (தண்டனை ஏற்பட்ட) நாட்களை நினைவூட்டும்*" என்று கூறி அனுப்பினோம். நிச்சயமாக பொறுமையும், நன்றியுணர்வும் உள்ள ஒவ்வொருவருக்கும் இதில் பெரும் சான்றுகள் இருக்கின்றன.

6. மோசே தம் சமூகத்திடம், "அல்லாஹ் உங்களுக்கு வழங்கிய அருட்கொடையை எண்ணிப் பாருங்கள். உங்களைக் கொடிய வேதனையில் ஆழ்த்தி வைத்திருந்த பாரோவுடைய கூட்டத்தாரிடமிருந்து அவன் உங்களைக் காப்பாற்றினான். அவர்கள் உங்கள் ஆண்மக்களைக் கொன்றுவிட்டு, பெண் மக்களை உயிருடன் விட்டு வந்தார்கள். இதில் உங்கள் இறைவனிடமிருந்து பெரும் சோதனை இருந்தது" என்று கூறினார். 7. "நீங்கள் நன்றி செலுத்தினால் நிச்சயம் நான் உங்களுக்கு மேலதிகமாக வழங்குவேன். நீங்கள் நன்றி செலுத்தாதிருந்தால் என் தண்டனை மிகக் கடுமையானது" என்று உங்கள் இறைவன் எச்சரித்ததையும் எண்ணிப் பாருங்கள். 8. மோசே, "நீங்களும் பூமியிலுள்ளவர்கள் அனைவரும் நிராகரித்துவிட்டாலும் - அல்லாஹ் தேவையற்றவனாகவும், புகழுக்குரியவனாகவும் இருக்கின்றான்" என்று கூறினார்.

---

*அல்லாஹ்வின் நாட்கள் என்பது இறைவனின் தீர்ப்பு வெளிப்பட்ட நாட்களாகும்.

*9.* உங்களுக்கு முன்சென்ற நோவா, ஆத் மற்றும் ஸமூத் சமூகத்தினரின் செய்தியும் அவர்களுக்குப்பின் வந்தவர்களின் செய்தியும் உங்களிடம் வரவில்லையா? அவர்களை அல்லாஹ்வைத்தவிர வேறு யாரும் அறிய மாட்டார். அவர்களின் தூதர்கள் அவர்களிடம் தெளிவான ஆதாரங்களைக் கொண்டு வந்தார்கள். ஆனால் அவர்கள் தம் கைகளை வாய்களில் வைத்துக்கொண்டு, "நிச்சயமாக நீங்கள் கொண்டு வந்திருப்பதை நாங்கள் நிராகரிக்கிறோம். நீங்கள் அழைக்கும் விஷயத்தில் நாங்கள் கடும் சந்தேகத்தில் இருக்கிறோம்" என்று கூறினார்கள்.

*10.* அவர்களின் தூதர்கள், "வானங்களையும், பூமியையும் படைத்த இறைவனைப்பற்றியா சந்தேகம்? உங்கள் பாவங்களை மன்னித்து விடவும், உங்களுக்கு ஒரு குறிப்பிட்ட காலம்வரை அவகாசம் அளிக்கவும் அவன் உங்களை அழைக்கிறான்" என்று கூறினார்கள். அதற்கு அவர்கள், "நீங்கள் எங்களைப்போன்ற ஒரு மனிதர்தான். எங்கள் முன்னோர்கள் வணங்கி வந்ததை நாங்கள் வணங்குவதைவிட்டும் தடுக்கவா நீங்கள் விரும்புகிறீர்கள்? அப்படியானால் எங்களிடம் தெளிவான ஆதாரத்தைக்கொண்டு வாருங்கள்" என்று கூறினார்கள்.

*11.* அதற்கு அவர்களுடைய தூதர்கள், "நாங்கள் உங்களைப்போன்ற மனிதர்கள்தான். ஆயினும் தன் அடியார்களில் தான் நாடியோர் மீது அல்லாஹ் அருள்புரிகிறான். அல்லாஹ்வின் அனுமதியின்றி எங்களால் எந்த ஆதாரத்தையும் கொண்டுவர முடியாது. நம்பிக்கையாளர்கள் அல்லாஹ்வையே முழுமையாகச் சார்ந்திருக்க வேண்டும். *12.* அல்லாஹ்வை நாங்கள் சாராமல் இருக்க எங்களுக்கு என்ன நேர்ந்தது? அவன்தானே எங்களுக்கு வழிகாட்டியிருக்கிறான். நீங்கள் கொடுக்கும் துன்பங்களை நாங்கள்

சகித்துக் கொள்வோம். சார்ந்திருப்பவர்கள் அல்லாஹ்வையே முழுமையாக சார்ந்திருக்க வேண்டும்” என்று கூறினார்கள்.

*13.* நிராகரிப்பாளர்கள் தங்களின் தூதர்களிடம், “நீங்கள் எங்கள் மார்க்கத்திற்கு திரும்பிவிட வேண்டும். இல்லையெனில் எங்களுடைய ஊரிலிருந்து உங்களை வெளியேற்றி விடுவோம்” என்று கூறினார்கள். தூதர்களது இறைவன் அவர்களுக்கு, “அநியாயக்காரர்களை நிச்சயம் நாம் அழித்திடுவோம். *14.* அவர்களுக்குப் பின் நாம் உங்களை பூமியில் வசிக்கச் செய்வோம். இது என் முன்னால் நிற்பதை அஞ்சியவருக்கும் என் எச்சரிக்கையை பயந்தவருக்கும் உரியதாகும்” என்று அறிவித்தான்.

*15.* அவர்கள் தீர்ப்பை வேண்டினார்கள். பிடிவாதம்கொண்ட ஆணவக்காரர்கள் அனைவரும் இழப்பிற்குள்ளாகி விட்டார்கள். *16.* அவர்களுக்கு முன்னால் நரகம்தான் இருக்கிறது. அங்கு அவர்களுக்கு சீழ்நீர் புகட்டப்படும். *17.* அவர்கள் அதனைக் கொஞ்சம் கொஞ்சமாக விழுங்குவார்கள். ஆயினும் அவர்களால் சிரமத்துடனேயல்லாது அதனை விழுங்கிவிட முடியாது. எல்லாத் திசைகளிலிருந்தும் மரணம் அவர்களைச் சூழ்ந்திருக்கும். ஆயினும் அவர்கள் மரணிக்க மாட்டார்கள். அதற்குப்பின் கடும் வேதனையும் உண்டு.

*18.* தங்கள் இறைவனை நிராகரித்தோரின் செயல்களுக்கு உதாரணம், புயல்வீசும் நாளில் காற்றில் அடித்துச் செல்லப்பட்ட சாம்பலைப் போன்றதாகும். தாங்கள் சம்பாதித்தவற்றில் எதையும் அவர்களால் அடைந்துவிட முடியாது. இது வழிகேட்டில் தூரமாகச் செல்வதாகும். *19.* வானங்களையும் பூமியையும் அல்லாஹ் சிறந்தமுறையில் படைத்துள்ளான் என்பதை நீர் பார்க்கவில்லையா? அவன் நாடினால் உங்களைப் போக்கிவிட்டு ஒரு புதிய படைப்பைக்

கொண்டு வருவான். *20.* இவ்வாறு செய்வது அல்லாஹ்வுக்கு கடினமானதல்ல.

*21.* அவர்கள் அனைவரும் இறைவனின் முன்னால் நிற்பார்கள். அப்போது பலவீனமானவர்கள் கர்வங்கொண்டோரிடம், "நாங்கள் உங்களைப் பின்பற்றியவர்களாக இருந்தோம். எனவே இறைவேதனையை விட்டு எங்களைக் காப்பாற்றுவீர்களா?" என்று கேட்பார்கள். அதற்கு அவர்கள், "அல்லாஹ் எங்களுக்கு வழிகாட்டியிருந்தால் நாங்களும் உங்களுக்கு வழிகாட்டியிருப்போம். இனி பதறினாலும் அல்லது பொறுமையாக இருந்தாலும் இரண்டும் நமக்குச் சமமே. நாம் தப்புவதற்கு எந்த வழியும் இல்லை" என்று கூறுவார்கள்.

*22.* தீர்ப்பு வழங்கப்பட்டதும் சாத்தான், "அல்லாஹ் உங்களுக்கு உண்மையான வாக்குறுதியை அளித்தான். நானும் உங்களுக்கு வாக்குறுதி அளித்தேன். ஆனால் நான் அதற்கு மாறுசெய்து விட்டேன். உங்கள்மீது எனக்கு எந்த அதிகாரமும் இல்லை. ஆனால் நான் உங்களை அழைத்தபோது நீங்கள் என் அழைப்பை ஏற்று பின்பற்றினீர்கள், எனவே நீங்கள் என்மீது பழிபோடாதீர்கள். நீங்கள் உங்களையே பழித்துக் கொள்ளுங்கள். நான் உங்களுக்கு உதவிசெய்ய முடியாது, நீங்களும் எனக்கு உதவ முடியாது. இதற்கு முன் நீங்கள் என்னை இறைவனுக்கு இணையாக ஆக்கியதை நான் நிராகரித்து விட்டேன்" என்று கூறுவான். நிச்சயமாக அநியாயக்காரரர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு.

*23.* நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிந்தவர்கள் சுவனச் சோலைகளில் நுழைவிக்கப்படுவார்கள். அவற்றில் ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும். தங்களது இறைவனின் கட்டளைப்படி என்றென்றும் அங்கு தங்கியிருப்பார்கள். 'அமைதி நிலவட்டும்' என்று கூறியே அவர்கள் ஒருவரையொருவர் வரவேற்பார்கள்.

*24.* தூய வார்த்தைக்கு அல்லாஹ் எவ்வாறு உதாரணத்தைக் கூறியுள்ளான் என்பதை நீர் பார்க்கவில்லையா? அது ஒரு நல்ல மரத்தைப் போன்றதாகும். அதனுடைய வேர் பூமியினுள் ஆழப்பதிந்துள்ளது. அதன் கிளைகளோ வானளாவ உயர்ந்து நிற்கிறது. *25.* அது தன் இறைவனின் கட்டளைப்படி எப்பொழுதும் கனிகளை அளித்துக் கொண்டிருக்கிறது. மக்கள் படிப்பினை பெறும்பொருட்டு அல்லாஹ் உதாரணங்களைக் கூறுகிறான். *26.* தீய வார்த்தைக்கு உதாரணம் பூமியின் மேற்பகுதியிலிருந்து பிடுங்கப்பட்டுள்ள உறுதியற்ற தீய மரத்தைப் போன்றதாகும்.

*27.* அல்லாஹ் இவ்வுலக வாழ்விலும் மறுமையிலும் உறுதியான வார்த்தையின்மூலம் நம்பிக்கையாளர்களை உறுதிப்படுத்துகிறான். அநியாயக்காரர்களை அல்லாஹ் வழிதவறும்படி விட்டுவிடுகிறான். தான் நாடியதை அல்லாஹ் செய்கிறான்.

*28.* அல்லாஹ்வின் அருட்கொடையை நிராகரித்துத் தம் சமூகத்தை அழிவின் வீடான நரகத்தில் தள்ளியவர்களை நீர் பார்க்கவில்லையா? *29.* அதில் அவர்கள் நுழைவார்கள். அது எவ்வளவு மோசமான தங்குமிடம்! *30.* மக்களை இறைவழியைவிட்டு கெடுப்பதற்காக அவர்கள் அவனுக்கு இணைகளை ஏற்படுத்தினார்கள். நீர் கூறும், “சில நாட்கள் அனுபவித்துக் கொள்ளுங்கள். இறுதியில் உங்கள் இருப்பிடம் நரகம்தான்”.

*31.* நம்பிக்கைகொண்ட என் அடியார்களிடம் நீர் கூறும், “எவ்விதக் கொடுக்கல் வாங்கலோ, நட்போ பலன்தராத அந்தநாள் வருவதற்கு முன்பே அவர்கள் தொழுகையைக் கடைப்பிடித்து நாம் அவர்களுக்கு வழங்கியவற்றிலிருந்து வெளிப்படையாகவும், மறைமுகமாகவும் தானமும் செய்து கொள்ளட்டும்”.

*32. அல்லாஹ்தான் வானங்களையும், பூமியையும் படைத்தான். அவனே வானத்திலிருந்து நீரை இறக்கி அதன்மூலம் உங்களுக்கு உணவாகப் பல்வேறு கனிகளை விளையச் செய்தான். கப்பலை அவனே உங்களுக்குப் பயனளிக்கும்படி ஆக்கித்தந்தான். அது அவனது கட்டளைப்படி கடலில் செல்கிறது. உங்களுக்காக ஆறுகளையும் பயனளிக்கக்கூடியதாக ஆக்கினான். 33. சூரியனையும், சந்திரனையும் அவை ஒழுங்காக இயங்கும்வண்ணம் உங்களுக்கு அமைத்துத் தந்துள்ளான். அவனே இரவையும் பகலையும் உங்கள் பயன்பாட்டிற்காக ஆக்கியுள்ளான். 34. நீங்கள் அவனிடம் கேட்டவை அனைத்தையும் அவன் உங்களுக்கு வழங்கியுள்ளான். அல்லாஹ்வின் அருட்கொடைகளை நீங்கள் கணக்கிடுவீர்களாயின் உங்களால் கணக்கிடவே முடியாது. நிச்சயமாக மனிதன் அநியாயக்காரனாகவும், நன்றிகெட்டவனாகவும் இருக்கிறான்.*

*35. "என் இறைவா! இந்நகரத்தை அமைதி அளிக்கக்கூடியதாக ஆக்குவாயாக. என்னையும், என் மக்களையும் சிலைகளை வணங்குவதைவிட்டும் காப்பாற்றுவாயாக" என்று ஆப்ரஹாம் பிரார்த்தித்ததை நினைவுகூருங்கள். 36. "என் இறைவா! இச்சிலைகள் ஏராளமான மக்களை வழிகெடுத்து விட்டன. யார் என்னைப் பின்பற்றினாரோ அவர் என்னைச் சார்ந்தவர் ஆவார். யார் எனக்கு மாறுசெய்தாரோ - நிச்சயமாக நீ பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றாய்".*

*37. "எங்கள் இறைவா! நான் என் மக்களை புனிதமான உன் இல்லத்திற்கு அருகில் விவசாயம் இல்லாத பள்ளத்தாக்கில் குடியமர்த்தியுள்ளேன், அவர்கள் தொழுகையைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதற்காக. ஆகவே நீ மக்களின் உள்ளங்களை அவர்களின் பக்கம் திருப்புவாயாக. அவர்கள் நன்றி செலுத்தும்பொருட்டு கனி வகைகளிலிருந்து அவர்களுக்கு உணவளிப்பாயாக."*

*38.* “எங்கள் இறைவா! நாங்கள் மறைப்பதையும், வெளிப்படுத்துவதையும் நீ நன்கறிவாய். வானத்திலோ பூமியிலோ எப்பொருளும் அல்லாஹ்வுக்கு மறைவானதாக இல்லை. *39.* முதுமையில் எனக்கு இஸ்மவேலையும், ஈசாக்கையும் வழங்கிய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். நிச்சயமாக என் இறைவன் பிரார்த்தனையை செவியேற்பவனாக இருக்கின்றான்”. *40.* “என் இறைவா! என்னையும், என் சந்ததியினரையும் தொழுகையைக் கடைப்பிடிப்போராக ஆக்குவாயாக. என் இறைவா! என் பிரார்த்தனையை ஏற்றுக்கொள்வாயாக. *41.* எங்கள் இறைவா! என்னையும், என் பெற்றோரையும், நம்பிக்கையாளர்களையும் விசாரணை நடைபெறும் நாளில் மன்னித்து விடுவாயாக”.

*42.* அநியாயக்காரர்கள் செய்துகொண்டிருப்பதை அல்லாஹ் கவனிக்காமல் இருக்கிறான் என்று ஒருபோதும் நீர் எண்ணி விடாதீர். பார்வைகள் நிலைகுத்திவிடும் ஒரு நாளுக்காக அவன் அவர்களை விட்டு வைத்திருக்கிறான். *43.* அவர்கள் தம் தலைகளை உயர்த்தியபடியே ஓடுவார்கள். அவர்களின் பார்வை திரும்பாது. அவர்களது உள்ளங்கள் வெறுமையாக இருக்கும்.

*44.* வேதனைவரும் நாளைப்பற்றி மக்களுக்கு எச்சரிக்கை செய்வீராக. அப்போது அநியாயக்காரர்கள், “எங்கள் இறைவா, சிறிது காலம்வரை எங்களுக்கு அவகாசம் அளிப்பாயாக. நாங்கள் உன் அழைப்பை ஏற்று தூதர்களைப் பின்பற்றுவோம்” என்று கூறுவார்கள். (அதற்கு அல்லாஹ் கூறுவான்) “இதற்கு முன் நீங்கள்தானே உங்களுக்கு அழிவே வராது என்று சத்தியம் செய்து கொண்டிருந்தீர்கள்? *45.* தமக்குத்தாமே அநீதி இழைத்தவர்களின் பூமியில்தான் நீங்கள் வசித்து வந்தீர்கள். நாம் அவர்களுடன் எவ்வாறு நடந்து கொண்டோம் என்பது உங்களுக்குத் தெளிவாகியிருந்தது. நாம் உங்களுக்கு உதாரணங்களைக் கூறியுள்ளோம்”. *46.* அவர்கள்

*அனைத்துத் திட்டங்களையும் தீட்டினார்கள். அவர்களது திட்டங்கள் மலைகளையே பெயர்த்து விடக்கூடியதாக இருந்தபோதிலும் அவை அல்லாஹ்வின் கட்டுப்பாட்டில்தான் இருந்தன.*

*47. தன் தூதர்களுக்கு அல்லாஹ் அளித்த வாக்குறுதிக்கு மாறுசெய்வான் என்று ஒருபோதும் எண்ணி விடாதீர். நிச்சயமாக அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவனாகவும் தக்க தண்டனையளிப்பவனாகவும் இருக்கின்றான். 48. பூமி வேறு பூமியாக மாற்றப்படும் நாளில் வானங்களும் மாற்றப்படும். அடக்கியாளும் ஏகனாகிய அல்லாஹ்வுக்கு முன்னால் அவர்கள் அனைவரும் வந்து நிற்பார்கள். 49. அந்நாளில் குற்றவாளிகள் சங்கிலியால் பிணைக்கப்பட்டிருப்பதை நீர் காண்பீர். 50. அவர்களின் ஆடைகள் தாரினால் ஆனவையாக இருக்கும். அவர்களின் முகங்களை நெருப்பு மூடியிருக்கும், 51. ஒவ்வொருவருக்கும் அவர்கள் செய்தவற்றுக்கான கூலியை அல்லாஹ் வழங்குவதற்காக. நிச்சயமாக அல்லாஹ் விசாரணை செய்வதில் விரைவானவன். 52. இது மக்களுக்கான ஒரு அறிவிப்பாகும். இது அவர்கள் எச்சரிக்கப்படுவதற்கும் அவனே இறைவன் என்பதை அவர்கள் அறிந்து கொள்வதற்கும் அறிவுடையோர் படிப்பினையைப் பெற்றுக்கொள்ள வேண்டும் என்பதற்குமேயாகும்.*

## *15. பாறைப்பகுதி (அல்ஹிஜ்ர்)*

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

*1. அலிஃப். லாம். ரா. இவை வேதமாகிய தெளிவான குர்ஆனின் வசனங்களாகும். 2. 'தாங்களும் இறைவனுக்குக் கீழ்ப்படிந்தவர்களாக இருந்திருக்கக்கூடாதா!' என்று நிராகரிப்பாளர்கள் சில சமயம் ஏங்குவார்கள். 3. நீர் அவர்களை விட்டுவிடும். அவர்கள் உண்டு களிக்கட்டும். ஆசைகள் அவர்களை மறதியில் ஆழ்த்தட்டும்.*

விரைவில் அவர்கள் அறிந்துகொள்வார்கள். *4.* நாம் எந்த ஊரையும் அதற்கென நிர்ணயிக்கப்பட்ட நேரத்தில்தான் அழித்துள்ளோம். *5.* எந்தச் சமூகமும் அதற்கென நிர்ணயிக்கப்பட்ட நேரத்தை முந்தவும் செய்யாது, பிந்தவும் செய்யாது.

*6.* இவர்கள் கூறுகிறார்கள்: "அறிவுரை அருளப்பட்டவரே! நிச்சயமாக நீ பைத்தியக்காரரர்தான். *7.* நீ உண்மையாளராயின் எங்களிடம் வானவர்களை அழைத்து வந்திருக்க வேண்டாமா?" *8.* நாம் வானவர்களை தீர்ப்பிற்காகத்தான் இறக்குகிறோம். அப்போது நிராகரிப்பாளர்களுக்கு அவகாசம் அளிக்கப்படாது.

*9.* இந்த குர்ஆனை நாமே அருளினோம். நாமே இதனைப் பாதுகாப்போம்.

*10.* உமக்கு முன்சென்ற சமூகங்களுக்கு நாம் தூதர்களை அனுப்பியுள்ளோம். *11.* ஆயினும் எந்தத் தூதர் அவர்களிடம் வந்தாலும் அவரை அவர்கள் பரிகாசம் செய்யாமல் இருந்ததில்லை. *12.* இவ்வாறே நாம் இதனைக் (பரிகாசத்தை) குற்றவாளிகளின் உள்ளத்தில் புகுத்தி விடுகிறோம். *13.* அவர்கள் இந்த குர்ஆனின் மீது நம்பிக்கைகொள்ள மாட்டார்கள். இது முன்னோர்களிடமிருந்து இருந்து வருகின்ற நடைமுறையாகும். *14.* நாம் அவர்களுக்காக வானத்தின் ஒரு கதவைத் திறந்து அதன் வழியே அவர்கள் ஏறிச் செல்லத் தொடங்கினாலும் *15.* அவர்கள் கூறுவார்கள்: "எங்களின் பார்வைகள் மயக்கப்பட்டு விட்டன. எங்கள் மீது சூனியம் செய்யப்பட்டுள்ளது".

*16.* நாம் வானத்தில் விண்மீன்களை அமைத்து அதனைப் பார்ப்பவர்களுக்கு அழகுபடுத்தியுள்ளோம். *17.* விரட்டப்பட்ட ஒவ்வொரு சாத்தானைவிட்டும் அதனைப் பாதுகாத்துள்ளோம்.

18. ஆனால் யாரேனும் (வானவர்களின் உரையாடலை) திருட்டுத்தனமாக ஒட்டுக்கேட்டால் அவனை எரியும் தீச்சுவாலை பின்தொடரும்.

19. நாம் பூமியை விரித்து அதில் மலைகளை நிறுத்தியுள்ளோம். ஒவ்வொரு தாவரத்தையும் பொருத்தமான முறையில் முளைக்கச் செய்தோம். 20. அதில் உங்களுக்காகவும் நீங்கள் யாருக்கு உணவளிப்பவர்களாக இல்லையோ அவர்களுக்காகவும் வாழ்வாதாரங்களை ஏற்படுத்தியுள்ளோம்.

21. எல்லாவற்றின் கருவூலங்களும் நம்மிடமே உள்ளது. நாம் அவற்றை ஒரு குறிப்பிட்ட அளவோடுதான் இறக்கி வைக்கிறோம். 22. நாமே காற்றுகளை சூல் கொண்டவையாக அனுப்பி வானத்திலிருந்து மழை பொழிவித்து அதிலிருந்து உங்களுக்கு நீரைப் புகட்டுகிறோம். (மேகங்களில் மழைநீரை) சேமித்து வைப்பது உங்களால் இயலாத ஒன்றாகும்.

23. நிச்சயமாக நாமே வாழ்வையும் மரணத்தையும் அளிக்கின்றோம். நாமே நிலைத்திருப்போம். 24. உங்களுக்கு முன் வாழ்ந்து சென்றவர்களையும் உங்களுக்குப்பின் வரப்போகின்றவர்களையும் நாம் அறிவோம். 25. உமது இறைவன் அவர்கள் அனைவரையும் ஒன்றுசேர்ப்பான். அவன் ஞானம் மிக்கவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். 26. நாம் மனிதனை ஓசை தரக்கூடிய காய்ந்த களிமண்ணால் படைத்தோம். 27. இதற்கு முன்னர் ஜின்களைக் கடும் வெப்பமுள்ள நெருப்பிலிருந்து படைத்தோம்.

28. உம் இறைவன் வானவர்களிடம் பின்வருமாறு கூறியதை நினைவுகூரும். “நான் ஓசை தரக்கூடிய காய்ந்த களிமண்ணால் மனிதனைப் படைக்கப் போகிறேன். 29. நான்

அவனை முழுமையாக்கி அவனுள் என் ஆன்மாவை ஊதியதும் நீங்கள் அவனுக்குச் சிரம்பணிய வேண்டும்". *30.* எனவே வானவர்கள் அனைவரும் சிரம்பணிந்தார்கள், *31.* இப்லீஸைத் தவிர. அவன் சிரம்பணிபவர்களுடன் இருப்பதை மறுத்து விட்டான். *32.* அப்போது இறைவன் கேட்டான்: "இப்லீஸே உனக்கு என்ன ஆகிவிட்டது? நீ ஏன் சிரம்பணிபவர்களுடன் இருக்கவில்லை?". *33.* அதற்கு இப்லீஸ், "நீ ஓசை தரக்கூடிய காய்ந்த களிமண்ணால் படைத்த மனிதனுக்கு நான் சிரம் பணிபவனாக இல்லை" என்று கூறினான்.

*34.* அதற்கு இறைவன், "நீ இங்கிருந்து வெளியேறிவிடு. ஏனெனில் நீ விரட்டப்படுகிறாய். *35.* தீர்ப்புநாள்வரை உன் மீது சாபம் உண்டு" என்று கூறினான். *36.* அதற்கு அவன், "என் இறைவனே, மக்கள் எழுப்பப்படும் நாள்வரை எனக்கு அவகாசம் அளிப்பாயாக" என்று கேட்டான். *37.* அதற்கு இறைவன், "உனக்கு அவகாசம் அளிக்கப்பட்டு விட்டது, *38.* குறிப்பிட்ட நாள்வரை!" என்று கூறினான்.

*39.* அதற்கு அவன், "என் இறைவனே, நீ என்னை வழிதவறச் செய்ததைப் போன்று நானும் பூமியிலுள்ளவற்றை அவர்களுக்கு அழகாகக்காட்டி அவர்கள் அனைவரையும் வழிகெடுப்பேன், *40.* ஆயினும் தேர்ந்தெடுக்கப்பட்ட உன் அடியார்களைத் தவிர!" என்று கூறினான்.

*41.* இறைவன் கூறினான்: "இதுவே என்னை வந்தடையும் நேரான பாதை. *42.* நிச்சயமாக என் அடியார்கள் மீது உனக்கு எவ்வித அதிகாரமும் இல்லை, ஆனால் உன்னைப் பின்பற்றி வழிகெட்டு போகக்கூடியவர்களைத் தவிர. *43.* அவர்கள் அனைவருக்கும் நரகம்தான் வாக்களிக்கப்பட்ட இடமாகும்.

44. அதற்கு ஏழு வாசல்கள் உள்ளன. ஒவ்வொரு வாசலுக்கும் அவர்களில் குறிப்பிட்ட அளவினர் ஒதுக்கப்படுவார்கள்".

45. நிச்சயமாக இறையச்சமுடையோர் சுவனச்சோலைகளிலும், நீரூற்றுகளிலும் இருப்பார்கள். 46. "அவற்றில் சாந்தியுடனும், அமைதியுடனும் நுழைந்து விடுங்கள்" (என்று அவர்களுக்கு கூறப்படும்). 47. அவர்களின் உள்ளங்களில் உள்ள குரோதங்களை நாம் நீக்கி விடுவோம். அவர்கள் அனைவரும் சகோதரர்களாக கட்டில்களின் மீது ஒருவரையொருவர் முன்னோக்கியவர்களாக அமர்ந்திருப்பார்கள். 48. அங்கே அவர்களுக்கு எவ்வித சிரமமும் ஏற்படாது. அங்கிருந்து அவர்கள் வெளியேற்றப்படவும் மாட்டார்கள். 49. என் அடியார்களுக்கு அறிவித்து விடுவீராக: "நான் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றேன் என்று". 50. ஆயினும் நான் அளிக்கும் வேதனைதான் துன்புறுத்தும் வேதனையாகும்.

51. அவர்களுக்கு ஆப்ரஹாமின் விருந்தாளிகளைப்பற்றி எடுத்துரைப்பீராக. 52. அவர்கள் அவரிடம் வந்து முகமன் கூறியபோது, "நாங்கள் உங்களைக் கண்டு அஞ்சுகிறோம்'' என்றார். 53. அதற்கு அவர்கள், "நீர் அஞ்ச வேண்டாம், நாம் உமக்கு அறிவுமிக்க ஓர் ஆண் குழந்தையைப் பற்றிய நற்செய்தியைக் கூறுகிறோம்" என்று கூறினார்கள். 54. அதற்கு அவர், "இந்தத் தள்ளாத வயதிலா நீங்கள் எனக்கு நற்செய்தி கூறுகிறீர்கள்? நீங்கள் எப்படிப்பட்ட நற்செய்தியைக் கூறுகிறீர்கள்?" என்றார். 55. அதற்கு அவர்கள், "நாங்கள் உமக்கு சத்தியத்துடன்தான் நற்செய்தியைக் கூறுகிறோம். எனவே நீர் நம்பிக்கை இழந்து விடாதீர்" என்று கூறினார்கள். 56. "வழிகெட்டவர்கள்தான் தம் இறைவனின் கருணையைக் குறித்து நம்பிக்கை இழப்பார்கள்" என்று அவர் கூறினார்.

*57.* “தூதர்களே (வானவர்களே), உங்களின் பணி என்ன?” என்று அவர் கேட்டார். *58.* அதற்கு அவர்கள், “நாங்கள் குற்றம் புரியும் ஒரு சமூகத்தின் பக்கம் அனுப்பப்பட்டுள்ளோம், *59.* லோத்தின் குடும்பத்தினரைத் தவிர. அவர்கள் அனைவரையும் நாம் காப்பாற்றி விடுவோம். *60.* ஆனால் அவரது மனைவியைத்தவிர; அவள் குற்றவாளிகளுடன் தங்கி விடுவாள் என்று நாம் விதித்து விட்டோம்” என்று கூறினார்கள்.

*61.* தூதர்கள் லோத்தின் குடும்பத்தினரிடம் வந்தபோது, *62.* “நீங்கள் அந்நியராகத் தெரிகிறீர்களே!” என்று அவர் கூறினார். *63.* அதற்கு அவர்கள், “இல்லை, எதனைக் குறித்து இவர்கள் சந்தேகம் கொண்டுள்ளார்களோ அதனையே நாம் உம்மிடம் கொண்டு வந்துள்ளோம். *64.* நாங்கள் உம்மிடம் சத்தியத்துடன் வந்துள்ளோம். நாங்கள் உண்மையாளர்களாக இருக்கின்றோம். *65.* எனவே இரவின் ஒரு பகுதியில் உமது குடும்பத்துடன் நீர் வெளியேறி விடும். அவர்களைப் பின்தொடந்து செல்லும். உங்களில் எவரும் திரும்பிப் பார்க்க வேண்டாம். நீங்கள் கட்டளையிடப்பட்ட இடத்திற்கே சென்று விடுங்கள்” என்று கூறினார்கள். *66.* ‘அதிகாலையில் அவர்கள் அடியோடு அழிக்கப்பட்டு விடுவார்கள்’ என்ற நமது முடிவை நாம் அவருக்கு அறிவித்து விட்டோம்.

*67.* அந்நகரவாசிகள் மகிழ்ச்சியடைந்தவர்களாக வந்தார்கள். *68.* “இவர்கள் என் விருந்தாளிகள். என்னை அவமானப்படுத்தி விடாதீர்கள். *69.* அல்லாஹ்வை அஞ்சுங்கள். என்னை இழிவுபடுத்தி விடாதீர்கள்” என்று அவர் கூறினார். *70.* அதற்கு அவர்கள், “உலகத்தாருக்கெல்லாம் பரிந்துபேச வேண்டாம் என்று நாங்கள் உம்மைத் தடுக்கவில்லையா?” என்று கேட்டார்கள். *71.* அதற்கு அவர், “நீங்கள் ஏதேனும் செய்வதாக இருந்தால் இதோ இவர்கள்

எனது பெண் மக்கள்" (இவர்களை மணமுடித்துக் கொள்ளுங்கள்) என்று கூறினார்.

72. உம் உயிரின்மீது சத்தியமாக, அவர்கள் தம் மதி மயக்கத்தில் உணர்விழந்து கிடந்தார்கள். 73. எனவே பொழுது விடிந்ததும் இடிமுழக்கம் அவர்களைத் தாக்கியது. 74. நாம் அந்த ஊரைத் தலைகீழாகப் புரட்டி விட்டோம். அவர்களின் மீது சுடப்பட்ட கற்களைப் பொழியச் செய்தோம். 75. நிச்சயமாக ஆய்வு செய்வோருக்கு இதில் அத்தாட்சிகள் இருக்கின்றன. 76. இந்த ஊர் நேரான பாதையில்தான் அமைந்துள்ளது. 77. நிச்சயமாக இதில் நம்பிக்கையாளர்களுக்கு அத்தாட்சி இருக்கின்றது.

78. 'அய்கா'வாசிகளும் (தோப்புக்காரர்கள்) அநியாயக்காரர்களாகத்தான் இருந்தார்கள். 79. எனவே நாம் அவர்களைத் தண்டித்தோம். இவ்விரு ஊர்களும் அறியப்பட்ட பாதையில்தான் அமைந்துள்ளன. 80. ஹிஜ்ர்வாசிகளும் நம் தூதர்களை மறுத்தார்கள். 81. நாம் அவர்களுக்கு நம் சான்றுகளை வழங்கியிருந்தோம். ஆனால் அவர்கள் அதனைப் புறக்கணிப்பவர்களாகத்தான் இருந்தார்கள். 82. பாதுகாப்பாக வாழ்வதற்காக அவர்கள் மலைகளைக் குடைந்து வீடுகளை அமைத்துக் கொண்டார்கள். 83. அதிகாலையில் அவர்களை பயங்கர சப்தம் தாக்கியது. 84. அப்போது அவர்கள் செய்து கொண்டிருந்தவை அவர்களுக்குப் பலனளிக்கவில்லை.

85. வானங்களையும், பூமியையும் மற்றும் அவற்றிற்கிடையில் உள்ளவற்றையும் நாம் நோக்கத்துடன்தான் படைத்துள்ளோம். சந்தேகமின்றி மறுமைநாள் வரத்தான் போகிறது. எனவே நீர் அழகிய முறையில் புறக்கணித்து விடும். 86. நிச்சயமாக உமது இறைவன்தான் அனைத்தையும் படைத்தவன்; நன்கறிந்தவன்.

*87.* திரும்பத் திரும்ப ஓதக்கூடிய ஏழு வசனங்களையும் மகத்துவமிக்க குர்ஆனையும் நாம் உமக்கு வழங்கியுள்ளோம். *88.* அவர்களில் பலதரப்பட்ட மக்களுக்கு நாம் வழங்கியுள்ள உலக இன்பங்களை நீர் ஏறெடுத்தும் பார்க்காதீர். அவர்களுக்காகக் கவலையும் கொள்ளாதீர். நம்பிக்கையாளர்களுக்காக உமது அன்பெனும் சிறகைத் தாழ்த்துவீராக. *89.* நான் வெளிப்படையாக எச்சரிப்பவன்தான் என்று கூறிவிடும். *90.* இவ்வாறே நாம் பிரிவினை ஏற்படுத்தியவர்கள் மீதும் (இந்த எச்சரிக்கையை) இறக்கியிருந்தோம். *91.* அவர்கள் குர்ஆனை பல பிரிவுகளாக்கி விட்டார்கள். *92.* உம் இறைவனின் மீது ஆணையாக, அவர்கள் அனைவரிடமும் *93.* அவர்கள் செய்து கொண்டிருந்ததைப்பற்றி நிச்சயம் நாம் விசாரிப்போம்.

*94.* எனவே உமக்கு கட்டளையிடப்படுவதைத் தெளிவாக எடுத்துரைத்து விடுவீராக. இணைவைப்பாளர்களை புறக்கணித்து விடுவீராக. *95.* கேலி செய்வோர் விஷயத்தில் நாமே உமக்குப் போதுமானவர்களாக இருக்கின்றோம். *96.* அல்லாஹ்வுடன் வேறு தெய்வங்களை இணையாக்கிக் கொண்டவர்கள் விரைவில் அறிந்துகொள்வார்கள். *97.* அவர்களின் கூற்றுகளினால் உம் உள்ளம் இறுக்கமடைவதை நாம் அறிவோம். *98.* எனவே நீர் உம் இறைவனைப் புகழ்ந்து துதிப்பீராக. அவனுக்குச் சிரம்பணிபவராகி விடுவீராக. *99.* மரணம் உம்மை வந்தடையும்வரை உம் இறைவனை வணங்குவீராக.

## *16.* தேனீ (அந்நஹ்ல்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

*1.* இறைக்கட்டளை வந்துவிட்டது. எனவே அதற்காக நீங்கள் அவசரப்படாதீர்கள். அவன் தூய்மையானவன்; அவர்களின் இணைவைப்பை விட்டும் மிக உயர்ந்தவன். *2.* தன் அடியார்களில்

தான் நாடியோர் மீது அவன் தனது கட்டளை எனும் வஹியுடன் வானவர்களை அனுப்பி ‘என்னைத்தவிர வேறு இறைவன் இல்லை. எனவே என்னையே அஞ்சுங்கள்’ என்று எச்சரிக்கை செய்யுமாறு கட்டளையிட்டுள்ளான். 3. அவன் வானங்களையும், பூமியையும் சத்தியத்துடன் படைத்துள்ளான். அவர்களின் இணைவைப்பை விட்டும் அவன் மிக உயர்ந்தவன்.

4. அவன் மனிதனை ஒருதுளி விந்திலிருந்து படைத்தான். அவ்வாறிருந்தும் மனிதன் வெளிப்படையாக தர்க்கிப்பவனாக இருக்கிறான். 5. அவன் கால்நடைகளையும் படைத்துள்ளான். அவற்றில் உங்களுக்கு உணவும், உடையும் உள்ளன. இன்னும் பல பயன்களும் இருக்கின்றன. 6. அவற்றை நீங்கள் மாலையில் ஓட்டிவரும்போதும் காலையில் ஓட்டிச் செல்லும்போதும் அவை உங்களுக்கு அழகாகத் தோன்றுகின்றன. 7. கடும் சிரமத்துடனேயன்றி உங்களால் சென்றடைய முடியாத இடத்திற்கெல்லாம் அவை உங்களின் சுமையைக் கொண்டுசேர்க்கின்றன. நிச்சயமாக உங்கள் இறைவன் மிகுந்த பரிவுடையவனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். 8. குதிரைகள், கோவேறு கழுதைகள், கழுதைகள் ஆகியவற்றை நீங்கள் பயணம் செய்வதற்காகவும், அலங்காரத்திற்காகவும் அவன் படைத்துள்ளான். நீங்கள் அறியாதவற்றையும் அவன் படைக்கிறான்.

9. நேரான வழி அல்லாஹ்வை சென்றடைகிறது. சில வழிகள் கோணலாக உள்ளன. அவன் நாடியிருந்தால் உங்கள் அனைவருக்கும் நேரான வழியைக் காட்டியிருப்பான்.

10. அவனே உங்களுக்காக வானத்திலிருந்து மழையை இறக்கினான். அதில் நீங்கள் அருந்தும் நீரும் உள்ளது. உங்கள் கால்நடைகளை மேய்ப்பதற்கான தாவரங்களும் வளர்கின்றன.

*11.* அதன்மூலம் உங்களுக்குப் பயிர்களையும், ஆலிவ் மரத்தையும், பேரீச்சை, திராட்சை மற்றும் எல்லாவகையான கனி(தரும் மரங்) களையும் அவன் முளைக்கச் செய்கிறான். நிச்சயமாக சிந்திக்கும் மக்களுக்கு இதில் சான்று இருக்கின்றது.

*12.* அவனே இரவையும், பகலையும், சூரியனையும், சந்திரனையும் உங்களுக்குப் பயன்படும்படி அமைத்துத் தந்துள்ளான். நட்சத்திரங்களும் அவனது கட்டளைக்கு உட்பட்டவையாக இருக்கின்றன. புரிந்து கொள்ளும் மக்களுக்கு இதில் பல சான்றுகள் இருக்கின்றன. *13.* பூமியில் உங்களுக்காக அவன் பல்வேறுவகையான பொருட்களைப் படைத்துள்ளான். நிச்சயமாக இதில் படிப்பினை பெறும் மக்களுக்கு சான்று இருக்கின்றது.

*14.* நீங்கள் புத்தம் புதிய மாமிசங்களை உண்பதற்காகவும், அணியக்கூடிய ஆபரணத்தை எடுத்துக் கொள்வதற்காகவும் அவனே கடலை பயனளிக்கும்படி அமைத்துத் தந்துள்ளான். அதில் நீரைப் பிளந்துகொண்டு செல்லும் கப்பல்களைக் காண்பீர். அது நீங்கள் அவனது அருளைத் தேடுவதற்காகவும் நன்றியுள்ளவர்களாகத் திகழவேண்டும் என்பதற்காகவும்தான்.

*15.* உங்களோடு பூமி சாய்ந்து விடாதிருக்க அவன் மலைகளை ஊன்றியுள்ளான். நீங்கள் வழிகளை அறிந்துகொள்வதற்காக ஆறுகளையும், பாதைகளையும் ஏற்படுத்தியுள்ளான். *16.* வேறு பல அடையாளங்களும் உள்ளன. நட்சத்திரங்களின் வாயிலாகவும் மக்கள் வழியை அறிந்துகொள்கிறார்கள்.

*17.* படைக்க முடிந்தவனும் படைக்க முடியாதவனும் சமமாக முடியுமா? நீங்கள் சிந்திக்க மாட்டீர்களா? *18.* அல்லாஹ்வின் அருட்கொடைகளை நீங்கள் கணக்கிட நாடினால் அவற்றை உங்களால் கணக்கிடவே முடியாது. நிச்சயமாக அல்லாஹ்

பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். *19.* நீங்கள் மறைப்பதையும், வெளிப்படுத்துவதையும் அல்லாஹ் நன்கறிவான்.

*20.* மக்கள் அல்லாஹ்வையன்றி அழைக்கும் தெய்வங்களால் எதையும் படைக்க முடியாது. அவையே படைக்கப்பட்டவைதான். *21.* அவை உயிரற்ற சடலங்கள். அவர்கள் (இறந்தவர்கள்) எப்போது எழுப்பப்படுவார்கள் என்பதையும் அவை அறிய மாட்டா. *22.* உங்கள் இறைவன் ஒரே இறைவன்தான். ஆயினும் மறுமையை நம்பாதோரின் உள்ளங்கள் இதனை மறுக்கின்றன. அவர்கள் கர்வம் கொள்கிறார்கள். *23.* அவர்கள் மறைப்பதையும், வெளிப்படுத்துவதையும் நிச்சயமாக அல்லாஹ் நன்கறிவான். அவன் கர்வம் கொள்வோரை ஒருபோதும் நேசிப்பதில்லை.

*24.* "உங்கள் இறைவன் உங்களுக்கு எதனை அருளியுள்ளான்?" என்று அவர்களிடம் கேட்கப்பட்டால் "இது முன்னோர்களின் கட்டுக்கதைகள்" என்று கூறுகிறார்கள். *25.* இதனால் அவர்கள் மறுமைநாளில் தங்கள் சுமைகளையும் முழுமையாகச் சுமப்பதுடன் அறிவில்லாமல் யாரை இவர்கள் வழிகெடுத்தார்களோ அவர்களின் சுமைகளையும் சுமப்பார்கள். அவர்கள் சுமந்து கொண்டிருப்பது எவ்வளவு மோசமானது!

*26.* இவர்களுக்கு முன் சென்றவர்களும் திட்டங்கள் தீட்டினார்கள். ஆனால் அல்லாஹ் அவர்களின் கட்டடங்களை அடியோடு தகர்த்து விட்டான். மேலிருந்து முகடு அவர்களின் மீது விழுந்து விட்டது. அவர்கள் அறியாப்புறத்திலிருந்து வேதனை அவர்களை வந்தடைந்தது. *27.* பின்னர் மறுமைநாளில் அவன் அவர்களை இழிவுபடுத்துவான். அவர்களிடம், 'எனக்கு இணையாக்கப்பட்டவர்கள் எங்கே? அவர்கள் விஷயத்தில்தானே

*நீங்கள் தர்க்கித்துக் கொண்டிருந்தீர்கள்?' என்று அவன் கேட்பான். அறிவு வழங்கப்பட்டவர்கள், "இன்று இழிவும், வேதனையும் நிராகரிப்பாளர்களுக்குத்தான்" என்று கூறுவார்கள்.*

*28. தமக்குத்தாமே அநீதி இழைத்துக் கொண்டிருந்தவர்களின் உயிர்களை வானவர்கள் கைப்பற்றும்போது, 'நாங்கள் எந்தத் தீய செயல்களையும் செய்து கொண்டிருக்கவில்லையே' என்று சரணடைந்து விடுவார்கள். ஆம், நீங்கள் செய்து கொண்டிருந்தவற்றை அல்லாஹ் நன்கறிந்தவன். 29. 'எனவே நரக வாயில்களில் நுழைந்து விடுங்கள், அங்கு நிரந்தரமாக வீழ்ந்துவிடுங்கள்' (என்று அவர்களுக்குக் கூறப்படும்). ஆணவம் கொண்டோரின் தங்குமிடம் எவ்வளவு மோசமானது!*

*30. இறையச்சமுடையோரிடம் "உங்கள் இறைவன் எதனை அருளியுள்ளான்?" என்று கேட்கப்பட்டால் "நல்ல விஷயங்களை!" என்று கூறுவார்கள். நற்செயல் புரிந்தோருக்கு இவ்வுலகிலும் நன்மை உண்டு. மறுமையின் (சொர்க்க) வீடு மிகச் சிறந்ததாகும். இறையச்சமுடையோரின் வீடு எவ்வளவு சிறப்பு வாய்ந்தது! 31. நிலையான சுவனச் சோலைகளில் அவர்கள் நுழைவார்கள். அவற்றில் ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும். அவர்கள் விரும்புவதெல்லாம் அங்கு அவர்களுக்குக் கிடைக்கும். இவ்வாறே அல்லாஹ் இறையச்சமுடையோருக்குக் கூலி வழங்குகிறான். 32. அவர்கள் தூய்மையாக இருக்கும் நிலையில் வானவர்கள் அவர்களின் உயிர்களைக் கைப்பற்றுவார்கள். "உங்கள்மீது சாந்தி உண்டாகட்டும். உங்களது செயல்களின் காரணமாக நீங்கள் சொர்க்கத்தில் நுழைந்து விடுங்கள்" என்று அவர்கள் கூறுவார்கள்.*

*33. அவர்களிடம் வானவர்கள் வர வேண்டும் அல்லது உமது இறைவனின் கட்டளை வர வேண்டும் என்பதைத்தான்*

எதிர்பார்க்கிறார்களா? இவ்வாறுதான் இவர்களுக்கு முன் சென்றவர்களும் செயல்பட்டார்கள். அவர்களின்மீது அல்லாஹ் அநீதி இழைக்கவில்லை. மாறாக அவர்கள் தமக்குத்தாமே அநீதி இழைத்துக் கொண்டிருந்தார்கள். *34.* எனவே அவர்களது தீய காரியங்களுக்கான தண்டனையைப் பெற்றார்கள். அவர்கள் எதனைப் பரிகாசம் செய்து கொண்டிருந்தார்களோ அதுவே அவர்களைச் சூழ்ந்து கொண்டது.

*35.* இணைவைப்பாளர்கள், “அல்லாஹ் நாடியிருந்தால் நாங்களும் எங்கள் முன்னோர்களும் அவனைத்தவிர வேறு எதையும் வணங்கியிருக்க மாட்டோம், அவனது கட்டளையின்றி எதனையும் விலக்கப்பட்டதாக ஆக்கியிருக்க மாட்டோம்” என்று கூறுகிறார்கள். இவ்வாறுதான் இவர்களுக்கு முன்னிருந்தவர்களும் செய்து கொண்டிருந்தார்கள். தெளிவாக எடுத்துரைப்பதுமட்டுமே தூதர்கள் மீதுள்ள கடமையாகும்.

*36.* “அல்லாஹ்வை வணங்குங்கள். சாத்தான்களை விட்டும் விலகியிருங்கள்” என்றுதான் நாம் ஒவ்வொரு சமூகத்திற்கும் தூதரை அனுப்பியுள்ளோம். அவர்களில் சிலருக்கு அல்லாஹ் நேர்வழி காட்டியுள்ளான். சிலரின்மீது வழிகேடு உறுதியாகி விட்டது. எனவே பூமியில் சுற்றித்திரிந்து நிராகரித்தோரின் முடிவு என்னவாயிற்று என்பதைப் பாருங்கள். *37.* நீர் ‘அவர்கள் நேர்வழி அடைய வேண்டும்’ என்று பேரார்வம் கொண்டிருந்தாலும் அல்லாஹ் யாரை வழிதவறச் செய்து விட்டானோ அவருக்கு நேர்வழிகாட்ட மாட்டான். அவர்களுக்கு உதவுபவர்கள் யாருமில்லை.

*38.* “மரணித்து விட்டவர்களை அல்லாஹ் எழுப்ப மாட்டான்” என்று அவர்கள் அல்லாஹ்வின்மீது உறுதியான சத்தியங்கள் செய்கிறார்கள். ஆம், இது அவன் தன்மீது

கடமையாக்கிக்கொண்ட உறுதியான வாக்குறுதியாகும். ஆயினும் மக்களில் பெரும்பாலோர் அறிந்துகொள்வதில்லை. *39.* ஏனெனில் இது அவர்கள் முரண்பட்டுக்கொண்ட விஷயங்களை அவர்களுக்குத் தெளிவுபடுத்துவதற்காகவும் நிராகரிப்பாளர்கள் “தாங்கள்தான் பொய்யர்கள்” என்பதை அறிந்துகொள்வதற்காகவும்தான். *40.* நாம் ஏதேனும் ஒன்றை நாடினால் ‘ஆகிவிடு’ என்றுதான் கூறுவோம். அது ஆகிவிடும்.

*41.* அநீதியிழைக்கப்பட்டபின் அல்லாஹ்வுக்காக புலம் பெயர்ந்தவர்களுக்கு இவ்வுலகில் நாம் நல்ல வசிப்பிடத்தை வழங்குவோம். ஆயினும் மறுமையின் கூலியே மிகப்பெரியது. அவர்கள் அறிந்துகொள்ள வேண்டுமே! *42.* அவர்கள் பொறுமையைக் கடைப்பிடித்து தங்கள் இறைவனையே முற்றிலும் சார்ந்திருப்பார்கள்.

*43.* உமக்கு முன்னரும் நாம் ஆண்களையே தூதர்களாக்கி அவர்களுக்கு அறிவித்தோம். நீங்கள் அறியாதவர்களாக இருந்தால் அறிவுடையோரிடம் கேட்டுக்கொள்ளுங்கள். *44.* நாம் அவர்களை ஆதாரங்களுடனும், வேதங்களுடனும் அனுப்பி இருந்தோம். நாம் உமக்கு “நினைவூட்டலை” அருளியுள்ளோம். அது மக்களுக்கு அருளப்பட்டதை நீர் அவர்களுக்கு தெளிவுபடுத்துவதற்காகவும் அவர்கள் சிந்தித்துணர வேண்டும் என்பதற்காகவும்தான்.

*45.* தீயதிட்டங்களைத் தீட்டிக்கொண்டிருப்போர், அல்லாஹ் அவர்களை பூமியில் புதையச் செய்திடுவான் என்பதையோ அல்லது அவர்கள் அறியாதபுறத்திலிருந்து வேதனை அவர்களை வந்தடையும் என்பதையோ குறித்து அச்சமற்று இருக்கிறார்களா? *46.* அல்லது அவர்கள் நடமாடிக் கொண்டிருக்கும்போதே பிடித்துக் கொள்ளமாட்டான் என்றும் அச்சமற்று இருக்கின்றனரா?-

அவர்கள் இறைவனிடமிருந்து தப்பிவிட முடியாது. 47. அல்லது அவர்கள் அஞ்சிக் கொண்டிருக்கும் நிலையிலேயே அவன் அவர்களைத் தண்டிக்கக்கூடும். நிச்சயமாக உங்கள் இறைவன் மிகுந்த பரிவுடையவனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

48. அல்லாஹ் படைத்துள்ள பொருட்களின் நிழல்கள் வலது புறமும், இடது புறமும் சாய்ந்து அல்லாஹ்வுக்கு சிரம் பணிவதை அவர்கள் பார்க்கவில்லையா? அவை அனைத்தும் பணிந்து கிடக்கின்றன. 49. வானங்களிலும் பூமியிலும் உள்ள உயிரினங்களும், வானவர்களும் அல்லாஹ்வுக்கே சிரம் பணிகிறார்கள். அவர்கள் ஆணவம் கொள்வதில்லை. 50. அவர்கள் தமக்கு மேலேயுள்ள இறைவனை அஞ்சி தங்களுக்கு இடப்படும் கட்டளைக்கேற்ப செயல்படுகிறார்கள்.

51. அல்லாஹ் கூறுகிறான்: (ஒன்றுக்குப் பதிலாக) "இரு தெய்வங்களை ஏற்படுத்திக் கொள்ளாதீர்கள், அவன் ஒரே இறைவன்தான். எனவே நீங்கள் என்னையே அஞ்சுங்கள்". 52. வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அவனுக்கே உரியவை. என்றென்றும் (நீங்கள் அனைவரும்) அவனுக்கே கட்டுப்பட வேண்டும். அல்லாஹ்வைத்தவிர மற்றவர்களுக்கா நீங்கள் பயப்படுகிறீர்கள்?

53. உங்களிடம் இருக்கும் அருட்கொடைகள் யாவும் அல்லாஹ்விடமிருந்தே வந்தவையாகும். உங்களுக்கு ஏதேனும் துன்பம் ஏற்பட்டால் அவனிடமே நீங்கள் முறையிடுகிறீர்கள். 54. பின்னர் அத்துன்பத்தை உங்களைவிட்டும் அவன் அகற்றிவிட்டால் உங்களில் ஒரு பிரிவினர் தம் இறைவனுக்கு இணைவைக்கிறார்கள், 55. நாம் அவர்களுக்கு வழங்கியவற்றை அவர்கள் நிராகரிப்பதற்காக.

எனவே சில நாட்கள் அனுபவித்துக் கொள்ளுங்கள், விரைவில் நீங்கள் அறிந்துகொள்வீர்கள். 56. நாம் அவர்களுக்கு அளித்தவற்றிலிருந்து தாங்கள் எதையும் அறிந்து கொள்ள முடியாதவற்றுக்காக ஒரு பங்கை ஒதுக்குகிறார்கள். அல்லாஹ்வின்மீது சத்தியமாக நீங்கள் புனைந்து கொண்டிருந்தவற்றைப்பற்றி நிச்சயம் விசாரிக்கப்படுவீர்கள்.

57. அவர்கள் அல்லாஹ்வுக்குப் பெண் மக்களை ஏற்படுத்துகிறார்கள். அவன் தூய்மையானவன். ஆனால் அவர்களுக்கோ தாங்கள் விரும்புவதுதான் வேண்டுமாம். 58. அவர்களில் யாருக்காவது பெண் குழந்தை பிறந்த நற்செய்தி கூறப்பட்டால் அவரது முகம் கறுத்து விடுகிறது. துக்கத்தால் அவரது தொண்டை அடைத்துக் கொள்கிறது. 59. அவனுக்கு கூறப்பட்ட 'நற்செய்தியின்' கேவலத்தால் மக்களைவிட்டு மறைந்து திரிகிறான். இழிவுடன் அதனை வைத்துக்கொள்வதா அல்லது மண்ணில் புதைத்து விடுவதா? என்று எண்ணுகிறான். அவர்கள் எடுத்த முடிவு எவ்வளவு மோசமானது! 60. மறுமையின்மீது நம்பிக்கை கொள்ளாதவர்களுக்குக் கெட்ட உதாரணம் உள்ளது. உயர்ந்த உதாரணம் அல்லாஹ்வுக்கே உரியது. அவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும் ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.

61. மனிதர்கள் இழைக்கும் அநீதியினால் அல்லாஹ் அவர்களைத் தண்டிப்பதாக இருந்தால் பூமியில் எந்த உயிரினத்தையும் விட்டு வைத்திருக்க மாட்டான். ஆயினும் அவன் ஒரு குறிப்பிட்ட தவணைவரை அவர்களுக்கு அவகாசம் அளிக்கிறான். அவர்களின் தவணை வந்துவிட்டால் ஒரு நொடிகூட அவர்கள் பிந்தவும் மாட்டார்கள், முந்தவும் மாட்டார்கள்.

62. தாம் வெறுப்பதை அவர்கள் அல்லாஹ்வுக்கு ஏற்படுத்திக் கொள்கிறார்கள். தங்களுக்கு நன்மையுண்டு என்று அவர்களின்

நாவுகள் பொய்யுரைக்கின்றன. உறுதியாக அவர்களுக்கு நரகம்தான். அதில் அவர்கள் கொண்டு சேர்க்கப்படுவார்கள்.

**63.** அல்லாஹ்வின்மீது ஆணையாக, உமக்கு முன்னரும் நாம் பல்வேறு சமூகங்களிடம் தூதர்களை அனுப்பியுள்ளோம். ஆயினும் சாத்தான் அவர்களது செயல்களை அவர்களுக்கு அழகாக்கிக் காட்டினான். அவனே இன்று இவர்களின் நண்பனாக இருக்கிறான். இவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு. **64.** அவர்கள் முரண்பட்டுள்ள விஷயங்களை நீர் அவர்களுக்கு தெளிவுபடுத்துவதற்காகத்தான் நாம் உமக்கு வேதத்தை அருளியுள்ளோம். நம்பிக்கைகொள்ளும் மக்களுக்கு இது வழிகாட்டியாகவும், கருணையாகவும் இருக்கின்றது.

**65.** அல்லாஹ்தான் வானத்திலிருந்து நீரை இறக்கி அதன்மூலம் இறந்த பூமியை உயிர்ப்பிக்கிறான். நிச்சயமாக செவியேற்கும் மக்களுக்கு இதில் சான்று உள்ளது.

**66.** கால்நடைகளிலும் உங்களுக்குப் படிப்பினை இருக்கிறது. நாம் அவற்றின் வயிற்றிலுள்ள சாணத்திற்கும், இரத்தத்திற்கும் மத்தியிலிருந்து இதமான, சுத்தமான பாலை அருந்துவோருக்காக அளிக்கிறோம். **67.** பேரீச்சை மற்றும் திராட்சைப் பழங்களிலிருந்து நீங்கள் போதைப் பொருட்களையும், நல்ல உணவுப் பொருட்களையும் தயாரிக்கிறீர்கள். நிச்சயமாக இதில் அறிவுடைய மக்களுக்கு அத்தாட்சி இருக்கின்றது.

**68.** உமது இறைவன் தேனீக்களுக்கு உள்ளுணர்வை ஏற்படுத்தினான். அது “மலைகளிலும், மரங்களிலும், மக்கள் கட்டும் கட்டடங்களிலும் கூடுகளை அமைத்துக்கொள்! **69.** பின்னர் எல்லாவகையான கனிகளிலிருந்தும் சாற்றை உறிஞ்சிக்கொள்! உன் இறைவன் அமைத்துத்தந்த எளிதான பாதைகளில் செல்!”

என்பதாகும். அதன் வயிற்றிலிருந்து பல்வேறு நிறங்களுடைய பானம் வெளிப்படுகிறது. அதில் மக்களுக்கு நிவாரணம் உள்ளது. நிச்சயமாக இதில் சிந்திக்கக்கூடிய மக்களுக்கு சான்று இருக்கிறது.

*70.* அல்லாஹ்வே உங்களைப் படைத்தான். பின்னர் அவனே உங்களை மரணிக்கச் செய்கிறான். அறிந்தபின்னரும் எதையும் அறியாதவராக ஆகிவிடக்கூடிய முதுமைவரை தள்ளப்படுபவரும் உங்களில் உண்டு. நிச்சயமாக அல்லாஹ் நன்கறிந்தவனாகவும் பேராற்றல் உடையவனாகவும் இருக்கின்றான்.

*71.* அல்லாஹ்வே உங்களில் சிலரைவிட சிலரை செல்வவளத்தில் சிறப்பித்துள்ளான். சிறப்பிக்கப்பட்டவர்கள் தம் செல்வத்தை தம் அடிமைகளுக்கு வழங்கி அவர்களும் இதில் சமமாவதை விரும்புவதில்லை. அல்லாஹ்வின் அருட்கொடையை அவர்கள் மறுக்கிறார்களா?

*72.* அல்லாஹ் உங்களுக்காக உங்களிலிருந்தே (மனித இனத்திலிருந்து) உங்கள் மனைவியரை ஏற்படுத்தியுள்ளான். உங்கள் மனைவியரிலிருந்து குழந்தைகளையும், பேரக்குழந்தைகளையும் ஏற்படுத்தித் தூய்மையானவற்றிலிருந்து உங்களுக்கு உணவும் வழங்கியுள்ளான். இதன்பின்னரும் இவர்கள் அசத்தியத்தின்மீது நம்பிக்கைகொண்டு அல்லாஹ்வின் அருட்கொடைகளை நிராகரிக்கிறார்களா? *73.* அல்லாஹ்வைவிடுத்து அவர்கள் வணங்குபவை வானங்களிலிருந்தோ, பூமியிலிருந்தோ அவர்களுக்கு சிறிதும் உணவளிக்கும் அதிகாரத்தையோ ஆற்றலையோ பெற்றிருக்கவில்லை. *74.* எனவே நீங்கள் அல்லாஹ்வுக்கு உதாரணங்களைக் கூறாதீர்கள். அல்லாஹ்வே நன்கறிவான், நீங்கள் அறியமாட்டீர்கள்.

**75.** அல்லாஹ் ஒரு உதாரணம் கூறுகிறான். ஒருவர் எதையும் (சுதந்திரமாக) செய்ய முடியாத பிறருக்கு உடைமையான அடிமையாக இருக்கிறார். மற்றொருவருக்கு நம்மிடமிருந்து நல்ல செல்வவளத்தை வழங்கியுள்ளோம். அவர் அதிலிருந்து மறைமுகமாகவும், வெளிப்படையாகவும் செலவும் செய்கிறார். இவ்விருவரும் சமமாவார்களா? எல்லாப்புகழும் அல்லாஹ்வுக்கே. ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் அறிந்துகொள்வதில்லை.

**76.** அல்லாஹ் இன்னும் ஒரு உதாரணத்தையும் கூறுகிறான்: இரு மனிதர்கள் இருக்கிறார்கள். ஒருவன் எதையும் செய்ய இயலாத ஊமையாக, தன் எஜமானனுக்கு சுமையாக இருக்கிறான். எஜமானன் அவனை எங்கே அனுப்பினாலும் அவன் எக்காரியத்தையும் ஒழுங்காகச் செய்வதில்லை. மற்றொருவர் நீதியை ஏவி நேரான வழியின்மீது நிலைத்திருக்கிறார். இருவரும் சமமாவார்களா?

**77.** வானங்களிலும், பூமியிலும் உள்ள மறைவான விஷயங்கள் அல்லாஹ்வுக்கே சொந்தமானவையாகும். மறுமைநாளின் நிகழ்வு கண் இமைக்கும் நேரம் போன்றதுதான். ஏன், அதைவிடவும் விரைவானது. நிச்சயமாக அல்லாஹ் எல்லாவற்றின்மீதும் பேராற்றலுடையவன்.

**78.** அல்லாஹ்தான் உங்கள் அன்னையரின் வயிற்றிலிருந்து உங்களை வெளிப்படுத்தினான். நீங்கள் எதையும் அறியாதவர்களாக இருந்தீர்கள். நீங்கள் நன்றி செலுத்தும்பொருட்டு உங்களுக்கு செவிப்புலனையும், பார்வையையும், உள்ளங்களையும் ஏற்படுத்தினான்.

**79.** ஆகாயத்தில் கட்டுப்படுத்தப்பட்டுள்ள பறவைகளை மக்கள் பார்க்கவில்லையா? அல்லாஹ்தான் அவற்றைத் தாங்கியுள்ளான். நம்பிக்கைகொள்ளும் மக்களுக்கு இதில்

ஏராளமான சான்றுகள் இருக்கின்றன. *80.* அல்லாஹ் உங்கள் வீடுகளை உங்களுக்கு அமைதியளிக்கக்கூடியதாக ஆக்கியுள்ளான். கால்நடைகளின் தோல்களிலிருந்து கூடாரங்களையும் அவன் உங்களுக்காக ஏற்படுத்தியுள்ளான். நீங்கள் பயணத்தின்போதும், ஊரில் நீங்கள் தங்கி இருக்கும்போதும் அதன் பயனை எளிதாகப் பெறுகிறீர்கள். செம்மறியாடு, ஒட்டகம், வெள்ளாடு ஆகியவற்றின் உரோமங்களிருந்து வீட்டு உபகரணங்களையும், பயனுள்ள பொருட்களையும் ஒரு குறிப்பிட்ட காலம்வரை ஏற்படுத்தியுள்ளான்.

*81.* தான் படைத்தவற்றிலிருந்து அல்லாஹ் உங்களுக்காக நிழல்களையும் மலைகளில் தங்குமிடங்களையும் ஏற்படுத்தியுள்ளான். வெப்பத்திலிருந்து உங்களைக் காக்கக்கூடிய ஆடைகளையும், போரிலிருந்து உங்களைக் காக்கக்கூடிய கவச ஆடைகளையும் அவன் உங்களுக்கு வழங்கியுள்ளான். இவ்வாறு நீங்கள் அடிபணிந்து வாழும்பொருட்டு தன் அருட்கொடைகளை உங்களுக்கு நிறைவுபடுத்துகிறான்.

*82.*எனவே அவர்கள் புறக்கணித்தால் (புறக்கணிக்கட்டும்). தெளிவாக எடுத்துரைப்பதுதான் உம்மீதுள்ள கடமையாகும். *83.* அவர்கள் இறைவனின் அருட்கொடைகளை அறிந்துகொண்ட பின்னரும் அதனை நிராகரிக்கிறார்கள். அவர்களில் பெரும்பாலோர் நன்றி கெட்டவர்களாகத்தான் இருக்கிறார்கள்.

*84.* ஒவ்வொரு சமூகத்திலிருந்தும் ஒரு சாட்சியை நாம் எழுப்பும் நாளில் நிராகரிப்பாளர்கள் வழிகாட்டப்படவும் மாட்டார்கள், மன்னிப்புக்கோருமாறு கூறப்படவும் மாட்டார்கள். *85.* அநியாயக்காரர்கள் வேதனையைக் காணும்போது

*அவர்களைவிட்டும் வேதனை தளர்த்தப்படாது. அவர்களுக்கு அவகாசமும் அளிக்கப்படாது.*

***86.*** *இணைவைப்பாளர்கள் தங்கள் இணைத்தெய்வங்களைக் காணும்போது "எங்கள் இறைவனே, உன்னை விடுத்து நாங்கள் வணங்கிக் கொண்டிருந்த இணைத்தெய்வங்கள் இவைதான்" என்று கூறுவார்கள். அப்போது அவை "நீங்கள்தான் பொய்யர்கள்" என்று கூறி அவர்களின் மீதே பழிபோட்டு விடும்.* ***87.*** *அன்றைய தினம் அவர்கள் அல்லாஹ்விடம் சரணடைந்து விடுவார்கள். அவர்கள் கற்பனையாக உருவாக்கியவை யாவும் அவர்களைவிட்டும் மறைந்து விடும்.* ***88.*** *சத்தியத்தை நிராகரித்து, இறைவழியைவிட்டும் மக்களைத் தடுத்துக் கொண்டிருந்தவர்களுக்கு - அவர்கள் செய்துகொண்டிருந்த குழப்பங்களினால் - நாம் வேதனைக்கு மேல் வேதனையை அதிகப்படுத்துவோம்.*

***89.*** *(தூதரே) ஒவ்வொரு சமூகத்திலும் அவர்களிலிருந்தே ஒரு சாட்சியை அவர்களுக்கெதிராக நாம் எழுப்பும்நாளில் உம்மை அவர்களின் மீது சாட்சியாகக் கொண்டு வருவோம். யாவற்றையும் தெளிவுபடுத்தக்கூடிய வேதத்தை நாம் உமக்கு அருளியுள்ளோம். அது கீழ்ப்படிந்து வாழும் மக்களுக்கு வழிகாட்டியாகவும், கருணையாகவும், நற்செய்தியாகவும் இருக்கின்றது.*

***90.*** *நிச்சயமாக அல்லாஹ் நீதி செலுத்துமாறும், நன்மை செய்யுமாறும், உறவினர்களுக்கு உதவி புரியுமாறும் கட்டளையிட்டு மானக்கேடான காரியங்கள், பாவங்கள், வரம்பு மீறுதல் ஆகியவற்றைவிட்டு உங்களைத் தடுக்கிறான். நீங்கள் படிப்பினை பெறும்பொருட்டு உங்களுக்கு அறிவுரை வழங்குகிறான்.*

***91.*** *நீங்கள் உங்களுக்குள் (அல்லாஹ்வின் பெயரால்) உடன்படிக்கை செய்துகொண்டால் அல்லாஹ்வின் உடன்படிக்கையை*

நிறைவேற்றுங்கள். சத்தியங்களை உறுதிப்படுத்தியபின் முறித்து விடாதீர்கள். நீங்கள் அல்லாஹ்வை உங்களுக்குப் பொறுப்பாளனாக ஆக்கியுள்ளீர்கள். நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை நன்கறிகிறான். *92.* தானே சிரமப்பட்டு நூற்ற நூலை துண்டு துண்டாக்கிவிட்ட பெண்ணைப்போன்று ஆகிவிடாதீர்கள். ஒரு சமூகம் மற்றொரு சமூகத்தைவிட பெருகிவிட வேண்டும் என்பதற்காக உங்கள் சத்தியங்களை உங்களிடையே குழப்பம் உண்டாக்கும் கருவியாக ஆக்கிவிடாதீர்கள். இதன்மூலம் அல்லாஹ் உங்களைச் சோதிக்கிறான். நீங்கள் முரண்பட்டுக்கொண்டிருந்த விஷயங்களை மறுமைநாளில் அவன் உங்களுக்குத் தெளிவுபடுத்திடுவான்.

*93.* அல்லாஹ் நாடியிருந்தால் உங்கள் அனைவரையும் ஒரே (மார்க்கத்தைப் பின்பற்றும்) வகுப்பினராக ஆக்கியிருப்பான். ஆயினும் தான் நாடியோரை அவன் வழிதவறச் செய்துவிடுகிறான், தான் நாடியோருக்கு நேர்வழி காட்டுகிறான். உங்களின் செயல்களைக் குறித்து நிச்சயம் நீங்கள் விசாரிக்கப்படுவீர்கள்.

*94.* உங்கள் சத்தியங்களை ஒருவரையொருவர் ஏமாற்றும் கருவியாக ஆக்கிவிடாதீர்கள். அதனால் பாதம் உறுதியானபின்னர் சறுக்கி விடும். நீங்கள் இறைவழியைவிட்டு மக்களைத் தடுத்ததனால் தண்டனையை அனுபவியுங்கள். உங்களுக்குக் கடுமையான வேதனையும் உண்டு. *95.* அல்லாஹ்வின் வாக்குறுதியை அற்ப ஆதாயத்திற்கு விற்று விடாதீர்கள். நீங்கள் அறிவுடையோராக இருப்பின் அல்லாஹ்விடம் உள்ளவையே உங்களுக்குச் சிறந்தவையாகும்.

*96.* உங்களிடம் உள்ளவை யாவும் தீர்ந்துவிடும். அல்லாஹ்விடம் உள்ளவைதான் நிலைத்திருக்கும். பொறுமையாளர்களுக்கு அவர்கள் செய்துகொண்டிருந்த நற்செயல்களுக்கான கூலியை நிச்சயம்

நாம் வழங்கிடுவோம். **97.** ஆணாயினும், பெண்ணாயினும் நம்பிக்கைகொண்ட நிலையில் நற்செயல் புரிபவராக இருந்தால் நாம் அவரை நல்வாழ்வு வாழச் செய்வோம். அவர்கள் செய்துகொண்டிருந்த நற்செயல்களுக்கான கூலியை நிச்சயம் நாம் வழங்கிடுவோம்.

**98.** நீர் குர்ஆனை ஓதுவீராயின் விரட்டப்பட்ட சாத்தானை விட்டு அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருவீராக. **99.** நம்பிக்கைகொண்டு தம் இறைவனையே சார்ந்திருப்பவர்களிடம் அவனது அதிகாரம் செல்லுபடியாகாது. **100.** யாரெல்லாம் அவனுடன் தோழமைகொண்டு அல்லாஹ்வுக்கு இணைவைக்கிறார்களோ அவர்களிடம்தான் அவனது அதிகாரம் செல்லுபடியாகும்.

**101.** நாம் ஒரு வசனத்தை மற்றொரு வசனத்தைக்கொண்டு மாற்றினால் - தான் அருள்வதை அல்லாஹ் நன்கறிவான் - "நீதான் புனைந்துள்ளாய்" என்று அவர்கள் கூறுகிறார்கள். மாறாக அவர்களில் பெரும்பாலோர் அறிய மாட்டார்கள். **102.** நீர் கூறும்; "இதனைப் பரிசுத்த ஆன்மா (கேப்ரியேல்) உமது இறைவனிடமிருந்து சத்தியத்துடன் அருளியுள்ளார்". அது நம்பிக்கையாளர்களை உறுதிப்படுத்திட வேண்டும், கீழ்ப்படிந்து வாழும் மக்களுக்கு நற்செய்தியாகவும், வழிகாட்டியாகவும் அமைய வேண்டும் என்பதற்காகத்தான்.

**103.** "ஒரு மனிதர்தான் இவருக்கு இதனை கற்றுக் கொடுக்கிறார்" என்று அவர்கள் கூறுவதை நாம் அறிவோம். ஆனால் அவர்கள் குறிப்பிடும் மனிதரின் மொழி வேற்று மொழியாகும். இதுவோ தெளிவான அரபி மொழியாகும். **104.** அல்லாஹ்வின் வசனங்களை நம்பாதவர்களுக்கு அல்லாஹ் ஒருபோதும் நேர்வழிகாட்ட மாட்டான். அவர்களுக்கு துன்புறுத்தும் வேதனையுண்டு. **105.** அல்லாஹ்வின் வசனங்களை

நம்பாதவர்கள்தான் அல்லாஹ்வின் மீது பொய்யை புனைவார்கள். அவர்கள்தான் பொய்யர்கள்.

*106.* எவர் அல்லாஹ்வின்மீது நம்பிக்கைகொண்ட பின்னர் நிர்ப்பந்தத்திற்குள்ளாகி - அவரது உள்ளம் நம்பிக்கையைக்கொண்டு திருப்தியடைந்த நிலையில் அவனை நிராகரித்து விட்டால் அவர்மீது எவ்விதக் குற்றமுமில்லை. ஆயினும் எவர் முழுமனதோடு நிராகரித்து விட்டாரோ அத்தகையவர்மீது இறைக்கோபம் உண்டாகும். அவர்களுக்குக் கடுமையான வேதனையும் உண்டு. *107.* ஏனெனில் அவர்கள் மறுமைக்குப் பகரமாக (பதிலாக) இவ்வுலக வாழ்வைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார்கள். நிச்சயமாக நிராகரிக்கும் மக்களுக்கு அல்லாஹ் நேர்வழிகாட்ட மாட்டான். *108.* அவர்களது உள்ளங்களின்மீதும் செவிகளின்மீதும், பார்வைகளின்மீதும் அல்லாஹ் முத்திரையிட்டுவிட்டான். அவர்கள்தான் அலட்சியமாக இருப்பவர்கள். *109.* உறுதியாக அவர்கள்தான் மறுமையில் இழப்புக்கு ஆளாகக்கூடியவர்கள்.

*110.* யாரெல்லாம் துன்புறுத்தப்பட்ட பின் புலம்பெயர்ந்து, இறைவழியில் கடுமையாகப் பாடுபட்டுப் பொறுமையாக இருந்தார்களோ அவர்களுக்காக உமது இறைவன் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். *111.* அந்நாளில் ஒவ்வொரு மனிதனும் தனக்காகத்தான் வாதாடுவான். ஒவ்வொருவருக்கும் அவரவர் செய்தவற்றுக்கான கூலி முழுமையாக வழங்கப்படும். அவர்கள் அநீதி இழைக்கப்பட மாட்டார்கள்.

*112.* அல்லாஹ் ஒரு ஊர்மக்களை உதாரணமாகக் கூறுகிறான். அவர்கள் அமைதியாகவும் நிம்மதியாகவும் வாழ்ந்து

வந்தார்கள். அவர்களுக்கான வாழ்வாதாரப் பொருட்கள் அனைத்து இடங்களிலிருந்தும் தாராளமாகக் கிடைத்துக் கொண்டிருந்தது. ஆனால் அவர்கள் அல்லாஹ்வின் அருட்கொடைகளுக்கு நன்றிகெட்டவிதத்தில் நடந்து கொண்டார்கள். ஆகவே அவர்களது செயல்களினால் அல்லாஹ் பசியையும், பயத்தையும், அவர்கள் சுவைக்கும்படிச் செய்தான். 113. அவர்களிலிருந்தே ஒரு தூதர் அவர்களிடம் வந்தார். ஆனால் அவர்கள் அவரை மறுத்து விட்டார்கள். எனவே அவர்கள் அநியாயக்காரரர்களாக இருக்கும் நிலையிலேயே வேதனை அவர்களைப் பிடித்துக் கொண்டது.

114. எனவே அல்லாஹ் வழங்கியுள்ள தூய்மையான, அனுமதிக்கப்பட்ட உணவுகளை உண்ணுங்கள். நீங்கள் அல்லாஹ்வையே வணங்குபவர்களாக இருந்தால் அவனுடைய அருட்கொடைகளுக்கு நன்றி செலுத்துங்கள். 115. செத்த பிராணி, இரத்தம், பன்றியின் மாமிசம், மற்றும் அல்லாஹ் அல்லாதவற்றின் பெயரால் பலியிடப்பட்டவை ஆகியவற்றைத்தான் அவன் உங்களுக்குத் தடை செய்துள்ளான். விரும்பாமலும், வரம்பு மீறாமலும் யாரேனும் நிர்ப்பந்திக்கப்பட்டுவிட்டால் - நிச்சயமாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

116. உங்கள் நாவுகள் கற்பித்துக்கொண்ட பொய்யின் அடிப்படையில் ‘இது அனுமதிக்கப்பட்டது’ ‘இது தடுக்கப்பட்டது’ என்று அல்லாஹ்வின்மீது பொய்யைப் புனையாதீர்கள். அல்லாஹ்வின்மீது பொய்யைப் புனைவோர் ஒருபோதும் வெற்றிபெற மாட்டார்கள். 117. அவர்கள் கொஞ்சம் அனுபவித்துக் கொள்ளட்டும். அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு.

*118.* இதற்கு முன்னர் உமக்கு எடுத்துக் கூறியவற்றை நாம் யூதர்களுக்குத் தடை செய்திருந்தோம். நாம் அவர்களுக்கு அநீதி இழைக்கவில்லை. மாறாக அவர்கள் தமக்குத்தாமே அநீதி இழைத்துக் கொண்டார்கள்.

*119.* எவரெல்லாம் தங்கள் அறியாமையினால் பாவங்கள் புரிந்துவிட்டு அறிந்தபின்னர் மன்னிப்புக் கோரி தம்மை சீர்படுத்திக் கொண்ட பின்னர்... நிச்சயமாக உமது இறைவன் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

*120.* நிச்சயமாக ஆப்ரஹாம் அல்லாஹ்வுக்கு அடிபணிந்தவராக, அவனிடமே முழுநம்பிக்கை கொண்டவராக ஒரு தனித்த சமூகமாக விளங்கினார். அவர் இணைவைப்பவராக இருக்கவில்லை. *121.* அவனுடைய அருட்கொடைகளுக்கு நன்றி செலுத்துபவராக இருந்தார். அவன் அவரைத் தேர்ந்தெடுத்து நேரான வழியையும் காட்டினான். *122.* இவ்வுலகில் நாம் அவருக்கு நன்மையை வழங்கினோம். மறுமையிலும் அவர் நல்லோர்களில் இருப்பார். *123.* முழுநம்பிக்கைகொண்ட ஆப்ரஹாமின் மார்க்கத்தைப் பின்பற்றுமாறு நாம் உமக்கு அறிவித்தோம். அவர் இணைவைப்பவராக இருக்கவில்லை.

*124.* சனிக்கிழமை விஷயத்தில் கருத்து வேறுபாடு கொண்டவர்களுக்குத்தான் அது விதிக்கப்பட்டிருந்தது. நிச்சயமாக உம் இறைவன் மறுமைநாளில் அவர்கள் கருத்து வேறுபாடு கொண்டிருந்த விஷயங்களில் அவர்களிடையே தீர்ப்பளிப்பான்.

*125.* விவேகத்துடனும், அழகிய அறிவுரையுடனும் உம் இறைவனின் பாதையின் பக்கம் அழைப்பீராக! அவர்களுடன் அழகிய முறையில் விவாதம் புரிவீராக! நிச்சயமாக உம் இறைவன் தன் பாதையை விட்டும் விலகிவிட்டவர்களையும் நேர்வழியில் செல்பவர்களையும் நன்கறிவான்.

*126.* நீங்கள் தண்டிப்பதாயின் நீங்கள் துன்புறுத்தப்பட்ட அளவுக்கே தண்டியுங்கள். நீங்கள் பொறுமையைக் கடைப்பிடித்தால் அதுவே பொறுமையாளர்களுக்கு மிகச் சிறந்ததாகும். *127.* (தூதரே) பொறுமையைக் கடைப்பிடிப்பீராக. உமது பொறுமை இறையருளினால்தான் கிடைக்கிறது. அவர்களுக்காக நீர் கவலைப்பட வேண்டாம். அவர்கள் தீட்டும் திட்டங்களினால் நெருக்கடிக்குள்ளாகிவிட வேண்டாம். *128.* நிச்சயமாக தன்னை அஞ்சி நடப்போருடனும் நற்செயல்கள் புரிவோருடனும் அல்லாஹ் இருக்கின்றான்.

# 17. இஸ்ராயீலின் மக்கள் (பனீ இஸ்ராயீல்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

*1.* தன் அடியாரை (மக்காவின்) புனித ஆலயத்திலிருந்து வெகு தொலைவிலுள்ள (ஜெருசலத்தின்) ஆலயம்வரை ஓர் இரவில் அழைத்துச் சென்றவன் மிகவும் தூய்மையானவன். அதன் சுற்றுப்புறங்களை நாம் அருள்வளம் மிக்கதாக ஆக்கியுள்ளோம். நம் சான்றுகளை அவருக்கு காட்டுவதற்காகவே (அழைத்துச் சென்றோம்). நிச்சயமாக அவன் செவியேற்பவனாகவும் பார்ப்பவனாகவும் இருக்கின்றான். *2.* நாம் மோசேவுக்கு வேதத்தை வழங்கினோம். அதனை இஸ்ராயீலின் மக்களுக்கு வழிகாட்டியாக ஆக்கி “என்னைத்தவிர வேறு யாரையும் உங்களுக்குப் பொறுப்பாளராக

ஆக்கக்கூடாது" என்று கட்டளையிட்டோம். 3. நீங்கள் நோவாவுடன் நாம் (கப்பலில்) சுமந்த மக்களின் சந்ததிகளாக இருக்கிறீர்கள். நிச்சயமாக அவர் நன்றியுள்ள அடியாராக இருந்தார்.

4. நாம் இஸ்ராயீலின் மக்களுக்கு, "நீங்கள் உலகத்தில் இருமுறை குழப்பம் செய்வீர்கள், பெரும் அட்டூழியம் புரிவீர்கள்" என்று வேதத்தில் அறிவித்தோம். 5. அவற்றில் முதலாவது வாக்குறுதி வந்தபோது நாம் உங்களுக்கெதிராக மிகவும் பலம்வாய்ந்த நம் அடியார்களை அனுப்பினோம். அவர்கள் வீடுகளுக்குள் புகுந்தார்கள். வாக்குறுதி நிறைவேறிவிட்டது. 6. பின்னர் அவர்களுக்கெதிராக உங்களுக்கு நாம் வெற்றியளித்து செல்வங்களாலும், மக்களாலும் உங்களுக்கு உதவிபுரிந்து உங்களைப் பெரும் கூட்டத்தினராக்கினோம்.

7. நீங்கள் நன்மைசெய்தால் அது உங்களுக்குத்தான் நல்லது. நீங்கள் தீமைசெய்தால் அது உங்களுக்கே கேடாக அமையும். எனவே இரண்டாவது வாக்குறுதி வந்தபோது உங்கள் முகங்களைச் சிதைத்து விடவும், அவர்கள் முன்பு நுழைந்தது போலவே பள்ளிவாசலில் (பைத்துல் முகத்தஸில்) நுழைந்து விடவும், அவர்களால் முடிந்ததை எல்லாம் அழித்துவிடவும் மேற்கொண்டும் நம் அடியார்களை அனுப்பினோம். 8. உங்கள் இறைவன் உங்கள்மீது கருணை காட்டக்கூடும். நீங்கள் மீண்டும் அதையே செய்தீர்களானால் நாமும் அதையே செய்வோம். நிராகரிப்பாளர்களுக்கு நாம் நரகத்தை சிறைச்சாலையாக ஆக்கியுள்ளோம்.

9. நிச்சயமாக இந்த குர்ஆன் மிகவும் நேரானவழியைக் காட்டுகிறது. நற்செயல்புரியும் நம்பிக்கையாளர்களுக்கு பெரும்கூலி உண்டெென நற்செய்தியும் கூறுகிறது. 10. மறுமையை நம்பாதோருக்கு நாம் துன்புறுத்தும் வேதனையைத் தயார்படுத்தி வைத்துள்ளோம்.

*11.* நன்மையை வேண்டி பிரார்த்திப்பதுபோல மனிதன் தீமையை வேண்டி பிரார்த்திக்கிறான். மனிதன் மிகவும் அவசரக்காரனாக இருக்கிறான்*. *12.* நாம் இரவையும், பகலையும் இரு சான்றுகளாக்கியுள்ளோம். பின்னர் இரவெனும் சான்றை நீக்கி பகலெனும் சான்றைப் பிரகாசமாக்கியுள்ளோம். அது நீங்கள் உங்கள் இறைவனின் அருளைத் தேடிக்கொள்வதற்காகவும் ஆண்டுகளின் எண்ணிக்கையையும், கணக்கையும் அறிந்து கொள்வதற்காகவும்தான். நாம் ஒவ்வொன்றையும் தெளிவாக விவரித்து விட்டோம்.

*13.* ஒவ்வொரு மனிதனின் விதியையும் அவனது கழுத்திலே மாட்டியுள்ளோம். மறுமைநாளன்று அவனுக்காக நாம் ஒரு புத்தகத்தை வெளிப்படுத்துவோம். அதனை அவன் விரிக்கப்பட்டதாகக் காண்பான். *14.* “உன் புத்தகத்தைப் படித்துப் பார். இன்றையதினம் உன் கணக்கைப் பார்க்க நீயே போதுமானவன் (என்று கூறப்படும்)''. *15.* நேரானவழியில் செல்பவர் தமது நன்மைக்காகவே நேரான வழியில் செல்கிறார். வழிதவறிச் செல்பவர் தமக்குத்தாமே தீங்கிழைத்துக் கொள்கிறார். எவரும் அடுத்தவரின் சுமையைச் சுமக்க மாட்டார். நாம் ஒரு தூதரை அனுப்பும்வரை ஒருபோதும் (மக்களை) தண்டிப்பதில்லை.

---

*மரணத்திற்குப் பின்னரான மறுமை வாழ்க்கைப் பயணத்திற்கான சரியான நேரான வழியை மனிதன் தேர்ந்தெடுக்கும் விதமாக இவ்வுலக வாழ்வில் உடனடியாகக் கிடைக்கக்கூடிய அற்ப வசதிகளைப் பெறுவதற்காக பேராசையுடன் செயல்படாமல் மனிதன் பொறுமையாக இருப்பதை இறைவன் விரும்புகிறான். ஆனால் மனிதனோ, நிரந்தரமற்ற அற்பமான இந்த உலகியல் வசதிகளைப்பெற படுவேகமான அவசரகதியில் செயல்படுகிறான். ஆனால் அதுவோ அவனது முன்னேற்றதிற்கான பயணத்திற்கு மாபெரும் தடையாக இருக்கின்றது. உடனடியான பலன்களைப் பெறத் துடிக்கும் மனிதனின் இச்சை மறுமை வாழ்க்கையின் பெரும் வெகுமதிகளைப் பெறுவதிலிருந்து அவனை தூரமாக்குகிறது.

*16.* நாம் ஒரு ஊரை அழிக்க நாடினால் அங்கு சொகுசாக வாழ்பவர்களுக்குக் கட்டளையிடுவோம். அங்கு (இறைவனுக்கு) அவர்கள் மாறு செய்வார்கள். அப்போது அவர்களின்மீது வாக்கு உறுதியாகி விடும். எனவே அதனை அடியோடு அழித்து விடுகிறோம். *17.* நோவாவுக்குப் பின்னர் நாம் எத்தனையோ சமூகங்களை அழித்துள்ளோம். தன் அடியார்களின் பாவங்களை அறிந்துகொள்வதற்கும் பார்ப்பதற்கும் உமது இறைவனே போதுமானவன்.

*18.* எவர் விரைவில் கிடைக்கக்கூடியதை (இவ்வுலகை) விரும்புவாரோ, அவருக்கு நாம் கொடுக்க நாடியதைக் கொடுத்து விடுவோம். பின்னர் அவருக்காக நரகத்தை ஏற்படுத்தியுள்ளோம். இழிவுக்குள்ளாகி சபிக்கப்பட்டவராக அவர் அதில் நுழைவார். *19.* எவர் நம்பிக்கை கொண்டவராக மறுமையை விரும்பி அதற்காக முயற்சி செய்கிறாரோ அத்தகையவரின் முயற்சி அங்கீகரிக்கப்படும்.

*20.* நாம் இவர்களுக்கும், அவர்களுக்கும், ஆக ஒவ்வொருவருக்கும் உம் இறைவனின் கொடையிலிருந்து கொடுத்து வருகிறோம். உம் இறைவனின் கொடை எவருக்கும் தடைசெய்யப்பட்டதாக இல்லை. *21.* நாம் அவர்களில் சிலரை சிலரைவிட எவ்வாறு சிறப்பித்துள்ளோம் என்பதைப் பாரும். அந்தஸ்திலும், சிறப்பிலும் மறுமையே மிக மேலானது.

*22.* எனவே அல்லாஹ்வுடன் வேறொருவரை இறைவனாக்கி விடாதீர். அவ்வாறுசெய்தால் இழிவடைந்து, நாதியற்றவராகி விடுவீர். *23.* உம் இறைவன் கட்டளையிட்டுள்ளான்: "நீங்கள் அவனைத்தவிர வேறு யாரையும் வணங்கக்கூடாது. தாய் தந்தையருடன் நல்லமுறையில் நடந்துகொள்ள வேண்டும். அவர்களில் ஒருவரோ

*அல்லது இருவருமோ உம்மிடம் (இருக்கும் நிலையில்) முதுமையை அடைந்து விட்டால் 'சீ' என்று சலித்துக் கொள்ளவோ, அவர்களைக் கடிந்து கொள்ளவோ வேண்டாம். அவர்களிடம் கண்ணியமாகப் பேசுவீராக! 24. அவர்களுக்கு முன்னால் கருணையுடன் பணிவெனும் சிறகைத் தாழ்த்துவீராக! "இறைவா! சிறு பருவத்தில் அவர்கள் என்னைப் பராமரித்ததைப்போல அவ்விருவரின்மீதும் நீ கருணை காட்டுவாயாக!" என்று பிரார்த்திப்பீராக". 25. உங்கள் உள்ளங்களில் உள்ளவற்றை உங்கள் இறைவன் நன்கறிவான். நீங்கள் நல்லவர்களாக இருந்தால் - பாவமன்னிப்புக் கோருபவர்களை அவன் மன்னித்து விடுபவனாக இருக்கிறான்.*

*26. உறவினர்களுக்கும், ஏழைகளுக்கும், வழிப்போக்கர்களுக்கும் அவரவரின் உரிமையை வழங்குவீராக. ஆனால் வீண்செலவு செய்யாதீர். 27. நிச்சயமாக வீண்செலவு செய்பவர்கள் சாத்தானின் சகோதரர்களாவர். சாத்தானோ தன் இறைவனுக்கு நன்றிகெட்டவனாக இருக்கிறான். 28. நீர் உம் இறைவனின் கருணையை எதிர்பார்த்திருக்கும் சமயத்தில் அவர்களை (எதுவும் கொடுக்க இயலாமல்) நீர் புறக்கணிக்க நேர்ந்தால், அவர்களிடம் இதமான வார்த்தைகளையே கூறுவீராக.*

*29. உமது கையைக் கழுத்துடன் கட்டிக் கொள்ளாதீர். அதனை முழுவதும் விரித்தும் விடாதீர்*. அவ்வாறு செய்தால் நீர் தூற்றப்பட்டவராக, முடக்கப்பட்டவராக ஆகிவிடுவீர். 30. நிச்சயமாக தான் நாடுவோருக்கு உம் இறைவன் தாராளமாக வாழ்வாதாரத்தை வழங்குகிறான். தான் நாடுவோருக்கு அதனைச் சுருக்கியும் விடுகிறான். நிச்சயமாக தன் அடியார்களை அவன் நன்கறிந்தவனாகவும், பார்ப்பவனாகவும் இருக்கிறான்.*

---

*கையை கழுத்துடன் கட்டிக் கொள்ளுதல் என்பது கஞ்சத்தனத்தையும், விரித்து விடுதல் என்பது வீண் விரயத்தையும் குறிக்கும்.

*31. வறுமைக்கு அஞ்சி உங்கள் குழந்தைகளைக் கொன்று விடாதீர்கள். அவர்களுக்கும், உங்களுக்கும் நாமே உணவளிக்கிறோம். நிச்சயமாக அவர்களைக் கொல்வது பெரும் குற்றமாகும். 32. விபச்சாரத்தின் அருகில்கூட செல்லாதீர்கள். அது மானக்கேடானதாகவும், தீய வழியாகவும் இருக்கின்றது*.*

*33. அல்லாஹ் தடைசெய்துள்ள எந்த உயிரையும் அநியாயமாகக் கொன்று விடாதீர்கள். அநியாயமாகக் கொல்லப்பட்டவரின் வாரிசுக்கு நாம் அதிகாரம் அளித்துள்ளோம். எனவே அவர் கொலைசெய்வதில் வரம்புமீறிவிட வேண்டாம். நிச்சயமாக அவர் (சட்டப்பூர்வமாக) உதவி செய்யப்படுவார்.*

*34. அநாதைகள் பக்குவ வயதை அடையும்வரை அவர்களின் சொத்தை நல்லமுறையில் அன்றி நெருங்காதீர்கள். வாக்குறுதியை நிறைவேற்றுங்கள். நிச்சயமாக வாக்குறுதி குறித்து விசாரிக்கப்படும். 35. அளந்து கொடுக்கும்போது முழுமையாக அளந்து கொடுங்கள். சரியான தராசைக்கொண்டு எடை போடுங்கள். இது சிறந்த முறையாகும்; நல்ல முடிவாகும்.*

*36. உனக்கு சரியாகத் தெரியாததைக் கூறாதே; நிச்சயமாக செவிப்புலன், பார்வை, உள்ளம் ஆகிய ஒவ்வொன்றுக்காகவும் மனிதன் விசாரிக்கப்படுவான். 37. பூமியில் ஆணவம்கொண்டு திரியாதே. உன்னால் பூமியைப் பிளந்து விடவும் முடியாது, மலைகளின் அளவுக்கு உயர்ந்து விடவும் முடியாது.*

---

*இறைவன் முழுமையாக வேரறுக்க விரும்பும் தீமைகளில் ஒன்றாக விபச்சாரம் இருக்கிறது. அதாவது விபச்சாரம் என்பது மாபெரும் பாவமாகவும், வெட்கக்கேடான தன்மையின் நிரூபணமாகவும் இருக்கிறது. மனிதன் அதிலிருந்து விலகி இருக்க வேண்டும். இங்கே அந்த பாவத்தைப்பற்றி அடிப்படையான கட்டளை மட்டுமே அளிக்கப்பட்டுள்ளது.

*38.* இவையனைத்தும் உனது இறைவனிடத்தில் வெறுக்கத்தக்க தீய காரியங்களாகும்.

*39.* இவையனைத்தும் இறைவன் உனக்கு அறிவித்துள்ள அறிவார்ந்த விஷயங்களாகும். அல்லாஹ்வுடன் வேறு எவரையும் இறைவனாக்கிக் கொள்ளாதே. அவ்வாறு செய்தால் நீ தூற்றப்பட்டனாகவும், சபிக்கப்பட்டவனாகவும் நரகத்தில் வீசி எறியப்படுவாய்.

*40.* உங்கள் இறைவன் உங்களுக்கு ஆண் மக்களைத் தேர்ந்தெடுத்துவிட்டு தனக்காக வானவர்களிலிருந்து பெண் மக்களை எடுத்துக்கொண்டானா? நிச்சயமாக நீங்கள் மிகக்கடுமையான வார்த்தைகளைக் கூறுகிறீர்கள். *41.* அவர்கள் படிப்பினை பெறும்பொருட்டு நாம் இந்தக் குர்ஆனில் பல்வேறு விதங்களில் (சத்தியத்தை) விளக்கியும் அது அவர்களின் வெறுப்பைத்தான் அதிகரிக்கிறது. *42.* இவர்கள் கூறுவதைப்போல அவனுடன் வேறு தெய்வங்களும் இருந்திருந்தால் அவர்கள் அரியணையின் அதிபதியின்பக்கம் நிச்சயம் வழியைத்தேடி இருப்பார்கள். *43.* அவர்கள் கூறுவதைவிட்டும் அல்லாஹ் மிகத் தூய்மையானவன்; மிக உயர்ந்தவன். *44.* ஏழு வானங்களும் பூமியும் அவற்றிற்கிடையேயுள்ள அனைத்தும் அவனது தூய்மையைப் பறைசாற்றுகின்றன. அவையனைத்தும் அவனது தூய்மையை பறைசாற்றுவதுடன் அவனைப் புகழ்ந்துகொண்டும் இருக்கின்றன. ஆனால் அவை புகழ்வதை நீங்கள் அறிந்துகொள்ள மாட்டீர்கள். அவன் சகிப்புத்தன்மை உடையவனாகவும், பெரும் மன்னிப்பாளனாகவும் இருக்கின்றான்.

*45.* நீர் குர்ஆனை ஓதும்போது உமக்கும், மறுமையை நம்பாதோருக்கும் மத்தியில் மறைவான ஒரு திரையை நாம்

ஏற்படுத்தி விடுகிறோம். 46. அவர்கள் புரிந்துகொள்ள முடியாதவாறு அவர்களின் உள்ளங்கள் மீது திரையைப்போட்டு அவர்களின் காதுகள் கேட்க முடியாதவாறு செய்து விடுகிறோம். நீங்கள் குர்ஆனிலிருந்து ஒரே இறைவனைமட்டும் கூறும்போது அவர்கள் வெறுப்போடு புறங்காட்டிச் சென்று விடுகிறார்கள்.

47. அவர்கள் உம்மிடம் செவிசாய்த்துக் கேட்கும்போது அவர்கள் எதற்காகக் கேட்கிறார்கள் என்பதையும் "நீங்களோ சூனியம் செய்யப்பட்ட ஒரு மனிதரையே பின்பற்றுகிறீர்கள்" என்று அநியாயக்காரரர்கள் தங்களுக்குள் இரகசியமாகப் பேசுவதையும் நாம் அறிவோம். 48. இவர்கள் எப்படியெல்லாம் உமக்கு பட்டம் சூட்டுகிறார்கள் என்பதைப் பாரும். இவர்கள் வழிகெட்டு விட்டார்கள், நேரானவழியை அடைய முடியாது.

49. "நாம் எலும்புகளாக, மண்ணோடுமண்ணாக ஆகிவிட்டாலுமா மீண்டும் புதிய படைப்பாக எழுப்பப்படுவோம்" என்று அவர்கள் கேட்கிறார்கள். 50. நீர் கூறும், "நீங்கள் கல்லாகவோ, இரும்பாகவோ ஆகிவிடுங்கள் 51. அல்லது நீங்கள் பெரிதாக எண்ணும் ஒரு படைப்பாக ஆகிவிடுங்கள்". அப்போதும் அவர்கள், "எங்களை மீண்டும் படைப்பவன் யார்?" என்று கேட்பார்கள். நீர் கூறும், "எவன் உங்களை ஆரம்பத்தில் படைத்தானோ அவன்தான்!". அப்போது அவர்கள் தம் தலைகளை உம் பக்கம் சாய்த்து "அது எப்போது நிகழும்?" என்று கேட்பார்கள். நீர் கூறும், "அது சமீபத்தில் வந்துவிடக்கூடும்!". 52. அவன் உங்களை அழைக்கின்றநாளில் நீங்கள் அவனைப் புகழ்ந்தவாறு அவனிடம் வருவீர்கள். அப்போது வெகுசொற்ப காலமே தங்கியிருந்ததாக நீங்கள் எண்ணுவீர்கள்.

53. என் அடியார்களிடம் கூறுவீராக: "அவர்கள் நல்லவற்றையே பேசட்டும்!" சாத்தான் அவர்களிடையே குழப்பத்தை

உண்டு பண்ணுகிறான். நிச்சயமாக சாத்தான் மனிதனின் பகிரங்கப் பகைவனாவான்.

**54.** உங்கள் இறைவன் உங்களைப்பற்றி நன்கறிவான். அவன் நாடினால் உங்களுக்குக் கருணை காட்டுவான். அவன் நாடினால் உங்களைத் தண்டித்து விடுவான். நாம் உம்மை அவர்களுக்குப் பொறுப்பாளராக்கி அனுப்பவில்லை. 55. வானங்களிலும், பூமியிலும் உள்ளவற்றை உம் இறைவன் நன்கறிவான். நாம் தூதர்களில் சிலரை சிலரைவிட சிறப்பித்துள்ளோம். நாம் தாவீதுக்கு ஆகமத்தையும் வழங்கினோம்.

**56.** நீர் கூறும்: "அவனைத்தவிர நீங்கள் கடவுளாகக் கருதிக் கொண்டிருப்பவர்களை அழையுங்கள். அவர்கள் உங்களை விட்டும் துன்பத்தை நீக்கவோ, மாற்றவோ சக்திபெற மாட்டார்கள்". 57. இவர்கள் யாரை அழைக்கிறார்களோ அவர்கள்கூட, "தங்களில் யார் இறைவனிடம் மிக நெருக்கமானவர்கள்" என்று இறைநெருக்கத்தை தேடுபவர்களாகவும், அவனது கருணையை ஆதரவாகத் தேடுபவர்களாகவும், அவனது தண்டனையை அஞ்சுபவர்களாகவும் இருக்கிறார்கள். நிச்சயமாக உம் இறைவனின் வேதனை அஞ்சப்பட வேண்டியதுதான்.

**58.** எந்த ஊரையும் நாம் மறுமைநாளுக்கு முன்பே அழிக்காமல் அல்லது கடும் வேதனையால் பிடித்துக்கொள்ளாமல் விட்டுவிடுவதில்லை. இது பதிவேட்டில் எழுதப்பட்டுள்ள விஷயமாகும்.

**59.** முன்னிருந்தவர்களின் நிராகரிப்புதான் நாம் சான்றுகள் அனுப்புவதற்குத் தடையாக அமைந்தது. நாம் ஸமூத் சமூகத்திற்குப் பெண் ஒட்டகத்தைத் தெளிவான சான்றாக

வழங்கியிருந்தோம். ஆயினும் அவர்கள் அதற்குத் தீங்கிழைத்தார்கள். அச்சமூட்டுவதற்காகவே நாம் அத்தாட்சிகளை அனுப்புகிறோம்.

*60.* "உமது இறைவன் மனிதர்களைச் சூழ்ந்துள்ளான்" என்று நாம் உம்மிடம் கூறினோம். நாம் உமக்குக் காண்பித்த காட்சியும், குர்ஆனில் சபிக்கப்பட்ட மரமும் மக்களைச் சோதிப்பதற்காகவேயாகும். நாம் அவர்களை அச்சுறுத்துகிறோம். ஆனால் அது அவர்களின் அட்டூழியத்தையே அதிகரிக்கிறது.

*61.* "ஆதமுக்குச் சிரம்பணியுங்கள்" என்று நாம் வானவர்களிடம் கூறியபோது இப்லீஸைத்தவிர அவர்கள் அனைவரும் சிரம் பணிந்தார்கள். அவன், "யாரை நீ மண்ணால் படைத்துள்ளாயோ அவருக்கு நான் சிரம்பணிவதா?" என்று கூறினான். *62.* "என்னைவிட நீ கண்ணியம் அளித்த இவரைப் பார். நீ எனக்கு மறுமைநாள்வரை அவகாசம் அளித்தால் சிலரைத்தவிர இவரது வழித்தோன்றல்கள் அனைவரையும் நான் வழிகெடுத்து விடுவேன்" என்றும் அவன் கூறினான்.

*63.* அதற்கு இறைவன், "செல், அவர்களில் உன்னைப் பின்பற்றியவர்களுக்கும், உங்கள் அனைவருக்கும் நரகமே நிறைவான கூலியாகும். *64.* அவர்களில் உன்னால் இயன்றவர்களை உன் குரலைக்கொண்டு வழிகெடுத்துவிடு. அவர்களின்மீது உன் குதிரைப்படையையும், காலாட்படையையும் ஏவிவிடு. அவர்களின் செல்வங்களிலும், பிள்ளைகளிலும் அவர்களுடன் கூட்டு சேர்ந்துகொள். அவர்களுக்கு வாக்குறுதியளி" என்று கூறினான். சாத்தானின் வாக்குறுதி ஏமாற்றமே அன்றி வேறில்லை. *65.* "நிச்சயமாக என் அடியார்கள்மீது உன் அதிகாரம் செல்லுபடியாகாது. பொறுப்பேற்க உமது இறைவனே போதுமானவன்" (என்றும் அல்லாஹ் கூறினான்).

*66. உங்கள் இறைவன்தான் உங்களுக்காக கடலில் கப்பலைச் செலுத்துகிறான். அதன்மூலம் நீங்கள் அவனது அருளைத் தேடிக் கொள்கிறீர்கள். நிச்சயமாக அவன் உங்கள்மீது மிகவும் கிருபையாளனாக இருக்கின்றான். 67. கடலில் உங்களுக்கு ஏதேனும் ஆபத்து ஏற்பட்டால் அவனைத்தவிர மற்ற தெய்வங்கள் அனைத்தையும் விட்டுவிட்டு அவனை மட்டுமே அழைக்கிறீர்கள். அவன் உங்களைக் காப்பாற்றிக் கரை சேர்த்ததும் நீங்கள் புறக்கணித்து விடுகிறீர்கள். மனிதன் நன்றி கெட்டவனாக இருக்கின்றான்.*

*68. 'இறைவன் உங்களைக் கரை சேர்த்து பூமியில் புதையச் செய்துவிடுவான் அல்லது உங்கள்மீது கற்களைப் பொழிகின்ற புயலை அனுப்பி விடுவான்' என்பது குறித்து நீங்கள் அச்சமற்று இருக்கிறீர்களா? பின்னர் எவரையும் உங்களுக்குப் பொறுப்பாளராகக் காண மாட்டீர்கள். 69. அல்லது அவன் உங்களை மீண்டும் கடலுக்கு அழைத்துச்சென்று கடும் புயல்காற்றை உங்கள் மீது வீசச்செய்து - உங்களின் நிராகரிப்பினால் - உங்களை அழித்து விடுவான் என்பது குறித்து நீங்கள் அச்சமற்று இருக்கிறீர்களா? பின்னர் உங்களுக்காக நம்மைப் பின்தொடர்பவர் எவரையும் நீங்கள் காண மாட்டீர்கள்.*

*70. நாம் ஆதமுடைய மக்களைக் கண்ணியப்படுத்தியுள்ளோம். கரையிலும், கடலிலும் நாமே அவர்களைச் சுமந்து செல்கிறோம். அவர்களுக்குத் தூய்மையானவற்றை உணவாகக் கொடுத்துள்ளோம். நாம் படைத்துள்ள படைப்பினங்கள் பலவற்றைவிடவும் நாம் அவர்களை சிறப்பித்துள்ளோம்.*

*71. ஒவ்வொரு சமூகத்தினரையும் அவரவர் வழிகாட்டிகளோடு நாம் அழைக்கும் நாளில், வலதுகையில் பதிவேடு கொடுக்கப்படுபவர்கள் - அவர்கள்தான் தம் பதிவேட்டைப்*

*படிப்பார்கள். அவர்களுக்கு அணுவளவும் அநீதி இழைக்கப்படாது. **72.** யார் இவ்வுலகில் குருடராக இருந்தாரோ அவர் மறுமையிலும் குருடராகவே இருப்பார். அவரே மிகவும் வழிதவறியவர்.*

*   **73.** நாம் உமக்கு அறிவித்ததை விடுத்து வேறொன்றை நீர் நம்மீது புனைந்து கூறும்படி அவர்கள் உம்மைக் குழப்பத்தில் ஆழ்த்தி வழிகெடுக்க முயன்றார்கள். நீ அவ்வாறு செய்திருந்தால் உம்மை அவர்கள் நெருங்கிய நண்பனாக்கி இருப்பார்கள். **74.** நாம் உம்மை உறுதிப்படுத்தியிருக்காவிட்டால் நீ அவர்களின்பக்கம் சிறிதளவேனும் சாய்ந்திருப்பீர். **75.** நீர் அவ்வாறு செய்திருந்தால் இவ்வுலகிலும், இறந்த பின்பும் இரு மடங்கு வேதனையைச் சுவைக்கச் செய்திருப்போம். பின்னர் நமக்கெதிராக உதவி புரிபவர் எவரையும் நீர் காணமாட்டீர்.*

*   **76.** உம்மை இங்கிருந்து வெளியேற்றி விட வேண்டும் என்பதற்காக இந்த பூமியிலிருந்து உமது பாதத்தைப் பெயர்த்துவிட அவர்கள் முயன்று கொண்டிருந்தார்கள், அவ்வாறு செய்திருந்தால் உமக்குப் பின்னர் அவர்கள் சிறிதுகாலமே தங்கியிருந்திருப்பார்கள். **77.** உமக்கு முன்னர் நாம் அனுப்பிய தூதர்களின் விஷயத்திலும் இதுதான் நமது வழிமுறையாக இருந்தது. நமது வழிமுறையில் எவ்வித மாற்றத்தையும் நீர் காண மாட்டீர்.*

*   **78.** சூரியன் சாய்ந்ததிலிருந்து இரவின் இருள் சூழும்வரை தொழுகையைக் கடைப்பிடிப்பீராக. அதிகாலையில் குர்ஆன் ஓதுவதையும் கடைப்பிடிப்பீராக. நிச்சயமாக அதிகாலையில் குர்ஆன் ஓதுவது சாட்சி கூறக்கூடியதாக இருக்கின்றது.*

*   **79.** இரவின் ஒரு பகுதியில் எழுந்து தொழுவீராக. அது உமக்கு உபரியானதாக அமையும். புகழப்படும் இடத்தில் உம் இறைவன் உம்மை எழுப்பக்கூடும்.*

*80.* நீர் கூறும்: “என் இறைவனே, நல்லவிதமாக என்னை நுழையச் செய்வாயாக. நல்லவிதமாக என்னை வெளியேற்றி விடுவாயாக. உன் புறத்திலிருந்து உதவி செய்யும் அதிகாரத்தையும் எனக்கு வழங்குவாயாக”. *81.* நீர் கூறும்: “சத்தியம் வந்து விட்டது. அசத்தியம் அழிந்து விட்டது. நிச்சயமாக அசத்தியம் அழிந்தே தீரும்”.

*82.* நம்பிக்கையாளர்களுக்கு நிவாரணியாகவும், கருணையாகவும் உள்ளவற்றையே நாம் குர்ஆனில் அருளுகின்றோம். ஆயினும் அநியாயக்காரர்களுக்கு அது இழப்பைத்தான் அதிகப்படுத்தும்.

*83.* மனிதனுக்கு நாம் அருள்புரிந்தால் புறக்கணித்து ஆணவம் கொள்கிறான். அவனுக்குத் துன்பம் ஏற்பட்டுவிட்டால் நிராசையடைந்து விடுகிறான். *84.* நீர் கூறும்: “ஒவ்வொருவரும் தத்தமது வழிமுறைப்படியே செயல்படுகிறார்கள். நேர்வழியில் இருப்பவர் யார் என்பதை உங்கள் இறைவனே நன்கறிவான்”.

*85.* அவர்கள் ஆன்மாவைப்பற்றி உம்மிடம் கேட்கிறார்கள். நீர் கூறும்: “ஆன்மா என் இறைவனின் கட்டளைப்படி இருக்கின்றது. அது குறித்து சிறிதளவு அறிவுதான் உங்களுக்கு வழங்கப்பட்டுள்ளது”.

*86.* நாம் நாடினால் நாம் உமக்கு அறிவித்தவை அனைத்தையும் உம்மிடமிருந்து பறித்து விடுவோம். நமக்கு எதிராக எந்த பாதுகாவலரையும் நீர் காண மாட்டீர். *87.* ஆயினும் இவை உம் இறைவனின் கருணையினால்தான் கிடைத்ததாகும். உம்மீதுள்ள அவனது அருள் மிகப்பெரியதாகும். *88.* நீர் கூறும்: “இதைப்போன்ற ஒரு குர்ஆனைக் கொண்டுவருவதற்காக மனிதர்கள், ஜின்கள் அனைவரும் ஒன்றுதிரண்டாலும் அவர்களால் இதைப்போன்ற

ஒன்றைக் கொண்டுவர முடியாது - அவர்கள் ஒருவருக்கொருவர் உதவியாளர்களாக இருந்தாலும் சரியே!".

*89.* நாம் இந்த குர்ஆனில் மக்களுக்காகப் பல்வேறுவகையான உதாரணங்களையும் பலவிதமாகக் கூறியுள்ளோம். ஆயினும் மக்களில் பெரும்பாலோர் நிராகரிப்பிலேயே நிலைத்திருக்கிறார்கள். *90.* அவர்கள் கூறுகிறார்கள்: "நீ பூமியிலிருந்து எங்களுக்காக ஒரு நீரூற்றை ஓடச் செய்யும்வரை நாங்கள் ஒருபோதும் உன்னை நம்ப மாட்டோம்''. *91.* "அல்லது உன்னிடம் பேரீச்சை மரங்களும், திராட்சைத் தோட்டங்களும் இருந்து அவற்றிற்கிடையே ஆறுகளை ஓடச் செய்ய வேண்டும்". *92.* "அல்லது நீ கூறுவதைப்போல் வானத்தைத் துண்டுதுண்டாக்கி எங்கள்மீது விழச்செய்ய வேண்டும், அல்லது அல்லாஹ்வையும் வானவர்களையும் எங்கள்முன் கொண்டு வந்து நிறுத்த வேண்டும். *93.* அல்லது உன்னிடம் ஏதேனும் ஒரு தங்க மாளிகை இருக்க வேண்டும், அல்லது வானத்தின்மீது நீ ஏற வேண்டும். அங்கிருந்து நாங்கள் படிப்பதற்காக ஏதேனும் ஒரு நூலை எங்களிடம் கொண்டு வரும்வரை நீ வானத்தில் ஏறுவதைக்கூட நாங்கள் நம்ப மாட்டோம்". நீர் கூறும்: "என் இறைவன் தூய்மையானவன், நானோ ஒரு மனிதனாகவும், தூதனாகவுமே இருக்கின்றேன்".

*94.* மக்களிடம் நேர்வழி வந்த சமயத்தில் "அல்லாஹ் ஒரு மனிதரையா தூதராக்கி அனுப்பியுள்ளான்?" என்ற அவர்களின் கூற்றுதான் அவர்களை நம்பிக்கை கொள்ளாவிடாமல் தடுத்தது. *95.* நீர் கூறும்: "பூமியில் வானவர்கள் வசித்திருந்து, அவர்கள் நிம்மதியாக நடமாடிக் கொண்டிருந்திருந்தால் நிச்சயம் நாம் வானத்திலிருந்து ஒரு வானவரையே அவர்களுக்குத் தூதராக அனுப்பியிருப்போம்". *96.* நீர் கூறும்: "எனக்கும் உங்களுக்கும் இடையில் சாட்சியாக இருக்க அல்லாஹ்வே போதுமானவன்". நிச்சயமாக தன்

அடியார்களை அவன் நன்கறிந்தவனாகவும், பார்ப்பவனாகவும் இருக்கிறான்.

97. அல்லாஹ் யாருக்கு நேர்வழி காட்டுகிறானோ அவரே நேர்வழி பெற்றவர். அவன் யாரை வழிகெடும்படி விட்டுவிடுகிறானோ அவனைத்தவிர அவர்களுக்கு எந்த உதவியாளரையும் நீர் காண மாட்டீர். மறுமைநாளில் நாம் அவர்களை முகத்தால் நடந்து வரும்படி குருடர்களாகவும், ஊமையர்களாகவும், செவிடர்களாகவும் ஒன்றுதிரட்டுவோம். அவர்களின் தங்குமிடம் நரகமாகும். அதன் நெருப்பு தணியும்போதெல்லாம் அதனை இன்னும் கொழுந்துவிட்டு எரியச் செய்வோம். 98. அவர்கள் நம் சான்றுகளை நிராகரித்ததனாலும், “நாம் எலும்புகளாகி மண்ணோடு மண்ணாகி விட்டாலும் மீண்டும் புதிய படைப்பாக எழுப்பப்படுவோமா?” என்று அவர்கள் கேட்டதனாலும் இதுவே அவர்களுக்குரிய கூலியாகும்.

99. வானங்களையும் பூமியையும் படைத்த அல்லாஹ் அவர்களைப் போன்றோரை மீண்டும் படைக்கும் ஆற்றலுடையவன் என்பதை அவர்கள் கவனிக்கவில்லையா? அவன் அவர்களுக்கு ஒரு குறிப்பிட்ட தவணையை ஏற்படுத்தியுள்ளான். அதில் எத்தகைய சந்தேகமும் இல்லை. ஆயினும் அக்கிரமக்காரர்கள் அதனை நிராகரிக்காமல் இல்லை.

100. நீர் கூறும்: “நீங்கள் என் இறைவனின் கருணைக் களஞ்சியங்களுக்கு அதிபதியாக இருந்தால் அது செலவாகிவிடுமோ என்று அஞ்சி தடுத்துக் கொண்டிருப்பீர்கள். மனிதன் பெரும் கஞ்சனாக இருக்கின்றான்”.

101. நாம் மோசேவுக்குத் தெளிவான ஒன்பது சான்றுகளை வழங்கியிருந்தோம். இஸ்ராயீலின் மக்களிடம் நீங்கள் கேளுங்கள்.

அவர்களிடம் அவர் வந்தபோது, “மோசேயே, யாரோ உனக்கு சூனியம் செய்துள்ளார்கள் என்றே நான் எண்ணுகிறேன்” என்று பாரோ கூறினான். **102.** அதற்கு மோசே, “வானங்கள் மற்றும் பூமியின் இறைவனே இவற்றைத் தெளிவான சான்றுகளாக அருளியுள்ளான் என்பதை நீ நன்கறிவாய். பாரோவே! உன்னை அழிவுக்குள்ளாகும் மனிதனாகவே நான் கருதுகிறேன்” என்று கூறினார். **103.** அவர்களை உலகிலிருந்து அடியோடு அகற்றிவிட வேண்டும் என்று பாரோ நாடினான். எனவே நாம் அவனையும் அவனோடு இருந்த அனைவரையும் மூழ்கடித்து விட்டோம். **104.** அதற்குப்பின் இஸ்ராயீலின் மக்களிடம் நாம் கூறினோம்: “நீங்கள் இப்பூமியில் வசியுங்கள். மறுமையின் வாக்குறுதி வந்துவிட்டால் உங்கள் அனைவரையும் ஒன்றாகக் கொண்டு வருவோம்”.

**105.** நாம் குர்ஆனை சத்தியத்துடனே அருளியுள்ளோம். அது சத்தியத்துடன்தான் அருளப்பட்டுள்ளது. உம்மை நற்செய்தியாளராகவும், எச்சரிக்கையாளராகவுமே அனுப்பியுள்ளோம். **106.** நீர் மனிதர்களுக்கு சிறிது சிறிதாக ஓதிக்காண்பிக்க வேண்டும் என்பதற்காகவே குர்ஆனை பகுதிபகுதியாக, படிப்படியாக அருளியுள்ளோம்.

**107.** நீர் கூறும்: “இதனை நீங்கள் நம்பினாலும் சரி, நம்பாவிட்டாலும் சரி. இதற்கு முன்னர் அறிவு வழங்கப்பட்டோரிடம் இது எடுத்துரைக்கப்பட்டால் அவர்கள் சிரம்பணிந்தவர்களாக முகங்குப்புற விழுவார்கள்”. **108.** “எங்கள் இறைவன் தூய்மையானவன். எங்கள் இறைவனின் வாக்குறுதி நிறைவேறியே தீரும்'' என்று அவர்கள் கூறுவார்கள். **109.** அவர்கள் அழுதவாறே முகங்குப்புற விழுகிறார்கள், குர்ஆன் அவர்களின் பணிவை மேலும் அதிகரித்து விடுகிறது.

*110.* நீர் கூறும்: “நீங்கள் ‘அல்லாஹ்’ என்று அழையுங்கள் அல்லது ‘ரஹ்மான்’ என்று அழையுங்கள். நீங்கள் எந்தப் பெயரைக்கொண்டு அழைத்தாலும் அவனுக்கு அழகிய பெயர்கள் இருக்கின்றன. நீர் தொழுகையில் சப்தமிட்டோ, மிக மெதுவாகவோ ஓதாதீர். இரண்டிற்குமிடையே நடுநிலையான வழியைக் கடைப்பிடிப்பீராக”.*111.* நீர் கூறும்: “தனக்கென சந்ததிகளை ஏற்படுத்திக் கொள்ளாத அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். ஆட்சியில் அவனுக்கு யாரும் கூட்டாளி இல்லை. உதவிசெய்யும் அளவுக்கு அவன் பலவீனனும் அல்ல. ஆகவே அவனது பெருமையை அதிகமதிகம் எடுத்துரைப்பீராக”.

## *18.* குகை (அல்கஹ்ஃப்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

*1.* எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே. அவனே தன் அடியார் மீது எத்தகைய குறைபாடும் இல்லாத வேதத்தை அருளினான். *2.* அது முற்றிலும் சரியானது - அது அவர் இறைவனுடைய கடும் வேதனையைப் பற்றி எச்சரிக்கை செய்வதற்காகவும், நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிவோருக்கு நற்கூலி உண்டு எனும் நற்செய்தியைக் கூறுவதற்காகவும்தான். *3.* அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள் *4.* அது ‘அல்லாஹ் குமாரனை ஏற்படுத்திக் கொண்டான்’ என்று கூறுவோரை எச்சரிப்பதற்காகவும்தான். *5.* இது குறித்து அவர்களிடமோ, அவர்களது முன்னோர்களிடமோ எவ்வித அறிவும் இல்லை. அவர்களின் வாயிலிருந்து வெளிப்படும் வார்த்தை மிகப்பயங்கரமானது. அவர்கள் பொய்யைத்தான் கூறுகிறார்கள்.

*6.* அவர்கள் இதன்மீது நம்பிக்கை கொள்ளவில்லையென்றால் அவர்களுக்காகக் கவலைப்பட்டு உம்மை நீரே அழித்துக்கொள்வீர் போலும்! *7.* மக்களில் நற்செயல் புரிபவர்கள் யார் என்பதைச்

சோதிப்பதற்காகவே நாம் பூமியிலுள்ளவற்றை அதற்கு அலங்காரமாக ஆக்கியுள்ளோம். 8. ஆயினும் அதிலுள்ள அனைத்தையும் அழித்து அதனை வெட்டவெளியாக்கி விடுவோம்.

9. குகைவாசிகளும் கல்வெட்டு சாசனக்காரர்களும் நமது சான்றுகளில் மிகவும் வியக்கத்தக்கவையாக இருந்தார்கள் என்று நீர் எண்ணுகிறீரா? 10. அந்த இளைஞர்கள் குகையில் தஞ்சமடைந்தபோது, "எங்கள் இறைவா, உன் புறத்திலிருந்து எங்களுக்குக் கருணையை வழங்குவாயாக. எங்கள் காரியங்களைச் சீராக்கித் தருவாயாக!" என்று வேண்டினார்கள். 11. எனவே அக்குகையில் பல்லாண்டுகாலம் நாம் அவர்களை உறக்கத்தில் ஆழ்த்தி விட்டோம். 12. பின்னர் நாம் அவர்களை எழுப்பினோம், இரு பிரிவினரில் யார் தங்கியிருந்த காலத்தைச் சரியாகக் கணக்கிடுகிறார்கள் என்பதை அறிந்துகொள்வதற்காக.

13. அவர்களின் உண்மையான வரலாற்றை நாம் உமக்கு எடுத்துரைக்கிறோம். அவர்கள் தங்கள் இறைவனின்மீது நம்பிக்கைகொண்ட இளைஞர்கள் ஆவர். நாம் அவர்களை நேர்வழியில் மேலும் முன்னேறச் செய்தோம். 14. அவர்கள் எழுந்து, 'வானங்களுக்கும் பூமிக்கும் யார் இறைவனோ அவனே எங்கள் இறைவன். நாங்கள் அவனைத்தவிர வேறு இறைவனை வணங்க மாட்டோம். அவ்வாறு அழைத்தால் நாங்கள் வரம்பு மீறிப் பேசியவர்களாவோம்' என்று கூறியபோது நாம் அவர்களின் உள்ளங்களை வலுப்படுத்தினோம். 15. "எங்களது இந்த சமூகத்தினர் அவனைத்தவிர வேறு கடவுள்களை ஏற்படுத்திக் கொண்டார்கள். இதற்காக இவர்கள் தெளிவான ஆதாரத்தைக் கொண்டுவர வேண்டாமா? அல்லாஹ்வின்மீது பொய்யைப் புனைபவனைவிட மிகப்பெரிய அநியாயக்காரன் யார்? (என்றும் அவர்கள் கூறினார்கள்)".

*16.* அவர்களையும், அல்லாஹ்வைத்தவிர அவர்கள் வணங்குகின்ற தெய்வங்களையும்விட்டு நீங்கள் விலகிக்கொண்டால் அக்குகையில் சென்று தஞ்சமடையுங்கள். உங்கள் இறைவன் உங்கள்மீது தன் கருணையைப் பொழிந்து காரியங்களை உங்களுக்கு எளிதாக்கித் தருவான்.

*17.* சூரியன் உதிக்கும்போது அது அவர்களின் குகையைவிட்டு வலப்பக்கமாகச் சாய்வதையும், மறையும்போது அதன் இடப்பக்கமாகக் கடப்பதையும் நீர் காண்பீர். அவர்கள் குகையினுள் ஒரு விசாலமான இடத்தில் இருக்கிறார்கள். இது அல்லாஹ்வின் சான்றுகளில் உள்ளதாகும். அல்லாஹ் யாருக்கு நேர்வழி காட்டினானோ அவரே நேர்வழி பெற்றவர். யாரை அல்லாஹ் வழிதவறும்படி செய்து விட்டானோ அவருக்கு உதவி புரிந்து வழிகாட்டுபவர் எவரையும் நீர் காணமாட்டீர்.

*18.* நீர் அவர்களைப் பார்த்தால் விழித்திருக்கிறார்கள் என்றே கருதுவீர். ஆனால் அவர்களோ உறங்கிக் கொண்டிருந்தார்கள். நாம் அவர்களை வலப்பக்கமும், இடப்பக்கமுமாக புரட்டிக்கொண்டே இருந்தோம். அவர்களின் நாய் குகைவாசலில் தனது இரு முன்னங்கால்களையும் நீட்டியவாறு உட்கார்ந்திருந்தது. நீர் அவர்களை எட்டிப் பார்த்திருந்தால் அவர்களைக் கண்டு அச்சத்தால் ஆட்கொள்ளப்பட்டு வெருண்டோடி இருப்பீர்.

*19.* அவர்கள் ஒருவருக்கொருவர் விசாரித்துக் கொள்வதற்காக அவர்களை நாம் எழுப்பினோம். அவர்களில் ஒருவர், “நீங்கள் எவ்வளவு நேரம் இங்கு தங்கியிருந்தீர்கள்?” என்று கேட்டார். அதற்கு சிலர், “நாம் ஒருநாள் அல்லது ஒரு நாளைவிடக் குறைவாகவே தங்கியிருந்தோம்” என்று கூறினார்கள். வேறு சிலர், “நீங்கள் எவ்வளவு நேரம் தங்கியிருந்தீர்கள் என்பதை அல்லாஹ்வே நன்கறிவான். நம்மில்

யாரேனும் ஒருவர் இந்த வெள்ளி நாணயத்துடன் நகரத்திற்குச் செல்லட்டும். தூய்மையான உணவை தேடிப்பார்த்து அதிலிருந்து அவர் வாங்கி வரட்டும். அவர் உங்களைப்பற்றி யாருக்கும் உணர்த்திவிடாமல் எச்சரிக்கையாகவே நடந்து கொள்ளட்டும்" என்று கூறி, 20. "அவர்கள் உங்களை அறிந்துகொண்டால் உங்களைக் கல்லால் அடித்துக் கொன்று விடுவார்கள் அல்லது பலவந்தமாக உங்களைத் தங்கள் மார்க்கத்திற்குத் திருப்பி விடுவார்கள். அவ்வாறு நடந்துவிட்டால் ஒருபோதும் நீங்கள் வெற்றிபெற மாட்டீர்கள்" என்றும் கூறினார்கள்.

*21.* இவ்வாறே நாம் அவர்களின் நிலைமையை மக்களுக்கு அறிவித்து விட்டோம். அது 'அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானது என்பதையும் மறுமைநாள் வருவதில் எத்தகைய சந்தேகமும் இல்லை' என்பதையும் அவர்கள் அறிந்துகொள்வதற்காகத்தான். ஆயினும் மக்கள் அவர்கள் விஷயத்தில் பிணங்கிக் கொண்டார்கள். சிலர், "அவர்கள் இருந்த குகையின்மீது ஒரு கட்டடத்தை எழுப்புங்கள். அவர்களின் இறைவனே அவர்களைப்பற்றி நன்கறிவான்" என்று கூறினார்கள். அவர்களின் விஷயத்தில் ஆதிக்கம் பெற்றவர்கள், "அவர்கள் இருந்த குகையின் மீது நாங்கள் ஒரு வணங்குமிடத்தை அமைப்போம்" என்று கூறினார்கள்.

*22.* சிலர் 'அவர்கள் மூன்று பேர், நான்காவது அவர்களின் நாய்' என்று கூறுவர். வேறு சிலர் 'அவர்கள் ஐந்து பேர், ஆறாவது அவர்களின் நாய்' என்று கூறுவர். இவர்கள் எதையும் ஆராயாமல் குருட்டுத்தனமாகக் கூறுகிறார்கள். இன்னும் சிலர் 'அவர்கள் ஏழு பேர், எட்டாவது அவர்களின் நாய்' என்று கூறுவர். நீர் கூறும், "அவர்களின் எண்ணிக்கையை என் இறைவனே நன்கறிவான். வெகு சிலரே அவர்களை அறிவார்கள்" அவர்களின் விஷயத்தில் மேலோட்டமான முறையில் அன்றி நீர் விவாதம் புரிய வேண்டாம்.

அவர்களைக் குறித்து அவர்களில் எவரிடமும் கேட்கவும் வேண்டாம்.

23. எந்த விஷயத்தைக் குறித்தும், "நான் நாளைக்கு இதனைச் செய்து விடுவேன்" என்று கூறாதீர். 24. ஆயினும் அல்லாஹ் நாடினாலே அன்றி. நீர் மறந்து விட்டீரானால் உம் இறைவனை நினைவுகூர்வீராக. நீர் கூறும், "என் இறைவன் எனக்கு நேர்வழியில் இதைவிட நெருக்கமானதை காட்டக் கூடும்".

25.அவர்கள் தங்கள் குகையில் முந்நூறு ஆண்டுகள் தங்கியிருந்தார்கள். (சிலர் காலங்களைக் கணிப்பதில்) ஒன்பது ஆண்டுகளை இன்னும் அதிகப்படுத்தி விட்டார்கள். 26. நீர் கூறும்: "அவர்கள் தங்கியிருந்த காலத்தை அல்லாஹ்வே நன்கறிந்தவன். வானங்கள் மற்றும் பூமியிலுள்ள மறைவான அறிவு அவனுக்கே உரியது. அவன் எவ்வளவு நன்றாகப் பார்ப்பவனாகவும் கேட்பவனாகவும் இருக்கின்றான்! அவனைத்தவிர அவர்களுக்கு வேறு உதவியாளன் இல்லை. தன் அதிகாரத்தில் அவன் எவரையும் கூட்டுச் சேர்த்துக் கொள்வதும் இல்லை".

27. உமக்கு அறிவிக்கப்படுகின்ற உம் இறைவனின் வேதத்தை அவர்களுக்கு எடுத்துரைப்பீராக. அவனது வார்த்தைகளை மாற்றக்கூடியவர் யாருமில்லை. அவனைத்தவிர எந்தப் புகலிடத்தையும் நீர் காண மாட்டீர். 28. தம் இறைவனின் திருப்தியை நாடி காலையிலும், மாலையிலும் அவனை அழைத்துக் கொண்டிருப்போருடன் நீரும் உம்மை இணைத்துக் கொள்ளும். இவ்வுலகக் கவர்ச்சியை நாடி உம் பார்வை அவர்களைவிட்டும் விலகிவிடக்கூடாது. எவரது உள்ளத்தை நம் நினைவை விட்டும் அலட்சியத்தில் ஆழ்த்தி விட்டோமோ அத்தகைய மனிதனின் பேச்சை ஏற்றுக்கொள்ளாதீர். அவன் தன் மனஇச்சைப்படி நடப்பவன். அவனது விவகாரம் வரம்பு மீறியதாகி விட்டது.

*29.* நீர் கூறும்: “இது உங்கள் இறைவனிடமிருந்து வந்துள்ள சத்தியமாகும். எனவே விரும்பியவர் நம்பிக்கைகொள்ளட்டும்; விரும்பியவர் நிராகரிக்கட்டும்”. நாம் அக்கிரமக்காரர்களுக்காக நரகத்தைத் தயார்படுத்தி வைத்துள்ளோம். அதன் சுவர்கள் அவர்களைச் சூழ்ந்துகொள்ளும். அங்கு அவர்கள் தண்ணீர் வேண்டினால் முகங்களை பொசுக்கக்கூடிய உருக்கப்பட்ட ஈயத்தைப்போன்ற கொதிநீர் புகட்டப்படும். அது எவ்வளவு மோசமான பானம்! அது எவ்வளவு மோசமான தங்குமிடம்!

*30.* நிச்சயமாக நம்பிக்கைகொண்டு, நற்செயல் புரிவோரின் கூலியை நாம் ஒருபோதும் வீணாக்கிவிட மாட்டோம். *31.* அவர்களுக்கு நிலையான சுவனங்கள் உண்டு. அவர்களிடத்தில் ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும். அங்கு அவர்களுக்குத் தங்கக்காப்புகள் அணிவிக்கப்படும். அவர்கள் மெல்லிய மற்றும் கனமான பச்சை நிறப் பட்டாடைகளை அணிந்தவாறு சாய்வு இருக்கைகளில் சாய்ந்திருப்பார்கள். என்னவொரு அருமையான கூலி! என்னவொரு அருமையான தங்குமிடம்!.

*32.* நீர் அவர்களிடம் ஒரு உதாரணத்தை எடுத்துரைப்பீராக: இரு மனிதர்கள் இருந்தார்கள். அவர்களில் ஒருவனுக்கு நாம் இரு திராட்சைத் தோட்டங்களை வழங்கி அவற்றைச் சுற்றிலும் பேரீச்சை மரங்களை அமைத்திருந்தோம். அவ்விரண்டிற்கும் இடையே வயல்களையும் ஏற்படுத்தியிருந்தோம். *33.* இரண்டிற்குமிடையே ஒரு நதியையும் ஓடச் செய்தோம். இரு தோட்டங்களும் எவ்விதக் குறையும் வைக்காமல் நிறைவாக கனிகளை வழங்கின. *34.* அவனுக்கு நல்ல விளைச்சல் கிடைத்தது. அவன் தன் தோழனிடம் உரையாடிக் கொண்டிருந்தபோது, “நான் உன்னைவிட அதிக செல்வமுடையவன், ஆள்பலம் மிக்கவன்” என்று கூறினான். *35.* அவன் தனக்குத்தானே அநீதி இழைத்தவனாகத் தன் தோட்டத்தினுள் நுழைந்தான். அவன்

கூறினான், “இது என்றைக்காவது அழிந்து விடும் என்று நான் கருதவில்லை. *36.* மறுமை என்றாவது நிலைபெறும் என்றும் நான் கருதவில்லை. ஒருவேளை நான் என் இறைவனிடம் திரும்பக்கொண்டு செல்லப்பட்டால் இதைவிடச் சிறந்த இடத்தையே பெறுவேன்”.

*37.* அவனுடன் உரையாடிக்கொண்டிருந்த அவனது தோழன், “உன்னை மண்ணிலிருந்து பின்னர் விந்திலிருந்து படைத்து உன்னை முழு மனிதனாக்கியவனையா நீ மறுக்கிறாய்? *38.* அந்த அல்லாஹ்தான் என் இறைவன். நான் என் இறைவனுடன் எவரையும் இணையாக்க மாட்டேன். *39.* நீ உன் தோட்டத்தில் நுழைந்தபோது, “அல்லாஹ் நாடியவையே நடக்கும். அல்லாஹ்வையன்றி எவரிடத்திலும் எவ்வித ஆற்றலும் இல்லை” என்று ஏன் கூறவில்லை? நான் செல்வங்களிலும், பிள்ளைகளிலும் உன்னைவிடக் குறைந்தவனாக இருப்பதாக நீ கருதினால் *40.* என் இறைவன் உன் தோட்டத்தைவிட சிறந்த ஒன்றை எனக்கு வழங்கி விடலாம். வானத்திலிருந்து ஆபத்தை இறக்கி உன் தோட்டத்தை வெட்டவெளியாக்கி விடலாம் அல்லது *41.* நீங்கள் பெறமுடியாதபடி தண்ணீர் வற்றி விடலாம்” என்று கூறினான்.

*42.* அவனது விளைச்சல் அனைத்தும் அழிந்து விட்டன. அதற்காக தான் செலவிட்டதை எண்ணி அவன் கைபிசைந்து நின்றான். அத்தோட்டம் அடியோடு வீழ்ந்து கிடந்தது. “அந்தோ நான் என் இறைவனுக்கு இணைவைக்காமல் இருந்திருக்கக் கூடாதா!” என்று அவன் புலம்பலானான். *43.* அல்லாஹ்வைத்தவிர அவனுக்கு உதவி புரியும் கூட்டத்தார் எவரும் இருக்கவில்லை. தானே பழிவாங்கக்கூடியவனாகவும் அவன் இல்லை. *44.* அங்கு அனைத்து அதிகாரங்களும் உண்மையாளனாகிய அல்லாஹ்வுக்கே உரியது. கூலி வழங்குவதிலும் சிறப்பான முடிவை வழங்குவதிலும் அவனே மேலானவன்.

*45.* அவர்களுக்கு உலக வாழ்வின் உதாரணத்தைக் கூறுவீராக. அது நாம் வானத்திலிருந்து நீரை இறக்கி அதனால் பூமியின் தாவரங்கள் செழித்து வளர்ந்து பின்னர் அவை காற்றால் அடித்துச் செல்லப்படும் காய்ந்த சருகுகளாகிவிடுவதைப் போன்றதாகும். அல்லாஹ் எல்லாவற்றின்மீதும் பேராற்றலுடையவனாக இருக்கின்றான். *46.* செல்வங்களும், பிள்ளைகளும் உலக வாழ்வின் அலங்காரங்கள்தான். நன்மையைப் பொறுத்து நிலையான நற்காரியங்களே உம் இறைவனிடம் மிகச் சிறந்ததாகும்; நம்பிக்கை வைப்பதற்கும் மிக ஏற்றதாகும்.

*47.* நாம் மலைகளை நகர்த்தும் அந்நாளில் பூமியை முற்றிலும் வெட்டவெளியாகக் காண்பீர். நாம் அவர்களை ஒன்று சேர்ப்போம். அவர்களில் எவரையும் விட்டுவிட மாட்டோம். *48.* அனைவரும் உம் இறைவனுக்கு முன்னால் வரிசையாக நிறுத்தப்படுவார்கள். ஆரம்பத்தில் நாம் உங்களைப் படைத்ததைப்போன்றே நீங்கள் நம்மிடம் வந்து விட்டீர்கள். ஆயினும் நாம் வாக்களிக்கப்பட்ட நேரத்தை ஏற்படுத்த மாட்டோம் என்று நீங்கள் எண்ணியிருந்தீர்கள்.

*49.* அவர்களுக்கு முன்னால் பதிவேடு வைக்கப்படும். குற்றவாளிகள் அதிலுள்ளவற்றைக் கண்டு பயந்தவர்களாக, “அந்தோ, எங்கள் கேடே! சிறியதோ, பெரியதோ எதையுமே இப்பதிவேடு பதிவு செய்யாமல் விட்டு வைக்கவில்லையே!” என்று புலம்புவதை நீர் காண்பீர். தாங்கள் செய்தவை அனைத்தும் தங்களுக்கு முன்னால் இருப்பதை அவர்கள் காண்பார்கள். உமது இறைவன் எவர் மீதும் அநீதி இழைக்க மாட்டான்.

*50.* ஆதமுக்கு சிரம்பணியுங்கள் என்று நாம் வானவர்களிடம் கூறியபோது, இப்லீஸைத் தவிர அவர்கள் அனைவரும் பணிந்தார்கள்.

அவன் ஜின் இனத்தைச் சேர்ந்தவனாக இருந்தான். தன் இறைவனின் கட்டளைக்கு அவன் மாறு செய்தான்.அநியாயக்காரர்கள் (என்னை விட்டுவிட்டு அவர்களைத் தங்களுக்கு பாதுகாவலர்களாக) மாற்றிக் கொண்டது மிகவும் கெட்டதாகும்.

51. வானங்களையும் பூமியையும் படைத்தபோது நான் அவர்களை அழைக்கவில்லை. ஏன், அவர்களைப் படைத்தபோதுகூட அவர்களை அழைக்கவில்லை. வழிகெடுப்போரை நான் உதவியாளராக ஆக்கிக் கொள்பவனல்லன்.

52. அந்நாளில் இறைவன் கூறுவான்: "யாரை நீங்கள் எனக்கு இணையானவர்கள் எனக் கருதினீர்களோ அவர்களை அழையுங்கள்". இவர்கள் அவர்களை அழைப்பார்கள். ஆனால் அவர்கள் பதில் கூற மாட்டார்கள். நாம் அவர்களிடையே ஒரு தடுப்பை ஏற்படுத்தி விடுவோம். 53. குற்றவாளிகள் நரகத்தைக் காணும்போது தாம் அதில் விழக்கூடியவர்கள் என்பதைப் புரிந்துகொள்வார்கள். அதனைவிட்டுத் தப்புவதற்கு எந்த வழியையும் அவர்கள் காண மாட்டார்கள்.

54. நாம் இந்த குர்ஆனில் மக்களுக்காக ஒவ்வொரு வகையான உதாரணங்களையும் விளக்கியுள்ளோம். ஆனால் மனிதனோ பெருமளவில் தர்க்கம் புரிபவனாகவே இருக்கின்றான். 55. மக்களிடம் நேர்வழி வந்தபோது அதனை ஏற்றுக்கொள்வதற்கும் தங்கள் இறைவனிடம் மன்னிப்புக் கோருவதற்கும் தடையாக இருந்ததெல்லாம் முன் சென்றவர்களுக்கு ஏற்பட்ட கதி தங்களுக்கும் ஏற்பட வேண்டும் அல்லது தங்களிடம் வேதனை நேரடியாக வந்துவிட வேண்டும் என்பதற்காகத்தான்!.

56. நாம் தூதர்களை நற்செய்தி கூறுபவர்களாகவும், எச்சரிக்கை செய்பவர்களாகவுமே அனுப்பி வைக்கிறோம். நிராகரிப்பாளர்கள்

அசத்தியத்தைக்கொண்டு சத்தியத்தை வீழ்த்திவிட பொய்யான வாதம் புரிகிறார்கள். என் சான்றுகளையும் எச்சரிக்கைகளையும் பரிகாசமாக எடுத்துக்கொள்கிறார்கள். **57.** இறைவனுடைய வசனங்களின் மூலம் அறிவுரை கூறப்பட்டபோது அவற்றைப் புறக்கணித்துத் தன் கரங்கள் செய்த செயல்களை மறந்து விட்டவனைவிட மிகப்பெரிய அநியாயக்காரன் யார்? அதனை அவர்கள் புரிந்துகொள்ளாதவாறு அவர்களின் உள்ளங்களில் திரையையும் ஏற்படுத்தி செவிகள் கேட்காதவாறு செய்து விடுகிறோம். நீர் அவர்களை நேர்வழியின் பக்கம் அழைத்தாலும் அவர்கள் ஒருபோதும் நேர்வழியின் பக்கம் வரப்போவதில்லை.

**58.** உம் இறைவன் பெரும் மன்னிப்பாளனாகவும் கருணையாளனாகவும் இருக்கின்றான். அவர்கள் செய்தவற்றுக்காக அவன் அவர்களைத் தண்டிப்பதாக இருந்தால் அவர்கள்மீது வேதனையை விரைவுபடுத்தியிருப்பான். ஆயினும் அவர்களுக்கு குறிப்பிட்ட நேரம் வழங்கப்பட்டுள்ளது. அதற்குப்பின் அவர்கள் எங்கும் தப்ப முடியாது. **59.** இந்த ஊரிலிருந்த மக்கள் அநியாயம் செய்தபோது நாம் அவர்களை அழித்து விட்டோம். அவர்களை அழிப்பதற்கு ஒரு குறிப்பிட்ட தவணையையும் நிர்ணயித்திருந்தோம்.

**60.** மோசே தம் சீடரிடம், “இரு கடல்கள் சங்கமிக்கும் இடத்தை அடையும்வரை நான் நடந்துகொண்டே இருப்பேன் அல்லது பல்லாண்டுகள்வரை இப்படியே நடந்து கொண்டிருப்பேன்” என்று கூறியதை நினைவுகூர்வீராக. **61.** அவையிரண்டும் சங்கமிக்கும் இடத்தை அவர்கள் அடைந்தபோது தங்களது மீனை மறந்து விட்டார்கள். அது கடலில் தன் வழியை ஏற்படுத்திக் கொண்டது. **62.** அவ்விருவரும் முன்னேறிச்சென்றபோது மோசே தம் சீடரிடம்,

“நமது உணவைக் கொண்டு வாரும். நமது இந்தப் பயணத்தில் மிகவும் களைப்படைந்து விட்டோம்” என்று கூறினார்.

*63.* அதற்கு அவர், “நீங்கள் பார்த்தீர்களா? நாம் அந்தப் பாறையின் அருகில் தங்கியிருந்தபோது நான் மீனை மறந்து விட்டேன். சாத்தான்தான் அதனைக் குறிப்பிடுவதை விட்டும் என்னை மறதியில் ஆழ்த்தி விட்டான்” என்று கூறினார். அது கடலுக்குள் ஆச்சர்யமான வகையில் தன் வழியை அமைத்துக் கொண்டது. *64.* “நாம் அந்த வாய்ப்பைத்தானே தேடிக்கொண்டிருந்தோம்” என்று மோசே கூறினார். எனவே இருவரும் தம் காலடித் தடங்களைப் பார்த்தவாறே திரும்பிச் சென்றார்கள். *65.* அங்கு அவர்கள் நமது அடியார்களில் ஒருவரைக் கண்டார்கள். நாம் அவருக்கு நம் அருளை வழங்கியிருந்தோம். நம்மிடமிருந்து ஒரு அறிவையும் அவருக்குக் கொடுத்திருந்தோம்.

*66.* மோசே அவரிடம், “உங்களுக்கு வழங்கப்பட்ட அறிவை நீங்கள் எனக்குக் கற்றுக் கொடுக்கும் பொருட்டு நான் உங்களுடன் இருக்கலாமா?” என்று கேட்டார். *67.* அதற்கு அவர், “உம்மால் என்னுடன் பொறுமையாக இருக்க முடியாது!. *68.* நீர் அறியாத விஷயத்தில் எவ்வாறு உம்மால் பொறுமையாக இருக்க முடியும்?” என்று கூறினார். *69.* அதற்கு மோசே, “அல்லாஹ் நாடினால் நீர் என்னைப் பொறுமையாளராகக் காண்பீர். நான் உமக்கு எந்த விஷயத்திலும் மாறுசெய்ய மாட்டேன்” என்று கூறினார். *70.* அதற்கு அவர், “நீர் என்னுடன் வருவதாக இருந்தால் நானாக உம்மிடம் கூறும்வரை எதைப்பற்றியும் என்னிடம் நீ கேட்கக் கூடாது” என்று கூறினார்.

*71.* எனவே இருவரும் நடந்து ஒரு கப்பலில் ஏறியபோது அவர் அதில் துளையிட்டுவிட்டார். அப்போது மோசே, “கப்பலில்

உள்ளவர்களை மூழ்கடித்து விடவா நீர் அதில் துளையிட்டீர்? நீர் கடுமையான காரியத்தைச் செய்து விட்டீர்" என்று கூறினார். **72.**அதற்கு அவர், "உம்மால் என்னுடன் பொறுமையாக இருக்க முடியாது என்று நான் உமக்குக் கூறவில்லையா?" என்று கூறினார். **73.** அதற்கு மோசே, "நான் மறந்து விட்டதனால் என்னைக் குற்றங்கூறாதீர். என் விஷயத்தில் கடுமையாக நடந்து கொள்ளாதீர்" என்று கூறினார். **74.** பின்னர் இருவரும் தம் பயணத்தைத் தொடர்ந்தார்கள். வழியில் ஒரு சிறுவனைக் கண்டபோது அவர் அவனைக் கொன்று விட்டார். "ஒரு பாவமும் அறியாத சிறுவனைக் கொன்று விட்டீரே! அவன் யாரையும் கொலை செய்திருக்கவில்லையே! நீர் தகாத காரியத்தைச் செய்து விட்டீர்!" என்று மோசே கூறினார்.

**75.** அதற்கு அவர், "உம்மால் என்னுடன் பொறுமையாக இருக்க முடியாது என்று நான் உமக்குக் கூறவில்லையா?" என்று கேட்டார். **76.** அதற்கு மோசே, "இதன் பின்னரும் நான் உம்மிடம் எதைப்பற்றியாவது கேட்டால் என்னை உம்முடன் வைத்துக்கொள்ள வேண்டாம். நீர் என்னிடமிருந்து போதுமான காரணத்தைப் பெற்று விட்டீர்" என்று கூறினார். **77.** இருவரும் தம் பயணத்தைத் தொடர்ந்தார்கள். ஒரு ஊரில் இருந்தவர்களிடம் அவர்கள் வந்து உணவு கேட்டபோது அவ்வூர்வாசிகள் விருந்தளிக்க மறுத்து விட்டார்கள். அங்கு இடிந்து விழும் நிலையில் இருந்த ஒரு சுவரைக் கண்டவுடன் அவர் அதனைச் சரி செய்தார். "நீர் நினைத்திருந்தால் இதற்காக ஏதேனும் கூலியைப் பெற்றிருக்கலாமே?" என்று மோசே கேட்டார். **78.** அதற்கு அவர், "இதுதான் உமக்கும் எனக்கும் இடையேயுள்ள பிரிவாகும். உம்மால் பொறுமையாக இருக்க முடியாத விஷயங்களின் உண்மை நிலையை நான் உமக்குக் கூறுவேன்" என்று கூறினார்.

*79.* “அந்த கப்பல் கடலில் வேலை செய்துகொண்டிருந்த சில ஏழைகளுக்குரியது. அவர்களுக்கு முன்னால் இருந்த ஒரு அரசன் ஒவ்வொரு கப்பலையும் பலவந்தமாக அபகரித்துக் கொண்டிருந்தான். எனவேதான் அதனைப் பழுதாக்கிட நாடினேன்”.

*80.* “சிறுவனது பெற்றோர் நம்பிக்கையாளர்களாக இருந்தார்கள். அவன் வளர்ந்து தனது வரம்பு மீறலாலும், நிராகரிப்பினாலும் அவர்களைத் துன்பத்திற்குள்ளாக்குவான் என அஞ்சினோம். *81.* ஆகவே அவர்களின் இறைவன் அவர்களுக்கு தூய்மையில் அவனைவிட சிறந்த மற்றும் அன்பு பொழிகின்ற பிள்ளைகளை வழங்கிட வேண்டும் என விரும்பினோம்”.

*82.* “சுவரானது அந்நகரிலுள்ள இரு அநாதைச் சிறுவர்களுக்கு உரியதாகும். அதன் அடியில் அவர்களுக்குரிய ஒரு புதையல் இருந்தது. அவர்களின் தந்தை நல்ல மனிதராக இருந்தார். ஆகவே அவர்கள் இருவரும் தம் பருவவயதை அடைந்து தங்களுக்குரிய புதையலை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று உம் இறைவன் விரும்பினான். இவை உம் இறைவனின் கருணையால் நிகழ்ந்தவையாகும். நான் என் விருப்பப்படி எதையும் செய்யவில்லை. இதுதான் நீர் பொறுமையாக இருக்க முடியாதிருந்த விஷயங்களின் உண்மை நிலையாகும்”.

*83.* அவர்கள் துல்கர்னைனைப்பற்றி உம்மிடம் கேட்கிறார்கள். நீர் கூறும்: “அவரைப்பற்றி நான் உங்களுக்கு எடுத்துரைப்பேன்”. *84.* நாம் அவருக்குப் பூமியில் அதிகாரம் வழங்கியிருந்தோம். எல்லாவகையான வசதிகளையும் அவருக்கு அளித்திருந்தோம்.

*85.* அவர் ஒரு வழியைப் பின்பற்றிச் சென்றார். *86.* அவர் சூரியன் மறைகின்ற இடத்தை அடைந்தபோது சூரியன் சேற்றுநீரில் மறைவதைக் கண்டார். அங்கு ஒரு சமூகத்தைக் கண்டார். அப்போது நாம் கூறினோம்: “நீர் விரும்பினால் அவர்களைத் தண்டிக்கலாம்.

விரும்பினால் அவர்களுடன் நல்லமுறையில் நடந்துகொள்ளலாம்". 87. அதற்கு அவர், "அநீதி இழைத்தவரை நாம் தண்டிப்போம். பின்னர் தம் இறைவனிடம் அவர் கொண்டு செல்லப்படுவார். அவன் அவருக்கு கடுந்தண்டனை அளிப்பான்" என்று கூறினார். 88. ஆனால் நம்பிக்கைகொண்டு, நற்செயல் புரிபவருக்கு அழகிய கூலி உண்டு. நாம் நம் கட்டளையில் எளிதானதையே அவருக்குக் கூறுவோம்.

89. பின்னர் அவர் ஒரு வழியில் சென்றார். 90. அவர் சூரியன் உதிக்கும் இடத்தை அடைந்தபோது அது ஒரு சமூக மக்களின் மீது உதிப்பதைக் கண்டார். நாம் அவர்களுக்காக சூரியனின்மீது எவ்விதத் தடுப்பையும் ஏற்படுத்தவில்லை. 91. இவ்வாறே நாம் அவரைப்பற்றி முழுமையாக அறிந்துள்ளோம்.

92. அதன்பின்னர் அவர் ஒரு வழியில் சென்றார். 93. இரு மலைகளுக்கிடையே அவர் சென்றபோது அங்கே ஒரு சமூகத்தைக் கண்டார். அவர் பேசிய எந்த சொல்லையும் அவர்கள் விளங்கிக் கொள்பவர்களாக இருக்கவில்லை. 94. அவர்கள், "துல்கர்னைனே! யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தினர் நாட்டில் குழப்பம் விளைவிக்கிறார்கள். எனவே எங்களுக்கும், அவர்களுக்கும் இடையே ஏதேனும் தடுப்பை ஏற்படுத்த நாங்கள் உமக்கு ஒரு தொகையை நிர்ணயிக்கலாமா?" என்று கேட்டார்கள்.

95. அதற்கு அவர், "எனக்கு என் இறைவன் அளித்திருப்பவையே மேலானவையாகும். எனவே நீங்கள் உழைப்பால் எனக்கு உதவுங்கள். நான் உங்களுக்கும் அவர்களுக்கும் இடையே ஒரு சுவரை எழுப்பி விடுகிறேன்" என்று கூறி, 96. "நீங்கள் என்னிடம் இரும்புப் பாளங்களைக் கொண்டு வாருங்கள்" என்றும் கூறினார். அவர் இரண்டிற்கும் இடையே இட்டு நிரப்பியபோது "நெருப்பை

மூட்டுங்கள்” என்று மக்களிடம் கூறினார். அதனை நெருப்பாக்கிய பிறகு, “என்னிடம் கொண்டு வாருங்கள். நான் அதன்மீது உருக்கிய செம்பை ஊற்றுகிறேன். 97. யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினரால் அதன்மீது ஏறவும் முடியாது. அதில் துளையிடவும் முடியாது” என்றார். 98. மேலும் அவர், “இது என் இறைவனின் கருணையாகும். என் இறைவனின் வாக்குறுதி வந்துவிட்டால் அதனை அவன் தூள்தூளாகத் தகர்த்து விடுவான். என் இறைவனின் வாக்குறுதி உண்மையானது” என்று கூறினார்.

99. அந்நாளில் மக்களை அலைகளைப்போல் ஒருவர்மீது ஒருவர் மோதும்படி விட்டுவிடுவோம். எக்காளம் ஊதப்படும். நாம் அனைவரையும் ஒன்றாகத் திரட்டுவோம். 100. நிராகரிப்பாளர்களுக்கு அந்நாளில் நரகத்தைக் காட்டுவோம். 101. அவர்கள்தான் என் நினைவூட்டலை விட்டும் குருடர்களாகவும் எதையும் செவியேற்க இயலாதவர்களாகவும் இருந்தார்கள்.

102. என்னைவிடுத்து என் அடியார்களைப் பாதுகாவலர்களாக எடுத்துக்கொள்ளலாம் என்று நிராகரிப்பாளர்கள் எண்ணிக் கொண்டார்களா? நிராகரிப்பாளர்களை விருந்தளித்து உபசரிப்பதற்காக நாம் நரகத்தைத் தயார்படுத்தி வைத்துள்ளோம்.

103. நீர் கேளும்: “தங்கள் செயல்களைப் பொறுத்து மிக அதிக இழப்பிற்குரியவர்கள் யார் என்பதை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா?” 104. அவர்களின் முயற்சி இவ்வுலக வாழ்வில் வீணாகி விட்டது. அவர்கள் நன்மை செய்து கொண்டிருப்பதாக எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். 105. அவர்கள்தான் தங்கள் இறைவனின் சான்றுகளையும், அவனது சந்திப்பையும் மறுத்தவர்கள். எனவே அவர்களின் செயல்கள் அனைத்தும் அழிந்து விட்டன. மறுமைநாளில் நாம் அவர்களுக்கு எந்த மதிப்பையும் அளிக்க

மாட்டோம். **106.** அவர்கள் நிராகரித்ததாலும் என் சான்றுகளையும், தூதர்களையும் பரிகாசமாக எடுத்துக் கொண்டதனாலும் நரகம்தான் அவர்களுக்குரிய கூலியாகும்.

**107.** ஆனால் நம்பிக்கைகொணடு, நற்செயல் புரிந்தவர்களுக்கு சுவனச் சோலைகளில் விருந்துபசாரம் உண்டு. **108.** அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். அங்கிருந்து ஒருபோதும் வெளியேற விரும்ப மாட்டார்கள்.

**109.** நீர் கூறும்: "என் இறைவனின் வார்த்தைகளை எழுதுவதற்குக் கடலே மையாகி விட்டாலும் கடல் தீர்ந்துவிடுமேயல்லாது, என் இறைவனின் வார்த்தைகள் தீர்ந்துபோகாது, அத்துடன் அதனைப்போல் இன்னொரு கடலைச் சேர்த்து விட்டாலும் சரியே".

**110.** நீர் கூறும்: "நான் உங்களைப்போன்ற ஒரு மனிதன்தான். உங்கள் இறைவன் ஒரே இறைவன்தான் என்று எனக்கு அறிவிக்கப்படுகிறது. எனவே எவர் தம் இறைவனின் சந்திப்பை எதிர்பார்க்கிறாரோ அவர் நற்செயல் புரியட்டும். தம் இறைவனை வணங்குவதில் எவரையும் இணைவைக்காமல் இருக்கட்டும்".

## 19. மரியாள் (மர்யம்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

**1.** காஃப். ஹா. யா. ஐன். ஸாத். **2.** இது உம் இறைவன் தன் அடியாரான ஜகரிய்யாவின் மீது பொழிந்த அருளைப்பற்றிய செய்தியாகும். **3.** தம் இறைவனை அவர் மெல்லிய குரலில் அழைத்த போது, **4.** "என் இறைவனே, எனது எலும்புகள் பலவீனமடைந்து விட்டன. எனது தலையும் நரையால் வெளுத்து விட்டது. ஆயினும் உன்னிடம் பிரார்த்தனை புரிந்து ஒருபோதும் நான் ஏமாற்றம்

*அடைந்ததில்லை. 5. நான் எனக்குப்பின் என் உறவினர்களைக் குறித்து அஞ்சுகிறேன். என் மனைவியோ மலடியாக இருக்கிறாள். எனவே உன் புறத்திலிருந்து எனக்கு ஒரு வாரிசை வழங்குவாயாக! 6. அவர் எனக்கும் ஜேக்கபின் குடும்பத்தினருக்கும் வாரிசாக இருக்கட்டும். என் இறைவனே, அவரை உனக்குப் பிரியமானவராக ஆக்கி வைப்பாயாக!" என்று கூறினார்.*

*7. ஐகரிய்யாவே, நாம் உமக்கு ஒரு ஆண் குழந்தை பிறக்கும் என்று நற்செய்தி கூறுகிறோம். அவரது பெயர் யஹ்யா (ஜான்) ஆகும். நாம் இதற்கு முன் இப்பெயருடைய எவரையும் படைக்கவில்லை. 8. "என் இறைவனே, எனக்கு எவ்வாறு மகன் பிறப்பான்? என் மனைவியோ மலடியாக இருக்கிறாள். நானோ தள்ளாத வயதை அடைந்து விட்டேனே!" என்று அவர் கூறினார்.*

*9. அதற்கு அவன், "அவ்வாறே நடக்கும். உம் இறைவன் கூறுகிறான், "இது எனக்கு மிகவும் எளிதானது. இதற்கு முன்னர் நீர் ஒன்றுமே இல்லாதிருந்த நிலையில் உம்மைப் படைத்திருக்கிறேனே" என்று கூறினான். 10. அதற்கு அவர், "என் இறைவனே, எனக்கு ஏதேனும் ஓர் அடையாளத்தை ஏற்படுத்துவாயாக!" என்று கேட்டார். அதற்கு அவன், "உம்மால் மூன்று நாட்களுக்கு மக்களுடன் பேச முடியாது. ஆயினும் நீர் ஆரோக்கியமாகத்தான் இருப்பீர். இதுவே உமக்கு அடையாளமாகும்" என்று கூறினான். 11. அவர் தொழுகை புரியும் மாடத்திலிருந்து வெளியேறி தம் மக்களிடம் வந்து நீங்கள் காலையிலும் மாலையிலும் இறைவனைத் துதியுங்கள் என்று சைகையால் அறிவித்தார்.*

*12. (நாம் அவரிடம் கூறினோம்) "யஹ்யாவே (ஜான்), வேதத்தை உறுதியாகப் பிடித்துக் கொள்ளும்". சிறுவயதிலேயே அவருக்கு நாம் ஞானத்தை வழங்கினோம். 13. நாம் அவருக்கு*

இளகிய மனதையும் பரிசுத்த தன்மையையும் வழங்கினோம். அவர் இறையச்சமுடையவராகவும் 14. தன் பெற்றோருக்கு நன்மை செய்பவராகவும் விளங்கினார். வரம்பு மீறுபவராகவோ, கீழ்ப்படியாதவராகவோ அவர் இருக்கவில்லை. 15. அவர் பிறந்த நாளிலும், அவர் மரணிக்கும் நாளிலும், அவர் உயிர் கொடுத்து எழுப்பப்படும் நாளிலும் அவர் மீது சாந்தி உண்டாகட்டும்.

16. வேதத்தில் மரியாளைப்பற்றியும் நினைவுகூர்வீராக. அவள் தன் சமூக மக்களைவிட்டு தனித்து கிழக்கேயுள்ள ஓரிடத்திற்குச் சென்றுவிட்டாள். 17. அவர்களைவிட்டும் அவள் தன்னைத்தானே மறைத்துக் கொண்டாள். எனவே நாம் ஒரு வானவரை அவளிடம் அனுப்பினோம். அவர் அவளுக்கு முன்னால் ஒரு முழு மனிதராக வெளிப்பட்டார். 18. அவள் கூறினாள்: “உம்மைவிட்டு அளவிலாக் கருணையாளனிடம் நான் பாதுகாப்பு தேடுகிறேன், நீர் இறையச்சமுடையோராயின்”. 19. அதற்கு அவர், “நான் உமக்கு ஒரு தூய்மையான ஆண் குழந்தையை வழங்குவதற்காக உம் இறைவனால் அனுப்பப்பட்டுள்ள தூதராவேன்” என்று கூறினார். 20. அதற்கு அவள், “எனக்கு ஆண் குழந்தை எவ்வாறு பிறக்கும்? என்னை எந்த மனிதனும் தீண்டியதில்லையே! நான் கெட்ட நடத்தையுடையவளும் அல்லவே!” என்றாள். 21. அதற்கு அவர், “அவ்வாறுதான் நிகழும்”. உம் இறைவன் கூறுகிறான்: “இவ்வாறு செய்வது எனக்கு மிகவும் எளிதானது. நாம் அதனை மக்களுக்கு ஒரு சான்றாகவும், நம்மிடமிருந்து வந்துள்ள ஓர் அருளாகவும் ஆக்குவோம். இது தீர்மானிக்கப்பட்ட விஷயமாகும்” என்று கூறினார்.

22. ஆகவே அவள் கர்ப்பமுற்றாள். அதனோடு அவள் தொலைவான ஓரிடத்திற்குச் சென்று விட்டாள். 23. பிரசவவேதனை அவளை பேரீச்சை மரத்தின் அருகில் கொண்டு சேர்த்தது. அப்போது

*அவள் கூறினாள், "நான் இதற்கு முன்னரே இறந்து, முற்றிலும் மறக்கடிக்கப்பட்டவளாகி விட்டிருக்கக்கூடாதா!".*

*24.* அப்போது அவர் மரியாளை அதன் அடிப்புறமிருந்து அழைத்துக் கூறலானார்: "கவலைப்படாதீர், உம் இறைவன் உமக்குக் கீழே ஒரு நீரோடையை ஏற்படுத்தியுள்ளான். *25.* பேரீச்சை மரத்தின் அடிப்பகுதியைப் பிடித்து நீர் உம் பக்கமாக குலுக்கும். அது உம்மீது கனிந்த பேரீச்சைகளை உதிர்க்கும். *26.* எனவே உண்டு, பருகி கண் குளிர்ச்சி பெறுவீராக. மனிதர்களில் யாரையாவது நீர் கண்டால், "நான் அளவிலாக் கருணையாளனுக்காக நோன்பு நோற்றுள்ளேன். ஆதலால் இன்று யாரிடமும் நான் பேச மாட்டேன் என்று கூறிவிடும்''.

*27.* பின்னர் குழந்தையைத் தூக்கிக்கொண்டு அவள் தன் சமூக மக்களிடம் வந்தாள். அவர்கள், "மரியாளே, நீ பெரும் பாவமான காரியத்தைச் செய்து விட்டாயே!" *28.* "ஆரோனின் சகோதரியே! உன் தந்தை தீய மனிதராக இருக்கவில்லை. உன் தாயும் நடத்தை கெட்டவளாக இருக்கவில்லை" என்று கூறினார்கள்.

*29.* அவள் அக்குழந்தையின் பக்கம் சுட்டிக் காட்டினாள். அதற்கு அவர்கள், "தொட்டிலில் இருக்கும் குழந்தையிடம் நாங்கள் எவ்வாறு பேசுவது?" என்று கேட்டார்கள். *30-33.* உடனே அக்குழந்தை, "நான் அல்லாஹ்வின் அடியானாக இருக்கின்றேன். அவன் எனக்கு வேதத்தை வழங்கி என்னைத் தூதராகவும் ஆக்கியுள்ளான்". "நான் எங்கிருந்தபோதிலும் அவன் என்னைப் பெரும்பாக்கியம் மிக்கவனாக ஆக்கியுள்ளான். நான் உயிரோடு இருக்கும் காலம்வரை தொழுகையையும் கடமையாக்கப்பட்ட தர்மத்தையும் எனக்கு வலியுறுத்தியுள்ளான். என் தாய்க்கு பணிவிடை செய்பவனாகவும் என்னை ஆக்கியுள்ளான். வரம்பு மீறுபவனாகவும்,

துர்பாக்கியசாலியாகவும் அவன் என்னை ஆக்கவில்லை. நான் பிறந்த நாளிலும் நான் மரணிக்கும் நாளிலும் நான் மீண்டும் எழுப்பப்படும் நாளிலும் என் மீது சாந்தி உண்டாகும்" என்று கூறியது.

*34.* இவர்தான் மரியாளின் மகன் இயேசு. அவர்கள் தர்க்கித்துக் கொண்டிருக்கும் உண்மையான விஷயம் இதுவே. *35.* அல்லாஹ் தனக்காக வாரிசை ஏற்படுத்திக் கொள்பவன் அல்லன். அவன் தூய்மையானவன். ஒரு விஷயத்தை அவன் தீர்மானித்துவிட்டால் 'ஆகு' என்றுதான் கூறுவான். அது ஆகிவிடும்.

*36.* நிச்சயமாக அல்லாஹ்தான் என் இறைவனும், உங்கள் இறைவனும் ஆவான். எனவே அவனையே நீங்கள் வணங்குங்கள். இதுவே நேரான வழியாகும். *37.* ஆயினும் அவர்களில் ஒரு பிரிவினர் தங்களுக்குள் முரண்பட்டுக் கொண்டனர். எனவே நிராகரிப்பாளர்களுக்கு வரப்போகும் ஒரு மாபெரும் நாளின் கேடு உள்ளது. *38.* அவர்கள் அனைவரும் நம்மிடம் வரும் நாளில் அவர்கள் நன்றாக செவிசாய்ப்பார்கள், பார்ப்பார்கள். ஆயினும் இன்று அக்கிரமக்காரரர்கள் தெளிவான வழிகேட்டில் இருக்கிறார்கள்.

*39.* (தூதரே,) விவகாரங்கள் அனைத்தும் தீர்ப்பளிக்கப்பட்டுவிடும் துயர்மிகு நாளைப்பற்றி அவர்களுக்கு எச்சரிக்கை செய்வீராக. அவர்களோ நம்பிக்கைகொள்ளாமல் அலட்சியமாக இருக்கிறார்கள். *40.* பூமிக்கும் அதிலுள்ள அனைத்திற்கும் நாமே உரிமையாளராவோம். அவர்கள் நம்மிடமே திரும்பக் கொண்டு வரப்படுவார்கள்.

*41.* இவ்வேதத்தில் ஆப்ரஹாமையும் நினைவுகூர்வீராக. நிச்சயமாக அவர் உண்மையாளராகவும், தூதராகவும் இருந்தார். *42.* அவர் தம் தந்தையிடம், "தந்தையே! எதையும் கேட்கவோ,

பார்க்கவோ இயலாத, எவ்வித பலனையும் அளிக்க முடியாத ஒன்றையா நீங்கள் வணங்குகிறீர்கள்?" 43. "என் தந்தையே! உங்களிடம் இல்லாத அறிவு என்னிடம் வந்துள்ளது. எனவே என்னைப் பின்பற்றுங்கள். நான் உங்களுக்கு நேரான வழியைக் காட்டுகிறேன்". 44. "என் தந்தையே! சாத்தானை வணங்காதீர்கள். நிச்சயமாக சாத்தான் கருணைமிக்க இறைவனுக்கு மாறுசெய்பவனாக இருக்கின்றான்". 45. "என் தந்தையே! அளவிலாக் கருணையாளனிடமிருந்து ஏதேனும் வேதனை உங்களைப் பிடித்துக்கொள்ளும் என நான் அஞ்சுகிறேன். அப்போது நீங்கள் சாத்தானுக்கு உற்ற நண்பராகி விடுவீர்கள்" என்று கூறினார்.

46. அதற்கு அவரது தந்தை, "ஆப்ரஹாமே! நீ என் தெய்வங்களைப் புறக்கணித்து விட்டாயா? நீ இதிலிருந்து விலகிக் கொள்ளவில்லையென்றால் நான் உன்னைக் கல்லை எறிந்து கொன்று விடுவேன். நீ என்னைவிட்டு நிரந்தரமாக விலகிவிடு" என்று கூறினார். 47. அதற்கு ஆப்ரஹாம், "உங்கள் மீது சாந்தி உண்டாகட்டும். நான் உங்களுக்காக என் இறைவனிடம் மன்னிப்புக் கோருவேன். நிச்சயமாக அவன் என்மீது கருணைமிக்கவனாக இருக்கின்றான்". 48. "உங்களை விட்டும், அல்லாஹ்வை விடுத்து நீங்கள் அழைக்கின்ற தெய்வங்களை விட்டும் நான் விலகிவிடுகிறேன். என் இறைவனையே நான் பிரார்த்திப்பேன். என் இறைவனை அழைப்பதால் ஒருபோதும் நான் துர்பாக்கியசாலியாகிவிட மாட்டேன் என்று நம்புகிறேன்" என்று கூறினார்.

49. அவர் அவர்களைவிட்டும், அல்லாஹ்வையன்றி அவர்கள் வணங்கிக் கொண்டிருந்த தெய்வங்களைவிட்டும் விலகிக்கொண்டபோது நாம் அவருக்கு ஈசாக்கையும், ஜேக்கபையும் வழங்கினோம். அவர்கள் ஒவ்வொருவரையும் தூதராக ஆக்கினோம்.

*50.* அவர்களுக்கு நம் அருளை வழங்கினோம். உயர்ந்த உண்மையான நற்பெயரையும் வழங்கினோம்.

*51.* இவ்வேதத்தில் மோசேயையும் நினைவுகூர்வீராக. நிச்சயமாக அவர் தேர்ந்தெடுக்கப்பட்டவராக இருந்தார். தூதராகவும், நபியாகவும் விளங்கினார். *52.* தூர் மலையின் வலது பக்கத்திலிருந்து நாம் அவரை அழைத்தோம். இரகசியமாகப் பேசுவதற்காக அவரை நெருக்கமாக்கினோம். *53.* நம் கருணையினால் அவரது சகோதரர் ஆரோனையும் அவருக்குத் தூதராக்கித் தந்தோம்.

*54.* இவ்வேதத்தில் இஸ்மவேலையும் நினைவுகூர்வீராக. அவர் வாக்குறுதியைப் பேணுபவராகவும், தூதராகவும், நபியாகவும் இருந்தார். *55.* தம் மக்களை அவர் தொழுகையையும் கடமையாக்கப்பட்ட தர்மத்தையும் நிறைவேற்றுமாறு ஏவுபவராக இருந்தார், தம் இறைவனிடம் விருப்பத்திற்குரியவராகவும் விளங்கினார். *56.* இவ்வேதத்தில் இத்ரீஸையும் நினைவுகூர்வீராக. நிச்சயமாக அவர் உண்மையாளராகவும், தூதராகவும் இருந்தார். *57.* நாம் அவரை மேலான இடத்திற்கு உயர்த்தினோம்.

*58.* இவர்கள்தான் அல்லாஹ் அருள்புரிந்த தூதர்களாவர். இவர்கள் ஆதமுடைய சந்ததிகளிலும், நோவாவுடன் கப்பலில் நாம் ஏற்றிவிட்டவர்களிலும், ஆப்ரஹாம் மற்றும் இஸ்ராயீலுடைய வழித்தோன்றல்களிலும், நாம் நேர்வழிகாட்டி தேர்ந்தெடுத்தவர்களிலும் உள்ளவர்கள். அவர்களிடம் அளவிலாக் கருணையாளனின் வசனங்கள் ஓதிக்காட்டப்பட்டால் அவர்கள் சிரம்பணிந்தவாறும், அழுதவாறும் விழுந்து விடுகிறார்கள்.

*59.* அவர்களுக்குப்பின் வந்த சந்ததியினர் தொழுகையை வீணாக்கி மனஇச்சைகளைப் பின்பற்றினார்கள். அவர்கள் விரைவில் அழிவைக் கண்டுகொள்வார்கள், *60.* ஆயினும் மன்னிப்புக்கோரி

*நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிவோரைத்தவிர. இவர்கள் சொர்க்கத்தில் நுழைவார்கள். சிறிதளவும் இவர்கள் அநீதி இழைக்கப்பட மாட்டார்கள்.*

*61. அளவிலாக் கருணையாளன் தன் அடியார்களுக்கு வாக்களித்துள்ள காணமுடியாதவாறு மறைவாக உள்ள நிலையான சுவனங்கள் அவர்களுக்கு உண்டு. அவனது வாக்குறுதி நிறைவேற்றப்பட்டே தீரும். 62. அங்கு 'சாந்தி' என்பதைத்தவிர வீணான விஷயங்கள் எதையும் அவர்கள் செவியுற மாட்டார்கள். காலையிலும், மாலையிலும் அவர்களுக்குரிய உணவு கிடைத்துக்கொண்டே இருக்கும். 63. இத்தகைய சுவனத்திற்கு நம் அடியார்களில் இறையச்சமுடையோரை நாம் வாரிசாக்குவோம்.*

*64. நாங்கள் (வானவர்கள்) உம் இறைவனின் கட்டளையுடன்தான் இறங்குகிறோம். எங்களுக்கு முன்னால் இருப்பவை, பின்னால் இருப்பவை மற்றும் அவையிரண்டுக்கும் இடையே இருப்பவை அனைத்தும் அவனுக்கே உரியன. உம் இறைவன் மறந்து விடுபவனல்லன். 65. வானங்கள், பூமி மற்றும் அவற்றிற்கிடையேயுள்ள அனைத்திற்கும் அவனே இறைவன். எனவே அவனையே நீர் வணங்குவீராக. அவனது வழிபாட்டிலேயே நிலைத்திருப்பீராக. அவனுக்கு நிகரான எவரையும் நீர் அறிவீரா?*

*66. 'நான் இறந்து விட்டால் மீண்டும் உயிர் கொடுக்கப்பட்டு எழுப்பப்படுவேனா?' என்று மனிதன் கேட்கிறான். 67. 'இதற்கு முன்னர் ஒன்றுமே இல்லாதிருந்த அவனை நாம்தான் படைத்தோம்' என்பதை அவன் எண்ணிப் பார்க்கவில்லையா? 68. எனவே உம் இறைவன்மீது சத்தியமாக நாம் அவர்களையும், சாத்தான்களையும் ஒன்றுதிரட்டுவோம். நரகத்தைச் சுற்றிலும் மண்டியிட்டவர்களாக அவர்களை நிறுத்துவோம்.*

***69.*** பின்னர் ஒவ்வொரு கூட்டத்திலிருந்தும் கருணைமிக்க இறைவனுக்கு மாறுசெய்வதில் தீவிரமாக இருந்தவர்களைத் தனிமைப்படுத்தி விடுவோம். ***70.*** நரகத்தில் நுழைவதற்கு அதிகத் தகுதியுடையவர்களை நாம் நன்கறிவோம். ***71.*** உங்களில் எவரும் அதனைக் கடக்காமல் இருக்க முடியாது. இதனை நிறைவேற்றுவது உம் இறைவன்மீதுள்ள கடமையாகும். ***72.*** இறையச்சமுடையோரை நாம் காப்பாற்றி அநியாயக்காரர்களை அதிலேயே மண்டியிட்டவர்களாக அப்படியே விட்டுவிடுவோம்.

***73.*** நம்முடைய தெளிவான வசனங்கள் அவர்களிடம் எடுத்துரைக்கப்பட்டால் “இரு பிரிவினரில் யார் நல்ல நிலையில் இருக்கிறார்கள்? யாருடைய கூட்டம் மிகச் சிறந்ததாக இருக்கிறது?” என்று நிராகரிப்பாளர்கள் நம்பிக்கையாளர்களிடம் கேட்கிறார்கள். ***74.*** இவர்களுக்கு முன்னர் இவர்களைவிட அதிக சாதனங்களை உடையவர்களாகவும், கம்பீரம் கொண்டவர்களாகவும் விளங்கிய எத்தனையோ சமூகங்களை நாம் அழித்திருக்கின்றோம்.

***75.*** நீர் கூறும், “வழிகேட்டில் இருப்பவருக்குக் கருணைமிக்க இறைவன் அவகாசம் அளிக்கிறான். இறுதியில் அவர்கள் எச்சரிக்கப்படுகின்ற வேதனையையோ, மறுமையையோ காணும்போது யாருடைய நிலை மோசமானது, யாருடைய கூட்டம் பலம் குன்றியது என்பதை அவர்கள் அறிந்துகொள்வார்கள்”.

***76.*** நேர்வழியைப் பின்பற்றுவோருக்கு அல்லாஹ் நேர்வழியில் மேலும் முன்னேற்றம் அளிக்கிறான். நிலையாக இருக்கும் நற்செயல்கள்தான் உம் இறைவனிடத்தில் நற்கூலி மற்றும் நல்ல முடிவு என்ற வகையில் சிறந்ததாகும்.

***77.*** நமது (குர்ஆனின்) வசனங்களை நிராகரித்தவனை பார்த்தீரா? தனக்குச் செல்வமும், குழந்தைகளும் கிடைத்தே தீரும்

என்று அவன் கூறுகிறான். 78. அவன் மறைவான விஷயங்களை அறிந்து கொண்டானா? அல்லது அளவிலாக் கருணையாளனிடம் ஏதேனும் வாக்குறுதி பெற்றுள்ளானா? 79. ஒருபோதும் இல்லை. அவன் கூறுவதை எல்லாம் நாம் பதிவு செய்து கொள்வோம். அவனது வேதனையை மேலும் அதிகமாக்குவோம். 80. எப்பொருளைக் குறித்து அவன் சொந்தம் கொண்டாடுகிறானோ அதற்கு நாமே உரிமையாளராவோம். அவன் நம்மிடம் தனியாகவே வருவான்.

81. தங்களுக்கு உதவுவார்கள் என்று அவர்கள் அல்லாஹ்வை விடுத்து வேறு தெய்வங்களை ஏற்படுத்திக் கொண்டார்கள். 82. ஒருபோதும் இல்லை. தங்களை அவர்கள் வழிபட்டதையே நிராகரித்து அவர்களுக்கு எதிரானவர்களாகி விடுவார்கள்.

83. நிராகரிப்பாளர்களின்மீது நாம் சாத்தானை ஏவி விட்டுள்ளதை நீர் பார்க்கவில்லையா? அவர்கள் இவர்களை மென்மேலும் தூண்டிக்கொண்டே இருக்கிறார்கள். 84. எனவே இவர்களுக்கெதிராக நீர் அவசரப்பட வேண்டாம். நாம் இவர்களின் நாட்களை கணக்கிட்டுக் கொண்டிருக்கிறோம். 85. அன்றையதினம் நாம் இறையச்சமுடையோரை கருணையாளனிடம் விருந்தாளிகளாக்கி ஒன்றுசேர்ப்போம். 86. குற்றவாளிகளைத் தாகமுள்ளவர்களாக நரகத்தை நோக்கி விரட்டிச் செல்வோம். 87. கருணைமிக்க இறைவனிடம் அனுமதி பெற்றவர்களைத்தவிர வேறு எவரும் பரிந்துரை செய்யும் அதிகாரம் பெற்றிருக்க மாட்டார்கள்.

88. “கருணைமிக்க இறைவன்” மகனாக ஒருவரை ஏற்படுத்திக் கொண்டான் என்று அவர்கள் கூறுகிறார்கள். 89. நீங்கள் மிகப்பயங்கரமான விஷயத்தைக் கூறியுள்ளீர்கள். 90. அதனால் வானங்கள் வெடித்து பூமி துண்டுதுண்டாகி மலைகள் இடிந்து

*விழக்கூடும். **91.** ஏனெனில் அவர்கள் கருணைமிக்க இறைவனுக்கு மகன் இருப்பதாகக் கூறுகிறார்கள். **92.** மகனை ஏற்படுத்திக்கொள்வது கருணைமிக்க இறைவனுக்கு உகந்ததல்ல.*

***93.** வானங்களிலும், பூமியிலும் உள்ள அனைவரும் கருணையாளனிடம் அடிமைகளாகவே வருவார்கள். **94.** அவர்களை அவன் நன்கு கணக்கிட்டு வைத்துள்ளான். அவர்களின் எண்ணிக்கை அவனிடமே இருக்கின்றது. **95.** மறுமைநாளில் அவர்கள் அனைவரும் அவனிடம் தனித்தனியாகவே வருவார்கள். **96.** நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிந்தவர்களுக்காக அளவிலாக் கருணையாளன் அன்பை ஏற்படுத்துவான்.*

***97.** இந்த குர்ஆனை உமது மொழியில் எளிதாக்கியுள்ளோம். அது இதன்மூலம் நீர் இறையச்சமுடையோருக்கு நற்செய்தி கூறுவதற்காகவும், பிடிவாதம் கொண்ட மக்களை எச்சரிப்பதற்காகவும்தான். **98.** அவர்களுக்கு முன் எத்தனையோ சமூகங்களை நாம் அழித்துள்ளோம். அவர்களில் யாரையேனும் நீ காண்கிறாயா? அல்லது அவர்களின் அரவத்தையேனும் நீ செவியுறுகிறாயா?*

## *20. தாஹா*

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

***1.** தா. ஹா. **2.** நீர் துன்பப்படுவதற்காக நாம் இந்த குர்ஆனை உமக்கு அருளவில்லை; **3.** அஞ்சுவோருக்கு அறிவுரையாகவே அருளினோம். **4.** இது பூமியையும், உயரமான வானங்களையும் படைத்தவனிடமிருந்து அருளப்பட்டதாகும். **5.** அளவிலாக் கருணையாளன் அரியணையின்மீது நிலைகொண்டு விட்டான்.*

*6. வானங்களிலும், பூமியிலும், அவற்றிற்கிடையிலும் மற்றும் பூமிக்கடியிலும் உள்ளவை யாவும் அவனுக்கே உரியவை.*

*7. நீர் உமது பேச்சை உரக்கக் கூறினாலும் (இரகசியமாகக் கூறினாலும் இரண்டும் அவனுக்குச் சமமே.) அவன் இரகசியத்தையும் ஏன் அதைவிட மறைவானதையும் நன்கறிகிறான். 8. அவனே அல்லாஹ். அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. அவனுக்கு அழகிய பெயர்கள் இருக்கின்றன.*

*9. மோசேயின் செய்தி உமக்கு எட்டியதா? 10. அவர் நெருப்பைக் கண்டபோது தம் குடும்பத்தாரிடம், "இங்கேயே இருங்கள். நான் நெருப்பைக் காண்கிறேன். அதிலிருந்து ஒரு எரி கொள்ளியை உங்களிடம் நான் கொண்டு வரக்கூடும் அல்லது அந்த நெருப்பின் அருகில் ஏதேனும் வழியைக் கண்டுகொள்ளக்கூடும்" என்று கூறினார்.*

*11. அவர் அங்கு சென்றபோது 'மோசேயே' என்று அழைக்கப்பட்டார். 12. நான்தான் உம் இறைவன். உம் காலணிகளைக் கழற்றி விடும். ஏனெனில் நீர் 'துவா' எனும் புனிதப் பள்ளத்தாக்கில் இருக்கின்றீர். 13. நான் உம்மைத் தேர்ந்தெடுத்துக் கொண்டேன். எனவே உமக்கு அறிவிக்கப்படுவதை செவிசாய்த்துக் கேளும். 14. "நான்தான் அல்லாஹ். என்னைத்தவிர வேறு இறைவன் இல்லை. எனவே என்னையே வணங்குவீராக. என்னை நினைவுகூர்வதற்காக தொழுகையைக் கடைப்பிடிப்பீராக. 15. மறுமை வந்தே தீரும். ஒவ்வொருவரும் அவரவர் செய்தவற்றுக்கான கூலியைப் பெற வேண்டும் என்பதற்காக நான் அதனை மறைத்து வைக்க விரும்புகிறேன். 16. அதனை நம்பாமல் தன் மனஇச்சைப்படி நடப்பவன் அதனைவிட்டும் உம்மைத் திருப்பிவிட வேண்டாம். அவ்வாறாயின் நீர் அழிந்து விடுவீர்".*

*17.* “மோசேயே! உம் வலது கையில் இருப்பது என்ன?” (என்று அவன் கேட்டான்) *18.* அதற்கு அவர், “இது என் கைத்தடி. இதனை நான் ஊன்றிக் கொள்வேன். இதன்மூலம் என் ஆடுகளுக்கு இலைகளைப் பறிப்பேன். இன்னும் எனக்கு வேறு பல பயன்களும் இருக்கின்றன” என்று கூறினார். *19.* அதற்கு அவன், “மோசேயே! அதனைக் கீழே போடும்” என்று கூறினான். *20.* அவர் அதனைக் கீழே போட்டார். திடீரென அது ஓடுகின்ற பாம்பாக மாறிவிட்டது. *21.* “அதனைப் பிடியும். பயப்படாதீர். நாம் அதனை முந்தைய நிலைக்கே மாற்றி விடுவோம்” என்று அவன் கூறினான்.

*22.* “நீர் உம் கையை அக்குளில் வைத்துக் கொள்ளும். அது தீங்கற்ற பிரகாசமாக வெளிப்படும். இது மற்றொரு சான்றாகும்*. *23.* நம்முடைய பெரிய சான்றுகளில் சிலவற்றை நாம் உமக்கு காண்பிப்போம். *24.* நீர் பாரோவிடம் செல்வீராக. அவன் வரம்பு மீறி விட்டான்”.

*25.* மோசே (பின்வருமாறு பிரார்த்தித்தார்): “என் இறைவா! என் உள்ளத்தை விரிவாக்கு! *26.* என் பணியை எனக்கு எளிதாக்கு! *27.* என் நாவிலுள்ள முடிச்சை அவிழ்த்து விடு! *28.* அப்போதுதான் மக்கள் என் பேச்சைப் புரிந்து கொள்வார்கள். *29.* என் குடும்பத்திலிருந்து ஓர் உதவியாளரை எனக்கு ஏற்படுத்து. *30.* அது என் சகோதரரான ஆரோனாக (இருக்கட்டும்). *31.* அவர்மூலம் என்னை வலுப்படுத்து. *32.* எனது பணியில்

---

*ஒரு விதை முளைத்து வெளிவருவதாகட்டும் அல்லது ஒரு கைத்தடி பாம்பு போல மாறுவதாகட்டும், எதுவாக இருந்தாலும், எந்த நிகழ்வாக இருந்தாலும் இந்த உலகில் உள்ள அனைத்தும் இறைவனின் அற்புதங்களே. இறைத்தூதர்கள் மூலமாக இறைவன் காட்டும் அசாதாரண அற்புதச் செயல்கள் எல்லாம் இவ்வுலகில் தினசரி நிகழும் செயல்களின் அற்புதங்களை மனிதனின் கவனத்திற்கு இறைவன் கொண்டு வருவதற்கானதேயாகும்.

அவரையும் கூட்டாக்கு. *33.* அதனால் நாங்கள் மேலதிகமாக உனது தூய்மையைப் பறைசாற்ற வேண்டும்; *34.* உன்னை மேலதிகமாக நினைவுகூர வேண்டும். *35.* நிச்சயமாக நீ எங்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறாய்". *36.* அதற்கு அவன், "மோசேயே! நீர் கேட்டவை யாவும் உமக்கு வழங்கப்பட்டு விட்டன" என்று கூறினான்.

*37.* நாம் உம் மீது மற்றொரு முறையும் கிருபை செய்துள்ளோம். *38.* உம் தாய்க்கு அறிவிக்கப்பட வேண்டியவற்றை பின்வருமாறு நாம் அறிவித்ததை நினைவுகூரும், *39.* "அவரை ஒரு பெட்டியில் வைத்து அதனை ஆற்றில் விட்டுவிடும். ஆறு அவரைக் கரையில் சேர்த்துவிடும். அதனை எனக்கும் அவருக்கும் பகைவனான ஒருவன் எடுத்துக்கொள்வான்". நான் உம்மீது அன்பைப் பொழிந்துள்ளேன், நீர் என் கண்காணிப்பில் வளர வேண்டும் என்பதற்காக. *40.* இதனையும் நினைவுகூரும்: உம் சகோதரி நடந்தவாறே வந்து, "இக்குழந்தையை நல்லமுறையில் வளர்க்கக்கூடிய ஒருவரை உங்களுக்கு நான் காட்டித் தரட்டுமா?" என்று கேட்டாள். இவ்வாறு உம் தாயின் கண் குளிரவும், அவள் கவலைப்படாமல் இருக்கவும் நாம் உம்மை அவளிடமே கொண்டு சேர்த்தோம். நீர் ஒருவரைக் கொன்று விட்டீர். அக்கவலையிலிருந்தும் நாம் உம்மைக் காப்பாற்றினோம். உம்மை நன்கு சோதித்தோம். நீர் மத்யன்வாசிகளுடன் பல ஆண்டுகள்வரை தங்கியிருந்தீர். மோசேயே, பிறகு நீர் ஒரு திட்டத்தின்படி வந்து விட்டீர்.

*41.* நான் உம்மை எனக்காகத் தேர்ந்தெடுத்துக் கொண்டேன். *42.* நீரும் உம் சகோதரரும் என் சான்றுகளுடன் செல்லுங்கள். என்னை நினைவுகூர்வதில் சோர்வடைந்து விடாதீர்கள். *43.* நீங்கள் இருவரும் பாரோவிடம் செல்லுங்கள். அவன் வரம்புமீறி விட்டான். *44.* அவனுடன் மென்மையாகப் பேசுங்கள். அவன் அறிவுரையை ஏற்கக்கூடும் அல்லது அஞ்சக்கூடும்.

45. இருவரும், “இறைவா! அவன் எங்களுடன் அநியாயமாகவோ, வரம்புமீறியோ நடந்து கொள்வான் என நாங்கள் அஞ்சுகிறோம்” என்று கூறினார்கள். 46. அவன் கூறினான்: “அஞ்சாதீர்கள். நான் உங்களுடன் கேட்டுக்கொண்டும், பார்த்துக் கொண்டும் இருக்கிறேன். 47. நீங்கள் அவனிடம் சென்று, ‘நாங்கள் இருவரும் உன் இறைவனின் தூதர்களாவோம். எனவே நீ எங்களுடன் இஸ்ராயீலின் மக்களை அனுப்பி விடு, அவர்களைத் துன்புறுத்தாதே. நாங்கள் உன் இறைவனிடமிருந்து ஒரு சான்றையும் கொண்டு வந்துள்ளோம். நேர்வழியை பின்பற்றியவர் மீது சாந்தி உண்டாகும்’ 48. ‘சத்தியத்தை நிராகரித்து மறுப்போருக்கு வேதனை உண்டு (என்று கூறுங்கள்)’, என்று எங்களுக்கு அறிவிக்கப்பட்டுள்ளது”.

49. “மோசே! உங்கள் இருவருடைய இறைவன் யார்?” என்று பாரோ கேட்டான். 50. அதற்கு அவர், “ஒவ்வொரு பொருளுக்கும் அதற்குரிய வடிவத்தைக் கொடுத்துப் பின்னர் வழிகாட்டியவன்தான் எங்கள் இறைவன்” என்று கூறினான். 51. “முன்சென்ற சமூகங்களின் நிலைமை என்ன?” என்று பாரோ கேட்டான். 52. அதற்கு அவர், “அதைப்பற்றிய அறிவு என் இறைவனிடம் ஒரு பதிவேட்டில் உள்ளது. என் இறைவன் தவறிழைப்பதுமில்லை, மறப்பதுமில்லை” என்று கூறினார்.

53. அவனே உங்களுக்காகப் பூமியை விரிப்பாக அமைத்து அதில் பாதைகளை ஏற்படுத்தியுள்ளான். வானத்திலிருந்து மழை பொழியச்செய்து அதன்மூலம் பல்வேறு வகையான தாவரங்களை வெளிப்படுத்தியுள்ளான். 54. உண்ணுங்கள். உங்கள் கால்நடைகளையும் மேய விடுங்கள். அறிவுடையோருக்கு இதில் பல அத்தாட்சிகள் இருக்கின்றன. 55. பூமியிலிருந்துதான் நாம் உங்களைப்

*படைத்தோம். அதிலேயே நாம் உங்களைச் சேர்த்திடுவோம். அதிலிருந்தே மீண்டும் உங்களை எழுப்பிடுவோம்*.*

***56.*** *நாம் பாரோவுக்கு நம் சான்றுகள் அனைத்தையும் காட்டினோம். ஆயினும் அவன் பொய்யெனக் கூறிப் புறக்கணித்து விட்டான்.* ***57.*** *அவன், "மோசேயே, உன் சூனியத்தின்மூலம் எங்களை எங்கள் நாட்டிலிருந்து வெளியேற்றவா எங்களிடம் வந்துள்ளாய்?* ***58.*** *நாங்களும் உனக்கெதிராக அதைப்போன்ற சூனியத்தைக் கொண்டு வருவோம். எனவே உனக்கும் எங்களுக்கும் மத்தியில் ஒரு வாக்கை நிர்ணயித்துக்கொள். நாங்களும் அதை மீற மாட்டோம். நீயும் அதனை மீறக்கூடாது. அப்போட்டி ஒரு திறந்தவெளியில் நடக்க வேண்டும்" என்று கூறினான்.*

***59.*** *அதற்கு அவர், "பண்டிகை நாளே உங்களுக்கு நிர்ணயிக்கப்பட்ட நாளாகும். முற்பகலில் மக்கள் ஒன்றுதிரட்டப்பட வேண்டும்" என்று கூறினார்.* ***60.*** *பாரோ அங்கிருந்து விலகிச்சென்று தனது சூழ்ச்சிகளைத் திரட்டிக் கொண்டு வந்தான்.* ***61.*** *மோசே அவர்களிடம், "உங்களுக்குக் கேடுதான். அல்லாஹ்வின் மீது பொய்யைப் புனையாதீர்கள். அவன் வேதனையால் உங்களை அழித்து விடுவான். பொய் புனைவோர் தோல்வியடைந்து விட்டார்கள்" என்று கூறினார்.*

***62.*** *எனவே அவர்கள் தங்களுக்குள் தர்க்கித்துக் கொண்டார்கள். இரகசியமாக ஆலோசனை செய்து கொண்டார்கள்.* ***63.*** *"நிச்சயமாக இவ்விருவரும் சூனியக்காரர்கள்தான். தங்கள் சூனியத்தின்மூலம் உங்கள் நாட்டைவிட்டே உங்களை வெளியேற்றி விடவும், உங்கள் உயர்வான வழிமுறைகளை அழித்துவிடவும் நாடுகின்றார்கள்.* ***64.*** *எனவே நீங்கள் உங்களின் திட்டங்களை எல்லாம் சேர்த்துக்கொண்டு*

---

*பூமியின் படைப்பு, மழை பொழிவது, பச்சைபசும் தாவரங்கள் முளைப்பது, இவ்வுலகில் வாழ்வதற்கேற்ற சூழலுடனான இயற்கைச் செயல்பாடுகள் போன்றவை எல்லாம் திகைப்பை ஏற்படுத்தும் நிகழ்வுகளேயாகும்.

ஒன்றுதிரண்டு வாருங்கள். இன்று மேலோங்கி நிற்பவர்தான் வெற்றி பெற்றவராவார்" என்று அவர்கள் கூறினார்கள்.

*65.* "மோசேயே, நீ போடுகிறாயா அல்லது நாங்கள் முதலில் போடட்டுமா?" என்று சூனியக்காரர்கள் கேட்டார்கள். *66.* அதற்கு அவர், "நீங்களே முதலில் போடுங்கள்" என்றார். உடனே அவர்களின் கயிறுகளும், கைத்தடிகளும் சூனியத்தின் வலிமையால் ஓடுவதுபோல் அவருக்குத் தோன்றின. *67.* மோசே தம் மனதிற்குள் பயந்து விட்டார். *68.* நாம் கூறினோம்: "பயப்படாதீர். நீர்தான் மேலோங்கி நிற்பீர். *69.* உம் வலக்கரத்தில் உள்ளதைப் போடும். அது அவர்கள் உருவாக்கியவை அனைத்தையும் விழுங்கிவிடும். அவர்கள் உருவாக்கியவை அனைத்தும் சூனியக்காரர்களின் வித்தைதான். சூனியக்காரன் எங்கிருந்துவந்தாலும் அவன் ஒருபோதும் வெற்றி பெற மாட்டான்". *70.* ஆகவே சூனியக்காரர்கள் சிரம்பணிந்தவர்களாக "நாங்கள் ஆரோன் மற்றும் மோசேயின் இறைவன்மீது நம்பிக்கை கொண்டோம்'', என்று கூறினார்கள்.

*71.* அதற்கு பாரோ, "நான் உங்களுக்கு அனுமதியளிப்பதற்கு முன்பே நீங்கள் அவரை ஏற்றுக்கொண்டு விட்டீர்களா? அவர்தான் உங்களுக்கு சூனியத்தைக் கற்றுக்கொடுத்த குரு. ஆகவே நான் உங்கள் மாறுகை, மாறுகால்களை வெட்டி விடுவேன். பேரீச்சை மரங்களில் உங்களைத் தூக்கிலேற்றுவேன். நம்மில் யாருடைய வேதனை மிகக் கடுமையானது, அதிகநேரம் நீடித்து நிற்கக்கூடியது என்பதை அறிந்துகொள்வீர்கள்" என்று கூறினான்.

*72.* அதற்கு அவர்கள் பாரோவிடம், "எங்களிடம் வந்துள்ள தெளிவான சான்றுகளையும் எங்களைப் படைத்தவனையும் விட்டுவிட்டு ஒருபோதும் நாங்கள் உனக்கு முன்னுரிமை தர மாட்டோம். எனவே நீ செய்ய வேண்டியதைச் செய்துகொள்.

உன்னால் செய்ய முடிந்ததெல்லாம் இவ்வுலக வாழ்வில்தான். 73. நாங்கள் எங்கள் இறைவனின்மீது நம்பிக்கை கொண்டோம், எங்கள் பாவங்களையும், கட்டாயப்படுத்தி எங்களை நீ சூனியம் செய்ய வைத்ததையும் அவன் மன்னித்துவிட வேண்டும் என்பதற்காக. அல்லாஹ்வே சிறந்தவனாகவும், நிலைத்திருப்பவனாகவும் இருக்கின்றான்" என்று கூறினார்கள்.

74. தன் இறைவனிடம் குற்றவாளியாக வருபவனுக்கு நரகம்தான் உண்டு. அதில் அவன் சாகவும் மாட்டான், வாழவும் மாட்டான். 75. எவர் நற்செயல்கள் புரிந்து நம்பிக்கையாளராக தம் இறைவனிடம் வருவாரோ அத்தகையவர்களுக்குத்தான் உயர்ந்த பதவிகள் இருக்கின்றன. 76. அவர்களுக்கு நிலையான சுவனங்கள் உண்டு. அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். இது பரிசுத்தவான்களுக்குரிய கூலியாகும்.

77. "இரவு நேரத்தில் என் அடியார்களை அழைத்துக்கொண்டு செல்வீராக. அவர்களுக்காகக் கடலில் உலர்ந்த பாதையை அமைத்துக் கொள்வீராக. பின்தொடரப்படுவதைப்பற்றியோ வேறு எந்த விஷயத்திற்காகவோ நீர் அஞ்ச வேண்டாம்" என்று நாம் மோசேவுக்கு அறிவித்தோம். 78. பாரோ தனது படைகளுடன் அவர்களைப் பின்தொடர்ந்தான். கடல் மூழ்கடிக்க வேண்டியவாறு அவர்களை மூழ்கடித்து விட்டது. 79. பாரோ தன் சமூகத்தை வழிகெடுத்துவிட்டான். அவர்களுக்குச் சரியான வழியை அவன் காட்டவில்லை.

80. இஸ்ராயீலின் மக்களே, உங்கள் பகைவனிடமிருந்து நாம் உங்களைக் காப்பாற்றினோம். தூர் மலையின் வலப்பக்கத்தில் வைத்து நாம் உங்களுக்கு வாக்களித்திருந்தோம். உங்களுக்காக மன்னு,

ஸல்வாவையும் அருளினோம். 81. நாம் உங்களுக்கு வழங்கியவற்றில் தூய்மையான உணவை உண்ணுங்கள். அதில் வரம்புமீறி விடாதீர்கள். அவ்வாறாயின் என் கோபம் உங்கள் மீது இறங்கி விடும். எவர்மீது என் கோபம் இறங்கியதோ அவர் அழிந்து விட்டார். 82. ஆயினும் எவர் மன்னிப்புக் கோரி, நம்பிக்கைகொண்டு, நற்செயல் புரிந்து, நேர்வழியிலும் இருக்கின்றாரோ அவருக்காக நான் பெரும் மன்னிப்பாளனாக இருக்கின்றேன்.

83. மோசேயே! உம் சமூகத்தைவிட்டு விரைந்து வருவதற்கு உம்மைத் தூண்டியது எது? 84. அவர், "அவர்களும் என்னைப் பின்தொடர்ந்தே வருகிறார்கள். என் இறைவா, உன் திருப்தியைப் பெறுவதற்காகவே உன்னிடம் விரைந்து வந்தேன்" என்று கூறினார். 85. அதற்கு அவன், "நீர் அங்கிருந்து வந்தபிறகு உம் சமூகத்தை நாம் சோதனையில் ஆழ்த்தி விட்டோம். அவர்களை ஸாமிரி வழிகெடுத்து விட்டான்" என்று கூறினான்.

86. மோசே கோபத்துடனும், வருத்தத்துடனும் தம் சமூகத்திடம் திரும்பிவந்து, "என் சமூகமே, உங்கள் இறைவன் உங்களுக்கு அழகிய வாக்குறுதியை அளிக்கவில்லையா? உங்களுக்கு நீண்ட காலம் கடந்து விட்டதா? அல்லது உங்கள் இறைவனின் கோபம் உங்கள்மீது இறங்க வேண்டும் என விரும்பி என் வாக்குறுதிக்கு மாறுசெய்து விட்டீர்களா?" என்று கேட்டார்.

87. அதற்கு அவர்கள், "நாங்கள் உங்களுக்கு அளித்த வாக்குறுதிக்கு எங்கள் விருப்பப்படி மாறுசெய்யவில்லை. மாறாக சமூகத்தினுடைய ஆபரணங்கள் எங்கள்வசம் ஒப்படைப்பட்டன. நாங்கள் அதனை எறிந்து விட்டோம். அவ்வாறே ஸாமிரியும் அதனைப் போட்டான்" என்று கூறினார்கள். 88. அவன் அவர்களுக்கு ஒரு காளைக்கன்றின் சிலையை உருவாக்கிக் கொடுத்தான்.

அதிலிருந்து காளைமாட்டின் சப்தம் வெளிப்பட்டது. அப்போது அவர்கள், "இதுதான் உங்கள் இறைவனும் மோசேயின் இறைவனும் ஆகும். அவர் இதனை மறந்து விட்டார்" என்று கூறினார்கள். 89. அது அவர்களின் எந்த அழைப்பிற்கும் பதிலளிக்காது என்பதையும் அவர்களுக்குத் தீங்கிழைக்கவோ, பயனளிக்கவோ சக்திபெறாது என்பதையும் அவர்கள் பார்க்கவில்லையா?

90. முன்னரே ஆரோன் அவர்களிடம், "என் சமூகமே! இந்தக் காளைக் கன்றின் மூலம் நீங்கள் வழிகெடுக்கப்பட்டு விட்டீர்கள். அளவிலாக் கருணையாளன்தான் உங்கள் இறைவன். எனவே என்னையே பின்பற்றுங்கள். நான் சொல்வதைக் கேளுங்கள்" என்று கூறியிருந்தார். 91. அதற்கு அவர்கள், "மோசே எங்களிடம் திரும்பி வரும்வரை நாங்கள் இதனைத்தான் வணங்கிக் கொண்டிருப்போம்" என்று கூறினார்கள்.

92. "ஆரோனே, அவர்கள் வழிகெட்டு விட்டார்கள் என்பதைக் கண்டபோது 93. என்னைப் பின்பற்றுவதைவிட்டும் உம்மைத் தடுத்தது எது? என் கட்டளைக்கு மாறுசெய்து விட்டீரா?" என்று மோசே கேட்டார். 94. அதற்கு ஆரோன், "என் தாயின் மகனே! நீர் என் தாடியையோ, தலையையோ பிடித்து இழுக்காதீர். 'என் பேச்சைப் பொருட்படுத்தாமல் இஸ்ராயீலின் மக்களிடையே நீ பிரிவினையை ஏற்படுத்தி விட்டாய்' என்று நீர் கூறி விடுவீர் என்றுதான் அஞ்சினேன்" என்று கூறினார்.

95. "ஸாமிரியே, உன் விவகாரம் என்ன?" என்று மோசே கேட்டார். 96. அதற்கு அவன், "அவர்கள் காணாத ஒன்றை நான் கண்டேன். எனவே நான் தூதரின் காலடியிலிருந்து ஒரு பிடி மண்ணை எடுத்து அதன்மீது எறிந்து விட்டேன். இவ்வாறே என் மனம் என்னைத் தூண்டியது" என்று கூறினான். 97. அதற்கு

மோசே, “சென்றுவிடு. இனி வாழ்நாள் முழுவதும் நீ ‘என்னைத் தீண்டாதே’ என்றுதான் கூற வேண்டும். உனக்காக இன்னொரு வாக்குறுதியும் உண்டு. அதிலிருந்து நீ தப்ப முடியாது. நீ வணங்கிக் கொண்டிருந்த தெய்வத்தைப் பார். நாம் அதனை எரித்து பின்னர் கடலில் வீசி விடுவோம்” என்று கூறினார். 98. உங்கள் இறைவன் அல்லாஹ்தான். அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. அவனது அறிவு அனைத்தையும் உள்ளடக்கியுள்ளது.

99. இவ்வாறே முன் சென்றவர்களுடைய வரலாற்றை நாம் உமக்கு எடுத்துரைக்கிறோம். நம் புறத்திலிருந்து ஒரு நினைவூட்டலையும் உமக்கு வழங்கியுள்ளோம். 100. அதனைப் புறக்கணிப்பவர் மறுமைநாளில் பெரும் பாரத்தைச் சுமப்பார். 101. அதில் அவர்கள் நிரந்தரமாக வீழ்ந்து கிடப்பார்கள். மறுமைநாளில் அது அவர்களுக்கு மிகவும் கெட்ட சுமையாக இருக்கும். 102. எக்காளம் ஊதப்படும் நாளில் குற்றவாளிகளை நாம் ஒன்று திரட்டுவோம். அப்போது அவர்களின் கண்கள் பயத்தினால் நீலம் பூத்திருக்கும். 103. “நீங்கள் வெறும் பத்து நாட்கள்தான் இருந்திருப்பீர்கள்” என்று அவர்கள் தங்களுக்குள் மெதுவாகப் பேசிக்கொள்வார்கள். 104. அவர்கள் கூறுவதை நாம் நன்கறிவோம். அவர்களில் அதிக அறிவுடையவர், “நீங்கள் ஒரு நாள்தான் உலகில் தங்கியிருந்திருப்பீர்கள்” என்று கூறுவார்.

105. மக்கள் மலைகளைப் பற்றி உம்மிடம் கேட்கிறார்கள். நீர் கூறும்: “என் இறைவன் அவற்றைத் தூள் தூளாக்கி விடுவான். 106. பூமியை வெட்டவெளியாக்கி விடுவான். 107. அதில் எவ்வித மேடு பள்ளத்தையும் நீர் காண மாட்டீர்”. 108. அந்நாளில் அனைவரும் அழைப்பாளரின் பின்னால் செல்வார்கள். யாரும் அங்கிருந்து தப்பிவிட முடியாது. கருணைமிக்க இறைவனுக்கு முன்னால்

எல்லா ஓசைகளும் ஒடுங்கிவிடும். சிறு முணுமுணுப்பைத்தவிர வேறு எதையும் நீர் செவியுறமாட்டீர்.

*109.* அந்நாளில் கருணைமிக்க இறைவன் எவருக்கு அனுமதி அளித்து அவரது பேச்சைக் கேட்க விரும்புவானோ அவரைத்தவிர, வேறு எவரது பரிந்துரையும் பயனளிக்காது. *110.* அவன் அவர்களுக்கு முன்னுள்ளதையும், பின்னுள்ளதையும் நன்கறிகிறான். ஆனால் அவர்கள் தங்களுடைய அறிவால் அவனைச் சூழ்ந்தறிய முடியாது. *111.* என்றும் நிலைத்திருக்கும் நிலையானவனின் முன்னால் மக்கள் அனைவரும் பணிந்திருப்பார்கள். அநியாயத்தைச் சுமந்தவன் தோல்வியடைந்து விட்டான். *112.* ஆயினும் நம்பிக்கைகொண்ட நிலையில் நற்செயல் புரிந்தவர் தீங்கையோ, அநியாயத்தையோ அஞ்ச மாட்டார்".

*113.* இவ்வாறே நாம் இந்த குர்ஆனை அரபி மொழியில் அருளியுள்ளோம். மக்கள் இறையச்சமுடையோராகும்பொருட்டு அல்லது நல்லுணர்ச்சி பெறும்பொருட்டு இதில் எல்லாவகையான எச்சரிக்கைகளையும் நாம் வழங்கியுள்ளோம். *114.* எனவே உண்மையான அரசனாகிய அல்லாஹ் மிக உயர்ந்தவன். அவன் உமக்கு அறிவிப்பவை நிறைவடைவதற்கு முன்பே நீர் குர்ஆனைப் பெறுவதற்கு அவசரப்பட வேண்டாம். நீர் கூறும், "என் இறைவா! என் அறிவை அதிகப்படுத்துவாயாக!".

*115.* நாம் முன்னரே ஆதமுக்கு கட்டளையிட்டிருந்தோம். ஆனால் அவர் அதனை மறந்து விட்டார். அவரிடம் நாம் உறுதியைக் காணவில்லை. *116.* 'ஆதமுக்கு சிரம்பணியுங்கள்' என்று நாம் வானவர்களிடம் கூறியபோது இப்லீஸைத்தவிர அவர்கள் அனைவரும் சிரம் பணிந்தார்கள். அவன் மறுத்து விட்டான். *117.* நாம் கூறினோம்: "ஆதமே! இவன் உமக்கும், உம்

மனைவிக்கும் பகைவனாவான். ஆகவே இவன் உங்கள் இருவரையும் சொர்க்கத்திலிருந்து வெளியேற்றி விடக்கூடாது. அப்போது நீங்கள் இன்னலுக்கு ஆளாகி விடுவீர்கள். **118.** இங்கே உங்களுக்குப் பசி இருக்காது. நீங்கள் நிர்வாணமாகவும் ஆக மாட்டீர்கள். **119.** இங்கே நீங்கள் தாகிக்க மாட்டீர்கள். வெயிலும் உங்கள்மீது படாது".

**120.** ஆயினும் சாத்தான் அவர்களை வழிகெடுத்து விட்டான். 'ஆதமே நிலையான மரத்தையும், அழிவில்லா அரசாட்சியையும் நான் உமக்கு அறிவிக்கட்டுமா?' என்று அவன் கேட்டான். **121.** அவர்கள் இருவரும் அம்மரத்தின் கனியைப் புசித்து விட்டார்கள். உடனே அவ்விருவரின் வெட்கத்தலங்களும் பரஸ்பரம் வெளிப்பட்டன. இருவரும் சொர்க்கத்தின் இலைகளைக்கொண்டு தங்களை மறைக்க முனைந்தார்கள். தன் இறைவனின் கட்டளைக்கு மாறுசெய்ததால் ஆதம் வழிதவறி விட்டார். **122.** பின்னர் அவரது இறைவன் அவரைத் தேர்ந்தெடுத்துக் கொண்டான். அவரது பாவமன்னிப்பை ஏற்று அவருக்கு நேர்வழியும் காட்டினான்.

**123.** இறைவன் கூறினான்: "நீங்கள் இருவரும் இங்கிருந்து இறங்கி விடுங்கள். நீங்கள் ஒருவருக்கொருவர் பகைவர்களாக இருப்பீர்கள். என்னிடமிருந்து உங்களுக்கு வழிகாட்டல் வரும்போது என் வழிகாட்டலைப் பின்பற்றுபவர் வழிதவறவும் மாட்டார், ஏமாறவும் மாட்டார். **124.** என் நினைவூட்டலைப் புறக்கணிப்பவனுக்கு நெருக்கடியான வாழ்வுதான் உண்டு. மறுமைநாளில் நாம் அவனைக் குருடனாகத்தான் எழுப்புவோம்". **125.** "என் இறைவனே, நீ என்னை ஏன் குருடனாக எழுப்பினாய்? நானோ பார்வையுள்ளவனாக இருந்தேனே?" என்று அவன் கேட்பான். **126.** அதற்கு இறைவன், "இவ்வாறே நம் சான்றுகள் உன்னிடம் வந்தபோது அவற்றை நீ பொருட்படுத்தவில்லை. அவ்வாறே நீயும் இன்று பொருட்படுத்தப்பட மாட்டாய்" என்று

*கூறுவான். 127. வரம்புமீறி நம் சான்றுகளை நம்பாதோருக்கு இவ்வாறுதான் நாம் கூலி வழங்குகிறோம். மறுமையின் வேதனையோ மிகக் கடுமையானது. நீடித்து நிற்கக்கூடியது.*

*128. இவர்களுக்கு முன்னர் எத்தனையோ சமூகங்களை நாம் அழித்திருக்கின்றோம் என்பதிலிருந்து இவர்கள் படிப்பினை பெறவில்லையா? இவர்கள் அவர்களின் ஊர்களில்தான் நடக்கிறார்கள். நிச்சயமாக இதில் அறிவுடையோருக்குப் பெரும் சான்றுகள் இருக்கின்றன. 129. உம் இறைவனிடமிருந்து முன்னரே ஒரு விஷயம் முடிவாகாமலும், குறிப்பிட்ட தவணை நிர்ணயிக்கப்படாமலும் இருந்திருந்தால் நிச்சயமாக அவர்களின் முடிவு தீர்மானிக்கப்பட்டிருக்கும். 130. எனவே அவர்கள் கூறுவதைப் பொறுத்துக்கொள்ளும். சூரியன் உதிப்பதற்கு முன்பும், அது மறைவதற்கு முன்பும், உம் இறைவனைப் போற்றிப் புகழ்வீராக. இரவு நேரங்களிலும், பகலின் ஓரங்களிலும் அவனைத் துதிப்பீராக. அதனால் நீர் திருப்தியடையலாம்.*

*131. அவர்களில் சிலருக்கு அவர்களைச் சோதிக்கும்பொருட்டு நாம் வழங்கியிருக்கும் உலகியல் வசதிகளை ஏறெடுத்தும் பார்க்காதீர். உம் இறைவன் வழங்கியிருப்பதுதான் மிகச் சிறந்தது; என்றும் நிலையானது. 132. தொழுகையைப் பேணுமாறு உம் குடும்பத்தாரை ஏவுவீராக. அதன்மீது நீரும் உறுதியாக இருப்பீராக. நாம் உம்மிடம் எதையும் கேட்கவில்லை. நாமே உமக்கு அனைத்தையும் அளிக்கிறோம். சிறந்த முடிவு இறையச்சத்திற்கே.*

*133. அவர் தம் இறைவனிடமிருந்து ஏதேனும் ஒரு சான்றை ஏன் கொண்டு வரவில்லை என்று அவர்கள் கேட்கிறார்கள். முந்தைய வேதங்களில் உள்ள ஆதாரம் ஏதும் அவர்களிடம் வரவில்லையா? 134. நாம் முன்னரே அவர்களை வேதனையால்*

*அழித்திருந்தால் "எங்கள் இறைவா! எங்களிடம் ஒரு தூதரை அனுப்பியிருக்கக்கூடாதா? நாங்கள் இழிவுக்கும் அவமானத்திற்கும் ஆளாவதற்கு முன்பே உன் சான்றுகளைப் பின்பற்றி இருப்போமே?" என்று கூறுவார்கள். **135.** நீர் கூறும்: "ஒவ்வொருவரும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். எனவே நீங்களும் எதிர்பாருங்கள். நேர்வழி உடையவர் யார்? இலக்கினை அடைந்தவர் யார்? என்பதை விரைவில் அறிந்து கொள்வீர்கள்".*

## *21.* இறைத்தூதர்கள் (அல்அன்பியா)

**அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....**

*1. மனிதர்களுக்கு விசாரணைக்கான நேரம் நெருங்கி விட்டது. ஆயினும் அவர்கள் கவனமற்றுப் புறக்கணித்துக் கொண்டிருக்கிறார்கள். **2.** அவர்களுடைய இறைவனிடமிருந்து புதிதாக எந்தவொரு அறிவுரை வந்தாலும் அதனை விளையாட்டாக எடுத்துக் கொள்கிறார்கள். **3.** அவர்களின் உள்ளங்கள் அலட்சியத்தில் ஆழ்ந்து கிடக்கின்றன. இந்த அநியாயக்காரரர்கள் தங்களிடையே இரகசியமாக "இவர் உங்களைப்போன்ற ஒரு மனிதர்தானே. நீங்கள் பார்த்துக்கொண்டே சூனியத்தில் விழுந்து விடுகிறீர்களா?" என்று பேசிக்கொள்கிறார்கள். 4. "வானத்திலும் பூமியிலும் பேசப்படும் அனைத்தையும் என் இறைவன் நன்கறிவான். அவன் செவியேற்பவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான்" என்று தூதர் கூறினார்.*

*5. அவர்கள், 'இவை குழப்பமான கனவுகள்'. இல்லை, 'இவரே இதனைப் புனைந்துள்ளார்'. இல்லை, 'இவர் ஒரு கவிஞர்' என்றெல்லாம் கூறி 'முற்காலத் தூதர்கள் சான்றுகளுடன் அனுப்பப்பட்டவாறு இவரும் நம்மிடம் ஒரு சான்றினைக் கொண்டு வரட்டும்' என்று கூறுகிறார்கள். **6.** இவர்களுக்கு முன்னர்*

*நாம் அழித்துவிட்ட ஊரிலிருந்த மக்களில் எவரும் நம்பிக்கை கொள்ளவில்லை. இவர்கள் நம்பிக்கை கொள்ளப் போகிறார்களா என்ன?*

*7. உமக்கு முன்னரும் நாம் மனிதர்களையே தூதர்களாக்கி அவர்களுக்கு இறைச்செய்தியை அறிவித்தோம். நீங்கள் அறியாதவர்களாக இருந்தால் வேதக்காரர்களிடம் கேட்டுப் பாருங்கள். 8. நாம் அவர்களுக்கு உணவு தேவைப்படாத உடலை அளிக்கவில்லை. அவர்கள் (பூமியில்) நிரந்தரமானவர்களாகவும் இருக்கவில்லை. 9. பின்னர் நாம் அவர்களுக்கு அளித்த வாக்குறுதியை நிறைவேற்றினோம். எனவே நாம் அவர்களையும், நாம் நாடியோரையும் காப்பாற்றினோம். வரம்பு மீறியோரை அழித்து விட்டோம்.*

*10. நிச்சயமாக உங்களுக்கு ஒரு வேதத்தை அருளியுள்ளோம். அதில் உங்களைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது. நீங்கள் புரிந்துகொள்ள மாட்டீர்களா? 11. அக்கிரமக்காரர்களாக எத்தனையோ ஊரிலிருந்த மக்களை நாம் அழித்து விட்டோம். அவர்களுக்குப்பின் வேறொரு சமூகத்தை உருவாக்கினோம். 12. நம் வேதனை வருவதை அவர்கள் உணர்ந்தபோது அங்கிருந்து ஓட ஆரம்பித்தார்கள். 13. ஓடாதீர்கள். உங்கள் ஆடம்பர வாழ்க்கையின் பக்கமும், நீங்கள் வசித்த இல்லங்களின் பக்கமும் செல்லுங்கள். நீங்கள் விசாரிக்கப்படலாம் (என்று கூறினோம்). 14. அதற்கு அவர்கள், “அந்தோ, எங்கள் கேடே! நிச்சயமாக நாங்கள் அக்கிரமக்காரர்களாக இருந்தோம்” என்று கூக்குரலிட்டார்கள். 15. நாம் அவர்களை அறுவடை செய்யப்பட்ட வயலைப் போன்றும், அணைந்துவிட்ட நெருப்பைப் போன்றும் ஆக்கும்வரை அவ்வாறே அவர்கள் கூப்பாடு போட்டுக்கொண்டிருந்தார்கள்.*

*16.* நாம் வானத்தையும், பூமியையும், அவற்றிற்கிடையே உள்ளவற்றையும் விளையாட்டாகப் படைக்கவில்லை. *17.* நாம் அதனை கேளிக்கையாக எடுத்துக்கொள்ள நாடி அவ்வாறு செய்பவர்களாக இருந்தால் அதனை நம்மிடமிருந்தே எடுத்திருப்போம். *18.* மாறாக நாம் சத்தியத்தால் அசத்தியத்தை அடிக்கின்றோம். அது அசத்தியத்தின் தலையை உடைத்து விடுகிறது; அசத்தியம் அழிந்து விடுகிறது. நீங்கள் கூறுபவற்றினால் உங்களுக்குக் கேடுதான்.

*19.* வானங்களிலும், பூமியிலும் உள்ளவை அவனுக்கே உரியன. அவனிடம் உள்ளவர்கள் அவனை வணங்குவதைவிட்டு கர்வம் கொள்வதுமில்லை; களைத்துப்போவதுமில்லை. *20.* அவர்கள் இரவும் பகலும் சோர்வடையாமல் அவனைப் புகழ்ந்துகொண்டே இருக்கிறார்கள்.

*21.* அவர்கள் பூமியிலிருந்து உருவாக்கிக்கொண்ட தெய்வங்களால் யாரையேனும் உயிர்கொடுத்து எழுப்ப முடியுமா? *22.* வானங்களிலும், பூமியிலும் அல்லாஹ்வைத்தவிர வேறு தெய்வங்கள் இருந்திருந்தால் அவை அழிந்தே போயிருக்கும். அவர்கள் கூறுவதைவிட்டும் அரியணையின் அதிபதியாகிய அல்லாஹ் மிகவும் தூய்மையானவன். *23.* அவனது செயல் குறித்து அவன் கேட்கப்பட மாட்டான். ஆயினும் அவர்களே (அவனால்) விசாரிக்கப்படுவார்கள்.

*24.* அவர்கள் அவனைத்தவிர மற்றவர்களை தெய்வமாக்கிக் கொண்டார்களா? நீர் கேளும்: “உங்கள் சான்றினைக் கொண்டு வாருங்கள். இதுவே என்னுடன் இருப்பவர்களுக்கும் கூறப்பட்டுள்ளது. எனக்கு முன் இருந்தவர்களுக்கும் கூறப்பட்டது”. என்றபோதிலும் அவர்களில் பெரும்பாலோர் உண்மையை அறிய மாட்டார்கள்.

அதனால் அவர்கள் புறக்கணித்துக் கொண்டிருக்கிறார்கள். **25.** உமக்கு முன் நாம் அனுப்பி வைத்த அனைத்துத் தூதர்களுக்கும் ‘என்னைத்தவிர வேறு இறைவன் இல்லை. என்னையே வணங்குங்கள்’ என்றே அறிவித்திருந்தோம்.

**26.** “கருணைமிக்க இறைவன் மகனை ஏற்படுத்திக்கொண்டான்” என்று அவர்கள் கூறுகிறார்கள். அவன் தூய்மையானவன். வானவர்களோ கண்ணியமிக்க அடியார்களாவர். **27.** அவர்கள் அவனை மீறிப் பேச மாட்டார்கள். அவனது கட்டளைப்படியே செயல்படுவார்கள். **28.** அவர்களுக்கு முன்னுள்ளதையும், பின்னுள்ளதையும் அவன் நன்கறிவான். அவனது விருப்பமின்றி யாருக்கும் அவர்கள் பரிந்து பேசமாட்டார்கள். அவனது அச்சத்தால் அவர்கள் நடுங்கிக் கொண்டிருப்பார்கள். **29.** அவர்களில் யாராவது ‘அவனன்றி நான்தான் இறைவன்’ என்று கூறினால் நரகத்தையே நாம் அவனுக்குத் தண்டனையாக அளிப்போம். இவ்வாறே நாம் அநியாயக்காரர்களைத் தண்டிக்கிறோம்.

**30.** ‘வானங்களும் பூமியும் இணைந்திருந்தன. நாம்தான் அவற்றைப் பிரித்தோம் என்பதையும் உயிருள்ள ஒவ்வொரு பொருளையும் நீரிலிருந்தே நாம் உருவாக்கினோம்’ என்பதையும் நிராகரிப்பாளர்கள் கவனிக்கவில்லையா? அவர்கள் நம்பிக்கை கொள்ளமாட்டார்களா?

**31.** பூமி அவர்களுடன் சாய்ந்து விடாதிருக்க நாம் அதில் மலைகளை நாட்டினோம். மக்கள் அறிந்துகொள்ளும்பொருட்டு அதில் விசாலமான பாதைகளையும் ஏற்படுத்தினோம். **32.** வானத்தைப் பாதுகாப்பான கூரையாக்கியுள்ளோம். ஆயினும் அவர்கள் அதன் சான்றுகளைப் புறக்கணித்த நிலையிலேயே இருக்கிறார்கள். **33.** அவனே இரவையும், பகலையும், சூரியனையும்,

சந்திரனையும் படைத்தான். ஒவ்வொன்றும் ஒரு வட்டப்பாதையில் நீந்திக் கொண்டிருக்கிறது.

**34.** உமக்கு முன்னர் எந்த மனிதனுக்கும் நிரந்தர வாழ்வை நாம் அளிக்கவில்லை. நீர் இறந்துவிட்டால் அவர்கள்மட்டும் நிரந்தரமாக இருப்பார்களா என்ன? **35.** ஒவ்வொரு மனிதனும் மரணத்தை சுவைத்தே தீருவான். நன்மையையும் தீமையையும் சோதனையாகக்கொண்டு உம்மை சோதிக்கிறோம். நீங்கள் அனைவரும் நம் பக்கமே கொண்டு வரப்படுவீர்கள்.

**36.** நிராகரிப்பாளர்கள் உம்மைக் கண்டால் “உங்கள் தெய்வங்களைப் பற்றி கூறுபவர் இவர்தானா?” என்று (தங்களுக்குள்) பரிகாசமாக எடுத்துக் கொள்கிறார்கள். அவர்கள் கருணைமிக்க இறைவனின் அறிவுரைகளை மறுப்பவர்கள்.

**37.** மனிதன் அவசரக்காரனாகப் படைக்கப்பட்டுள்ளான். விரைவில் என் சான்றுகளை உங்களுக்குக் காண்பிப்பேன். எனவே என்னிடம் அவசரப்படாதீர்கள். **38.** ‘நீங்கள் உண்மையாளர்களாயின் இந்த எச்சரிக்கை எப்போது வரும்’ என்று அவர்கள் கேட்கிறார்கள். **39.** அந்தோ! தங்கள் முகங்களையும், முதுகுகளையும் நெருப்பைவிட்டு தடுக்க முடியாத அச்சமயத்தை நிராகரிப்பாளர்கள் அறிந்துகொள்ள வேண்டுமே! அப்போது அவர்களுக்கு எங்கிருந்தும் உதவி கிடைக்காது. **40.** மாறாக அது திடீரென அவர்களிடம் வந்து அவர்களை திகைக்கச் செய்து விடும். அதனை அவர்களால் தடுக்கவும் முடியாது. அவர்களுக்கு அவகாசமும் அளிக்கப்படாது. **41.** உமக்கு முன் வந்த தூதர்களும் பரிகசிக்கப்பட்டார்கள். ஆயினும் அவர்களில் பரிகாசம் செய்தவர்களை அவர்கள் எதைக்குறித்துப் பரிகாசம் செய்தார்களோ அதுவே சூழ்ந்து கொண்டது.

*42.* நீர் கேளும்: "இரவிலும், பகலிலும் கருணைமிக்க இறைவனின் தண்டனையிலிருந்து உங்களைப் பாதுகாப்பவன் யார்?''. எனினும் தம் இறைவனின் அறிவுரையைவிட்டும் அவர்கள் முகம் திருப்பிக்கொள்கிறார்கள். *43.* நமக்கெதிராக அவர்களைப் பாதுகாக்கும் வேறு தெய்வங்கள் அவர்களுக்கு இருக்கின்றனவா? அவற்றால் தம்மைக்கூடப் பாதுகாத்துக்கொள்ள முடியாது. நமக்கெதிராக எவரும் அவர்களுக்குத் துணைபோக மாட்டார்கள்.

*44.* அவர்களுக்கும், அவர்களின் முன்னோர்களுக்கும் நாம் உலகியல் வசதிகளை வழங்கினோம். அதேநிலையில் அவர்களின் ஆயுளும் நீண்டுவிட்டது. ஆயினும் நாம் பூமியை அதன் ஓரங்களிலிருந்து குறைத்துக்கொண்டே வருகிறோம் என்பதை அவர்கள் கவனிக்கவில்லையா? இவர்களா வெற்றி பெறக்கூடியவர்கள்?

*45.* நீர் கூறும்: "இறைச்செய்தியைக் கொண்டுதான் நான் உங்களை எச்சரிக்கிறேன். ஆயினும் செவிடர்கள் எச்சரிக்கப்பட்டால் (எச்சரிக்கை) அழைப்பைச் செவியுற மாட்டார்கள்". *46.* உம் இறைவனுடைய வேதனையில் சிறிதளவு அவர்களைத் தீண்டிவிட்டால்கூட, 'அந்தோ! எங்கள் கேடே! நிச்சயமாக நாங்கள் அநியாயக்காரர்களாக இருந்தோம்' என்று கூறுவார்கள்.

*47.* மறுமைநாளில் நாம் நியாயமான தராசை நிறுவுவோம். எனவே எந்த உயிரின்மீதும் சிறிதளவுகூட அநீதி இழைக்கப்படாது. கடுகளவு செயலை ஒருவர் புரிந்திருந்தாலும் அதையும் நாம் கொண்டு வருவோம். விசாரணை செய்வதற்கு நாமே போதுமானவர்களாவோம்.

48. நாம் மோசேவுக்கும் ஆரோனுக்கும் பகுத்தறியக்கூடியதையும், ஒளியையும், இறையச்சமுடையோருக்கு அறிவுரையையும் வழங்கினோம். 49. அவர்கள் கண்ணால் காணாமலேயே தம் இறைவனை அஞ்சுகிறார்கள். மறுமையைக் குறித்தும் அச்சம் கொள்கிறார்கள். 50. அருள்வளம் நிறைந்த இந்த அறிவுரையை நாமே அருளியுள்ளோம். நீங்கள் இதனை மறுக்கிறீர்களா?

51. இதற்கு முன்னர் ஆப்ரஹாமுக்கு அவருக்கான வழிகாட்டுதலை வழங்கியிருந்தோம். அவருடைய தகுதியை நாம் நன்கு அறிந்திருந்தோம். 52. அவர் தம் தந்தையிடமும் சமூகத்திடமும் “நீங்கள் வணங்கிவரும் இச்சிலைகள் என்ன?” என்று கேட்டபோது 53. அவர்கள், “எங்கள் முன்னோர்களை இவற்றை வணங்குபவர்களாகவே கண்டோம்'' என்று கூறினார்கள். 54. அதற்கு அவர், “நிச்சயமாக நீங்களும், உங்கள் முன்னோர்களும் தெளிவான வழிகேட்டில்தான் இருக்கிறீர்கள்” என்று கூறினார்.

55. அதற்கு அவர்கள், “நீ எங்களிடம் உண்மையைத்தான் கொண்டு வந்துள்ளாயா அல்லது கேலி செய்கின்றாயா?” என்று கேட்டார்கள். 56. அதற்கு அவர், “அப்படியல்ல. வானங்கள் மற்றும் பூமியின் இறைவன்தான் உங்கள் இறைவன். அவற்றை அவனே படைத்தான். அதற்கு சாட்சி கூறுவோரில் நானும் ஒருவனாக இருக்கின்றேன். 57. அல்லாஹ்வின்மீது ஆணையாக நீங்கள் திரும்பிச்சென்றபின் உங்கள் சிலைகளுக்கெதிராக நான் ஒரு திட்டம் தீட்டுவேன்” என்று கூறினார். 58. அவர்கள் பெரிய சிலையின் பக்கம் திரும்பி வரக்கூடும் என்பதனால் அச்சிலைகளில் அதனைத்தவிர மற்றவை அனைத்தையும் அவர் துண்டு துண்டாக்கி விட்டார்.

59. “நம் தெய்வங்களை இப்படிச் செய்தது யார்? நிச்சயம் அவன் அநியாயக்காரனாவான்” என்று அவர்கள் கூறினார்கள்.

*60.* சிலர், “ஒரு இளைஞர் இவற்றைக் குறித்துப் பேசுவதை நாங்கள் கேட்டிருக்கிறோம். அவர் ஆப்ரஹாம் என்று அழைக்கப்படுகிறார்”, என்று கூறினார்கள். *61.* “அவரை மக்கள் பார்க்கும்படி அவர்கள் முன்னிலையில் கொண்டு வாருங்கள்”, என்று அவர்கள் கூறினார்கள். *62.* “ஆப்ரஹாமே! எங்கள் தெய்வங்களுடன் நீயா இவ்வாறு நடந்து கொண்டாய்?” என்று அவர்கள் கேட்டார்கள். *63.* அதற்கு அவர், “இல்லை. அவற்றில் பெரியதுதான் இவ்வாறு செய்தது. அவை பேசக்கூடியவையாக இருந்தால் அவைகளிடமே கேட்டுப் பாருங்கள்” என்று கூறினார்.

*64.* அவர்கள் தாமே சிந்தித்து, ‘நீங்கள்தான் அநியாயக்காரர்கள்’ என்று (தங்களையே) கூறிக்கொண்டார்கள். *65.* பின்னர் அவர்கள் தலைகுனிந்தவாறு, “ஆப்ரஹாமே, இவை பேசமாட்டா என்பது உமக்குத் தெரியும்தானே?” என்று கேட்டார்கள். *66.* அதற்கு அவர், “அல்லாஹ்வைவிடுத்து உங்களுக்கு எவ்வித பலனையோ, தீங்கையோ அளிக்க இயலாதவற்றையா நீங்கள் வணங்குகிறீர்கள்? *67.* அந்தோ பரிதாபம், உங்களுக்கும் அல்லாஹ்வைவிடுத்து நீங்கள் வணங்குகின்ற தெய்வங்களுக்கும். நீங்கள் புரிந்துகொள்ள மாட்டீர்களா?” என்று கேட்டார்.

*68.* அதற்கு அவர்கள், “நீங்கள் ஏதேனும் செய்வதாக இருந்தால் இவரை நெருப்பிலிட்டு எரித்து உங்கள் தெய்வங்களுக்கு உதவி புரியுங்கள்” என்று கூறினார்கள். *69.* நாம் கூறினோம்: “நெருப்பே! நீ ஆப்ரஹாமுக்கு குளிர்ச்சியாகவும், சாந்தமாகவும் ஆகிவிடு”. *70.* அவர்கள் அவருக்குத் தீங்கிழைக்க நாடினார்கள். ஆனால் நாம் அவர்களை இழப்பிற்குள்ளாக்கி விட்டோம்.

*71.* நாம் அவரையும் லோத்தையும் காப்பாற்றி உலகமக்கள் அனைவருக்கும் நாம் அருள்புரிந்துள்ள பூமியின்பக்கம் கொண்டு

சேர்த்தோம். 72. நாம் அவருக்கு ஈசாக்கையும் கூடுதலாக ஜேக்கபையும் வழங்கினோம். அவர்கள் அனைவரையும் நல்லோர்களாகவும் ஆக்கினோம். 73. நாம் அவர்களைத் தலைவர்களாக்கினோம். அவர்கள் நமது கட்டளைப்படி மக்களுக்கு வழிகாட்டிக் கொண்டிருந்தார்கள். நாம் அவர்களுக்கு நற்செயல்கள் புரியுமாறும், தொழுகையைக் கடைப்பிடிக்குமாறும், கடமையாக்கப்பட்ட தர்மத்தை அளிக்குமாறும் கட்டளையிட்டோம். அவர்கள் நம்மை வணங்குவோராகவே இருந்தார்கள்.

74. லோத்திற்கு மதிநுட்பத்தையும், அறிவையும் வழங்கினோம். அருவருப்பான காரியங்களில் ஈடுபட்டு வந்த ஊரிலிருந்த மக்களிடமிருந்தும் அவரைக் காப்பாற்றினோம். நிச்சயமாக அவர்கள் மிகவும் தீயவர்களாகவும் பாவிகளாகவும் இருந்தார்கள். 75. நாம் அவரை நம் கருணைக்குள் நுழையச் செய்தோம். நிச்சயமாக அவர் நல்லவராக இருந்தார்.

76. இதற்கு முன்னர் நோவா அழைத்தபோது நாம் அவரது பிரார்த்தனையை ஏற்று அவரையும், அவரது குடும்பத்தினரையும் பெரும் துன்பத்திலிருந்து காப்பாற்றினோம். 77. நம் சான்றுகளை மறுத்தவர்களுக்கெதிராக நாம் அவருக்கு உதவி புரிந்தோம். நிச்சயமாக அவர்கள் மிகவும் தீயவர்களாக இருந்தார்கள். எனவே நாம் அவர்கள் அனைவரையும் மூழ்கடித்து விட்டோம்.

78. தாவீதும் சாலமனும் சிலருடைய ஆடுகள் இரவில் புகுந்து மேய்ந்துகொண்டிருந்த வயலைப்பற்றி தீர்ப்பளித்துக் கொண்டிருந்தபோது நாம் அவர்களின் தீர்ப்பை கவனித்துக் கொண்டிருந்தோம். 79. நாம் இருவருக்கும் மதிநுட்பத்தையும், அறிவையும் வழங்கியிருந்தபோதும் சாலமனுக்கு அதைப்பற்றிய சரியான புரிதலை வழங்கினோம். நாம் தாவீதுக்கு மலைகளையும்,

பறவைகளையும் வசப்படுத்தித் தந்தோம். அவை அவருடன் சேர்ந்து (நம்மைத்) துதிபாடிக் கொண்டிருந்தன. இவற்றையெல்லாம் நாமே செய்வோராக இருந்தோம். *80.* போரிலிருந்து உங்களைப் பாதுகாக்கும் கவசஆடை செய்யும் கலையை அவருக்குக் கற்றுக் கொடுத்தோம். நீங்கள் நன்றி செலுத்துவீர்களா?

*81.* நாம் சாலமனுக்கு வேகமான காற்றை வசப்படுத்தித் தந்தோம். அது அவரது கட்டளைப்படி நாம் அருள்புரிந்திருந்த பூமியில் வீசிக்கொண்டிருந்தது. நாம் ஒவ்வொரு பொருளையும் அறிந்தோராக இருக்கிறோம். *82.* சாத்தான்களில் சிலவற்றையும் நாம் அவருக்கு வசப்படுத்தித் தந்தோம். அவை அவருக்காக முத்துக்குளிப்பவையாகவும், வேறு பல காரியங்களை செய்யக்கூடியவையாகவும் இருந்தன. நாம் அவர்களை கண்காணிப்போராக இருந்தோம்.

*83.* அய்யூபையும் நினைவுகூரும்: அவர் தம் இறைவனிடம், “நோய் என்னைப் பீடித்து விட்டது. நீயே கருணையாளர்களில் எல்லாம் மாபெரும் கருணையாளனாக இருக்கின்றாய்!” என்று இறைஞ்சியபோது *84.* நாம் அவரது பிரார்த்தனையை ஏற்று அவரது துன்பத்தைப் போக்கி விட்டோம். நாம் அவருக்கு அவரது குடும்பத்தையும் அவர்களுடன் அவர்களைப் போன்றவர்களையும் வழங்கினோம். இது நம்மிடமிருந்து வந்துள்ள கருணையாகவும், வழிபடுவோருக்கு நினைவூட்டலாகவும் இருக்கின்றது.

*85.* இஸ்மவேலையும், இத்ரீஸையும், துல்கிஃப்லையும் நினைவுகூரும். அவர்கள் அனைவரும் பொறுமையாளர்களாக இருந்தார்கள். *86.* நாம் அவர்களை நம் கருணைக்குள் நுழையச் செய்தோம். அவர்கள் அனைவரும் நல்லோர்களாக இருந்தார்கள்.

*87.* மீன் வயிற்றில் இருந்தவர் (ஜோனா) தம் சமூகத்தைக் கோபித்துக் கொண்டு சென்றபோது நாம் அவரைத் தண்டிக்க மாட்டோம் என எண்ணிக் கொண்டார். பின்னர் இருளில் சிக்கிக்கொண்ட அவர், "உன்னைத்தவிர வேறு இறைவனில்லை. நீ தூயவன். நிச்சயமாக நானே அநியாயக்காரன்" என்று இறைஞ்சினார். *88.* நாம் அவரது பிரார்த்தனையை ஏற்று அத்துன்பத்திலிருந்து அவரை விடுவித்தோம். இவ்வாறே நாம் நம்பிக்கையாளர்களைக் காப்பாற்றுகிறோம்.

*89.* ஜகரிய்யா தம் இறைவனிடம் "என் இறைவா! என்னைத் தனியாக (சந்ததியற்றவனாக) விட்டுவிடாதே. நீயே மிகச்சிறந்த வாரிசாவாய்" என்று இறைஞ்சியபோது *90.* நாம் அவரது பிரார்த்தனையை ஏற்று அவருக்கு (ஜான்) யஹ்யாவை அளித்தோம். அவரது மனைவியையும் (குழந்தைப் பேற்றுக்குத்) தகுதியுடையவளாக்கினோம். இவர்கள் நன்மையின்பக்கம் விரைபவர்களாகவும் ஆர்வத்துடனும், அச்சத்துடனும் நம்மை அழைப்பவர்களாகவும் இருந்தார்கள். நம் முன்னால் பணிபவர்களாகவும் இருந்தார்கள்.

*91.* தம் கற்பைப் பாதுகாத்துக்கொண்ட அப்பெண்மணியையும் நினைவுகூர்வீராக. நாம் அவளுக்குள் நம் ஆன்மாவை ஊதினோம். அவளையும் அவளது மகனையும் உலக மக்களுக்கு ஒரு சான்றாக ஆக்கினோம்.

*92.* உங்களது இந்தச் சமூகம் ஒரே சமூகம்தான். நானே உங்கள் இறைவன். எனவே என்னையே வணங்குங்கள். *93.* ஆயினும் அவர்கள் தங்கள் மார்க்க விவகாரத்தில் தங்களிடையே பிளவுபட்டார்கள். அனைவரும் நம்மிடமே திரும்பி வரக்கூடியவர்கள். *94.* எவர் நம்பிக்கைகொண்டு நற்காரியங்கள் புரிகின்றாரோ அவரது

முயற்சி ஒருபோதும் வீண் போகாது. அதனை நாம் எழுதிக் கொள்கிறோம்.

*95.* நாம் அழித்த ஊரிலிருந்த மக்கள் திரும்பிவருவது தடுக்கப்பட்டு விட்டது. *96.* ஆயினும் யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினர் திறந்து விடப்படும்போது அவர்கள் ஒவ்வொரு உயரமான இடங்களிலிருந்தும் பரவிவிடுவார்கள். *97.* உண்மையான வாக்குறுதி நெருங்கி விட்டால் நிராகரிப்பாளர்களின் பார்வைகள் அப்படியே நிலைகுத்தி நின்று விடும். ‘எங்கள் கேடே, நாங்கள் அலட்சியமாக இருந்து விட்டோமே! நாங்கள் அநியாயக்காரர்களாக இருந்து விட்டோமே!’ என்று (அப்போது) புலம்புவார்கள்.

*98.* நிச்சயமாக நீங்களும், அல்லாஹ்வைவிடுத்து நீங்கள் வணங்கிக் கொண்டிருந்தவையும் நரகத்தின் எரிபொருள்களாவீர்கள். நீங்கள் அங்குதான் செல்ல வேண்டும் (என்று கூறப்படும்). *99.* உண்மையில் அவை தெய்வங்களாக இருந்தால் அதில் விழுந்திருக்க மாட்டா. நிராகரிப்பாளர்கள் அனைவரும் அங்கு நிரந்தரமாக வீழ்ந்து கிடப்பார்கள். *100.* அங்கு அவர்கள் கதறுவார்கள். எதையும் அவர்களால் செவியுற முடியாது. *101.* ஆயினும் நம்மிடமிருந்து முன்னரே நன்மை உண்டு என வாக்களிக்கப்பட்டவர்கள் அதனை விட்டும் தூரமாக்கப்படுவார்கள். *102.* அவர்கள் அதன் சிறு சலசலப்பைக்கூட செவியுறமாட்டார்கள். தாம் விரும்பிய விஷயங்களில் என்றென்றும் நிலைத்திருப்பார்கள். *103.* பெரும் அதிர்ச்சி அவர்களைக் கவலையில் ஆழ்த்தாது. வானவர்கள் அவர்களை ‘உங்களுக்கு வாக்களிக்கப்பட்ட நாள் இதுதான்’ என்று கூறி வரவேற்பார்கள்.

*104.* அந்நாளில் எழுதப்பட்ட ஏடுகளைச் சுருட்டுவதைப்போல நாம் வானத்தைச் சுருட்டி விடுவோம். ஆரம்பத்தில் படைத்தவாறே

*மீண்டும் படைப்போம். இது நாம் நம்மீது கடமையாக்கியுள்ள வாக்குறுதியாகும். இதனை நாம் நிறைவேற்றியே தீருவோம். **105.** நாம் 'ஆகமத்தில்' அறிவுரைக்குப்பின் எழுதி விட்டோம், "எனது நல்லடியார்கள்தான் பூமியின் வாரிசுதாரர்களாவர் (என்று)". **106.** இறைவழிபாடு செய்யும் மக்களுக்கு இதில் பெரும் செய்தி உள்ளது.*

*__107.__ நாம் உம்மை அகிலத்தாருக்கு அருட்கொடையாகவே அனுப்பியுள்ளோம். **108.** நீர் கூறும்: "உங்கள் இறைவன் ஒரே இறைவன்தான் என்று எனக்கு அறிவிக்கப்பட்டுள்ளது. நீங்கள் அடிபணிந்து இருப்பீர்களா?". **109.** அவர்கள் புறக்கணித்து விட்டால் நீர் கூறிவிடும்: "நான் உங்களுக்குத் தெளிவாக அறிவித்து விட்டேன். உங்களுக்கு எச்சரிக்கப்படுகின்ற விஷயம் அருகில் இருக்கிறதா அல்லது தூரத்தில் இருக்கிறதா என்பதை நான் அறியமாட்டேன். **110.** நிச்சயமாக உரக்கக் கூறுவதையும் மறைக்கின்றவற்றையும் அவன் அறிகிறான். **111.** எனக்குத் தெரியாது. இது உங்களுக்குச் சோதனையாகவும், குறிப்பிட்ட தவணைவரை அனுபவிப்பதற்காகவுமாக இருக்கலாம்". **112.** "என் இறைவா! சத்தியத்துடன் தீர்ப்பு வழங்குவாயாக. எங்கள் இறைவன் அளவிலாக் கருணையாளன். நீங்கள் கூறும் விஷயத்திற்கெதிராக அவனிடமே நாங்கள் உதவி தேடுகிறோம்" என்று அவர் பிரார்த்தனை செய்தார்.*

## 22. ஹஜ் பயணம் (அல்ஹஜ்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

*__1.__ மனிதர்களே! உங்கள் இறைவனை அஞ்சிக்கொள்ளுங்கள். நிச்சயமாக மறுமையின் அதிர்ச்சி மிகக் கடுமையானதாகும். **2.***

அந்நாளில் நீங்கள் காண்பீர்: பாலூட்டுகின்ற ஒவ்வொரு தாயும் தான் பாலூட்டுகின்ற குழந்தையை மறந்து விடுவாள். கர்ப்பமான ஒவ்வொரு பெண்ணும் தன் சுமையை ஈன்று விடுவாள். மக்களை மயக்கமுற்றவர்களாகக் காண்பீர். உண்மையில் அவர்கள் மயக்கத்தில் இருக்க மாட்டார்கள். ஆயினும் இறைவேதனை மிகக் கடுமையானது. 3. மக்களில் சிலர் அறிவில்லாமல் அல்லாஹ்வைப்பற்றி தர்க்கம் புரிகிறார்கள். மூர்க்கத்தனமான ஒவ்வொரு சாத்தானையும் பின்பற்றுகிறார்கள். 4. "எவர் அவனுடன் நட்பு கொள்கிறாரோ அவரை அவன் வழிகெடுத்து நரகவேதனையின் பக்கம் இட்டுச்செல்வான்" என்று அவன் விஷயத்தில் விதிக்கப்பட்டுள்ளது.

5. மனிதர்களே, 'மீண்டும் எழுப்பப்படுவது' குறித்து நீங்கள் சந்தேகத்தில் இருந்தால் அறிந்துகொள்ளுங்கள்; நாம் உங்களை மண்ணிலிருந்து, பின்னர் விந்துத்துளியிலிருந்து, பின்னர் (கருவறை சுவரில்) ஒட்டிக்கொள்ளக் கூடியதிலிருந்து, பின்னர் வடிவமைக்கப்பட்டதும் வடிவமைக்கப்படாததுமான சதைப் பிண்டத்திலிருந்து படைத்தோம். உங்களுக்குத் தெளிவுபடுத்துவதற்காகத்தான் இவற்றை நாம் எடுத்துரைக்கிறோம். நாம் நாடியபடி ஒரு குறிப்பிட்ட காலம்வரை கருவறையில் தங்க வைக்கிறோம். பின்னர் உங்களைக் குழந்தையாக வெளிப்படுத்துகிறோம். பின்னர் நீங்கள் வாலிபத்தை அடைகிறீர்கள். உங்களில் சிலர் முன்னரே இறந்து விடுகிறார்கள். சிலர் அறிந்தபின் எதுவும் அறியாமல் ஆகிவிடுவதற்காக தள்ளாத வயதுவரை தள்ளப்படுகிறார்கள். பூமியை வறண்டதாக நீர் காண்கிறீர். அதன்மீது நாம் மழையை இறக்கியவுடன் அது செழித்து வளர்ந்து விதவிதமான அழகிய தாவரங்களை முளைக்கச் செய்கிறது. 6. "அல்லாஹ்தான் உண்மையானவன். அவனே மரணித்தவர்களை உயிர்ப்பிக்கின்றான்.

*அவன் ஒவ்வொரு பொருளின்மீதும் பேராற்றலுடையவன்" என்பதே இதற்கான காரணமாகும். 7. 'அந்நேரம்' வந்தே தீரும். அதில் எத்தகைய சந்தேகமும் இல்லை. நிச்சயம் அல்லாஹ் சவக்குழிகளில் உள்ளவர்களை எழுப்புவான்.*

*8. மனிதர்களில் சிலர் அறிவில்லாமலும், வழிகாட்டுதல் இல்லாமலும், (ஞானம் எனும்) ஒளியை அளிக்கக்கூடிய வேதம் இல்லாமலும் அல்லாஹ்வைப் பற்றி தர்க்கம் புரிகிறார்கள். 9. கர்வம் கொண்டவர்களாக, மக்களை இறைவழியைவிட்டு தடுக்க வேண்டும் என்பதற்காகவே இவ்வாறு செய்கிறார்கள். அத்தகையவனுக்கு இவ்வுலகில் இழிவுதான் உண்டு. மறுமை நாளிலோ நாம் அவனை நெருப்பின் வேதனையைச் சுவைக்கச் செய்வோம். 10. இது நீ செய்த தீவினையின் கூலியாகும் (என்று கூறப்படும்). தன் அடியார்கள் மீது அல்லாஹ் அநீதி இழைப்பவன் அல்லன்.*

*11. மனிதர்களில் சிலர் அரைமனதாக அல்லாஹ்வை வணங்குகிறார்கள். அவர்களுக்கு ஏதேனும் நன்மை ஏற்பட்டால் அதனால் திருப்தியடைகிறார்கள். ஆனால் அவர்களுக்கு ஏதேனும் சோதனை ஏற்பட்டுவிட்டால் தலைகீழாகத் திரும்பி விடுகிறார்கள். அவர்கள் இம்மையையும், மறுமையையும் இழந்து விட்டார்கள். இதுதான் தெளிவான பெரும் இழப்பாகும்.*

*12. அவர்கள் அல்லாஹ்வைவிடுத்து தங்களுக்கு எவ்விதத் தீங்கையோ, பலனையோ அளிக்க இயலாதவற்றை அழைக்கிறார்கள். இதுதான் மாபெரும் வழிகேடாகும். 13. நன்மையைவிட எவருடைய தீமை நெருக்கமாக இருக்கிறதோ அவர்களையே இவர்கள் அழைக்கிறார்கள். எவ்வளவு மோசமான பாதுகாவலர்கள்! எவ்வளவு மோசமான தோழர்கள்! 14. நிச்சயமாக நம்பிக்கைகொண்டு*

நற்செயல் புரிந்தவர்களை அல்லாஹ் சுவனங்களில் நுழையச் செய்வான். அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். தான் நாடியதையே அல்லாஹ் செய்கிறான்.

*15.* இம்மையிலும், மறுமையிலும் அல்லாஹ் தனக்கு உதவ மாட்டான் என்று எண்ணுகிறவன் மேல்நோக்கி ஒரு கயிற்றை வீசி தூக்கில் தொங்கட்டும். அவனது திட்டம் அவனது கோபத்தை தணித்து விடுகிறதா என்பதைப் பார்க்கட்டும். *16.* இவ்வாறு இந்தக் குர்ஆனை தெளிவான ஆதாரங்களுடன் நாம் அருளியுள்ளோம். நிச்சயமாக தான் நாடுவோருக்கு அல்லாஹ் வழிகாட்டுகிறான்.

*17.* நம்பிக்கையாளர்கள், யூதர்கள், சாபியீன்கள், கிறிஸ்தவர்கள், நெருப்பு வணங்கிகள், இணைவைப்பாளர்கள் ஆகிய அனைவருக்குமிடையே அல்லாஹ் மறுமைநாளில் தீர்ப்பளிப்பான். நிச்சயமாக அல்லாஹ் அனைத்தையும் அறிந்தவனாக இருக்கின்றான்.

*18.* வானங்களில் உள்ளவர்களும், பூமியில் உள்ளவர்களும், சூரியனும், சந்திரனும், நட்சத்திரங்களும், மலைகளும், மரங்களும், கால்நடைகளும் மற்றும் ஏராளமான மக்களும் அல்லாஹ்வுக்கு அடிபணிகிறார்கள் என்பதை நீர் பார்க்கவில்லையா? ஆயினும் அவர்களில் பெரும்பாலோர்மீது வேதனை உறுதியாகி விட்டது. அல்லாஹ் யாரை இழிவுபடுத்துகிறானோ அவரை கண்ணியப்படுத்துபவர் யாரும் இல்லை. நிச்சயமாக தான் நாடியதையே அல்லாஹ் செய்கிறான்.

*19.* இவர்கள்தான் தம் இறைவனைக் குறித்து தர்க்கித்துக்கொண்ட இரு பிரிவினர்கள். நிராகரிப்பாளர்களுக்கு நெருப்பாலான ஆடைகள் தயார்செய்து வைக்கப்பட்டுள்ளன. அவர்களது தலைகளின்மீது கொதிநீர் ஊற்றப்படும்.

*20.* அதனால் அவர்களின் வயிற்றில் உள்ளவைகளும் தோல்களும் உருகிவிடும். *21.* இரும்புச் சம்மட்டி அடிகளும் அவர்களுக்கு உண்டு. *22.* துன்பத்தினால் அங்கிருந்து அவர்கள் வெளியேற விரும்பும்போதெல்லாம் மீண்டும் அதிலேயே தள்ளப்படுவார்கள். 'சுட்டெரிக்கும் வேதனையைச் சுவைத்துக் கொண்டே இருங்கள் (என்று அவர்களுக்குக் கூறப்படும்)'.

*23.* நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிந்தவர்களை அல்லாஹ் சுவனச்சோலைகளில் நுழையச் செய்வான். அவற்றில் ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும். அங்கு அவர்களுக்கு தங்கம் மற்றும் முத்துக்களிலான காப்புகள் அணிவிக்கப்படும். அங்கே அவர்களின் ஆடை பட்டால் ஆனதாக இருக்கும். *24.* தூய்மையான சொல்லின் பக்கம் அவர்கள் வழிகாட்டப்பட்டார்கள்; புகழுக்குரிய இறைவனின் பக்கமும் அவர்கள் வழிகாட்டப்பட்டார்கள்.

*25.* சத்தியத்தை நிராகரித்து மக்களை இறைவழியைவிட்டும், நாம் மக்களுக்காக ஏற்படுத்தியுள்ள புனித ஆலயத்தை - அங்கு வசிக்கக்கூடியவர்களும் வெளியிலிருந்து வரக்கூடியவர்களும் சமமாவார்கள் - விட்டும் தடுக்கின்றவர்களையும் அங்கு நேரான வழியை விட்டுவிலகி அநீதி இழைக்க நாடுபவர்களையும் நாம் துன்புறுத்தும் வேதனையைச் சுவைக்கும்படிச் செய்வோம்.

*26.* நாம் ஆப்ராஹாமிற்கு இறையில்லத்திற்கான இடமளித்தபோது, "நீர் என்னுடன் எப்பொருளையும் இணையாக்கக் கூடாது. எனது வீட்டை வலம்வரக்கூடியவர்களுக்காகவும், நின்று வணங்கக் கூடியவர்களுக்காகவும், குனிபவர்களுக்காகவும், சிரம் பணிபவர்களுக்காகவும் தூய்மையாக வைத்திருக்க வேண்டும்" என்று கூறினோம்.

*27.* ஹஜ்ஜுக்கு வருமாறு மக்களுக்கு அறிவிப்புச் செய்வீராக. அவர்கள் தூரமான இடங்களிலிருந்து நடந்தவாறும் மெலிந்த

ஒட்டகங்களிலும் உம்மிடம் வருவார்கள். **28.** தங்களின் பயன்களை அடைவதற்காகவும், அல்லாஹ் அவர்களுக்கு வழங்கியுள்ள கால்நடைகளைக் குறிப்பிட்ட நாட்களில் அவனது பெயர் கூறி அறுப்பதற்காகவும் அவர்கள் அங்கு வருவார்கள். எனவே அதிலிருந்து நீங்களும் உண்ணுங்கள். சிரமப்படும் ஏழைகளுக்கும் உணவளியுங்கள். **29.** அவர்கள் தங்கள் அழுக்குகளை அகற்றி, தங்கள் நேர்ச்சைகளை நிறைவேற்றிப் பழமையான இந்த வீட்டையும் சுற்றி வரட்டும்.

**30.** இதுதான் இறைக்கட்டளை. எவர் அல்லாஹ் புனிதப்படுத்தியவற்றை கண்ணியப்படுத்துவாரோ - அது அவரது இறைவனிடத்தில் அவருக்குத்தான் சிறந்ததாகும். உங்களுக்கு ஓதிக் காட்டப்பட்டவற்றைத்தவிர ஏனைய கால்நடைகள் உங்களுக்கு ஆகுமாக்கப்பட்டுள்ளன. சிலைவழிபாடு எனும் அசுத்தத்தைவிட்டுத் தவிர்ந்து கொள்ளுங்கள்; பொய் பேசுவதையும் தவிர்த்துக் கொள்ளுங்கள்.

**31.** அல்லாஹ்வின்மீது முழுநம்பிக்கை கொண்டவர்களாக இருங்கள். அவனுடன் யாரையும் இணையாக்காதீர்கள். அல்லாஹ்விற்கு இணைவைப்பவன் வானத்திலிருந்து விழுந்து விட்டவனைப் போன்றவனாவான். அவனைப் பறவைகள் வாரிச்சென்று விடுகின்றன அல்லது காற்று அவனை தூரமான இடத்தில் வீசி விடுகிறது.

**32.** இதுதான் இறைக்கட்டளை. எவர் அல்லாஹ்வின் அடையாளச் சின்னங்களை கண்ணியப்படுத்துவாரோ - அது அவர்களுடைய உள்ளங்களில் உள்ள இறையச்சத்தின் வெளிப்பாடாகும். **33.** நீங்கள் அவற்றின்மூலம் ஒரு குறிப்பிட்ட காலம்வரை பயனடையலாம். பின்னர் அவற்றைப் பலியிடுவதற்காக

பழமையான இறையில்லத்தின் பக்கம் கொண்டு செல்ல வேண்டும்.

*34.* நாம் ஒவ்வொரு சமூகத்திற்கும் பலியிடுதலை நிர்ணயித்துள்ளோம். அது அல்லாஹ் அவர்களுக்கு வழங்கியுள்ள கால்நடைகளின்மீது அவனது பெயரை உச்சரிக்க வேண்டும் என்பதற்காகத்தான். உங்கள் இறைவன் ஒரே இறைவன்தான். எனவே அவனுக்கே அடிபணியுங்கள். பணிந்து நடப்போருக்கு நற்செய்தி கூறிவிடும். *35.* அல்லாஹ்வைப்பற்றி அவர்களிடம் கூறப்பட்டால் அவர்களது உள்ளங்கள் நடுநடுங்கி விடுகின்றன. அவர்கள் தமக்கு ஏற்பட்ட துன்பத்தைத் சகித்துக் கொள்பவர்களாகவும், தொழுகையைக் கடைப்பிடிப்பவர்களாகவும், நாம் அவர்களுக்கு வழங்கியவற்றிலிருந்து செலவு செய்பவர்களாகவும் இருப்பார்கள்.

*36.* பலியிடப்படும் ஒட்டகங்களை நாம் உங்களுக்காக அல்லாஹ்வின் அடையாளச் சின்னங்களாக ஆக்கியுள்ளோம். அவற்றில் உங்களுக்கு நன்மை உள்ளது. எனவே அவற்றை நிற்க வைத்து அவற்றின்மீது அல்லாஹ்வின் பெயரை உச்சரியுங்கள்; பின்னர் அவை விலாப்புறமாக விழுந்து விட்டால் அவற்றிலிருந்து நீங்களும் உண்ணுங்கள், யாசிப்பவருக்கும், யாசிக்காதவருக்கும் உண்ணக் கொடுங்கள். இவ்வாறே நீங்கள் நன்றி செலுத்தும்பொருட்டு அவற்றை நாம் உங்களுக்கு வசப்படுத்தித் தந்தோம். *37.* அவற்றின் இறைச்சியோ, இரத்தமோ அல்லாஹ்வை அடைவதில்லை. மாறாக உங்களின் இறையச்சமே அவனை அடைகிறது. அவனை நீங்கள் பெருமைப்படுத்தும்பொருட்டு இவ்வாறு அவற்றை உங்களுக்கு வசப்படுத்தித் தந்துள்ளான். அது உங்களுக்கு நேரான வழியைக் காட்டியதற்காகவும் நீங்கள் அவனைப் பெருமைப்படுத்த வேண்டும் என்பதற்காகவும்தான். நன்மை செய்வோருக்கு நற்செய்தி கூறுவீராக.

*38.* நிச்சயமாக அல்லாஹ் நம்பிக்கையாளர்களுக்குப் பாதுகாப்பளிக்கிறான். அல்லாஹ் துரோகம் செய்பவர்களையும், நன்றிகெட்டவர்களையும் விரும்புவதில்லை. *39.* போர் தொடுக்கப்பட்டோருக்கு - அவர்கள் அநீதி இழைக்கப்பட்டிருப்பதனால் - எதிர்த்துப் போரிட அனுமதி அளிக்கப்பட்டுள்ளது. நிச்சயமாக அல்லாஹ் அவர்களுக்கு உதவி புரிய ஆற்றலுடையவன். *40.* 'அல்லாஹ்தான் எங்கள் இறைவன்' என்று கூறியதற்காகவே அவர்கள் அநியாயமாகத் தங்கள் வீடுகளிலிருந்து வெளியேற்றப்பட்டார்கள். மக்களில் சிலரின்மூலம் சிலரை அல்லாஹ் தடுக்காவிட்டால் மடாலயங்களும், கிறிஸ்தவ ஆலயங்களும், வழிபாட்டுத்தலங்களும், அல்லாஹ்வின் பெயர் அதிகமாகக் கூறப்படும் பள்ளிவாசல்களும் இடிக்கப்பட்டிருக்கும். அல்லாஹ் தனக்கு உதவி புரிபவருக்கு நிச்சயம் உதவிபுரிவான். நிச்சயமாக அல்லாஹ் வலிமைமிக்கவனாகவும், யாவற்றையும் மிகைத்தவனாகவும் இருக்கின்றான்.

*41.* உலகத்தில் நாம் அவர்களுக்கு வாய்ப்பை வழங்கினால் தொழுகையைக் கடைப்பிடித்து கடமையாக்கப்பட்ட தர்மத்தையும் வழங்குவார்கள்; நன்மையை ஏவி தீமையைத் தடுப்பார்கள். எல்லாக் காரியங்களின் முடிவும் அல்லாஹ்விடமே உள்ளது.

*42.* அவர்கள் உம்மை பொய்யரெனக் கருதினால் - அறிந்துகொள்ளும்: அவர்களுக்கு முன்னர் நோவாவுடைய சமூகமும், ஆத், ஸமூத் மக்களும் *43.* ஆப்ரஹாமுடைய சமூகமும், லோத்துடைய சமூகமும் இன்னும் *44.* மத்யன்வாசிகளும் மறுத்துள்ளார்கள். மோசேவும் நிராகரிக்கப்பட்டார். நான் நிராகரிப்பாளர்களுக்கு அவகாசம் அளித்து பின்னர் அவர்களைப் பிடித்துக் கொண்டேன். எனது தண்டனை எவ்வாறு இருந்தது (என்பதைக் கவனித்தீர்களா?).

*45.* அநியாயக்காரர்கள் வசித்திருந்த எத்தனையோ ஊர்களை நாம் அழித்து விட்டோம். அவை தலைகீழாக வீழ்ந்து கிடக்கின்றன. எத்தனையோ கிணறுகள் பாழடைந்தும் உறுதிவாய்ந்த மாளிகைகள் அழிந்தும் கிடக்கின்றன. *46.* அவர்கள் பூமியில் பயணம் செய்யவில்லையா? அவ்வாறாயின் அவர்களின் உள்ளங்கள் விளங்கிக் கொள்ளக்கூடியதாகவும், காதுகள் செவியேற்கக்கூடியதாகவும் ஆகியிருக்குமே! உண்மையில் கண்கள் குருடாவதில்லை. மாறாக நெஞ்சங்களில் இருக்கும் இதயங்கள்தான் குருடாகி விடுகின்றன.

*47.* அவர்கள் உம்மிடம் வேதனைக்காக அவசரப்படுகிறார்கள். அல்லாஹ் ஒருபோதும் தன் வாக்குறுதிக்கு மாறுசெய்ய மாட்டான். இறைவனிடத்தில் ஒருநாள் என்பது உங்களின் ஆயிரம் ஆண்டுகளுக்குச் சமமாகும். *48.* அநியாயம் செய்த எத்தனையோ ஊரிலிருந்த மக்களுக்கு நான் அவகாசம் அளித்தேன். பின்னர் அவர்களைப் பிடித்துக் கொண்டேன். அவர்கள் என்னிடமே திரும்ப வேண்டும்.

*49.* நீர் கூறும், “மக்களே! நான் உங்களுக்குத் தெளிவாக எச்சரிக்கை செய்பவன்தான். *50.* எனவே நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிந்தவர்களுக்கு மன்னிப்பும், கண்ணியமான உணவும் உண்டு”. *51.* நம் வசனங்களை தோற்கடிக்க முனைபவர்கள்தான் நரகவாசிகள்.

*52.* நாம் உமக்கு முன்னர் அனுப்பிய எந்தத் தூதரானாலும், நபியானாலும் அவர் ஓதும்போது சாத்தான் குழப்பத்தை ஏற்படுத்தி விடுகிறான். ஆயினும் சாத்தான் ஏற்படுத்திய குழப்பத்தை அல்லாஹ், நீக்கி பின்னர் தன் வசனங்களை உறுதிப்படுத்துகிறான். அல்லாஹ் நன்கறிந்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கிறான். *53.* சாத்தான் ஏற்படுத்திய குழப்பத்தை உள்ளங்களில்

நோயுள்ளவர்களுக்கும், இறுகிய இதயமுள்ளவர்களுக்கும் சோதனையாக ஆக்கிவிட வேண்டும் என்பதற்காகத்தான் அல்லாஹ் இவ்வாறு செய்கிறான். அநியாயக்காரரர்கள் பகைமையில் வெகுதூரம் சென்று விட்டார்கள். 54. அறிவு வழங்கப்பட்டவர்கள் உமது இறைவனிடமிருந்து வந்துள்ள உண்மை இது என்பதை அறிந்து இதன்மீது நம்பிக்கை கொள்ள வேண்டும்; அவர்களது உள்ளங்கள் அவனுக்குப் பணிய வேண்டும் என்பதற்காகவும்தான் (இவ்வாறு செய்கிறான்). நம்பிக்கையாளர்களுக்கு அல்லாஹ் நிச்சயம் நேரான வழியைக் காட்டி விடுகிறான்.

55. நிராகரிப்பாளர்கள் தங்களிடம் திடீரென மறுமைநாள் வந்துவிடும்வரை அல்லது கடினமான ஒருநாளின் வேதனை வந்துவிடும்வரை இதைக்குறித்த சந்தேகத்திலேயே ஆழ்ந்து கிடப்பார்கள். 56. அந்நாளில் அனைத்து அதிகாரமும் அல்லாஹ்விடமே இருக்கும். அவர்களிடையே அவன் தீர்ப்பளிப்பான். ஆகவே நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிந்தவர்கள் அருட்கொடையின் சுவனங்களில் இருப்பார்கள். 57. நிராகரித்து நம் வசனங்களைப் பொய்யென கூறியவர்களுக்கு இழிவுமிக்க வேதனையுண்டு.

58. யாரெல்லாம் இறைவழியில் புலம்பெயர்ந்து பின்னர் கொல்லப்பட்டார்களோ அல்லது இறந்து விட்டார்களோ அவர்களுக்கு அல்லாஹ் அழகிய (முறையில்) உணவை வழங்குவான். நிச்சயமாக உணவளிப்பதில் அல்லாஹ்வே மிகச் சிறந்தவன். 59. அவர்கள் விரும்பும் இடத்தில் அவர்களை அவன் சேர்ப்பித்து விடுவான். நிச்சயமாக அல்லாஹ் நன்கறிந்தவனாகவும் சகிப்புத்தன்மை மிக்கவனாகவும் இருக்கின்றான்.

60. இவ்வாறே நிகழ்ந்து விட்டது. எவர், தாம் துன்புறுத்தப்பட்டது போலவே பழிவாங்கி, பின்னர் அவர்மீது

அநீதி இழைக்கப்படுமானால் நிச்சயம் அல்லாஹ் அவருக்கு உதவி செய்வான். நிச்சயமாக அல்லாஹ் பிழைகளைப் பொறுப்பவனாகவும் பெரும் மன்னிப்பாளனாகவும் இருக்கின்றான்.

**61.** அல்லாஹ் இரவைப் பகலில் நுழையச் செய்கிறான், பகலை இரவில் நுழையச் செய்கிறான் என்பதே இதற்கான காரணமாகும். அல்லாஹ் செவியேற்பவனாகவும், பார்ப்பவனாகவும் இருக்கின்றான். **62.** அல்லாஹ்தான் உண்மையானவன், அல்லாஹ்வைவிடுத்து அவர்கள் அழைக்கின்றவை யாவும் பொய்யானவையே என்பதே இதற்கான காரணமாகும். நிச்சயமாக அல்லாஹ் மிக உயர்ந்தவனாகவும், மிகப்பெரியவனாகவும் இருக்கின்றான்.

**63.** அல்லாஹ்வே வானத்திலிருந்து மழையைப் பொழிவிக்கிறான். அதனால் பூமி பசுமையாகி விடுகிறது என்பதை நீங்கள் பார்க்கவில்லையா? நிச்சயமாக அல்லாஹ் நுட்பமானவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். **64.** வானங்களிலும், பூமியிலும் உள்ளவை யாவும் அவனுக்கே உரியன. நிச்சயமாக அல்லாஹ் தேவையற்றவனாகவும், புகழுக்குரியவனாகவும் இருக்கின்றான்.

**65.** நீங்கள் பார்க்கவில்லையா? பூமியிலுள்ள அனைத்தையும் அவன் உங்களுக்கு வசப்படுத்தித் தந்துள்ளான். கப்பல் அவனது கட்டளைப்படி கடலில் செல்கிறது. அவனது அனுமதியின்றி வானம் பூமியின் மீது விழாதவாறு அவன் தடுத்துக் கொண்டிருக்கிறான். நிச்சயமாக அல்லாஹ் மனிதர்களின்மீது மிகுந்த பரிவுடையவனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். **66.** அவனே உங்களை உயிர்ப்பித்தான். பின்னர் அவனே உங்களை மரணிக்கச் செய்வான். பின்னர் அவனே மீண்டும் உங்களை உயிர்ப்பிப்பான். நிச்சயமாக மனிதன் நன்றிகெட்டவனாக இருக்கிறான்.

***67.*** *நாம் ஒவ்வொரு சமூகத்திற்கும் ஒரு வழிமுறையை ஏற்படுத்தினோம். அவர்கள் அதனைப் பின்பற்றிக் கொண்டிருக்கிறார்கள். எனவே இவ்விஷயத்தில் அவர்கள் உம்முடன் தர்க்கிக்க வேண்டாம். உம் இறைவனின் பக்கம் (அவர்களை) அழைப்பீராக. நிச்சயமாக நீர் நேரான வழியில் இருக்கின்றீர்.* ***68.*** *அவர்கள் உம்முடன் தர்க்கம் புரிந்தால், "நீங்கள் செய்பவற்றை எல்லாம் அல்லாஹ் நன்கறிவான்" என்று கூறிவிடும்.* ***69.*** *நீங்கள் முரண்பட்டுள்ள விஷயங்களில் மறுமைநாளில் அல்லாஹ் உங்களிடையே தீர்ப்பளிப்பான்.* ***70.*** *வானத்திலும் பூமியிலும் உள்ள அனைத்தையும் அல்லாஹ் நன்கறிவான் என்பதை நீர் அறியமாட்டீரா? அனைத்தும் ஓர் ஏட்டில் உள்ளது. இது அல்லாஹ்வுக்கு மிக எளிதானது.*

***71.*** *என்றபோதிலும் அவர்கள் அல்லாஹ்வைவிடுத்து மற்றவற்றை வழிபடுகிறார்கள். அல்லாஹ் அதற்கு எவ்வித ஆதாரத்தையும் இறக்கி வைக்கவில்லை. அது குறித்து எந்த அறிவும் அவர்களிடம் இல்லை. அநியாயக்காரர்களுக்கு உதவுபவர்கள் யாரும் இல்லை.* ***72.*** *நம்முடைய தெளிவான வசனங்கள் அவர்களிடம் எடுத்துரைக்கப்பட்டால் நிராகரிப்பாளர்களின் முகங்களில் நீர் வெறுப்பைக் காண்பீர். அவர்கள் நம் வசனங்களை எடுத்துரைப்பவர்களைத் தாக்கி விடுவார்கள் போலும். நீர் கூறும், "இதைவிட மோசமான ஒன்றை நான் உங்களுக்கு சொல்லித் தரட்டுமா?. அதுதான் நரகம். நிராகரிப்பாளர்களுக்கு அல்லாஹ் அதைத்தான் வாக்களித்துள்ளான். அது மிகவும் கெட்ட இருப்பிடமாகும்".*

***73.*** *மனிதர்களே, உங்களுக்கு ஒரு உதாரணம் கூறப்படுகிறது. அதனைக் கவனமாகக் கேளுங்கள். நீங்கள் அல்லாஹ்வைவிடுத்து அழைக்கும் தெய்வங்களால் ஒரு ஈயைக்கூட படைக்க முடியாது,*

அதற்காக அவையனைத்தும் ஒன்று சேர்ந்தாலும் சரியே. ஏன், ஒரு ஈ அவற்றிடமிருந்து எதையேனும் பிடுங்கிக் கொண்டாலும், அதைக்கூட அவைகளால் மீட்க முடியாது. உதவி தேடுபவர்களும் பலவீனர்களே. உதவி தேடப்படுபவையும் பலவீனமானவையே. **74.** அவர்கள் அல்லாஹ்வை மதிப்பிட வேண்டிய முறைப்படி மதிப்பிடவில்லை. அல்லாஹ் வல்லமைமிக்கவனாகவும், யாவற்றையும் மிகைத்தவனாகவும் இருக்கின்றான்.

**75.** அல்லாஹ் வானவர்களிலிருந்தும், மனிதர்களிலிருந்தும் தூதர்களைத் தேர்ந்தெடுக்கிறான். நிச்சயமாக அல்லாஹ் கேட்பவனாகவும் பார்ப்பவனாகவும் இருக்கின்றான். **76.** அவர்களுக்கு முன்னுள்ளவற்றையும், பின்னுள்ளவற்றையும் அவன் அறிகிறான். அனைத்து விவகாரங்களும் அல்லாஹ்வின்பக்கமே திரும்புகின்றன.

**77.** நம்பிக்கையாளர்களே! குனிந்து சிரம்பணியுங்கள். உங்கள் இறைவனையே வணங்குங்கள். இன்னும் நன்மையான செயல்களைச் செய்யுங்கள். அதனால் நீங்கள் வெற்றி பெறலாம். **78.** இறைவழியில் முயற்சிக்க வேண்டியவாறு முயற்சி செய்யுங்கள். அவன் உங்களைத் தேர்ந்தெடுத்துள்ளான். மார்க்கத்தில் உங்களுக்கு எவ்வித சிரமத்தையும் அவன் ஏற்படுத்தவில்லை. இது உங்களுடைய தந்தையான ஆப்ரஹாமுடைய மார்க்கமாகும். இதற்கு முன்பும், இந்த குர்ஆனிலும் உங்களுக்கு ‘முஸ்லிம்கள்’ என்று அவன்தான் பெயர் சூட்டினான். அது ஏனெனில் தூதர் உங்கள்மீது சாட்சியாகவும், நீங்கள் மக்களுக்கு சாட்சியாகவும் இருக்க வேண்டும் என்பதற்காக. எனவே தொழுகையைக் கடைப்பிடித்து கடமையாக்கப்பட்ட தர்மத்தையும் கொடுத்து வாருங்கள். அல்லாஹ்வை உறுதியாகப் பற்றிக் கொள்ளுங்கள். அவனே உங்கள் அதிபதி. அவன் மிகச் சிறந்த அதிபதியாவான். உதவிபுரிவதில் மிகச் சிறந்தவனாவான்.

# *23. நம்பிக்கையாளர்கள் (அல்முஃமினூன்)*

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

*1. நிச்சயமாக நம்பிக்கையாளர்கள் வெற்றியடைந்து விட்டார்கள். 2. தம் தொழுகையில் அவர்கள் பணிவைப் பேணுவார்கள்; 3. வீணான காரியங்களை விட்டு விலகியிருப்பார்கள்; 4. கடமையாக்கப்பட்ட தானதர்மத்தையும் வழங்குவார்கள்; 5. தங்கள் வெட்கத்தலங்களைப் பாதுகாப்பார்கள், 6. ஆயினும் தங்கள் மனைவியரிடமோ தாம் சொந்தமாக்கிக்கொண்ட அடிமைப்பெண்களிடமோ தவிர. இதற்காக அவர்கள் பழிக்கப்பட மாட்டார்கள். 7. யாரெல்லாம் இதற்கப்பாலும் ஆசைப்படுவார்களோ அவர்கள்தான் வரம்புமீறியவர்கள். 8. அவர்கள் தங்களிடம் ஒப்படைக்கப்பட்ட பொருட்களையும், வாக்குறுதிகளையும் பேணிக்காப்பார்கள். 9. தங்கள் தொழுகைகளை முறையாகக் கடைப்பிடிப்பார்கள். 10. இவர்கள்தான் சுவனத்திற்கு உரிமையாளர்களாவர். 11. அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள்.*

*12. நாம் மனிதனைக் களிமண்ணின் சாரத்திலிருந்து படைத்தோம். 13. பின்னர் அவனை விந்துத் துளியாக்கி ஒரு பாதுகாப்பான இடத்தில் வைத்தோம். 14. பின்னர் விந்துத்துளியை பின்னர் (கருவறை சுவரில்) ஒட்டிக்கொள்ளக் கூடியதாக்கினோம். பின்னர் அதை சதைப் பிண்டமாக்கினோம். சதைப் பிண்டத்தை எலும்பாக்கி எலும்பை சதையால் போர்த்தினோம். பின்னர் அதனைப் புதிய வடிவில் படைத்தோம். பாக்கியம் பொருந்தியவனாகிய அல்லாஹ் மிகச்சிறந்த படைப்பாளன். 15. அதற்குப்பின் நிச்சயம் நீங்கள் மரணிக்கக்கூடியவர்கள்தான். 16. பின்னர் மறுமைநாளில் நீங்கள் எழுப்பப்படுவீர்கள்.*

*17.* நாம் உங்களுக்கு மேலே ஏழு வழிகளை அமைத்துள்ளோம். படைப்புகளைவிட்டும் நாம் கவனமற்றவர்களாக இல்லை. *18.* நாம் வானத்திலிருந்து ஒரு அளவோடு மழையைப் பொழிவித்து அதனைப் பூமியில் தேக்கி வைத்துள்ளோம். அதனைப் போக்கி விடவும் நாம் ஆற்றலுடையோர்தாம். *19.* அதன் மூலம் உங்களுக்குப் பேரீச்சை மற்றும் திராட்சைத் தோட்டங்களை உருவாக்கினோம். அவற்றில் உங்களுக்கு ஏராளமான கனிகள் உள்ளன. அவற்றிலிருந்து நீங்கள் புசிக்கிறீர்கள். *20.* சினாய் மலையில் விளையும் மரத்தையும் நாம் படைத்தோம், அது எண்ணெயையும், உண்போருக்கு தொட்டு சாப்பிடும் பொருளையும் உற்பத்தி செய்கிறது. *21.* கால்நடைகளில் உங்களுக்குப் படிப்பினை இருக்கிறது. அவற்றின் வயிற்றிலிருந்து நாம் உங்களுக்குப் (பாலை) புகட்டுகிறோம். அவற்றில் உங்களுக்கு ஏராளமான பயன்களும் உள்ளன. அவற்றிலிருந்து நீங்கள் உண்ணவும் செய்கிறீர்கள். *22.* அவற்றின்மீதும், கப்பல்களின்மீதும் நீங்கள் பயணமும் செய்கிறீர்கள்.

*23.* நாம் நோவாவை அவரது சமூகத்திடம் அனுப்பினோம். அவர், “என் சமூகமே, நீங்கள் அல்லாஹ்வை வணங்குங்கள். அவனைத்தவிர உங்களுக்கு வேறு இறைவன் இல்லை. நீங்கள் அஞ்ச மாட்டீர்களா?” என்று கேட்டார். *24.* அவரது சமூகத்தில் சத்தியத்தை நிராகரித்த பிரமுகர்கள், “இவர் உங்களைப்போன்ற ஒரு மனிதர்தான். உங்களைவிட உயர்வடைய வேண்டும் என்று விரும்புகிறார். அல்லாஹ் நாடியிருந்தால் ஒரு வானவரை அனுப்பியிருப்பான். எங்கள் முன்னோர்களிடம் இந்த விஷயத்தை நாங்கள் கேள்விப்பட்டதில்லை. *25.* இவர் பைத்தியம் பிடித்த ஒரு மனிதராகத்தான் இருக்கிறார். கொஞ்ச காலம்வரை பொறுத்திருங்கள்” என்று கூறினார்கள்.

*26.* அவர், “என் இறைவா! அவர்கள் என்னை பொய்யரென கருதியதால் எனக்கு உதவி புரிவாயாக” என்று பிரார்த்தனை செய்தார். *27.* நாம் அவருக்கு, “நம் அறிவுரையின்படி நம் கண்காணிப்பில் ஒரு கப்பலைச் செய்வீராக. நமது கட்டளைவந்து தண்ணீர் பொங்கி விட்டால் எல்லாவகையான உயிரினங்களிலிருந்தும் ஒரு ஜோடியையும் உமது குடும்பத்தினரையும் ஏற்றிக் கொள்வீராக, யாருடைய விஷயத்தில் தீர்ப்பு முந்தி விட்டதோ அவர்களைத் தவிர. அநியாயக்காரர்களைக் குறித்து என்னிடம் பேசாதீர். அவர்கள் மூழ்கடிக்கப்படுவார்கள்” என்று அறிவித்தோம்.

*28.* நீரும் உம்முடன் உள்ளவர்களும் கப்பலில் அமர்ந்து விட்டால் ‘அநியாயக்காரர்களைவிட்டும் எங்களைக் காப்பாற்றிய அல்லாஹ்வுக்கே நன்றி’ என்று கூறுவீராக. *29.* “என் இறைவா! அருள்வளம்மிக்க இடத்தில் என்னை இறக்குவாயாக. நீயே மிகச்சிறந்த இடத்தை வழங்கக்கூடியவன்” என்றும் கூறுவீராக. *30.* நிச்சயமாக இதில் சான்றுகள் இருக்கின்றன. நாம் மக்களைச் சோதித்துக் கொண்டே இருக்கின்றோம்.

*31.* பின்னர் அவர்களுக்குப்பின் வேறொரு சமூகத்தை உருவாக்கினோம். *32.* அவர்களிடம் அவர்களிலிருந்தே ஒரு தூதரை அனுப்பினோம். “நீங்கள் அல்லாஹ்வையே வணங்குங்கள். அவனைத்தவிர உங்களுக்கு வேறு இறைவன் இல்லை. நீங்கள் அஞ்ச மாட்டீர்களா?” என்று அவர் கேட்டார் *33.* அவரது சமூகத்தில் சத்தியத்தை நிராகரித்து மறுமையின் சந்திப்பை மறுத்த பிரமுகர்கள், - நாம் அவர்களுக்கு இவ்வுலகில் சொகுசான வாழ்க்கையை வழங்கியிருந்தோம் - “இவர் உங்களைப்போன்ற ஒரு மனிதர்தான்.

நீங்கள் உண்பதையே இவரும் உண்கிறார்; நீங்கள் பருகுவதையே இவரும் பருகுகிறார். **34.** நீங்கள் உங்களைப்போன்ற ஒரு மனிதருக்கு கீழ்ப்படிந்தீர்களானால் பெரும் இழப்பிற்குள்ளாகி விடுவீர்கள்" என்று கூறினார்கள்.

**35.** "நீங்கள் இறந்து மண்ணாகவும் எலும்புகளாகவும் ஆகிவிட்ட பின்னர் மீண்டும் வெளியாக்கப்படுவீர்கள் என்று இவர் உங்களிடம் கூறுகிறாரா? **36.** நீங்கள் எச்சரிக்கப்படும் இவ்விஷயம் சாத்தியமற்றது. **37.** வாழ்க்கை என்பது நமது இவ்வுலக வாழ்க்கை மட்டும்தான். இங்குதான் நாம் மரணிக்கிறோம்; உயிர் வாழ்கிறோம். நாம் மீண்டும் எழுப்பப்பட மாட்டோம். **38.** இவர் அல்லாஹ்வின்மீதே பொய்யுரைக்கும் மனிதராக இருக்கிறார். நாங்கள் இவரை நம்ப மாட்டோம்" என்றும் கூறினார்கள்.

**39.** "என் இறைவா! இவர்கள் என்னை பொய்யரென கருதியதால் எனக்கு உதவி புரிவாயாக" என்று தூதர் பிரார்த்தித்தார். **40.** அதற்கு இறைவன், "விரைவில் அவர்கள் வருத்தப்படத்தான் போகிறார்கள்" என்று கூறினான். **41.** ஆகவே உண்மையாகவே கடும் சப்தம் அவர்களைப் பிடித்துக் கொண்டது. நாம் அவர்களைக் குப்பைக் கூளங்களாக்கி விட்டோம். 'அழிந்து போகட்டும் அக்கிரமக்கார சமூகம்' (என்று அவர்கள் சபிக்கப்பட்டார்கள்).

**42.** அவர்களுக்குப்பின் நாம் வேறொரு சமூகத்தை உருவாக்கினோம். **43.** எந்தச் சமூகமும் தனது தவணைக்கு முந்தவும் செய்யாது, பிந்தவும் செய்யாது. **44.** பின்னர் நாம் தொடர்ந்து நம் தூதர்களை அனுப்பினோம். எந்த ஒரு சமூகத்திடமும் அதனுடைய தூதர்கள் வந்தாலும் அவரை அவர்கள் நிராகரித்துக் கொண்டுதான் இருந்தார்கள். எனவே நாம் அவர்களை ஒன்றன் பின் ஒன்றாக

அழித்து அவர்களைப் பழங்கதைகளாக்கி விட்டோம். நம்பிக்கை கொள்ளாத மக்கள் இறையருளை விட்டும் தூரமாகட்டும்.

*45.* பின்னர் நாம் மோசேவையும், அவரது சகோதரர் ஆரோனையும் நம் சான்றுகளுடனும் தெளிவான ஆதாரங்களுடனும் *46.* பாரோவிடமும் அவனது பிரமுகர்களிடமும் அனுப்பி வைத்தோம். ஆனால் அவர்கள் கர்வம் கொண்டார்கள்; அவர்கள் ஆணவம்கொண்ட மக்களாகத்தான் இருந்தார்கள். *47.* "நம்மைப் போன்ற இரு மனிதர்களை நாம் ஏற்றுக்கொள்வதா? அவர்களின் சமூகத்தினரோ நமக்கு அடிமைகளாக இருக்கிறார்கள்" என்று அவர்கள் கூறினார்கள். *48.* ஆக அவ்விருவரையும் அவர்கள் நிராகரித்து விட்டார்கள். எனவே அவர்கள் அழிக்கப்பட்டு விட்டார்கள். *49.* மக்கள் நேர்வழியடைய வேண்டும் என்பதற்காக நாம் மோசேவுக்கு வேதத்தை வழங்கினோம்.

*50.* நாம் மரியாளின் மகனையும், அவரது அன்னையையும் ஒரு சான்றாக ஆக்கினோம். நீருற்றுள்ள, உயரமான, அமைதி நிறைந்த ஓரிடத்தில் அவர்களை வசிக்கச் செய்தோம்.

*51.* தூதர்களே, தூய்மையானவற்றை உண்ணுங்கள். நற்செயல் புரியுங்கள். நீங்கள் செய்பவற்றை நான் நன்கறிவேன். *52.* உங்களது இந்த சமூகம் ஒரே சமூகம்தான். நானே உங்கள் இறைவன். எனவே என்னையே அஞ்சுங்கள்.

*53.* என்றபோதிலும் அவர்கள் தங்களின் மார்க்கத்தில் பிளவுபட்டார்கள். ஒவ்வொரு கூட்டமும் தன்னிடம் இருப்பதைக் கொண்டு பூரிப்படைகிறது. *54.* எனவே குறிப்பிட்ட காலம்வரை அவர்களின் மயக்கத்திலேயே அவர்களை விட்டுவிடும்.

*55.* நாம் அவர்களுக்கு செல்வத்தையும், பிள்ளைகளையும் அளித்து அவர்களுக்கு நன்மை செய்ய விரைந்து கொண்டிருக்கிறோம் என்று அவர்கள் எண்ணிக் கொண்டார்களா? *56.* நிச்சயமாக இல்லை. ஆயினும் அவர்கள் புரிந்துகொள்வதில்லை.

*57.* தம் இறைவனின் அச்சத்தால் நடுங்குவோரும், *58.* தம் இறைவனின் வசனங்களை நம்புவோரும், *59.* தம் இறைவனுக்கு இணைவைக்காதோரும் *60.* தானதர்மம் வழங்குவோரும், ‘தங்கள் இறைவனிடம் திரும்பிச் செல்வோம்’ என்பதனால் எவருடைய உள்ளங்கள் நடுநடுங்கிக் கொண்டிருக்கிறதோ அவர்களுமாகிய *61.* இத்தகைய மக்கள்தான் நற்செயல்களில் விரைந்து செல்பவர்கள். இவர்கள்தான் அவற்றுக்கு முந்திச் செல்பவர்கள். *62.* எந்த மனிதனையும் அவனது சக்திக்குட்பட்டே தவிர நாம் சிரமப்படுத்துவதில்லை. (ஒவ்வொருவரைப் பற்றியும்) மிகச்சரியாக பேசக்கூடிய ஒரு புத்தகம் நம்மிடம் உள்ளது. எவரும் அநீதி இழைக்கப்பட மாட்டார்கள்.

*63.* ஆயினும் அவர்களது உள்ளங்கள் அதனை விட்டும் அலட்சியமாக இருக்கின்றன. அவர்களுக்கு அது அல்லாத வேறு காரியங்களும் உள்ளன. அவற்றை அவர்கள் செய்து கொண்டிருப்பார்கள். *64.* இறுதியில் அவர்களில் சொகுசாக வாழ்வோரை வேதனையால் நாம் தண்டிக்கும்போது அவர்கள் அபயக்குரல் எழுப்புவார்கள். *65.* இன்றையதினம் நீங்கள் அபயக்குரல் எழுப்பாதீர்கள். இனி நம்மிடமிருந்து உங்களுக்கு எந்த உதவியும் கிடைக்காது. *66.* என் வசனங்கள் உங்களுக்கு ஓதிக்காட்டப்பட்டபோது *67.* கர்வங்கொண்டவர்களாக ஏதோ இராக்கதை சொல்பவரை விட்டுச் செல்வதைப்போல நீங்கள் பின்வாங்கி ஓடிக்கொண்டிருந்தீர்கள் (என்று கூறப்படும்).

*68.* அவர்கள் இக்கூற்றை ஆராய்ந்து பார்க்க வேண்டாமா? அல்லது அவர்களின் முன்னோர்களிடம் வராத ஒன்று அவர்களிடம் வந்து விட்டதா? *69.* அல்லது அவர்கள் தம் தூதரை அறிந்து கொள்ளாததால் அவரை நிராகரிக்கிறார்களா? *70.* அல்லது அவருக்குப் பைத்தியம் பிடித்துள்ளது என்று கூறுகிறார்களா? மாறாக அவர்களிடம் அவர் சத்தியத்தையே கொண்டு வந்துள்ளார். ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் சத்தியத்தை வெறுப்பவர்களாகவே இருக்கிறார்கள். *71.* சத்தியம் அவர்களின் விருப்பங்களைப் பின்பற்றியிருந்தால் வானங்கள், பூமி மற்றும் அவற்றிற்கிடையிலுள்ள அனைத்தும் அழிந்து போயிருக்கும். மாறாக நாம் அவர்களுக்கு அவர்களுக்கான அறிவுரையையே வழங்கியுள்ளோம். ஆயினும் அவர்கள் தங்களுக்கு வழங்கப்பட்ட அறிவுரையை புறக்கணித்துக் கொண்டிருக்கிறார்கள்.

*72.* அல்லது நீர் அவர்களிடம் ஏதேனும் கூலி கேட்கிறீரா? உம் இறைவனுடைய கூலியே மிகச்சிறந்ததாகும். அவனே கொடையாளர்களிளெல்லாம் மிகச்சிறந்தவன். *73.* நிச்சயமாக நீர் அவர்களை நேரான வழியின்பக்கம் அழைக்கின்றீர். *74.* ஆயினும் மறுமையை நம்பாதவர்கள்தான் அவ்வழியை விட்டும் விலகிச் செல்கிறார்கள்.

*75.* நாம் அவர்கள்மீது கருணைகாட்டி அவர்களுக்கு ஏற்பட்டுள்ள துன்பத்தை நீக்கிவிட்டால் தங்கள் வரம்பு மீறலிலேயே அவர்கள் தடுமாறித் திரிவார்கள். *76.* நாம் அவர்களை வேதனையால் பிடித்தோம். அவர்கள் தங்கள் இறைவனுக்குப் பணியவுமில்லை; அவனிடம் மன்றாடவும் இல்லை. *77.* இறுதியில் அவர்கள்மீது கடும் வேதனையின் வாயிலை நாம் திறந்து விட்டால் அவர்கள் நிராசையடைந்து விடுவார்கள்.

*78. அவனே உங்களுக்கு செவியையும், கண்களையும், உள்ளங்களையும் வழங்கினான். ஆயினும் நீங்கள் மிகக்குறைவாகவே நன்றி செலுத்துகிறீர்கள்*. 79. அவனே உங்களைப் பூமியில் பரவச்செய்தான். அவனிடமே நீங்கள் ஒன்றுதிரட்டப்படுவீர்கள். 80. அவனே வாழ்வையும், மரணத்தையும் அளிக்கிறான். இரவு பகல் மாறிமாறி வருவதும் அவனது கட்டுப்பாட்டில்தான் உள்ளது. நீங்கள் புரிந்துகொள்ள மாட்டீர்களா?*

*81. ஆயினும் முன்னோர்கள் கூறியதைப்போன்றே இவர்களும் கூறினார்கள். 82. "நாங்கள் இறந்து மண்ணாகவும், எலும்புகளாகவும் ஆகிவிட்டாலும் மீண்டும் எழுப்பப்படுவோமா?" என்று அவர்கள் கேட்கிறார்கள். 83. "இதற்கு முன்னர் நாங்களும் எங்கள் முன்னோர்களும் இவ்வாறுதான் மிரட்டப்பட்டோம். இது முன்னோர்களின் கட்டுக் கதையேயாகும் (என்றும் கூறுகிறார்கள்)''.*

*84. நீர் கேளும்: "பூமியும், அதிலுள்ளவர்களும் யாருக்குரியவர்கள்? நீங்கள் அறிந்திருந்தால் கூறுங்கள்".*

---

*இந்த பிரபஞ்சத்தில் சிந்திக்கும் ஆற்றல், செவிப்புலன், பார்வை போன்ற தனித்துவமான சக்திகளுடன் படைக்கப்பட்டுள்ள மனிதன் ஒரு சிறப்பான படைப்பாகும். இவை அனைத்தும் வாழ்க்கையின் உண்மைத்தன்மையை மனிதன் அறிந்து கொள்ள வேண்டும் என்ற நோக்கத்திற்காகவே அளிக்கப்பட்டுள்ளன. அவன் தன் செவிப்புலனைக் கொண்டு சத்தியத்தின் குரலைக் கேட்க இறைவனின் சான்றுகளை அவன் தன் இரு கண்களைக் கொண்டு காண வேண்டும். இவை அனைத்திலும் உள்ளுறைந்திருப்பவற்றை அவன் தன் சிந்திக்கும் ஆற்றலைக் கொண்டு கண்டறிய வேண்டும். உண்மையில் இது காதுகள், கண்கள் மற்றும் இதயத்தைக் கொண்டு நன்றி செலுத்துவதாகும். இந்த நன்றியறிதலை செய்யாதவர் மறுமை வாழ்க்கையின் வெகுமதிகளை இழக்கும் நிலைக்கு ஆளாகும் அபாயத்தை எதிர்கொள்ள வேண்டிவரும்.

85. 'அல்லாஹ்வுக்குரியவர்கள்' என்று அவர்கள் கூறுவார்கள். நீர் கேளும்: "பிறகு நீங்கள் சிந்திக்க மாட்டீர்களா?" 86. நீர் கேளும்: "ஏழு வானங்களுக்கும் மகத்தான அரியணைக்கும் அதிபதி யார்?". 87. "அல்லாஹ்தான்!" என்று அவர்கள் கூறுவார்கள். நீர் கேளும்: "பிறகு நீங்கள் ஏன் அஞ்சுவதில்லை?". 88. நீர் கேளும்: "யாருடைய கையில் அனைத்து அதிகாரமும் உள்ளது? அவன் பாதுகாப்பளிப்பவன்; பாதுகாப்புத் தேவையற்றவன். நீங்கள் அறிந்திருந்தால் கூறுங்கள்". 89. அவர்கள் கூறுவார்கள்: "எல்லாம் அல்லாஹ்வுக்கே உரியன". நீர் கேளும்: "பிறகு எவ்வாறு நீங்கள் ஏமாற்றப்படுகிறீர்கள்?".

90. நாம் அவர்களிடம் சத்தியத்தையே கொண்டு வந்துள்ளோம். ஆயினும் அவர்கள்தான் பொய்யர்கள். 91. அல்லாஹ் எந்த மகனையும் தனக்கென ஏற்படுத்திக் கொள்ளவில்லை. அவனுடன் வேறு எந்த இறைவனும் இல்லை. அவ்வாறு இருந்திருந்தால் ஒவ்வொரு இறைவனும் தான் படைத்தவற்றைச் சேர்த்துக்கொண்டு ஒருவருக்கொருவர் தாக்குதல் நடத்தியிருப்பார்கள். அவர்கள் கூறுவதைவிட்டு அல்லாஹ் தூய்மையானவன். 92. அவன் வெளிப்படையானவற்றையும், மறைவானவற்றையும் அறியக்கூடியவன். அவர்களின் இணைவைப்பை விட்டும் அவன் மிக உயர்ந்தவன்.

93. "என் இறைவா! அவர்களுக்கு எச்சரிக்கப்படுவதை நீ எனக்குக் காண்பிப்பதாயின், (அந்த நேரத்தில்) 94. என் இறைவா! அநியாயக்கார மக்களுடன் என்னைச் சேர்த்து விடாதே" என்று நீர் பிரார்த்தனை செய்யும். 95. நிச்சயமாக அவர்களுக்கு எச்சரிப்பதை உமக்குக் காட்டுவதற்கு நாம் ஆற்றல் பெற்றுள்ளோம்.

96. தீமையை மிகச்சிறந்ததைக் (நன்மையைக்) கொண்டு தடுப்பீராக. அவர்கள் கூறுவதை நாம் நன்கறிவோம். 97. நீர்

கூறும்: “என் இறைவா! சாத்தான்களின் தூண்டுதல்களிலிருந்து நான் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். 98. என் இறைவா! அவர்கள் என்னிடம் வருவதை விட்டும் நான் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்”.

99. இறுதியில் அவர்களில் யாருக்கேனும் மரணம் வந்துவிடுமானால் “என் இறைவா, நான் விட்டுவந்ததில் கொஞ்சம் நன்மையைச் சேர்த்துக் கொள்வதற்காக என்னைத் திருப்பி அனுப்பு” என்று கூறுவான். 100. ஒருபோதும் இல்லை. அவன் வெற்று வார்த்தையாகத்தான் இப்படிக் கூறுகிறான். அவர்கள் எழுப்பப்படும் நாள்வரை அவர்களுக்கு முன்னால் ஒரு திரை இருக்கிறது. 101. எக்காளம் ஊதப்பட்டுவிட்டால் அவர்களிடையே எந்த உறவும் இருக்காது; யாரும் யாரையும் விசாரித்துக் கொள்ளவும் மாட்டார்கள். 102. அப்போது எவருடைய (நன்மையின்) எடைத்தட்டு கனமாக இருக்குமோ அவர்கள்தான் வெற்றியாளர்கள். 103. எவருடைய எடைத்தட்டு இலேசாக இருக்குமோ அவர்கள்தான் தமக்குத்தாமே இழப்பை ஏற்படுத்திக் கொண்டவர்கள். அவர்கள் நரகத்தில் என்றென்றும் வீழ்ந்து கிடப்பார்கள். 104. அவர்களின் முகங்களை நரக நெருப்பு பொசுக்கிவிடும். அங்கு அவர்களின் முகங்கள் விகாரமானதாக இருக்கும்.

105. என் வசனங்கள் உங்களுக்கு எடுத்துரைக்கப்பட்டபோது நீங்கள் அவற்றை மறுத்தவர்கள் அல்லவா? (என்று கேட்கப்படும்) 106. அதற்கு அவர்கள் கூறுவார்கள், “எங்கள் இறைவா, எங்களின் துர்பாக்கியம் எங்களை மிகைத்துவிட்டது. நாங்கள் வழிகெட்ட மக்களாக இருந்தோம்”. 107. “எங்கள் இறைவா, எங்களை இதிலிருந்து வெளியேற்றிவிடு. நாங்கள் மீண்டும் இவ்வாறு செயல்பட்டால் நிச்சயமாக நாங்கள் அநீதி இழைத்தவர்களாவோம்”. 108. அதற்கு

*இறைவன் கூறுவான், "இதிலேயே வீழ்ந்து விடுங்கள்; என்னுடன் பேசாதீர்கள்". **109.** என் அடியார்களில் ஒரு பிரிவினர், "எங்கள் இறைவா! நாங்கள் நம்பிக்கை கொண்டோம். எனவே எங்களை மன்னித்து கருணை காட்டு. நீயே மிகச்சிறந்த கருணையாளனாக இருக்கின்றாய் என்று பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்கள். **110.** நீங்கள் அவர்களைப் பரிகாசமாக எடுத்துக் கொண்டீர்கள். அது என் எச்சரிக்கையைவிட்டும் உங்களை மறதியில் ஆழ்த்திவிடும் அளவுக்கு இருந்தது. நீங்கள் அவர்களைக் கண்டு சிரித்து கேலி செய்து கொண்டிருந்தீர்கள். **111.** இன்றையதினம் நான் அவர்களின் பொறுமைக்குப் பரிசளித்தேன். அவர்கள்தான் வெற்றியாளர்கள்".*

***112.** "பூமியில் எத்தனை ஆண்டுகள் நீங்கள் வசித்தீர்கள்?" என்று அவன் கேட்பான். **113.** அதற்கு அவர்கள், "நாங்கள் ஒருநாள் அல்லது அதைவிடக் குறைவாகத் தங்கியிருந்திருப்போம். கணக்கிடுவோரிடம் கேட்டுக் கொள்வாயாக!" என்று கூறுவார்கள். **114.** அதற்கு அவன், "நீங்கள் சிறிது காலமே தங்கி இருந்தீர்கள். நீங்கள் அறிந்திருக்க வேண்டுமே!" என்று கூறுவான்.*

***115.** "உங்களை நாம் நோக்கமின்றியே படைத்தோம் என்றும் நீங்கள் நம்மிடம் திரும்பக் கொண்டு வரப்பட மாட்டீர்கள்" என்றும் எண்ணிக்கொண்டீர்களா? **116.** உண்மையான அரசனான அல்லாஹ் மிக உயர்ந்தவன். அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. அவன் மகத்தான அரியணையின் அதிபதி. **117.** எவர் அல்லாஹ்வுடன் வேறு இறைவனை அழைக்கின்றாரோ - அது குறித்து எந்த ஆதாரமும் இல்லை - அவரது இறைவனால் அவர் விசாரிக்கப்படுவார். நிச்சயமாக நிராகரிப்பாளர்கள் வெற்றிபெற மாட்டார்கள். **118.** நீர் கூறும்: "என் இறைவா! என்னை மன்னித்து என்மீது கருணை காட்டு. நீயே மிகச்சிறந்த கருணையாளன்".*

# *24. ஒளி (அந்நூர்)*

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

*1. இது நாம் அருளி விதியாக்கியுள்ள ஒரு அத்தியாயமாகும். நீங்கள் நினைவில் கொள்ளும்பொருட்டு இதில் தெளிவான வசனங்களை அருளியுள்ளோம். 2. விபச்சாரி, விபச்சாரன் இருவரில் ஒவ்வொருவரையும் நூறு கசையடி அடியுங்கள். நீங்கள் அல்லாஹ்வின்மீதும் மறுமைநாளின்மீதும் நம்பிக்கை கொண்டவர்களாக இருந்தால் அல்லாஹ்வின் மார்க்க விவகாரத்தில் அவர்களுக்காக இரக்கப்பட வேண்டாம். அவ்விருவருக்கும் தண்டனை அளிக்கப்படும்போது நம்பிக்கையாளர்களில் ஒரு பிரிவினர் அங்கிருக்கட்டும். 3. விபச்சாரன் விபச்சாரியையோ, இணைவைக்கும் பெண்ணையோதவிர வேறு யாரையும் மணக்க மாட்டான். விபச்சாரி விபச்சாரனையோ, இணைவைக்கும் ஆணையோதவிர வேறு யாரையும் மணக்க மாட்டாள். நம்பிக்கையாளர்கள் மீது இது தடை செய்யப்பட்டுள்ளது.*

*4. ஒழுக்கமுள்ள பெண்கள் மீது பழிசுமத்தி பின்னர் நான்கு சாட்சிகளைக் கொண்டு வராதவர்களுக்கு எண்பது கசையடிகளை தண்டனையாக அளியுங்கள். அவர்களின் சாட்சியத்தை ஒருபோதும் ஏற்றுக் கொள்ளாதீர்கள். அவர்கள்தான் பாவிகளாவர். 5. ஆயினும் மன்னிப்புக்கோரி தம்மைச் சீர்படுத்திக் கொண்டவர்களைத் தவிர. நிச்சயமாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.*

*6. தம்மைத்தவிர வேறு சாட்சிகள் இல்லாத நிலையில் தம் மனைவியர் மீது (விபச்சாரக்) குற்றம் சுமத்துபவர்கள் 'தாம் உண்மையாளர்' என்பதை நான்கு முறை அல்லாஹ்வின்மீது சத்தியம்*

செய்து கூற வேண்டும். 7. ஐந்தாவது முறை "தான் பொய்யனாக இருந்தால் தன்மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும்" என்று அவன் கூற வேண்டும். 8. 'அவன் பொய்யனாவான்' என்று அல்லாஹ்வின் மீது நான்கு முறை சத்தியமிட்டு, 9. ஐந்தாவது முறை "அவன் உண்மையாளனாக இருந்தால் என்மீது அல்லாஹ்வின் கோபம் உண்டாகட்டும்" என்று அந்தப் பெண் கூறினால் அவளைவிட்டும் தண்டனை நீங்கி விடும். 10. உங்கள்மீது அல்லாஹ்வின் அருளும் அவனது கருணையும் இல்லாதிருக்குமானால் (நீங்கள் வேதனைக்கு ஆளாகியிருப்பீர்கள்). அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.

11. நிச்சயமாக அவதூறு கூறியவர்கள் உங்களில் ஒரு குழுவினர்தான். அந்த சம்பவத்தை உங்களுக்குத் தீங்காக எண்ண வேண்டாம். மாறாக அது உங்களுக்கு நன்மையானதாகும். அவர்களில் ஒவ்வொருவருக்கும் அவரவர் சம்பாதித்துக்கொண்ட பாவங்கள் உள்ளன. அவர்களில் பெரும்பங்கு வகித்தவனுக்குக் கடும் வேதனையுண்டு.

12. நீங்கள் அதனைச் செவியுற்றபோது நம்பிக்கைகொண்ட ஆண்களும், பெண்களும் தங்களைக் குறித்து நல்லெண்ணம் கொண்டு, இது 'அப்பட்டமான அவதூறு' என்று கூறியிருக்க வேண்டாமா? 13. அவர்கள் அதற்காக நான்கு சாட்சிகளைக் கொண்டுவந்திருக்க வேண்டாமா? அவர்கள் சாட்சிகளைக் கொண்டு வராவிட்டால் அவர்கள்தான் அல்லாஹ்விடத்தில் பொய்யர்கள்.

14. உங்கள் மீது இம்மையிலும், மறுமையிலும் அல்லாஹ்வின் அருளும் அவனது கருணையும் இல்லாதிருக்குமானால் நீங்கள் ஈடுபட்டிருந்த காரியத்தினால் கடும் வேதனை உங்களைத் தாக்கியிருக்கும். 15. அதனை உங்கள் நாவுகளால் பரப்பிக்கொண்டும்

நீங்கள் அறியாத விஷயத்தை உங்கள் வாய்களால் கூறிக்கொண்டும் இருந்தீர்கள். நீங்கள் அதனைச் சாதாரணமாக எண்ணி விட்டீர்கள். ஆனால் அல்லாஹ்விடத்திலோ அது மிகக்கடுமையானது. *16.* நீங்கள் அதனைக் கேள்விப்பட்டபோது 'இது குறித்துப் பேசுவது நமக்கு உகந்ததல்ல. (அல்லாஹ்வே) நீ தூய்மையானவன். இது மிகப்பெரிய அவதூறாகும்' என்று கூறியிருக்க வேண்டாமா? *17.* நீங்கள் நம்பிக்கையாளர்களாக இருந்தால் ஒருபோதும் இவ்வாறு செய்யக்கூடாது என்று அல்லாஹ் உங்களுக்கு அறிவுறுத்துகிறான். *18.* அல்லாஹ் உங்களுக்குக் கட்டளைகளை தெளிவாக வழங்குகிறான். அல்லாஹ் நன்கறிந்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்".

*19.* நம்பிக்கையாளர்களிடையே வெட்கக்கேடானவை பரவ வேண்டும் என்று விரும்புவோருக்கு இம்மையிலும், மறுமையிலும் துன்புறுத்தும் வேதனையுண்டு. அல்லாஹ்வே நன்கறிவான், நீங்கள் அறிய மாட்டீர்கள். *20.* உங்கள்மீது அல்லாஹ்வின் அருளும் அவனது கருணையும் இல்லாதிருக்குமானால் (நீங்கள் வேதனைக்கு ஆளாகியிருப்பீர்கள்). நிச்சயமாக அல்லாஹ் மென்மையானவனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

*21.* நம்பிக்கையாளர்களே! சாத்தானின் அடிச்சுவட்டைப் பின்பற்றாதீர்கள். எவர் சாத்தானின் அடிச்சுவட்டைப் பின்பற்றுவாரோ அவர் அறிந்துகொள்ளட்டும்: அவன் மானக்கேடானவற்றையும் தீயவற்றையும் தூண்டுகிறான். உங்கள்மீது அல்லாஹ்வின் அருளும் அவனது கருணையும் இல்லாதிருக்குமானால் உங்களில் எவரும் ஒருபோதும் தூய்மையாக இருக்க முடியாது. ஆயினும் தான் நாடுவோரை அல்லாஹ் தூய்மைப்படுத்துகிறான். அவன் செவியேற்பவனாகவும் நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான்.

*22.* உங்களில் சிறப்பும், வசதியும் உடையவர்கள் ‘உறவினர்கள், ஏழைகள், மற்றும் இறைவழியில் புலம்பெயர்ந்தோருக்குக் கொடுக்க மாட்டோம்’ என்று சத்தியம் செய்ய வேண்டாம். அவர்களை மன்னித்துப் பொறுத்துக் கொள்ளட்டும். அல்லாஹ் உங்களை மன்னிக்க வேண்டும் என்று நீங்கள் விரும்புவதில்லையா? அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

*23.* ஒழுக்கமுள்ள, கள்ளங்கபடமற்ற, நம்பிக்கைகொண்ட பெண்கள்மீது அவதூறு கூறுபவர்கள் இம்மையிலும், மறுமையிலும் சபிக்கப்பட்டு விட்டார்கள். அவர்களுக்குக் கடுமையான வேதனையுண்டு. *24.* அந்நாளில் அவர்களின் நாவுகளும், கைகளும், கால்களும் அவர்களுக்கெதிராக அவர்கள் செய்து கொண்டிருந்த செயல்களைக் குறித்து சாட்சி கூறும். *25.* அந்நாளில் அவர்களுக்குரிய கூலியை அல்லாஹ் நிறைவாக வழங்கிடுவான். அல்லாஹ்வே உண்மையாளன், அனைத்தையும் வெளிப்படுத்தக்கூடியவன் என்பதை அவர்கள் அறிந்து கொள்வார்கள்.

*26.* கெட்டவை கெட்டவர்களுக்கும், கெட்டவர்கள் கெட்டவைகளுக்கும் உரியவர்களாவர். நல்லவை நல்லவர்களுக்கும், நல்லவர்கள் நல்லவைகளுக்கும் உரியவர்களாவர். கெட்டவர்கள் கூறும் அவதூறுகளைவிட்டும் நல்லவர்கள் தூய்மையானவர்கள். இவர்களுக்கு மன்னிப்பும், கண்ணியமான உணவும் உண்டு.

*27.* நம்பிக்கையாளர்களே! உங்கள் வீடுகளைத்தவிர மற்றவர்களின் வீடுகளில் அவர்களின் அனுமதியைப் பெறாமலும், அவர்களுக்கு முகமன் கூறாமலும் நுழையாதீர்கள். நீங்கள் நினைவில் கொள்வதற்கு இதுவே மிகச்சிறந்ததாகும். *28.* அங்கு யாரையும் நீங்கள் காணாவிட்டால் உங்களுக்கு அனுமதியளிக்கப்படும்வரை

அதில் நுழையாதீர்கள். ‘திரும்பிச் செல்லுங்கள்’ என்று உங்களிடம் கூறப்பட்டால் திரும்பி விடுங்கள். இதுவே உங்களுக்கு மிகத்தூய்மையானதாகும். நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவனாக இருக்கின்றான். 29. யாரும் வசிக்காத, உங்களுக்குப் பயனுள்ள பொருட்கள் இருக்கின்ற வீடுகளில் நீங்கள் நுழைவது உங்கள்மீது குற்றமாகாது. நீங்கள் வெளிப்படுத்துவதையும், மறைப்பதையும் அல்லாஹ் நன்கறிவான்.

30. நம்பிக்கைகொண்ட ஆண்களிடம் நீர் கூறும்: “அவர்கள் தங்கள் பார்வைகளைத் தாழ்த்திக் கொள்ளட்டும். தங்கள் வெட்கத்தலங்களைப் பாதுகாத்துக் கொள்ளட்டும். அதுவே அவர்களுக்குத் தூய்மையானது. அவர்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவன்”.

31. நம்பிக்கைகொண்ட பெண்களிடம் நீர் கூறும்: “அவர்கள் தங்கள் பார்வைகளைத் தாழ்த்திக் கொள்ளட்டும். தங்கள் வெட்கத்தலங்களைப் பாதுகாத்துக் கொள்ளட்டும். தங்கள் தோற்றத்தில் சாதாரணமாக வெளிப்படுவதைத்தவிர வேறு எதையும் அவர்கள் வெளிப்படுத்த வேண்டாம். தங்கள் மார்புகளின்மீது முந்தானைகளைப் போட்டுக் கொள்ளட்டும். தங்கள் கணவன்மார்கள், தந்தையர், கணவன்மார்களின் தந்தையர், புதல்வர்கள், கணவன்மார்களின் புதல்வர்கள், சகோதரர்கள், சகோதரர்களின் புதல்வர்கள், சகோதரிகளின் புதல்வர்கள், பெண்கள், அடிமைகள், பெண்களின்மீது நாட்டமில்லாத வேட்கையற்ற ஆண்கள், பெண்களின் அந்தரங்க விஷயங்களை இன்னும் அறிந்து கொள்ளாத சிறுவர்கள் ஆகியோரைத்தவிர மற்றவர்களிடம் தங்கள் அலங்காரத்தை அவர்கள் வெளிப்படுத்த வேண்டாம். தங்களின் மறைவான அலங்காரத்தை வெளிப்படுத்துவதற்காக தங்கள்

கால்களைப் பூமியில் அடித்துக்கொண்டு நடக்க வேண்டாம். நம்பிக்கையாளர்களே, வெற்றிபெறும் பொருட்டு நீங்கள் அனைவரும் அல்லாஹ்வின் பக்கம் திரும்பி விடுங்கள்''.

*32.* உங்களில் திருமணமாகாதவர்களுக்கும், உங்கள் அடிமைகளில் திருமணத்திற்குத் தகுதியான ஆண்களுக்கும், பெண்களுக்கும் மணமுடித்து வையுங்கள். அவர்கள் ஏழைகளாக இருந்தால் அல்லாஹ் தன் அருளால் அவர்களைத் தன்னிறைவாக்குவான். அல்லாஹ் தாராளமானவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். *33.* தன் அருளால் அல்லாஹ் தன்னிறைவாக்கும்வரை திருமணத்திற்கான வாய்ப்பைப் பெறாதவர்கள் பொறுத்திருக்கட்டும். உங்கள் அடிமைகளில் யாரேனும் சுதந்திரம் பெறுவதற்காக ஒப்பந்தம் செய்துகொள்ள விரும்பினால் - அவர்களிடம் நீங்கள் அதற்கான தகுதியைக் கண்டால் - அவர்களுக்கு சுதந்திரம் அளித்து விடுங்கள். அல்லாஹ் உங்களுக்கு வழங்கிய செல்வத்திலிருந்து அவர்களுக்கும் வழங்குங்கள். உங்கள் அடிமைப் பெண்கள் ஒழுக்கத்தை விரும்பும் நிலையில் அவர்களை உலகத்தின் அற்ப ஆதாயத்திற்காக விபச்சாரத்தின் பக்கம் தள்ளி விடாதீர்கள். அவர்களை யாரேனும் நிர்ப்பந்தித்தால் அவர்கள் நிர்ப்பந்திக்கப்பட்ட பின்னர் - அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். *34.* நிச்சயமாக நாம் உங்களுக்குத் தெளிவான வசனங்களையும், உங்களுக்கு முன்சென்றவர்களின் உதாரணங்களையும் அருளியுள்ளோம். இறையச்சமுடையோருக்கு அறிவுரையையும் வழங்கியுள்ளோம்.

*35.* அல்லாஹ் வானங்கள் மற்றும் பூமியின் ஒளியாக இருக்கின்றான். அவனது ஒளிக்கு உதாரணம் விளக்கு இருக்கும் ஒரு மாடத்தைப் போன்றதாகும். அவ்விளக்கு ஒரு கண்ணாடிப்படிகத்திற்குள் உள்ளது. அக்கண்ணாடிப்படிகம் பிரகாசிக்கும் நட்சத்திரத்தைப் போன்றது. அது வளம்மிக்க ஆலிவ் மரத்தின் எண்ணெயைக் கொண்டு எரிக்கப்படுகிறது அது கிழக்கைச் சேர்ந்ததுமில்லை; மேற்கைச் சேர்ந்ததுமில்லை. அதன் எண்ணெய் நெருப்பு படாமலேயே தானாக ஒளிரக்கூடியது - ஒளிக்கு மேல் ஒளி(யாக இருக்கிறது). தான் நாடுவோருக்கு தன் ஒளியின் பக்கம் அல்லாஹ் வழிகாட்டுகிறான். அல்லாஹ் மக்களுக்கு உதாரணங்களைக் கூறுகிறான். அல்லாஹ் அனைத்தையும் அறிந்தவன்*.

*36.* எந்த வீடுகள் உயர்த்தப்படுவதற்கும் தனது பெயர் கூறப்படுவதற்கும் அல்லாஹ் அனுமதியளித்துள்ளானோ அவற்றில் அவர்கள் காலையிலும் மாலையிலும் அவனை நினைவு கூர்கிறார்கள். *37.* அவர்களின் வியாபாரமோ, கொடுக்கல் வாங்கலோ இறைநினைவைவிட்டும், தொழுகையைக் கடைப்பிடிப்பதைவிட்டும், கடமையாக்கப்பட்ட தர்மத்தை அளிப்பதை விட்டும் அவர்களைத் திருப்பிவிடாது. உள்ளங்களும் பார்வைகளும் தடுமாறும் நாளைக் குறித்து அவர்கள் அஞ்சிக் கொண்டிருப்பார்கள். *38.* அவர்களின் செயலுக்கான சிறந்த கூலியை

---

*இது பல பொருள்களைத் தரக்கூடிய உருவகமாகும். 'ஒளி' என்பது எல்லாம்வல்ல இறைவனின் வழிகாட்டுதலைக் குறிப்பதாகும். இங்கே 'மாடம்' என்பது இறைநம்பிக்கையாகவும் குறிப்பிடப்படுகிறது. அதாவது இது இதயத்தில் இருக்கும் இறை நம்பிக்கை என்பதாகிறது. இது 'ஒளிரும் நடசத்திரம்' என்பதைக் கொண்டும் 'ஒளி பொருந்திய எண்ணெய்' என்பதைக் கொண்டும் விரித்துரைக்கப்படுகிறது.

அல்லாஹ் வழங்கிடுவான். அவர்களுக்குத் தனது அருளை இன்னும் அதிகப்படுத்திடுவான். தான் நாடியோருக்கு அல்லாஹ் கணக்கின்றி வழங்குகிறான்.

*39.* நிராகரிப்பாளர்களின் செயல்கள் பாலைவனத்தில் தென்படும் கானல்நீரைப் போன்றது. தாகித்தவன் அதனைத் தண்ணீர் என்றே எண்ணுகிறான். அவன் அதன் அருகில் வரும்போது எதையும் காண மாட்டான். அங்கு அல்லாஹ் அவனுக்கு விதித்த முடிவைத்தான் காண்பான். எனவே அல்லாஹ் அவனது கணக்கைத் தீர்த்து விடுகிறான். கணக்கு தீர்ப்பதில் அல்லாஹ் விரைவானவன். *40.* அல்லது அது ஆழ்கடலில் இருக்கும் இருளைப் போன்றது. அங்கு அலைகளுக்கு மேல் அலைகள் எழும்பிக் கொண்டு இருக்கின்றன. அதற்கு மேல் மேகங்கள் சூழ்ந்துள்ளன. பலவிதமான இருள் ஒன்றன்மீது ஒன்றாக மூடியுள்ளது. எவரேனும் ஒருவர் தன் கையை நீட்டினால் அதை அவரால் பார்க்க முடியாது. யாருக்கு அல்லாஹ் ஒளியைத் தரவில்லையோ அவருக்கு எந்த ஒளியும் இல்லை.

*41.* வானங்களிலும், பூமியிலும் உள்ளவர்களும், தங்கள் இறக்கைகளை விரித்தவாறு பறவைகளும் அல்லாஹ்வைப் புகழ்ந்து கொண்டிருப்பதை நீர் காணவில்லையா? ஒவ்வொன்றும் தன் தொழுகையையும், புகழ்ந்திடும் முறையையும் அறிந்தேயுள்ளன. அவர்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவன். *42.* வானங்கள் மற்றும் பூமியின் ஆட்சி அல்லாஹ்வுக்கே உரியது. அவனிடமே அனைவரும் திரும்பிச் செல்லவேண்டும்.

*43.* நீங்கள் பார்க்கவில்லையா? அல்லாஹ் மேகங்களை மெல்ல ஓட்டி வருகின்றான். பின்னர் அவற்றை ஒன்றோடொன்று சேர்க்கின்றான். பின்னர் அதனை அடுக்கடுக்காக ஆக்குகின்றான்.

அதற்கிடையிலிருந்து மழை வெளிப்படுவதை நீங்கள் காண்பீர். அவன் வானத்திலுள்ள மலைபோன்ற மேகங்களிலிருந்து ஆலங்கட்டிகளைப் பொழிகின்றான். தான் நாடுவோர் மீது அதனை விழச் செய்கின்றான். தான் நாடுவோரிடமிருந்து அதனைத் திருப்பி விடுகின்றான். அதனுடைய மின்னலின் ஒளி பார்வைகளைப் பறிக்கப் பார்க்கின்றது. 44. அல்லாஹ் இரவையும் பகலையும் மாற்றிக்கொண்டே வருகின்றான். நிச்சயமாக இதில் அறிவுடையோருக்குப் படிப்பினை இருக்கின்றது.

45. அல்லாஹ் ஒவ்வொரு உயிரினத்தையும் நீரால் படைத்துள்ளான். அவற்றில் சில தம் வயிற்றால் ஊர்ந்து செல்கின்றன. சில இரு கால்களால் நடந்து செல்கின்றன. இன்னும் சில நான்கு கால்களால் நடந்து செல்கின்றன. தான் நாடுவதை அல்லாஹ் படைக்கிறான். நிச்சயமாக அல்லாஹ் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவன். 46. சத்தியத்தைத் தெளிவுபடுத்தும் வசனங்களை நாம் அருளியுள்ளோம். தான் நாடியோருக்கு அல்லாஹ் நேரான வழியைக் காட்டுகிறான்.

47. நாங்கள் அல்லாஹ்வின்மீதும், தூதரின்மீதும் நம்பிக்கைகொண்டு அவர்களுக்குக் கீழ்ப்படிந்துள்ளோம் என்று அவர்கள் கூறுகிறார்கள். ஆயினும் அவர்களில் ஒரு பிரிவினர் அதன் பின்னரும் புறக்கணித்து விடுகிறார்கள். இவர்கள் நம்பிக்கையாளர்கள் அல்லர். 48. இறைத்தூதர் அவர்களிடையே (எழும் விவகாரங்களில்) தீர்ப்பளிக்க வேண்டும் என்பதற்காக அவர்கள் அல்லாஹ்வின் பக்கமும் அவனது தூதரின் பக்கமும் அழைக்கப்பட்டால் அவர்களில் ஒரு பிரிவினர் புறக்கணித்து விடுகிறார்கள். 49. நியாயம் தங்களுக்குச் சாதகமாக இருந்தால் கீழ்ப்படிந்தவர்களாக அவரிடம் வருகிறார்கள். 50. அவர்களின் உள்ளங்களில் நோயுள்ளதா? அல்லது அவர்கள் சந்தேகத்தில் ஆழ்ந்து கிடக்கிறார்களா? அல்லது அல்லாஹ்வும்

அவனது தூதரும் தங்களுக்கு அநீதி இழைத்து விடுவார்கள் என்று அஞ்சுகிறார்களா? மாறாக அவர்கள்தான் அநியாயக்காரர்கள்.

*51.* இறைத்தூதர் அவர்களிடையே தீர்ப்பளிக்க வேண்டும் என்பதற்காக நம்பிக்கையாளர்கள் அல்லாஹ்வின் பக்கமும், அவனது தூதரின் பக்கமும் அழைக்கப்பட்டால் ‘கேட்டோம், கீழ்ப்படிந்தோம்’ என்பதுதான் அவர்களின் பதிலாக அமையும். இவர்கள்தான் வெற்றியாளர்கள். *52.* அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் கீழ்ப்படிந்து, அல்லாஹ்வுக்கு அஞ்சி, அவனுக்கு மாறு செய்வதைவிட்டு தவிர்ந்து கொள்பவர்கள்தான் வெற்றியாளர்கள்.

*53.* நீங்கள் கட்டளையிட்டால் நிச்சயம் நாங்கள் வெளியேறி விடுவோம் என்று அவர்கள் அல்லாஹ்வின் மீது உறுதியாக சத்தியமிட்டுக் கூறுகிறார்கள். நீர் கூறும்: “சத்தியம் செய்யாதீர்கள். முறையான கீழ்ப்படிதலே அவசியம். நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவன்”. *54.* நீர் கூறும்: “அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் கீழ்ப்படியுங்கள். அவர்கள் புறக்கணித்துவிட்டால் தூதர் மீது சுமத்தப்பட்டுள்ள கடமைக்குத்தான் அவர் பொறுப்பாவார். உங்கள்மீது சுமத்தப்பட்டுள்ள கடமைக்கு நீங்கள்தான் பொறுப்பு. நீங்கள் அவருக்குக் கட்டுப்பட்டால் நேர்வழி பெறுவீர்கள். தெளிவாக எடுத்துரைப்பதுதான் தூதர் மீதுள்ள கடமையாகும்”.

*55.* உங்களில் நம்பிக்கைகொண்டு, நற்செயல்கள் புரிந்தோருக்கு அல்லாஹ் இவ்வாறு வாக்களித்துள்ளான்: “அவர்களுக்கு முன்னிருந்தவர்களுக்கு அதிகாரம் வழங்கியது போன்று அவர்களுக்கும் பூமியில் அதிகாரம் வழங்குவான். தான் விரும்பும் மார்க்கத்தை அவர்களுக்காக மேலோங்கச் செய்வான். அவர்களுக்கு ஏற்பட்ட அச்சத்திற்குப்பின் அமைதியை ஏற்படுத்துவான்”. அவர்கள் என்னை மட்டுமே வணங்குவார்கள்.

எனக்கு எதையும் இணையாக்க மாட்டார்கள். இதன் பின்னரும் நிராகரிப்பவர்கள்தான் கீழ்ப்படியாதவர்கள்.

*56.* தொழுகையைக் கடைப்பிடித்து கடமையாக்கப்பட்ட தர்மத்தையும் வழங்குங்கள். இந்தத் தூதருக்கும் கட்டுப்படுங்கள். இதனால் நீங்கள் இரக்கம் காட்டப்படுவீர்கள். *57.* நிராகரிப்பாளர்கள் பூமியில் இறைவனை வென்று விடுவார்கள் என்று நீர் எண்ண வேண்டாம். அவர்களின் இருப்பிடம் நரகம்தான். அது மிகவும் கெட்ட இருப்பிடமாகும்.

*58.* நம்பிக்கையாளர்களே! உங்கள் அடிமைகளும் உங்களில் பருவ வயதை அடையாத சிறுவர்களும் மூன்று நேரங்களில் உங்களிடம் அனுமதி பெற வேண்டும். அவை வைகறை தொழுகைக்கு முன்னரும், நீங்கள் ஆடைகளைக் களைந்திருக்கும் நண்பகலிலும் மற்றும் இரவுநேரத் தொழுகைக்குப் பின்னரும். இந்த மூன்று நேரமும் உங்களுக்குத் திரைமறைவு நேரங்களாகும். இவை அல்லாத மற்ற நேரங்களில் உங்களின்மீதோ, அவர்களின்மீதோ எந்தக் குற்றமுமில்லை. ஏனெனில் நீங்கள் ஒருவர் மற்றவரிடம் அடிக்கடி வந்து போய்க் கொண்டிருக்கிறீர்கள். இவ்வாறு அல்லாஹ் உங்களுக்கு தன் வசனங்களைத் தெளிவுபடுத்துகிறான். அல்லாஹ் நன்கறிந்தவனாகவும் ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான். *59.* உங்கள் குழந்தைகள் பருவ வயதை அடைந்துவிட்டால் அவர்களுக்கு முன்னிருந்தவர்கள் அனுமதி பெற்றதைப்போலவே அவர்களும் அனுமதிபெற வேண்டும். இவ்வாறு தன் வசனங்களை அல்லாஹ் உங்களுக்குத் தெளிவுபடுத்துகிறான். அல்லாஹ் நன்கறிந்தவனாகவும் ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான். *60.* திருமண ஆர்வத்தைக் கடந்துவிட்ட மூதாட்டிகள் தங்கள் மேலாடைகளைக் களைந்து வைப்பது குற்றமாகாது. ஆயினும் அவர்கள் தங்கள் அழகை வெளிப்படுத்தக்கூடாது. அவர்களும்

பேணுதலைக் கடைப்பிடித்தால் மிகச் சிறந்ததாகும். அல்லாஹ் செவியேற்பவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கிறான்.

*61.* பார்வையற்றவர்மீதும், ஊனமுற்றவர்மீதும், நோயாளியின் மீதும் எவ்விதக் குற்றமும் இல்லை. நீங்கள் உங்கள் வீடுகளிலோ, உங்கள் தந்தையர், அன்னையர், சகோதரர்கள், சகோதரிகள், தந்தையின் சகோதரர்கள், தந்தையின் சகோதரிகள், அன்னையரின் சகோதரர்கள், அன்னையரின் சகோதரிகள் ஆகியோரின் வீடுகளிலோ, எந்த வீடுகளின் திறவுகோல்கள் உங்களிடம் உள்ளதோ அந்த வீடுகளிலோ, உங்கள் நண்பர்களின் வீடுகளிலோ நீங்கள் ஒன்றுசேர்ந்தோ, தனித்தனியாகவோ உணவருந்துவது உங்கள்மீது குற்றமாகாது. நீங்கள் வீடுகளில் நுழைந்தால் உங்களைச் சார்ந்தவர்களுக்கு முகமன் கூறுங்கள். அது அல்லாஹ்விடமிருந்துவந்த அருள்வளம்மிக்க தூய்மையான பிரார்த்தனையாகும். இவ்வாறே நீங்கள் புரிந்துகொள்ளும்பொருட்டு அல்லாஹ் உங்களுக்கு வசனங்களைத் தெளிவுபடுத்துகிறான்.

*62.* அல்லாஹ்வின்மீதும் அவனது தூதரின்மீதும் நம்பிக்கை கொண்டவர்கள்தான் உண்மையான நம்பிக்கையாளர்கள். அவர்கள் ஏதேனும் பொதுப்பணி நிமித்தமாக தூதருடன் இருந்தால் அவரிடம் அனுமதி பெறாமல் அங்கிருந்து வெளியேற மாட்டார்கள். நிச்சயமாக உம்மிடம் அனுமதி கோருபவர்கள்தான் அல்லாஹ்வின்மீதும் அவனது தூதரின்மீதும் நம்பிக்கை கொண்டவர்கள். எனவே அவர்கள் தங்களின் காரியங்களுக்காக உம்மிடம் அனுமதி கோரினால் அவர்களில் நீங்கள் விரும்பியவருக்கு அனுமதியளித்து விடுவீராக. அவர்களுக்காக அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருவீராக. நிச்சயமாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

*63.* நீங்கள் ஒருவரையொருவர் அழைப்பதைப்போன்று தூதரின் அழைப்பையும் கருதி விடாதீர்கள். உங்களில் மறைவாக மெல்ல நழுவிச்சென்று விடுபவர்களை அல்லாஹ் நன்கறிவான். எனவே அவனது கட்டளைக்கு மாறுசெய்பவர்கள் அஞ்சிக்கொள்ளட்டும். ஏதேனும் ஆபத்து அவர்களைச் சூழ்ந்து கொள்ளலாம் அல்லது துன்புறுத்தும் வேதனை அவர்களை வந்தடையலாம். *64.* அறிந்து கொள்ளுங்கள்: வானங்களிலும், பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்வுக்கே உரியன. நீங்கள் எந்த நிலையில் இருக்கிறீர்கள் என்பதை அல்லாஹ் அறிகிறான். அவர்கள் அவனிடம் திரும்பக் கொண்டு வரப்படும் நாளில் அவர்கள் செய்தவற்றை அவன் அவர்களுக்கு அறிவித்து விடுவான். அல்லாஹ் ஒவ்வொரு பொருளையும் நன்கறிந்தவன்.

## 25. பிரித்தறிவிக்கக்கூடியது (அல்ஃபுர்கான்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

*1.* அகிலத்தார் அனைவரையும் எச்சரிக்கை செய்வதற்காக தன் அடியார் மீது சத்தியத்தையும் அசத்தியத்தையும் பிரித்தறிவிக்கக்கூடிய வேதத்தை அருளியவன் மிகவும் பாக்கியமுடையவன். *2.* வானங்கள் மற்றும் பூமியின் ஆட்சி அவனுக்கே உரியது. அவன் தனக்கு யாரையும் மகனாக ஏற்படுத்திக் கொள்ளவில்லை. அவனது ஆட்சியில் யாருக்கும் பங்கு இல்லை. அவனே ஒவ்வொன்றையும் படைத்து அவற்றின் விதியை நிர்ணயம் செய்தான். *3.* ஆயினும் அவர்கள் அவனை விட்டுவிட்டு வேறு தெய்வங்களை ஏற்படுத்திக் கொண்டார்கள். அவை எதையும் படைக்க மாட்டாது. மாறாக அவையே படைக்கப்பட்டவைதான். அவை தமக்குக்கூட எவ்வித இழப்பைபோ, பலனையோ ஏற்படுத்திக்கொள்ள இயலாதவை.

மரணிக்கச் செய்யவோ, வாழ்வளிக்கவோ மீண்டும் உயிர் கொடுத்து எழுப்பவோ அவை சக்தி பெற மாட்டாது.

4. "இது அவரே புனைந்துகொண்ட ஒரு பொய்தான். இதில் அவருக்கு வேறு சிலரும் உதவியாக இருக்கிறார்கள்" என்று நிராகரிப்பாளர்கள் கூறுகிறார்கள். இவர்கள் அக்கிரமக்காரர்களாகவும், பொய்யர்களாகவும் ஆகிவிட்டார்கள். 5. "இது முன்னோர்களின் கட்டுக்கதைகளாகும். இதனை அவர் எழுதச் சொல்கிறார். இது காலையிலும், மாலையிலும் அவருக்குப் படித்துக் காட்டப்படுகிறது" என்றும் அவர்கள் கூறுகிறார்கள். 6. நீர் கூறும்: "வானங்கள் மற்றும் பூமியின் இரகசியங்களை அறிந்தவன்தான் இதனை அருளினான். அவன் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்".

7. அவர்கள், "இத்தூதருக்கு என்னவாயிற்று? உண்ணவும் செய்கிறார்! கடைவீதிகளில் உலவவும் செய்கிறார்! எச்சரிக்கை செய்வதற்காக இவருடன் ஒரு வானவர் இறக்கப்பட்டிருக்கக் கூடாதா?. 8. அல்லது இவருக்கு ஒரு பொக்கிஷம் வழங்கப்பட்டிருக்கக் கூடாதா? அல்லது இவரிடம் உண்பதற்கு ஒரு தோட்டம் இருந்திருக்கக் கூடாதா?" என்று கேட்கிறார்கள். அந்த அநியாயக்காரர்கள் 'நீங்கள் சூனியம் செய்யப்பட்ட ஒரு மனிதரைத்தான் பின்பற்றுகிறீர்கள்' என்றும் கூறுகிறார்கள். 9. பாரும். அவர்கள் எவ்வாறெல்லாம் உம்மை வர்ணிக்கிறார்கள். அவர்கள் வழிகெட்டு விட்டார்கள். இனி அவர்களால் நேர்வழியை அடைய முடியாது.

10. அவன் பாக்கியம்மிக்கவன். அவன் நாடினால் இதை(அவர்கள் கூறியதை) விடச் சிறந்தவற்றை உமக்கு வழங்கிடுவான். ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும் சுவனங்களையும்

*மாடமாளிகைகளையும் உமக்காக அவன் ஏற்படுத்தித் தருவான்.* ***11.*** *அவர்கள் மறுமையை மறுத்து விட்டார்கள். மறுமையை மறுப்பவர்களுக்கு நாம் நரக வேதனையைத் தயார்படுத்தி வைத்துள்ளோம்.* ***12.*** *நரகம் இவர்களைத் தொலைவிலிருந்து காணும்போதே அதன் கொந்தளிப்பையும், இரைச்சலையும் இவர்கள் செவியுறுவார்கள்.* ***13.*** *அங்கு அவர்கள் நெருக்கடியான இடத்தில் விலங்கிடப்பட்டவர்களாக தள்ளப்படும்போது மரணத்தை அழைப்பார்கள்.* ***14.*** *அப்போது அவர்களுக்கு “இன்று நீங்கள் ஒரு மரணத்தை அழைக்காதீர்கள். பல மரணங்களை அழையுங்கள்” என்று கூறப்படும்.* ***15.*** *நீர் கேளும்: “இது சிறந்ததா? அல்லது இறையச்சமுடையோருக்கு வாக்களிக்கப்பட்ட நிலையான சுவனமா? அது அவர்களுக்குக் கூலியாகவும், தங்குமிடமாகவும் அமையும்”.* ***16.*** *அங்கு அவர்கள் விரும்புவதெல்லாம் கிடைக்கும். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். இது உமது இறைவனால் வாக்களிப்பட்ட கடமையாகும்.*

***17.*** *அவன் அவர்களையும், அல்லாஹ்வைவிடுத்து அவர்கள் வணங்குகின்ற தெய்வங்களையும் ஒன்றுதிரட்டும் நாளில் “நீங்களா எனது இந்த அடியார்களை வழிகெடுத்தீர்கள்? அல்லது அவர்கள் தாமாகவே வழிகெட்டு விட்டார்களா?” என்று (அத்தெய்வங்களிடம்) கேட்பான்.* ***18.*** *அதற்கு அவர்கள் கூறுவார்கள்: “நீ தூய்மையானவன். உன்னைத்தவிர வேறு எவரையும் பாதுகாவலர்களாக ஆக்கிக் கொள்வது எங்களுக்குத் தகுமானதல்ல. நீ அவர்களுக்கும் அவர்களின் முன்னோர்களுக்கும் வாழ்க்கை வசதிகளை அளித்தாய். எனவே அவர்கள் உன் நினைவூட்டலை மறந்து அழிவுக்குள்ளாகும் மக்களாகி விட்டார்கள்”.* ***19.*** *அவர்கள் உங்களின் கூற்றைப் பொய்யெனக் கூறி விட்டார்கள். எனவே நீங்கள் உங்களைத் தற்காத்துக் கொள்ளவும்*

முடியாது, எந்த உதவியையும் பெற முடியாது. உங்களில் அநீதி இழைப்போரை நாம் கடும் வேதனைக்கு உட்படுத்துவோம்.

*20.* நாம் உமக்கு முன்னர் அனுப்பிய தூதர்கள் அனைவரும் உணவு உண்பவர்களாகவும், கடைவீதிகளுக்கு செல்பவர்களாகவும்தான் இருந்தார்கள். நாம் உங்களில் சிலரை சிலருக்கு சோதனையாக்கியுள்ளோம். நீங்கள் பொறுமையைக் கடைப்பிடிப்பீர்களா? உமது இறைவன் அனைத்தையும் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

*21.* நம் சந்திப்பை நம்பாதவர்கள், “எங்களிடம் ஏன் வானவர்கள் வரவில்லை? அல்லது எங்களின் இறைவனை நாங்கள் காண வேண்டாமா?” என்று கேட்கிறார்கள். அவர்கள் தங்களைத் தாங்களே பெரிதாக எண்ணி ஆணவம் கொண்டார்கள்; மிகவும் வரம்புமீறி விட்டார்கள். *22.* அவர்கள் வானவர்களைக் காணும் நாளில் குற்றவாளிகளுக்கு எந்த நற்செய்தியும் இருக்காது. ‘காப்பாற்றுங்கள்’ ‘காப்பாற்றுங்கள்’ என்றுதான் குற்றவாளிகள் கதறுவார்கள். *23.* அவர்கள் செய்த செயல்கள் அனைத்தையும் நாம் பறக்கும் புழுதியைப்போலாக்கி விடுவோம். *24.* அந்நாளில் சொர்க்கவாசிகள் சிறந்த தங்குமிடத்தையும், அழகிய ஓய்விடத்தையும் பெற்றிருப்பார்கள்.

*25.* அந்நாளில் வானம் மேகத்தால் பிளந்துவிடும்; வானவர்கள் தொடர்ச்சியாக இறக்கப்படுவார்கள். *26.* அந்நாளில் உண்மையான ஆட்சி அளவிலாக் கருணையாளனுக்கே உரியது. அந்நாள் நிராகரிப்பாளர்களுக்கு மிகக் கடுமையானதாக இருக்கும். *27.* அந்நாளில் அநியாயக்காரன் தன் கைகளைக் கடித்தவாறு கூறுவான்: *28.* “அந்தோ! நான் தூதருடன் இணைந்து நேரான வழியைப் பெற்றிருக்கக்கூடாதா? அந்தோ என் கேடே! நான் இன்னாரை

*உற்ற நண்பனாக்காமல் இருந்திருக்கக்கூடாதா! 29. அறிவுரை என்னிடம் வந்தபின்னரும் என்னை அவன் வழிகெடுத்து விட்டான்". சாத்தான் மனிதனை ஏமாற்றக்கூடியவனாக இருக்கிறான். 30. தூதர் கூறுவார்: "இறைவா, என் சமூகத்தினர் குர்ஆனை முற்றிலும் புறக்கணித்து விட்டார்கள்". 31. இவ்வாறே ஒவ்வொரு தூதருக்கும் குற்றவாளிகளைப் பகைவர்களாக்கினோம். வழிகாட்டுவதற்கும், உதவி செய்வதற்கும் உம் இறைவனே போதுமானவன்.*

*32. "இந்த குர்ஆன் அவருக்கு ஒட்டுமொத்தமாக (ஒரேயடியாக) அருளப்பட்டிருக்க வேண்டாமா" என்று நிராகரிப்பாளர்கள் கேட்கிறார்கள். இதன்மூலம் உமது உள்ளத்தை உறுதிப்படுத்துவதற்காகத்தான் நாம் இதனை பகுதி பகுதியாக அருளியுள்ளோம். 33. அவர்கள் எத்தகைய விநோதமான ஆட்சேபனைகளை எழுப்பினாலும் அதற்குரிய சரியான பதிலையும், தெளிவான விளக்கத்தையும் நாம் வழங்கிடுவோம். 34. அவர்கள் நரகத்தின் பக்கம் முகங்குப்புற இழுத்துச் செல்லப்படுவார்கள். அவர்களின் தங்குமிடம் மிகவும் மோசமானது. அவர்கள்தான் வழிகெட்டவர்கள்.*

*35. நாம் மோசேவுக்கு வேதத்தை வழங்கினோம். அவரது சகோதரர் ஆரோனை அவருக்கு உதவியாளராகவும் ஆக்கினோம். 36. "நீங்கள் இருவரும் நம் வசனங்களை நிராகரித்தவர்களிடம் செல்லுங்கள்" என்று நாம் கூறினோம். பின்னர் நாம் நிராகரித்தவர்களை அடியோடு அழித்து விட்டோம். 37. நோவாவின் சமூகம், தூதர்களை மறுத்தபோது நாம் அவர்களையும் மூழ்கடித்து விட்டோம். அவர்களை மக்களுக்கு ஒரு சான்றாக ஆக்கினோம். அநியாயக்காரர்களுக்கு நாம் துன்புறுத்தும் வேதனையைத் தயார்படுத்தி வைத்துள்ளோம். 38. ஆத் மற்றும் ஸமூத் சமூகத்தினரையும் 'ரஸ்' எனும் ஊரில் வசித்தவர்களையும்,*

*அவர்களுக்கிடையே இருந்த பல சமூகங்களையும் நாம் அழித்துள்ளோம். **39.** அவர்களில் ஒவ்வொருவருக்கும் நாம் உதாரணங்களைக் கூறினோம். அவர்கள் அனைவரையும் அடியோடு அழித்து விட்டோம். **40.** தீய மழை பொழியப்பட்ட அந்த ஊரைத்தான் அவர்கள் கடந்து செல்கிறார்கள். அவர்கள் அதனைப் பார்க்கவில்லையா? ஆயினும் அவர்கள் மீண்டும் எழுப்பப்படுவதை நம்பவேயில்லை.*

***41.** அவர்கள் உம்மைக் கண்டால் பரிகாசமாக எடுத்துக் கொள்கிறார்கள். "இவரைத்தான் அல்லாஹ் தூதராக அனுப்பியுள்ளானா? **42.** நாம் நம் தெய்வங்களின்மீது (நம்பிக்கையில்) உறுதியாக இல்லையென்றால் இவர் அவற்றைவிட்டும் நம்மை வழிகெடுத்திருப்பார்" (என்றும் கூறுகிறார்கள்). வேதனையைக் காணும்போது வழிகேட்டில் இருப்பவர்கள் யார் என்பதை விரைவில் அவர்கள் அறிந்துகொள்வார்கள்.*

***43.** மனஇச்சையைத் தன் கடவுளாக்கிக் கொண்டவனை நீங்கள் பார்த்தீர்களா? அவனுக்கு நீங்கள் பொறுப்பாளியாவீர்களா என்ன? **44.** அல்லது அவர்களில் பெரும்பாலோர் செவியுறுகிறார்கள் அல்லது புரிந்து கொள்கிறார்கள் என்று நீர் எண்ணுகிறீரா? அவர்கள் கால்நடையைப் போன்றவர்கள், ஏன் அவற்றை விடவும் வழிகெட்டவர்கள்.*

***45.** உம் இறைவன் நிழலை எவ்வாறு பரப்புகிறான் என்பதை நீங்கள் பார்க்கவில்லையா? அவன் நாடினால் அதனை ஒரே நிலையில் வைத்திருப்பான். பின்னர் நாம் நிழலுக்கு சூரியனை வழிகாட்டியாக ஆக்கியுள்ளோம். **46.** பின்னர் அதனை சிறுக சிறுக நம் பக்கம் இழுத்துக் கொள்கிறோம். **47.** அவனே உங்களுக்கு இரவைத் திரையாகவும், உறக்கத்தை ஓய்வாகவும், பகலை இயங்கும்*

நேரமாகவும் ஆக்கியுள்ளான். 48. அவனே தன் கருணைக்கு முன்னால் காற்றுகளை நற்செய்தியாக அனுப்புகிறான். வானத்திலிருந்து நாம் தூய்மையான நீரை பொழியச் செய்கிறோம். 49. அதன்மூலம் நாம் உயிரற்ற பூமியை உயிர்ப்பிக்கிறோம். அதிலிருந்து நாம் படைத்த கால்நடைகளுக்கும், ஏராளமான மனிதர்களுக்கும் குடிநீர் புகட்டுகிறோம்.

50. அவர்கள் சிந்திக்கும்பொருட்டு நாம் அவர்களிடையே பல்வேறு விதமாக இதனைத் தெளிவுபடுத்துகிறோம். ஆயினும் மக்களில் பெரும்பாலோர் நன்றிகெட்டவர்களாகத்தான் இருக்கிறார்கள். 51. நாம் விரும்பியிருந்தால் ஒவ்வொரு ஊரிலும் எச்சரிக்கை செய்பவரை அனுப்பியிருப்போம். 52. எனவே நீர் நிராகரிப்பாளர்களுக்கு கீழ்ப்படியாதீர். இந்த குர்ஆனின்மூலம் அவர்களுடன் கடும் முயற்சி செய்வீராக.

53. அவனே இரு கடல்களையும் ஒன்றிணைத்துள்ளான். ஒன்று சுவையானது; தாகம் தீர்க்கக்கூடியது. மற்றொன்று உப்பும், கசப்பும் வாய்ந்தது. அவ்விரண்டுக்கும் இடையே ஒரு திரையையும், மீறமுடியாத ஒரு தடுப்பையும் ஏற்படுத்தியுள்ளான். 54. அவனே மனிதனை நீரிலிருந்து படைத்தான். அவனுக்கு இரத்த உறவுகளையும், திருமண உறவுகளையும் ஏற்படுத்தினான். உமது இறைவன் பேராற்றலுடையவனாக இருக்கின்றான்.

55. அல்லாஹ்வைவிடுத்து தங்களுக்குப் பலனையோ, தீங்கையோ அளிக்க இயலாதவற்றை அவர்கள் வணங்குகிறார்கள். நிராகரிப்பாளன் தன் இறைவனுக்கு எதிரானவர்களுக்குத் துணைபுரிபவனாக இருக்கின்றான். 56. நாம் உம்மை நற்செய்தியாளராகவும், எச்சரிக்கையாளராகவும் அனுப்பியுள்ளோம்.

*57. நீர் கூறும்: "நான் உங்களிடம் எந்தக் கூலியையும் கேட்கவில்லை. ஆயினும் விரும்பியவர் தம் இறைவனின் வழியில் செல்வதைத்தவிர (வேறொன்றையும் நான் விரும்பவில்லை)".*

*58. என்றும் நிலைத்திருப்பவனும், மரணமில்லாதவனுமாகிய இறைவனையே முழுமையாகச் சார்ந்திருப்பீராக. அவனைப் புகழ்ந்து போற்றுவீராக. தன் அடியார்களின் பாவங்களை அறிவதற்கு அவனே போதுமானவன். 59. அவன் வானங்களையும், பூமியையும், அவற்றிற்கு இடையிலுள்ளவற்றையும் ஆறு நாட்களில் (காலகட்டங்களில்) படைத்தான். பின்னர் அரியணையின்மீது நிலைகொண்டான். அவன் அளவிலாக் கருணையாளன். இதனைப்பற்றி அறிந்தவர்களிடம் கேளும்*. 60. 'அளவிலாக் கருணையாளனுக்கு சிரம்பணியுங்கள்' என்று அவர்களிடம் கூறப்பட்டால் அவர்களின் வெறுப்பு இன்னும் அதிகமாகி 'அளவிலாக் கருணையாளன்' என்றால் யார்? நீ கூறுபவருக்கெல்லாம் நாங்கள் சிரம்பணிய வேண்டுமா? என்று கேட்கிறார்கள்.*

*61. அவன் பெரும் பாக்கியமுடையவன். அவன்தான் வானத்தில் கோள்களை அமைத்து அதில் ஒரு விளக்கையும் (சூரியன்), பிரகாசமான சந்திரனையும் ஏற்படுத்தினான். 62. அவனே இரவையும், பகலையும் மாறிமாறி வரும்படி அமைத்துள்ளான். இது படிப்பினை பெற விரும்புவோருக்காகவும், நன்றி செலுத்துவோருக்காகவும்தான்.*

---

*இங்கே குறிப்பிடப்பட்டுள்ள 'ஆறு நாட்கள்' என்பது இறைவனின் ஆறுநாட்களாகும். மனிதர்கள் பயன்படுத்தும் மொழியில் கூறுவதென்றால் 'ஆறு காலகட்டங்கள்' அல்லது 'ஆறு நிலைகளில்' படைக்கப்பட்டுள்ளது என்று குறிப்பிடுவதாகும். அனைத்தும் மிகச்சிறந்த முறையில் திட்டமிடப்பட்டு படைக்கப்பட்டுள்ளது என்பதைக் காட்டுவதாக அது உள்ளது. நல்லதொரு திட்டம் மற்றும் சிறப்பான அமைப்பின் அடிப்படையில் கொண்டு வரப்பட்ட எதுவும் வீணாவதில்லை.

*63.* அளவிலாக் கருணையாளனின் அடியார்கள் பூமியில் பணிவுடன் நடப்பார்கள்; அறிவீனர்கள் அவர்களுடன் (முறைகேடாக) உரையாடினால் ‘சாந்தி உண்டாகட்டும்’ என்று கூறி விலகிவிடுவார்கள். *64.* அவர்கள் தங்கள் இறைவனுக்கு சிரம்பணிந்தவாறும், நின்று வணங்கியவாறும் இரவுகளைக் கழிப்பார்கள். *65.* அவர்கள், ‘எங்கள் இறைவா! நரக வேதனையைவிட்டும் எங்களைக் காப்பாயாக’ என்று பிரார்த்திப்பார்கள். நிச்சயமாக அதனுடைய வேதனை நிலையான அழிவைத் தரக்கூடியதாகும். *66.* நிச்சயமாக அது கெட்ட இருப்பிடமாகும், மோசமான தங்குமிடமாகும். *67.* அவர்கள் செலவு செய்யும்போது வீண்விரயம் செய்ய மாட்டார்கள். கஞ்சத்தனமும் செய்ய மாட்டார்கள். ஆயினும் அவற்றுக்கிடையே நடுநிலையைப் பேணுவார்கள்.

*68.* அவர்கள் அல்லாஹ்வைவிடுத்து வேறு எந்த இறைவனையும் அழைக்க மாட்டார்கள். அல்லாஹ் தடைசெய்த எந்த உயிரையும் அநியாயமாகக் கொல்ல மாட்டார்கள். விபச்சாரத்திலும் ஈடுபட மாட்டார்கள். இவ்வகையான காரியங்களைச் செய்பவர் அதற்குரிய தண்டனையைப் பெற்றே தீருவார். *69.* மறுமைநாளில் அவனுக்கு வேதனை அதிகரித்துக் கொண்டேயிருக்கும். அங்கு இழிவடைந்தவனாக அவன் என்றென்றும் வீழ்ந்து கிடப்பான். *70.* ஆயினும் மன்னிப்புக்கோரி, நம்பிக்கைகொண்டு, நற்செயல்களில் ஈடுபடுகின்றவர்களைத் தவிர. அல்லாஹ் இத்தகைய மக்களின் தீமைகளை நன்மைகளாக மாற்றி விடுவான். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். *71.* மன்னிப்புக்கோரி நற்செயல் புரிபவர் உண்மையில் அல்லாஹ்வின் பக்கம் திரும்புபவராக இருக்கின்றார்.

*72.* அவர்கள் பொய்சாட்சி கூற மாட்டார்கள். வீணானவற்றை கடந்து செல்ல நேர்ந்தால் கண்ணியமான முறையில் கடந்து சென்று

*விடுவார்கள். **73.** அவர்களிடம் தங்கள் இறைவனின் வசனங்கள் நினைவூட்டப்பட்டால் அவற்றைக் குறித்து செவிடர்களாகவும், குருடர்களாகவும் இருக்க மாட்டார்கள். **74.** “எங்கள் இறைவா, எங்கள் மனைவியரிடமிருந்தும், குழந்தைகளிடமிருந்தும் எங்களுக்கு கண்குளிர்ச்சியை அளிப்பாயாக. எங்களை இறையச்சமுடையோருக்கு வழிகாட்டியாகவும் ஆக்கி வைப்பாயாக” என்றும் பிரார்த்திப்பார்கள்.*

***75.** இத்தகைய மக்கள் பொறுமையைக் கடைப்பிடித்ததனால் மாட மாளிகைகளைப் பெறுவார்கள். அங்கு வாழ்த்துக்களுடனும், (சாந்திநிலவட்டும் என்ற) முகமனுடனும் அவர்கள் வரவேற்கப்படுவார்கள். **76.** அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். வசிப்பதற்கும், ஓய்வெடுப்பதற்கும் சிறந்த இடத்தைப் பெற்றிருப்பார்கள். **77.** நீர் (நிராகரிப்பாளர்களிடம்) கூறும்: “நீங்கள் பிரார்த்திக்காவிட்டாலும் என் இறைவன் உங்களைப் பொருட்படுத்தப்போவதில்லை. நீங்கள் மறுத்து விட்டீர்கள். அதன் வேதனை உங்களைப் பிடித்தே தீரும்”.*

## *26. கவிஞர்கள் (அஷ்ஷுஅரா)*

**அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....**

***1.** தா. ஸீம். மீம். **2.** இவை தெளிவான வேதத்தின் வசனங்களாகும். **3.** அவர்கள் நம்பிக்கைகொள்ளவில்லை என்பதற்காக உம்மை நீரே அழித்துக்கொள்வீர் போலும். **4.** நாம் நாடினால் அவர்கள் தலைகுனிந்து பணியும்படியான ஒரு அத்தாட்சியை வானத்திலிருந்து அவர்கள் மீது இறக்கிவிடுவோம். **5.** அளவிலாக் கருணையாளனிடமிருந்து எந்த ஒரு புதிய அறிவுரை அவர்களிடம் வந்தாலும் அதனை அவர்கள் புறக்கணித்து விடுகிறார்கள். **6.** எனவே*

*அவர்கள் நிராகரித்து விட்டார்கள். அவர்கள் எதனைப் பரிகாசம் செய்து கொண்டிருந்தார்களோ அதனைப்பற்றிய உண்மை நிலை அவர்களுக்கு விரைவில் தெரிந்து விடும்.*

*7. அவர்கள் பூமியைப் பார்க்கவில்லையா? எத்தனை வகையான உயர்ந்த தாவரங்களை அதில் நாம் முளைக்கச் செய்துள்ளோம்! 8. நிச்சயமாக அதில் சான்று இருக்கின்றது. ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் நம்பிக்கைகொள்ள மாட்டார்கள். 9. நிச்சயமாக உம் இறைவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.*

*10. உம் இறைவன் மோசேவை அழைத்து 'நீர் அநியாயக்கார சமூகமான பாரோவுடைய சமூகத்திடம் செல்வீராக. 11. அவர்கள் (எனக்கு) அஞ்சமாட்டார்களா?' என்று கேட்டபோது 12."என் இறைவா, அவர்கள் என்னை மறுத்து விடுவார்கள் என்று நான் அஞ்சுகிறேன், 13. என் நெஞ்சம் நெருக்கடிக்குள்ளாகி என் நாவைக்கொண்டு பேச முடியாமல் ஆகிவிடும். எனவே நீ ஆரோனையும் (என்னுடன்) அனுப்புவாயாக. 14. என் மீது அவர்கள் சுமத்தும் ஒரு குற்றச்சாட்டும் உள்ளது. எனவே அவர்கள் என்னைக் கொன்று விடுவார்களோ என்று நான் அஞ்சுகிறேன்" என்று மோசே கூறினார்.*

*15. அதற்கு அவன், "அவ்வாறல்ல. நீங்கள் இருவரும் நம் சான்றுகளுடன் செல்லுங்கள். நாமும் உங்களுடன் செவியேற்றுக் கொண்டிருப்போம். 16. எனவே நீங்கள் இருவரும் பாரோவிடம் சென்று நாங்கள் அகிலங்களின் இறைவனால் அனுப்பப்பட்டவர்களாவோம். 17. இஸ்ராயீலின் மக்களை நீர் எங்களுடன் அனுப்பி விடு, எனக் கூறுங்கள்'' என்று கூறினான். 18. அதற்கு பாரோ, "நீ குழந்தையாக இருந்தபோது நாம் உன்னை*

வளர்க்கவில்லையா? உம் வாழ்நாளின் பல ஆண்டுகளை என்னுடன் நீ கழித்துள்ளாய். 19. நீ அந்த செயலைச் செய்து நன்றிகெட்டவனாகி விட்டாய்" என்று கூறினான்.

20. "நான் வழிதவறியவனாக இருந்தபோது அவ்வாறு செய்து விட்டேன். 21. உங்களுக்கு அஞ்சி ஓடி விட்டேன். எனினும் என் இறைவன் எனக்கு ஞானத்தை வழங்கி என்னைத் தூதர்களில் ஒருவராகவும் ஆக்கினான். 22, நீ இஸ்ராயீலின் மக்களை அடிமைப்படுத்தி வைத்துவிட்டு இந்த உபகாரத்தை எனக்கு சொல்லிக் காட்டுகிறாயா?" என்று மோசே கேட்டார்.

23. 'அகிலங்களின் இறைவன்' என்பது என்ன? என்று பாரோ கேட்டான். 24. அதற்கு மோசே, "வானங்கள், பூமி மற்றும் அவற்றிற்கிடையிலுள்ள அனைத்திற்கும் அவனே இறைவன். நீங்கள் உறுதியாக நம்புவோராக இருந்தால் (அவனையே நம்புங்கள்)" என்று கூறினார். 25. பாரோ தன்னைச் சுற்றி இருந்தவர்களிடம், "நீங்கள் செவியேற்கிறீர்கள் அல்லவா?" என்று கேட்டான். 26. அதற்கு மோசே, "அவன்தான் உங்களுக்கும் இறைவன், முன்சென்ற உங்கள் மூதாதையர்களுக்கும் இறைவன்" என்று கூறினார். 27. அதற்கு பாரோ (அங்கிருந்தவர்களிடம்) "உங்களிடம் அனுப்பப்பட்டுள்ள உங்கள் தூதர் பைத்தியக்காரர்" என்று கூறினான். 28. அதற்கு மோசே, "கிழக்கிற்கும், மேற்கிற்கும் அவற்றிற்கிடையிலுள்ள அனைத்திற்கும் அவனே இறைவன் - நீங்கள் விளங்கிக் கொள்வோராயின்" என்றார். 29. அதற்கு பாரோ, "நீ என்னைத்தவிர வேறு இறைவனை ஏற்படுத்திக் கொண்டால் உன்னைச் சிறையிலடைத்து விடுவேன்" என்றான். 30. "தெளிவான ஒரு ஆதாரத்தை நான் உன்னிடம் கொண்டு வந்தாலுமா?" என்று மோசே கேட்டார். 31. அதற்கு பாரோ, "நீர் உண்மையாளராயின் அதனை என்னிடம் கொண்டு வாரும்'' என்று கூறினான். 32. எனவே மோசே தம் கைத்தடியைப்

போட்டபோது உடனே அது உண்மையான பாம்பாகி விட்டது. *33.* அவர் தம் கையை வெளியே எடுத்தபோது உடனே அது பார்ப்போருக்கு பளிச்செனத் தோன்றியது. *34.* பாரோ தன்னைச் சுற்றியிருந்த பிரமுகர்களிடம், “நிச்சயமாக இவர் கைதேர்ந்த சூனியக்காரராக இருக்கிறார். *35.* தம் சூனியத்தின்மூலம் உங்களை உங்கள் நாட்டிலிருந்து வெளியேற்ற நாடுகின்றார். எனவே இதற்கு நீங்கள் என்ன ஆலோசனை கூறுகிறீர்கள்?” என்று கேட்டான்.

*36.* அதற்கு அவர்கள், “இவருக்கும் இவரது சகோதரருக்கும் அவகாசம் அளியுங்கள். *37.* நகரங்களுக்குள் ஒன்று திரட்டக்கூடியவர்களை அனுப்புங்கள். அவர்கள் கைதேர்ந்த சூனியக்காரர்கள் அனைவரையும் உங்களிடம் கொண்டு வருவார்கள்” என்று கூறினார்கள். *38.* எனவே சூனியக்காரர்கள் ஒருநாள் குறிப்பிட்ட நேரத்தில் ஒன்றுதிரட்டப்பட்டார்கள். *39.* “நீங்கள் ஒன்றுகூடுவீர்களா?” என்று மக்களிடம் கேட்கப்பட்டது. *40.* “சூனியக்காரர்கள் மேலோங்கிவிட்டால் நாம் அவர்களையே பின்பற்றலாம்”. *41.* சூனியக்காரர்கள் வந்தபோது அவர்கள் பாரோவிடம், “நாங்கள் மேலோங்கிவிட்டால் எங்களுக்கு வெகுமதி உண்டல்லவா?” என்று கேட்டார்கள். *42.* அதற்கு அவன், “ஆம், நிச்சயமாக. அப்போது நீங்கள் எனக்கு நெருக்கமானவர்களாகி விடுவீர்கள்” என்று கூறினான்.

*43.* மோசே அவர்களிடம், “நீங்கள் போட வேண்டியதைப் போடுங்கள்” என்று கூறினார். *44.* எனவே அவர்கள் தம் கயிறுகளையும், கைத்தடிகளையும் போட்டார்கள். “பாரோவுடைய கண்ணியத்தின்மீது ஆணையாக நாங்கள்தான் வென்றிடுவோம்” என்றும் கூறினார்கள். *45.* மோசே தம் கைத்தடியைப் போட்டார். உடனே அது அவர்கள் உருவாக்கிய அத்தனை வித்தைகளையும் விழுங்கி விட்டது. *46.* எனவே சூனியக்காரர்கள்

சிரம்பணிந்தவர்களாக, 47. "அகிலங்களின் இறைவன்மீது நாங்கள் நம்பிக்கை கொண்டோம். 48. அவன்தான் மோசே மற்றும் ஆரோனின் இறைவன்" என்று கூறினார்கள்.

49. "நான் உங்களுக்கு அனுமதியளிப்பதற்கு முன்பே நீங்கள் அவரை ஏற்றுக்கொண்டு விட்டீர்களா? நிச்சயமாக அவர்தான் உங்களுக்குச் சூனியத்தைக் கற்றுக் கொடுத்த உங்கள் குரு. எனவே நீங்கள் விரைவில் அறிந்துகொள்வீர்கள். நான் உங்கள் மாறுகை மாறுகால்களைத் துண்டித்து உங்களை சிலுவையில் அறைவேன்" என்று பாரோ கூறினான். 50. அதற்கு அவர்கள், "எந்தப் பாதகமுமில்லை: நாங்கள் எங்கள் இறைவனிடம் திரும்பி விடுவோம். 51. நாங்கள் முன்னதாக நம்பிக்கை கொண்டுவிட்டதால் எங்கள் இறைவன் எங்கள் பாவங்களை மன்னித்து விடுவான் என்றும் எதிர்பார்க்கிறோம்" என்று கூறினார்கள்.

52. நாம் மோசேவுக்கு, "நீர் இரவோடு இரவாக என் அடியார்களை அழைத்துக்கொண்டு வெளியேறி விடுவீராக. நிச்சயமாக நீங்கள் பின்தொடரப்படுவீர்கள்" என்று அறிவித்தோம். 53. எனவே பாரோ நகரங்களில் ஒன்றுதிரட்டக்கூடியவர்களை அனுப்பினான். 54. "அவர்கள் மிகச்சிறிய கூட்டம்தான். 55. ஆயினும் அவர்கள் நம்மைக் கோபத்திற்குள்ளாக்கி விட்டார்கள். 56. நாங்கள் மிகவும் எச்சரிக்கையான கூட்டமாக இருக்கிறோம். (என்று பாரோ கூறினான்)". 57. எனவே நாம் தோட்டங்கள், நீரூற்றுகள், 58. கருவூலங்கள், மதிப்புவாய்ந்த இடங்கள் ஆகியவற்றிலிருந்து அவர்களை வெளியேற்றி விட்டோம். 59. இவ்வாறே இஸ்ராயீலின் மக்களை அவற்றுக்கு வாரிசாக்கினோம்.

60. சூரியன் உதித்தபோது பாரோவும் அவனது படையும் இவர்களைப் பின்தொடர்ந்தார்கள். 61. இரு கூட்டமும்

ஒருவரையொருவர் கண்டுகொண்டபோது மோசேயின் தோழர்கள், “நாம் பிடிபடப் போகிறோம்” என்றார்கள். *62.* அதற்கு மோசே, “ஒருபோதும் இல்லை. நிச்சயமாக என் இறைவன் என்னுடன் இருக்கிறான். அவன் எனக்கு வழிகாட்டுவான்” என்று கூறினார். *63.* நாம் மோசேவுக்கு, “உம் கைத்தடியினால் கடலை அடியும்” என்று அறிவித்தோம். எனவே அது பிளந்து விட்டது. ஒவ்வொரு பிளவும் ஒரு பெரிய மலையைப் போலாகி விட்டது. *64.* அச்சமயத்தில் (பின்தொடர்ந்த) மற்றொரு கூட்டத்தையும் நெருங்கி வரச்செய்தோம். *65.* மோசேவையும், அவருடன் இருந்த அனைவரையும் நாம் பாதுகாத்துக் கொண்டோம். *66.* பின்னர் மற்றவர்களை மூழ்கடித்து விட்டோம். *67.* நிச்சயமாக இதில் சான்று இருக்கின்றது. அவர்களில் பெரும்பாலோர் நம்பிக்கை கொள்பவர்களாக இருக்கவில்லை. *68.* நிச்சயமாக உம் இறைவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

*69.* அவர்களுக்கு ஆப்ரஹாமுடைய வரலாற்றைக் கூறுவீராக. *70.* ஆப்ரஹாம் தம் தந்தையிடமும், சமூகத்திடமும் “நீங்கள் எவற்றை வணங்கிக் கொண்டிருக்கிறீர்கள்?” என்று கேட்டபோது *71.* அவர்கள், “நாங்கள் இச்சிலைகளை வணங்கிக் கொண்டிருக்கிறோம், அவற்றை வழிபடுவதில்தான் நிலைத்திருப்போம்” என்று கூறினார்கள். *72.* “நீங்கள் அழைக்கின்றபோது உங்கள் அழைப்பை அவை செவியேற்கின்றனவா? *73.* அல்லது உங்களுக்குப் பலனையோ, தீங்கையோ அளிக்கின்றனவா?” என்று அவர் கேட்டார். *74.* அதற்கு அவர்கள், “எங்கள் முன்னோர்களை இவ்வாறு செய்பவர்களாகவே கண்டோம்” என்று கூறினார்கள்.

*75.* அவர் கூறினார்: “நீங்களும், உங்கள் முன்னோர்களும் எவற்றை வணங்கிக் கொண்டிருக்கிறீர்கள் என்று பார்த்தீர்களா? *76.* அகிலங்களின் இறைவனைத்தவிர இவையனைத்தும் எனக்குப்

பகைவர்களே. 78. அவன்தான் என்னைப் படைத்தான். அவனே எனக்கு வழிகாட்டுகிறான்; 79. எனக்கு உண்ணவும், பருகவும் தருகிறான். 80. நான் நோயுற்றால் அவனே எனக்குக் குணமளிக்கிறான். 81. அவனே என்னை மரணிக்கச் செய்வான். பின்னர் அவனே என்னை உயிர்ப்பிப்பான். 82. கூலி கொடுக்கப்படும்நாளில் அவன் என் பாவங்களை மன்னித்து விடுவான் என நான் நம்பிக்கை வைக்கிறேன்".

83. "என் இறைவா! எனக்கு மதிநுட்பத்தை வழங்குவாயாக. என்னை நல்லோர்களுடன் சேர்த்து வைப்பாயாக. 84. பிற்கால தலைமுறையினரிடையே எனக்கு நற்பெயரை ஏற்படுத்துவாயாக. 85. என்னை அருட்கொடைகள் நிரம்பிய சுவனத்தின் வாரிசுகளில் ஒருவராக ஆக்குவாயாக. 86. என் தந்தையை மன்னித்து விடுவாயாக. நிச்சயமாக அவர் வழிகெட்டவர்களில் ஒருவராக இருக்கிறார். 87. மனிதர்கள் அனைவரும் உயிர் கொடுத்து எழுப்பப்படும்நாளில் என்னை இழிவுபடுத்தி விடாதே" என்றும் பிரார்த்தித்தார். 88. அந்நாளில் செல்வமோ, பிள்ளைகளோ பயனளிக்காது; 89. தூய்மையான உள்ளத்தோடு அல்லாஹ்விடம் வருபவரைத் தவிர.

90. இறையச்சமுடையோருக்கு சுவனம் அருகில் கொண்டுவரப்படும். 91. வழிகெட்டவர்களுக்கு நரகம் வெளிப்படுத்தப்படும். 92. "அல்லாஹ்வை விடுத்து நீங்கள் வணங்கி வந்த தெய்வங்களெல்லாம் எங்கே என்று அவர்களிடம் கேட்கப்பட்டு, 93. அவை உங்களுக்கு உதவுமா அல்லது தங்களையாவது காத்துக் கொள்ளுமா?" என்று கேட்கப்படும். 94-95. பின்னர் அவைகளும் வழிகெட்டுப் போனவர்களும் இப்லீஸுடைய படையினர் அனைவரும் அதில் முகங்குப்புறத் தள்ளப்படுவார்கள். 96. அங்கு அவர்கள் ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொண்டே 97. "இறைவன் மீது ஆணையாக,

நாங்கள் பகிரங்கமான வழிகேட்டில் இருந்தோம். 98. நாங்கள் உங்களை அகிலங்களின் இறைவனுக்கு சமமாக்கி இருந்தோம். 99. குற்றவாளிகள்தான் எங்களை வழிகெடுத்து விட்டார்கள். 100. எனவே இப்போது எங்களுக்காக பரிந்து பேசுபவரோ, 101. உற்ற நண்பரோ யாரும் இல்லை. 102. அந்தோ, நாங்கள் மீண்டும் ஒருமுறை திரும்ப வேண்டியவர்களாக இருந்தால் நம்பிக்கையாளர்களாக ஆகியிருப்போமே!" என்று புலம்புவார்கள். 103. நிச்சயமாக இதில் சான்று இருக்கின்றது. அவர்களில் பெரும்பாலோர் நம்பிக்கை கொள்பவர்களாக இருக்கவில்லை. 104. நிச்சயமாக உம் இறைவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

105. நோவாவின் சமூகம் தூதர்களை மறுத்தது. 106. அவர்களிடம் அவர்களது சகோதரர் நோவா, "நீங்கள் அஞ்சமாட்டீர்களா?' 107. நான் உங்களுக்கு நம்பிக்கைக்குரிய தூதராவேன். 108. எனவே நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். எனக்குக் கட்டுப்படுங்கள். 109. இதற்காக நான் உங்களிடம் எந்தக் கூலியையும் கேட்கவில்லை. எனது கூலியோ அகிலங்களின் இறைவனிடமே உள்ளது. 110. நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். எனக்குக் கட்டுப்படுங்கள்" என்று கூறினார். 111. அதற்கு அவர்கள், "நாங்கள் உம்மை ஏற்றுக்கொள்வதா? இழிவான மக்கள்தானே உம்மைப் பின்பற்றிக் கொண்டிருக்கிறார்கள்" என்று கூறினார்கள். 112. அதற்கு அவர், "அவர்கள் செய்து கொண்டிருப்பது குறித்து எதனையும் நான் அறியமாட்டேன். 113. அவர்களை விசாரிப்பது என் இறைவன் மீதுள்ள பொறுப்பாகும். 114, நீங்கள் புரிந்துகொள்ள மாட்டீர்களா? நான் நம்பிக்கையாளர்களை விரட்டுபவன் அல்லன். 115. நானோ பகிரங்கமாக எச்சரிப்பவனே" என்று கூறினார்.

*116.* அதற்கு அவர்கள், "நோவாவே! நீ இதனைவிட்டும் விலகிக்கொள்ளாவிடில் நிச்சயம் கல்லெறிந்து கொல்லப்படுவீர்" என்று கூறினார்கள். *117.* "என் இறைவனே! என் சமூகத்தினர் என்னை நிராகரித்து விட்டார்கள். *118.* எனவே நீ எனக்கும் அவர்களுக்குமிடையே தெளிவான தீர்ப்பை வழங்கி விடுவாயாக. என்னையும், என்னுடன் இருக்கும் நம்பிக்கையாளர்களையும் காப்பாற்றி விடுவாயாக" என்று அவர் பிரார்த்தனை செய்தார். *119.* எனவே நிரம்பிய கப்பலில் அவரையும், அவரது தோழர்களையும் நாம் பாதுகாத்துக் கொண்டோம். *120.* பின்னர் எஞ்சியிருந்த நிராகரிப்பாளர்களை மூழ்கடித்து விட்டோம். *121.* நிச்சயமாக இதில் சான்று இருக்கின்றது. அவர்களில் பெரும்பாலோர் நம்பிக்கை கொள்பவர்களாக இருக்கவில்லை *122.* நிச்சயமாக உம் இறைவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

*123.* ஆத் சமூகம் தூதர்களை நிராகரித்தது. *124.* அவர்களது சகோதரர் ஹூத் அவர்களிடம், "நீங்கள் அஞ்சமாட்டீர்களா? *125.*நான் உங்களுக்கு நம்பிக்கைக்குரிய தூதராவேன். *126.* எனவே நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். எனக்குக் கட்டுப்படுங்கள். *127.* இதற்காக நான் உங்களிடம் எந்தக் கூலியையும் கேட்கவில்லை. எனது கூலியோ அகிலங்களின் இறைவனிடமே உள்ளது. *128.* நீங்கள் உயரமான இடங்களிலெல்லாம் வீணான நினைவுச் சின்னங்களை எழுப்புகிறீர்களே! *129.* என்றென்றும் வாழ்பவர்களைப்போல மாபெரும் மாளிகைகளை நிர்மாணிக்கிறீர்களே! *130.* நீங்கள் யாரையேனும் தண்டித்தால் கொடூரமாக தண்டிக்கிறீர்களே! *131.* நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். எனக்குக் கட்டுப்படுங்கள். *132.* நீங்கள் அறிந்துள்ளவற்றைக்கொண்டு உங்களுக்கு உதவிபுரிந்த அந்த இறைவனுக்கு அஞ்சுங்கள். *133.* அவன்தான் கால்நடைகள்,

குழந்தைகள், **134.** தோட்டங்கள் மற்றும் நீரூற்றுகளைக்கொண்டு உங்களுக்கு உதவி புரிந்தான். **135.** உங்கள் விஷயத்தில் மாபெரும் நாளின் வேதனையைக் குறித்து அஞ்சுகிறேன்" என்று கூறினார்.

**136.** அதற்கு அவர்கள், "நீர் அறிவுரை வழங்குவதும், அறிவுரை வழங்காமலிருப்பதும் எங்களுக்கு ஒன்றுதான். **137.** இவை முன்னோர்களின் ஒரு வழக்கம்தான். **138.** நாங்கள் ஒருபோதும் தண்டிக்கப்பட மாட்டோம்" என்று கூறினார்கள். **139.** அவர்கள் அவரை மறுத்து விட்டார்கள். எனவே நாம் அவர்களை அழித்து விட்டோம். நிச்சயமாக இதில் சான்று இருக்கின்றது. அவர்களில் பெரும்பாலோர் நம்பிக்கை கொள்பவர்களாக இருக்கவில்லை **140.** நிச்சயமாக உம் இறைவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

**141.** ஸமூத் சமூகம் தூதர்களை மறுத்தது. **142.** அவர்களது சகோதரர் சாலிஹ் அவர்களிடம், "நீங்கள் அஞ்ச மாட்டீர்களா? **143.** நான் உங்களுக்கு நம்பிக்கைக்குரிய தூதராவேன். **144.** நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். எனக்குக் கட்டுப்படுங்கள். **145.** இதற்காக உங்களிடம் எந்தக் கூலியையும் நான் கேட்கவில்லை. எனது கூலியோ அகிலங்களின் இறைவனிடமே உள்ளது. **146.** நீங்கள் இங்குள்ள தோட்டங்களிலும், நீரூற்றுகளிலும் **147.** விளைநிலங்களிலும், **148.** குலைகளுடைய பேரீச்சந்தோப்புகளிலும் அச்சமற்று வாழ விட்டுவிடப்படுவீர்களா?. **149.** நீங்கள் ஆணவம் கொண்டவர்களாக மலைகளைக் குடைந்து வீடுகளை அமைத்துக் கொள்கிறீர்கள். **150.** எனவே நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். எனக்குக் கட்டுப்படுங்கள். **151.** வரம்புமீறிச் செல்வோருக்குக் கீழ்ப்படியாதீர்கள். **152.** அவர்கள் உலகில் சீர்திருத்தம் செய்யாமல் குழப்பம் விளைவிக்கிறார்கள்" என்று கூறினார்.

*153. அதற்கு அவர்கள், "உனக்கு யாரோ சூனியம் செய்து விட்டார்கள். 154. நீ எங்களைப்போன்ற ஒரு மனிதன்தான். நீ உண்மையாளனாயின் ஏதேனும் சான்றினைக் கொண்டுவா" என்று கூறினார்கள். 155. அதற்கு அவர், "(அத்தாட்சியாக) இதோ ஒரு பெண் ஒட்டகம். இது ஒருநாள் தண்ணீர் குடிக்கட்டும். தண்ணீர் பிடித்துக்கொள்ள நீங்களும் ஒருநாளை நிர்ணயித்துக் கொள்ளுங்கள். 156. அதற்கு எந்தத் தீங்கும் இழைக்காதீர்கள். அவ்வாறு செய்தால் மாபெரும் நாளின் வேதனை உங்களைத் தாக்கும்" என்று கூறினார். 157. அவர்கள் அதனைக் கொன்று விட்டார்கள். பின்னர் வருத்தப்பட்டு நின்றார்கள். 158. ஆகவே அவர்களை வேதனை தாக்கியது. நிச்சயமாக இதில் சான்று இருக்கின்றது. அவர்களில் பெரும்பாலோர் நம்பிக்கை கொள்பவர்களாக இருக்கவில்லை 159. நிச்சயமாக உம் இறைவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.*

*160. லோத்தின் சமூகம் தூதர்களை மறுத்தது. 161. அவர்களது சகோதரர் லோத் அவர்களிடம், "நீங்கள் அஞ்சமாட்டீர்களா? 162. நான் உங்களுக்கு நம்பிக்கைக்குரிய தூதராவேன். 163. நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். எனக்குக் கட்டுப்படுங்கள். 164. இதற்காக நான் உங்களிடம் எந்தக் கூலியையும் கேட்கவில்லை. எனது கூலியோ அகிலங்களின் இறைவனிடமே உள்ளது. 165. உலக மக்களில் நீங்கள் (ஓரினச்சேர்க்கைக்காக) ஆண்களிடம் செல்கிறீர்களா? 166. உங்கள் இறைவன் உங்களுக்காகப் படைத்துள்ள உங்கள் மனைவியரை விட்டுவிடுகிறீர்களா? நீங்கள் வரம்புமீறும் மக்களாக இருக்கிறீர்கள்" என்று கூறினார்.*

*167. அதற்கு அவர்கள், "லோத்தே! நீ இதனைவிட்டும் விலகிக்கொள்ளாவிடில் நிச்சயம் நீ வெளியேற்றப்படுவாய்" என்று கூறினார்கள். 168. அதற்கு அவர், "உங்கள் செயல்களை நான் மிகவும்*

*வெறுக்கிறேன். 169. என் இறைவா! அவர்களின் செயல்களிலிருந்து என்னையும், என் குடும்பத்தினரையும் பாதுகாப்பாயாக” என்று வேண்டினார். 170. எனவே நாம் அவரையும், அவரது குடும்பத்தினர் அனைவரையும் காப்பாற்றினோம், 171. ஒரு கிழவியைத் தவிர. அவள் பின்தங்கியவர்களுடன் இருந்து விட்டாள். 172. பின்னர் நாம் மற்றவர்களை அழித்து விட்டோம். 173. அவர்களின்மீது நாம் (கல்) மழையைப் பொழியச் செய்தோம். அது எச்சரிக்கப்பட்டோர்மீது பொழிந்த மோசமான மழையாக இருந்தது. 174. நிச்சயமாக இதில் சான்று இருக்கின்றது. அவர்களில் பெரும்பாலோர் நம்பிக்கை கொள்பவர்களாக இருக்கவில்லை 175. நிச்சயமாக உம் இறைவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.*

*176. தோப்புவாசிகளும் தூதர்களை மறுத்தார்கள். 177. ஷுஐப் அவர்களிடம், “நீங்கள் அஞ்ச மாட்டீர்களா? 178. நான் உங்களுக்கு நம்பிக்கைக்குரிய தூதராவேன். 179. நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். எனக்குக் கட்டுப்படுங்கள். 180. இதற்காக நான் உங்களிடம் எந்தக் கூலியையும் கேட்கவில்லை. எனது கூலியோ அகிலங்களின் இறைவனிடமே உள்ளது. 181. நீங்கள் நிறைவாக அளந்து கொடுங்கள்; நஷ்டமிழைத்து விடாதீர்கள். 182. சரியான தராசைக்கொண்டு எடை போடுங்கள். 183. மக்களுக்கு அவர்களின் பொருட்களைக் குறைத்து வழங்காதீர்கள். பூமியில் குழப்பம் செய்துகொண்டு திரியாதீர்கள். 184. உங்களையும், முந்தைய தலைமுறையினரையும் படைத்தவனை அஞ்சுங்கள்” என்று கூறினார்.*

*185. அதற்கு அவர்கள், “நீ சூனியம் செய்யப்பட்ட மனிதனேயன்றி வேறில்லை. 186. நீ எங்களைப்போன்ற ஒரு மனிதன்தான். நாங்கள் உன்னைப் பொய்யனாகக் கருதுகிறோம்.*

*187. நீ உண்மையாளனாக இருந்தால் வானத்திலிருந்து ஏதேனும் ஒரு பகுதியை எங்கள் மீது விழச்செய்" என்று கூறினார்கள். 188. அதற்கு அவர், "நீங்கள் செய்து கொண்டிருப்பவற்றை என் இறைவன் நன்கறிவான்" என்று கூறினார். 189. அவர்கள் அவரை மறுத்து விட்டார்கள். எனவே மேகநாளின் வேதனை அவர்களைப் பிடித்துக் கொண்டது. 190. நிச்சயமாக இதில் சான்று இருக்கின்றது. அவர்களில் பெரும்பாலோர் நம்பிக்கை கொள்பவர்களாக இருக்கவில்லை. 191. நிச்சயமாக உம் இறைவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.*

*192. நிச்சயமாக இது அகிலங்களின் இறைவனால் அருளப்பட்ட வேதமாகும். 193. நம்பிக்கைக்குரிய வானவர் (கேப்ரியேல்) 194. தெளிவான அரபி மொழியில் இதனை உமது உள்ளத்தில் அருளினார், 195. நீர் எச்சரிக்கை செய்ய வேண்டும் என்பதற்காக. 196. முன்னோர்களின் வேதங்களிலும் இதனைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. 197. இஸ்ராயீலின் மக்களிலுள்ள அறிஞர்களும் இதனை அறிந்துள்ளார்கள் என்பது இம்மக்களுக்கு ஒரு சான்றாக இல்லையா?*

*198. நாம் இதனை அரேபியர் அல்லாதவர்களுக்கு அருளி 199. இவர்களுக்கு இதனை ஓதிக்காட்டியிருந்தால் இதனை இவர்கள் நம்பியிருக்கவே மாட்டார்கள். 200. இவ்வாறே நாம் நிராகரிப்பை குற்றவாளிகளின் உள்ளங்களில் புகுத்தி விடுகிறோம். 201. கடுமையான வேதனையைக் காணும்வரை அவர்கள் நம்பிக்கை கொள்ள மாட்டார்கள். 202. அவர்கள் உணராதிருக்கும் நிலையில் திடீரென அது அவர்களை வந்தடைந்து விடும். 203. அப்போது அவர்கள் எங்களுக்கு அவகாசம் கொடுக்கப்படாதா என்று புலம்புவார்கள்.*

*204.* நம் வேதனைக்காகவா அவர்கள் அவசரப்படுகிறார்கள்? *205-206.* நாம் அவர்களைச் சில ஆண்டுகள்வரை அனுபவிக்கச்செய்து, பின்னர் அவர்கள் எச்சரிக்கப்பட்டது அவர்களிடம் வந்து விடுமானால் *207.* அவர்கள் அனுபவித்த இன்பங்கள் அவர்களுக்குப் பயனளிக்காது என்பதைப்பற்றி நீர் என்ன நினைக்கிறீர்? *208.* நாம் எந்த ஊர் மக்களையும் அவர்களுக்கு எச்சரிக்கை செய்பவர்களை அனுப்பி நினைவூட்டாமல் அழித்ததில்லை. *209.* நாம் அநீதி இழைப்போர் அல்லர். *210.* இதனை சாத்தான்கள் கொண்டுவரவில்லை. *211.* அது அவர்களுக்குத் தகுதியானதுமன்று; அவர்களால் அவ்வாறு செய்யவும் இயலாது. *212.* அதனைச் செவியேற்பதைவிட்டு அவர்கள் தடுக்கப்பட்டுள்ளார்கள்.

*213.* எனவே நீர் அல்லாஹ்வுடன் வேறு எந்த இறைவனையும் அழைக்காதீர். அவ்வாறாயின் நீரும் தண்டிக்கப்பட்டு விடுவீர். *214.* உம் நெருங்கிய உறவினர்களை எச்சரிக்கை செய்வீராக. *215.* உம்மைப் பின்பற்றும் நம்பிக்கையாளர்களிடம் நீர் பணிவாக நடந்து கொள்ளும். *216.* அவர்கள் உமக்கு மாறாகச் செயல்பட்டால் “நீங்கள் செய்யும் செயல்களைவிட்டும் முற்றிலும் நான் விலகிவிட்டேன்” என்று கூறிவிடும். *217.* யாவற்றையும் மிகைத்தவனும், இணையிலாக் கிருபையாளனுமாகிய இறைவனையே சார்ந்திருப்பீராக. *218.* நீங்கள் (தொழுகைக்காக) நிற்கும்பொழுது அவன் உங்களைப் பார்க்கிறான். *219.* தொழுகையாளிகளுடன் உம் செயல்பாடுகளையும் அவன் பார்க்கிறான். *220.* நிச்சயமாக அவன் செவியேற்பவனாகவும் நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான்.

*221.* சாத்தான்கள் யார்மீது இறங்குகிறார்கள் என்பதை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா? *222.* பொய்கூறும் பாவிகள் அனைவர் மீதும் இறங்குகிறார்கள். *223.* அவர்கள் ஒட்டுக் கேட்கிறார்கள். அவர்களில் பெரும்பாலோர் பொய்யர்களே.

*224.* வழிகெட்டவர்கள்தான் கவிஞர்களைப் பின்பற்றுகிறார்கள். *225.* அவர்கள் ஒவ்வொரு பள்ளத்தாக்கிலும் தடுமாறித் திரிவதையும் *226.* அவர்கள் செய்யாததைச் சொல்வதையும் நீங்கள் பார்க்கவில்லையா? *227.* ஆயினும் நம்பிக்கைகொண்டு, நற்செயல்கள் புரிந்து அல்லாஹ்வை மேலதிகமாக நினைவுகூர்ந்து கொடுமை இழைக்கப்பட்டபிறகு பதிலடி கொடுத்தவர்களைத் தவிர. தாம் எங்கு திரும்பிச் செல்லவேண்டும் என்பதை விரைவில் அநியாயக்காரர்கள் அறிந்துகொள்வார்கள்.

## 27. எறும்புகள் (அந்நம்ல்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

*1.*தா. ஸீன். இவை தெளிவான வேதத்தின் - குர்ஆனின் வசனங்களாகும். *2.* இது நம்பிக்கையாளர்களுக்கு வழிகாட்டியாகவும் நற்செய்தியாகவும் இருக்கின்றது. *3.* அவர்கள் தொழுகையைக் கடைப்பிடித்து கடமையாக்கப்பட்ட தானதர்மத்தையும் வழங்குவார்கள். மறுமையின்மீதும் உறுதியான நம்பிக்கை கொண்டிருப்பார்கள். *4.* மறுமையை நம்பாதோருக்கு அவர்களின் செயல்களை நாம் அழகாக்கிக் காட்டியுள்ளோம். எனவே அவர்கள் தடுமாறித் திரிகிறார்கள். *5.* இவர்களுக்கு மோசமான தண்டனை உண்டு. இவர்கள்தான் மறுமையில் பெரும் இழப்பிற்குரியவர்கள். *6.* நிச்சயமாக இந்த குர்ஆன் அனைத்தையும் அறிந்த ஞானம் மிக்கவனிடமிருந்து உமக்கு வழங்கப்படுகிறது.

*7.* மோசே தம் குடும்பத்தாரிடம், “நான் நெருப்பைக் காண்கிறேன். அங்கிருந்து ஏதேனும் செய்தியை உங்களுக்குக் கொண்டுவருகிறேன் அல்லது நீங்கள் குளிர்காய்வதற்காக ஒரு நெருப்புக் கொள்ளியை கொண்டுவருகிறேன்” என்று கூறினார்.

*8. அவர் அங்கு வந்தபோது பின்வருமாறு ஒரு குரல் கேட்டது: "நெருப்பில் உள்ளவர்களும், அதன் அருகில் உள்ளவர்களும் பாக்கியமிக்கவர்கள். அகிலங்களின் இறைவனாகிய அல்லாஹ் மிகத்தூய்மையானவன்".*

*9. "மோசேயே, நான்தான் அல்லாஹ்! நான் யாவற்றையும் மிகைத்தவன்; ஞானம் மிக்கவன். 10. நீர் உம் கைத்தடியைப் போடும்" - அது பாம்பைப்போல் நெளிவதைக் கண்டதும் அவர் பயந்து பின்வாங்கினார்; திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. "மோசேயே அஞ்சாதீர்! தூதர்கள் என்னிடத்தில் அஞ்ச மாட்டார்கள், 11. தவறிழைத்தவர்களைத் தவிர! ஆயினும் அவர் தீமைக்குப் பின்னர் அதனை நன்மையாக மாற்றிக் கொண்டால் - நான் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றேன்". 12. நீர் உம் கையை அக்குளில் நுழைப்பீராக. அது மாசற்ற வெண்மையாக வெளிப்படும். இந்த இரண்டையும் சேர்த்து ஒன்பது சான்றுகளுடன் பாரோவிடமும் அவனது சமூகத்திடமும் செல்வீராக. நிச்சயமாக அவர்கள் அடிபணியாதவர்களாக இருக்கிறார்கள்". 13. அவர்களிடம் நம்முடைய தெளிவான சான்றுகள் வந்தபோது, "இது வெளிப்படையான சூனியமே" என்று கூறினார்கள். 14. அவர்களின் உள்ளங்கள் அவற்றை உறுதியாக நம்பிக் கொண்டிருந்தும் அக்கிரமத்தாலும், ஆணவத்தாலும் அவற்றை நிராகரித்தார்கள். குழப்பவாதிகளின் முடிவு என்னவாயிற்று என்பதைப் பாரும்.*

*15. நாம் தாவீதுக்கும், சாலமனுக்கும் ஞானத்தை வழங்கினோம். அவ்விருவரும், "நம்பிக்கைகொண்ட தன் அடியார்களில் பலரைவிடவும் எங்களுக்குச் சிறப்பளித்த அல்லாஹ்வுக்கே நன்றி உரித்தாகட்டும்'' என்று கூறினார்கள். 16. சாலமன் தாவீதுக்கு வாரிசானார். அவர், "மக்களே எங்களுக்கு*

பறவைகளின்மொழி கற்றுத் தரப்பட்டுள்ளது. அனைத்து வகையான பொருள்களும் எங்களுக்கு வழங்கப்பட்டுள்ளன. நிச்சயமாக இது வெளிப்படையான அருளாகும்'' என்று கூறினார்.

17. சாலமனுக்காக ஜின்கள், மனிதர்கள், பறவைகள் ஆகியோரிலிருந்து படைகள் திரட்டப்பட்டு அவர்கள் அணிஅணியாக ஆக்கப்பட்டார்கள். 18. அவர்கள் பள்ளத்தாக்கிற்கு வந்தபோது, "எறும்புகளே, உங்கள் புற்றுகளில் நுழைந்து கொள்ளுங்கள். சாலமனும் அவரது படைகளும் தெரியாமல் உங்களை மிதித்து விடக்கூடாது" என்று ஒரு எறும்பு கூறியது. 19. அதனைக் கேட்ட சாலமன் புன்னகைத்தவாறு சிரித்து விட்டார். அவர், "என் இறைவா! என்மீதும், என் பெற்றோரின்மீதும் நீ புரிந்த அருட்கொடைகளுக்கு நன்றி செலுத்துவதற்கும், நீ விரும்புகின்ற நற்செயல்களைச் செய்வதற்கும் நீ எனக்கு அருள்புரிவாயாக. உன் கருணையால் உன் நல்லடியார்களில் என்னையும் சேர்த்து விடுவாயாக!" என்று பிரார்த்தித்தார்.

20. சாலமன் பறவைகளைப் பார்த்துவிட்டு, "என்ன விஷயம்? கொண்டைலாத்திப் பறவையைக் காணவில்லையே? அது எங்காவது மறைந்து விட்டதா? 21. நான் நிச்சயம் அதற்குக் கடுந்தண்டனை அளிப்பேன் அல்லது அதனை அறுத்து விடுவேன். அது என்னிடம் சரியான காரணத்தைக் கொண்டு வரவேண்டும்" என்று கூறினார். 22. சிறிது நேரத்தில் அது அவரிடம் வந்து, "நீங்கள் அறிந்திராத ஒரு விஷயத்தை நான் அறிந்துள்ளேன். நான் 'ஸபா' நகரத்திலிருந்து உறுதியான செய்தியை உங்களிடம் கொண்டு வந்துள்ளேன். 23. அங்கு அம்மக்களை ஒரு பெண் ஆட்சி செய்து கொண்டிருப்பதைக் கண்டேன். அவளுக்கு எல்லா வசதிகளும் வழங்கப்பட்டுள்ளன. அவள் மகத்தான அரியணையையும் பெற்றிருக்கிறாள். 24. அவளும் அவளது சமூகமும் சூரியனுக்கு சிரம்பணிந்து வணங்குவதைக் கண்டேன்.

அவர்களது செயல்களை சாத்தான் அவர்களுக்கு அழகாக்கிக்காட்டி நேரான வழியைவிட்டும் அவர்களைத் தடுத்துள்ளான். எனவே அவர்கள் நேர்வழியில் இல்லை. **25.** வானங்களிலும், பூமியிலும் மறைந்துள்ளவற்றை வெளிப்படுத்துபவனும், நீங்கள் மறைப்பதையும் வெளிப்படுத்துவதையும் நன்கறிந்தவனுமாகிய அல்லாஹ்வுக்கு அவர்கள் சிரம்பணிய வேண்டாமா? **26.** அல்லாஹ்வைத்தவிர வேறு இறைவன் இல்லை. அவன் மாபெரும் அரியணையின் அதிபதி" என்று கூறியது.

**27.** சாலமன், "நீ உண்மையைச் சொல்கிறாயா அல்லது பொய் சொல்கிறாயா என்பதை விரைவில் கண்டுகொள்வோம். **28.** நீ எனது இக்கடிதத்தை எடுத்துச்சென்று அவர்களிடம் போட்டுவிடு. பின்னர் விலகிச்சென்று அவர்கள் என்ன முடிவுசெய்கிறார்கள் என்பதைக் கவனி" என்று கூறினார். **29.** (இக்கடிதத்தைக் கண்ட) 'ஸபா'வின் அரசி கூறினாள்: "அவையோரே, என்னிடம் கண்ணியமான ஒரு கடிதம் போடப்பட்டுள்ளது. **30.** அது சாலமனிடமிருந்து வந்துள்ளது. "அளவிலாக் கருணையாளனும், இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்! **31.** என்னிடம் ஆணவங்கொள்ளாதீர்கள். கட்டுப்பட்டவர்களாக என்னிடம் வந்து விடுங்கள் (என்று அதில் கூறப்பட்டுள்ளது)". **32.** மேலும் அவள் கூறினாள்: "அவையோரே, என்னுடைய இந்த விஷயத்தில் எனக்கு ஆலோசனை கூறுங்கள். நீங்கள் இல்லாமல் எந்த விஷயத்தையும் நான் தீர்மானிப்பதில்லை". **33.** அதற்கு அவர்கள், "நாம் வலிமைமிக்கவர்களாகவும், போர்க்குணம் கொண்டவர்களாவும் இருக்கின்றோம். எனவே என்ன கட்டளையிட வேண்டும் என்பதை நீங்களே முடிவு செய்து கொள்ளுங்கள்" கூறினார்கள். **34.** அவள், "அரசர்கள் ஒரு ஊருக்குள் புகுந்தால் அதனை நாசமாக்கி விடுவார்கள். அங்கு கண்ணியவான்களை

இழிவானவர்களாக்கி விடுவார்கள். அவ்வாறுதான் இவர்களும் செய்வார்கள். **35.** நான் அவர்களிடம் ஒரு அன்பளிப்பை அனுப்பி தூதுவர்கள் என்ன பதிலைக் கொண்டு வருகிறார்கள் என்று பார்க்கப் போகின்றேன்!" என்றாள்.

**36.** தூதுவர்கள் சாலமனிடம் வந்தபோது அவர், "செல்வத்தால் நீங்கள் எனக்கு உதவி செய்ய விரும்புகிறீர்களா? அல்லாஹ் எனக்கு வழங்கியிருப்பது உங்களுக்கு வழங்கியிருப்பதைவிடச் சிறந்ததாகும். உங்கள் அன்பளிப்பைக் கொண்டு நீங்களே மகிழ்ச்சியடைந்து கொள்ளுங்கள். அவர்களிடம் திரும்பிச் செல்லுங்கள். **37.** நாம் அவர்கள் எதிர்கொள்ள முடியாத அளவுக்கு படைகளைத் திரட்டிக்கொண்டு வருவோம். அங்கிருந்து அவர்களை இழிவானவர்களாக்கி வெளியேற்றுவோம்" என்று கூறினார்.

**38.** "அவையோரே! அவர்கள் அடிபணிந்து என்னிடம் வருவதற்கு முன் அவளது அரியணையை உங்களில் யார் என்னிடம் கொண்டு வருவார்கள்" என்று சாலமன் கேட்டார். **39.** மூர்க்கத்தனமான ஒரு ஜின், "நீங்கள் உங்கள் இடத்திலிருந்து எழுவதற்கு முன்பே நான் அதனைத் தங்களிடம் கொண்டுவந்து விடுவேன். நான் அதற்கு சக்தியுள்ளவனாகவும் நம்பிக்கைக்குரியவனாகவும் இருக்கிறேன்" என்று கூறியது. **40.** ஆயினும் வேதஅறிவு பெற்றிருந்த ஒருவர், 'நீங்கள் கண் இமைப்பதற்குள் அதனை நான் கொண்டு வந்துவிடுவேன்' என்று கூறினார். அது தனக்கு முன்னால் இருப்பதைக் கண்ட சாலமன், "இது என் இறைவனின் அருளாகும். இதன்மூலம் நான் நன்றி செலுத்துகிறேனா அல்லது செலுத்தாதிருக்கிறேனா என்பதை அவன் சோதிக்கிறான். எவர் நன்றி செலுத்துகிறாரோ அவர் தமக்காகவே நன்றி செலுத்துகிறார். எவரேனும் நன்றி மறந்தால் அவர் அறிந்துகொள்ளட்டும், என்

இறைவன் தேவையற்றவனாகவும், கண்ணியம் மிக்கவனாகவும் இருக்கின்றான்" என்று கூறினார். .

41. "அவளது அரியணையின் வடிவத்தை மாற்றி அமைத்துவிடுங்கள். அவள் அதனை அறிந்துகொள்கிறாளா அல்லது அறிந்து கொள்ள முடியாதவளாகி விடுகிறாளா? என்பதைப் பார்ப்போம்" என்று சாலமன் கூறினார். 42. அவள் வந்தபோது, "உன் அரியணை இவ்வாறுதான் இருக்குமா?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவள், "இது அது போன்றுதான் இருக்கிறது. இது குறித்து எங்களுக்கு முன்னரே அறிவிக்கப்பட்டு விட்டிருந்தது. நாங்கள் கீழ்ப்படிந்தவர்களாக இருக்கின்றோம்" என்று கூறினாள். 43. அல்லாஹ்வையன்றி அவள் வணங்கிக் கொண்டிருந்தவைதான் அவளைத் தடுத்துவிட்டிருந்தது. அவள் நிராகரிக்கும் மக்களில் உள்ளவளாக இருந்தாள். 44. 'மாளிகையினுள் நுழையும்' என்று அவளிடம் கூறப்பட்டது. அவள் அதனைப் பார்த்தபோது நீர்த்தடாகம் என்று எண்ணி தன் ஆடைகளை கெண்டைக் கால்களுக்கு மேல் உயர்த்திக் கொண்டாள். "இது கண்ணாடிகளால் உருவாக்கப்பட்ட ஒரு மாளிகை" என்று சாலமன் கூறினார். அதற்கு அவள், "என் இறைவா! நான் என் மீதே தீங்கிழைத்துக் கொண்டேன். நான் சாலமனுடன் சேர்ந்து அகிலங்களின் இறைவனாகிய அல்லாஹ்வுக்கு அடிபணிந்து விட்டேன்" என்று கூறினாள்.

45. நாம் ஸமூதிடம் அவர்களது சகோதரர் ஸாலிஹை அனுப்பினோம். அவர் அவர்களிடம் 'அல்லாஹ்வை வணங்குங்கள்' என்று கூறினார். ஆனால் அவர்கள் பிளவுபட்டுத் தங்களுக்கிடையே தர்க்கித்துக் கொள்ளலானார்கள். 46. "என் சமூக மக்களே! நீங்கள் நன்மைக்கு முன்னர் தீமைக்கு ஏன் அவசரப்படுகிறீர்கள்? உங்கள்மீது கருணை காட்டப்படும்பொருட்டு நீங்கள் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரக்கூடாதா?'' என்று அவர் கூறினார்.

*47.* அதற்கு அவர்கள், “நாங்கள் உம்மையும், உம்முடன் இருப்போரையும் கெட்ட சகுனமாகக் கருதுகிறோம்'', என்று கூறினார்கள். அதற்கு அவர், “உங்களுடைய கெட்ட சகுனம் அல்லாஹ்விடம் உள்ளது. உண்மையில் நீங்கள் சோதிக்கப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள்” என்று கூறினார்.

*48.* அந்நகரில் ஒன்பது நபர்கள் இருந்தார்கள். அவர்கள் பூமியில் சீர்திருத்தம் செய்யாமல் குழப்பம் செய்து கொண்டிருந்தார்கள். *49.* அவர்கள், “நீங்கள் அல்லாஹ்வின்மீது சத்தியமிட்டுக் கொள்ளுங்கள். நாம் அவரையும் அவரது மக்களையும் இரவோடு இரவாகக் கொன்று விடுவோம். பின்னர் அவரது பொறுப்பாளரிடம் ‘உங்கள் குடும்பத்தினர் கொல்லப்பட்டபோது நாங்கள் அங்கு இருக்கவில்லை. நாங்கள் உண்மையைத்தான் சொல்கின்றோம், என்று கூறிவிடுவோம்” என்று கூறினார்கள். *50.* அவர்கள் திட்டம் தீட்டினார்கள். அவர்களுக்குத் தெரியாமல் நாமும் திட்டம் தீட்டினோம். *51.* ஆகவே அவர்களது திட்டத்தின் முடிவு என்னவாயிற்று என்பதைப் பாரும். நாம் அவர்களையும், அவர்களது சமூகத்தினர் அனைவரையும் அழித்து விட்டோம். *52.* இதோ அவர்களது வீடுகள்; அவர்கள் செய்த அக்கிரமத்தினால் பாழடைந்து கிடக்கின்றன. நிச்சயமாக அறிந்துகொள்ளும் மக்களுக்கு இதில் படிப்பினை அடங்கியுள்ளது. *53.* நம்பிக்கைகொண்டு இறையச்சம் கொண்டவர்களை நாம் காப்பாற்றிக் கொண்டோம்.

*54.* லோத்தையும் நாம் அனுப்பினோம். தம் சமூகத்திடம் அவர் “நீங்கள் அறிந்துகொண்டே வெட்கக்கேடான காரியத்தைச் செய்கிறீர்களா? *55.* பெண்களை விட்டுவிட்டு ஆண்களிடமா உங்கள் இச்சையைத் தீர்த்துக் கொள்கிறீர்கள்? உண்மையில் நீங்கள் அறிவற்ற சமூகமாக இருக்கிறீர்கள்” என்று கூறினார். *56.* “லோத்தின் குடும்பத்தினரை உங்கள் ஊரிலிருந்து வெளியேற்றி

*விடுங்கள், அவர்கள் பரிசுத்தவான்களாம்” என்பதுதான் அவரது சமூகத்தின் பதிலாக இருந்தது. **57.** எனவே அவரையும், அவரது குடும்பத்தினரையும் நாம் காப்பாற்றினோம், அவரது மனைவியைத் தவிர. அவள் பின்தங்கிவிட வேண்டும் என்று நாம் முடிவு செய்து விட்டோம். **58.** நாம் அவர்களின்மீது பயங்கரமான மழையைப் பொழியச் செய்தோம். எச்சரிக்கை செய்யப்பட்டோருக்கு அது மிகவும் மோசமான மழையாக இருந்தது! **59.** நீர் கேளும்: “புகழனைத்தும் அல்லாஹ்வுக்கே! அவன் தேர்ந்தெடுத்துக்கொண்ட அவனது அடியார்களின்மீது சாந்தி நிலவட்டும். அல்லாஹ் சிறந்தவனா அல்லது அவர்கள் இணைவைத்து வணங்கும் தெய்வங்களா?”.*

***60.** வானங்களையும் பூமியையும் படைத்து, மேகத்திலிருந்து உங்களுக்கு மழையைப் பொழிவிப்பவன் யார்? அதன்மூலம் எழில்மிக்க தோட்டங்களை நாம் உண்டாக்குகிறோம். (அவற்றிலுள்ள) மரங்களை உங்களால் முளைக்கச் செய்ய இயலாது. அல்லாஹ்வுடன் வேறு இறைவனும் இருக்கின்றானா? மாறாக அவர்கள் நேர்வழியைவிட்டும் விலகிச்செல்லும் மக்களாக இருக்கிறார்கள். **61.** பூமியைத் தங்குவதற்குத் தகுந்த இடமாக்கி, அதனிடையே ஆறுகளை ஓடச்செய்து, அதற்கு மலைகளையும் ஏற்படுத்தியவன் யார்? இரு கடல்களுக்கு மத்தியில் திரையை ஏற்படுத்தியவன் யார்? அல்லாஹ்வுடன் வேறு இறைவனும் இருக்கின்றானா? மாறாக அவர்களில் பெரும்பாலோர் அறிந்து கொள்வதில்லை.*

***62.** துன்பத்திற்குள்ளானவனின் அழைப்பைச் செவியுற்று, அவனது துன்பத்தைப் போக்குபவன் யார்? பூமியில் உங்களை சந்ததிகளாக்கியவன் யார்? அல்லாஹ்வுடன் வேறு இறைவனும்*

இருக்கின்றானா? நீங்கள் மிகக்குறைவாகத்தான் படிப்பினை பெறுகிறீர்கள். 63. தரை மற்றும் கடலின் பலவிதமான இருளில் உங்களுக்கு வழிகாட்டுபவன் யார்? தனது கருணைக்கு முன்னால் காற்றுகளை நற்செய்தியாக அனுப்புபவன் யார்? அல்லாஹ்வுடன் வேறு இறைவனும் இருக்கின்றானா? அவர்களின் இணைவைப்பைவிட்டும் அல்லாஹ் மிக உயர்ந்தவன். 64. ஆரம்பத்தில் படைத்தவனும் பின்னர் மீண்டும் படைப்பவனும் யார்? வானத்திலிருந்தும், பூமியிலிருந்தும் உங்களுக்கு உணவளிப்பவன் யார்? அல்லாஹ்வுடன் வேறு இறைவனும் இருக்கின்றானா? நீர் கூறும்: "நீங்கள் உண்மையாளர்களாயின் உங்கள் ஆதாரத்தைக் கொண்டு வாருங்கள்".

65. நீர் கூறும்: "வானங்களிலும், பூமியிலும் உள்ள மறைவானவற்றை அல்லாஹ்வைத்தவிர வேறு யாரும் அறிய மாட்டார்கள். 'அவர்கள் எப்போது எழுப்பப்படுவார்கள்' என்பதையும் அவர்கள் அறிய மாட்டார்கள். 66. மாறாக மறுமையைப்பற்றிய அவர்களது அறிவு அற்றுப் போய்விட்டது. இல்லை. அது குறித்து அவர்கள் சந்தேகத்திலேயே உழன்று கொண்டிருக்கிறார்கள். உண்மையில் அவர்கள் மறுமையின் விஷயத்தில் குருடர்களாகவே இருக்கிறார்கள். 67. நிராகரிப்பாளர்கள் கூறுகிறார்கள்: "நாங்களும், எங்கள் முன்னோர்களும் மண்ணோடு மண்ணாகிவிட்டாலும் மீண்டும் எழுப்பப்படுவோமா? 68. இதற்கு முன் நாங்களும், எங்கள் முன்னோரும் இது குறித்து எச்சரிக்கப்பட்டிருந்தோம். இது முன்னோர்களின் கட்டுக் கதைகளேயாகும்". 69. நீர் கூறும்: "குற்றவாளிகளின் முடிவு என்னவாயிற்று என்பதை பூமியில் சுற்றித் திரிந்து பாருங்கள்".

*70.* அவர்களுக்காகக் கவலைப்படாதீர். அவர்கள் தீட்டும் திட்டங்களால் மனநெருக்கடிக்குள்ளாகி விடாதீர். *71.* “நீங்கள் உண்மையாளர்களாயின் இந்த எச்சரிக்கை எப்போது நிறைவேறும்?” என்று அவர்கள் கேட்கிறார்கள். *72.* நீர் கூறும்: “நீங்கள் அவசரப்படுபவற்றில் சில உங்களை வந்தடையக்கூடும்”. *73.* நிச்சயமாக உம் இறைவன் மக்களின் மீது பேரருள் புரிபவனாக இருக்கின்றான். ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் நன்றி செலுத்துவதில்லை. *74.* அவர்களின் உள்ளங்கள் மறைப்பவற்றையும் அவர்கள் வெளிப்படுத்துவதையும் நிச்சயமாக உம் இறைவன் நன்கறிந்தவன். *75.* வானத்திலும், பூமியிலும் உள்ள மறைவான எந்தப்பொருளும் தெளிவான பதிவேட்டில் பதியப்படாமல் இல்லை.

*76.* நிச்சயமாக இந்த குர்ஆன் இஸ்ராயீலின் மக்கள் முரண்பட்டுக் கொண்டிருந்த பெரும்பாலான விஷயங்களைத் தெளிவுபடுத்துகிறது. *77.* இது நம்பிக்கையாளர்களுக்கு வழிகாட்டியாகவும், கருணையாகவும் உள்ளது. *78.* நிச்சயமாக உம் இறைவன் தன் கட்டளையால் அவர்களிடையே தீர்ப்பளிக்கிறான். அவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். *79.* எனவே அல்லாஹ்வையே முழுமையாகச் சார்ந்திருப்பீராக. நிச்சயமாக நீர் தெளிவான உண்மையின்மீது இருக்கின்றீர். *80.* இறந்தவர்களை உம்மால் செவியுறச் செய்ய முடியாது. புறங்காட்டி ஓடும் செவிடர்களுக்கு உம் அழைப்பைச் செவியேற்கச் செய்யமுடியாது. *81.* உம்மால் குருடர்களை அவர்களின் வழிகேட்டிலிருந்து காப்பாற்றி நேர்வழியில் கொண்டுவர முடியாது. நம் வசனங்களின்மீது நம்பிக்கைகொண்டு கீழ்ப்படிந்தவர்களை மட்டுமே உம்மால் செவியுறச்செய்ய முடியும்.

*82. 'மறுமைநாள்' அவர்களை நெருங்கிவிட்டால் நாம் அவர்களுக்குப் பூமியிலிருந்து ஒரு 'தாப்பாஹ்'வை* வெளிப்படுத்துவோம். மக்கள் நம் வசனங்களை நம்பாமல் இருந்தது குறித்து அது அவர்களிடம் பேசும். 83. அந்நாளில் நம்முடைய வசனங்களை நிராகரித்துவந்த ஒவ்வொரு சமூகத்திலிருந்தும் ஒரு கூட்டத்தினரைத் திரட்டுவோம். பின்னர் அவர்கள் முறைப்படுத்தப்படுவார்கள். 84. அவர்கள் வந்தவுடன், "நீங்கள் என் வசனங்களை முழுமையாக அறியாமல் மறுத்து விட்டீர்களா? அல்லது நீங்கள் என்னதான் செய்து கொண்டிருந்தீர்கள்" என்று இறைவன் கேட்பான் 85. அவர்கள் புரிந்த அக்கிரமத்தினால் அவர்களின்மீது வாக்கு நிறைவேறி விட்டது. அப்போது அவர்களால் ஒன்றும் பேச முடியாது. 86. மக்கள் ஓய்வெடுப்பதற்காக இரவையும், அவர்கள் பார்ப்பதற்காக பகலையும் நாம் ஆக்கியுள்ளோம் என்பதை அவர்கள் கவனிக்கவில்லையா? நிச்சயமாக நம்பிக்கைகொள்ளும் மக்களுக்கு இதில் பல சான்றுகள் உள்ளன.*

*87. எக்காளம் ஊதப்படும் நாளில் அல்லாஹ் நாடியவர்களைத்தவிர வானங்களிலும் பூமியிலும் உள்ளவர்கள் திகிலடைந்து விடுவார்கள். அனைவரும் அவனுக்கு முன்னால் பணிந்தவர்களாக வருவார்கள். 88. மலைகளைக்கண்டு அவை நிலையாக இருக்கும் என்று நீர் எண்ணுகிறீர். ஆனால் அவை*

---

*இந்த உலகத்தை ஒரு முடிவுக்குக் கொண்டு வர வேண்டும் என்று எல்லாம்வல்ல இறைவன் முடிவு செய்யும்பொழுது, அந்த இறுதிக் கட்டத்தை காட்டும்விதமாக சில அசாதாரணமானவை தோன்றும். அப்படிப்பட்டவற்றில் ஒன்றுதான் 'தாப்பாஹ்' என்பதாக இருக்கலாம். மனிதர்களுக்காக கொண்டு வரப்பட்டு, அவர்கள் ஏற்காமல் புறக்கணித்த தூதுச் செய்தி 'தாப்பாஹ்'வினால் அறிவிக்கப்படலாம் என்று கருதத் தோன்றுகிறது. நவீன தொலைத் தொடர்பு அமைப்புகளே 'தாப்பாஹ்' என்று கூறப்பட்டிருக்கலாம். இதுவே மனிதனின் சோதனைக் கால முடிவை அறிவிக்கும் மணியோசையாக இருக்கலாம்.

மேகம் நகர்வதைப்போன்று நகர்ந்து செல்லும். இது அல்லாஹ்வின் பணியாகும். அவன் ஒவ்வொரு பொருளையும் செம்மையாகச் செய்கிறான். நீங்கள் செய்பவற்றை அவன் நன்கறிந்தவன். ***89.*** நன்மை செய்பவருக்கு அதைவிட சிறந்த கூலி கிடைக்கும். அந்நாளின் திடுக்கத்தைவிட்டும் அவர் பாதுகாக்கப்படுவார். ***90.*** தீமை செய்பவர் முகங்குப்புற நரகத்தில் வீசப்படுவார். "உங்களின் செயல்களுக்குத்தான் நீங்கள் கூலி கொடுக்கப்படுகிறீர்கள்".

***91.*** "இந்த நகரத்தைப் புனிதமாக்கிய இறைவனையே நான் வணங்குமாறு கட்டளையிடப்பட்டுள்ளேன். எல்லாப் பொருள்களும் அவனுக்கே உரியன. அவனுக்கு அடிபணிய வேண்டும் என்றும், குர்ஆனை எடுத்துரைக்க வேண்டும் என்றும் நான் கட்டளையிடப்பட்டுள்ளேன். ***92.*** நேர்வழி பெறுபவர் தமக்காகவே நேர்வழி பெறுகிறார்". எவரேனும் வழிதவறினால் நீர் கூறிவிடும்: "நான் எச்சரிக்கை செய்பவன் மட்டுமே". ***93.*** நீர் கூறும்: "புகழனைத்தும் அல்லாஹ்வுக்கே. தன் சான்றுகளை அவன் விரைவில் உங்களுக்குக் காண்பிப்பான். நீங்கள் அவற்றை அறிந்து கொள்வீர்கள். நீங்கள் செய்பவற்றை அவன் கவனிக்காமல் இல்லை".

## 28. சம்பவங்கள் (அல்கஸஸ்)

**அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....**

***1.*** தா. ஸீம். மீம். ***2.*** இவை தெளிவான வேதத்தின் வசனங்களாகும். ***3.*** நம்பிக்கைகொண்ட மக்களுக்காக மோசே மற்றும் பாரோவின் சில செய்திகளை நாம் உமக்கு மிகத்தெளிவாக எடுத்துரைக்கிறோம். ***4.*** நிச்சயமாக பாரோ பூமியில் வரம்புமீறினான்; அதிலுள்ளோரை பல பிரிவினர்களாக்கி அவர்களில் ஒரு

பிரிவினரை அடக்கி ஒடுக்கியிருந்தான். அவர்களின் ஆண் குழந்தைகளை கொன்றுவிட்டு பெண் குழந்தைகளை உயிருடன் விட்டுக்கொண்டிருந்தான். உண்மையில் அவன் குழப்பம் விளைவிப்பவனாக இருந்தான். 5. பூமியில் ஒடுக்கப்பட்ட மக்கள்மீது நாம் கிருபைசெய்து அவர்களை வழிகாட்டிகளாக்கவும், வாரிசுகளாக்கவும் நாடினோம். 6. பூமியில் அவர்களுக்கு அதிகாரம் அளித்து பாரோவும், ஹாமானும் அவர்களது படையினரும் எதைக்குறித்து அஞ்சிக் கொண்டிருந்தார்களோ அதை அவர்களுக்குக் காட்டவும் நாடினோம்.

7. நாம் மோசேயின் அன்னைக்கு, ‘நீர் அவருக்குப் பாலூட்டும். இவ்விஷயத்தில் உமக்கு அச்சமேற்பட்டால் அவரை ஆற்றில் விட்டுவிடும். நீர் அச்சப்படவோ, கவலைப்படவோ வேண்டாம். நாம் அவரை உம்மிடம் திரும்பக் கொண்டுவருவோம். அவரைத் தூதர்களில் ஒருவராகவும் ஆக்குவோம்’ என்று உள்ளுதிப்பு ஏற்படுத்தினோம். 8. பின்னர் பாரோவுடைய குடும்பத்தார் அக்குழந்தையை எடுத்துக்கொண்டார்கள், அது அவர்களின் எதிரியாகவும் அவர்களின் கவலைக்குக் காரணமாகவும் அமைவதற்காக. நிச்சயமாக பாரோவும், ஹாமானும் அவர்களது படையினரும் தவறிழைத்தவர்களாக இருந்தார்கள். 9. பாரோவுடைய மனைவி, “இக்குழந்தை எனக்கும், உங்களுக்கும் கண்குளிர்ச்சியாக உள்ளது. நீங்கள் இதனைக் கொன்று விடாதீர்கள். இது நமக்குப் பயனளிக்கலாம் அல்லது இதனை நம் மகனாக தத்தெடுத்துக் கொள்ளலாம்” என்று கூறினாள். (அதன் விளைவை) அவர்கள் உணர்ந்திருக்கவில்லை.

10. மோசேயின் அன்னை உள்ளம் வெறுமையாகி விட்டது. அவள் நம்பிக்கைகொண்டவளாக வேண்டும் என்பதற்காக அவளது உள்ளத்தை நாம் உறுதிப்படுத்தியிராவிட்டால் அவள்

*அக்குழந்தையைப்பற்றிய விஷயத்தை வெளிப்படுத்தியிருப்பாள். **11.** அவள் அக்குழந்தையின் சகோதரியிடம், "நீ அக்குழந்தையைப் பின்தொடர்ந்து செல்" என்று கூறினாள். எனவே அவள் அவர்கள் அறியாதவண்ணம் தொலைவிலிருந்து அக்குழந்தையைப் பார்த்துக் கொண்டிருந்தாள். **12.** நாம் முன்னரே அக்குழந்தையை பாலூட்டும் பெண்கள் (எவருடைய) பாலையும் அருந்தாமல் தடுத்திருந்தோம். அப்போது அச்சிறுமி அவர்களிடம், "இக்குழந்தையைப் பராமரித்துப் பாதுகாக்கும் ஒரு வீட்டாரைப்பற்றி நான் உங்களுக்குக் கூறட்டுமா? அவர்கள் இக்குழந்தைக்கு நலம்விரும்பியாக இருப்பார்கள்" என்று கூறினாள். **13.** இவ்வாறு நாம் அவரை அவரது அன்னையிடம் சேர்த்து விட்டோம். அது அவளது கண் குளிர்ச்சியடைந்து கவலைப்படாமல் இருப்பதற்காகவும் அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானது என்பதை அவள் அறிந்துகொள்வதற்காகவும்தான். ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் அறிந்துகொள்வதில்லை. **14.** மோசே தம் வாலிபத்தை அடைந்து பக்குவமடைந்தபோது நாம் அவருக்கு ஞானத்தையும், அறிவையும் வழங்கினோம். நன்மை செய்வோருக்கு நாம் இவ்வாறே கூலி வழங்குகிறோம்.*

*    **15.** நகரத்தில் மக்கள் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தபோது அவர் அங்கு நுழைந்தார். அங்கு இருவர் சண்டையிட்டுக் கொண்டிருப்பதைக் கண்டார். ஒருவர் அவரது சமூகத்தைச் சேர்ந்தவர், மற்றொருவர் அவரது எதிரியின் சமூகத்தைச் சேர்ந்தவர். அவரது சமூகத்தைச் சேர்ந்தவர் தமது எதிரிக்கெதிராக அவரிடம் உதவி கோரினார். எனவே மோசே அவரை ஓங்கி ஒரு குத்து குத்தினார். அதனால் அவர் இறந்துவிட்டார். மோசே, "இது சாத்தானின் செயலாகும். நிச்சயமாக அவன் வெளிப்படையாக வழிகெடுப்பவனாகவும், பகைவனாகவும் இருக்கின்றான்" என்று கூறினார். **16.** "என் இறைவா! எனக்கு நானே தீங்கிழைத்துக்*

கொண்டேன். எனவே என்னை மன்னித்து விடுவாயாக!" என்று இறைஞ்சினார். இறைவன் அவரை மன்னித்து விட்டான். நிச்சயமாக அவன் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். 17. "என் இறைவா! நீ என் மீது அருள் புரிந்ததனால் இனி நான் குற்றவாளிகளுக்கு ஒருபோதும் உதவி புரிய மாட்டேன்" என்றும் கூறினார்.

18. மறுநாள் காலையில் அவர் பயந்தவராக, எச்சரிக்கையாக நகரத்தில் நடந்து கொண்டிருந்தார். நேற்று உதவிகோரிய அதேமனிதன் இன்றும் உதவி கோரிக்கொண்டிருப்பதைக் கண்டார். அப்போது மோசே அவனிடம், "நிச்சயமாக நீ பகிரங்கமாக தீயவழியில் உள்ளவனாக இருக்கின்றாய்" என்றார். 19. அவர் தம் இருவருக்கும் எதிரியாக இருந்தவனைப் (தன் இனத்தவனை) பிடிக்க நாடியபோது அவன், "மோசேயே, நேற்று நீ ஒருவனைக் கொன்றதைப்போன்று என்னையும் கொல்ல நாடுகின்றாயா? பூமியில் அக்கிரமக்காரனாகத்தான் நீ இருக்க விரும்புகிறாய். சமாதானம் செய்பவனாக நீ இருக்க விரும்பவில்லை" என்று கூறினான். 20. நகரத்தின் கடைக்கோடியிலிருந்து ஒருவர் ஓடோடிவந்து, "மோசேயே, உம்மைக் கொன்றுவிட வேண்டும் என்று அரச சபையினர் ஆலோசனை செய்து கொண்டிருக்கிறார்கள். எனவே நீர் வெளியேறி விடுவீராக. (உண்மையிலேயே) நான் உம் நலம்விரும்பியாக இருக்கின்றேன்" என்று கூறினார். 21. எனவே அவர் அங்கிருந்து பயந்தவராக, எச்சரிக்கையாக வெளியேறினார். "என் இறைவா! அநியாயக்கார மக்களைவிட்டும் என்னைக் காப்பாற்றுவாயாக!" என்று அவர் பிரார்த்தனை செய்தார்.

22. அவர் மத்யனை நோக்கி திரும்பிய சமயத்தில் "என் இறைவன் எனக்கு நேரான வழியைக் காட்டக்கூடும்'' என்று தமக்குள் கூறிக்கொண்டார். 23. அவர் மத்யனில் இருந்த நீர்நிலைக்கு

*வந்தபோது அங்கு ஒரு கூட்டம் தங்கள் கால்நடைகளுக்குத் தண்ணீர் புகட்டிக்கொண்டிருப்பதைக் கண்டார். அவர்களிடமிருந்துவிலகி இருபெண்கள் தங்கள் கால்நடைகளைத் தடுத்து வைத்துக் கொண்டிருப்பதைக் கண்டார். அவர் அப்பெண்களிடம் "உங்கள் பிரச்சினை என்ன'' என்று கேட்டார். அதற்கு அவர்கள், "மேய்ப்பாளர்கள் அங்கிருந்து தங்கள் கால்நடைகளை விலக்கிச் செல்லாதவரை நாங்கள் எங்கள் கால்நடைகளுக்கு தண்ணீர் புகட்ட முடியாது. எங்களின் தந்தையோ மிகவும் வயதானவராக இருக்கிறார்" என்று கூறினார்கள். **24.** எனவே அவர் அவர்களின் கால்நடைகளுக்குத் தண்ணீர் புகட்டிவிட்டு நிழலின் பக்கம் ஒதுங்கிக் கொண்டார். "என் இறைவா! நீ எனக்கு எந்த நன்மையை அருளினாலும் அதன்பக்கம் நான் தேவையுடையவனாக இருக்கின்றேன்" என்று பிரார்த்தனை செய்தார்.*

***25.*** *அவ்விரு பெண்களில் ஒருத்தி நாணத்தோடு நடந்துவந்து அவரிடம், "எங்களுக்காக நீங்கள் தண்ணீர் புகட்டியதற்கான கூலியைத் தருவதற்காக என் தந்தை உங்களை அழைக்கிறார்" என்று கூறினாள். மோசே அவரிடம் வந்தபோது தனக்கு நடந்த அனைத்து சம்பவங்களையும் எடுத்துரைத்தார். அதற்கு அவர், "பயப்படாதீர். அல்லாஹ் உம்மை அநியாயக்கார மக்களிடமிருந்து காப்பாற்றி விட்டான்" என்று கூறினார். **26.** அவ்விருவரில் ஒருத்தி, "தந்தையே, இவரை வேலைக்கு அமர்த்திக் கொள்ளுங்கள். வலிமையானவராகவும் நம்பிக்கைக்குரியவராகவும் இருப்பவர்தான் நீங்கள் வேலைக்கு அமர்த்துவதற்குத் தகுந்த மனிதர்" என்று கூறினாள். **27.** அதற்கு அவர், "நீர் எட்டு ஆண்டுகள் என்னிடம் பணிபுரிய வேண்டும் என்ற நிபந்தனையின் பேரில் என்னுடைய இவ்விரு பெண்களில் ஒருத்தியை உமக்குத் திருமணம் செய்துதர நான் விரும்புகிறேன். நீர் பத்து ஆண்டுகள் நிறைவுசெய்தால் அது உமது விருப்பமாகும்.*

நான் உம்மைச் சிரமத்தில் ஆழ்த்த விரும்பவில்லை. அல்லாஹ் நாடினால் நீர் என்னை நல்லோர்களில் ஒருவராகக் காண்பீர்" என்று கூறினார். **28.** அதற்கு மோசே, "இவ்விஷயம் எனக்கும், உங்களுக்கும் இடையில் உறுதியாகி விட்டது. இரு நிபந்தனைகளில் எதனை நிறைவேற்றினாலும் என் மீது எந்தக் குற்றமும் இல்லை. நாம் கூறிய விஷயத்திற்கு அல்லாஹ்வே சாட்சியாவான்" என்று கூறினார்.

**29.** மோசே தம் தவணையை நிறைவுசெய்துவிட்டு தம் குடும்பத்துடன் சென்றபோது தூர் மலையின் பக்கம் ஒரு நெருப்பைக் கண்டார். அவர் தம் குடும்பத்தாரிடம், "நீங்கள் இங்கேயே இருங்கள். நான் நெருப்பைக் காண்கிறேன். நான் அங்கிருந்து ஏதேனும் செய்தியையோ, நீங்கள் குளிர்காய்வதற்காக ஒரு நெருப்புக்கொள்ளியையோ உங்களிடம் கொண்டு வரக்கூடும்" என்று கூறினார். **30.** அவர் அங்கு சென்றதும் பள்ளத்தாக்கின் வலதுகரையின் அருள்வளம்மிக்க பகுதியிலுள்ள ஒரு மரத்திலிருந்து, "மோசேயே! நான்தான் அல்லாஹ், அகிலங்களின் அதிபதி" என்று அழைக்கப்பட்டு **31.** "உம் கைத்தடியைப் போடும்" (என்று கூறப்பட்டது). அது பாம்பைப்போல் அசைந்து நெளிவதைக் கண்டதும் அவர் பயந்து பின்வாங்கி ஓடினார்; திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. "மோசேயே, பயப்பட வேண்டாம். முன்னால் வாரும். நீர் மிகவும் பாதுகாப்பாக இருக்கின்றீர் (என்று கூறப்பட்டது)". **32.** உம் கையை அக்குளில் வையும். அது தீங்கற்ற பளிச்சிடும் வெண்மையாக வெளிப்படும். பயத்தைப் போக்கிக் கொள்வதற்காக உமது புஜத்தை உம் பக்கம் ஒடுக்கிக்கொள்ளும். பாரோவிடமும், அவனது பிரமுகர்களிடமும் செல்வதற்காக இவையிரண்டும் உமது இறைவனிடமிருந்து வந்துள்ள சான்றுகளாகும். நிச்சயமாக அவர்கள் கீழ்ப்படியாத மக்களாக இருக்கிறார்கள்.

*33.* “என் இறைவனே, அவர்களில் ஒருவனை நான் கொன்று விட்டேன். எனவே அவர்கள் என்னைக் கொன்று விடுவார்களோ என்று நான் அஞ்சுகிறேன். *34.* என் சகோதரர் ஆரோன் என்னைவிட அதிக நாவன்மை உடையவர். எனவே அவரை நீ எனக்கு உதவியாக அனுப்பி வைப்பாயாக. அவர் எனக்கு உறுதுணையாக இருப்பார். மக்கள் என்னை மறுத்து விடுவார்களோ என்று நான் அஞ்சுகிறேன்” என்று மோசே கூறினார். *35.* அதற்கு அவன், “நாம் உம் சகோதரரைக் கொண்டு உம்மைப் பலப்படுத்துவோம். உங்கள் இருவரையும் மேலோங்கச் செய்வோம். அவர்களால் உங்களை நெருங்க முடியாது. நீங்களும், உங்களைப் பின்பற்றியோரும்தான் வெற்றி பெறுவீர்கள்” என்று கூறினான்.

*36.* மோசே அவர்களிடம் நம்முடைய தெளிவான சான்றுகளுடன் சென்றபோது அவர்கள், “இது புனையப்பட்ட சூனியம்தான். எங்களுடைய முன்னோர்களிடம் இது குறித்து எதுவும் நாங்கள் கேள்விப்பட்டதில்லை” என்று கூறினார்கள். *37.* அதற்கு மோசே, “எவர் அவனிடமிருந்து நேர்வழிபெற்று வந்துள்ளார் என்பதையும் மறுமையின் வீடு யாருக்குச் சொந்தம் என்பதையும் என் இறைவன் நன்கறிவான். நிச்சயமாக அக்கிரமக்காரர்கள் வெற்றிபெற மாட்டார்கள்” என்று கூறினார். *38.* “அவையோரே! நான் உங்களுக்கு என்னைத்தவிர வேறு இறைவனை அறிந்திருக்கவில்லை. ஹாமானே! நான் மோசேயின் இறைவனை எட்டிப் பார்ப்பதற்காக களிமண்ணைச் சுட்டு ஒரு உயர்ந்த கட்டிடத்தை எனக்காக எழுப்பு. நான் அவரைப் பொய்யராகத்தான் கருதுகிறேன்” என்று பாரோ கூறினான்.

*39.* அவனும் அவனது படைகளும் பூமியில் நியாயமின்றி ஆணவம் கொண்டார்கள். அவர்கள் நம்மிடம் திரும்பி வரப்போவதில்லை என்றும் எண்ணிக் கொண்டார்கள்.

40. எனவே நாம் அவனையும், அவனது படைகளையும் பிடித்துக் கடலில் எறிந்து விட்டோம். அக்கிரமக்காரரர்களின் முடிவு என்னவாயிற்று என்பதைப் பாரும். 41. நாம் நரகத்தின் பக்கம் அழைக்கும் தலைவர்களாக அவர்களை ஆக்கினோம். மறுமைநாளில் அவர்கள் உதவி செய்யப்பட மாட்டார்கள். 42. இவ்வுலகில் நாம் அவர்கள்மீது சாபத்தை தொடரச் செய்தோம். மறுமைநாளில் அவர்கள் அருவருப்பானவர்களாக இருப்பார்கள். 43. நாம் முந்தைய சமூகங்களை அழித்தபிறகு மோசேவுக்கு வேதத்தை வழங்கினோம். அது மக்கள் படிப்பினை பெரும்பொருட்டு அகப்பார்வையாகவும், வழிகாட்டியாகவும், அருட்கொடையாகவும் திகழ்ந்தது.

44. (தூதரே) நாம் மோசேவுக்கு கட்டளைகளை வழங்கியபோது மலையின் மேற்குப் பகுதியில் நீங்கள் இருக்கவில்லை; அதனைப் பார்த்துக் கொண்டிருந்தவர்களில் ஒருவராகவும் இருக்கவில்லை. 45. ஆயினும் நாம் பல்வேறு சமூகங்களைப் படைத்தோம். அவர்களின் வாழ்நாள் நீண்டு விட்டது. மத்யன்வாசிகளுடன் வசித்து நமது வசனங்களை எடுத்துக் கூறுபவராக நீங்கள் இருக்கவில்லை. ஆயினும் நாம் தூதர்களை அனுப்புகிறோம். 46. நாம் மோசேயை அழைத்தபோது தூர் மலையின் ஓரத்திலும் நீங்கள் இருக்கவில்லை. ஆயினும் இது உம் இறைவனின் கருணையாகும். இது உமக்கு முன்பு எச்சரிப்பவர் எவரும்வராத இம்மக்களை - அவர்கள் படிப்பினை பெறும் பொருட்டு - நீங்கள் எச்சரிக்க வேண்டும் என்பதற்காகத்தான்.

47. அவர்கள் செய்த தீவினையினால் ஏதேனும் துன்பம் அவர்களுக்கு நேர்ந்து விட்டால் அவர்கள், “எங்கள் இறைவா, எங்களிடம் ஏன் ஒரு தூதரை அனுப்பவில்லை? நாங்கள் உன் வசனங்களைப் பின்பற்றி நம்பிக்கையாளர்களாக ஆகியிருப்போமே!” என்று கூறுவார்கள். 48. ஆயினும் நம்மிடமிருந்து சத்தியம்

அவர்களிடம் வந்தபோது "மோசேவுக்கு வழங்கப்பட்டது போன்று இவருக்கும் (முஹம்மது) ஏன் வழங்கப்படவில்லை" என்று கேட்கிறார்கள். இதற்கு முன்னர் மோசேவுக்கு வழங்கப்பட்டதை இவர்கள் நிராகரிக்கவில்லையா? அப்போது அவர்கள் கூறினார்கள்: "இவர்கள் ஒருவருக்கொருவர் உதவிக்கொள்கின்ற சூனியக்காரர்கள். நாங்கள் இருவரையுமே நிராகரிக்கிறோம்".

49. அவர்களிடம்: "நீங்கள் உண்மையாளர்களாயின் இவ்விரண்டையும்விட வழிகாட்டக்கூடிய சிறந்த வேதத்தை இறைவனிடமிருந்து கொண்டு வாருங்கள், நான் அதனைப் பின்பற்றுகிறேன்" என்று நீர் கூறும். 50. அவர்கள் உமக்குப் பதிலளிக்கவில்லை என்றால் அறிந்துகொள்ளும்: "அவர்கள் தம் மனஇச்சைகளைத்தான் பின்பற்றுகிறார்கள்". அல்லாஹ்வின் வழிகாட்டுதலின்றி தன் மனஇச்சையைப் பின்பற்றுபவனைவிட வழிகெட்டவன் யார்? அல்லாஹ் அநியாயக்கார மக்களுக்கு நேர்வழி காட்டுவதில்லை. 51. அவர்கள் படிப்பினை பெறும்பொருட்டு தொடர்ந்து அவர்களுக்கு நம் வாக்குகளை அனுப்பிக்கொண்டே இருந்தோம்.

52. எவருக்கெல்லாம் நாம் இதற்கு முன்னர் வேதம் வழங்கியிருந்தோமோ அவர்கள் இந்த குர்ஆனின்மீது நம்பிக்கை கொள்கிறார்கள். 53. அவர்களிடம் இது ஓதிக்காட்டப்பட்டால் "நாங்கள் இதன்மீது நம்பிக்கை கொண்டோம். இது எங்கள் இறைவனிடமிருந்து வந்துள்ள உண்மையாகும். நாங்கள் முன்னரே இதனை ஏற்றுக் கொண்டுள்ளோம்'' என்று கூறுவார்கள். 54. அவர்கள் உறுதியாக இருந்ததனால் அவர்களுக்குரிய கூலி இருமடங்காக வழங்கப்படும். அவர்கள் நன்மையால் தீமையைத் தடுத்துக்கொள்கிறார்கள். நாம் அளித்தவற்றிலிருந்து (நல்வழியில்) செலவும் செய்கிறார்கள். 55. அவர்கள் வீணானவற்றைச்

செவியுற்றால் அவற்றைப் புறக்கணித்து விடுவார்கள். அவர்கள் கூறுவார்கள்: “எங்களுக்கு எங்கள் செயல்கள், உங்களுக்கு உங்கள் செயல்கள். உங்கள்மீது அமைதி நிலவட்டும். நாங்கள் மூடர்களுடன் தர்க்கிப்பதை விரும்ப மாட்டோம்”. **56.** நீர் விரும்புவோர்க்கு நேர்வழி அளித்திட உம்மால் முடியாது. ஆயினும் தான் நாடியோருக்கு அல்லாஹ் நேரான வழியை அளிக்கிறான். நேர்வழி பெறக்கூடியவர்களை அவன் மிகவும் நன்கறிந்தவன். **57.** “உம்முடன் சேர்ந்து நாங்களும் இவ்வழிகாட்டுதலின்படி நடந்தால் எங்கள் ஊரிலிருந்து நாங்கள் தூக்கி எறியப்பட்டு விடுவோம்'' என்று அவர்கள் கூறுகிறார்கள். நாம் அவர்களுக்கு அமைதியான, பாதுகாப்பான புனித பூமியை அளிக்கவில்லையா? அங்கு நம்மிடமிருந்து வந்துள்ள உணவாக அனைத்துக் கனிகளும் கொண்டு வரப்படவில்லையா? ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் அறிய மாட்டார்கள்.

**58.** தங்களது வாழ்க்கை வசதிகள் குறித்து கர்வம் கொண்டிருந்த எத்தனையோ ஊரிலிருந்த மக்களை நாம் அழித்து விட்டோம். இவைதான் அவர்கள் வாழ்ந்திருந்த இடங்கள். மிகக்குறைவானவர்களைத்தவிர அவர்களுக்குப்பின் யாருமே அங்கு குடியிருக்கவில்லை. அதற்கு நாமே வாரிசானோம். **59.** தன் வசனங்களை ஓதிக்காட்டக்கூடிய ஒரு தூதரை அவர்களுடைய தலையாய நகருக்கு அனுப்பாதவரை உம் இறைவன் எந்த ஊராரையும் அழித்துவிட மாட்டான். ஊர்மக்கள் அக்கிரமக்காரரர்களாக இருந்தாலேதவிர நாம் அவர்களை அழித்துவிட மாட்டோம்.

**60.** உங்களுக்கு வழங்கப்பட்டிருப்பவையெல்லாம் உலக வாழ்வின் இன்பங்களும் அதன் அலங்காரமும்தான். அல்லாஹ்விடம் இருப்பவைதான் மிகச் சிறந்தது; நிலையானது. நீங்கள் புரிந்துகொள்ள மாட்டீர்களா? **61.** எவருக்கு நாம் அழகிய

வாக்குறுதியளித்து அதனை அவர் பெறுபவராகவும் இருக்கிறாரோ அவரும், உலக வாழ்வின் இன்பங்களை மட்டுமே நாம் வழங்கி பின்னர் மறுமைநாளில் நம்முன் நிறுத்தப்படுபவராக இருப்பவரும் சமமாவார்களா?

**62.** அவன் அவர்களை (விசாரணைக்காக) அழைக்கின்றநாளில், "எனக்கு இணையானவர்கள் என்று நீங்கள் கூறிக் கொண்டிருந்தீர்களே, அவர்கள் எங்கே'' என்று கேட்பான். **63.** எவரெவர்மீது வேதனை உறுதியாகி விட்டதோ அவர்கள், "எங்கள் இறைவா, இவர்களைத்தான் நாங்கள் வழிகெடுத்தோம். நாங்கள் வழிகெட்டவாறே இவர்களையும் வழிகெடுத்தோம். இவர்களை விட்டும் நாங்கள் விலகிக்கொள்கிறோம். இவர்கள் எங்களை வணங்கிக் கொண்டிருக்கவில்லை" என்று கூறுவார்கள்.

**64.** பின்னர் நீங்கள் எனக்கு இணையாக்கிய தெய்வங்களை அழையுங்கள் என்று அவர்களிடம் கூறப்படும். அப்போது அவர்கள் அவற்றை அழைப்பார்கள். ஆனால் அவை அவர்களுக்குப் பதிலளிக்காது. அவர்கள் வேதனையைக் காண்பார்கள். அந்தோ! அவர்கள் நேர்வழி பெற்றிருக்கக் கூடாதா! **65.** அவன் அவர்களை அழைக்கும் நாளில் தூதர்களுக்கு நீங்கள் என்ன பதிலளித்தீர்கள் என்று கேட்பான். **66.** அந்நாளில் அவர்களது அனைத்து செய்திகளும் மறைந்து விடும். அவர்கள் ஒருவரையொருவர் விசாரித்துக் கொள்ளவும் முடியாது. **67.** ஆயினும் மன்னிப்புக்கோரி நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிந்தவர் வெற்றி பெற்று விடுவார்.

**68.** தான் நாடியதை உம் இறைவன் படைக்கிறான்; தான் நாடியவர்களைத் தேர்ந்தெடுக்கிறான். தேர்ந்தெடுப்பது அவர்களின் பணியன்று. அவர்களின் இணைவைப்பைவிட்டும் அல்லாஹ்

மிகத்தூயவன், மிக உயர்ந்தவன். 69. அவர்கள் தங்கள் உள்ளங்களில் மறைப்பவற்றையும், வெளிப்படுத்துபவற்றையும் உம் இறைவன் நன்கறிவான். 70. அவனே அல்லாஹ். அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. இம்மையிலும் மறுமையிலும் புகழனைத்தும் அவனுக்கே. தீர்ப்பளிக்கும் அதிகாரம் அவனுக்கே உரியது. அவனிடமே நீங்கள் கொண்டு வரப்படுவீர்கள்.

71. நீர் அவர்களிடம் கேளும்: “நீங்களே கூறுங்கள். அல்லாஹ் இரவை உங்கள்மீது மறுமைநாள்வரை நிரந்தரமாக்கி விட்டால் அல்லாஹ்வைத்தவிர வேறு எந்த இறைவனால் உங்களுக்கு வெளிச்சத்தைக் கொண்டுவர முடியும்? நீங்கள் செவியேற்கவே மாட்டீர்களா?” 72. நீர் கேளும்: “நீங்களே கூறுங்கள். அல்லாஹ் பகலை உங்கள்மீது மறுமைநாள்வரை நிரந்தரமாக்கி விட்டால் அல்லாஹ்வைத்தவிர வேறு எந்த இறைவனால் நீங்கள் அமைதி பெறுகின்ற இரவைக் கொண்டுவர முடியும்? நீங்கள் சிந்தித்துப் பார்க்கவே மாட்டீர்களா?”. 73. அவனே தனது கருணையினால் இரவையும், பகலையும் ஏற்படுத்தினான். அது (இரவில்) நீங்கள் மனஅமைதி பெறுவதற்காகவும், (பகலில்) அவனது அருளைத் தேடுவதற்காகவும் நீங்கள் நன்றி செலுத்துவோராகத் திகழ வேண்டும் என்பதற்காகவும்தான்.

74. அவன் அவர்களை அழைக்கின்றநாளில் எனக்கு இணையானவர்கள் என்று கூறிக்கொண்டிருந்தீர்களே அவர்கள் எங்கே என்று கேட்பான். 75. ஒவ்வொரு சமூகத்திலிருந்தும் நாம் ஒரு சாட்சியாளரைக் கொண்டு வருவோம். அவர்களிடம் உங்களின் ஆதாரத்தைக் கொண்டுவாருங்கள் என்று கேட்போம். உண்மை அல்லாஹ்வின் பக்கமே உள்ளது என்பதை அவர்கள் அறிந்துகொள்வார்கள். அவர்கள் புனைந்து வைத்திருந்தவை யாவும் அவர்களை விட்டும் மறைந்து விடும்.

**76.** மோசேயின் சமூகத்தைச் சார்ந்தவனாக கோரா இருந்தான். ஆயினும் அவன் அவர்களிடம் வரம்பு மீறினான். நாம் அவனுக்குப் பெரும் பொக்கிஷங்களை அளித்திருந்தோம். பலம் பொருந்திய மக்கள் கூட்டம்கூட அவற்றின் சாவிகளைச் சிரமத்துடன்தான் சுமக்கும். அவனது சமூகத்தினர் அவனிடம், "ஆணவங்கொள்ளாதே. நிச்சயமாக அல்லாஹ் ஆணவங்கொள்பவர்களை நேசிக்க மாட்டான். **77.** அல்லாஹ் உனக்கு வழங்கியுள்ளதைக்கொண்டு மறுமையின் (சொர்க்க) வீட்டைத் தேடிக்கொள். உலகில் உனது பங்கையும் மறந்து விடாதே. அல்லாஹ் உனக்கு நன்மை புரிந்தவாறே நீயும் மக்களுக்கு நன்மை செய். உலகில் குழப்பத்தை நாடாதே. நிச்சயமாக அல்லாஹ் குழப்பம் செய்வோரை நேசிக்க மாட்டான்" என்று கூறினார்கள்.

**78.** அதற்கு அவன், "இச்செல்வங்கள் அனைத்தும் என் அறிவால்தான் எனக்குக் கிடைத்துள்ளன" என்றான். இதற்கு முன்னர் அவனைவிட அதிக பலமும், எண்ணிக்கையும் கொண்ட எத்தனையோ சமூகங்களை அல்லாஹ் அழித்துள்ளான் என்பதை அவன் அறிந்து கொள்ளவில்லையா? குற்றவாளிகளிடம் அவர்கள் புரிந்த குற்றங்கள் குறித்து விளக்கம் கேட்கப்பட மாட்டாது.

**79.** பின்னர் அவன் முழு அலங்காரத்துடன் தன் மக்களுக்கு முன்னால் வெளிப்பட்டான். இவ்வுலக வாழ்க்கையை பெரிதும் விரும்பியவர்கள், "கோராவுக்கு கொடுக்கப்பட்டது போன்று நமக்கும் கொடுக்கப்பட்டிருக்கக் கூடாதா! நிச்சயமாக அவன் பெரும் பாக்கியசாலி!" என்று கூறினார்கள். **80.** ஆயினும் ஞானம் வழங்கப்பட்டவர்கள், "உங்களுக்குக் கேடுதான். நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிந்தவர்களுக்கு அல்லாஹ்வுடைய கூலியே சிறந்ததாகும். அது பொறுமையாளர்களுக்கு மட்டுமே கிடைக்கும்" என்று கூறினார்கள்.

*81.* பின்னர் நாம் அவனையும் அவனது வீட்டையும் பூமியில் புதையச் செய்து விட்டோம். அல்லாஹ் அல்லாது அவனுக்கு உதவி செய்யும் எந்தக் கூட்டமும் அவனுக்கு இருக்கவில்லை. அவனால் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவும் முடியவில்லை. *82.* அவனைப் போன்று ஆகிவிட வேண்டும் என்று நேற்று ஆசை கொண்டவர்கள், “அந்தோ! அல்லாஹ் தன் அடியார்களில் தான் நாடுவோருக்கு வாழ்வாதாரத்தை விசாலமாக்குகிறான். தான் நாடுவோருக்கு அதனைச் சுருக்கி விடுகிறான். அல்லாஹ் நம்மீது கிருபை செய்திருக்காவிட்டால் நம்மையும் அவன் பூமியில் புதையச் செய்திருப்பான். அந்தோ! நிச்சயமாக நிராகரிப்பாளர்கள் வெற்றி பெறமாட்டார்கள்” என்று கூறலானார்கள்.

*83.* பூமியில் பெருமையையோ, குழப்பத்தையோ விரும்பாதவர்களுக்குத்தான் நாம் மறுமையின் (சொர்க்க) வீட்டை ஏற்படுத்தியுள்ளோம். இறுதி முடிவு இறையச்சமுடையோருக்கே. *84.* எவர் நன்மையைக் கொண்டு வருகிறாரோ அவருக்கு அதைவிடச் சிறந்த கூலி உண்டு. எவர் தீமையைக் கொண்டு வருகிறாரோ - தீமை செய்தோருக்கு அவர்களின் தீமைகளின் அளவுக்குத்தான் கூலி வழங்கப்படும்.

*85.* இந்த குர்ஆனை உம்மீது கடமையாக்கியவன் உம்மை ஒரு நல்ல முடிவின் பக்கம் கொண்டு சேர்த்தே தீருவான். நீர் கூறும்: “எவர் நேர்வழியைக் கொண்டு வந்துள்ளார், எவர் வெளிப்படையான வழிகேட்டில் இருக்கின்றார் என்பதை என் இறைவனே நன்கறிவான்”. *86.* இவ்வேதம் உம் இறைவனிடமிருந்து உமக்கு அருளப்படும் என்பதை நீர் எதிர்பார்த்திருக்கவில்லை. ஆயினும் இது உம் இறைவனின் கருணையாகும். எனவே நீர் நிராகரிப்பாளர்களுக்குத் துணை புரியாதீர். *87.* இறைவசனங்கள் உமக்கு அருளப்பட்டபின் அதனைவிட்டு அவர்கள் உம்மைத் தடுத்துவிட வேண்டாம். உம்

இறைவனின் பக்கம் அழைப்பீராக. இணைவைப்பாளர்களுடன் ஒருபோதும் இணைந்து விடாதீர். 88. அல்லாஹ்வுடன் வேறு எந்த இறைவனையும் அழைக்காதீர். அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. அவனுடைய திருமுகத்தைத்தவிர அனைத்தும் அழிந்து விடக்கூடியவையே. தீர்ப்பளிக்கும் அதிகாரம் அவனுக்கே உரியது. அவனிடமே நீங்கள் திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள்.

## 29. சிலந்திப் பூச்சி (அல்அன்கபூத்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

1. அலிஃப். லாம். மீம். 2. 'நாங்கள் நம்பிக்கை கொண்டோம்' என்று கூறியதனால்மட்டும் சோதிக்கப்படாமல் விட்டுவிடப்படுவார்கள் என்று மனிதர்கள் எண்ணிக் கொண்டார்களா? 3. அவர்களுக்கு முன் இருந்தவர்களையும் நாம் சோதித்தே இருக்கின்றோம். உண்மையாளர்கள் யார் என்பதையும் பொய்யர்கள் யார் என்பதையும் அல்லாஹ் அறிந்தே தீருவான்.

4. தீமைகளைச் செய்வோர் நம்மிடமிருந்து தப்பிவிடலாம் என்று எண்ணிக் கொண்டார்களா? அவர்கள் மிகவும் மோசமான தீர்மானத்தை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். 5. அல்லாஹ்வின் சந்திப்பை எதிர்பார்ப்பவர்கள் அறிந்துகொள்ளட்டும்: 'அல்லாஹ் நிர்ணயித்த தவணை வந்தேதீரும்'. அவன் செவியேற்பவனாகவும், நன்கறிபவனாகவும் இருக்கிறான். 6. எவர் முயற்சி செய்கிறாரோ அவர் தமக்காகவே முயற்சி செய்கிறார். நிச்சயமாக அல்லாஹ் அகிலத்தார் அனைவரைவிட்டும் தேவையற்றவன். 7. நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிபவர்களின் பாவங்களை நிச்சயம் நாம் போக்கிடுவோம். அவர்கள் செய்த செயல்களுக்கான சிறந்த கூலியையும் அவர்களுக்கு வழங்கிடுவோம்.

*8.* தன் தாய்தந்தையருடன் நல்லமுறையில் நடந்துகொள்ளுமாறு நாம் மனிதனுக்கு வலியுறுத்தினோம். ஆனாலும் உனக்கு அறிவில்லாத ஒன்றை எனக்கு இணையாக்குமாறு அவர்கள் உன்னை வற்புறுத்தினால் அவர்களுக்கு நீ கட்டுப்படக்கூடாது. என்னிடமே நீங்கள் திரும்ப வேண்டியுள்ளது. அப்போது நீங்கள் செய்துகொண்டிருந்தவற்றை நான் உங்களுக்கு அறிவிப்பேன். *9.* நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிபவர்களை நிச்சயம் நாம் நல்லோர்களுடன் சேர்த்திடுவோம்.

*10.* மக்களில் சிலர், “நாங்கள் அல்லாஹ்வின்மீது நம்பிக்கை கொண்டுள்ளோம்” என்று கூறுகிறார்கள். ஆயினும் அவர்கள் இறைவனுக்காகத் துன்புறுத்தப்பட்டால் மக்களால் ஏற்படும் துன்பங்களை இறைவேதனைபோல் எண்ணிக்கொள்கிறார்கள். ஆயினும் உம் இறைவனிடமிருந்து ஏதேனும் உதவி வந்துவிட்டால் ‘நாங்கள் உங்களுடன்தான் இருந்தோம்’ என்று கூறுவார்கள். மக்களின் உள்ளங்களில் உள்ளவற்றை அல்லாஹ் அறிந்தவனில்லையா? *11.* நம்பிக்கையாளர்கள் யார் என்பதையும் நயவஞ்சகர்கள் யார் என்பதையும் நிச்சயம் அல்லாஹ் அறிந்துகொள்வான்.

*12.* நிராகரிப்பாளர்கள் நம்பிக்கையாளர்களிடம் நீங்கள் எங்கள் வழியைப் பின்பற்றுங்கள், நாங்கள் உங்கள் பாவங்களைச் சுமந்து கொள்கிறோம் என்று கூறுகிறார்கள். ஆனால் அவர்களால் தங்கள் பாவங்களிலிருந்துகூட எதையும் சுமக்க முடியாது. நிச்சயமாக அவர்கள் பொய்யர்களே. *13.* அவர்கள் தம் சுமைகளையும், அத்துடன் வேறு பல சுமைகளையும் சுமப்பார்கள். அவர்கள் புனைந்து கூறியவற்றிற்காக நிச்சயம் அவர்கள் விசாரிக்கப்படுவார்கள்.

*14.* நாம் நோவாவை அவரது சமூகத்திடம் அனுப்பினோம். அவர் ஐம்பது குறைவாக ஆயிரம் ஆண்டுகள் அவர்களிடையே

தங்கியிருந்தார். அவர்கள் அநியாயக்காரர்களாக இருந்ததனால் வெள்ளப் பிரளயம் அவர்களைச் சூழ்ந்து கொண்டது. **15.** நாம் அவரையும் அவருடன் கப்பலில் இருந்தவர்களையும் காப்பாற்றினோம். அச்சம்பவத்தை அகிலத்தாருக்கு ஒரு சான்றாகவும் ஆக்கினோம்.

**16.** ஆப்ரஹாமையும் நாம் அனுப்பினோம். தம் சமூகத்தாரிடம் அவர், "என் சமூகமே! அல்லாஹ்வையே வணங்குங்கள். அவனுக்கே அஞ்சுங்கள். நீங்கள் அறிந்தவர்களாக இருந்தால் இதுவே உங்களுக்குச் சிறந்ததாகும். **17.** நீங்கள் அல்லாஹ்வைவிடுத்து வெறும் சிலைகளைத்தான் வணங்கிக் கொண்டிருக்கிறீர்கள். பொய்யான விஷயங்களைப் புனைந்து கொண்டிருக்கிறீர்கள். அல்லாஹ்வை விடுத்து நீங்கள் வணங்கும் தெய்வங்கள் உங்களுக்கு உணவளிக்க சக்தியற்றவை. அல்லாஹ்விடமே உணவைத் தேடுங்கள். அவனையே வணங்கி வாருங்கள். அவனுக்கே நன்றி செலுத்துங்கள். அவனிடமே நீங்கள் திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள். **18.** நீங்கள் பொய்யெனக் கூறினால் - நிராகரித்தால் - உங்களுக்கு முன்னிருந்த பல சமூகங்களும் மறுத்துள்ளன. தெளிவாக எடுத்துரைப்பதுதான் தூதர் மீதுள்ள கடமையாகும்" என்று கூறினார்.

**19.** அல்லாஹ் எவ்வாறு முதலில் படைப்பினைத் தொடங்கினான் என்பதை அவர்கள் பார்க்கவில்லையா? (அவ்வாறே மரணத்திற்குப்) பிறகும் அவன் மீண்டும் படைப்பான். நிச்சயமாக இது அல்லாஹ்வுக்கு மிக எளிதானது. **20.** நீர் கூறும்: "பூமியில் சுற்றித்திரிந்து அல்லாஹ் எவ்வாறு படைப்பினைத் தொடங்கி மீண்டும் அதனை உருவாக்குகிறான் என்பதைப் பாருங்கள்". நிச்சயமாக அவன் எல்லாவற்றின்மீதும் பேராற்றலுடையவன். **21.** அவன், தான் நாடுவோரைத் தண்டிப்பான்; தான் நாடுவோர் மீது கருணை காட்டுவான். அவனிடமே நீங்கள் திரும்பக் கொண்டு

வரப்படுவீர்கள். **22.** பூமியிலோ, வானத்திலோ உங்களால் அவனைத் தோற்கடிக்க முடியாது. அல்லாஹ்வைத்தவிர உங்களுக்கு உதவியாளனோ, பாதுகாவலனோ யாரும் இல்லை. **23.** அல்லாஹ்வின் வசனங்களையும், அவனது சந்திப்பையும் நிராகரித்தவர்கள்தான் - என் கருணையைவிட்டும் நிராசையடைந்தவர்கள். அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனை உண்டு.

**24.** "அவரைக் கொன்று விடுங்கள் அல்லது எரித்து விடுங்கள்" என்பதுதான் ஆப்ரஹாமுடைய சமூகம் அளித்த பதிலாக இருந்தது. எனவே அல்லாஹ் நெருப்பிலிருந்து அவரைப் பாதுகாத்துக் கொண்டான். நிச்சயமாக நம்பிக்கையாளர்களுக்கு இதில் ஏராளமான சான்றுகள் இருக்கின்றன. **25.** அவர், "உலக வாழ்வில் உங்களில் ஒருவர் மற்றவர்களுக்கிடையே உள்ள நேசத்தின் காரணமாகத்தான் நீங்கள் சிலைகளைத் தெய்வங்களாக ஆக்கிக்கொண்டீர்கள். பின்னர் மறுமைநாளில் உங்களில் சிலர் சிலரை நிராகரிப்பார்கள். சிலர் சிலரைச் சாபமிடுவார்கள். உங்களின் இருப்பிடம் நரகமாகும். உங்களுக்கு உதவி செய்பவர் எவரும் இல்லை" என்று கூறினார். **26.** லோத் அவரை ஏற்றுக்கொண்டார். "நான் என் இறைவனின் பக்கம் புலம்பெயர்ந்து செல்கிறேன். நிச்சயமாக அவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும் ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்" என்று அவர் கூறினார். **27.** நாம் அவருக்கு ஈசாக்கையும், ஜேக்கபையும் அளித்தோம். அவரது சந்ததிகளில் தூதுத்துவத்தையும் வேதத்தையும் ஏற்படுத்தினோம். இவ்வுலகில் அவரது கூலியை அவருக்கு வழங்கினோம். மறுமையில் அவர் நல்லோர்களில் ஒருவராக இருப்பார்.

**28.** லோத்தை அவரது சமூகத்திடம் அனுப்பினோம். அவர் அவர்களிடம், "நிச்சயமாக உலக மக்களில் யாருமே உங்களுக்கு முன் செய்திராத மானக்கேடான காரியத்தை

நீங்கள் செய்கிறீர்கள். *29.* நீங்கள் ஆண்களிடம் செல்கிறீர்களா? வழிப்பறியில் ஈடுபடுகிறீர்களா? உங்கள் சபைகளில் வைத்தே தீய காரியங்களைச் செய்கிறீர்கள்" என்று கூறினார். அதற்கு அவரது சமூகத்தின் பதில், "நீ உண்மையாளராயின் இறைவேதனையை எங்களிடம் கொண்டுவாரும்" என்பதாகத்தான் இருந்தது. *30.* "என் இறைவா, குழப்பம் விளைவிக்கின்ற இம்மக்களுக்கு எதிராக எனக்கு உதவி புரிவாயாக!" என்று லோத் பிரார்த்தனை செய்தார்.

*31.* நம் தூதர்கள் (வானவர்கள்) ஆப்ரஹாமிடம் நற்செய்தியுடன் வந்தபோது, "நாங்கள் இவ்வூர்வாசிகளை அழிக்கப் போகின்றோம். நிச்சயமாக இங்குள்ளவர்கள் பெரும் அக்கிரமக்காரரர்களாக இருக்கிறார்கள்" என்று கூறினார்கள். *32.* அதற்கு அவர், "அங்கு லோத்தும் இருக்கின்றாரே!" என்றார். அதற்கு அவர்கள், "அங்கிருப்பவர்கள் யார் என்பதை நாம் நன்கறிவோம். அவரையும், அவரது குடும்பத்தையும் காப்பாற்றி விடுவோம், ஆயினும் அவரது மனைவியைத் தவிர. அவள் பின்தங்கி விடுவாள்" என்று கூறினார்கள். *33.* நம் தூதர்கள் லோத்திடம் வந்தபோது அவர்களைக்கண்ட அவர் கவலையடைந்து மனநெருக்கடிக்குள்ளாகி விட்டார். அப்போது அவர்கள், "பயப்பட வேண்டாம்; கவலைப்படவும் வேண்டாம். நாம் உம்மையும், உம் குடும்பத்தையும் காப்பாற்றி விடுவோம், ஆயினும் உமது மனைவியைத் தவிர. அவள் பின்தங்கி விடுவாள். *34.* நாங்கள் இவ்வூர்வாசிகள் செய்துகொண்டிருந்த கெட்ட காரியங்களினால் இவர்களின்மீது வானத்திலிருந்து வேதனையை இறக்கப் போகின்றோம். *35.* புரிந்துகொள்ளும் மக்கள் படிப்பினை பெறும்பொருட்டு ஒரு தெளிவான சான்றினை அவர்கள் இருந்த ஊரில் நாம் விட்டு வைத்துள்ளோம்" என்று கூறினார்கள்.

*36.* மத்யன்வாசிகளிடம் அவர்களின் சகோதரர் ஷுஐபை அனுப்பினோம். அவர் (அவர்களிடம்), "என் சமூகமே! அல்லாஹ்வை

வணங்குங்கள், இறுதி நாளை எதிர்பாருங்கள், பூமியில் குழப்பம் செய்துகொண்டு திரியாதீர்கள்" என்று கூறினார். *37.* ஆயினும் அவர்கள் அவரை மறுத்து விட்டார்கள். ஆகவே பூகம்பம் அவர்களைப் பிடித்துக் கொண்டது. அவர்கள் தம் வீடுகளில் முகங்குப்புற வீழ்ந்து கிடந்தார்கள்.

*38.* இவ்வாறே ஆத், ஸமூத் சமூகங்களையும் அழித்து விட்டோம். அவர்களின் வசிப்பிடங்களிலிருந்து அது உங்களுக்குத் தெளிவாகி விட்டது. அவர்கள் அறிவுடையவர்களாக இருந்தும் சாத்தான் அவர்களின் செயல்களை அவர்களுக்கு அழகாக்கிக் காட்டி நேர்வழியைவிட்டு அவர்களைத் தடுத்து விட்டான்.

*39.* இவ்வாறே கோரா, பாரோ மற்றும் ஹாமானையும் அழித்து விட்டோம். மோசே அம்மக்களிடம் தெளிவான சான்றுகளுடன் வந்தார். ஆயினும் அவர்கள் பூமியில் ஆணவம் கொண்டார்கள். அவர்களால் நம்மிடமிருந்து தப்பிச் செல்ல முடியவில்லை. *40.* அவர்களில் ஒவ்வொருவரையும் அவரவர் செய்த பாவத்தினால் நாம் தண்டித்தோம். அவர்களில் சிலர்மீது நாம் கல்மாரி பொழியும் காற்றை அனுப்பினோம். அவர்களில் சிலரைப் பேரிடி முழக்கம் தாக்கியது. அவர்களில் சிலரைப் பூமியினுள் அழுந்தச் செய்தோம். அவர்களில் சிலரை மூழ்கடித்தோம். அல்லாஹ் அவர்கள்மீது அநீதி இழைக்கவில்லை. மாறாக அவர்கள் தமக்குத்தாமே அநீதி இழைத்துக் கொண்டார்கள்.

*41.* அல்லாஹ்வை விடுத்து மற்றவர்களைப் பாதுகாவலர்களாக ஆக்கிக் கொண்டவர்களின் உதாரணம் தனக்கென வீட்டை அமைத்துக்கொண்ட சிலந்திப் பூச்சியைப் போன்றதாகும். நிச்சயமாக வீடுகளில் மிகப் பலவீனமானது சிலந்தியின் வீடுதான். அந்தோ, அவர்கள் அறிந்துகொள்ள வேண்டுமே! *42.* அல்லாஹ்வைவிடுத்து

அவர்கள் அழைப்பவற்றை நிச்சயம் அல்லாஹ் அறிவான். அவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான். 43. இந்த உதாரணங்களை நாம் மனிதர்களுக்காகவே எடுத்துரைக்கிறோம். ஆயினும் அறிவுடையோர்தாம் அவற்றைப் புரிந்து கொள்வார்கள். 44. வானங்களையும் பூமியையும் அல்லாஹ் நோக்கத்தைக் கொண்டே படைத்துள்ளான். நிச்சயமாக நம்பிக்கையாளர்களுக்கு இதில் சான்று இருக்கின்றது.

45. உமக்கு அறிவிக்கப்பட்டுள்ள இவ்வேதத்தை நீர் எடுத்துரைப்பீராக. தொழுகையையும் கடைப்பிடிப்பீராக. நிச்சயமாகத் தொழுகை மானக்கேடான, தீய காரியங்களை விட்டும் தடுக்கின்றது. அல்லாஹ்வை நினைவுகூர்வது மிகப்பெரிய விஷயமாகும். அவர்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிகிறான்.

46. வேதக்காரர்களுடன் அழகியமுறையில் அன்றி நீங்கள் விவாதம் புரிய வேண்டாம், ஆயினும் அவர்களில் எவரேனும் வரம்பு மீறிவிட்டால் (அதற்குத்தக்கவாறு நீங்கள் பதில்கூறுவது உங்கள்மீது குற்றமாகாது). "எங்களுக்கு அருளப்பட்டதன்மீதும், உங்களுக்கு அருளப்பட்டதன்மீதும் நாங்கள் நம்பிக்கை கொண்டோம். எங்கள் இறைவனும், உங்கள் இறைவனும் ஒருவனே. அவனுக்கே நாங்கள் கீழ்ப்படிந்தவர்களாவோம்" என்று நீங்கள் கூறுங்கள்.

47. இவ்வாறே நாம் உம்மீது வேதத்தை அருளினோம். எவருக்கெல்லாம் நாம் வேதம் வழங்கியுள்ளோமோ அவர்கள் இதன்மீது நம்பிக்கைகொள்கிறார்கள். உங்களிலும்கூட சிலர் இதன்மீது நம்பிக்கைகொள்கிறார்கள். நிராகரிப்பாளர்கள்தான் நம் வசனங்களை மறுக்கிறார்கள். 48. இதற்கு முன்னர் நீர் எந்த வேதத்தையும் படித்ததில்லை. உம் கையால் அதனை எழுதியதுமில்லை. அவ்வாறு இருந்திருந்தால் அசத்தியவாதிகள் சந்தேகம் கொண்டிருப்பார்கள்.

*49.* மாறாக இது அறிவு வழங்கப்பட்டோரின் உள்ளங்களில் தெளிவான சான்றுகளாகத் திகழ்கின்றது. அக்கிரமக்காரர்கள்தான் நம் வசனங்களை நிராகரிப்பார்கள்.

*50.* "இவரது இறைவனிடமிருந்து இவருக்கு ஏன் சான்றுகள் அருளப்படவில்லை?" என்று அவர்கள் கேட்கிறார்கள். நீர் கூறும்: "அல்லாஹ்விடமே சான்றுகள் உள்ளன. நானோ வெளிப்படையாக எச்சரிப்பவன்தான்" *51.* அவர்கள் மீது எடுத்துரைக்கப்படும் இவ்வேதத்தை நாம் உமக்கு அருளியிருப்பது அவர்களுக்குப் போதுமானதில்லையா? நிச்சயமாக நம்பிக்கைகொள்ளும் மக்களுக்கு இதில் அருட்கொடையும், நினைவூட்டலும் அடங்கியுள்ளது. *52.* நீர் கூறும்: "எனக்கும் உங்களுக்கும் இடையில் சாட்சியாக இருக்க அல்லாஹ்வே போதுமானவன். அவன் வானங்களிலும் பூமியிலும் உள்ளவற்றை நன்கறிகிறான். அசத்தியத்தை நம்பி அல்லாஹ்வை நிராகரிப்பவர்கள்தான் உண்மையில் நஷ்டமடைந்தவர்கள்".

*53.* அவர்கள் வேதனைக்காக உம்மிடம் அவசரப்படுகிறார்கள். குறிப்பிட்ட ஒரு தவணை நிர்ணயிக்கப்படாதிருந்தால் வேதனை அவர்களை வந்தடைந்திருக்கும். அது அவர்கள் அறியாதவிதத்தில் திடீரென அவர்களைத் தாக்கிவிடும். *54.* நிச்சயமாக நரகம், நிராகரிப்பவர்களை சூழ்ந்திருக்கும்போது அவர்கள் வேதனைக்காக உம்மிடம் அவசரப்படுகிறார்கள். *55.* அந்நாளில் வேதனை அவர்களுக்கு மேலிருந்தும், அவர்களின் கால்களுக்குக் கீழிருந்தும் அவர்களைச் சூழ்ந்துகொள்ளும். அப்போது 'நீங்கள் செய்து கொண்டிருந்தவற்றைச் சுவையுங்கள்' என்று இறைவன் கூறுவான்.

*56.* நம்பிக்கைகொண்ட என் அடியார்களே, நிச்சயமாக என் பூமி விசாலமானது. எனவே நீங்கள் என்னையே வணங்குங்கள். *57.* ஒவ்வொரு மனிதனும் மரணத்தை சுவைத்தே தீர வேண்டும்.

பின்னர் நீங்கள் நம்மிடமே திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள். **58.** நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிந்தவர்களுக்கு சுவனத்தின் உயர்ந்த மாளிகைகளில் நாம் இடமளிப்போம். அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். நற்செயல்கள் புரிவோரின் கூலி எவ்வளவு சிறப்பானது! **59.** அவர்கள் பொறுமையை மேற்கொண்டார்கள்; தங்கள் இறைவனையே முழுவதும் சார்ந்திருக்கிறார்கள். **60.** எத்தனையோ உயிரினங்கள் இருக்கின்றன. அவை தம் உணவைச் சுமந்துகொண்டு திரிவதில்லை. அல்லாஹ்தான் அவற்றுக்கும், உங்களுக்கும் உணவளிக்கின்றான். அவன் செவியேற்பவனாகவும், நன்கறிபவனாகவும் இருக்கின்றான்.

**61.** நீர் அவர்களிடம் 'வானங்களையும், பூமியையும் படைத்து சூரியனையும், சந்திரனையும் நியதிக்குட்படுத்தியவன் யார்' என்று கேட்டால் அவர்கள் நிச்சயம் 'அல்லாஹ்தான்' என்று கூறுவார்கள். அவ்வாறாயின் அவர்கள் எங்கே விலகிப் போகிறார்கள்? **62.** தன் அடியார்களில் தான் நாடுவோருக்கு அல்லாஹ் வாழ்வாதாரத்தை அதிகமாக்குகிறான். தான் நாடுவோருக்கு சுருக்கியும் விடுகிறான். நிச்சயமாக அல்லாஹ் ஒவ்வொரு பொருளையும் நன்கறிந்தவன். **63.** மேகத்திலிருந்து மழையை இறக்கி அதன்மூலம் இறந்த பூமியை மீண்டும் உயிர்ப்பித்தவன் யார் என்று நீர் அவர்களிடம் கேட்டால் நிச்சயம் 'அல்லாஹ்தான்' என்று அவர்கள் கூறுவார்கள். நீர் கூறும்: "அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே!". ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் அறிந்துகொள்வதில்லை.

**64.** இவ்வுலக வாழ்க்கை விளையாட்டும், வேடிக்கையுமேயாகும். மறுமையின் (சொர்க்க) வீடுதான் உண்மையான வாழ்க்கைக்குரிய இடமாகும். அந்தோ, அவர்கள் அறிந்துகொள்ள வேண்டுமே! **65.** அவர்கள் கப்பலில் பயணம் செய்தால் நம்பிக்கையை

*அல்லாஹ்வுக்கே உரித்தாக்கியவாறு அவனையே அழைக்கிறார்கள். ஆனால் அவன் அவர்களைக் காப்பாற்றிக் கரைசேர்த்து விட்டால் அவனுக்கு இணைவைக்கத் தொடங்கி விடுகிறார்கள். **66.** நாம் அவர்களுக்குச் செய்தவற்றுக்கான நன்றியை மறுத்துக் கொண்டே இருக்கட்டும். சுகமனுபவித்துக் கொண்டே இருக்கட்டும். தங்கள் (செயல்களுக்கான) பலனை அவர்கள் தெரிந்து கொள்வார்கள்.*

***67.*** *அவர்களைச் சுற்றியுள்ள மக்கள் தாக்கப்படும் நிலையில் அவர்களுக்குப் பாதுகாப்பாகப் புனிதத்தலத்தை ஆக்கியிருப்பதை அவர்கள் பார்க்கவில்லையா? அவர்கள் அசத்தியத்தை ஏற்றுக்கொண்டு அல்லாஹ்வின் அருட்கொடைக்கு நன்றி செலுத்த மறுக்கிறார்களா? **68.** அல்லாஹ்வின்மீது பொய்யைப் புனைபவனைவிட அல்லது தன்னிடம் சத்தியம் வந்துவிட்ட பின்னரும் அதனை மறுப்பவனைவிட மிகப்பெரிய அக்கிரமக்காரன் யார்? நரகம் நிராகரிப்பாளர்களின் தங்குமிடமில்லையா? **69.** நமக்காக முயற்சிப்பவர்களுக்கு நிச்சயம் நாம் நம் வழிகளைக் காண்பிப்போம். நிச்சயமாக அல்லாஹ் நன்மை செய்வோருடன் இருக்கின்றான்.*

## *30.* ரோமானியர்கள் (அர்ரூம்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

*1. அலிஃப். லாம். மீம். 2-5. அண்டை நாட்டில் ரோமானியர் தோல்வியடைந்து விட்டனர். தோல்விக்குப்பின் விரைவில் அவர்கள் வெற்றியடைவார்கள், சில ஆண்டுகளுக்குள்ளேயே. முன்னரும், பின்னரும் அதிகாரம் அல்லாஹ்வுக்கே உரியது. அந்நாளில் நம்பிக்கையாளர்கள் மகிழ்ச்சியடைவார்கள், இறை உதவியினால். தான் விரும்பியோருக்கு அவன் உதவி செய்கிறான். அவன்*

யாவற்றையும் மிகைத்தவனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். 6. இது அல்லாஹ்வின் வாக்குறுதி. ஒருபோதும் தன் வாக்குறுதிக்கு அல்லாஹ் மாறுசெய்வதில்லை. ஆயினும் மக்களில் பெரும்பாலோர் அறிந்துகொள்வதில்லை. 7. அவர்கள் உலக வாழ்வின் வெளித்தோற்றத்தைத்தான் அறிவார்கள். மறுமையைப்பற்றி அவர்கள் அலட்சியமாக இருக்கிறார்கள்.

8. அவர்கள் தங்களுக்குள் சிந்தித்துப் பார்க்க வேண்டாமா? அல்லாஹ் வானங்களையும், பூமியையும், அவற்றுக்கிடையில் உள்ளவற்றையும் நோக்கத்துடனும் ஒரு குறிப்பிட்ட தவணையுடனும்தான் படைத்துள்ளான். ஆயினும் மக்களில் பெரும்பாலோர் தங்கள் இறைவனின் சந்திப்பை மறுப்பவர்களாகவே இருக்கின்றார்கள். 9. அவர்கள் பூமியில் சுற்றித்திரிந்து அவர்களுக்கு முன் இருந்தவர்களின் கதி என்னவாயிற்று என்பதைப் பார்க்க வேண்டாமா? அவர்கள் இவர்களைவிட பலம் மிக்கவர்களாக இருந்தார்கள். அவர்கள் பூமியைப் பண்படுத்தி இவர்கள் செழிப்பாக்கியதைவிட அதிகமாக செழிப்பாக்கினார்கள். தூதர்கள் அவர்களிடம் தெளிவான சான்றுகளைக் கொண்டு வந்தார்கள். அல்லாஹ் அவர்கள் மீது அநீதி இழைக்கவில்லை. மாறாக அவர்கள் தமக்குத்தாமே அநீதி இழைத்துக் கொண்டார்கள். 10. தீய காரியங்களைச் செய்தோரின் முடிவும் தீயதாகவே அமைந்தது. அவர்கள் இறைவசனங்களைப் பொய்யென்று கூறி அவற்றைப் பரிகசித்துக் கொண்டிருந்ததுதான் அதற்கான காரணமாகும்.

11. அல்லாஹ்வே படைப்பைத் தொடங்குகிறான். பின்னர் அவனே அதனை மீண்டும் படைக்கிறான். அவனிடமே நீங்கள் திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள். 12. ‘அந்நேரம்’ நிலைபெறும் நாளில் குற்றவாளிகள் நிராசையடைந்து விடுவார்கள்.

*13.* அவர்களுடைய இணைத்தெய்வங்களில் அவர்களுக்காகப் பரிந்து பேசுபவர்கள் எவரும் இருக்க மாட்டார்கள். அவர்களும் தங்கள் இணைத்தெய்வங்களை நிராகரித்து விடுவார்கள். *14.* 'அந்நேரம்' நிலைபெறும்போது மக்கள் தனித்தனியாகி விடுவார்கள். *15.* நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிந்தவர்கள் சுவனச்சோலையில் மகிழ்விக்கப்படுவார்கள். *16.* சத்தியத்தை நிராகரித்து நம் வசனங்களையும், மறுமையில் நம் சந்திப்பையும் பொய்யென வாதிட்டவர்கள் வேதனையில் வீழ்ந்து கிடப்பார்கள். *17.* எனவே நீங்கள் மாலையிலும், காலையிலும் அல்லாஹ்வின் தூய்மையைப் போற்றிக் கொண்டிருங்கள். *18.* வானங்களிலும், பூமியிலும் புகழனைத்தும் அவனுக்கே உரியது. பிற்பகலிலும், நண்பகலிலும் அவனைப் புகழுங்கள்*.

*19.* அவன் உயிரற்றவைகளிலிருந்து உயிருள்ளவற்றை வெளிப்படுத்துகிறான்; உயிருள்ளவற்றிலிருந்து உயிரற்றவற்றை வெளிப்படுத்துகிறான். பூமியை அது வறண்ட பின்னரும் செழிப்பாக்குகிறான். இவ்வாறே நீங்களும் (மறுமையில்) வெளிப்படுத்தப்படுவீர்கள். *20.* அவன் உங்களை மண்ணிலிருந்து படைத்திருப்பதும் பின்னர் நீங்கள் மனிதர்களாகிப் பரவியதும் அவனது சான்றுகளில் உள்ளதாகும். *21.* நீங்கள் நிம்மதியடைய வேண்டும் என்பதற்காக உங்கள் (மனித) இனத்திலிருந்தே

---

*இறை வணக்கம் போன்றவை மூலமாக இறைவனை நிலையாக நினைவில் இருத்திக் கொள்வதும், இறைமையை ஆழ்ந்து சிந்திப்பதும் இறைவனைக் கண்டடையச் செய்யும். ஆழ்ந்து சிந்திப்பதன் மூலமே மனிதன் இறைவனைக் கண்டடைய முடியும். இந்த நடப்புலகில் மனிதனைச் சுற்றியும், சூழ்ந்திருக்கும் பிரபஞ்சத்திலும், இறைத்தூதரின் போதனைகள் மூலமாகவும் எண்ணற்ற அடையாளங்களை இறைவன் பரப்பி வைத்துள்ளான். இவற்றின்மீது மிகவும் கவனம் செலுத்தி சிரத்தைகொண்டு இறைவனைப் பற்றி சிந்திப்பவர்கள் இறைவனைக் கண்டடைவார்கள்.

உங்களுக்கு அவன் துணைகளைப் படைத்திருப்பதும் உங்களிடையே அன்பையும், இரக்கத்தையும் ஏற்படுத்தியிருப்பதும் அவனது சான்றுகளில் உள்ளதாகும். நிச்சயமாக இதில் சிந்திக்கக்கூடிய மக்களுக்கு ஏராளமான சான்றுகள் இருக்கின்றன.

22. வானங்கள் மற்றும் பூமியின் படைப்பும், உங்களின் நிறங்கள் மற்றும் மொழிகள் மாறுபட்டிருப்பதும் அவனது சான்றுகளில் உள்ளவையாகும். நிச்சயமாக அறிந்துகொள்ளும் மக்களுக்கு இதில் அத்தாட்சிகள் இருக்கின்றன. 23. இரவிலோ, பகலிலோ நீங்கள் உறங்குவதும், அவனது அருளைத் தேடுவதும் அவனது சான்றுகளில் உள்ளவையாகும். செவியேற்கும் மக்களுக்கு இதில் பல சான்றுகள் அடங்கியுள்ளன. 24. அச்சமும், நம்பிக்கையும் ஏற்படுத்தும் மின்னலை அவன் உங்களுக்குக் காட்டுவதும், மேகத்திலிருந்து மழையை இறக்கி அதன்மூலம் அவன் இறந்த பூமியை உயிர்ப்பிப்பதும் அவனது சான்றுகளில் உள்ளவையாகும். நிச்சயமாக அறிந்துகொள்ளும் மக்களுக்கு இதில் ஏராளமான சான்றுகள் அடங்கியுள்ளன.

25. வானமும், பூமியும் அவனது கட்டளைப்படி நிலைபெற்றிருப்பதும் அவனது சான்றுகளில் உள்ளவையாகும். பின்னர் அவனது ஒரே அழைப்பில் நீங்கள் பூமியிலிருந்து உடனே வெளிப்பட்டு விடுவீர்கள். 26. வானங்களிலும், பூமியிலும் உள்ளவை யாவும் அவனுக்கே உரியவை. இவையனைத்தும் அவனுக்கே அடிபணிந்து நடக்கின்றன. 27. அவனே படைப்பைத் தொடங்குகிறான். பின்னர் மீண்டும் அதனைப் படைக்கிறான். இது அவனுக்கு மிகவும் எளிதானது. வானங்களிலும், பூமியிலும் உள்ள உயர்தன்மைகள் அவனுக்கே உரியன. அவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.

*28.* உங்களிலிருந்தே அவன் உங்களுக்கு ஒரு உதாரணம் கூறுகிறான். உங்கள் அடிமைகளில் யாராவது நாம் உங்களுக்கு வழங்கியுள்ள செல்வங்களில் உங்களுக்குச் சமபங்காளிகளாக இருப்பார்களா? நீங்கள் உங்களைப் போன்றவர்களுக்கு அஞ்சுவதைப்போன்று அவர்களுக்கும் அஞ்சுகிறீர்களா? புரிந்துகொள்ளும் மக்களுக்காக நாம் நம் வசனங்களைத் தெளிவுபடுத்துகிறோம். *29.* ஆயினும் அக்கிரமக்காரர்கள் அறிவில்லாமல் தம் மன இச்சைகளைத்தான் பின்பற்றுகிறார்கள். அல்லாஹ் வழிதவறச்செய்து விடுபவனுக்கு யார் வழிகாட்ட முடியும்? அவர்களுக்கு உதவி செய்வோர் யாருமில்லை.

*30.* முழு மனதுடன் உம் முகத்தை நேரான மார்க்கத்தின் பக்கம் திருப்பிக் கொள்ளும். அல்லாஹ் மக்களுக்காகப் படைத்த இயற்கை அமைப்பில் நிலைத்திருங்கள். அல்லாஹ்வின் படைப்பில் எவ்வித மாற்றமும் இல்லை. இதுவே நேரான மார்க்கம். ஆயினும் மக்களில் பெரும்பாலோர் அறிந்துகொள்வதில்லை. *31.* அவன் பக்கமே திரும்பியவர்களாக அவனையே அஞ்சுங்கள். தொழுகையைக் கடைப்பிடியுங்கள். இணைவைப்போருடன் இணைந்து விடாதீர்கள். *32.* அவர்கள் தங்கள் மார்க்கத்தைத் துண்டு துண்டாக்கிப் பல பிரிவுகளாகி விட்டார்கள். ஒவ்வொரு கூட்டமும் தம்மிடம் இருப்பதைக்கொண்டு பெருமிதம் அடைகின்றன.

*33.* மக்களுக்கு ஏதேனும் துன்பம் ஏற்பட்டால் தம் இறைவனின் பக்கம் அவர்கள் திரும்பியவர்களாக அவனையே அழைக்கிறார்கள். பின்னர் அவன் தன் கருணையை அவர்கள் சுவைக்கும்படிச் செய்தால் அவர்களில் ஒரு பிரிவினர் தம் இறைவனுக்கு இணைவைக்கிறார்கள். *34.* நாம் அவர்களுக்கு வழங்கியதற்காக அவர்கள் நிராகரிக்கட்டும்; சில நாட்கள்வரை அனுபவித்துக் கொள்ளட்டும். விரைவில் அவர்கள் அறிந்துகொள்வார்கள். *35.* அவர்கள் இணைவைப்பதை

சரியெனக்கூறும் ஏதேனும் ஆதாரத்தை நாம் இறக்கியுள்ளோமா என்ன?

**36.** நாம் மக்களை கருணையை சுவைக்கும்படிச் செய்தால் அதன்மூலம் அவர்கள் மகிழ்ச்சியடைகிறார்கள். அவர்கள் செய்த தீவினையினால் அவர்களுக்கு ஏதேனும் துன்பம் ஏற்பட்டு விட்டால் உடனே அவர்கள் நிராசையடைந்து விடுகிறார்கள். **37.** தான் விரும்புவோருக்கு வாழ்வாதாரத்தை அல்லாஹ் தாராளமாக வழங்குகிறான், தான் விரும்புவோருக்கு குறைவாகவும் வழங்குகிறான் என்பதை அவர்கள் பார்க்கவில்லையா? நம்பிக்கை கொள்ளும் மக்களுக்கு இதில் ஏராளமான சான்றுகள் உள்ளன. **38.** உறவினர்களுக்கும், ஏழைகளுக்கும், வழிப்போக்கர்களுக்கும் அவரவர் உரிமையை வழங்கிவிடுவீராக. இறைதிருப்தியை நாடுவோருக்கு இதுவே மிகச் சிறந்தாகும். அவர்கள்தான் வெற்றியாளர்கள். **39.** மற்ற மக்களுடைய செல்வங்களுடன் சேர்ந்து பெருகும் பொருட்டு (உங்கள் செல்வத்தை) நீங்கள் வட்டிக்குக் கொடுத்தால் அது அல்லாஹ்விடம் பெருகுவதில்லை. மாறாக இறைதிருப்தியை நாடி நீங்கள் வழங்கும் தானதர்மங்கள்தான் அல்லாஹ்விடம் பெருகும். அவர்கள்தான் அதனைப் பன்மடங்காகப் பெருக்கிக் கொள்பவர்கள்.

**40.** அல்லாஹ்தான் உங்களைப் படைத்தான். உங்களுக்கு உணவளித்தான். பின்னர் உங்களை மரணிக்கச்செய்கிறான். பின்னர் அவனே உங்களை உயிர்ப்பிப்பான். உங்கள் இணைத்தெய்வங்களில் எவையேனும் இவற்றில் ஏதேனும் ஒன்றைச் செய்யக்கூடியதாக இருக்கின்றதா? அவர்களின் இணைவைப்பை விட்டும் அவன் மிகத் தூய்மையானவன், மிக உயர்ந்தவன். **41.** மக்கள்செய்த தீவினைகளினால் தரையிலும், கடலிலும் குழப்பம் பரவி விட்டது. எனவே அவர்கள் திரும்பிவிடும் பொருட்டு அல்லாஹ் அவர்களது சில

தீயசெயல்களின் விளைவை அவர்கள் சுவைக்கும்படிச் செய்கிறான். *42.* நீங்கள் பூமியில் சுற்றித்திரிந்து முன்னர் வாழ்ந்தவர்களின் கதி என்னவாயிற்று என்பதைப் பாருங்கள். அவர்களில் பெரும்பாலோர் இணைவைப்போராகவே இருந்தார்கள்.

*43.* எனவே அல்லாஹ்விடமிருந்து தப்பமுடியாத நாள் வருவதற்கு முன் நீர் உம் முகத்தை நேரான மார்க்கத்தின் பக்கம் நிலைநிறுத்திக் கொள்ளும். அந்நாளில் மக்கள் தனித்தனியாகி விடுவார்கள். *44.* நிராகரிப்பவரின் நிராகரிப்பு அவருக்கே கேடாக அமையும். நற்செயல் புரிபவர்கள் தங்களுக்காகவே நன்மையை தயார்படுத்திக் கொள்கிறார்கள். *45.* இது நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிவோருக்கு தன் அருளிலிருந்து அல்லாஹ் கூலி வழங்குவதற்காகத்தான். அவன் நிராகரிப்பாளர்களை நேசிக்க மாட்டான்.

*46.* தன் கருணையை (மழையை) உங்களை சுவைக்கச் செய்வதற்காகவும், அவனது கட்டளைப்படி கப்பல் செல்வதற்காகவும் அவனது அருளை நீங்கள் தேடுவதற்காகவும், நீங்கள் நன்றி செலுத்துவதற்காகவும் அவன் காற்றுகளை நற்செய்தியாக அனுப்புகிறான். இது அவனது சான்றுகளில் ஒன்றாகும். *47.* நாம் உமக்கு முன்னர் தூதர்களை அவர்களது சமூகத்திடம் அனுப்பி வைத்தோம். அவர்கள் அம்மக்களிடம் தெளிவான சான்றுகளைக் கொண்டு வந்தார்கள். பின்னர் குற்றம்புரிந்த மக்களை நாம் தண்டித்தோம். ஆனால் நம்பிக்கையாளர்களுக்கு உதவிசெய்வது நம் கடமையாகும்.

*48.* அல்லாஹ்வே காற்றுகளை அனுப்புகிறான். அவை மேகங்களை ஓட்டுகின்றன. பின்னர் தான் நாடியவாறு அவற்றை வானத்தில் பரப்பி பல்வேறு துண்டுகளாக அவன் ஆக்கி விடுகிறான்.

அவற்றிற்கிடையிலிருந்து மழை பொழிவதை நீங்கள் காண்கிறீர். பின்னர் தன் அடியார்களில் தான் நாடியோர்மீது அவன் அதனைப் பொழியச் செய்யும்போது அவர்கள் மகிழ்ச்சியடைகிறார்கள். 49. ஆயினும் அது அவர்களின்மீது பொழிவதற்கு முன்னால் அவர்கள் நம்பிக்கையை இழந்திருந்தார்கள். 50. அல்லாஹ்வுடைய கருணையின் அடையாளங்களைப் பாரும். இறந்துகிடக்கும் பூமியை அவன் எவ்வாறு உயிர்ப்பிக்கின்றான்? அவன்தான் இறந்தோரை உயிர்ப்பிப்பவன். அவன் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவன். 51. ஆனால் நாம் ஒரு காற்றை அனுப்பி அதனால் பயிர்கள் மஞ்சள் நிறமாகிப் போவதை அவர்கள் பார்த்தால் அதன்பின் நிராகரித்து விடுகிறார்கள். 52. எனவே உம்மால் இறந்தோரைச் செவியுறச் செய்ய முடியாது. செவிடர்கள் புறங்காட்டி ஓடினால் அவர்களுக்கு உம் அழைப்பைக் கேட்கச் செய்ய முடியாது. 53. உம்மால் குருடர்களை அவர்களின் வழிகேட்டிலிருந்து வெளியேற்றி நேர்வழியின் பக்கம் கொண்டுவர முடியாது. நம் வசனங்களின்மீது நம்பிக்கை கொண்டவர்களைத்தான் உம்மால் செவியுறச் செய்ய முடியும். அவர்கள்தான் கீழ்ப்படிந்தவர்கள்.

54. அல்லாஹ்தான் உங்களை பலவீனமான நிலையில் படைத்தான். பலவீனத்திற்குப்பின் பலத்தை அளித்தான். பலத்திற்குப்பின் பலவீனத்தையும், முதுமையையும் ஏற்படுத்தினான். அவன் நாடுவதைப் படைக்கிறான். அவன் நன்கறிந்தவனாகவும், பேராற்றலுடையவனாகவும் இருக்கின்றான். 55. ‘அந்நேரம்’ நிலைபெறும்நாளில், “நாங்கள் ஒரு மணி நேரத்திற்கு மேல் தங்கியிருக்கவில்லை” என்று குற்றவாளிகள் சத்தியமிட்டுக் கூறுவார்கள். இவ்வாறே அவர்கள் ஏமாற்றப்பட்டிருந்தார்கள். 56. ஆனால் அறிவும், நம்பிக்கையும் வழங்கப்பட்டவர்கள், “அல்லாஹ்வுடைய பதிவேட்டின்படி நீங்கள் மீண்டும் எழுப்பப்படும்

நாள்வரை தங்கியிருந்தீர்கள். இதுதான் ‘எழுப்பப்படும் நாள்’. ஆயினும் நீங்கள் இதைப்பற்றி அறியாதவர்களாக இருந்தீர்கள்” என்று கூறுவார்கள். 57. அந்நாளில் அக்கிரமக்காரரர்களின் பொய்க்காரணங்கள் பலனளிக்காது. மன்னிப்புக் கோரும்படியும் அவர்கள் கூறப்பட மாட்டார்கள்.

58. நாம் இந்த குர்ஆனில் பலவிதமான உதாரணங்களையும் மக்களுக்கு எடுத்துரைத்து விட்டோம். ஆயினும் நீர் அவர்களிடம் ஏதேனும் சான்றினைக் கொண்டு வந்தால் ‘நீங்கள் அனைவரும் அசத்தியவாதிகள்தாம்’ என்று நிராகரிப்பாளர்கள் கூறுவார்கள். 59. இவ்வாறே அல்லாஹ் அறியாதவர்களின் உள்ளங்களில் முத்திரையிட்டு விடுகிறான். 60. எனவே நீர் பொறுமையுடன் இருப்பீராக. நிச்சயமாக அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானது. உறுதியான நம்பிக்கையற்றவர்கள் உம்மைக் கலக்கமடையச் செய்துவிட வேண்டாம்.

## 31. லுக்மான்

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

1. அலிஃப். லாம். மீம். 2. இவை ஞானம்நிறைந்த வேதத்தின் வசனங்களாகும். 3. இது நன்மை செய்வோருக்கு நேர்வழிகாட்டியாகவும், கருணையாகவும் இருக்கின்றது. 4. அவர்கள் தொழுகையைக் கடைப்பிடித்து கடமையாக்கப்பட்ட தர்மத்தையும் வழங்குவார்கள். மறுமையின்மீதும் உறுதியான நம்பிக்கை கொள்வார்கள். 5. இவர்கள்தான் தம் இறைவனிடமிருந்து வந்த நேர்வழியில் இருப்பவர்கள். இவர்கள்தான் வெற்றியாளர்கள்.

6. மக்களில் சிலர், அறிவில்லாமல் இறைவழியைவிட்டு மக்களை பிறழச் செய்வதற்காகவும், அதனைப் பரிகாசமாக

எடுத்துக் கொள்வதற்காகவும் மதிமயக்கும் விஷயங்களை விலைக்கு வாங்குகிறார்கள். அவர்களுக்கு இழிவுமிக்க வேதனை உண்டு. 7. அப்படிப்பட்ட ஒருவனிடம் நம் வசனங்கள் எடுத்துரைக்கப்பட்டால் செவியேற்காதவனாக, அவனது இரு காதுகளிலும் செவிட்டுத்தன்மை இருப்பதுபோன்று கர்வம்கொண்டு முகம் திருப்பிக்கொள்கிறான். அவனுக்குத் துன்புறுத்தும் வேதனை உண்டு எனும் நற்செய்தியைக் கூறி விடுவீராக. 8. நிச்சயமாக நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிந்தவர்களுக்கு அருட்கொடைகள் நிறைந்த சுவனங்கள் உண்டு. 9. அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். இது அல்லாஹ்வின் உண்மையான வாக்குறுதியாகும். அவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.

10. அவனே தூண்கள் எதுவுமின்றி வானங்களைப் படைத்தான். அதனை நீங்களும் பார்க்கின்றீர்கள், பூமி உங்களை சரித்து விடாதிருக்க அதில் மலைகளை முளைகளாக ஊன்றினான். அதில் அனைத்து வகையான உயிரினங்களையும் பரவச் செய்தான் - நாமே வானத்திலிருந்து மழையை இறக்கி அனைத்துவகையான உயர்ந்த தாவரங்களையும் அதில் முளைக்கச் செய்தோம். 11. இவை அல்லாஹ்வின் படைப்புகளாகும். அவனைத்தவிர மற்றவர்கள் எதைப் படைத்துள்ளார்கள் என்பதை எனக்குக் காட்டுங்கள். உண்மையில் அக்கிரமக்காரர்கள் தெளிவான வழிகேட்டில் இருக்கிறார்கள்.

12. “நீர் அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்தும்! எவர் நன்றி செலுத்துகிறாரோ அவர் தமக்காகவே நன்றி செலுத்துகிறார். எவர் நன்றி மறந்தவராக இருக்கின்றாரோ அவர் அறிந்துகொள்ளட்டும்: அல்லாஹ் தேவையற்றவனாகவும், புகழுக்குரியவனாகவும் இருக்கின்றான்” என்று நாம் லுக்மானுக்கு ஞானத்தை வழங்கினோம்.

*13.* லுக்மான் தம் மகனுக்கு அறிவுரை வழங்கியபோது “என் அருமை மகனே! நீ அல்லாஹ்வுக்கு இணைவைக்காதே! நிச்சயமாக இணைவைத்தல் மிகப்பெரும் அநியாயமாகும்“ என்று கூறியதை நினைவுகூரும்.

*14.* நாம் மனிதனை அவனுடைய பெற்றோருக்கு நன்றி செலுத்தும்படி வலியுறுத்தினோம்: அவனது தாய் துன்பத்திற்கு மேல் துன்பம் அனுபவித்து அவனைச் சுமந்தாள். அவனை பால்குடி மறக்கச் செய்ய இருஆண்டுகள் ஆகின்றன. எனவே எனக்கும், உன் பெற்றோருக்கும் நன்றி செலுத்து. (நீ) என்னிடமே திரும்ப வேண்டும். *15.* ஆனால் உனக்கு அறிவில்லாத ஒன்றை எனக்கு இணையாக்குமாறு அவர்கள் இருவரும் உன்னை வற்புறுத்தினால் நீ அவர்களுக்குக் கீழ்ப்படிய வேண்டாம். ஆயினும் உலகில் அவர்களுடன் நல்லமுறையில் நடந்துகொள். என் பக்கம் மீண்டவர்களின் வழியைப் பின்பற்று. பின்னர் நீங்கள் என்னிடமே திரும்ப வேண்டும். அப்போது நீங்கள் செய்து கொண்டிருந்தவற்றை நான் உங்களுக்கு அறிவிப்பேன்.

*16.* “என் அருமை மகனே! ஏதேனும் ஒன்று - அது கடுகளவு இருந்தாலும் சரி, அது ஏதேனும் ஒரு பாறைக்குள்ளோ, வானங்களிலோ, பூமியிலோ இருந்தாலும் சரி, அல்லாஹ் அதனைக்கொண்டு வருவான். நிச்சயமாக அல்லாஹ் நுட்பமானவன், நன்கறிந்தவன்”. *17.* “என் அருமை மகனே! தொழுகையைக் கடைப்பிடி; நன்மை செய்யுமாறு தூண்டி தீமையைத் தடு; உனக்கு வரக்கூடிய துன்பங்களைப் பொறுத்துக்கொள். நிச்சயமாக இது மனவுறுதிமிக்க காரியமாகும். *18.* மக்களைவிட்டும் உன் முகத்தைத் திருப்பிக் கொள்ளாதே. பூமியில் ஆணவங்கொண்டு திரியாதே. ஆணவங்கொண்டு பெருமையடிக்கும் எவரையும் அல்லாஹ் நேசிக்க மாட்டான். *19.* உன் நடையில் மிதமான வேகத்தைக் கடைப்பிடி.

உன் குரலை தாழ்த்திக்கொள். நிச்சயமாக குரல்களிலெல்லாம் வெறுக்கத்தக்கது கழுதையின் உரத்தக் குரலேயாகும்''.

*20.* வானங்களிலும், பூமியிலும் உள்ளவற்றை அவன் உங்களுக்கு வசப்படுத்தித் தந்துள்ளான். உங்கள்மீது வெளிப்படையாகவும், மறைமுகமாகவும் தன் அருட்கொடைகளை நிறைவாக்கியுள்ளான் என்பதை நீங்கள் பார்க்கவில்லையா? அறிவில்லாமலும், வழிகாட்டுதல் இல்லாமலும், பிரகாசமான வேதம் இல்லாமலும் அல்லாஹ்வைப்பற்றி மக்களில் சிலர் தர்க்கம் புரிகின்றார்கள். *21.* "அல்லாஹ் அருளியுள்ளதைப் பின்பற்றுங்கள்" என்று அவர்களிடம் கூறப்பட்டால் 'இல்லை, எங்கள் மூதாதையர்களை எதில் கண்டோமோ அதைத்தான் நாங்கள் பின்பற்றுவோம்' என்று அவர்கள் கூறுகிறார்கள். சாத்தான் அவர்களை நரக வேதனையின் பக்கம் அழைத்தாலுமா?

*22.* எவர் தம்மை முழுவதும் அல்லாஹ்விடம் ஒப்படைத்து நற்செயல் புரிபவராகவும் இருக்கின்றாரோ அவர் அறுபடாத பலமான கயிற்றைப் பற்றிப் பிடித்துக் கொண்டவராவார். அனைத்து விவகாரங்களின் முடிவும் அல்லாஹ்விடமே உள்ளது. *23.* நிராகரிப்பவரின் நிராகரிப்பு உம்மைக் கவலையில் ஆழ்த்திவிட வேண்டாம். நம்மிடமே அவர்கள் திரும்ப வேண்டும். அப்போது அவர்கள் செய்தவற்றை நாம் அவர்களுக்கு அறிவிப்போம். நிச்சயமாக அல்லாஹ் உள்ளங்களில் உள்ளவற்றையும் நன்கறிந்தவன். *24.* சில காலம்வரை அவர்களை நாம் அனுபவிக்கச் செய்வோம். பின்னர் அவர்களை கடும் வேதனையின் பக்கம் தள்ளி விடுவோம்.

*25.* "வானங்களையும், பூமியையும் படைத்தவன் யார்" என்று நீர் அவர்களிடம் கேட்டால் 'அல்லாஹ்தான்' என்று அவர்கள் கூறுவார்கள். நீர் கூறும்: "அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே".

ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் அறிய மாட்டார்கள். *26.* வானங்களிலும் பூமியிலும் உள்ளவை அல்லாஹ்வுக்கே உரியன. நிச்சயமாக அல்லாஹ் தேவையற்றவனாகவும், புகழுக்குரியவனாகவும் இருக்கின்றான். *27.* பூமியிலுள்ள மரங்களெல்லாம் எழுதுகோல்களாகவும் கடலுடன் இன்னும் ஏழு கடல்கள் சேர்ந்து மையாகவும் மாறினால்கூட இறைவாக்குகள் தீர்ந்துவிடாது. அவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.

*28.* ஒருவரைப் படைப்பது, உயிர் கொடுத்து எழுப்புவது போன்றதுதான் உங்களைப் படைப்பதும், மீண்டும் உயிர் கொடுத்து எழுப்புவதும். நிச்சயமாக அவன் செவியேற்பவனாகவும், பார்ப்பவனாகவும் இருக்கின்றான். *29.* நீர் பார்க்கவில்லையா? அல்லாஹ்தான் இரவைப் பகலில் புகுத்துகின்றான். பகலை இரவில் புகுத்துகின்றான். அவனே சூரியனையும், சந்திரனையும் ஒரு நியதிக்குட்படுத்தியுள்ளான். ஒவ்வொன்றும் ஒரு குறிப்பிட்ட தவணைவரை ஓடிக் கொண்டிருக்கும். நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை நன்கறிந்தவன். *30.* அல்லாஹ்தான் உண்மையானவன். அவனைத்தவிர நீங்கள் அழைப்பவை அனைத்தும் பொய்யானவையே. அல்லாஹ்வே மிக உயர்ந்தவன், மிகப் பெரியவன்.

*31.* இறையருளினால் கப்பல் கடலில் செல்கிறது. அது அவன் தன் சான்றுகளைக் காட்ட வேண்டும் என்பதற்காகத்தான். நீர் பார்க்கவில்லையா?. பொறுமையுடன் நன்றி செலுத்தும் ஒவ்வொருவருக்கும் இதில் ஏராளமான சான்றுகள் இருக்கின்றன. *32.* மலைகளைப்போன்ற அலைகள் அவர்களைச் சூழ்ந்து கொண்டால் நம்பிக்கையை அல்லாஹ்வுக்கே உரித்தாக்கியவாறு அவனிடமே பிரார்த்திக்கிறார்கள். ஆனால் நாம் அவர்களைக் காப்பாற்றிக் கரைசேர்த்து விட்டால் அவர்களில் சிலர் நடுநிலையாக

நடந்து கொள்கிறார்கள். நன்றிகெட்ட துரோகிகள்தான் நம் சான்றுகளை நிராகரிக்கிறார்கள்.

*33.* மனிதர்களே! உங்கள் இறைவனுக்கு அஞ்சிக் கொள்ளுங்கள். இன்னும் ‘அந்த நாளை’ அஞ்சிக் கொள்ளுங்கள். அந்த நாளில் எந்தத் தந்தையும் தன் மகனுக்குப் பலனளிக்க முடியாது. எந்த மகனும் தன் தந்தைக்குப் பலனளிக்க முடியாது. நிச்சயமாக அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானது. ஆகவே இவ்வுலக வாழ்க்கை உங்களை ஏமாற்றிவிட வேண்டாம். ஏமாற்றுக்காரனும் அல்லாஹ்வின் விஷயத்தில் உங்களை ஏமாற்றிவிட வேண்டாம். *34.* அந்நேரத்தைப்பற்றிய அறிவு அல்லாஹ்விடமே உள்ளது. அவனே மழையைப் பொழிவிக்கின்றான். கருவறையில் உள்ளதையும் அவன் அறிவான். நாளை என்ன சம்பாதிப்பார் என்பதை எவரும் அறிய மாட்டார். தான் எந்த பூமியில் மரணிப்பார் என்பதையும் எவரும் அறிய மாட்டார். நிச்சயமாக அல்லாஹ் நன்கறிந்தவன், நுட்பமானவன்.

## 32. சிரம்பணிதல் (அஸ்ஸஜ்தா)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

*1.* அலிஃப். லாம். மீம். *2.* இது அகிலங்களின் இறைவனிடமிருந்து அருளப்பட்ட வேதம் என்பதில் எத்தகைய சந்தேகமும் இல்லை. *3.* “இதனை இவர் தாமாகப் புனைந்து கொண்டார்’’ என்று அவர்கள் கூறுகிறார்களா? அப்படியல்ல. உமக்குமுன் எச்சரிப்பவர் எவரும் வந்திராத ஒரு சமூகத்திற்கு அவர்கள் நேர்வழி அடையும்பொருட்டு நீர் எச்சரிக்கை செய்யவேண்டும் என்பதற்காக இது உம் இறைவனிடமிருந்து வந்துள்ள உண்மையாகும்.

*4. அல்லாஹ்தான் வானங்களையும், பூமியையும் அவற்றிற்கிடையில் உள்ளவற்றையும் ஆறு நாட்களில் படைத்தான். பின்னர் அரியணையின் மீது நிலைகொண்டான். அவனைத்தவிர உங்களுக்கு உதவுபவரோ, பரிந்து பேசுபவரோ எவரும் இல்லை. நீங்கள் சிந்திக்க மாட்டீர்களா? 5. வானத்திலிருந்து பூமிவரை அனைத்து காரியங்களையும் அவனே நிர்வகிக்கிறான். அவை ஒருநாள் அவனிடமே சென்றுவிடும். அதன் அளவு உங்கள் கணக்கின்படி ஆயிரம் ஆண்டுகளுக்குச் சமமாகும். 6. அவன் மறைவானவற்றையும், வெளிப்படையானவற்றையும் நன்கறிந்தவன். அவன் யாவற்றையும் மிகைத்தவன், இணையிலாக் கிருபையாளன். 7. அவன்படைத்த ஒவ்வொரு பொருளையும் நேர்த்தியாகப் படைத்தான். அவன் மனிதப்படைப்பைக் களிமண்ணிலிருந்து தொடங்கினான். 8. பின்னர் அற்பத்துளியின் சாரத்திலிருந்து மனிதனது சந்ததியை உருவாக்கினான். 9. பின்னர் அவனைச் செம்மையாக்கி தனது ஆன்மாவை அவனுள் ஊதினான். உங்களுக்கு செவியையும், பார்வைகளையும், இதயங்களையும் அமைத்தான். ஆயினும் நீங்கள் மிகக்குறைவாகவே நன்றி செலுத்துகிறீர்கள்.*

*10. 'பூமியில் நாங்கள் மறைந்து (ஒன்றுமில்லாமல்) போய் விட்ட பின்னருமா மீண்டும் புதிதாக படைக்கப்படுவோம்' என்று அவர்கள் கேட்கிறார்கள். இல்லை. உண்மையில் அவர்கள் தங்கள் இறைவனின் சந்திப்பையே நிராகரிப்போராக இருக்கின்றார்கள். 11. நீர் கூறும்: "உங்கள் மீது நியமிக்கப்பட்டுள்ள மரணத்தின் வானவர் உங்கள் உயிரைக் கைப்பற்றிக் கொள்வார். பின்னர் உங்கள் இறைவனிடமே நீங்கள் திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள்". 12. அந்தோ, நீர் பார்க்க வேண்டுமே! அப்போது குற்றவாளிகள் தம் இறைவனுக்கு முன்னால் தலைகுனிந்தவர்களாக, "எங்கள் இறைவா! நாங்கள் பார்த்தோம், கேட்டோம். எனவே எங்களைத்*

*திருப்பி அனுப்பி விடு. நாங்கள் நற்செயல் புரிகின்றோம். நிச்சயமாக நாங்கள் உறுதியாக நம்பிக்கைகொண்டு விட்டோம்" என்று கூறுவார்கள். **13.** நாம் நாடியிருந்தால் அனைவருக்கும் வழிகாட்டியிருப்போம். ஆயினும் (பாவிகளாகிய) 'ஜின்களையும், மனிதர்களையும்கொண்டு நான் நரகத்தை நிரப்புவேன்' என்ற எனது வாக்கு உறுதியாகி விட்டது. **14.** எனவே அனுபவியுங்கள். உங்களது இந்த நாளின் சந்திப்பை மறந்ததனால் நாமும் உங்களை மறந்து விட்டோம். உங்களின் செயல்களினால் நிலையான வேதனையை அனுபவியுங்கள்.*

***15.** நம் வசனங்களின்மீது நம்பிக்கை கொள்பவர்கள் யாரெனில் அவற்றின்மூலம் அவர்களுக்கு நினைவூட்டப்பட்டால் சிரம்பணிந்தவர்களாக விழுந்து தங்கள் இறைவனைப் புகழ்ந்து போற்றுவார்கள். அவர்கள் ஆணவம் கொள்ள மாட்டார்கள். **16.** தம் படுக்கைகளிலிருந்து அவர்கள் எழுந்து அச்சத்துடனும், ஆர்வத்துடனும் தம் இறைவனிடம் பிரார்த்திப்பார்கள். நாம் அவர்களுக்கு வழங்கியவற்றிலிருந்து செலவும் செய்வார்கள். **17.** அவர்களின் செயல்களுக்குக் கூலியாக மறைத்து வைக்கப்பட்டுள்ள இன்பங்களை எவரும் அறிய மாட்டார்.*

***18.** நம்பிக்கைகொண்டவர் கீழ்ப்படியாதவரைப்போல் ஆவாரா? இருவரும் சமமாக மாட்டார்கள். **19.** நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிந்தவர்களுக்கு அவர்கள் செய்து கொண்டிருந்தவற்றிற்காக விருந்தினர் போன்ற உபசரிப்புடன் சொர்க்கத்தில் தங்குமிடங்கள் உண்டு. **20.** ஆனால் கீழ்ப்படியாதவர்கள் நரகத்தையே தங்குமிடமாகப் பெறுவார்கள். அதிலிருந்து அவர்கள் வெளியேற நாடும்போதெல்லாம் மீண்டும் அதிலேயே தள்ளப்படுவார்கள். அப்போது அவர்களிடம், "எதனை நீங்கள் பொய்யெனக் கூறிக் கொண்டிருந்தீர்களோ அந்த நரக வேதனையை அனுபவியுங்கள்" என்று கூறப்படும். **21.** அவர்கள்*

(நம் பக்கம்) திரும்பிவிடும்பொருட்டு பெரும் வேதனைக்கு முன் சிறிய வேதனையை அவர்கள் அனுபவிக்கும்படிச் செய்வோம். *22.* தன் இறைவனின் வசனங்களின்மூலம் நினைவூட்டப்பட்ட பின்னரும் அவற்றைப் புறக்கணிப்பவனைவிட மிகப்பெரிய அக்கிரமக்காரன் யார்? நாம் குற்றவாளிகளைத் தண்டித்தே தீருவோம்.

*23.* நாம் மோசேவுக்கு வேதத்தை வழங்கினோம். எனவே அவர் அதனைப் பெற்றதைக் குறித்து நீர் சந்தேகப்படாதீர். நாம் அதனை இஸ்ராயீலின் மக்களுக்கு வழிகாட்டியாகவும் ஆக்கினோம். *24.* அவர்கள் பொறுமையைக் கடைப்பிடித்தபோது நாம் அவர்களிலிருந்து நம் கட்டளைப்படி வழிநடத்தும் தலைவர்களை ஏற்படுத்தினோம். அவர்கள் நம் வசனங்களின்மீது உறுதியான நம்பிக்கை கொண்டிருந்தார்கள். *25.* அவர்கள் முரண்பட்டுக் கொண்டிருந்த விஷயங்களில் உம் இறைவன் அவர்களிடையே மறுமைநாளில் தீர்ப்பளிப்பான். *26.* நாம் இவர்களுக்குமுன் எத்தனையோ சமூகங்களை அழித்திருக்கின்றோம் என்பதிலிருந்து இவர்கள் படிப்பினை பெறவில்லையா? அவர்கள் வாழ்ந்த இடங்களின் வழியில்தானே இவர்கள் நடந்து கொண்டிருக்கிறார்கள். நிச்சயமாக இதில் ஏராளமான சான்றுகள் உள்ளன. அவர்கள் செவிசாய்க்க மாட்டார்களா என்ன?

*27.* நாம் நீரை வறண்ட பூமியின்பக்கம் ஓட்டிச் செல்வதை இவர்கள் பார்க்கவில்லையா? அதன்மூலம் இவர்களும், இவர்களது கால்நடைகளும் உண்ணக்கூடிய பயிர்களை முளைக்கச் செய்கின்றோம். இவர்கள் பார்க்க மாட்டார்களா என்ன?

*28.* “நீங்கள் உண்மையாளர்களாயின் இந்தத் தீர்ப்பு எப்போது வரும்” என்று அவர்கள் கேட்கிறார்கள். *29.* நீர் கூறும்:

“தீர்ப்பு நாளன்று நிராகரிப்பாளர்களின் நம்பிக்கை பயன் தராது. அவர்களுக்கு அவகாசமும் அளிக்கப்படாது”. 30. எனவே நீர் அவர்களைப் புறக்கணித்து எதிர்பார்த்திருப்பீராக. அவர்களும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

## 33. படையினர் (அல்அஹ்ஸாப்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

1. தூதரே! அல்லாஹ்வை அஞ்சுவீராக. நிராகரிப்பாளர்களுக்கும், நயவஞ்சகர்களுக்கும் கீழ்ப்படியாதீர். நிச்சயமாக அல்லாஹ் நன்கறிந்தவனாகவும் ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான். 2. உம் இறைவனிடமிருந்து உமக்கு அறிவிக்கப்படுவதைப் பின்பற்றுவீராக. நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை நன்கறிந்தவன். 3. அல்லாஹ்வையே முழுமையாகச் சார்ந்திருப்பீராக. அல்லாஹ்வே பொறுப்பேற்கப் போதுமானவன்.

4. எந்த மனிதனுடைய நெஞ்சுக்குள்ளும் இரண்டு உள்ளங்களை அல்லாஹ் அமைத்திடவில்லை. உங்கள் மனைவியரில் யாரை நீங்கள் உங்கள் தாயுடன் ஒப்பிட்டீர்களோ அவர்களை அவன் உங்களுக்குத் தாயார்களாக ஆக்கவுமில்லை. உங்கள் வளர்ப்பு மகன்களை உங்களின் சொந்த மகன்களாக ஆக்கவுமில்லை. இவை யாவும் உங்கள் வாய்ப்பேச்சுகளாகும். அல்லாஹ் உண்மையைக் கூறுகிறான். நேரான வழியைக் காட்டுகிறான். 5. வளர்ப்பு மகன்களை அவர்களின் தந்தையர்களுடன் சேர்த்து அழையுங்கள். இதுவே அல்லாஹ்விடம் மிகவும் நியாயமானதாகும். அவர்களின் தந்தையர்களை நீங்கள் அறியவில்லையாயின் - அவர்கள் உங்களுக்கு மார்க்கச் சகோதரர்களாகவும், உங்கள் நண்பர்களாகவும் இருக்கின்றார்கள். இவற்றில் நீங்கள் அறியாமல் ஏதேனும்

தவறிழைத்திருந்தால் உங்கள்மீது எவ்விதக் குற்றமுமில்லை. ஆயினும் நீங்கள் வேண்டுமென்றே அப்படிச் செய்திருந்தால் அது குற்றமாகும். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

*6. இந்த தூதர் நம்பிக்கையாளர்களுக்குத் தங்கள் உயிர்களை விடவும் மேலானவர். அவருடைய மனைவியர் அவர்களுக்கு அன்னையர்களாவர். இறைவேதத்தின்படி நம்பிக்கையாளர்களைவிடவும், புலம்பெயர்ந்தவர்களை விடவும் உறவினர்களே ஒருவருக்கொருவர் நெருக்கமானவர்கள். ஆயினும் உங்கள் நண்பர்களுக்கு நீங்கள் நன்மை செய்ய விரும்பினாலே தவிர. இது வேதத்தில் எழுதப்பட்டதாகும்.*

*7. நாம் தூதர்களிடமும் உம்மிடமும், நோவா, ஆப்ரஹாம், மோசே மற்றும் மரியாளின் மகன் இயேசுவிடமும் வாக்குறுதி வாங்கினோம்; அவர்களிடம் நாம் உறுதியான வாக்குறுதி வாங்கினோம். 8. அது உண்மையாளர்களிடம் அவர்களின் உண்மையைக் குறித்து அல்லாஹ் விசாரிக்க வேண்டும் என்பதற்காகத்தான். நிராகரிப்பாளர்களுக்கு அவன் துன்புறுத்தும் வேதனையைத் தயார்படுத்தி வைத்துள்ளான்.*

*9. நம்பிக்கையாளர்களே! அல்லாஹ் உங்கள்மீது பொழிந்த அருட்கொடையை நினைவுகூருங்கள். படைகள் உங்களைத் தாக்க வந்தபோது காற்றையும், உங்கள் பார்வைக்குத் தென்படாத படையையும் அவர்களுக்கெதிராக நாம் அனுப்பினோம். நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் கூர்ந்து பார்க்கக்கூடியவனாக இருக்கின்றான். 10. அவர்கள் உங்களுக்கு மேலிருந்தும், கீழிருந்தும் உங்களிடம் வந்தபோது பார்வைகள் நிலைகுத்தி, இதயங்கள் தொண்டைக்குழியை அடைந்து விட்டன.*

நீங்கள் அல்லாஹ்வைப்பற்றி பலவாறான எண்ணங்களைக் கொண்டிருந்தீர்கள். **11.** அச்சமயத்தில் நம்பிக்கையாளர்கள் சோதனைக்குள்ளாக்கப்பட்டார்கள், கடுமையான அதிர்ச்சிக்கு உள்ளாக்கப்பட்டார்கள்.

**12.** நயவஞ்சகர்களும், உள்ளங்களில் நோயுள்ளவர்களும் 'அல்லாஹ்வும், அவனது தூதரும் நமக்கு அளித்த வாக்குறுதி வெறும் ஏமாற்றுதான்' என்று கூறிக்கொண்டிருந்தார்கள். **13.** அவர்களில் ஒரு பிரிவினர் "யஸ்ரிப்வாசிகளே, இங்கே தங்குவதற்கு உங்களுக்கு எந்த வாய்ப்பும் இல்லை. ஆகவே திரும்பிச் சென்று விடுங்கள்" என்று கூறினார்கள். அவர்களில் மற்றொரு பிரிவினர் 'நிச்சயமாக எங்கள் வீடுகள் பாதுகாப்பற்ற நிலையில் உள்ளன' என்று (பொய்க்காரணம்) கூறி தூதரிடம் அனுமதி கோரினார்கள். அவர்களின் வீடுகளோ பாதுகாப்பற்ற நிலையில் இல்லை, உண்மையில் அவர்கள் ஓடிவிடவே நாடினார்கள். **14.** நகரின் நாலாபுறமிருந்தும் நுழைந்து குழப்பம் விளைவிப்பதற்காக எதிரிகள் அவர்களை அழைத்திருந்தால் நிச்சயம் அவர்கள் (சாதகமாக) பதிலளித்திருப்பார்கள். சிறிதும் தாமதப்படுத்தியிருக்க மாட்டார்கள். **15.** ஆயினும் அவர்கள் 'புறங்காட்டி ஓட மாட்டோம்' என்று முன்னரே அல்லாஹ்விடம் உறுதிமொழி அளித்திருந்தார்கள். அல்லாஹ்விடம் அளித்த உறுதிமொழி குறித்து விசாரிக்கப்படும். **16.** நீர் கூறும்: "மரணத்தைக் கண்டோ, கொல்லப்படுவோம் என்றோ நீங்கள் விரண்டோடினால் அது உங்களுக்கு எவ்விதப் பயனையும் அளிக்காது. உங்களால் சிறிதுகாலம் மட்டுமே அனுபவிக்க முடியும்"*. **17.** நீர் கூறும்: "அல்லாஹ் உங்களுக்கு துன்பத்தை ஏற்படுத்த நாடினால் அவனிடமிருந்து உங்களைப் பாதுகாப்பவர் யார்? அல்லது அவன் உங்களுக்குக் கருணை காட்ட

---

*முன்னுரையைக் காண்க. பக். 19

நாடினால் அவனது கருணையை உங்களைவிட்டும் யாரால் தடுக்க முடியும்?” அல்லாஹ்வைத்தவிர தங்களுக்கு உதவுபவனையோ, பாதுகாவலனையோ அவர்கள் காண மாட்டார்கள்.

*18.* உங்களில் தடுப்பவர்களையும், தம் சகோதரர்களிடம் ‘எங்களிடம் வந்து விடுங்கள்’ என்று கூறுபவர்களையும் அல்லாஹ் நன்கறிவான். அவர்கள் மிகக்குறைவாகவே போருக்கு வருகிறார்கள். *19.* அவர்கள் உங்களிடம் கஞ்சத்தனம் செய்கிறார்கள். ஆனால் பயம் ஏற்படும்போது மரணவேளையில் மருள்பவரைப்போல அவர்களின் கண்கள் சுழன்று சுழன்று உம்மைப் பார்ப்பதை நீர் காண்பீர். அச்சம் நீங்கிவிட்டால் செல்வத்தின்மீது பேராசை கொண்டு (உண்மையும் நேர்மையும் இல்லாத பொய்ப்பேச்சுகளால்) உங்களைக் கடிந்து கொள்வார்கள். அவர்கள் நம்பிக்கை கொள்ளவில்லை. ஆகவே அவர்களின் செயல்களை அல்லாஹ் வீணாக்கி விட்டான். இது அல்லாஹ்வுக்கு மிக எளிதானது. *20.* படைகள் இன்னும் போகவில்லை என்று அவர்கள் எண்ணுகிறார்கள். அப்படைகள் வந்துவிட்டால் அந்தோ, நாம் நாட்டுப்புற மக்களுடன் இருந்திருக்க வேண்டுமே, அங்கிருந்து உங்களைப்பற்றிய செய்திகளை விசாரிக்க வேண்டுமே என்று அவர்கள் விரும்புவார்கள். அவர்கள் உங்களுடன் இருந்திருந்தாலும் குறைவாகத்தான் போரிடுவார்கள்.

*21.* உங்களில் அல்லாஹ்வையும், இறுதிநாளையும் நம்பி அல்லாஹ்வை அதிகமதிகம் நினைவுகூருவோருக்கு அல்லாஹ்வின் தூதரிடம் அழகிய முன்மாதிரி இருக்கின்றது. *22.* நம்பிக்கையாளர்கள் எதிரிகளின் படைகளைப் பார்த்தபோது, “இதுதான் அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் நமக்கு வாக்களித்தது. அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் உண்மையே கூறினார்கள்” என்றார்கள். அது அவர்களின் நம்பிக்கையையும், கீழ்ப்படிதலையுமே அதிகரித்தது. *23.* நம்பிக்கையாளர்களில் இப்படியும் சில மனிதர்கள் இருக்கிறார்கள்.

அவர்கள் அல்லாஹ்விடம் செய்த வாக்குறுதியை நிறைவேற்றி விட்டார்கள். அவர்களில் சிலர் தம் இலட்சியத்தை அடைந்து விட்டார்கள். சிலர் அதனை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் தம் வாக்குறுதியில் சிறிதும் மாறுபட்டுவிடவில்லை. *24.* இது அல்லாஹ் உண்மையாளர்களுக்கு அவர்களின் உண்மைக்கான கூலியை வழங்குவதற்காகவும் நயவஞ்சகர்களை அவன் நாடினால் தண்டிப்பதற்காகவும் அல்லது மன்னித்து விடுவதற்காகவும்தான். நிச்சயமாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

*25.* நிராகரித்தோரை அவர்களின் கோபத்திலேயே இருக்கும்படி அவன் தடுத்துவிட்டான். அவர்கள் எந்த ஒரு நன்மையையும் அடையவில்லை. இந்தப் போரில் நம்பிக்கையாளர்களுக்கு இறைவனே போதுமானவன். அல்லாஹ் வல்லமைமிக்கவனாகவும், யாவற்றையும் மிகைத்தவனாகவும் இருக்கின்றான்.

*26.* தாக்கவந்த படையினருக்கு உதவிபுரிந்த வேதக்காரர்களையும் அவர்களின் கோட்டைகளிலிருந்து இறக்கி அவர்களின் உள்ளங்களில் திகிலைப் போட்டு விட்டான். அவர்களில் ஒரு பிரிவினரை நீங்கள் கொலை செய்தீர்கள். ஒரு பிரிவினரைச் சிறைப்பிடித்தீர்கள். *27.* அவர்களின் நிலம், வீடுகள், செல்வங்கள் மற்றும் நீங்கள் கால் வைக்காத பூமிக்கும் உங்களை அவன் வாரிசாக்கினான். அல்லாஹ் ஒவ்வொரு பொருளின்மீதும் பேராற்றலுடையவன்.

*28.* தூதரே! நீர் உம் மனைவிகளிடம் கூறும்: “நீங்கள் இவ்வுலக வாழ்க்கையையும் அதன் அலங்காரத்தையும் விரும்பினால் வாருங்கள், நான் உங்களுக்கு ஓரளவு செல்வத்தைக் கொடுத்து அழகிய முறையில் உங்களை அனுப்பி விடுகிறேன். *29.* ஆனால் நீங்கள் அல்லாஹ்வையும், அவனுடைய தூதரையும், மறுமையின்

(சொர்க்க) வீட்டையும் விரும்புவீர்களாயின், அறிந்துகொள்ளுங்கள்! உங்களில் நற்செயல் புரிவோருக்கு அல்லாஹ் மகத்தான கூலியைத் தயார்படுத்தி வைத்துள்ளான்". *30.* தூதரின் மனைவியரே! உங்களில் எவரேனும் வெளிப்படையான வெட்கக்கேடான காரியத்தைச் செய்தால் அவருக்கு இருமடங்கு வேதனை அளிக்கப்படும். இது அல்லாஹ்வுக்கு மிக எளிதானது.

*31.* உங்களில் எவர் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் கட்டுப்பட்டு நற்செயல் புரிகின்றாரோ நாம் அவருக்கு இருமடங்கு நற்கூலியை வழங்கிடுவோம். நாம் அவர்களுக்கு கண்ணியமான உணவையும் தயார்படுத்தி வைத்துள்ளோம். *32.* தூதரின் மனைவியரே! நீங்கள் மற்ற பெண்களைப் போலல்ல. நீங்கள் அல்லாஹ்வை அஞ்சுவீர்களாயின் உங்கள் பேச்சில் நளினம் காட்டாதீர்கள். உள்ளத்தில் நோயுள்ளவன் சபலம் கொள்ளக்கூடும். எனவே நீங்கள் தகுந்த முறையில் பேசுங்கள்.

*33.* நீங்கள் உங்கள் வீடுகளில் தங்கியிருங்கள். முந்தைய அறியாமைக் காலத்தைப்போல் அழகைக் காட்டிக்கொண்டு அலையாதீர்கள். தொழுகையைக் கடைப்பிடித்து, கடமையாக்கப்பட்ட தானதர்மத்தையும் அளித்து வாருங்கள். அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் கீழ்ப்படியுங்கள். தூதரின் குடும்பத்தினரே! உங்களைவிட்டும் அசுத்தத்தைப்போக்கி உங்களைத் தூய்மைப்படுத்திடவே அல்லாஹ் விரும்புகிறான். *34.* உங்கள் வீடுகளில் போதிக்கப்படுகின்ற இறைவசனங்களையும், ஞானம்நிறைந்த விஷயங்களையும் நினைவில்வையுங்கள். நிச்சயமாக அல்லாஹ் நுட்பமானவனாகவும் நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான்.

*35.* நிச்சயமாக கீழ்ப்படிகின்ற ஆண்களும் பெண்களும், நம்பிக்கைகொண்ட ஆண்களும் பெண்களும், வழிபடும் ஆண்களும் பெண்களும், வாய்மையான ஆண்களும் பெண்களும், பொறுமையுள்ள ஆண்களும் பெண்களும், உள்ளச்சம் கொண்ட ஆண்களும் பெண்களும், தர்மம் செய்யும் ஆண்களும் பெண்களும், நோன்பு நோற்கும் ஆண்களும் பெண்களும், தங்கள் கற்பைப் பாதுகாத்துக் கொள்ளும் ஆண்களும் பெண்களும், அல்லாஹ்வை அதிகமாக நினைவுகூரும் ஆண்களும் பெண்களும் ஆகிய இவர்களுக்காக அல்லாஹ் மன்னிப்பையும், மகத்தான கூலியையும் தயார்படுத்தி வைத்துள்ளான்.

*36.* அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் ஒரு விஷயத்தில் தீர்ப்பளித்து விட்டால் நம்பிக்கைகொண்ட எந்த ஆணுக்கும் பெண்ணுக்கும் அதில் சுயமுடிவு எடுத்துக்கொள்வதற்கு உரிமை இல்லை. அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் கீழ்ப்படியாதவர் வெளிப்படையான வழிகேட்டில் இருப்பவராவார்.

*37.* நீர் நினைவுகூரும்: எவருக்கு அல்லாஹ்வும் நீரும் அருள்புரிந்தீரோ அவரிடம் ‘நீர் உம் மனைவியை தடுத்து வைத்துக்கொள்ளும், அல்லாஹ்வுக்கு அஞ்சிக்கொள்ளும்’ என்று நீர் கூறியபோது அல்லாஹ் வெளிப்படுத்த விரும்பியிருந்த ஒரு விஷயத்தை மக்களுக்குப் பயந்து உம் உள்ளத்தில் மறைத்துக் கொண்டிருந்தீர். அல்லாஹ்வே அஞ்சுவதற்கு மிகத் தகுதியானவன். ஆகவே ‘ஸைத்’ அவளை விவாகரத்து செய்தபின்னர் நாம் அவளை உமக்கு மணமுடித்து வைத்தோம். அது ஏனெனில் நம்பிக்கையாளர்களால் வளர்க்கப்பட்டவர்கள் தம் மனைவிகளை விவாகரத்து செய்துவிட்டால் அப்பெண்களை மணந்து கொள்வதில் நம்பிக்கையாளர்களுக்கு எவ்விதத் தடையும் இருக்கக் கூடாது என்பதற்காகத்தான். அல்லாஹ்வின் கட்டளை நிறைவேறியே தீரும்.

38. தூதரின்மீது அல்லாஹ் விதியாக்கியதை நிறைவேற்றுவதில் அவர்மீது எவ்விதக் குற்றமும் இல்லை. முன்சென்ற தூதர்களின் விஷயத்திலும் இதுதான் அல்லாஹ்வின் வழிமுறையாகும். அல்லாஹ்வின் கட்டளை திட்டவட்டமான ஒரு தீர்ப்பாகும். 39. அவர்கள் அல்லாஹ்வின் தூதுச்செய்தியை எடுத்துரைப்பவர்களாக இருந்தார்கள். அவனுக்கு மட்டுமே அஞ்சுபவர்களாக, அவனைத்தவிர வேறு யாருக்கும் அஞ்சாதவர்களாக இருந்தார்கள். விசாரணை செய்வதற்கு அல்லாஹ்வே போதுமானவன். 40. உங்கள் ஆண்களில் முஹம்மத் எவருக்கும் தந்தையல்ல. ஆயினும் அவர் இறைத்தூதராகவும், இறுதித்தூதராகவும் இருக்கின்றார். அல்லாஹ் ஒவ்வொன்றையும் நன்கறிந்தவன்.

41. நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வை அதிகமதிகம் நினைவுகூருங்கள். 42. காலையிலும், மாலையிலும் அவனைத் துதியுங்கள். 43. உங்களை இருளிலிருந்து வெளியேற்றி ஒளியின் பக்கம் கொண்டு வருவதற்காக அவனே உங்கள்மீது அருள்புரிகிறான். உங்கள்மீது அருள்புரியுமாறு அவனுடைய வானவர்களும் அவனிடம் இறைஞ்சுகிறார்கள். அவன் நம்பிக்கையாளர்களுக்கு இணையிலாக் கிருபையாளனாக இருக்கின்றான். 44. அவர்கள் அவனைச் சந்திக்கும் நாளில் ‘சாந்தி உண்டாகட்டும்’ என்றுதான் வரவேற்கப்படுவார்கள். அவன் அவர்களுக்காக கண்ணியமான கூலியையும் தயார்படுத்தி வைத்துள்ளான்.

45. தூதரே! நாம் உம்மை சாட்சியாகவும், நற்செய்தியாளராகவும், எச்சரிக்கையாளராகவும் 46. அல்லாஹ்வின் கட்டளைப்படி அவன் பக்கம் அழைப்பவராகவும், ஒளிவீசும் விளக்காகவும் அனுப்பியுள்ளோம். 47. நம்பிக்கையாளர்களுக்கு ‘அல்லாஹ்விடத்தில் பெரும் அருட்கொடை உள்ளது’ எனும்

நற்செய்தியைக் கூறி விடுவீராக. *48.* நிராகரிப்பாளர்களுக்கும், நயவஞ்சகர்களுக்கும் நீர் கீழ்ப்படியாதீர். அவர்களின் துன்புறுத்தலைப் புறக்கணித்து அல்லாஹ்வையே முற்றிலும் சார்ந்திருப்பீராக. பொறுப்பேற்பதற்கு அல்லாஹ்வே போதுமானவன்.

*49.* நம்பிக்கையாளர்களே! நம்பிக்கைகொண்ட பெண்களை நீங்கள் மணந்து, பின்னர் அவர்களைத் தீண்டுவதற்கு முன்னரே அவர்களை விவாகரத்து செய்துவிட்டால் அவர்கள் விஷயத்தில் நீங்கள் கணக்கிடக்கூடிய எந்தக் காலக்கெடுவும் இல்லை. எனவே அவர்களுக்கு ஏதேனும் அளித்து நல்லமுறையில் அவர்களை விட்டுவிடுங்கள்.

*50.* தூதரே! நீர் மணக்கொடை (மஹர்) அளித்துள்ள உம் மனைவியரையும், அல்லாஹ் உமக்கு வழங்கிய அடிமைப் பெண்களையும், உம்முடன் புலம்பெயர்ந்துவந்த உம் தந்தையின் சகோதரரின் மகள்கள், உம் தந்தையின் சகோதரிகளின் மகள்கள், உம் தாயின் சகோதரருடைய மகள்கள், உம் தாயின் சகோதரிகளுடைய மகள்கள் ஆகியோரையும் நாம் உமக்கு அனுமதித்துள்ளோம். தன்னையே தூதருக்காக அர்ப்பணித்து, நம்பிக்கைகொண்ட பெண்ணும் இறைத்தூதரும் அவளை மணந்துகொள்ள விரும்பினால் அவள் அனுமதிக்கப்பட்டவளே. இது நம்பிக்கையாளர்களைத் தவிர்த்து உமக்கு மட்டுமே தனிப்பட்ட ஒன்றாகும். அவர்களின் மனைவிகள் மற்றும் அடிமைப் பெண்கள் விஷயத்தில் நாம் கடமையாக்கியதை அறிவோம். இது ஏனெனில் உமக்கு எவ்விதச் சங்கடமும் ஏற்படக்கூடாது என்பதற்காகத்தான். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

*51.* அவர்களில் நீர் விரும்பியவரை விலக்கி வைக்கலாம்; நீர் விரும்பியவரைச் சேர்த்துக் கொள்ளலாம். நீர் விலக்கி

வைத்தவரை சேர்த்துக் கொண்டாலும் உம்மீது எந்தத் தவறும் இல்லை. அவர்களின் கண்கள் குளிர்ச்சியடைவதற்கும், நீர் அவர்களுக்கு அளிப்பதைக்கொண்டு அவர்கள் திருப்தியடைந்து கவலைப்படாமல் இருப்பதற்கும் இதுவே மிகச்சிறந்த வழியாகும். உங்கள் உள்ளங்களில் உள்ளவற்றை அல்லாஹ் நன்கறிவான். அல்லாஹ் நன்கறிந்தவனாகவும் சகிப்புத்தன்மை மிக்கவனாகவும் இருக்கின்றான். 52. இவர்களைத்தவிர வேறு பெண்கள் உமக்கு அனுமதிக்கப்பட்டவர்கள் அல்லர். இவர்களுக்குப் பதிலாக வேறு மனைவியரையும் நீர் மாற்றிக்கொள்ளக் கூடாது. அவர்களின் அழகு உம்மைக் கவர்ந்தபோதிலும் சரியே. ஆயினும் உம் அடிமைப் பெண்களைத் தவிர. அல்லாஹ் அனைத்தையும் கண்காணிப்பவனாக இருக்கின்றான்.

53. நம்பிக்கையாளர்களே! உணவருந்த நீங்கள் அழைக்கப்பட்டால் அன்றி தூதரின் இல்லங்களுக்குச் செல்லாதீர்கள். அங்கு உணவு தயாராவதற்கு முன்பாகவே சென்று எதிர்பார்த்துக் கொண்டிருக்காதீர்கள். ஆயினும் நீங்கள் அழைக்கப்பட்டால் நுழையுங்கள். உணவருந்திவிட்டால் கலைந்து சென்று விடுங்கள். பேசிக்கொண்டே அமர்ந்து விடாதீர்கள். அது தூதருக்கு சிரமத்தை ஏற்படுத்தும். அவர் உங்களிடம் கூற வெட்கப்படுகிறார். ஆனால் உண்மையைக் கூற அல்லாஹ் வெட்கப்பட மாட்டான். தூதரின் மனைவியரிடம் நீங்கள் ஏதேனும் கேட்க வேண்டியிருந்தால் திரை மறைவிலிருந்தே கேளுங்கள். இதுதான் உங்களின் உள்ளங்களுக்கும் அவர்களின் உள்ளங்களுக்கும் தூய்மையானது. இறைத்தூதருக்குச் சிரமம் அளிப்பது உங்களுக்குத் தகுமானதல்ல. அவருடைய மனைவியரை அவருக்குப்பின் மணந்துகொள்வதும் உங்களுக்கு அனுமதிக்கப்பட்டதன்று. இது அல்லாஹ்விடத்தில் மிகப்பெரும் பாவமாகும். 54. நீங்கள் எதனை வெளிப்படுத்தினாலும் அல்லது மறைத்தாலும் நிச்சயமாக அல்லாஹ் அனைத்தையும் அறிந்தவன்.

55. தூதரின் மனைவியருக்கு தங்களின் தந்தையர், புதல்வர்கள், சகோதரர்கள், சகோதரர்களின் மகன்கள், சகோதரிகளின் மகன்கள், தங்கள் பெண்கள் மற்றும் அடிமைகள் ஆகியோருக்கு (முன்பாக வருவதில்) எவ்விதக் குற்றமுமில்லை. அல்லாஹ்வுக்கு அஞ்சிக் கொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் அனைத்தையும் கண்காணித்துக் கொண்டிருக்கிறான்.

56. அல்லாஹ்வும் அவனுடைய வானவர்களும் இந்தத் தூதரின்மீது வாழ்த்துக்களைக் (ஸலவாத்) கூறுகிறார்கள். நம்பிக்கையாளர்களே! நீங்களும் அவர்மீது வாழ்த்துக்களையும், ஸலாமையும் கூறுங்கள். 57. அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் தொல்லை தருபவர்களை அல்லாஹ் இம்மையிலும் மறுமையிலும் சபித்து விட்டான். அவர்களுக்காக இழிவுமிக்க வேதனையைத் தயார்படுத்தி வைத்துள்ளான். 58. நம்பிக்கைகொண்ட ஆண்களையும் பெண்களையும் அவர்கள் செய்யாத குற்றத்திற்காகத் துன்புறுத்துபவர்கள் பெரும் அவதூறைச் செய்து வெளிப்படையான பாவத்தையும் சுமந்து கொண்டார்கள்.

59. தூதரே! உம் மனைவியர், உம் மகள்கள், நம்பிக்கையாளர்களின் பெண்கள் ஆகியோரிடம் நீர் கூறும்: அவர்கள் தங்கள் தலை முக்காடுகளைக் கொஞ்சம் கீழே தாழ்த்திக் கொள்ளட்டும். அவர்கள் அறிந்துகொள்ளப்பட்டு தொல்லை கொடுக்கப்படாமல் இருப்பதற்கு இதுவே சிறந்த வழியாகும். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். 60. நயவஞ்சகர்களும் உள்ளங்களில் நோயுள்ளவர்களும் மதீனாவில் பொய்யான செய்திகளை பரப்பிக் கொண்டிருப்பவர்களும் தங்களின் செயல்களைவிட்டும் விலகிக் கொள்ளவில்லையெனில் நாம் அவர்களுக்கெதிராக உமக்கு அதிகாரம் வழங்குவோம். பிறகு சிறிது காலமேயன்றி

அங்கு அவர்கள் உம்முடன் இருக்க மாட்டார்கள். 61. அவர்கள் சபிக்கப்பட்டு விட்டார்கள். அவர்கள் எங்கு காணப்படினும் பிடிக்கப்பட்டு கொல்லப்படுவார்கள்*. 62. முன்பு வாழ்ந்து சென்றவர்கள் குறித்தும் இதுவே அல்லாஹ்வின் வழிமுறையாகும். அல்லாஹ்வின் வழிமுறையில் எவ்வித மாற்றத்தையும் நீர் காண மாட்டீர்.

63. அந்நேரத்தைப்பற்றி அவர்கள் உம்மிடம் கேட்கிறார்கள். நீர் கூறும்: "அதைப்பற்றிய அறிவு அல்லாஹ்விடமே உள்ளது. உமக்கு என்ன தெரியும்? அந்நேரம் நெருங்கி வந்திருக்கலாம்". 64. நிச்சயமாக அல்லாஹ் நிராகரிப்பாளர்களைச் சபித்து அவர்களுக்காகக் கொழுந்து விட்டெரியும் நெருப்பைத் தயார்படுத்தி வைத்துள்ளான். 65. அதில் அவர்கள் என்றென்றும் வீழ்ந்து கிடப்பார்கள். தங்களைப் பாதுகாப்பவரையோ, உதவி செய்பவரையோ காண மாட்டார்கள். 66. அவர்களின் முகங்கள் நெருப்பில் புரட்டி எடுக்கப்படும் அந்நாளில் அவர்கள், "அந்தோ! நாங்கள் அல்லாஹ்வுக்கும், தூதருக்கும் கட்டுப்பட்டிருக்க வேண்டுமே!" என்று கூறுவார்கள். 67. "இறைவா! நாங்கள் எங்கள் தலைவர்களுக்கும், பெரியோர்களுக்கும் கட்டுப்பட்டோம். அவர்கள் எங்களை வழிகெடுத்து விட்டார்கள், 68. இறைவா! அவர்களுக்கு இருமடங்கு வேதனையைத் தருவாயாக. அவர்களைக் கடுமையாகச் சபித்து விடுவாயாக" என்றும் கூறுவார்கள்.

69. நம்பிக்கையாளர்களே! மோசேயைத் துன்புறுத்தியவர்களைப் போன்று நீங்களும் ஆகிவிடாதீர்கள். அவர்கள் கூறியதைவிட்டு அல்லாஹ் அவரைத் தூய்மையாக்கி விட்டான். அவர் அல்லாஹ்விடத்தில் கண்ணியமானவராக

---

*முன்னுரையைக் காண்க. பக். 19

இருந்தார். 70. நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்; நேர்மையான சொல்லையே கூறுங்கள். 71. அவன் உங்கள் செயல்களைச் சீர்படுத்தி உங்கள் பாவங்களை மன்னித்து விடுவான். அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் கீழ்ப்படிந்தவர் மகத்தான வெற்றி பெற்று விட்டார்.

72. நாம் இந்தப் பொறுப்பை வானங்கள், பூமி மற்றும் மலைகளுக்கு முன்னால் வைத்தபோது அவை அதனை ஏற்க மறுத்துவிட்டன. அதைக்கண்டு பயந்து விட்டன. ஆனால் மனிதன் அதனை ஏற்றுக் கொண்டான். நிச்சயமாக அவன் அநியாயக்காரனாகவும் அறியாதவனாகவும் இருக்கிறான். 73. அது, இந்த பொறுப்பின் மூலம் அல்லாஹ் நயவஞ்சகம் கொண்ட ஆண்களையும் பெண்களையும், இணைவைக்கும் ஆண்களையும் பெண்களையும் தண்டிப்பதற்காகவும், நம்பிக்கைகொண்ட ஆண்களையும் பெண்களையும் மன்னிப்பதற்காகவும்தான். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

## 34. ஸபா

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

1. அல்லாஹ்வுக்கே புகழனைத்தும்! வானங்களிலும், பூமியிலும் உள்ளவை யாவும் அவனுக்கே உரியன. மறுமையிலும் புகழனைத்தும் அவனுக்கே. அவன் ஞானம் மிக்கவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். 2. பூமிக்குள் ஊடுருவிச் செல்வதையும், அதிலிருந்து வெளிப்படுவதையும் வானத்திலிருந்து இறங்குவதையும், அதன்பக்கம் உயர்வதையும் அவன்

அறிகிறான். அவன் இணையிலாக் கிருபையாளனாகவும் பெரும் மன்னிப்பாளனாகவும் இருக்கின்றான்.

*3.* ‘அந்நேரம் எங்களிடம் வராது’ என்று நிராகரிப்பாளர்கள் கூறுகிறார்கள். நீர் கூறும்: “மறைவானவற்றை அறிந்த என் இறைவன்மீது ஆணையாக, நிச்சயம் அது உங்களிடம் வந்தே தீரும்”. வானங்களிலோ, பூமியிலோ அணுவளவும் அவனுக்கு மறைவானதாக இல்லை. அதைவிடச் சிறியதோ, பெரியதோ அனைத்தும் ஒரு தெளிவான பதிவேட்டில் பதியப்பட்டுள்ளது. *4.* அது நம்பிக்கைகொண்டு, நற்செயல் புரிவோருக்கு அவன் நற்கூலி வழங்குவதற்காகத்தான். அவர்களுக்கு மன்னிப்பும் கண்ணியமான உணவும் உண்டு. *5.* நம் வசனங்களைத் தோற்கடிக்க முயற்சி செய்பவர்களுக்குத் துன்புறுத்தும் கடுமையான வேதனையுண்டு. *6.* அறிவு வழங்கப்பட்டவர்கள் உமது இறைவனிடமிருந்து உமக்கு அருளப்பட்டது உண்மை என்பதையும் அது புகழுக்குரியவனும், யாவற்றையும் மிகைத்தவனுமாகிய அல்லாஹ்வின் பக்கம் வழிகாட்டுகிறது என்பதையும் அறிந்துகொள்வார்கள்.

*7.* நிராகரிப்பாளர்கள், “நீங்கள் மண்ணோடு மண்ணாகிவிட்ட பின்னரும் மீண்டும் புதிதாகப் படைக்கப்படுவீர்கள் என்று உங்களிடம் அறிவிக்கும் ஒரு மனிதரைப்பற்றி நாங்கள் உங்களுக்குக் கூறட்டுமா?” என்று (பரிகாசமாகக்) கேட்கிறார்கள். *8.* இவர் அல்லாஹ்வின்மீது பொய்யைப் புனைந்து கூறுகிறாரா? அல்லது இவருக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா? உண்மையில் மறுமையின்மீது நம்பிக்கை கொள்ளாதவர்கள் வேதனையிலும், மாபெரும் வழிகேட்டிலும் வீழ்ந்து விட்டார்கள். *9.* தங்களுக்கு முன்னும், பின்னும் இருக்கின்ற வானத்தையும் பூமியையும் அவர்கள் பார்க்கவில்லையா? நாம் நாடினால் அவர்களைப் பூமியில் புதையச் செய்திடுவோம். அல்லது அவர்கள்மீது வானத்திலிருந்து ஒரு துண்டை விழச் செய்திடுவோம்.

நிச்சயமாக அவன் பக்கம் திரும்பக்கூடிய ஒவ்வொரு அடியானுக்கும் இதில் சான்று இருக்கின்றது.

*10.* நாம் தாவீதுக்கு நம்மிடமிருந்து பெரும் அருட்கொடையை வழங்கினோம். மலைகளே! பறவைகளே! அவருடன் சேர்ந்து நீங்களும் துதிபாடுங்கள் (என்று கட்டளையிட்டோம்). நாம் அவருக்கு இரும்பை மென்மையாக்கித் தந்தோம். *11.* "நீர் பூரணமான போர்க் கவசங்கள் செய்வீராக. வளையங்களைச் சரியான அளவில் இணைப்பீராக. நற்செயல்கள் புரிவீராக. நீங்கள் செய்பவற்றை எல்லாம் நான் பார்த்துக் கொண்டிருக்கிறேன் (என்று கூறினோம்)''.

*12.* நாம் சாலமனுக்கு காற்றை வசப்படுத்தித் தந்தோம். அதனுடைய காலைப் பயணம் ஒருமாத தூரமாகவும், மாலைப் பயணம் ஒருமாத தூரமாகவும் இருந்தது. நாம் அவருக்காக உருக்கிய செம்பை ஊற்றைப்போல் ஓடச் செய்தோம். ஜின்களிலும் சிலர் தம் இறைவனின் கட்டளைப்படி அவருக்குப் பணிவிடை செய்து வந்தனர். அவர்களில் யாரேனும் நம் கட்டளையைப் புறக்கணித்தால் அவரைக் கொழுந்து விட்டெரியும் நெருப்பின் வேதனையைச் சுவைக்கும்படிச் செய்வோம். *13.* அவர் விரும்பிய மாளிகைகள், சிற்பங்கள், தடாகங்களைப் போன்ற பாத்திரங்கள், நகர்த்த முடியாத பெரும் பாத்திரங்கள் ஆகியவற்றை அவை செய்தன. தாவீதின் குடும்பமே! நன்றியுணர்வுடன் செயலாற்றுங்கள். என் அடியார்களில் நன்றி செலுத்துவோர் மிகக் குறைவானவர்களே (என்று கட்டளையிட்டோம்).

*14.* நாம் அவருக்கு மரணத்தை விதித்தபோது அவரது தடியை அரித்துக் கொண்டிருந்த கரையானே அவர் இறந்து விட்டார் என்பதை ஜின்களுக்கு அறிவித்துக் கொடுத்தது. அவர் கீழே

விழுந்தபோது 'தாங்கள் மறைவான விஷயங்களை அறிந்திருந்தால் இழிவுதரும் வேதனைக்கு உள்ளாகியிருக்க மாட்டோமே' என்பதை ஜின்கள் தெளிவாக அறிந்துகொண்டன.

15. 'ஸபா'வாசிகளுக்கு அவர்களது வசிப்பிடங்களில் சான்று இருந்தது. அவற்றின் வலதுபுறமும் இடதுபுறமும் இரு தோட்டங்கள் இருந்தன. உங்கள் இறைவன் அளித்துள்ள உணவை உண்ணுங்கள். அவனுக்கு நன்றி செலுத்துங்கள். வளமான நகரத்தையும் மன்னிப்பளிக்கும் இறைவனையும் நீங்கள் பெற்றுள்ளீர்கள்! (என்று அவர்களுக்குக் கூறப்பட்டது) 16. ஆயினும் அவர்கள் புறக்கணித்தார்கள். எனவே நாம் அவர்களின்மீது அணையை உடைக்கும் பெருவெள்ளத்தை அனுப்பினோம். அவர்களின் இரு தோட்டங்களையும் புளிப்பும், கசப்பும் உள்ள பழங்களுடைய மரங்களும், சிறிதளவு இலந்தை மரங்களும் கொண்ட இரு தோட்டங்களாக மாற்றி விட்டோம். 17. இது அவர்களின் நன்றி கெட்டத்தனத்திற்கு அவர்களுக்கு நாம் அளித்த தண்டனையாகும். நன்றிகெட்டவர்களைத்தான் நாம் இவ்வாறு தண்டிக்கிறோம்.

18. நாம் அவர்களுக்கும் நாம் அருள் புரிந்திருந்த அந்த ஊர்களுக்குமிடையில் பார்வைக்குத் தென்படுகின்ற பல ஊர்களை ஏற்படுத்தினோம். நாம் அவற்றுக்கிடையே பயண தூரத்தையும் நிர்ணயித்தோம். அவற்றில் இரவுகளிலும், பகல்களிலும் அச்சமற்றவர்களாகப் பயணம் செய்யுங்கள் (என்று கூறினோம்). 19.ஆயினும் அவர்கள், "எங்கள் இறைவா! எங்கள் பயணங்களுக்கிடையே தூரத்தை ஏற்படுத்துவாயாக" என்று வேண்டினார்கள். அவர்கள் தமக்குத்தாமே தீங்கிழைத்துக் கொண்டார்கள். எனவே நாம் அவர்களை இழிவான கதைகளாக்கி விட்டோம். அவர்களை முற்றிலும் சின்னாபின்னமாக்கிச் சிதறடித்து விட்டோம். நிச்சயமாக பொறுமையுடன் நன்றி

*செலுத்தும் ஒவ்வொருவருக்கும் இதில் ஏராளமான சான்றுகள் உள்ளன. 20. அவர்கள் விஷயத்தில் இப்லீஸ் தனது எண்ணத்தை உண்மையாக்கிக் காட்டினான். எனவே நம்பிக்கையாளர்களில் ஒரு பிரிவினரைத் தவிர மற்றவர்கள் அவனைப் பின்பற்றினார்கள். 21. இப்லீஸுக்கு அவர்களின்மீது எவ்வித அதிகாரமும் இருக்கவில்லை. ஆயினும் இது, மறுமையின்மீது நம்பிக்கைகொள்வோர் யார், அது குறித்து சந்தேகம் கொள்வோர் யார் என்பதை நாம் அறிந்து கொள்வதற்காகத்தான். உம் இறைவன் ஒவ்வொன்றையும் கண்காணிப்பவனாக இருக்கின்றான்.*

*22. நீர் கூறும்: "அல்லாஹ்வைத்தவிர நீங்கள் இறைவனாகக் கருதிக் கொண்டிருப்பவர்களை அழையுங்கள். வானங்களிலோ, பூமியிலோ அவர்கள் அணுவளவும் அதிகாரம் பெற்றிருக்கவில்லை. அவ்விரண்டின் படைப்பிலும் அவர்களுக்கு எந்தப் பங்கும் இல்லை. அவர்களில் யாரும் அவனுக்கு உதவி செய்பவராகவும் இல்லை. 23. அவன் அனுமதியளித்தவர்களைத்தவிர வேறு எவரது பரிந்துரையும் அவனிடத்தில் பயனளிக்காது. எனவே அவர்களது உள்ளங்களைவிட்டும் நடுக்கம் நீங்கியவுடன் 'உங்கள் இறைவன் என்ன கூறினான்' என்று கேட்டு, 'உண்மையையே கூறினான்' என்று அவர்களே கூறுவார்கள். அவன் மிக உயர்ந்தவன், மிகப் பெரியவன்.*

*24. நீர் அவர்களிடம் கேளும்: "வானங்களிலிருந்தும் பூமியிலிருந்தும் உங்களுக்கு உணவளிப்பவன் யார்?". நீர் கூறும்: "அல்லாஹ்தான். நாங்களோ நீங்களோ இருவரில் ஒருவர்தான் நேர்வழியிலோ வெளிப்படையான வழிகேட்டிலோ இருக்கிறோம்". 25. நீர் கூறும்: "நாங்கள் செய்த குற்றங்கள் குறித்து நீங்கள் விசாரிக்கப்பட மாட்டீர்கள். நீங்கள் செய்த குற்றங்கள் குறித்து நாங்கள் விசாரிக்கப்பட மாட்டோம்". 26. நீர் கூறும்: "நம் இறைவன்*

*நம்மை (மறுமையில்) ஒன்றுசேர்ப்பான். பின்னர் நமக்கிடையே நியாயப்படி தீர்ப்பளிப்பான். அவன் தீர்ப்பளிப்பவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான்". **27.** நீர் கூறும்: "அவனுக்கு இணையானவர்கள் என்று நீங்கள் சேர்த்து வைத்தவர்களை எனக்குக் காட்டுங்கள். ஒருபோதும் (உங்களால்) முடியாது. அவன்தான் அல்லாஹ். அவன் யாவற்றையும் மிகைத்தவன், ஞானம் மிக்கவன்".*

***28.** முழு மனித சமூகத்திற்கும் நற்செய்தியாளராகவும் எச்சரிக்கையாளராகவுமே நாம் உம்மை அனுப்பியுள்ளோம். ஆயினும் மனிதர்களில் பெரும்பாலோர் அறிய மாட்டார்கள். **29.** "நீங்கள் உண்மையாளர்களாயின் இந்த வாக்குறுதி எப்போது நிறைவேறும்?" என்று அவர்கள் கேட்கிறார்கள். **30.** நீர் கூறும்: "உங்களுக்கு ஒரு குறிப்பிட்ட நாள் இருக்கின்றது. அதைவிட்டும் ஒரு நொடிகூட நீங்கள் முந்தவோ, பிந்தவோ மாட்டீர்கள்".*

***31.** நிராகரிப்பாளர்கள், "நாங்கள் இந்த குர்ஆனையும், இதற்கு முன்னுள்ளதையும் நம்ப மாட்டோம்" என்று கூறுகிறார்கள். அக்கிரமக்காரர்கள் தங்கள் இறைவனுக்கு முன்னால் நிறுத்தப்படுவதை நீர் காண வேண்டுமே! அப்போது ஒருவர் மற்றவர்மீது பழிசுமத்துவார்கள். பலவீனமானவர்கள் கர்வங்கொண்டோரிடம் கூறுவார்கள், 'நீங்கள் மட்டும் இல்லையென்றால் நாங்களும் நம்பிக்கை கொண்டிருப்போம்'. **32.** கர்வங்கொண்டவர்கள் பலவீனமானவர்களிடம் கூறுவார்கள், 'உங்களிடம் நேர்வழி வந்துவிட்டபின் அதைவிட்டும் நாங்களா உங்களைத் தடுத்தோம்? மாறாக நீங்கள்தான் குற்றவாளிகளாக இருந்தீர்கள்'. **33.** அதற்கு பலவீனமானவர்கள் கர்வம் கொண்டோரிடம், "அப்படியல்ல. நீங்கள்தான் இரவுபகலாக சூழ்ச்சி செய்து நாங்கள் அல்லாஹ்வை நிராகரிக்குமாறும் அவனுக்கு இணைகளை ஏற்படுத்துமாறும்*

எங்களை ஏவினீர்கள்" என்று கூறுவார்கள். அவர்கள் வேதனையைக் காணும்போது தங்கள் இழப்பை மறைத்துக் கொள்வார்கள். நிராகரிப்பாளர்களின் கழுத்துகளில் நாம் விலங்குகளை மாட்டி விடுவோம். அவர்கள் செய்தவற்றுக்குத்தான் கூலியைப் பெறுவார்கள்.

*34.* நாம் எச்சரிக்கை செய்பவரை எந்த ஊருக்கு அனுப்பினாலும் அங்குள்ள செல்வந்தர்கள் 'நீங்கள் கொண்டுவந்துள்ள தூதுச் செய்தியை நாங்கள் நிராகரிக்கிறோம்' என்றே கூறினார்கள். *35.* "நாங்கள் செல்வங்களாலும், பிள்ளைகளாலும் மிகுந்தவர்கள். ஆகவே நாங்கள் வேதனை செய்யப்பட மாட்டோம்" என்றும் அவர்கள் கூறினார்கள். *36.* நீர் கூறும்: "என் இறைவன் தான் நாடியோருக்கு வாழ்வாதாரத்தைத் தாராளமாக வழங்குகிறான். தான் நாடியோருக்கு குறைத்தும் வழங்குகிறான். ஆயினும் மக்களில் பெரும்பாலோர் அறிந்துகொள்வதில்லை". *37.* உங்களின் செல்வங்களோ, பிள்ளைகளோ நம்மிடத்தில் உங்களை நெருக்கமானவர்களாக ஆக்கி விடாது. ஆயினும் நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிந்தவர்களைத் தவிர. அத்தகையோருக்கு அவர்களின் செயல்களினால் இரு மடங்கு கூலி உண்டு. அவர்கள் உயர்ந்த மாளிகைகளில் நிம்மதியாக இருப்பார்கள். *38.* நம் வசனங்களைத் தாறுமாறாக்க முயல்பவர்கள் வேதனையில் ஆழ்த்தப்படுவார்கள். *39.* நீர் கூறும்: "என் இறைவன், தன் அடியார்களில் தான் நாடுவோருக்கு வாழ்வாதாரத்தை விசாலமாக வழங்குகிறான். தான் நாடுவோருக்குச் சுருக்கியும் விடுகிறான். ஆகவே நீங்கள் எப்பொருளைச் செலவு செய்தாலும் அதன் பலனை அவன் உங்களுக்கு வழங்கி விடுவான். வாழ்வாதாரம் வழங்குவோரில் அவனே மிகச் சிறந்தவன்". *40.* அவர்கள் அனைவரையும் அவன் ஒன்றுதிரட்டும் நாளில் வானவர்களிடம், ''இவர்கள் உங்களையா வணங்கிக் கொண்டிருந்தார்கள்?'', என்று கேட்பான்.

*41.* அப்போது அவர்கள், “நீ மிகத்தூய்மையானவன். நீயே எங்கள் பாதுகாவலன். இவர்கள் அல்லர். மாறாக இவர்கள் ஜின்களைத்தான் வணங்கிக் கொண்டிருந்தார்கள். இவர்களில் பெரும்பாலோர் அவர்களைத்தான் நம்பிக் கொண்டிருந்தார்கள்” என்று கூறுவார்கள். *42.* எனவே இன்று நீங்கள் ஒருவர் மற்றவருக்குப் பயனளிக்கவோ, தீங்கிழைக்கவோ முடியாது. நாம் அநியாயக்காரர்களிடம் கூறுவோம்: “நீங்கள் பொய்யெனக் கூறிக்கொண்டிருந்த நரக வேதனையைச் சுவையுங்கள்”. *43.* நம்முடைய தெளிவான வசனங்கள் அவர்களிடம் எடுத்துரைக்கப்பட்டால் ‘இவர் உங்கள் முன்னோர்கள் வணங்கிக்கொண்டிருந்த தெய்வங்களைவிட்டு உங்களைத் தடுக்க விரும்பும் ஒரு மனிதர்தான்’ என்றும் ‘இது புனைந்துரைக்கப்பட்ட பொய்யே அன்றி வேறில்லை’ என்றும் கூறுகிறார்கள். நிராகரிப்பாளர்கள் சத்தியம் தம்மிடம் வந்தபோது ‘இது தெளிவான சூனியமேயாகும்’ என்று கூறினார்கள்.

*44.* நாம் அவர்களுக்கு (மக்காவாசிகளுக்கு) படிக்கக்கூடிய எந்த வேதத்தையும் வழங்கவில்லை. உமக்கு முன்னர் எச்சரிப்பவர் எவரையும் அவர்களிடம் அனுப்பவில்லை. *45.* இவர்களுக்கு முன்னிருந்தவர்களும் பொய்யென்று கூறினார்கள். அவர்களுக்கு அளித்தவற்றில் பத்தில் ஒரு பங்கைக்கூட இவர்கள் அடையவில்லை. அவர்கள் நம் தூதர்களை மறுத்தார்கள். எனவே எப்படி இருந்தது நம் தண்டனை? *46.* நீர் கூறும்: “நான் உங்களுக்கு ஒரு விஷயத்தைக் குறித்து உபதேசம் செய்கிறேன். நீங்கள் இருவர் இருவராக அல்லது தனித்தனியாக எழுந்து அல்லாஹ்வுக்காக சிந்தித்துப் பாருங்கள்”. உங்கள் தோழருக்குப் பைத்தியம் இல்லை. அவரோ வரப்போகும் கடுமையான வேதனையைக் குறித்து எச்சரிப்பவராகவே இருக்கின்றார்.

*47.* “நான் உங்களிடம் ஏதாவது கூலி கேட்டிருந்தால் அதனை நீங்களே வைத்துக்கொள்ளுங்கள். எனது கூலி அல்லாஹ்விடமே உள்ளது. அவன் ஒவ்வொன்றையும் கண்காணித்துக் கொண்டிருக்கிறான்''. *48.* நீர் கூறும்: “என் இறைவன் சத்தியத்தை (அசத்தியத்தின் மீது) எறிகின்றான். அவன் மறைவானவற்றை நன்கறிந்தவன்”.

*49.* நீர் கூறும்: “சத்தியம் வந்துவிட்டது. அசத்தியம் புதிதாக எதையும் செய்வதுமில்லை, இனி செய்யப் போவதுமில்லை”. *50.* நீர் கூறும்: “நான் வழிகேட்டில் இருந்தால் அதனுடைய தீங்கு என்னையே சாரும். நான் நேர்வழியில் இருந்தால் அது என் இறைவனிடமிருந்து எனக்கு அறிவிக்கப்படும் செய்தியின் வெளிப்பாடாகும். அவன் செவியேற்பவன்; நெருங்கியிருப்பவன்”. *51.* அவர்கள் திடுக்கமுற்றிருப்பதை நீங்கள் காண்பீராயின் - அவர்களால் தப்பி ஓட முடியாது. அருகிலிருந்தே அவர்கள் பிடிக்கப்படுவார்கள்.

*52.* ‘நாங்கள் அதன்மீது நம்பிக்கை கொண்டோம்’ என்று அவர்கள் கூறுவார்கள். வெகுதூரம் சென்றுவிட்ட அவர்களால் எவ்வாறு அடைய முடியும்? *53.* இதற்கு முன்னர் அவர்கள் நிராகரித்தார்கள். இவ்வளவு தூரத்தில் அவர்களுக்கு மறைந்திருப்பதைப் (பொய் என்று) பிதற்றி கொண்டிருந்தார்கள். *54.* இவர்களுடைய கூட்டத்தாருடன் செய்யப்பட்டதைப்போன்றே இவர்களுக்கும் இவர்களின் விருப்பங்களுக்குமிடையில் தடை ஏற்படுத்தப்படும். நிச்சயமாக அவர்கள் பெரும் சந்தேகத்தில் வீழ்ந்து கிடந்தார்கள்.

# 35. படைப்பாளன் (ஃபாத்திர்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

*1. அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். அவன் வானங்களையும் பூமியையும் படைத்தவன்; இரண்டிரண்டு, மும்மூன்று, நான்கு நான்கு இறக்கைகளுடைய வானவர்களைத் தூதுவர்களாக நியமித்தவன். படைப்பில் தான் நாடியதை அவன் அதிகப்படுத்துகிறான். நிச்சயமாக அல்லாஹ் எல்லாவற்றின்மீதும் பேராற்றலுடையவன். 2. அல்லாஹ் மனிதர்களுக்கு ஏதேனும் அருளைத் திறந்துவிட்டால் அதனைத் தடுப்பவர் எவருமில்லை. எதனை அவன் தடுத்து விடுகிறானோ அதற்குப்பின் அதனை அனுப்புபவர் எவரும் இல்லை. அவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.*

*3. மனிதர்களே! அல்லாஹ் உங்கள்மீது பொழிந்த அருட்கொடைகளை நினைவுகூருங்கள். வானம் மற்றும் பூமியிலிருந்து உங்களுக்கு வாழ்வாதாரம் அளிக்கும் அல்லாஹ்வைத்தவிர வேறு படைப்பாளன் இருக்கின்றானா? அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. எனவே நீங்கள் எவ்வாறு ஏமாற்றப்படுகிறீர்கள்? 4. அவர்கள் உம்மை பொய்யெரென கருதினால் உமக்கு முன்னரும் தூதர்கள் மறுதலித்துள்ளார்கள். அனைத்து விவகாரங்களும் அல்லாஹ்விடமே திரும்பக் கொண்டு வரப்படுகின்றன.*

*5. மனிதர்களே! அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானது*. ஆகவே இவ்வுலக வாழ்வு உங்களை ஏமாற்றத்தில் ஆழ்த்திவிட*

---

*திடீர் மரணம், நிலநடுக்கம் மற்றும் அதனைப் போன்ற நிகழ்வுகள் மனிதனை நிலைகுலையச் செய்கிறது. உண்மையில் இவை இறுதி நாளை அது நிகழ்வதற்கு முன்னரே அறிவிப்பவையாகும். ஆனால் இவையெல்லாம் இயற்கை நிகழ்வுகள் என்றும் இறைச் செயல்பாடு அல்ல என்றும் மனிதனின் மனதில் தோன்றும்படி, சாத்தான் செய்கிறான்.

*வேண்டாம். அல்லாஹ்வின் விஷயத்தில் ஏமாற்றுக்காரனும் உங்களை ஏமாற்றிவிட வேண்டாம். 6. நிச்சயமாக சாத்தான் உங்களுக்குப் பகைவனாவான். எனவே நீங்களும் அவனைப் பகைவனாக்கிக் கொள்ளுங்கள். தன் கூட்டத்தாரை அவன் அழைப்பதெல்லாம் அவர்கள் நரகவாசிகளாகிவிட வேண்டும் என்பதற்காகத்தான். 7. நிராகரிப்பாளர்களுக்குக் கடுமையான வேதனையுண்டு. ஆனால் நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிவோருக்கு மன்னிப்பும் பெரும் கூலியும் உண்டு.*

*8. எவருக்கு அவரது தீய செயல் அழகாகக் காட்டப்பட்டு அவர் அதனை நற்செயலாகக் கருதுகிறாரோ...! - தான் நாடுவோரை அல்லாஹ் வழிதவறச் செய்கிறான், தான் நாடுவோரை நேரான வழியில் செலுத்துகிறான். நீர் அவர்களுக்காகக் கவலைப்பட்டு உம் உயிரைப் போக்கிவிட வேண்டாம். அவர்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவன்.*

*9. அல்லாஹ்தான் காற்றுகளை அனுப்புகிறான். அவை மேகங்களை ஓட்டிச் செல்கின்றன. பின்னர் அவற்றை இறந்துகிடக்கும் ஊரின் பக்கம் கொண்டு சென்று அதன்மூலம் வறண்ட பூமியை உயிர்ப்பிக்கின்றோம். இவ்வாறே நீங்கள் மீண்டும் எழுப்பப்படுவீர்கள். 10. எவர் கண்ணியத்தை விரும்புகிறாரோ அவர் அறிந்துகொள்ளட்டும், கண்ணியம் முழுவதும் அல்லாஹ்வுக்கே. தூய்மையான வார்த்தை அவனிடமே உயர்ந்து செல்கிறது. நற்செயல் அதனை உயர்த்துகிறது. சதிச்செயல்களில் ஈடுபடுபவர்களுக்கு கடுமையான வேதனை உண்டு. அவர்களின் சதித்திட்டங்கள் அழிந்துபோகும்.*

*11. அல்லாஹ்தான் உங்களை மண்ணிலிருந்து பின்னர் ஒருதுளி விந்திலிருந்து படைத்தான். பின்னர் உங்களை இணைகளாக ஆக்கினான். அவன் அறியாமல் எந்தப் பெண்ணும் கர்ப்பம்*

*தரிப்பதுமில்லை, பிரசவிப்பதுமில்லை; ஒருவரின் வயது அதிகரிக்கப்படுவதும், அவரின் வயது குறைக்கப்படுவதும் ஒரு பதிவேட்டில் பதியப்படாமலில்லை. நிச்சயமாக இது அல்லாஹ்வுக்கு மிக எளிதானது.*

*12. இரு கடல்களும் சமமாகி விடாது. ஒன்று குடிப்பதற்கு ஏற்ற சுவையான, இனிமையான நீர். மற்றொன்று உப்பும் கசப்பும் உடையது. ஆயினும் இரண்டிலிருந்தும் நீங்கள் புத்தம் புதிய இறைச்சியைப் புசிக்கிறீர்கள். நீங்கள் அணியக்கூடிய அழகு சாதனங்களையும் (முத்து, பவளம் போன்றவை) எடுக்கிறீர்கள். கடலில் கப்பல்கள் நீரைப் பிளந்துசெல்வதை நீ காண்கிறீர். அது நீங்கள் அவனுடைய அருளைத் தேடுவதற்காகவும் நீங்கள் நன்றி செலுத்த வேண்டும் என்பதற்காகவும்தான். 13. அவனே இரவைப் பகலில் புகுத்துகிறான், பகலை இரவில் புகுத்துகிறான்; சூரியனையும், சந்திரனையும் ஓர் நியதிக்குட்படுத்தியுள்ளான். ஒவ்வொன்றும் ஒரு குறிப்பிட்ட தவணைவரை சென்று கொண்டிருக்கும். அல்லாஹ்தான் உங்கள் இறைவன். ஆட்சியதிகாரம் அவனுக்கே உரியது. அல்லாஹ்வைவிடுத்து நீங்கள் அழைப்பவர்கள் பேரீச்சம்பழக் கொட்டையின் மேல்தோல் அளவுகூட அதிகாரம் பெற்றவர்கள் அல்லர். 14. நீங்கள் அவர்களை அழைத்தாலும் உங்களின் அழைப்பை அவர்கள் செவியேற்க மாட்டார்கள். செவியேற்றாலும் உங்களுக்குப் பதிலளிக்க மாட்டார்கள். மறுமைநாளில் நீங்கள் இணைவைத்து வணங்கியதை அவர்கள் மறுத்து விடுவார்கள். யாவற்றையும் அறிந்தவனைப்போல் உமக்கு யாரும் அறிவிக்க மாட்டார்கள்.*

*15. மனிதர்களே! நீங்கள்தான் அல்லாஹ்விடம் தேவையுடையவர்கள். அல்லாஹ் தேவையற்றவனாகவும், புகழுக்குரியவனாகவும் இருக்கின்றான். 16. அவன் நாடினால்*

*உங்களை அழித்துவிட்டு புதியதொரு படைப்பைக் கொண்டு வருவான். 17. இவ்வாறு செய்வது அல்லாஹ்வுக்கு கடினமானதல்ல. 18. ஒருவரின் பாவச்சுமையை மற்றொருவர் சுமக்க மாட்டார். பளுவான சுமையுடையவர் தம் சுமையைச் சுமக்கும்படி அழைத்தாலும் எவரும் அதிலிருந்து சிறிதளவும் சுமக்க மாட்டார், அவர் நெருங்கிய உறவினராக இருந்தாலும் சரியே. தம் இறைவனை மறைவிலும் அஞ்சி தொழுகையைக் கடைப்பிடிப்பவர்களைத்தான் நீர் எச்சரிக்க முடியும். தூய்மையாக இருப்பவர் தம் நன்மைக்காகவே தூய்மையாக இருக்கிறார். (அனைத்தும்) அல்லாஹ்விடமே திரும்பிச் செல்ல வேண்டும்.*

*19. பார்வையற்றவனும் பார்வையுடையவனும் சமமாக மாட்டார்கள். 20. இருளும் ஒளியும், 21. நிழலும் வெயிலும் (சமமாவதில்லை). 22. உயிருள்ளவர்களும், உயிரற்றவர்களும் சமமாக மாட்டார்கள். தான் நாடுவோரை அல்லாஹ் செவியுறச் செய்கிறான். சவக்குழிகளில் உள்ளவர்களை உம்மால் செவியுறச் செய்ய முடியாது. 23. நீர் எச்சரிக்கை செய்பவர்தான். 24. நாம் உம்மை சத்தியத்துடன் நற்செய்தியாளராகவும், எச்சரிக்கையாளராகவும் அனுப்பியுள்ளோம். எச்சரிக்கை செய்பவர் வராத எந்தச் சமூகமும் இல்லை. 25. இவர்கள் உம்மை பொய்யரென கருதினால் - இவர்களுக்கு முன்னுள்ளவர்களும் மறுத்துள்ளார்கள். அவர்களிடம் அவர்களது தூதர்கள் தெளிவான ஆதாரங்களையும், ஆகமங்களையும், ஒளிவீசும் வேதங்களையும் கொண்டு வந்திருந்தார்கள். 26. பின்னர் நிராகரித்தவர்களை நான் தண்டித்தேன். எப்படி இருந்தது எனது தண்டனை?*

*27. நீர் பார்க்கவில்லையா? அல்லாஹ் வானத்திலிருந்து மழை பொழியச் செய்கிறான். அதன்மூலம் நாம் பலவித நிறங்களுடைய கனிகளை வெளிப்படுத்துகிறோம். மலைகளிலும் வெண்மை, சிவப்பு, அடர்ந்த கருநிறம் எனப் பல்வேறு நிறங்களுடைய பாறைகளும்*

காணப்படுகின்றன. 28. இவ்வாறே மனிதர்களிலும், பிராணிகளிலும், கால்நடைகளிலும் பல நிறங்கள் காணப்படுகின்றன. அல்லாஹ்வின் அடியார்களில் அறிவுடையோர்தான் அவனை அஞ்சுகிறார்கள். நிச்சயமாக அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவன், பெரும் மன்னிப்பாளன்.

29. இறைவேதத்தை ஓதுபவர், தொழுகையைக் கடைப்பிடிப்பவர், இன்னும் நாம் வழங்கியவற்றிலிருந்து இரகசியமாகவும் வெளிப்படையாகவும் செலவு செய்பவர் ஆகியோர் என்றும் நஷ்டமடையாத வியாபாரத்தை எதிர்பார்க்கிறார்கள். 30. அவர்களின் கூலியை அல்லாஹ் முழுமையாக வழங்கிடுவான். தன் அருளிலிருந்து அவர்களுக்கு அதிகப்படுத்திடுவான். அவன் பெரும் மன்னிப்பாளன், நன்றியை ஏற்பவன். 31. நாம் உமக்கு அறிவித்துள்ள இவ்வேதம் உண்மையானதாகவும், தனக்கு முன்னுள்ளவற்றை உண்மைப்படுத்தக்கூடியதாகவும் இருக்கின்றது. தன் அடியார்களை அல்லாஹ் நன்கறிந்தவனாகவும் பார்ப்பவனாகவும் இருக்கின்றான்.

32. பின்னர் நம் அடியார்களில் நாம் தேர்ந்தெடுத்துக் கொண்டவர்களை அவ்வேதத்திற்கு உரியவர்களாக்கினோம். ஆயினும் அவர்களில் சிலர் தமக்குத்தாமே அநீதி இழைத்துக் கொண்டார்கள். அவர்களில் சிலர் நடுநிலையாளர்களாக இருக்கின்றார்கள். அவர்களில் சிலர் இறையருளால் நன்மையின் பக்கம் முந்தக்கூடியவர்களாகவும் இருக்கின்றார்கள். இதுதான் மாபெரும் அருளாகும். 33. நிலையான சுவனங்களில் அவர்கள் நுழைவார்கள். அங்கே அவர்களுக்குத் தங்கக்காப்புகளும் முத்து மாலைகளும் அணிவிக்கப்படும். அங்கு அவர்களுடைய ஆடை பட்டால் ஆனதாக இருக்கும். 34. “எங்களை விட்டுக் கவலையைப் போக்கிய அல்லாஹ்வுக்கே நன்றி. நிச்சயமாக எங்கள் இறைவன்

*மாபெரும் மன்னிப்பாளனாகவும் நன்றியை ஏற்பவனாகவும் இருக்கின்றான். **35.** அவனே தன் அருளால் நிலையான வீட்டில் எங்களைத் தங்க வைத்தான். இங்கு எங்களுக்கு எந்தச் சிரமமும் ஏற்படுவதில்லை. எந்தச் சோர்வும் எங்களைத் தீண்டுவதில்லை” என்று அவர்கள் கூறுவார்கள்.*

***36.** சத்தியத்தை நிராகரித்தோருக்கு நரக நெருப்புதான் உண்டு. இறந்து விடும்படி அவர்கள் தீர்ப்பளிக்கப்படவும் மாட்டார்கள். நரக வேதனையும் அவர்களுக்குக் குறைக்கப்பட மாட்டாது. ஒவ்வொரு நிராகரிப்பாளனையும் நாம் இவ்வாறே தண்டிப்போம். **37.** அங்கு அவர்கள், “எங்கள் இறைவா! எங்களை வெளியேற்றுவாயாக. நாங்கள் செயல்பட்டு வந்ததற்கு முற்றிலும் மாறாக நற்காரியங்களைச் செய்வோம்” என்று கதறிக் கொண்டிருப்பார்கள். புரிந்துகொள்ள விரும்புபவன் புரிந்துகொள்ளும் அளவு நாம் உங்களுக்குப் போதுமான ஆயுளை வழங்கவில்லையா? உங்களிடம் எச்சரிக்கை செய்பவர் வந்தே இருந்தார். எனவே அனுபவியுங்கள். அக்கிரமக்காரர்களுக்கு எந்த உதவியாளனும் இல்லை (என்று நாம் கூறுவோம்).*

***38.** நிச்சயமாக அல்லாஹ் வானங்கள் மற்றும் பூமியின் இரகசியங்களை நன்கறிந்தவன். அவன் உள்ளங்களில் உள்ளவற்றையும் நன்கறிந்தவன். **39.** அவன்தான் இப்புவியில் (உங்களுக்கு முன்னிருந்தோரின்) பிரதிநிதிகளாக உங்களை வசிக்கச் செய்தான். எனவே எவரேனும் நிராகரித்தால் அது அவருக்கே கேடாக அமையும். நிராகரிப்பாளர்களின் நிராகரிப்பு அவர்களின் இறைவனிடத்தில்*

*வெறுப்பைத்தான் அதிகப்படுத்தும், நிராகரிப்பாளர்களின் நிராகரிப்பு இழப்பைத்தான் அதிகப்படுத்தும்*.*

*40. நீர் கூறும்: "அல்லாஹ்வைவிடுத்து நீங்கள் அழைக்கின்ற தெய்வங்களைக் கவனித்தீர்களா? அவை பூமியில் எதைப் படைத்துள்ளன என்பதை எனக்குக் காட்டுங்கள் அல்லது வானங்களில் அவைகளுக்கு ஏதேனும் பங்கு இருக்கின்றதா? அல்லது நாம் அவர்களுக்கு வேதம் வழங்கி அது குறித்து அவர்கள் தெளிவான ஆதாரத்தில் இருக்கின்றார்களா? மாறாக அநியாயக்காரர்கள் ஒருவருக்கொருவர் ஏமாற்றத்தைத்தான் வாக்குறுதியாக அளிக்கிறார்கள். 41. நிச்சயமாக அல்லாஹ்தான் வானங்களையும், பூமியையும் (தத்தமது எல்லையிலிருந்து) விலகிவிடாதவாறு தடுத்துள்ளான். அவை விலகிவிட்டால் வேறு யாராலும் அவற்றைத் தடுத்துவிட முடியாது. நிச்சயமாக அவன் பொறுமையாளனாகவும் பெரும் மன்னிப்பாளனாகவும் இருக்கின்றான்.*

*42. எச்சரிக்கை செய்பவர் எவரேனும் அவர்களிடம் வந்தால் மற்ற எல்லா சமூகங்களைவிடவும் அவர்கள்தான் மிகவும் நேர்வழி பெற்றவர்களாக இருப்பார்கள் என்று அவர்கள் உறுதியாக சத்தியமிட்டுக் கூறினார்கள். ஆயினும் எச்சரிக்கை செய்பவர் அவர்களிடம் வந்தபோது அது அவர்களுக்கு வெறுப்பைத்தான் அதிகமாக்கியது. 43. அவர்கள் பூமியில் ஆணவம் கொண்டவர்களாக தீய சூழ்ச்சிகள் செய்தார்கள்.*

---

*இந்த வசனத்தில் பிரதிநிதி (கலீஃபா) என்று கூறப்படுவது உங்களுக்கு முன்னிருந்தவர்களுக்கு பின்னர் உங்களை வாழும்படி செய்தோம் என்று பொருள் கொள்ள வேண்டியதாகும். இவ்வகையில் மனிதர்களை இறைவன் வாழும்படிச் செய்து பூமியில் வளர்ச்சியுண்டாக்கச் செய்கிறான். ஆனால் அந்த மனித இனம் அதற்குத் தகுதியானதல்ல என்று ஆகிறபோது வேறு மனிதர்களைக் கொண்டு அவர்களை இறைவன் மாற்றி விடுகிறான்.

உண்மையில் தீய சூழ்ச்சிகள் அவற்றில் ஈடுபடுபவர்களைத்தான் தாக்கும். இவர்களுக்கு முன்னுள்ளோரின் வழிமுறையைத்தான் இவர்களும் எதிர்பார்க்கிறார்களா? அல்லாஹ்வின் வழிமுறையில் எவ்வித மாற்றத்தையும் நீர் காண மாட்டீர். **44.** இவர்கள் பூமியில் சுற்றித்திரிந்து இவர்களுக்கு முன்னிருந்தோரின் கதி என்னவாயிற்று என்பதைப் பார்க்க வேண்டாமா? அவர்கள் இவர்களைவிட பலம் மிக்கவர்களாக இருந்தார்கள். வானங்களிலும், பூமியிலும் எந்த ஒன்றும் அல்லாஹ்வை வென்றுவிட முடியாது. நிச்சயமாக அவன் நன்கறிந்தவனாகவும், பேராற்றலுடையவனாகவும் இருக்கின்றான்.

**45.** அல்லாஹ் மக்கள் செய்யும் தீய காரியங்களுக்காக அவர்களைத் தண்டிப்பதாக இருந்தால் பூமியில் எந்த உயிரினத்தையும் விட்டு வைத்திருக்க மாட்டான். ஆயினும் அவன் குறிப்பிட்ட தவணைவரை அவர்களுக்கு அவகாசம் அளிக்கிறான். அவர்களுக்கான தவணை வந்துவிடுமானால்....?! நிச்சயமாக தன் அடியார்களை அல்லாஹ் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

## 36. யாஸீன்

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

**1.** யா.ஸீன். **2.** ஞானம் நிறைந்த குர்ஆன்மீது சத்தியமாக. **3.** நிச்சயமாக நீர் தூதர்களில் உள்ளவராவீர், **4.** நேரான வழியில் இருக்கின்றீர். **5.** இது யாவற்றையும் மிகைத்த இணையிலாக் கிருபையாளனிடமிருந்து அருளப்பட்டதாகும். **6.** அது, தம் முன்னோர்கள் எச்சரிக்கப்படாததால் அலட்சியமாக இருக்கும் ஒரு சமூகத்திற்கு நீர் எச்சரிக்கை செய்ய வேண்டும் என்பதற்காக.

**7.** அவர்களில் பெரும்பாலோர்மீது வேதனை உறுதியாகிவிட்டது. ஆகவே அவர்கள் நம்பிக்கைகொள்ள மாட்டார்கள். **8.** நாம் அவர்களின் கழுத்துகளில் விலங்குகளை மாட்டியுள்ளோம். அவை அவர்களின் முகவாய்க்கட்டைவரை

உள்ளன. அதனால் அவர்கள் தலையை மேல்நோக்கி வைத்திருக்கிறார்கள். *9.* நாம் அவர்களுக்கு முன்னால் ஒரு தடுப்பையும் பின்னால் ஒரு தடுப்பையும் ஏற்படுத்தி அவர்களை மூடி விட்டோம். எனவே அவர்களால் எதையும் பார்க்க முடியாது. *10.* நீர் அவர்களை எச்சரிப்பதும் அல்லது எச்சரிக்கை செய்யாமல் இருப்பதும் ஒன்றுதான். அவர்கள் நம்பிக்கைகொள்ள மாட்டார்கள். *11.* எவர் அறிவுரையைப் பின்பற்றி மறைவிலும் கருணையாளனுக்கு அஞ்சி நடக்கின்றாரோ அவரைத்தான் நீர் எச்சரிக்கை செய்ய முடியும். அவருக்கு மன்னிப்பும் பெரும் கூலியும் உண்டு எனும் நற்செய்தியைக் கூறிவிடுவீராக.

*12.* நிச்சயமாக நாமே இறந்தவர்களை உயிர்ப்பிப்போம். அவர்கள் செய்தவற்றையும், விட்டுச் சென்றவற்றையும் நாம் பதிவு செய்கிறோம். அனைத்தையும் ஒரு தெளிவான பதிவேட்டில் பதிவு செய்துள்ளோம். *13.* ஓர் ஊர் மக்களிடம் தூதர்கள் வந்தபோது நடந்ததை அவர்களுக்கு உதாரணமாக எடுத்துக் கூறுவீராக.

*14.* நாம் அவர்களிடம் இரு தூதர்களை அனுப்பியபோது அவ்விருவரையும் அவர்கள் நிராகரித்தார்கள். எனவே மூன்றாமவரைக் கொண்டு நாம் அவர்களை வலுப்படுத்தினோம். அவர்கள், “நாங்கள் உங்களிடம் அனுப்பப்பட்ட தூதர்களாவோம்” என்று கூறினார்கள். *15.* அதற்கு அவர்கள், “நீங்கள் எங்களைப்போன்ற மனிதர்கள்தான். அளவிலாக் கருணையாளன் எதையும் இறக்கி வைக்கவில்லை. நீங்கள் பொய்தான் கூறுகிறீர்கள்” என்று கூறினார்கள். *16.* அதற்கு தூதர்கள், “நாங்கள் உங்களிடம் அனுப்பப்பட்டுள்ள தூதர்கள்தான் என்பதை எங்கள் இறைவன் நன்கறிவான். *17.* தெளிவாக எடுத்துரைப்பதுதான் எங்கள்மீதுள்ள கடமையாகும்” என்று கூறினார்கள். *18.* அதற்கு அவர்கள், “நாங்கள் உங்களை கெட்ட சகுனமாகக் கருதுகிறோம். நீங்கள் விலகிக்கொள்ளாவிடில் நிச்சயம் உங்களைக் கல்லால்

*அடித்துக் கொன்று விடுவோம். எங்களிடமிருந்து துன்புறுத்தும் வேதனையும் உங்களுக்கு உண்டு" என்றார்கள். **19.** "உங்களின் கெட்ட சகுனம் உங்களுடன்தான் இருக்கிறது. நாங்கள் உங்களுக்கு அறிவுரை கூறியதற்காகவா இப்படிக் கூறுகிறீர்கள்? உண்மையில் நீங்கள் வரம்புமீறும்  மக்களாக இருக்கிறீர்கள்!" என்று தூதர்கள் கூறினார்கள்.*

***20.** அந்நகரத்தின் வெகு தொலைவிலிருந்து ஒரு மனிதர் விரைந்தோடி வந்து, "என் சமூகமே, தூதர்களைப் பின்பற்றுங்கள். **21.** உங்களிடம் எந்தக்  கூலியையும் கேட்காத இவர்களைப் பின்பற்றுங்கள். இவர்கள்தாம் நேர்வழியில் உள்ளவர்கள்" என்று கூறினார்.*

***22.** "என்னைப் படைத்தவனை நான் வணங்காமலிருக்க எனக்கு என்ன நேர்ந்தது? அவனிடமே நீங்கள் திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள். **23.** அவனை விடுத்து மற்றவர்களை நான் இறைவனாக்கிக் கொள்வேனா? கருணைமிக்க இறைவன் எனக்கு ஏதேனும் தீங்கை நாடினால் அவர்களின் பரிந்துரை எனக்கு எப்பயனையும் அளிக்காது. அவர்களால் என்னைக் காப்பாற்றவும் முடியாது. **24.** அவ்வாறு செய்தால் நான் வெளிப்படையான வழிகேட்டில்தான் இருப்பேன்.  **25.** நான் உங்கள் இறைவனின்மீது நம்பிக்கை கொண்டேன். எனவே நீங்களும் நான் கூறுவதைக் கேளுங்கள் (என்றும் அவர் கூறினார்)''. **26.** 'சொர்க்கத்தில் நுழைவீராக' என்று அவரிடம் கூறப்பட்டது. **27.** அப்போது அவர், "அந்தோ! என் சமூகம் அறிந்துகொள்ள வேண்டுமே! என் இறைவன் என்னை மன்னித்து என்னைக் கண்ணியமுள்ளோரில் ஒருவனாக ஆக்கியதை!"  என்று கூறினார்.*

*28.* அவருக்குப்பின் நாம் அவரது சமூகத்தின்மீது வானத்திலிருந்து எந்தப் படையையும் இறக்கவில்லை. அப்படி (படையை) இறக்கி வைப்போராகவும் நாம் இருக்கவில்லை. *29.* ஒரே ஒரு பேரொலிதான். அவர்கள் அனைவரும் சாம்பலாகி விட்டார்கள். *30.* அந்தோ, அடியார்களுக்கு ஏற்பட்ட கேடே! அவர்களிடம் எந்தத் தூதர் வந்தாலும் அவரை அவர்கள் பரிகாசம் செய்து கொண்டுதான் இருந்தார்கள். *31.* நாம் அவர்களுக்கு முன்னர் எத்தனையோ சமூகங்களை அழித்து விட்டோம். அவர்கள் இவர்களிடம் திரும்பி வரவே மாட்டார்கள் என்பதை கவனிக்கவில்லையா? *32.* அவர்கள் அனைவரும் நம்மிடமே கொண்டு வரப்படுவார்கள்.

*33.* உயிரற்ற பூமி அவர்களுக்கு ஒரு சான்றாகும். நாமே அதனை உயிர்ப்பித்து அதிலிருந்து தானியத்தை வெளிப்படுத்துகிறோம். அதிலிருந்துதான் அவர்கள் உண்கிறார்கள். *34.* அதில் நாம் பேரீச்சை மற்றும் திராட்சைத் தோட்டங்களை உருவாக்கினோம். அதில் நீரூற்றுகளையும் பொங்கி ஓடச் செய்தோம், *35.* அதன் கனிகளை அவர்கள் உண்பதற்காக!. அவர்களின் கரங்கள் அதனை உருவாக்கவில்லை. அவர்கள் நன்றி செலுத்த மாட்டார்களா? *36.* பூமி முளைக்கச் செய்கின்றவற்றையும், அவர்களையும், அவர்கள் அறியாதவற்றையும் - என எல்லாவற்றையும் - இணைகளாகப் படைத்தவன் மிகவும் தூய்மையானவன்.

*37.* இரவும் அவர்களுக்கு ஒரு சான்றாகும். அதிலிருந்து நாம் பகலின் ஒளியை அகற்றிவிடும்போது அவர்கள் இருளில் மூழ்கி விடுகிறார்கள. *38.* சூரியன் தனக்கு நிர்ணயிக்கப்பட்ட பாதையில் சென்று கொண்டிருக்கிறது. இது யாவற்றையும் மிகைத்த நன்கறிந்தவன் ஏற்படுத்திய விதியாகும். *39.* உலர்ந்த பேரீச்சை மட்டையைப் போலத் தோன்றும்வரை சந்திரனுக்கு நாம் பல

நிலைகளை நிர்ணயித்தோம். 40. சூரியன் சந்திரனை அடைய முடியாது. இரவு பகலை முந்த முடியாது. ஒவ்வொன்றும் ஒரு வட்டப்பாதையில் நீந்திக் கொண்டிருக்கின்றன.

41. நிரம்பிய கப்பலில் நாம் அவர்களின் சந்ததிகளை ஏற்றியதும் அவர்களுக்கு ஒரு சான்றாகும். 42. அவர்கள் ஏறிச்செல்லக்கூடிய அதே போன்றவற்றையும் அவர்களுக்காக நாம் படைத்துள்ளோம். 43. நாம் நாடினால் அவர்களை மூழ்கடித்து விடுவோம். அப்போது அவர்களின் முறையீட்டைக் கேட்பவர் எவரும் இருக்க மாட்டார். அவர்கள் காப்பாற்றப்படவும் மாட்டார்கள். 44. ஆயினும் இது நம் கருணையாகும். குறிப்பிட்ட காலம்வரை நாம் அவர்களை அனுபவிக்கச் செய்கிறோம்.

45. நீங்கள் இரக்கம் காட்டப்படும் பொருட்டு உங்களுக்கு முன்னிருப்பவற்றையும், பின்னிருப்பவற்றையும் அஞ்சுங்கள் என்று அவர்களிடம் கூறப்பட்டால் (அதனைப் புறக்கணித்து விடுகிறார்கள்). 46. அவர்களது இறைவனின் சான்றுகளில் எந்த ஒரு சான்று அவர்களிடம் வந்தாலும் அவர்கள் அதனைப் புறக்கணித்தே வந்தார்கள். 47. அல்லாஹ் உங்களுக்கு வழங்கியவற்றிலிருந்து நீங்கள் செலவு செய்யுங்கள் என்று அவர்களிடம் கூறப்பட்டால் நிராகரிப்பாளர்கள் நம்பிக்கையாளர்களிடம், “எவருக்கெல்லாம் அல்லாஹ் விரும்பியிருந்தால் உணவளித்திருப்பானோ அவர்களுக்கு நாங்கள் உணவளிப்பதா? நீங்கள் வெளிப்படையான வழிகேட்டிலேயே இருக்கிறீர்கள்” என்று கூறுகிறார்கள்.

48. நீங்கள் உண்மையாளர்களாயின் இந்த வாக்குறுதி எப்போது நிறைவேறும் என்று அவர்கள் கேட்கிறார்கள். 49. இந்த மக்கள் ஒரு பேரொலியைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அது அவர்கள் தர்க்கித்துக் கொண்டிருக்கும்போதே அவர்களைத்

தாக்கி விடும். 50. அப்போது அவர்களால் மரண சாசனம் செய்யவோ தம் மக்களிடம் திரும்பிச் செல்லவோ முடியாது. 51. எக்காளம் ஊதப்பட்டதும் உடனே அவர்கள் சவக்குழிகளிலிருந்து வெளிப்பட்டு தம் இறைவனிடம் விரைவார்கள். 52. அந்தோ! எங்கள் துர்பாக்கியமே! எங்களின் சவக்குழிகளிலிருந்து எங்களை எழுப்பியது யார் என்று அவர்கள் கேட்பார்கள். "இதுதான் அளவிலாக் கருணையாளன் அளித்த வாக்குறுதி. தூதர்கள் உண்மையே கூறினார்கள் (என்று கூறப்படும்)''. 53. ஒரே ஒரு பேரொலிதான். உடனே அவர்கள் அனைவரும் நம்மிடம் கொண்டு வரப்படுவார்கள்.

54. இன்றைய தினம் எவர்மீதும் சிறிதும் அநீதி இழைக்கப்பட மாட்டாது. நீங்கள் செய்தவற்றுக்குத்தான் கூலி கொடுக்கப்படுகிறீர்கள். 55. நிச்சயமாக சுவனவாசிகள் இன்று தம் பணிகளில் மகிழ்ச்சியாக இருப்பார்கள். 56. அவர்களும் அவர்களின் துணைவியரும் சாய்வு இருக்கைகளில் சாய்ந்தவர்களாக நிழல்களில் இருப்பார்கள். 57. அங்கே அவர்களுக்குக் கனிகளும் அவர்கள் வேண்டும் அனைத்தும் கிடைக்கும். 58. இணையிலாக் கிருபையாளனிடமிருந்து வாழ்த்துரையும் கூறப்படும்.

59. குற்றவாளிகளே! இன்று நீங்கள் தனித்து நில்லுங்கள். 60. "ஆதமுடைய மக்களே! நீங்கள் சாத்தானை வணங்கக்கூடாது, அவன் உங்களுக்கு வெளிப்படையான பகைவனாவான், 61. நீங்கள் என்னையே வணங்க வேண்டும், இதுவே நேரான வழியாகும் என்று நான் உங்களுக்கு அறிவுறுத்தவில்லையா? 62. அவன் உங்களில் பெருங்கூட்டத்தினரை வழிகெடுத்து விட்டான். நீங்கள் புரிந்துகொள்ள மாட்டீர்களா? 63. இதுதான் உங்களுக்கு வாக்களிக்கப்பட்ட நரகம். 64. நீங்கள் நிராகரித்துக் கொண்டிருந்ததனால் இன்று இதனுள் நுழையுங்கள் (என்று

இறைவன் கூறுவான்)''. 65. இன்றையதினம் நாம் அவர்களின் வாய்களுக்கு முத்திரையிட்டு விடுவோம். அவர்கள் செய்து கொண்டிருந்தது குறித்து அவர்களின் கைகள் நம்முடன் பேசும், அவர்களின் கால்கள் சாட்சி கூறும்.

66. நாம் நாடியிருந்தால் அவர்களின் கண்களைப் போக்கியிருப்போம். அப்போது அவர்கள் வழியைத்தேடி விரைந்து ஓடினால் அவர்களுக்கு என்ன புலப்படும்? 67. நாம் நாடியிருந்தால் அவர்கள் இருக்கும் இடத்திலேயே (இருக்கும்படி) அவர்களை உருமாற்றியிருப்போம். அவர்களால் முன்னால் செல்லவும் முடியாது, பின்னால் திரும்பவும் முடியாது. 68. நாம் எவரது ஆயுளை அதிகரிக்கிறோமோ அவரை அவரது படைப்பில் தலைகீழாக்கி விடுகிறோம். அவர்கள் புரிந்துகொள்ள மாட்டார்களா? 69. நாம் இவருக்கு கவிதை கற்றுக் கொடுக்கவில்லை. அது இவருக்குத் தகுமானதும் அல்ல. இதுவோ ஓர் அறிவுரையாகவும், தெளிவாக்கக்கூடிய குர்ஆனாகவும் உள்ளது. 70. அது உயிருள்ளவர்களை (நம்பிக்கை கொண்டவர்களை) எச்சரிப்பதற்காகவும், நிராகரிப்பாளர்களின்மீது வேதனையை உறுதி செய்வதற்காகவும்தான். 71. அவர்கள் பார்க்கவில்லையா? நம் கைகள் செய்தவற்றில் நாம் அவர்களுக்காகக் கால்நடைகளைப் படைத்திருக்கிறோம். அவற்றிற்கு அவர்கள் எஜமானர்களாக இருக்கிறார்கள். 72. நாம் அவற்றை அவர்களுக்கு வசப்படுத்தித் தந்தோம். சிலவற்றின்மீது அவர்கள் பயணம் செய்கிறார்கள். சிலவற்றை அவர்கள் உண்கிறார்கள். 73. அவற்றில் அவர்களுக்கு பயன்களும் பானங்களும் உள்ளன. அவர்கள் நன்றி செலுத்த மாட்டார்களா? 74. ஆயினும் அவர்கள் தாம் உதவி செய்யப்படலாம் என்பதற்காக அல்லாஹ்வைவிடுத்து மற்றவர்களை தெய்வங்களாக ஆக்கிக்கொண்டார்கள். 75. அவர்களால் இவர்களுக்கு உதவ

*முடியாது. ஆயினும் அவர்களே இவர்களுக்கெதிரான படையாகக் கொண்டு வரப்படுவார்கள். **76.** எனவே அவர்களின் பேச்சு உம்மைக் கவலையில் ஆழ்த்திவிட வேண்டாம். அவர்கள் மறைப்பதையும், வெளிப்படுத்துவதையும் நாம் நன்கறிவோம். **77.** நாம் ஒரு துளி விந்திலிருந்து மனிதனைப் படைத்தோம் என்பதை அவன் கவனிக்கவில்லையா? அவ்வாறிருந்தும் அவன் வெளிப்படையாகத் தர்க்கம் புரிபவனாக இருக்கின்றான். **78.** அவன் தன் படைப்பை மறந்துவிட்டு நமக்கு ஒரு உதாரணம் கூறுகிறான். எலும்புகள் மக்கியபின்னர் அவற்றை உயிர்ப்பிப்பவன் யார் என்று கேட்கிறான். **79.** நீர் கூறும்: “ஆரம்பத்தில் அவற்றைப் படைத்தவன்தான் மீண்டும் அவற்றை உயிர்ப்பிப்பான். அவன் எல்லாவகைப் படைப்புகளையும் நன்கறிந்தவன்”. **80.** அவனே பசுமையான மரத்திலிருந்து உங்களுக்காக நெருப்பை உண்டாக்கினான். அதிலிருந்துதான் நீங்கள் தீயை மூட்டுகிறீர்கள். **81.** வானங்களையும் பூமியையும் படைத்தவன் இவர்களைப் போன்றவர்களைப் படைக்கச் சக்தியற்றவனா? ஆம். அவனே படைப்பாளன், நன்கறிந்தவன். **82.** அவன் ஏதேனும் ஒன்றைப் படைக்க நாடினால் அதற்கு ‘ஆகுக’ என்றுதான் கூறுவான். அது ஆகிவிடும். **83.** எவனது கையில் அனைத்து அதிகாரமும் உள்ளதோ அவன் மிகத் தூய்மையானவன். அவனிடமே நீங்கள் திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள்.*

## 37. அணிவகுத்து நிற்போர் (அஸ்ஸா:ஃப்:ஃபாத்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

*__1.__ வரிசையாக அணிவகுத்து நிற்போர் (வானவர்கள்) மீதும் **2.** கண்டித்து விரட்டுவோர்மீதும் **3.** அறிவுரையை எடுத்துரைப்போர்மீதும் சத்தியமாக. **4.** உங்கள் இறைவன் ஒருவனே. **5.** அவனே வானங்கள், பூமி மற்றும் அவ்விரண்டிற்கும்*

*இடையே உள்ளவற்றுக்கும் இறைவன். கீழ்த்திசைகளுக்கும் அவனே இறைவனாவான்.*

*6. அருகிலிருக்கும் வானத்தை நாம் நட்சத்திரங்களின் அழகைக் கொண்டு அலங்கரித்துள்ளோம். 7. வரம்புமீறிய ஒவ்வொரு சாத்தானைவிட்டும் அதனைப் பாதுகாத்துள்ளோம். 8. அவர்களால் வானவர்கள் பேசுவதைச் செவியுற முடியாது. நாலாப்புறத்திலிருந்தும் அவர்கள் விரட்டியடிக்கப்படுவார்கள். 9. அவர்களுக்கு நிலையான வேதனையுண்டு. 10. ஆயினும் சாத்தான் திருட்டுத்தனமாக ஏதேனும் ஒரு செய்தியை பறித்துச் செல்ல முற்பட்டால் அவனைப் பிரகாசமான தீப்பந்தம் பின்தொடரும்.*

*11. நீர் நிராகரிப்பாளர்களிடம் கேளும்: “அவர்களைப் படைப்பது அதிக சிரமமானதா அல்லது நாம் படைத்த வேறு படைப்புகளா?” நாம் அவர்களைப் பிசுபிசுப்பான களிமண்ணால் படைத்தோம். 12. நீர் வியப்படைகிறீர். அவர்களோ பரிகாசம் செய்கிறார்கள். 13. அவர்களுக்கு அறிவுரை கூறப்பட்டாலும் அறிவுரை பெறமாட்டார்கள். 14. அவர்கள் ஏதேனும் ஒரு சான்றினைக் கண்டால் வரம்புமீறிப் பரிகாசம் செய்கிறார்கள். 15. அவர்கள் கூறுகிறார்கள்: “இது அப்பட்டமான சூனியமே. 16. நாங்கள் இறந்து மண்ணாகவும் எலும்புகளாகவும் ஆகிவிட்டாலும் மீண்டும் உயிர்கொடுத்து எழுப்பப்படுவோமா? 17. எங்களுக்கு முன்சென்ற மூதாதையர்களையுமா?” 18. நீர் கூறும்: “ஆம், நீங்கள் இழிவுக்கும் உள்ளாவீர்கள்!”.*

*19. அதுவோ ஓர் உரத்த அதட்டல்தான். உடனே அவர்கள் கண்டு கொள்வார்கள். 20. அப்போது அவர்கள், “அந்தோ, எங்கள் கேடே! இது தீர்ப்பு நாளாயிற்றே!” என்று கூறுவார்கள். 21. நீங்கள் மறுத்துக் கொண்டிருந்த தீர்ப்பு நாள் இதுதான்.*

*22. "அக்கிரமக்காரர்களையும் அவர்களின் கூட்டாளிகளையும், அல்லாஹ்வைவிடுத்து அவர்கள் வணங்கிக்கொண்டிருந்த தெய்வங்களையும் ஒன்றுதிரட்டுங்கள். 23. அவர்கள் அனைவருக்கும் நரகத்துக்கான வழியினைக் காட்டுங்கள். 24. அவர்களை நிறுத்தி வையுங்கள். அவர்கள் விசாரிக்கப்பட வேண்டியவர்கள். 25. உங்களுக்கு என்ன நேர்ந்தது? நீங்கள் ஒருவருக்கொருவர் உதவிக் கொள்வதில்லையே? 26. மாறாக அவர்கள் இன்று கீழ்ப்படிந்தவர்களாக இருக்கின்றார்களே!" (என்றும் கூறப்படும்)*

*27. அவர்கள் ஒருவருக்கொருவர் விசாரித்துக் கொண்டிருப்பார்கள். 28. "நீங்கள் வலப்பக்கமிருந்துதானே (அதிகாரத்துடனே) எங்களிடம் வந்து கொண்டிருந்தீர்கள்" என்று அவர்கள் கூறுவார்கள். 29. அதற்கு அவர்கள், "இல்லை, நீங்கள் நம்பிக்கையாளர்களாக இருக்கவில்லை! 30. எங்களுக்கு உங்கள்மீது எவ்வித அதிகாரமும் இருக்கவில்லை. ஆயினும் நீங்கள்தான் வரம்பு மீறிய மக்களாக இருந்தீர்கள். 31. அனைவரின்மீதும் நம் இறைவனின் வாக்கு உறுதியாகி விட்டது. நாம் அனுபவித்தே தீர வேண்டும். 32. நாங்கள்தான் உங்களை வழிகெடுத்தோம். நாங்களும் வழிகெட்டவர்களாகவே இருந்தோம்" என்று கூறுவார்கள். 33. ஆகவே அந்நாளில் அவர்கள் வேதனையில் பங்காளிகளாக இருப்பார்கள்.*

*34. குற்றவாளிகளுடன் நாம் இவ்வாறே நடந்து கொள்கிறோம். 35. 'அல்லாஹ்வைத்தவிர வேறு இறைவன் இல்லை' என்று அவர்களிடம் கூறப்பட்டால் அவர்கள் கர்வம் கொள்பவர்களாக இருந்தார்கள். 36. ஒரு பைத்தியக்காரக் கவிஞரின் சொல்லைக் கேட்டு நாங்கள் எங்கள் தெய்வங்களை விட்டு விடுவோமோ என்று அவர்கள் கேட்கிறார்கள். 37. மாறாக அவர் சத்தியத்தைக் கொண்டு வந்துள்ளார். ஏனைய தூதர்களையும் உண்மைப்படுத்துகிறார்.*

*38.* நிச்சயமாக நீங்கள் துன்புறுத்தும் வேதனையை அனுபவித்தே தீர வேண்டும். *39.* உங்களின் செயல்களுக்குத்தான் கூலி கொடுக்கப்படுகிறீர்கள்.

*40.* ஆயினும் அல்லாஹ்வினால் தேர்ந்தெடுக்கப்பட்ட அடியார்களைத் தவிர. *41.* அவர்களுக்கு பழக்கமான உணவும் கனிகளும் இருக்கும். *42.* அவர்கள் கண்ணியப்படுத்தப்படுவார்கள்; *43.* அருள் நிறைந்த சுவனச் சோலைகளில் *44.* ஒருவரையொருவர் முன் நோக்கியவாறு இருக்கைகளில் சாய்ந்திருப்பார்கள். *45.* மதுவினால் நிரப்பப்பட்ட குவளைகள் அவர்களிடையே சுற்றி வரச்செய்யப்படும். *46.* அது தூய்மையானது, அருந்துவோருக்குச் சுவையானது. *47.* அதில் எந்தத் தீங்கும் இராது. அவர்களின் புத்தியும் கெடாது. *48.* அவர்களிடம் அடக்கமான பார்வையுடைய அழகிய கண்களைக் கொண்ட கன்னியர்களும் இருப்பார்கள். *49.* அவர்கள் மறைத்து வைக்கப்பட்ட முத்துக்களைப்போல் இருப்பார்கள்!.

*50.* அவர்கள் ஒருவரையொருவர் நோக்கி உரையாடுவார்கள். *51.* அவர்களில் ஒருவர் கூறுவார், “எனக்கு ஒரு நண்பன் இருந்தான். *52.* அவன், ‘நீயும் உண்மையென ஏற்றுக் கொள்கிறாயா, *53.* நாம் இறந்து மண்ணாகவும், எலும்புகளாகவும் ஆகிவிட்டாலும் கூலி கொடுக்கப்படுவோமா’ என்றெல்லாம் கேட்டுக்கொண்டிருந்தான். *54.* நீங்கள் அவனைப் பார்க்க விரும்புகிறீர்களா?” என்று கேட்டுவிட்டு *55.* அவர் எட்டிப் பார்க்கும்போது நரகத்தின் மத்தியில் அவனைக் காண்பார். *56.* அப்போது அவர் (அவனைப் பார்த்து), “அல்லாஹ்வின்மீது ஆணையாக, நீ என்னை அழித்துவிட முற்பட்டாய். *57.* என் இறைவனின் அருள் இல்லாதிருந்திருந்தால் நானும் (நரகத்திற்குக்) கொண்டு வரப்பட்டவர்களில் ஒருவனாக இருந்திருப்பேன்” என்று கூறுவார். *58.* இனி நாம் மரணிக்க வேண்டியதில்லையா? *59.* ஆயினும் நம்முடைய முந்தைய

மரணத்தைத் தவிர. இனி நாம் வேதனை செய்யப்பட மாட்டோம். 60. நிச்சயமாக இதுவே மகத்தான வெற்றியாகும். 61. செயல்படுவோர் இத்தகைய வெற்றிக்காகத்தான் செயல்பட வேண்டும்.

62. இந்த விருந்து சிறந்ததா? அல்லது ‘ஜக்கூம்’ என்ற கள்ளி மரமா? 63. நாம் அதனை அக்கிரமக்காரரர்களுக்கு ஒரு சோதனையாக ஆக்கியுள்ளோம். 64. அது நரகத்தின் அடித்தளத்திலிருந்து வெளிப்படும் மரமாகும். 65. அதன் குலைகள் சாத்தான்களின் தலைகளைப் போன்றிருக்கும். 66. அவர்கள் அதனையே தின்று வயிறுகளை நிரப்பிக்கொள்வார்கள். 67.பின்னர் அவர்களுக்குக் குடிக்க கொதிக்கின்றநீர் கொடுக்கப்படும். 68. பின்னர் அவர்கள் நரகத்திற்குத்தான் திரும்பிச் செல்லவேண்டும். 69. அவர்கள் தம் முன்னோர்களை வழிகேட்டில் கண்டார்கள். 70. ஆயினும் அவர்களின் அடிச்சுவட்டிலேயே விரைந்து சென்றார்கள். 71. இவர்களுக்கு முன்னரும் இவர்களுடைய முன்னோர்களில் பெரும்பாலோர் வழிகெட்டிருந்தார்கள். 72. நாம் அவர்களிடையே எச்சரிக்கை செய்வோரை அனுப்பி வைத்தோம். 73. எச்சரிக்கப்பட்டோரின் முடிவு என்னவாயிற்று என்பதைப் பாரும். 74. ஆயினும் அல்லாஹ்வினால் தேர்ந்தெடுக்கப்பட்ட அடியார்களைத் தவிர.

75. நோவா நம்மிடம் பிரார்த்தித்தார். மிகச்சிறந்த முறையில் நாம் அவருக்குப் பதிலளித்தோம்!. 76. நாம் அவரையும், அவரது மக்களையும் பெருந்துன்பத்திலிருந்து காப்பாற்றினோம். 77. அவரது சந்ததியினரை மட்டும் எஞ்சியிருக்கச் செய்தோம். 78. பின்னர் தோன்றிய தலைமுறைகளில் அவரது பெயரையும் புகழையும் (நிலைத்திருக்கும்படி) விட்டு வைத்தோம். 79. உலக மக்களில் நோவாவின்மீது சாந்தி உண்டாகட்டும். 80. நன்மை செய்வோருக்கு நாம் இவ்வாறே கூலி வழங்குகிறோம். 81. நிச்சயமாக அவர்

நம்பிக்கைகொண்ட நம் அடியார்களில் உள்ளவராவார். 82. பின்னர் நாம் மற்றவர்களை மூழ்கடித்து விட்டோம்.

83. நிச்சயமாக ஆப்ரஹாமும் அவரது வழியைப் பின்பற்றியவராகவே இருந்தார். 84. அவர் தூய உள்ளத்துடன் தம் இறைவனிடம் வந்தார். 85. அவர் தம் தந்தையிடமும், சமூகத்திடமும், "நீங்கள் எதை வணங்குகிறீர்கள்? 86. அல்லாஹ்வை விடுத்துப் பொய்யான தெய்வங்களையா நீங்கள் விரும்புகிறீர்கள்? 87. அவ்வாறாயின், அகிலங்களின் இறைவனைப்பற்றி உங்கள் எண்ணம்தான் என்ன?" என்று கேட்டார்.

88. அவர் நட்சத்திரங்களை ஒரு பார்வை பார்த்தார். 89. "நான் நோயுற்றிருக்கிறேன்" என்று கூறினார். 90. எனவே மக்கள் அவரை விட்டுச் சென்று விட்டார்கள். 91. அவர் அவர்களின் தெய்வங்களிடம் சென்று, நீங்கள் உண்ண மாட்டீர்களா? 92. உங்களுக்கு என்ன நேர்ந்தது, ஏன் நீங்கள் பேசுவதில்லை என்று கேட்டு 93. அவற்றைத் தம் வலக்கையால் பலமாக அடித்தார். 94. மக்கள் அவரிடம் விரைந்து வந்தார்கள். 95. அவர் அவர்களிடம், "நீங்களே செதுக்கிய இவற்றையா வணங்குகிறீர்கள்?. 96. உங்களையும் நீங்கள் செய்தவற்றையும் அல்லாஹ்வே படைத்துள்ளான்" என்று கூறினார். 97. (இறுதியில்) அவர்கள், "இவருக்காக ஒரு நெருப்புக்கிடங்கை அமைத்து கொழுந்து விட்டெரியும் நெருப்பில் இவரை எறியுங்கள்" என்று கூறினார்கள். 98. அவர்கள் அவருக்கெதிராக சூழ்ச்சி செய்ய நாடினார்கள். ஆனால் நாம் அவர்களை இழிவுபடுத்தி விட்டோம். 99. அவர் "நான் என் இறைவனின் பக்கம் செல்கிறேன். அவன் எனக்கு வழிகாட்டுவான்" என்று கூறி 100. "என் இறைவா, எனக்கு ஒரு நற்குழந்தையைத் தருவாயாக" என்று பிரார்த்தித்தார். 101. எனவே பொறுமையுள்ள ஒரு மகனைக் குறித்து நாம் அவருக்கு நற்செய்தி கூறினோம்.

*102.* அவருடன் சேர்ந்து நடந்துதிரியும் வயதை அம்மகன் அடைந்தபோது அவர், "என் அருமை மகனே, உன்னை அறுத்துப் பலியிடுவது போன்று நான் கனவு கண்டேன். இது குறித்து உன் கருத்து என்ன என்பதை யோசித்துக் கூறு" என்று கூறினார். அதற்கு அவர், "என் தந்தையே, உங்களுக்குக் கட்டளையிடப்பட்டபடியே செய்யுங்கள். அல்லாஹ் நாடினால் நீங்கள் என்னை பொறுமையாளனாகக் காண்பீர்கள்!" என்றார். *103.* எனவே இருவரும் தம் இறைவனின் கட்டளைக்கு கீழ்ப்படிந்தபோது ஆப்ரஹாம் அவரை முகங்குப்புறக் கிடத்தினார். *104.* அப்போது நாம் அவரை "ஆப்ரஹாமே! *105.* என்று அழைத்து, நீர் கண்ட கனவை உண்மைப்படுத்தி விட்டீர். இவ்வாறே நாம் நன்மை செய்வோருக்கு கூலி வழங்குகிறோம்". *106.* நிச்சயமாக அது ஒரு தெளிவான சோதனையாக இருந்தது. *107.* ஆயினும் நாம் மகத்தான பலியை அவருக்குப் பகரமாக்கினோம். *108.* பின்னர் தோன்றிய தலைமுறைகளில் அவரது பெயரையும், புகழையும் (நிலைத்திருக்கும்படி) விட்டு வைத்தோம். *109.* எனவே ஆப்ரஹாம்மீது சாந்தி உண்டாகட்டும். *110.* நன்மை செய்வோருக்கு நாம் இவ்வாறே கூலி வழங்குகிறோம். *111.* நிச்சயமாக அவர் நம்பிக்கைகொண்ட நம் அடியார்களில் உள்ளவராவார். *112.* நாம் அவருக்கு ஈசாக்கை (அளிப்பதைக்) கொண்டு நற்செய்தி கூறினோம். ஆப்ரஹாம் நல்லோர்களில் உள்ள தூதராக விளங்கினார். *113.* நாம் அவர்மீதும் ஈசாக்கின்மீதும் பாக்கியங்களைப் பொழிந்தோம். அவர்களின் சந்ததிகளில் சிலர் நல்லோர்களாகவும், சிலர் தமக்குத்தாமே வெளிப்படையாக அநீதி இழைப்போராகவும் இருந்தார்கள்.

*114.* நாம் மோசே மற்றும் ஆரோனின்மீது அருள் புரிந்தோம். *115.* அவர்களையும், அவர்களது சமூகத்தையும் பெரும்

துன்பத்திலிருந்து காப்பாற்றினோம். **116.** நாம் அவர்களுக்கு உதவி புரிந்தோம். எனவே அவர்களே மேலோங்கி நின்றார்கள். **117.** நாம் அவ்விருவருக்கும் தெளிவான வேதத்தை வழங்கினோம்; **118.** நேரான வழியைக் காட்டினோம். **119.** பின்னர் தோன்றிய தலைமுறைகளில் அவர்களின் பெயரையும் புகழையும் (நிலைத்திருக்கும்படி) விட்டு வைத்தோம். **120.** மோசே மற்றும் ஆரோன்மீது சாந்தி உண்டாகட்டும். **121.** நன்மை செய்வோருக்கு நாம் இவ்வாறே கூலி வழங்குகிறோம். **122.** அவர்கள் இருவரும் நம்பிக்கைகொண்ட நம் அடியார்களில் உள்ளவர்களாக இருந்தார்கள்.

**123.** நிச்சயமாக இல்யாஸும் தூதர்களில் உள்ளவராவார். **124.** அவர் தம் சமூகத்திடம், “நீங்கள் அஞ்ச மாட்டீர்களா? **125.** சிறந்த படைப்பாளனை விட்டுவிட்டு ‘பஅல்’ எனும் சிலையை அழைக்கிறீர்களே? **126.** அல்லாஹ்தான் உங்கள் இறைவனும் முன்சென்ற உங்கள் மூதாதையர்களின் இறைவனுமாவான்” என்று கூறினார். **127.** ஆனால் அவர்கள் அவரை மறுத்தார்கள். ஆகையால் அவர்கள் (மறுமையில்) விசாரணைக்காகக் கொண்டுவரப்படுவார்கள். **128.** ஆயினும் அல்லாஹ்வினால் தேர்ந்தெடுக்கப்பட்ட அடியார்களைத் தவிர. **129.** பின்னர் தோன்றிய தலைமுறைகளில் அவரது பெயரையும், புகழையும் (நிலைத்திருக்கும்படி) விட்டு வைத்தோம். **130.** இல்யாஸ்மீது சாந்தி உண்டாகட்டும். **131.** நன்மை செய்வோருக்கு நாம் இவ்வாறே கூலி வழங்குகிறோம். **132.** அவர் நம்பிக்கைகொண்ட நம் அடியார்களில் உள்ளவராக இருந்தார்.

**133.** நிச்சயமாக லோத்தும் தூதர்களில் உள்ளவராவார். **134.** நாம் அவரையும் அவரது மக்களையும் காப்பாற்றினோம், **135.** பின்தங்கிவிட்டோரில் இருந்துவிட்ட ஒரு கிழவியைத் தவிர. **136.** பின்னர் நாம் மற்றவர்களை அழித்து விட்டோம். **137.** நீங்கள் காலையிலும் இரவிலும் அவர்களின் ஊர்களைக்

கடந்து செல்கிறீர்கள். 138. எனவே நீங்கள் புரிந்துகொள்ள மாட்டீர்களா?

139. நிச்சயமாக ஜோனாவும் தூதர்களில் உள்ளவராவார். 140. அவர் தப்பி ஓடி (அளவுக்கு அதிகமாக) நிரம்பிய கப்பலில் ஏறிக்கொண்டார். 141. (கடலில் எறியப்பட வேண்டியவர் யார் என அறிய) அவர்கள் சீட்டுக் குலுக்கிப் போட்டனர். அவர் தோல்வியுற்றார். 142. (கடலில் தூக்கி எறியப்பட்டபோது) பெரிய மீன் ஒன்று அவரை விழுங்கி விட்டது. அவர் தன்னையே நிந்தித்துக் கொண்டிருந்தார். 143. அவர் இறைவனை துதிப்பவர்களில் ஒருவராக இல்லாதிருந்தால் 144. மீண்டும் எழுப்பப்படும் நாள்வரை அந்த மீனின் வயிற்றிலேயே இருந்திருப்பார். 145. நாம் வெட்டவெளியில் அவரை எறிந்து விட்டோம். அப்போது அவர் நோயுற்றிருந்தார். 146. நாம் அவருக்காக (நிழல் தரும்) படர்கின்ற கொடியை முளைக்கச் செய்தோம். 147. நாம் அவரை ஒரு லட்சம் அல்லது அதைவிட அதிகமானவர்களிடம் தூதராக அனுப்பினோம். 148. அவர்கள் நம்பிக்கை கொண்டார்கள். ஆகவே குறிப்பிட்ட காலம்வரை அவர்களை அனுபவிக்கச் செய்தோம்.

149. நீர் அவர்களிடம் கேளும்: “உங்கள் இறைவனுக்குப் பெண் மக்களையும் உங்களுக்கு ஆண் மக்களையுமா விரும்புகிறீர்கள்? 150. அல்லது நாம் வானவர்களைப் பெண்களாகப் படைத்தோமா? அவர்கள் அதனைப் பார்த்துக் கொண்டிருந்தார்களா?” 151. அறிந்துகொள்ளுங்கள்: “அல்லாஹ் குழந்தைகளைப் பெற்றெடுத்தான் என்று அவர்கள் புனைந்து கூறுகிறார்கள்” 152. நிச்சயமாக அவர்கள் பொய்யர்களே. 153. அவன் ஆண் மக்களை விடுத்துப் பெண் மக்களை தேர்ந்தெடுத்துக் கொண்டானா? 154. உங்களுக்கு என்ன ஆயிற்று? எவ்வாறு நீங்கள் தீர்மானிக்கிறீர்கள்? 155. நீங்கள் சிந்திக்க மாட்டீர்களா?

*156.* அல்லது உங்களிடம் ஏதாவது தெளிவான ஆதாரம் இருக்கின்றதா? *157.* நீங்கள் உண்மையாளர்களானால் உங்களின் வேதத்தைக் கொண்டு வாருங்கள்.

*158.* அவர்கள் இறைவனுக்கும் ஜின்களுக்குமிடையே உறவுமுறையை ஏற்படுத்தி விட்டார்கள். ஜின்களும் இறைவனுக்கு முன்னால் கொண்டு வரப்படுவோம் என்பதை அறிந்தே இருக்கின்றன. *159.* அவர்கள் உண்டாக்கிக் கூறும் வர்ணிப்புகளைவிட்டெல்லாம் அல்லாஹ் பரிசுத்தமானவன்; *160.*ஆயினும் அல்லாஹ்வின் களங்கமற்ற அடியார்கள் (இதுபோன்ற வர்ணிப்புகளை) செய்வதில்லை.

*161.* ஆகவே நீங்களும் நீங்கள் வணங்கிக் கொண்டிருப்பவையும் *162.* இறைவனை விட்டு யாரையும் திசை திருப்பிவிட முடியாது. *163.* ஆயினும் நரகத்தில் நுழைந்து விடுபவனைத்தவிர. *164.* எங்களில் ஒவ்வொருவருக்கும் ஒரு குறிப்பிட்ட இடம் உள்ளது. *165.* நாங்கள் இறைவனுக்கு முன்னால் அணிவகுத்து நிற்போராக இருக்கின்றோம். *166.* நாங்கள் அவனைத் துதி செய்பவர்களாக இருக்கின்றோம் (என்று வானவர்கள் கூறுவார்கள்).

*167.* நிச்சயமாக இவர்கள் (மக்காவாசிகள்) கூறிக்கொண்டிருந்தார்கள்: *168.* “முன்னோர்களிடமிருந்து வந்துள்ள ஏதேனும் அறிவுரை எங்களிடம் இருந்திருந்தால் *169.* நாங்கள் அல்லாஹ்வினால் தேர்ந்தெடுக்கப்பட்ட அடியார்களாக இருந்திருப்போம்”. *170.* என்றபோதிலும் அவர்கள் அதனை நிராகரித்து விட்டார்கள். விரைவில் அவர்கள் அறிந்துகொள்வார்கள். *171.* நாம் அனுப்பிய அடியார்களுக்காக நமது வாக்கு முன்பே ஏற்பட்டுவிட்டது. *172.* நிச்சயமாக அவர்கள் உதவி செய்யப்படுவார்கள். *173.* நம் படைகளே மேலோங்கி நிற்கும்.

*174. எனவே சில காலம்வரை அவர்களைப் புறக்கணிப்பீராக. 175. அவர்களை நீர் பார்த்துக் கொள்ளும், விரைவில் அவர்களும் பார்த்துக் கொள்வார்கள்.*

*176. நம் வேதனைக்காகவா அவர்கள் அவசரப்படுகிறார்கள்? 177. அது அவர்களின் முற்றத்தில் இறங்கி விட்டால் எச்சரிக்கப்பட்டோரின் காலைப் பொழுது மோசமாகி விடும். 178. எனவே சில காலம்வரை அவர்களைப் புறக்கணிப்பீராக. 179. அவர்களை நீர் பார்த்துக் கொள்ளும், விரைவில் அவர்களும் பார்த்துக் கொள்வார்கள். 180. அவர்களின் வர்ணிப்புகளை விட்டும் கண்ணியத்தின் அதிபதியாகிய உம் இறைவன் தூய்மையானவன். 181. தூதர்கள்மீது சாந்தி உண்டாகட்டும்!. 182. அகிலங்களின் இறைவனாகிய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்!.*

## 38. ஸாத்

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

*1. ஸாத். அறிவுரை நிறைந்த குர்ஆனின்மீது சத்தியமாக. 2. நிராகரிப்பாளர்கள் ஆணவத்திலும் பகைமையிலும் மூழ்கிக் கிடக்கிறார்கள். 3. இவர்களுக்கு முன்னர் எத்தனையோ சமூகங்களை நாம் அழித்து விட்டோம். அவர்கள் கூக்குரலிட்டார்கள். ஆயினும் அது தப்பித்துக்கொள்வதற்கான நேரமாக இருக்கவில்லை.*

*4. அவர்களிலிருந்தே எச்சரிப்பவர் அவர்களிடம் வந்ததற்காக ஆச்சர்யப்பட்டு, "இவர் சூனியக்காரரர்; பொய்யர்" என்று கூறினார்கள். 5. அத்தனை கடவுள்களையும் ஒரே கடவுளாக்கி விட்டாரா! இது மிகவும் ஆச்சர்யமான விஷயம்தான். 6. அவர்களின் தலைவர்கள் பின்வருமாறு கூறிக்கொண்டே வெளியேறிச் சென்றார்கள்: "செல்லுங்கள். உங்கள் தெய்வங்கள் விஷயத்தில் உறுதியாக இருங்கள்.*

இதில் ஏதோ உள்நோக்கம் இருக்கின்றது. 7. முந்தைய மார்க்கத்தில் இவ்விஷயத்தை நாங்கள் கேள்விப்பட்டதில்லை. இது புனைந்து கூறப்பட்ட ஒன்றுதான். 8. நமக்கு மத்தியில் இவருக்குத்தான் இறைவாக்கு அருளப்பட வேண்டுமா?". உண்மையில் அவர்கள் என் எச்சரிக்கையைக் குறித்து சந்தேகம் கொண்டுள்ளார்கள். அவர்கள் என் வேதனையை இன்னும் அனுபவிக்கவில்லை.

9. யாவற்றையும் மிகைத்தவனும், பெருங்கொடையாளனுமாகிய உம் இறைவனின் அருட்களஞ்சியங்கள் அவர்களிடம் இருக்கின்றனவா? 10. அல்லது வானங்கள், பூமி மற்றும் அவற்றிற்கிடையேயுள்ளவற்றின் ஆட்சியதிகாரம் அவர்களிடம் உள்ளதா? அவ்வாறாயின் அவர்கள் ஏணிகளை அமைத்து ஏறிக் கொள்ளட்டும். 11. இங்குள்ள அனைத்து படையினரிலும் இவர்களே தோல்வியடையக்கூடியவர்கள். 12. இவர்களுக்கு முன்னர் நோவாவின் சமூகம், ஆத் சமூகம் மற்றும் பெரும் படைகளுடைய பாரோ, 13. ஸமூத் சமூகம், லோத்தின் சமூகம் மற்றும் 'அய்க்கா'வாசிகளும் மறுத்துள்ளார்கள். அவர்கள் பெரும் கூட்டத்தினர்களாக இருந்தார்கள். 14. அவர்கள் அனைவரும் தூதர்களை மறுத்தார்கள். எனவே என் தண்டனை உறுதியாகி விட்டது. 15. அவர்கள் ஒரேயொரு பேரொலியைத்தான் எதிர்பார்க்கிறார்கள். அது சிறிதும் தாமதிக்கப்படாது. 16. 'எங்கள் இறைவா! விசாரணை நாளுக்கு முன்னரே எங்கள் பங்கை அளித்துவிடு', என்று அவர்கள் பரிகாசமாகக் கூறுகிறார்கள்.

17. அவர்கள் கூறுவதை நீர் சகித்துக்கொள்ளும். வலிமைமிக்க நம் அடியார் தாவீதை நினைவுகூரும். அவர் நம்மிடமே திரும்புபவராக இருந்தார். 18. நாம் அவருக்கு மலைகளை வசப்படுத்தித் தந்தோம். அவை காலையிலும், மாலையிலும் அவருடன் துதி செய்து கொண்டிருந்தன. 19. பறவைகளும் ஒன்றுதிரண்டு துதி செய்தன.

அனைத்தும் அவன்பக்கம் திரும்புபவையாகவே இருந்தன. **20.** நாம் அவருடைய அரசாட்சியை வலுப்படுத்தினோம். அவருக்கு ஞானத்தையும், தீர்ப்பளிக்கும் ஆற்றலையும் வழங்கினோம்.

**21.** சுவர் ஏறி வணக்கஸ்தலத்தில் புகுந்துவிட்ட வழக்கை உடையவர்களின் செய்தி உமக்கு வந்ததா? **22.** அவர்கள் தாவீதிடம் வந்தபோது அவர்களைக் கண்டு அவர் திடுக்கிட்டார். அவர்கள், "பயப்படாதீர். எங்கள் இருவருக்கும் வழக்கு உள்ளது. எங்களில் ஒருவர் மற்றவர்மீது அநீதி இழைத்துள்ளார். எனவே எங்களிடையே நியாயமாகத் தீர்ப்பளிப்பீராக. அநீதி இழைத்து விடாதீர். எங்களுக்கு நேரான வழியைக் காட்டுவீராக" என்று கூறினார்கள்.

**23.** "இவர் என் சகோதரர். இவரிடம் தொண்ணூற்று ஒன்பது செம்மறி ஆடுகள் உள்ளன. என்னிடமோ ஒரே ஒரு ஆடுதான் உள்ளது. அதையும் என்னிடமே தந்து விடு, என்று இவர் கூறுகிறார். இவர் வாதத்தில் என்னை மிகைத்து விட்டார்" (என்று ஒருவர் கூறினார்). **24.** அதற்கு தாவீத், "உமது ஆட்டை தமது ஆடுகளுடன் சேர்த்துக் கொள்ளக் கோரியதனால் நிச்சயமாக இவர் உமக்கு அநீதி இழைத்து விட்டார். கூட்டாளிகளில் பெரும்பாலோர் ஒருவர் மற்றவர் மீது வரம்பு மீறுபவர்களாகவே இருக்கிறார்கள். ஆயினும் நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிவோரைத்தவிர. அவர்களோ மிகக்குறைவாகத்தான் இருக்கிறார்கள்" என்று கூறினார். உண்மையில் இதன்மூலம் நாம் அவரைச் சோதித்தோம் என்பதை அவர் புரிந்துகொண்டபோது தம் இறைவனிடம் மன்னிப்புக் கோரினார். சிரம்பணிந்து அவனிடமே திரும்பினார். **25.** நாம் அவரது தவறை மன்னித்து விட்டோம். நிச்சயமாக நம்மிடத்தில் அவருக்கு நெருக்கமும் நல்ல முடிவும் உள்ளது.

*26.* நாம் கூறினோம்: “தாவீதே! நாம் உமக்கு பூமியில் ஆட்சியதிகாரத்தை வழங்கியுள்ளோம். எனவே மக்களிடையே நியாயமாகத் தீர்ப்பளிப்பீராக. மனஇச்சையைப் பின்பற்றாதீர். அது உம்மை இறைவழியைவிட்டும் தவறச் செய்துவிடும்”. இறைவழியைவிட்டும் தவிர்ந்து விடுபவர்களுக்குக் கடும் தண்டனை உண்டு. அவர்கள் விசாரணை நாளை மறந்து விட்டதுதான் அதற்கான காரணமாகும்.

*27.* வானத்தையும் பூமியையும் அவையிரண்டிற்குமிடையே உள்ளவற்றையும் நாம் வீணாகப் படைக்கவில்லை. இது நிராகரிப்பாளர்களின் எண்ணமாகும். நிராகரிப்பாளர்களுக்கு நெருப்பின் தீங்குதான் உண்டு. *28.* நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிவோரை நாம் பூமியில் குழப்பம் செய்வோரைப்போன்று ஆக்கி விடுவோமா? அல்லது இறையச்சமுள்ளோரை குற்றவாளிகளைப்போன்று ஆக்கி விடுவோமா? *29.* இது நாம் உமக்கு அருளியுள்ள பாக்கியம்மிக்க வேதமாகும். இது, மக்கள் அதன் வசனங்களைச் சிந்திக்க வேண்டும்; அறிவுடையோர் இதன்மூலம் அறிவுரை பெற வேண்டும் என்பதற்காகத்தான்.

*30.* நாம் தாவீதுக்கு சாலமனை (மகனாக) வழங்கினோம். சாலமன் மிகச்சிறந்த அடியாராகவும் நம் பக்கமே திரும்புவராகவும் இருந்தார். *31.* வேகமாக ஓடக்கூடிய உயர்தரமான குதிரைகள் மாலை நேரத்தில் அவர் முன்னால் கொண்டு வரப்பட்டபோது அவர், *32.* “சூரியன் மறையும்வரை என் இறைவனின் நினைவைவிட நான் செல்வங்களை அதிகம் நேசித்து விட்டேன். *33.* அந்தக் குதிரைகளை என்னிடம் திரும்பக் கொண்டு வாருங்கள்” என்று கூறினார். பின்னர் அவற்றின் கெண்டைக்கால்களையும், பிடரிகளையும் தடவிக் கொடுத்தார்.

*34.* நாம் சாலமனை சோதித்தோம். அவரது அரியணையில் ஒரு சடலத்தைப் போட்டு விட்டோம். அப்போது அவர் நம் பக்கம் திரும்பினார். *35.* “என் இறைவா! என்னை மன்னித்து விடுவாயாக. எனக்குப்பின் எவரும் அடைய முடியாத ஓர் அரசாட்சியை எனக்குத் தருவாயாக. நிச்சயமாக நீயே மாபெரும் கொடையாளி” என்று பிரார்த்தித்தார். *36.* எனவே நாம் அவருக்குக் காற்றை வசப்படுத்திக் கொடுத்தோம். அது அவரது கட்டளைப்படி அவர் நாடிய திசையில் மென்மையாக வீசிக் கொண்டிருந்தது. *37.* ஜின்களில் கட்டடம் கட்டுவோர், முத்துக்குளிப்போர் ஆகியோரையும் *38.* சங்கிலிகளால் பிணைக்கப்பட்டிருந்த வேறு சிலரையும் அவருக்கு வசப்படுத்திக் கொடுத்தோம். *39.* “இது நமது அன்பளிப்பாகும். இதனை நீர் விரும்பினால் கொடுக்கலாம் அல்லது தடுத்துக் கொள்ளலாம். எவ்வித விசாரணையும் இல்லை” (என்று கூறினோம்). *40.* நிச்சயமாக நம்மிடத்தில் அவருக்கு நெருக்கமும் நல்ல முடிவும் இருக்கின்றது.

*41.* நம்முடைய அடியார் ஜோபை* நினைவுகூர்வீராக. அவர் தம் இறைவனை நோக்கிப் பிரார்த்தித்து, சாத்தான் என்னைத் துயரத்திலும் வேதனையிலும் ஆழ்த்தி விட்டான் என்று கூறினார்.

---

*ஜோப் எனப்படும் அய்யூப் தோராயமாக கி.மு.ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த இஸ்ரேலிய இறைத்தூதராவார். பைபிளில் கூறப்பட்டுள்ளபடி (ஜோப் 1:20-22) தொடக்கத்தில் அவர் செல்வவளம் மிகுந்தவராக இருந்தார். அவருக்கு பண்ணைகள், கால்நடைகள், வீடுகள், குழந்தைகள் ஆகியவையும் இருந்தன. மொத்த கீழ்த்திசைப்பகுதியிலும் செல்வவளத்தில் அவருக்கு ஒப்பானவர் எவரும் இல்லை என்னும் அளவுக்கு செல்வவளமுடையவராக இருந்தார். அப்படி இருந்தபோதும் அவர் உண்மையாளராகவும் நன்றியுணர்ச்சி உடையவராகவும் இருந்தார். எவ்வளவுதான் செல்வ வளமும் கௌரவமும் அருளப்பெற்றிருந்தாலும் ஒரு மனிதன் பணிவுடையவராகவும் நற்தன்மை மிக்கவராகவும் எப்படி இருக்க வேண்டும் என்பதற்கான உதாரணமாக அவர் திகழ்ந்தார்.

*42.* உம் காலால் அடிப்பீராக. இது குளிர்ந்த நீராகும். குளிப்பதற்கும் குடிப்பதற்கும் ஏற்றதாகும் என்று இறைவன் கூறினான். *43.* நாம் அவருக்கு அவரது குடும்பத்தையும் அவர்களுடன் அவர்களைப் போன்றோரையும் நம் கருணையாகவும் அறிவுடையோருக்கு அறிவுரையாகவும் வழங்கினோம். *44.* உம் கையில் ஒரு பிடி புல்லை எடுத்து அதைக்கொண்டு அடிப்பீராக. சத்தியத்தை முறித்து விடாதீர். நிச்சயமாக நாம் அவரைப் பொறுமையாளராகக் கண்டோம். அவர் மிகச்சிறந்த அடியாராகவும் நம் பக்கமே திரும்புபவராகவும் இருந்தார்.

*45.* ஆற்றலும் அகப்பார்வையுமுடைய நம் அடியார்களான ஆப்ரஹாம், ஈசாக் மற்றும் ஜேக்கபை நினைவுகூரும். *46.* நாம் மறுமையை நினைவூட்டுவதற்காக அவர்களைத் தேர்ந்தெடுத்தோம். *47.* அவர்கள் நம்மிடத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட நல்லோர்களில் உள்ளவர்களாவர். *48.* இஸ்மவேல், அல்யஸஉ, துல்கிஃப்ல் ஆகியோரையும் நினைவுகூர்வீராக. அவர்கள் அனைவரும் நல்லோர்களில் உள்ளவர்களாவர்.

*49.* இது அறிவுரையாகும். நிச்சயமாக இறையச்சமுடையோருக்கு நல்ல தங்குமிடம் இருக்கின்றது. *50.* அவை நிலையான சுவனச் சோலைகளாகும். அவற்றின் வாயில்கள் அவர்களுக்காகத் திறந்தே இருக்கும். *51.* அங்கே அவர்கள் இருக்கைகளில் சாய்ந்தவர்களாக ஏராளமான கனிகளையும் பானங்களையும் கேட்டுக் கொண்டிருப்பார்கள். *52.* அவர்களிடம் நாணம்மிக்க சம வயதுடைய மனைவியர் இருப்பார்கள். *53.* விசாரணை செய்யப்படும் நாளில் உங்களுக்கு வாக்களிக்கப்பட்டது இதுதான். *54.* இதுதான் நாம் வழங்கும் அருட்கொடை. இதற்கு முடிவே கிடையாது.

*55.* ஆனால் வரம்பு மீறுவோருக்குக் கெட்ட இருப்பிடம்தான் உண்டு. *56.* நரகத்தில் அவர்கள் புகுவார்கள். அது மிகவும் மோசமான தங்குமிடமாகும். *57.* "இது கொதிநீரும் சீழுமாகும். இதனை அவர்கள் சுவைக்கட்டும்" (என்று கூறப்படும்). *58.* இதைப்போன்று வேறு பல வகை வேதனைகளும் உள்ளன. *59.* "இதோ ஒரு படை உங்களுடன் முண்டியடித்துக் கொண்டு நுழைகிறது. அவர்களுக்கு எந்த வரவேற்பும் இல்லை. அவர்கள் நெருப்பில் பொசுங்கக்கூடியவர்கள்தான்" (என்று அவர்கள் தங்களிடையே பேசிக்கொள்வார்கள்). *60.* அதற்கு அவர்கள், "அப்படியல்ல, நீங்களும்தான். உங்களுக்கும் எந்த வரவேற்பும் இல்லை. நீங்கள்தான் இக்கதிக்கு எங்களை ஆளாக்கினீர்கள். இது மிகவும் கெட்ட இருப்பிடமாகும்" என்று கூறுவார்கள். *61.* "எங்கள் இறைவா, எங்களை இக்கதிக்கு ஆளாக்கியோருக்கு நரகத்தில் இரு மடங்கு வேதனையை அளிப்பாயாக!" என்றும் அவர்கள் வேண்டுவார்கள். *62.* அதற்கு அவர்கள், "என்ன ஆயிற்று? உலகில் நாம் தீயவர்களாக எண்ணிக் கொண்டிருந்தவர்களை இங்கு காணவில்லையே!" என்று கூறுவார்கள். *63.* அவர்களை நாம் பரிகாசம் செய்து கொண்டிருந்தோமா? அல்லது பார்வைகள் அவர்களைவிட்டும் தவறி விட்டனவா? *64.* நிச்சயமாக இது உண்மையானதாகும். இவ்வாறு நரகவாசிகள் ஒருவருக்கொருவர் தர்க்கம் செய்து கொள்வார்கள்!.

*65.* நீர் கூறும்: "நான் எச்சரிக்கை செய்பவன்தான். அடக்கியாளும் ஏகனான அல்லாஹ்வைத்தவிர வேறு இறைவன் இல்லை. *66.* வானங்கள், பூமி மற்றும் அவையிரண்டிற்குமிடையே உள்ளவற்றிற்கும் அவனே இறைவன். அவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும் பெரும் மன்னிப்பாளனாகவும் இருக்கின்றான்". *67.* நீர் கூறும்: "இது மகத்தான செய்தியாகும். *68.* ஆயினும்

நீங்கள் இதனைப் புறக்கணிக்கிறீர்கள். 69. மேலுலகில் அவர்கள் தர்க்கித்துக் கொண்டது குறித்து எனக்கு எதுவும் தெரியாது. 70. நான் வெளிப்படையாக எச்சரிப்பவனாக இருக்கின்றேன் என்பதனால்தான் எனக்கு இறைவனிடமிருந்து அறிவிக்கப்படுகிறது".

71. உம் இறைவன் வானவர்களிடம், "நான் களிமண்ணால் மனிதனைப் படைக்கப் போகின்றேன். 72. நான் அவனை முழுமைப்படுத்தி அவனுள் என் உயிரிலிருந்து ஊதினால் நீங்கள் அவனுக்குச் சிரம்பணிய வேண்டும்" என்று கூறினான். 73. அப்போது வானவர்கள் அனைவரும் சிரம்பணிந்தார்கள். 74. இப்லீஸைத் தவிர! அவன் ஆணவம் கொண்டு நிராகரிப்பாளர்களில் ஒருவனாகி விட்டான். 75. "இப்லீஸே! என் இரு கைகளாலும் படைத்த மனிதனுக்கு சிரம்பணிவதை விட்டும் உன்னைத் தடுத்தது எது? நீ ஆணவம் கொண்டு விட்டாயா அல்லது உயர்ந்தோர்களில் ஒருவனாகி விட்டாயா? என்று இறைவன் கேட்டான். 76. அதற்கு அவன், "நான் அவனை விடச் சிறந்தவன். நீ என்னை நெருப்பால் படைத்தாய். அவனையோ களிமண்ணால்தான் படைத்துள்ளாய்" என்று கூறினான். 77. அதற்கு இறைவன், "இங்கிருந்து நீ வெளியேறிவிடு. நிச்சயமாக நீ விரட்டப்பட்டவன். 78. தீர்ப்புநாள்வரை உன்மீது என் சாபம் இருக்கும்" என்று கூறினான்.

79. "என் இறைவா! மக்கள் மீண்டும் எழுப்பப்படும் நாள்வரை எனக்கு அவகாசம் அளிப்பாயாக!" என்று இப்லீஸ் வேண்டினான். 80. "உனக்கு அவகாசம் அளிக்கப்பட்டு விட்டது, 81. குறிப்பிட்ட நாள்வரை" என்று இறைவன் கூறினான். 82. "உன் கண்ணியத்தின்மீது ஆணையாக! நான் அவர்கள் அனைவரையும் வழிகெடுத்தே தீருவேன், 83. அவர்களில் நீ தேர்ந்தெடுத்துக் கொண்ட உன் அடியார்களைத் தவிர!" என்று இப்லீஸ் கூறினான். 84. அதற்கு இறைவன், "இதுதான் உண்மை. நான் உண்மையையே

கூறுகிறேன். 85. உன்னாலும் அவர்களில் உன்னைப் பின்பற்றும் அனைவராலும் நான் நரகத்தை நிரப்புவேன்" என்று கூறினான்.

86. நீர் கூறும்: "நான் இதற்காக உங்களிடம் எந்தக் கூலியும் கேட்கவில்லை. நான் புனைந்துரைப்பவனும் அல்லன். 87. இது உலக மக்கள் அனைவருக்கும் ஒரு அறிவுரையாகும். 88. அதன் உண்மை நிலையை விரைவில் நீங்கள் அறிந்துகொள்வீர்கள்".

## 39. கூட்டங்கள் (அஸ்ஸுமர்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

1. இவ்வேதம் அல்லாஹ்விடமிருந்து அருளப்பட்டதாகும். அவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும் ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான். 2. நிச்சயமாக நாம் உமக்கு இவ்வேதத்தை சத்தியத்துடன் அருளியுள்ளோம். எனவே நீர் நம்பிக்கையை அல்லாஹ்வுக்கே உரித்தாக்கியவாறு அவனையே வணங்குவீராக. 3. அறிந்துகொள்ளுங்கள், தூய மார்க்கம் அல்லாஹ்வுக்கே உரியதாகும். "அவர்கள் எங்களை அல்லாஹ்விடம் நெருக்கமாக்கி வைப்பார்கள் என்பதற்காகத்தான் நாங்கள் அவர்களை வணங்குகிறோம்" என்று அவனை விடுத்து வேறு பாதுகாவலர்களை ஏற்படுத்திக்கொண்டவர்கள் கூறுகிறார்கள். அவர்கள் முரண்பட்டுக்கொண்டிருந்த விஷயங்களில் அல்லாஹ் அவர்களிடையே தீர்ப்பளிப்பான். பொய்யனுக்கும் சத்தியத்தை நிராகரிப்பவனுக்கும் அல்லாஹ் நேர்வழிகாட்ட மாட்டான்.

4. அல்லாஹ் தனக்கு ஒரு மகனை ஏற்படுத்த நாடியிருந்தால் தன் படைப்பிலிருந்து, தான் விரும்பியவரைத் தேர்ந்தெடுத்திருப்பான். அவன் தூய்மையானவன். அவன்தான் அனைத்தையும் அடக்கியாளும் ஏகனான அல்லாஹ். 5. அவன் வானங்களையும் பூமியையும்

உண்மையான நோக்கத்துடன் படைத்துள்ளான். அவனே இரவைச் சுருட்டி பகலை வெளிப்படுத்துகிறான், பகலைச் சுருட்டி இரவை வெளிப்படுத்துகிறான். சூரியனையும் சந்திரனையும் அவன் வசப்படுத்தி வைத்துள்ளான். ஒவ்வொன்றும் ஒரு குறிப்பிட்ட தவணைவரை சென்று கொண்டிருக்கும். அறிந்துகொள்ளுங்கள்: அவன் யாவற்றையும் மிகைத்தவன்; பெரும் மன்னிப்பாளன்.

*6.* அவன் உங்களை ஒரே ஆன்மாவிலிருந்து படைத்தான். பின்னர் அதிலிருந்து அதன் துணையைப் படைத்தான். அவனே உங்களுக்காக எட்டு வகையான கால்நடைகளை அருளியுள்ளான். உங்கள் அன்னையரின் வயிற்றில் மூன்று இருளினுள் ஒன்றன் பின் ஒன்றாக உங்களைப் படைத்தான். அந்த அல்லாஹ்தான் உங்கள் இறைவன். ஆட்சியதிகாரம் அவனுக்கே உரியது. அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. அவ்வாறிருக்க எவ்வாறு நீங்கள் திசை திருப்பப்படுகிறீர்கள்?.

*7.* நீங்கள் நிராகரிப்பீர்களானால் - நிச்சயமாக அல்லாஹ் உங்களை விட்டும் தேவையற்றவன். அவன் தன் அடியார்களிடம் நிராகரிப்பை விரும்ப மாட்டான். நீங்கள் நன்றி செலுத்துவீர்களாயின் அவன் உங்களைக் குறித்து திருப்தியடைவான். எந்த ஆன்மாவும் மற்றொரு ஆன்மாவின் சுமையைச் சுமக்காது. பின்னர் நீங்கள் உங்கள் இறைவனிடமே திரும்ப வேண்டும். அப்போது நீங்கள் செய்து கொண்டிருந்தது குறித்து அவன் உங்களுக்கு அறிவிப்பான். அவன் உள்ளங்களில் உள்ளவற்றையும் நன்கறிந்தவன்.

*8.* மனிதனுக்கு ஏதேனும் ஒரு துன்பம் நேர்ந்தால் தன் இறைவனின் பக்கம் திரும்பி அவனிடமே பிரார்த்திக்கிறான். பின்னர் இறைவன் அவனுக்குத் தன்னிடமிருந்து அருட்கொடையை வழங்கினால் முன்னர் எதற்காக அவனை அழைத்துக்

*கொண்டிருந்தானோ அதனை அவன் மறந்து விடுகிறான். இறைவழியைவிட்டும் மக்களைக் கெடுப்பதற்காக அவனுக்கு இணைகளை ஏற்படுத்துகிறான். நீர் கூறும்: "உன் நிராகரிப்பினால் கொஞ்சம் அனுபவித்துக் கொள். நிச்சயமாக நீ நரகவாசியாவாய்". 9. எவர் இரவு நேரங்களில் நின்றவாறும் சிரம் பணிந்தவாறும் அவனை வணங்கி மறுமையைப் பயந்து தம் இறைவனின் கருணையை வேண்டி நிற்கிறாரோ அவர் (நிராகரிப்பவனைப் போல் ஆவாரா?) நீர் கேளும்: "அறிந்தவர்களும் அறியாதவர்களும் சமமாவார்களா?" அறிவுடையோர்தாம் அறிவுரையை ஏற்றுக்கொள்வர்.*

*10. நீர் கூறும்: "நம்பிக்கைகொண்ட என் அடியார்களே! உங்கள் இறைவனை அஞ்சிக் கொள்ளுங்கள். இவ்வுலகில் நன்மை செய்தோருக்கு நன்மையே கிடைக்கும். அல்லாஹ்வின் பூமி விசாலமானது. பொறுமையாளர்கள் தங்களின் கூலியைக் கணக்கின்றிப் பெறுவார்கள்".*

*11. நீர் கூறும்; "நான் நம்பிக்கையை அவனுக்கே உரித்தாக்கி வணங்குமாறு ஏவப்பட்டுள்ளேன். 12. அடிபணிந்தவர்களில் முதலாமவனாக இருக்குமாறும் ஏவப்பட்டுள்ளேன்". 13. நீர் கூறும்: "நான் என் இறைவனுக்கு மாறு செய்தால் மகத்தான ஒரு நாளின் வேதனையை அஞ்சுகிறேன்". 14. நீர் கூறும்: "என் வணக்கத்தை அவனுக்கு மட்டுமே உரித்தாக்கி அவனையே நான் வணங்குகிறேன். 15. அவனைவிடுத்து நீங்கள் விரும்பியவர்களை வணங்கிக் கொள்ளுங்கள்". நீர் கூறும்: "மறுமைநாளில் தங்களுக்கும், தங்கள் குடும்பத்திற்கும் இழப்பை ஏற்படுத்திக் கொண்டவர்கள்தான் உண்மையில் இழப்படைந்தவர்கள். இதுதான் தெளிவான இழப்பாகும்". 16. அவர்களுக்கு மேலும் கீழும் நெருப்பு சூழ்ந்து கொள்ளும். இவற்றைக்கொண்டே தன் அடியார்களை அல்லாஹ் அச்சுறுத்துகிறான். என் அடியார்களே! எனக்கே அஞ்சுங்கள்!.*

*17.* போலித் தெய்வங்களை வணங்குவதைத் தவிர்த்துக்கொண்டு அல்லாஹ்வின் பக்கமே முற்றிலும் திரும்பிக் கொண்டவர்களுக்கு நற்செய்தி இருக்கின்றது. என் அடியார்களுக்கு நற்செய்தி கூறி விடுவீராக. *18.* சொல்வதைக் கவனமாகக் கேட்டு அதில் சிறந்ததை அவர்கள் பின்பற்றுகிறார்கள். அவர்களுக்குத்தான் அல்லாஹ் நேர்வழி காட்டியுள்ளான். அவர்கள்தான் அறிவுடையவர்கள்.

*19.* எவர்மீது வேதனையின் வாக்கு உறுதியாகி விட்டதோ அவரை யாரால் காப்பாற்ற முடியும்? நெருப்பில் வீழ்ந்து கிடப்பவரை உம்மால் காப்பாற்ற முடியுமா? *20.* ஆயினும் தம் இறைவனை அஞ்சக்கூடியவர்களுக்கு அடுக்கடுக்காகக் கட்டப்பட்ட உயர்ந்த மாளிகைகள் உள்ளன. அங்கு ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும். இது அல்லாஹ்வின் வாக்குறுதியாகும். தன் வாக்குறுதிக்கு அல்லாஹ் மாறு செய்ய மாட்டான்.

*21.* நீங்கள் பார்க்கவில்லையா? அல்லாஹ்வே வானத்திலிருந்து மழையை இறக்கி அதனைப் பூமியில் ஊற்றுகளாக ஓடச் செய்கிறான். பின்னர் அதன்மூலம் பல்வேறு நிறமுடைய பயிர்களை வெளிப்படுத்துகிறான். பின்னர் அவை முற்றி மஞ்சள் நிறமாகி விடுவதை நீங்கள் காண்கிறீர்கள். பின்னர் அவற்றைச் சருகுகளாக ஆக்கி விடுகிறான். நிச்சயமாக இதில் அறிவுடையோருக்கு அறிவுரை இருக்கின்றது*. *22.* எவரது இதயத்தை இஸ்லாத்திற்காக அல்லாஹ்

---

*மழை பொழிந்து பசுமையான தாவரங்கள் முளைத்து வளர்ந்து அவற்றின் விளைச்சல்கள் அறுவடை செய்யப்படுவது போன்ற அற்புதமான அனைத்து நிகழ்வுகளிலும் பொருள் நிறைந்த எண்ணற்ற படிப்பினைகள் உள்ளன. ஆனால் இந்த படிப்பினைகள் - பாடங்கள் எல்லாம் ஆழ்ந்து சிந்திப்பவர்களுக்கே கிடைக்கும். தங்களது இயற்கை ஆற்றலை உயிர்ப்புடன் வைத்துக்கொண்டு ஆழ்ந்து சிந்திப்பதற்கு அவற்றை இந்த உலகில் பயன்படுத்துபவர்களுக்கே இறைவனைப்பற்றி ஆழ்ந்த உணர்வான 'மஃரிஃபா' என்பது கிடைக்கும்.

விசாலமாக்குகிறானோ அவர் தம் இறைவனிடமிருந்து வந்துள்ள தெளிவான ஒளியில் உள்ளார். இறைநினைவைவிட்டும் இதயங்கள் இறுகிப் போனவர்களுக்குக் கேடுதான். அவர்கள் வெளிப்படையான வழிகேட்டில் இருக்கிறார்கள்.

*23.* அல்லாஹ் மிகச்சிறந்த செய்தியை அருளியுள்ளான். அவை ஒன்றையொன்று ஒத்த, திரும்பத் திரும்ப வரக்கூடிய கருத்துக்களைக் கொண்ட ஒரு வேதமாக இருக்கிறது. இதனால் தம் இறைவனை அஞ்சுவோரின் உடல் சிலிர்த்து விடுகிறது. பின்னர் அவர்களின் உடலும், உள்ளமும் உருகி இறைநினைவின்பக்கம் நாட்டம் கொள்கின்றன. இது இறைவழிகாட்டுதலாகும். இதன்மூலம் தான் நாடுவோருக்கு நேரான வழியை அல்லாஹ் காட்டுகிறான். அல்லாஹ் யாரை வழிதவறச் செய்துவிடுவானோ அவருக்கு வழிகாட்டுபவர் யாரும் இல்லை.

*24.* எவர் மறுமைநாளில் கொடிய வேதனையைத் தன் முகத்தால் தடுக்க முயல்வாரோ (அவர் சுவனவாசியைப் போலாவாரா?). அப்போது கொடுமைக்காரர்களிடம் கூறப்படும்: “நீங்கள் சம்பாதித்துக் கொண்டிருந்தவற்றைச் சுவையுங்கள்”. *25.* இவர்களுக்கு முன்னிருந்தவர்களும் நிராகரித்தார்கள். ஆகவே அவர்கள் அறியாத புறத்திலிருந்து அவர்களிடம் வேதனை வந்தடைந்தது. *26.* அல்லாஹ் இவ்வுலக வாழ்வில் அவர்கள் இழிவைச் சுவைக்கும்படிச் செய்தான். மறுமையின் வேதனையோ மிகக் கடுமையானது. அந்தோ, அவர்கள் அறிந்திருக்க வேண்டுமே!

*27.* மக்கள் அறிவுரை பெறும்பொருட்டு நாம் இந்த குர்ஆனில் எல்லாவகையான உதாரணங்களையும் எடுத்துக் கூறியுள்ளோம். *28.* அவர்கள் அஞ்ச வேண்டும் என்பதற்காக எவ்விதக் கோணலுமற்ற குர்ஆனை அரபிமொழியில் அருளியுள்ளோம். *29.* அல்லாஹ் ஒரு உதாரணத்தைக் கூறுகிறான். ஒரு மனிதனுக்கு பிடிவாத

குணமுடைய பங்காளிகள் உரிமையாளர்களாக இருக்கிறார்கள். மற்றொரு மனிதன் முழுக்க முழுக்க ஒரே மனிதனுக்கு அடிமையாக இருக்கிறான். இவர்கள் இருவரும் சமமாவார்களா? அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே! ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் அறிந்துகொள்வதில்லை. **30.** நீரும் மரணிக்கக்கூடியவரே. அவர்களும் மரணிக்கக்கூடியவர்களே. **31.** பின்னர் நீங்கள் அனைவரும் மறுமைநாளில் உங்கள் இறைவனிடத்தில் தர்க்கித்துக் கொள்வீர்கள்.

**32.** அல்லாஹ்வின்மீது பொய்யுரைத்து சத்தியம் தன்னிடம் வந்தபோது அதைப் பொய்யெனக் கூறியவனைவிட பெரும் அக்கிரமக்காரன் யார்? இத்தகைய நிராகரிப்பாளர்களின் தங்குமிடம் நரகத்தில் இல்லையா? **33.** சத்தியத்தைக் கொண்டு வந்தவரும் அதனை ஏற்றுக்கொண்டவர்களும்தான் இறையச்சமுடையவர்கள். **34.** அவர்களுக்குத்தான் விரும்புகின்றவை அனைத்தும் அவர்களின் இறைவனிடமிருந்து கிடைக்கும். இதுதான் நன்மை செய்வோரின் கூலியாகும். **35.** இது ஏனெனில் அல்லாஹ் அவர்கள் செய்துகொண்டிருந்த தீய காரியங்களை நீக்கி அவர்கள் செய்த நற்செயல்களுக்குப் பலனாக கூலி அளிக்க வேண்டும் என்பதற்காகத்தான்.

**36.** தன் அடியானுக்கு அல்லாஹ் போதுமானவனில்லையா? அவனை விடுத்து மற்றவர்களைக்கொண்டு இவர்கள் உம்மை பயமுறுத்துகிறார்கள். அல்லாஹ் யாரை வழிதவறச் செய்துவிடுவானோ அவருக்கு வழிகாட்டுபவர் யாரும் இல்லை. **37.** அல்லாஹ் யாருக்கு வழிகாட்டுகிறானோ அவரை வழிகெடுப்பவர் யாரும் இல்லை. அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவனும் தண்டிப்பவனும் இல்லையா?

*38.* “வானங்களையும், பூமியையும் படைத்தவன் யார்” என்று நீர் அவர்களிடம் கேட்டால் “அல்லாஹ்தான்” என்று நிச்சயம் அவர்கள் கூறுவார்கள். நீர் கேளும்: “அவனைவிடுத்து நீங்கள் அழைக்கின்றவற்றைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்? அல்லாஹ் எனக்கு ஏதேனும் தீங்கை நாடினால் அவற்றால் அத்தீங்கை நீக்கிவிட முடியுமா? அல்லது அவன் என்மீது கருணை காட்ட நாடினால் அவற்றால் அவனது கருணையைத் தடுத்துவிட முடியுமா?” நீர் கூறும்: “அல்லாஹ்வே எனக்குப் போதுமானவன். சார்ந்திருப்பவர்கள் அவனையே முழுமையாகச் சார்ந்திருப்பார்கள்”. *39.* நீர் கூறும்: “என் சமூகமே! நீங்கள் உங்கள் வழியில் செயல்படுங்கள். நானும் என் வழியில் செயல்படுகிறேன். விரைவில் நீங்கள் அறிந்துகொள்வீர்கள்”. *40.* இழிவுதரும் வேதனை யாருக்கு வரும், நிலையான வேதனை யார் மீது இறங்கும் என்பதை விரைவில் நீங்கள் அறிந்துகொள்வீர்கள். *41.* நாம் மனிதர்களின் நேர்வழிக்காக இவ்வேதத்தை சத்தியத்துடன் உமக்கு அருளியுள்ளோம். யாரேனும் நேர்வழியைப் பின்பற்றினால் அது அவருக்கே நன்மையாக அமையும். யாரேனும் வழிதவறிச் சென்றால் அவர் தனக்குக் கேடாகவே வழிதவறிச் செல்கிறார். நீர் அவர்களுக்குப் பொறுப்பாளி அல்லர்.

*42.* அல்லாஹ்தான் உயிர்களை அவை மரணிக்கும் வேளையிலும் மரணிக்காதவற்றை அவற்றின் தூக்கத்திலும் கைப்பற்றுகிறான். எதன்மீது அவன் மரணத்தை விதித்துவிட்டானோ அதனைத் தடுத்துக் கொள்கிறான். மற்றவற்றைக் குறிப்பிட்ட தவணைவரை திருப்பி அனுப்புகிறான். நிச்சயமாக இதில் சிந்திக்கக்கூடிய மக்களுக்கு ஏராளமான சான்றுகள் இருக்கின்றன.

*43.* அவர்கள் அல்லாஹ்வைவிடுத்து பரிந்துரை செய்பவர்களாக மற்றவர்களை ஆக்கிக் கொண்டார்களா? நீர் கேளும்: “அவர்கள் எந்த அதிகாரமும் பெறாதவர்களாகவும்

எதையும் புரியாதவர்களாகவும் இருந்தாலுமா?" 44. நீர் கூறும்: "பரிந்துரை செய்வது முழுவதும் அல்லாஹ்வின் அதிகாரத்திலேயே உள்ளது. வானங்கள் மற்றும் பூமியின் ஆட்சியதிகாரம் அவனுக்கே உரியது. பின்னர் அவனிடமே நீங்கள் திரும்பக் கொண்டு செல்லப்படுவீர்கள்". 45. ஏக அல்லாஹ்வைப் பற்றிக் கூறப்பட்டால் மறுமையின் மீது நம்பிக்கை கொள்ளாதவர்களின் உள்ளங்கள் வெறுப்படைகின்றன. அவனை விடுத்து மற்றவர்களைப் பற்றிக் கூறப்பட்டால் அப்போது அவர்கள் மகிழ்ச்சியடைகிறார்கள். 46. நீர் கூறும்: "அல்லாஹ்வே! வானங்களையும், பூமியையும் படைத்தவனே! மறைவானதையும் வெளிப்படையானதையும் அறிந்தவனே! நீயே உன் அடியார்களுக்கிடையே உள்ள கருத்து வேறுபாடுகளில் தீர்ப்பளிப்பளிக்கின்றாய்". 47. பூமியிலுள்ளவை அனைத்தும் அவற்றுடன் அதுபோன்ற இன்னொன்றும் அக்கிரமக்காரரர்களிடம் இருந்தாலும் மறுமை நாளின் கொடிய வேதனையிலிருந்து தப்பிப்பதற்காக அதனை ஈடாகக் கொடுத்துவிட நாடுவார்கள். அவர்கள் எண்ணிப் பார்த்திராதவையெல்லாம் அல்லாஹ்விடமிருந்து அவர்களுக்கு வெளிப்பட்டு விடும். 48. அவர்கள் செய்த தீய செயல்களின் விளைவுகள் அவர்களுக்கு முன்பு வெளிப்பட்டு விடும். எதனை அவர்கள் பரிகாசம் செய்து கொண்டிருந்தார்களோ அதுவே (வேதனையே) அவர்களைச் சூழ்ந்து கொள்ளும்.

49. மனிதனுக்கு ஏதேனும் துன்பம் நேர்ந்தால் அவன் நம்மிடமே பிரார்த்திக்கிறான். பின்னர் நாம் அவனுக்கு நம்மிடமிருந்து ஏதேனும் அருட்கொடையை வழங்கினால் "இது என் அறிவால்தான் எனக்கு வழங்கப்பட்டுள்ளது" என்று கூறுகிறான். அப்படியல்ல. இது ஒரு சோதனையே. ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் அறிந்துகொள்வதில்லை. 50. இவர்களுக்கு முன்சென்றவர்களும் இவ்வாறே கூறினார்கள். ஆயினும் அவர்கள் சம்பாதித்துக்

*கொண்டிருந்தது எதுவும் அவர்களுக்குப் பயனளிக்கவில்லை. **51.** அவர்கள் சம்பாதித்தவற்றின் தீய விளைவுகள் அவர்களைப் பிடித்துக் கொண்டன. இவர்களில் அக்கிரமக்காரர்களையும் அவர்கள் சம்பாதித்தவற்றின் தீய விளைவுகள் விரைவில் பிடித்துக்கொள்ளும். அவர்கள் நம் பிடியிலிருந்து தப்பிவிட முடியாது. **52.** தான் நாடியவர்களுக்கு அல்லாஹ் வாழ்வாதாரத்தை விசாலமாக்குகிறான், தான் நாடியவர்களுக்கு சுருக்கியும் விடுகிறான் என்பதை அவர்கள் அறியவில்லையா? நிச்சயமாக நம்பிக்கைகொள்ளும் மக்களுக்கு இதில் ஏராளமான சான்றுகள் இருக்கின்றன.*

***53.** நீர் கூறும்: "தமக்குத்தாமே தீங்கிழைத்துக்கொண்ட என் அடியார்களே! அல்லாஹ்வின் கருணையில் நம்பிக்கையிழந்து விடாதீர்கள். நிச்சயமாக அல்லாஹ் எல்லாப் பாவங்களையும் மன்னித்து விடுவான். அவன் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்". **54.** வேதனை உங்களை வந்தடைவதற்கு முன்பே நீங்கள் உங்கள் இறைவனின் பக்கம் திரும்பி அவனுக்கே கட்டுப்பட்டு விடுங்கள். (வேதனை வந்துவிட்டால்) பின்னர் நீங்கள் உதவி செய்யப்பட மாட்டீர்கள்.*

***55.** *நீங்கள் அறியாதிருக்கும் நிலையில் திடீரென உங்கள்மீது*

---

*இறைவாக்கை சிறந்தவை, சாதாரணமானவை என்று வகைப்படுத்த முடியாது. குர்ஆனிலோ, பிற வேதங்களிலோ சிறந்த வசனங்கள், சாதாரண வசனங்கள் என்ற வேறுபாடு கிடையாது. உண்மை என்னவெனில் உலகில் மனிதனுக்கு செயல்படுவதற்கான சுதந்திரம் வழங்கப்பட்டுள்ளது. இங்கு அவன் விரும்பினால் ஒன்றை சரியான கோணத்தில் புரிந்து கொள்ளலாம், விரும்பினால் அதனை தவறான கோணத்தில் புரிந்து கொள்ளலாம். 'எனவே அவன் இறைவாக்கை சிறந்த முறையில் புரிந்துகொண்டு தேவையற்ற சந்தேகங்களை ஏற்படுத்துவதைவிட்டும் தவிர்ந்து கொள்ள வேண்டும்' என்ற அடிப்படையில்தான் சிறந்த அம்சத்தைப் பின்பற்றுங்கள் என்று கூறப்பட்டுள்ளது.

வேதனை வருவதற்கு முன்பே உங்கள் இறைவனிடமிருந்து உங்களுக்கு அருளப்பட்ட வேதத்தின் சிறந்த அம்சத்தைப் பின்பற்றுங்கள்*. *56.* “அந்தோ, நான் அல்லாஹ்வின் விஷயத்தில் குறைபாடு செய்து விட்டேனே, பரிகாசம் செய்வோரில் நானும் ஒருவனாக இருந்தேனே!” என்று யாராவது புலம்பக்கூடும். *57.* அல்லது “அல்லாஹ் எனக்கு வழிகாட்டியிருந்தால் இறையச்சமுடையோரில் நானும் ஒருவனாக இருந்திருப்பேனே” என்று புலம்பக்கூடும். *58.* அல்லது வேதனையைக் காணும்போது “அந்தோ, நான் மீண்டும் உலகிற்குச் செல்பவனாக இருந்தால் நல்லோர்களில் ஒருவனாகி விடுவேனே” என்று புலம்பக்கூடும். *59.* ஆம். நிச்சயமாக என் வசனங்கள் உன்னிடத்தில் வந்தன. ஆயினும் நீ அவற்றைப் பொய் என்று கூறினாய். கர்வம்கொண்டு நிராகரிப்பாளர்களில் ஒருவனாகி விட்டாய். *60.* அல்லாஹ்வின்மீது பொய்யுரைத்தவர்களின் முகங்கள் மறுமை நாளில் கருத்திருப்பதை நீங்கள் காண்பீர்கள். கர்வம்கொண்டோரின் தங்குமிடம் நரகத்தில் இல்லையா? *61.* ஆயினும் அல்லாஹ்வை அஞ்சி நடந்தவர்களுக்கு அவன் வெற்றியுடன் ஈடேற்றம் அளிப்பான். அவர்களை எந்தத் தீமையும் அணுகாது. அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள்.

*62.* அல்லாஹ்தான் அனைத்துப் பொருள்களையும் படைத்தவன். அவனே எல்லாவற்றிற்கும் பொறுப்பாளன். *63.* வானங்கள் மற்றும் பூமியின் திறவுகோல்கள் அவனிடமே இருக்கின்றன. இறைவசனங்களை நிராகரித்தவர்கள்தான் இழப்பிற்கு ஆளானவர்கள். *64.* நீர் கூறும்: “மூடர்களே! அல்லாஹ்வை விடுத்து மற்றவர்களையா என்னை வணங்கச் சொல்கிறீர்கள்?”. *65.* உமக்கும் உமக்கு முன் இருந்தவர்களுக்கும் பின்வருமாறே அறிவிக்கப்பட்டுள்ளது: “இறைவனுக்கு இணைவைத்தால் உம் செயல்கள் யாவும் அழிந்து நஷ்டமடைந்தவர்களில் ஒருவராகி

விடுவீர்". ***66.*** ஆகவே நீர் அல்லாஹ்வையே வணங்குவீராக. நன்றி செலுத்துவோருடன் இணைந்து விடுவீராக.

***67.*** அவர்கள் அல்லாஹ்வை மதிப்பிட வேண்டியவாறு மதிப்பிடவில்லை. மறுமைநாளில் பூமி முழுவதும் அவனது கைப்பிடியில் இருக்கும். வானங்கள் அவனது வலக்கரத்தில் சுருட்டப்பட்டிருக்கும். இவர்கள் செய்யும் இணைவைப்பைவிட்டும் அவன் தூய்மையானவன்; மிக உயர்ந்தவன். ***68.*** எக்காளம் ஊதப்படும். வானங்கள், பூமியில் உள்ளவர்கள் அனைவரும் மயக்கமுற்று வீழ்ந்து விடுவார்கள், அல்லாஹ் நாடியவர்களைத் தவிர. பின்னர் மீண்டும் எக்காளம் ஊதப்படும். உடனே அனைவரும் எழுந்து பார்ப்பார்கள். ***69.*** பூமி தன் இறைவனின் ஒளியால் பிரகாசிக்கும். (இவர்கள்முன்) பதிவேடுகள் வைக்கப்படும். தூதர்களும் சாட்சியாளர்களும் கொண்டு வரப்படுவார்கள். அவர்களிடையே நியாயமாகத் தீர்ப்பளிக்கப்படும். அவர்களுக்கு எவ்வித அநீதியும் இழைக்கப்பட மாட்டாது. ***70.*** ஒவ்வொருவருக்கும் அவரவர் செயல்களுக்கேற்ப முழுமையான கூலி வழங்கப்படும். அவர்கள் செய்பவற்றை அவன் நன்கறிந்தவன்.

***71.*** நிராகரிப்பாளர்கள் கூட்டம் கூட்டமாக நரகத்தின்பக்கம் ஓட்டிச் செல்லப்படுவார்கள். அவர்கள் அங்கு வந்தவுடன் அதன் வாயில்கள் திறக்கப்படும். அதன் காவலர்கள் அவர்களிடம், "உங்கள் இறைவனின் வசனங்களை உங்களுக்கு ஓதிக் காட்டக்கூடிய, உங்களின் இந்த நாளின் சந்திப்பைப் பற்றி எச்சரிக்கை செய்யக்கூடிய தூதர்கள் உங்களிலிருந்தே உங்களிடம் வரவில்லையா?" என்று கேட்பார்கள். அதற்கு அவர்கள் 'ஆம்' என்று கூறுவார்கள். ஆயினும் வேதனையின் வாக்கு நிராகரிப்பாளர்களின் மீது உறுதியாகி விட்டது. ***72.*** அவர்களிடம் கூறப்படும்: "நரகத்தின் வாயில்களில்

நுழைந்து விடுங்கள். என்றென்றும் அதில் தங்கி விடுங்கள். கர்வம் கொண்டோருக்கு இது மிகவும் கெட்ட இருப்பிடமாகும்”.

*73.* தம் இறைவனை அஞ்சியவர்கள் சுவனத்தின்பக்கம் கூட்டம் கூட்டமாக அழைத்து வரப்படுவார்கள். அவர்கள் அங்கு வந்தவுடன் அதன் வாயில்கள் திறக்கப்படும். அதன் காவலர்கள் அவர்களிடம், “உங்கள்மீது சாந்தி உண்டாகட்டும். நீங்கள் மகிழ்ச்சியாக இருங்கள். இதில் நுழைந்து என்றென்றும் தங்கியிருங்கள்” என்று கூறுவார்கள். *74.* அவர்கள் கூறுவார்கள்: “அல்லாஹ்வுக்கே எல்லாப்புகழும்! அவன் எங்களுக்குச் செய்த வாக்குறுதியை உண்மைப்படுத்திக் காட்டினான். எங்களை இந்த பூமிக்கு உரிமையாளர்களாக ஆக்கினான். சொர்க்கத்தில் நாங்கள் விரும்பும் இடங்களில் தங்கிக் கொள்வோம்'', என்று கூறுவார்கள். நற்செயல்புரிவோருக்கு எவ்வளவு சிறப்பான கூலி இது! *75.* வானவர்கள் அரியணையை வட்டமிட்டவாறு தம் இறைவனைப் புகழ்ந்து போற்றிக் கொண்டிருப்பதை நீர் காண்பீர். அவர்களிடையே நியாயமான முறையில் தீர்ப்பளிக்கப்படும். அகிலங்களின் இறைவனாகிய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும் என்று கூறப்படும்.

## 40. மன்னிப்பாளன் (Gகா∴பிர்)

**அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....**

*1.* ஹா. மீம். *2.* இது அல்லாஹ்விடமிருந்து அருளப்பட்ட வேதமாகும். அவன் யாவற்றையும் மிகைத்தவன்; நன்கறிந்தவன்; *3.* பாவங்களை மன்னிப்பவன்; பாவமன்னிப்பை ஏற்றுக்கொள்பவன்; கடுமையாகத் தண்டிப்பவன்; பெருங்கொடையாளன்;

அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. அவனிடமே திரும்பிச் செல்ல வேண்டும்.

4. நிராகரிப்பாளர்கள்தான் இறைவசனங்களில் தர்க்கம் புரிகிறார்கள். நகரங்களில் அவர்களின் நடமாட்டம் உம்மை ஏமாற்றத்தில் ஆழ்த்திவிட வேண்டாம். 5. இவர்களுக்கு முன் நோவாவின் சமூகத்தினரும் அவர்களுக்குபின் வந்த கூட்டத்தினரும் மறுத்துள்ளனர். ஒவ்வொரு சமூகத்தினரும் தங்கள் தூதரைக் கொலை செய்யவே நாடினார்கள். அசத்தியத்தின் மூலம் சத்தியத்தை வீழ்த்திவிட தர்க்கம் செய்தார்கள். ஆனால் நான் அவர்களைப் பிடித்துக் கொண்டேன். எப்படி இருந்தது எனது தண்டனை? 6. இவ்வாறே நிராகரிப்பாளர்கள்மீது ‘அவர்கள் நரகவாசிகளே’ எனும் உம் இறைவனின் வாக்கு உறுதியாகி விட்டது.

7. அரியணையைச் சுமப்பவர்களும் அதனைச் சூழ உள்ளவர்களும் தம் இறைவனின் புகழைப் போற்றுகிறார்கள். அவன்மீது நம்பிக்கைகொண்டு நம்பிக்கையாளர்களுக்காக மன்னிப்புக் கோருகிறார்கள். “எங்கள் இறைவா! நீ கருணையாலும், அறிவாலும் எல்லாவற்றையும் சூழ்ந்துள்ளாய். எனவே மன்னிப்புக்கோரி உன் வழியைப் பின்பற்றுபவர்களை மன்னித்து விடுவாயாக. நரகவேதனையை விட்டும் அவர்களைக் காப்பாயாக!” 8. “எங்கள் இறைவா! நீ அவர்களுக்கு வாக்களித்த நிலையான சுவனங்களில் அவர்களையும் அவர்களின் மூதாதையர், மனைவியர் மற்றும் அவர்களின் சந்ததிகளில் நல்லோர்களாக இருப்பவர்களையும் நுழையச் செய்வாயாக. நிச்சயமாக நீ யாவற்றையும் மிகைத்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றாய். 9. அவர்களைத் தீமைகளிலிருந்து காப்பாயாக. அந்நாளில் யாரை நீ தீமைகளிலிருந்து காத்துக் கொண்டாயோ நிச்சயமாக அவர்மீது கருணை புரிந்து விட்டாய். இதுவே மகத்தான வெற்றியாகும்”.

*10. நிராகரிப்பாளர்கள் அழைக்கப்பட்டு "நீங்கள் நம்பிக்கையின்பக்கம் அழைக்கப்பட்டபோது நிராகரித்துக் கொண்டிருந்தீர்கள். ஆகவே உங்களை நீங்கள் வெறுப்பதைவிட அல்லாஹ் உங்களைக் கடுமையாக வெறுக்கிறான்" என்று அவர்களிடம் கூறப்படும். 11. "எங்கள் இறைவா! நீ எங்களுக்கு இருமுறை மரணத்தையும் இருமுறை வாழ்வையும் அளித்து விட்டாய். நாங்கள் எங்கள் பாவங்களை ஒப்புக்கொள்கிறோம். எனவே இங்கிருந்து வெளியேற ஏதேனும் வழி உண்டா?" என்று அவர்கள் கேட்பார்கள். 12. இதற்குக் காரணம் ஏகனான அல்லாஹ்வின் பக்கம் அழைக்கப்பட்டபோது நீங்கள் நிராகரித்தீர்கள். ஆனால் அவனுக்கு இணை உண்டு என்று கூறப்பட்டபோது நீங்கள் அதில் நம்பிக்கை கொண்டீர்கள். ஆகவே தீர்ப்பளிக்கும் அதிகாரம் மிக உயர்ந்தவனும் மிகப் பெரியவனுமாகிய அல்லாஹ்விடமே உள்ளது (என்று அவர்களிடம் கூறப்படும்).*

*13. அவனே உங்களுக்குத் தன் சான்றுகளைக் காட்டுகிறான். உங்களுக்காக வானத்திலிருந்து வாழ்வாதாரத்தையும் இறக்கி வைக்கிறான். அவன் பக்கம் திரும்புபவர்கள்தான் அறிவுரையை ஏற்றுக்கொள்வார்கள். 14. ஆகவே நம்பிக்கையை அல்லாஹ்வுக்கே உரித்தாக்கியவாறு அவனையே அழையுங்கள், அது நிராகரிப்பாளர்களுக்கு எவ்வளவு வெறுப்பாக இருந்தாலும் சரியே. 15. அவன் உயர்ந்த அந்தஸ்துகளை உடையவன்; அரியணையின் அதிபதி. தன் அடியார்களில் தான் நாடுவோருக்கு அவன் தன் கட்டளையை அறிவிக்கிறான், சந்திக்கும் நாளைக் குறித்து எச்சரிக்கை செய்வதற்காக. 16. அந்தநாளில் அவர்கள் வெளிப்பட்டு வருவார்கள். அவர்களின் எந்த விஷயமும் அல்லாஹ்வுக்கு மறைவாக இருக்காது. 'இன்றைய தினம் ஆட்சியதிகாரம் யாருக்குரியது?' (என்று கேட்கப்பட்டு) 'அடக்கியாளும் ஏகனாகிய அல்லாஹ்வுக்கே உரியது'*

(என்று கூறப்படும்). *17.* ‘இன்றைய தினம் ஒவ்வொருவருக்கும் அவரவர் செயல்களுக்கான கூலி வழங்கப்படும். இன்றைய தினம் எந்த அநீதியும் நடைபெறாது’. நிச்சயமாக அல்லாஹ் கணக்கு தீர்ப்பதில் விரைவானவன்.

*18.* நெருங்கிவரும் அந்த நாளைக் குறித்து அவர்களுக்கு எச்சரிக்கை செய்வீராக. அப்போது இதயங்கள் துக்கத்தால் நிரம்பி தொண்டைக் குழியை அடைந்து விட்டிருக்கும். அக்கிரமக்காரர்களுக்கு நண்பர்களோ, ஏற்றுக்கொள்ளப்படும் பரிந்துரையாளர்களோ இருக்க மாட்டார்கள். *19.* கண்கள் செய்யும் மோசடியையும், நெஞ்சங்கள் மறைத்து வைப்பதையும் அவன் அறிவான். *20.* அல்லாஹ் சத்தியத்துடன் தீர்ப்பளிக்கிறான். அவனை விடுத்து இவர்கள் யாரை அழைக்கிறார்களோ அவர்கள் எவ்விஷயத்திலும் தீர்ப்பளிக்க மாட்டார்கள். நிச்சயமாக அல்லாஹ் அனைத்தையும் செவியேற்பவனாகவும் பார்ப்பவனாகவும் இருக்கின்றான்.

*21.* இவர்கள் பூமியில் சுற்றித்திரிந்து தங்களுக்கு முன்னிருந்தவர்களின் கதி என்னவாயிற்று என்பதைப் பார்க்க வேண்டாமா? அவர்கள் இவர்களைவிட பலம் மிக்கவர்களாகவும் பூமியில் அதிகமான அடையாளச் சின்னங்களை விட்டுச் சென்றவர்களாகவும் இருந்தார்கள். ஆயினும் அவர்களின் பாவங்களினால் அல்லாஹ் அவர்களைத் தண்டித்தான். அவர்களை அல்லாஹ்விடமிருந்து காப்பாற்றுபவர் யாரும் இருக்கவில்லை. *22.* இதற்குக் காரணம், தூதர்கள் அவர்களிடம் தெளிவான அத்தாட்சிகளைக் கொண்டுவந்திருந்தபோதும் அவர்கள் நிராகரித்து விட்டார்கள் என்பதுதான். ஆகவே அல்லாஹ் அவர்களைத் தண்டித்தான். அவன் வல்லமைமிக்கவனாகவும் தண்டிப்பதில் கடுமையானவனாகவும் இருக்கின்றான்.

*23.* நாம் மோசேயை நம் சான்றுகளுடனும் தெளிவான ஆதாரத்துடனும் பாரோ, ஹாமான் மற்றும் கோராவிடம் அனுப்பினோம். *24.* ஆனால் அவர்களோ, “இவர் ஒரு சூனியக்காரர், பொய்யர்” என்று கூறினார்கள். *25.* நம்மிடமிருந்து சத்தியத்தைக் கொண்டு அவர்களிடம் அவர் வந்தபோது அவர்கள், “இவருடன் நம்பிக்கைகொண்டோரின் ஆண் மக்களைக் கொன்றுவிட்டு பெண் மக்களை உயிருடன் விட்டு விடுங்கள்” என்று கூறினார்கள். ஆயினும் நிராகரிப்பாளர்களின் திட்டம் வீணாகிப் போனது.

*26.* பாரோ, “என்னை விடுங்கள்; நான் மோசேயைக் கொன்று விடுகிறேன். அவர் தம் இறைவனை அழைக்கட்டும். அவர் உங்கள் மார்க்கத்தை மாற்றி விடுவார் அல்லது நாட்டில் குழப்பத்தை உண்டாக்குவார் என்று நான் அஞ்சுகிறேன்” என்று கூறினான். *27.* அதற்கு மோசே, “விசாரணை செய்யப்படும் நாளின்மீது நம்பிக்கை கொள்ளாத ஆணவங்கொண்டவர்கள் அனைவரைவிட்டும் என் இறைவனாகவும் உங்கள் இறைவனாகவும் இருப்பவனிடம் நான் பாதுகாப்பு தேடுகிறேன்” என்று கூறினார்.

*28.* பாரோவுடைய குடும்பத்தைச் சேர்ந்த, தம் நம்பிக்கையை மறைத்து வைத்திருந்த நம்பிக்கையாளர் ஒருவர், “அல்லாஹ்தான் என் இறைவன் என்று கூறியதற்காகவா ஒரு மனிதரை நீங்கள் கொல்லப் போகிறீர்கள்? அவரோ உங்கள் இறைவனிடமிருந்து தெளிவான ஆதாரங்களைக் கொண்டு வந்துள்ளார். அவர் பொய்யராக இருந்தால் அதன் கேடு அவரையே சாரும். அவர் உண்மையாளராக இருப்பாராயின் அவர் உங்களை எச்சரித்தவற்றில் சில உங்களை அடைந்தே தீரும். நிச்சயமாக அல்லாஹ் வரம்பு மீறுபவனுக்கும் பொய்யனுக்கும் நேர்வழிகாட்ட மாட்டான்” என்று கூறினார். *29.* “என் சமூகமே! இன்று உங்களிடம் ஆட்சி இருக்கின்றது. நீங்கள்தான் பூமியில் மேலோங்கி உள்ளீர்கள். ஆயினும்

இறைவேதனை நம்மிடம் வந்துவிட்டால் நமக்கு உதவக்கூடியவர் யார்? (என்றும் அவர் கூறினார்)". அதற்கு பாரோ கூறினான்: "நான் சரியெனக் காண்பதையே உங்களுக்கும் காட்டுகிறேன். உங்களுக்கு நேரான வழியைத்தான் நான் காட்டுகிறேன்".

*30.* நம்பிக்கைகொண்டிருந்த அவர், "என் சமூகமே! முந்தைய சமூகங்களின்மீது வந்த அந்தநாள் உங்கள்மீதும் வந்துவிடுமோ என்று அஞ்சுகிறேன், *31.* நோவாவின் சமூகத்திற்கும், ஆத், ஸமூத் மற்றும் அவர்களுக்குப் பின் வந்த சமூகங்களுக்கும் நேர்ந்ததைப்போன்று" என்று கூறினார். தன் அடியார்களுக்கு அல்லாஹ் சிறிதும் அநீதி இழைக்க விரும்புவதில்லை. *32.* "என் சமூகமே, உங்கள்மீது 'அழுது புலம்பி நீங்கள் ஒருவரையொருவர் அழைக்கும்' அந்நாளைக் குறித்தும் அஞ்சுகிறேன். *33.* அந்நாளில் நீங்கள் புறங்காட்டி ஓடுவீர்கள். அல்லாஹ்விடமிருந்து உங்களைக் காப்பாற்றுபவர் எவரும் இருக்க மாட்டார். அல்லாஹ் யாரை வழிதவறச் செய்து விடுகிறானோ அவருக்கு வழிகாட்டுபவர் யாரும் இல்லை' (என்றும் அவர் கூறினார்)".

*34.* இதற்குமுன் ஜோஸஃப் உங்களிடம் தெளிவான ஆதாரங்களுடன் வந்தார். ஆயினும் நீங்கள் அவர் கொண்டுவந்தவற்றைக் குறித்து சந்தேகத்திலேயே இருந்தீர்கள். இறுதியில் அவர் இறந்துவிட்ட பின்னர் "இவருக்குப்பின் அல்லாஹ் ஒருபோதும் எந்தத் தூதரையும் அனுப்ப மாட்டான்", என்று நீங்கள் கூறினீர்கள். இவ்வாறே அல்லாஹ் வரம்பு மீறுவோரையும், சந்தேகம் கொள்வோரையும் வழிதவறச் செய்கிறான். *35.* அவர்கள் தங்களிடம் எவ்வித ஆதாரமும் வராமலேயே இறைவசனங்களில் தர்க்கம் புரிகிறார்கள். இது அல்லாஹ்விடமும், நம்பிக்கையாளர்களிடமும் மிகவும் வெறுப்பிற்குரியதாகும்.

இவ்வாறே அல்லாஹ் கர்வங்கொண்ட, அக்கிரமக்காரர்களின் உள்ளங்களில் முத்திரையிட்டு விடுகிறான்.

*36.* பாரோ கூறினான்: “ஹாமானே! நான் வானங்களின் பாதைகளைச் சென்றடையும்பொருட்டு எனக்காக ஓர் உயர்ந்த மாளிகையை எழுப்பு. *37.* வானங்களின் பாதைகளை அடைந்து மோசேயின் இறைவனை எட்டிப் பார்க்க வேண்டும். நான் அவரைப் பொய்யராகவே கருதுகிறேன்”. இவ்வாறு பாரோவுக்கு அவனது தீயசெயல் அழகாக்கப்பட்டு நேர்வழியைவிட்டும் தடுக்கப்பட்டான். பாரோவின் திட்டங்கள் நாசமாகிப் போயின.

*38.* நம்பிக்கைகொண்டிருந்த அந்த மனிதர், “என் சமூகமே! என்னைப் பின்பற்றுங்கள். நான் உங்களுக்கு நேரான வழியைக் காட்டுகிறேன். *39.* என் சமூகமே! இவ்வுலக வாழ்க்கை அற்ப இன்பம்தான். நிச்சயமாக மறுமையே நிலையான தங்குமிடமாகும். *40.* தீமை செய்பவர் அதைப் போன்றதையே கூலியாகப் பெறுவார். ஆணாயினும் பெண்ணாயினும் நம்பிக்கைகொண்ட நிலையில் நற்செயல் புரிபவர்கள்தான் சுவனங்களில் நுழைவார்கள். அங்கு அவர்கள் கணக்கின்றி உணவளிக்கப்படுவார்கள். *41.* என் சமூகமே! என்ன இது? நான் உங்களை வெற்றியின் பக்கம் அழைக்கிறேன். நீங்களோ என்னை நரகத்தின் பக்கம் அழைக்கிறீர்களே! *42.* நான் அல்லாஹ்வை நிராகரிப்பதற்கும், எது குறித்து எனக்கு அறிவில்லையோ அதனை அல்லாஹ்வுக்கு இணையாக்கவும் நீங்கள் என்னை அழைக்கிறீர்கள். ஆனால் நான் யாவற்றையும் மிகைத்த பெரும் மன்னிப்பாளனின் பக்கம் உங்களை அழைக்கிறேன். *43.* உறுதியாக நீங்கள் எதன் பக்கம் என்னை அழைக்கிறீர்களோ அதற்கு இம்மையிலும், மறுமையிலும் எந்த மதிப்பும் இல்லை. நாம் அனைவரும் அல்லாஹ்வின் பக்கமே திரும்ப வேண்டும். நிச்சயமாக வரம்பு மீறுவோர்தான் நரகவாசிகள். *44.* ஆகவே நான்

உங்களுக்குக் கூறுவதை விரைவில் நீங்கள் நினைத்துப் பார்ப்பீர்கள். என் காரியத்தை நான் அல்லாஹ்விடமே ஒப்படைக்கிறேன்" என்று கூறினார். நிச்சயமாக அல்லாஹ் அடியார்கள் அனைவரையும் கண்காணிப்பவனாக இருக்கின்றான்.

*45.* அவர்களின் தீய சூழ்ச்சிகளைவிட்டு அல்லாஹ் அவரைக் காப்பாற்றி விட்டான். பாரோவின் கூட்டத்தினரை கொடிய வேதனை சூழ்ந்து கொண்டது. *46.* காலையிலும் மாலையிலும் நெருப்பிற்கு அவர்கள் கொண்டு செல்லப்படுவார்கள். 'அந்நேரம்' நிலைபெறும் நாளில் பாரோவின் கூட்டத்தினரை கடுமையான வேதனையில் புகுத்தி விடுங்கள் (என்று வானவர்களிடம் கூறப்படும்).

*47.* நரகத்தில் அவர்கள் ஒருவருக்கொருவர் தர்க்கித்துக் கொண்டிருப்பார்கள். பலவீனர்கள் கர்வம் கொண்டிருந்தவர்களிடம், "நாங்கள் உங்களுக்கு கட்டுப்பட்டிருந்தோம். நரகநெருப்பில் சிறிதளவையாவது எங்களை விட்டும் உங்களால் தடுக்க முடியுமா?" என்று கேட்பார்கள். *48.* அதற்கு கர்வம் கொண்டிருந்த அவர்கள், "நாம் அனைவரும்தானே இங்கு இருக்கிறோம். தன் அடியார்களிடையே அல்லாஹ் தீர்ப்பளித்து விட்டான்" என்று கூறுவார்கள். *49.* நரகத்தில் உள்ளவர்கள் அதன் காவலர்களிடம், "உங்கள் இறைவனை அழையுங்கள். ஒரு நாளாவது எங்களைவிட்டும் வேதனையை குறைத்துக் கொள்ளட்டும்" என்று கூறுவார்கள். *50.* அதற்கு நரகத்தின் காவலர்கள், "உங்கள் தூதர்கள் உங்களிடம் தெளிவான ஆதாரங்களுடன் வரவில்லையா?" என்று கேட்பார்கள். அதற்கு அவர்கள் 'ஆம்' என்பார்கள். அதற்கு அவர்கள், "அவ்வாறாயின் நீங்களே அழைத்துக் கொள்ளுங்கள்" என்று கூறுவார்கள். நிராகரிப்பாளர்களின் இறைஞ்சுதல் வீணாகிப் போய் விடும்.

*51.* நிச்சயமாக நாம் நம் தூதர்களுக்கும் நம்பிக்கையாளர்களுக்கும் இவ்வுலக வாழ்க்கையிலும் சாட்சியங்கள் நிலைபெறும் நாளிலும் உதவி புரிகின்றோம். *52.* அந்தநாளில் அக்கிரமக்காரர்களுக்கு அவர்களின் பொய்க்காரணங்கள் எப்பயனையும் அளிக்காது. அவர்கள்மீது சாபம் உண்டாகும். அவர்களுக்கு மோசமான தங்குமிடம்தான் உண்டு. *53.* நாம் மோசேவுக்கு நேர்வழி அளித்தோம். இஸ்ராயீலின் மக்களை வேதத்திற்கு உரியவர்களாக்கினோம். *54.* அது அறிவுடையோருக்கு வழிகாட்டியாகவும் நினைவூட்டலாகவும் இருந்தது. *55.* எனவே நீர் பொறுத்துக்கொள்ளும். நிச்சயமாக அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானது. உம் பாவத்திற்காக மன்னிப்புக்கோருவீராக. உம் இறைவனைக் காலையிலும், மாலையிலும் புகழ்ந்து போற்றுவீராக.

*56.* தங்களிடம் எவ்வித ஆதாரமும் வராமலேயே தர்க்கம் புரிபவர்களின் உள்ளங்களில் கர்வத்தைத்தவிர வேறொன்றும் இல்லை. ஆயினும் அவர்கள் அதனை அடையப் போவதில்லை. ஆகவே அல்லாஹ்விடம் பாதுகாப்பைத் தேடிக்கொள்வீராக. நிச்சயமாக அவன் செவியேற்பவனாகவும், பார்ப்பவனாகவும் இருக்கிறான்.

*57.* நிச்சயமாக வானங்களையும் பூமியையும் படைப்பது மனிதர்களைப் படைப்பதைவிட மிகப்பெரியதாகும். ஆயினும் மக்களில் பெரும்பாலோர் அறிந்துகொள்வதில்லை. *58.* பார்வையற்றவனும் பார்வையுள்ளவனும் சமமாக மாட்டார்கள். நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிவோரும், தீயோரும் சமமாக மாட்டார்கள். நீங்கள் மிகக்குறைவாகவே சிந்திக்கிறீர்கள். *59.* நிச்சயமாக மறுமை வந்தே தீரும். அதில் யாதொரு சந்தேகமும்

இல்லை. ஆயினும் மக்களில் பெரும்பாலோர் நம்பிக்கை கொள்வதில்லை.

*60.* உங்கள் இறைவன் கூறுகிறான்: "என்னையே அழையுங்கள். நான் உங்கள் பிரார்த்தனைக்குப் பதிலளிக்கிறேன். என்னை வணங்குவதை விட்டும் கர்வம் கொண்டவர்கள் வெகுவிரைவில் இழிவடைந்தவர்களாக நரகத்தில் நுழைவார்கள்". *61.* அல்லாஹ்தான் நீங்கள் ஓய்வெடுப்பதற்காக இரவைப் படைத்தான். பகலை அவன் பிரகாசமாக்கினான். நிச்சயமாக அல்லாஹ் மனிதர்களின்மீது பெருங்கிருபையாளனாக இருக்கின்றான். ஆயினும் மனிதர்களில் பெரும்பாலோர் நன்றி செலுத்துவதில்லை. *62.* அவன்தான் உங்கள் இறைவனாகிய அல்லாஹ்; எல்லாவற்றையும் படைத்தவன். அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. பின்னர் நீங்கள் எங்கிருந்து வழிகெடுக்கப்படுகிறீர்கள்? *63.* இறைவசனங்களை நிராகரித்துக் கொண்டிருந்தவர்கள் இவ்வாறே வழிகெடுக்கப்படுகிறார்கள்.

*64.* அல்லாஹ்தான் பூமியை உங்களுக்குத் தங்குமிடமாகவும் வானத்தை முகடாகவும் ஆக்கினான். உங்களை வடிவமைத்து உங்களை அழகாக்கினான். தூய்மையானவற்றிலிருந்து உங்களுக்கு உணவளித்தான். அந்த அல்லாஹ்தான் உங்கள் இறைவன். அகிலங்களின் இறைவனாகிய அல்லாஹ் பாக்கியம்மிக்கவன். *65.* அவன் நிரந்தரமானவன். அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. மார்க்கத்தை அவனுக்கே உரித்தாக்கியவர்களாக தூய உள்ளத்துடன் அவனிடமே இறைஞ்சுங்கள். அகிலங்களின் இறைவனாகிய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்!.

*66.* நீர் கூறும்: "என் இறைவனிடமிருந்து எனக்குத் தெளிவான ஆதாரங்கள் வந்தபின்னர் அல்லாஹ்வைவிடுத்து நீங்கள் அழைப்பவர்களை நான் வணங்குவதை விட்டும்

தடுக்கப்பட்டுள்ளேன். அகிலங்களின் இறைவனுக்கு அடிபணிய வேண்டும் என்றும் நான் ஏவப்பட்டுள்ளேன்". **67.** மண்ணிலிருந்தும் பின்னர் ஒரு துளி விந்திலிருந்தும், பின்னர் இரத்தக்கட்டியிலிருந்தும் அவனே உங்களைப் படைத்தான். பின்னர் அவன் உங்களைக் குழந்தையாக வெளிப்படுத்துகிறான். பின்னர் நீங்கள் வாலிபத்தை அடைந்து பின்னர் முதுமையை அடைகிறீர்கள் - உங்களில் முன்னரே மரணித்து விடுவோரும் இருக்கின்றனர். நீங்கள் குறிப்பிட்ட தவணையை அடைந்தே தீருகிறீர்கள். நீங்கள் புரிந்துகொள்ளும் பொருட்டு (அல்லாஹ் உங்களுக்குத் தெளிவுபடுத்துகிறான்). **68.** அவனே வாழ்வும், மரணமும் அளிக்கிறான். அவன் ஒரு விஷயத்தை தீர்மானித்து விட்டால் அதற்கு 'ஆகுக' என்றுதான் கூறுவான். அது ஆகிவிடும்.

**69.** இறைவசனங்களில் தர்க்கம் புரிவோர் எவ்வாறு திசை திருப்பப்படுகிறார்கள் என்பதை நீங்கள் பார்க்கவில்லையா? **70.** அவர்கள் இவ்வேதத்தையும் நம் தூதர்கள் கொண்டுவந்ததையும் நிராகரிக்கிறார்கள். விரைவில் அவர்கள் அறிந்துகொள்வார்கள். **71-72.** அவர்களின் கழுத்துக்கள் விலங்குகளாலும் சங்கிலிகளாலும் பிணைக்கப்பட்டு கொதிநீரின் பக்கம் இழுத்து வரப்படுவார்கள். பின்னர் நெருப்பிலும் எறியப்படுவார்கள். **73.** பின்னர் அவர்களிடம், "அல்லாஹ்வை விடுத்து நீங்கள் இணைவைத்துக் கொண்டிருந்தவையெல்லாம் எங்கே?" என்று கேட்கப்படும். **74.** அதற்கு அவர்கள் கூறுவார்கள்: "அவை எங்களை விட்டும் மறைந்து விட்டன. உண்மையில் நாங்கள் இதற்கு முன்பு எந்த ஒன்றையும் அழைத்துக் கொண்டிருக்கவில்லை". இவ்வாறே அல்லாஹ் நிராகரிப்பாளர்களை வழிதவறச் செய்து விடுகிறான். **75.** ஏனெனில் நீங்கள் பூமியில் நியாயமின்றிப் பெருமையடித்துக்கொண்டும் இறுமாப்புகொண்டும் இருந்தீர்கள். **76.** "நரகத்தின் வாயில்களில்

என்றென்றும் தங்குபவர்களாக நுழைந்து விடுங்கள் (என்று கூறப்படும்)”. ஆணவம் கொண்டோரின் தங்குமிடம் மிகவும் கெட்டதாகும்.

77. ஆகவே நீர் பொறுத்துக்கொள்ளும். நிச்சயமாக அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானது. நாம் அவர்களுக்கு எச்சரிக்கும் சிலவற்றை உமக்குக் காட்டினாலும் அல்லது நாம் உம்மை மரணிக்கச் செய்தாலும் அவர்கள் நம் பக்கமே திரும்ப வேண்டியுள்ளது.

78. நாம் உமக்கு முன்னர் பல தூதர்களை அனுப்பியுள்ளோம். அவர்களில் சிலரைப்பற்றிய சம்பவங்களை நாம் உமக்குக் கூறியுள்ளோம். சிலரைப்பற்றிய சம்பவங்களை நாம் உமக்குக் கூறவில்லை. அல்லாஹ்வின் அனுமதியின்றி எந்தத்தூதரும் எந்தவொரு சான்றையும் கொண்டு வர முடியாது. அல்லாஹ்வின் கட்டளை வந்துவிட்டால் சத்தியத்தின்படி தீர்ப்பளிக்கப்பட்டு விடும். தவறிழைப்பவர்கள் அப்போது நஷ்டமடைந்து விடுவார்கள்.

79. அல்லாஹ்தான் கால்நடைகளை உங்களுக்காகப் படைத்துள்ளான். அது அவற்றில் சிலவற்றின்மீது நீங்கள் பயணம் செய்வதற்காகவும் சிலவற்றை நீங்கள் உண்பதற்காகவும்தான். 80. அவற்றில் உங்களுக்கு இன்னும் பல பயன்களும் இருக்கின்றன. அவற்றின்மூலம் நீங்கள் விரும்பும் இடங்களை அடைந்து கொள்கிறீர்கள். அவற்றின்மீதும் கப்பல்களின்மீதும் நீங்கள் ஏற்றிச் செல்லப்படுகிறீர்கள். 81. தன் சான்றுகளை உங்களுக்கு அவன் காட்டுகிறான். ஆகவே அல்லாஹ்வின் சான்றுகளில் எதனை நீங்கள் மறுப்பீர்கள்?.

82. அவர்கள் பூமியில் சுற்றித்திரிந்து தங்களுக்கு முன்னிருந்தவர்களின் கதி என்னவாயிற்று என்பதைப் பார்க்க

வேண்டாமா? அவர்கள் இவர்களைவிட அதிக எண்ணிக்கை உடையவர்களாவும் வலிமை மிக்கவர்களாகவும் இருந்தார்கள். பூமியில் பெரும் அடையாளங்களையும் விட்டுச் சென்றிருந்தார்கள். ஆயினும் அவர்கள் சம்பாதித்துக் கொண்டிருந்தவை அவர்களுக்கு எந்தப் பயனையும் அளிக்கவில்லை. 83. அவர்களின் தூதர்கள் அவர்களிடம் தெளிவான ஆதாரங்களைக் கொண்டுவந்தபோது தம்மிடமுள்ள சிறிதளவு அறிவைக்கொண்டே அவர்கள் பூரிப்படைந்தார்கள். அவர்கள் எதனைப் பரிகசித்துக் கொண்டிருந்தார்களோ அதுவே அவர்களைச் சூழ்ந்து கொண்டது. 84. அவர்கள் நம் வேதனையைக் கண்டபோது “அல்லாஹ்வை மட்டுமே நாங்கள் நம்பிக்கை கொண்டோம். அவனுக்கு இணையாக்கிக் கொண்டிருந்தவற்றை நிராகரித்து விட்டோம்” என்று கூறினார்கள். 85. ஆயினும் நம் வேதனையைக் கண்டபோது அவர்கள் கொண்ட நம்பிக்கை அவர்களுக்குப் பயனளிக்கவில்லை. இதுதான் அடியார்கள் விஷயத்தில் நடைபெற்று வருகின்ற அல்லாஹ்வின் வழிமுறையாகும். அப்போது நிராகரிப்பாளர்கள் நஷ்டமடைந்தார்கள்.

## 41. விவரிக்கப்பட்ட வசனங்கள் (ஃபுஸ்ஸிலத்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்....

1. ஹா. மீம். 2. இது அளவிலாக் கருணையாளன், இணையிலாக் கிருபையாளனிடமிருந்து அருளப்பட்டதாகும். 3. இது ஒரு வேதமாகும். அரபி மொழியில் அமைந்துள்ள குர்ஆனாகிய இதன் வசனங்கள் அறிந்துகொள்ளும் மக்களுக்காகத் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. 4. இது நற்செய்தி கூறக்கூடியதாகவும் எச்சரிக்கை செய்யக்கூடியதாகவும் இருக்கின்றது. ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் புறக்கணித்து விட்டார்கள். ஆகவே அவர்கள் செவியேற்க மாட்டார்கள். 5. “நீ எதன் பக்கம்

*எங்களை அழைக்கின்றாயோ அதனைவிட்டு எங்கள் உள்ளங்கள் உறையிடப்பட்டுள்ளன. எங்கள் செவிகள் கேட்காதவாறு உள்ளன. உனக்கும் எங்களுக்குமிடையே ஒரு திரை இருக்கின்றது. ஆகவே நீ உன் வழியில் செயல்படு. நாங்களும் எங்கள் வழிகளில் செயல்படுகிறோம்" என்று அவர்கள் கூறுகிறார்கள்.*

*6. நீர் கூறும்: "நான் உங்களைப்போன்ற ஒரு மனிதன்தான். ஆயினும் எனக்கு இறைவனிடமிருந்து செய்தி அறிவிக்கப்படுகிறது. உங்கள் இறைவன் ஒரே இறைவன்தான். அவன் பக்கமே கவனம் செலுத்துங்கள். அவனிடமே மன்னிப்புக் கோருங்கள்". இணைவைப்பாளர்களுக்குக் கேடுதான்*. 7. அவர்கள் கடமையாக்கப்பட்ட தர்மத்தை வழங்குவதில்லை. மறுமையையும் மறுக்கிறார்கள். 8. நிச்சயமாக நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிந்தவர்களுக்கு என்றும் முடிவுறாத கூலி இருக்கின்றது.*

*9. நீர் கூறும்: "பூமியை இரண்டு நாட்களில் படைத்தவனையா நீங்கள் நிராகரித்துவிட்டு அவனுக்கு இணைகளை ஏற்படுத்துகிறீர்கள்? அவன் அகிலங்களின் இறைவனாவான்". 10. அவன் பூமியின்மீது மலைகளை அமைத்து பயனுள்ள பலவற்றை அதில் உண்டாக்கினான். அதில் உணவுகளை சரியாக நான்கு நாட்களில் நிர்ணயம் செய்தான். இது குறித்து கேட்பவர்களுக்கான விடை இதுதான். 11. பின்னர் அவன் வானத்தின்மீது கவனம் செலுத்தினான். அப்போது அது புகையாக இருந்தது. வானத்திடமும் பூமியிடமும் அவன்,*

---

*எனவே 'அவனிடம் சேர்வதற்கான நேரான பாதையைப் பின்பற்றுங்கள்' என்பதன் பொருள் என்னவென்றால், 'உங்களது வணக்கத்தை முழுமையாக இறைவனுக்கேயானதாக்குங்கள்' என்பதாகும். அதாவது, உங்களது முழு கவனமும் இறைவனை நோக்கியதாகவே இருக்க வேண்டும்; உங்களது வணக்கங்களின் ஒட்டுமொத்த நோக்கமும் ஒரே இறைவனுக்கு மட்டுமேயானதாக இருக்க வேண்டும் என்பதாகும்.

“நீங்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் வந்துவிடுங்கள்” என்று கூறினான். அவையிரண்டும், “நாங்கள் விரும்பியே வந்து விட்டோம்” என்று கூறின. *12.* ஆகவே அவன் இரு நாட்களில் ஏழு வானங்களையும் அமைத்து ஒவ்வொன்றுக்கும் அதற்குரிய கட்டளையை அறிவித்தான். உலகிற்கு அருகிலுள்ள வானத்தை நாம் நட்சத்திரங்களால் அலங்கரித்தோம். அதனைப் பாதுகாப்பாகவும் வைத்தோம். இது யாவற்றையும் மிகைத்த பேரறிவாளனின் ஏற்பாடாகும்.

*13.* ஆகவே அவர்கள் புறக்கணித்து விடுவார்களாயின் நீர் கூறி விடும்: “நான் உங்களுக்கு ஆத், ஸமூத் கூட்டத்தாருக்கு ஏற்பட்ட இடியோசையைப்போன்ற வேதனையைக் குறித்து எச்சரிக்கிறேன்”. *14.* அவர்களுக்கு முன்னும், பின்னும் தூதர்கள் அவர்களிடம் வந்து “அல்லாஹ்வைத்தவிர வேறு யாரையும் வணங்காதீர்கள்” என்று கூறியபோது அவர்கள், “எங்கள் இறைவன் நாடியிருந்தால் வானவர்களை இறக்கியிருப்பான். நீங்கள் கொண்டுவந்துள்ள தூதுச் செய்தியை நாங்கள் நிராகரிக்கிறோம்” என்று கூறினார்கள்.

*15.* ஆத் சமூகத்தினர் பூமியில் அநியாயமாக ஆணவம் கொண்டு, ‘எங்களைவிட வலிமை வாய்ந்தவர்கள் யார்’, என்று கேட்டார்கள். அவர்களைப் படைத்த இறைவன் அவர்களைவிட வலிமை வாய்ந்தவன் என்பதை அவர்கள் அறியவில்லையா? அவர்கள் நம் சான்றுகளை நிராகரித்துக் கொண்டிருந்தார்கள். *16.* ஆகவே அவர்களின் மீது துர்பாக்கியமுடைய நாட்களில் கடும் புயல் காற்றை அனுப்பினோம், இவ்வுலக வாழ்வில் இழிவுதரும் வேதனையைச் சுவைக்கும்படிச் செய்வதற்காக. மறுமையின் வேதனையோ இதைவிட இழிவானதாகும். அவர்களுக்கு எவ்வித உதவியும் கிடைக்காது. *17.* ஸமூத் கூட்டத்தினருக்கு நாம் நேர்வழி காட்டினோம். ஆனால் அவர்கள் நேர்வழிக்குப்

பதிலாகக் குருட்டுத்தனத்தை விரும்பினார்கள். ஆகவே அவர்களின் தீவினையினால் இழிவுமிக்க வேதனை அவர்களைத் தாக்கியது. 18. ஆயினும் நம்பிக்கைகொண்டு இறையச்சத்துடன் இருந்தவர்களை நாம் பாதுகாத்துக் கொண்டோம்.

19. அல்லாஹ்வின் எதிரிகள் நரகத்தின்பக்கம் ஒன்றுதிரட்டப்படும்போது அவர்கள் தனித்தனியாகப் பிரிக்கப்படுவார்கள். 20. இறுதியில் அவர்கள் அங்கு வந்ததும் அவர்களின் செவிகளும் கண்களும் தோல்களும் அவர்களுக்கு எதிராக அவர்கள் செய்து கொண்டிருந்தவற்றைக் குறித்து சாட்சி கூறும். 21. அவர்கள் தம் தோல்களிடம், “எங்களுக்கு எதிராக நீங்கள் ஏன் சாட்சி கூறினீர்கள்?” என்று கேட்பார்கள். அதற்கு அவை, “ஒவ்வொரு பொருளையும் பேச வைத்த அல்லாஹ்தான் எங்களையும் பேச வைத்தான். அவனே உங்களை முதன்முறையாகப் படைத்தான். அவனிடமே நீங்கள் கொண்டு வரப்பட்டுள்ளீர்கள்” என்று கூறும். 22. உங்கள் செவிகளும், கண்களும், தோல்களும் உங்களுக்கு எதிராக சாட்சி கூறுவதை விட்டும் உங்களால் மறைக்க முடியவில்லை. மாறாக நீங்கள் செய்கின்ற பல காரியங்களை அல்லாஹ் அறிய மாட்டான் என்றுதான் எண்ணிக் கொண்டிருந்தீர்கள். 23. உங்கள் இறைவனைப்பற்றி நீங்கள் எண்ணிக் கொண்டிருந்த இந்த எண்ணம்தான் உங்களை அழிவில் ஆழ்த்தி விட்டது. நீங்கள் நஷ்டமடைந்தவர்களாகி விட்டீர்கள். 24. அவர்கள் சகித்துக் கொண்டாலும் நரகமே அவர்களின் இருப்பிடமாகும். அவர்கள் மன்னிப்புக் கோரினாலும் அவர்களுக்கு மன்னிப்பு கிடைக்காது.

25. நாம் அவர்களுடன் சில தோழர்களை இணைத்து விட்டோம். அவர்கள் இவர்களுக்கு முன்னும் பின்னுமுள்ள ஒவ்வொன்றையும் அழகாக்கிக் காட்டினார்கள். முன்சென்ற

மனிதர்கள் மற்றும் ஜின்களின்மீது உறுதியான அதே விஷயம் இவர்கள்மீதும் உறுதியாகி விட்டது. நிச்சயமாக அவர்கள் நஷ்டமடைந்தவர்களாக இருந்தார்கள்.

26. "இந்த குர்ஆனைச் செவியேற்காதீர்கள். நீங்கள் மிகைத்துவிடும் பொருட்டு இதற்கு இடையூறு ஏற்படுத்துங்கள்" என்று இந்நிராகரிப்பாளர்கள் கூறுகிறார்கள். 27. ஆகவே நிராகரிப்பாளர்களை கடும் வேதனையை சுவைக்கச் செய்வோம். அவர்கள் செய்துகொண்டிருந்த தீய செயல்களுக்கு நிச்சயம் நாம் கூலி வழங்கிடுவோம். 28. இதுதான் அல்லாஹ்வின் பகைவர்களுக்கான கூலியாகும். அதாவது நரகம்! நம் வசனங்களை அவர்கள் மறுத்துக் கொண்டிருந்ததனால் அங்கு அவர்களுக்கு நிலையான தங்குமிடம் இருக்கின்றது.

29. நிராகரிப்பாளர்கள் கூறுவார்கள்: "எங்கள் இறைவா! ஜின்கள், மனிதர்களில் எங்களை வழிகெடுத்தவர்களை எங்களுக்குக் காட்டு. அவர்களை இழிவுபடுத்தும் பொருட்டு நாங்கள் அவர்களை எங்கள் கால்களுக்குக் கீழே போட்டு மிதித்து விடுகிறோம்". 30. எவரெல்லாம் "அல்லாஹ்தான் எங்கள் இறைவன்" என்று கூறி அதில் உறுதியாக நிலைத்து நின்றார்களோ அவர்களிடம் வானவர்கள் வந்து, "நீங்கள் பயப்பட வேண்டாம்; கவலைப்பட வேண்டாம். உங்களுக்கு வாக்களிப்பட்ட சுவனத்தைக் கொண்டு நற்செய்தி பெற்றுக்கொள்ளுங்கள்" என்று கூறுவார்கள். 31. "நாங்கள் இவ்வுலக வாழ்க்கையிலும் மறுமையிலும் உங்களுக்கு உதவியாளர்களாவோம். உங்கள் மனம் விரும்புகின்ற அனைத்தும் அங்கு இருக்கின்றது. நீங்கள் கேட்பதெல்லாம் உங்களுக்குக் கிடைக்கும். 32. இது பெரும் மன்னிப்பாளன், இணையிலாக் கிருபையாளனிடமிருந்து வந்துள்ள விருந்தாகும்" என்றும் கூறுவார்கள்.

*33.* எவர் அல்லாஹ்வின் பக்கம் அழைத்து நற்செயல் புரிந்து நான் கீழ்ப்படிந்தவர்களில் ஒருவன் என்று கூறுகிறாரோ அவரைவிட அழகிய சொல்லை உடையவர் யார்? *34.* நன்மையும், தீமையும் சமமாக மாட்டா. மிகச்சிறந்ததைக்கொண்டு தீமையைத் தடுப்பீராக. அப்போது உம்முடன் கடும் பகைமை கொண்டிருந்தவர்கூட உற்ற நண்பராகி விடுவார். *35.* பொறுமையாளர்களைத்தவிர வேறு எவருக்கும் இந்த குணம் வாய்க்கப்பெறுவதில்லை. பெரும் பாக்கியமுடையவர்களைத்தவிர வேறு எவருக்கும் இது வழங்கப்படுவதில்லை. *36.* சாத்தான் உம் உள்ளத்தில் ஏதேனும் ஊசலாட்டத்தை ஏற்படுத்தினால் உடனே அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுவீராக. நிச்சயமாக அவன் செவியேற்பவனாகவும் நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான்.

*37.* இரவும் பகலும், சூரியனும் சந்திரனும் அவனது சான்றுகளில் உள்ளவையாகும். நீங்கள் சூரியனையும் சந்திரனையும் வணங்காதீர்கள். அவற்றைப் படைத்த அல்லாஹ்வையே வணங்குங்கள், நீங்கள் அவனை வணங்குபவர்களாயின். *38.* ஆனால் அவர்கள் ஆணவம் கொண்டால் உம் இறைவனிடம் உள்ளவர்கள் இரவிலும் பகலிலும் அவனைப் புகழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் சோர்வடைவதில்லை.

*39.* அவனது சான்றுகளில் ஒன்று: பூமியை வறண்ட நீர்நிலையில் நீங்கள் காண்கிறீர். நாம் அதன்மீது மழை பொழியச் செய்தால் அது செழித்து வளர்கிறது. நிச்சயமாக அதற்கு உயிரூட்டியவன்தான் இறந்தவர்களையும் உயிர்த்தெழச் செய்வான். அவன் எல்லாவற்றின்மீதும் பேராற்றலுடையவன். *40.* நம் வசனங்களுக்குத் தவறான பொருள் கற்பிக்கின்றவர்கள் நம்மை விட்டும் மறைவாக இல்லை. நெருப்பில் வீசியெறியப்படுபவர் சிறந்தவரா? அல்லது மறுமைநாளில் நிம்மதியாக வருபவர்

சிறந்தவரா? நீங்கள் விரும்பியதைச் செய்து கொள்ளுங்கள். நிச்சயமாக அவன் நீங்கள் செய்பவற்றைப் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

41. 'அறிவுரை' தங்களிடம் வந்தபின்னரும் அதனை நிராகரித்து விடுபவர்கள் நம்மை விட்டும் மறைவாக இல்லை. இது சக்திமிக்க வேதமாகும். 42. இதற்கு முன்னாலும் பின்னாலும் அசத்தியம் இதை அணுகாது. இது புகழும், ஞானமும் மிக்கவனிடமிருந்து அருளப்பட்டதாகும். 43. உமக்குமுன் வந்த தூதர்களுக்குக் கூறப்பட்டதுதான் உமக்கும் கூறப்படுகிறது. நிச்சயமாக உம் இறைவன் பெரும் மன்னிப்பாளனாகவும், துன்புறுத்தும் தண்டனை அளிப்பவனாகவும் இருக்கின்றான்.

44. நாம் இதனை அரபி அல்லாத வேற்று மொழியில் அருளியிருந்தால் 'இதன் வசனங்கள் தெளிவாக்கப்பட்டிருக்க வேண்டாமா?', என்றும், 'வேதமோ வேற்று மொழியில், மக்களோ அரபிகள்!' என்றும் அவர்கள் கூறியிருப்பார்கள். நீர் கூறும்: "இது நம்பிக்கையாளர்களுக்கு வழிகாட்டியாகவும் நிவாரணியாகவும் இருக்கின்றது". ஆனால் நம்பிக்கை கொள்ளாதவர்களின் செவிகள் கேட்காதவாறு இருக்கின்றது. அவர்களின் பார்வைக்குத் திரையாகவும் உள்ளது. அவர்கள் தொலைவான இடத்திலிருந்து அழைக்கப்படுவார்கள்.

45. நாம் மோசேவுக்கு வேதத்தை வழங்கினோம். ஆனால் அதில் கருத்து வேறுபாடு கொள்ளப்பட்டது. உம் இறைவன் ஒரு விஷயத்தை முன்னரே முடிவு செய்திராவிட்டால் அவர்களிடையே தீர்ப்பளிக்கப்பட்டிருக்கும். இது குறித்து அவர்கள் பெரும் குழப்பத்தில் ஆழ்த்தும் சந்தேகத்தில் வீழ்ந்து விட்டார்கள். 46. எவர் நற்செயல் புரிகிறாரோ அது அவருக்கே நன்மையாகும். எவர் தீமை

செய்கிறாரோ அது அவருக்கே கேடாக அமையும். உம் இறைவன் அடியார்கள் மீது சிறிதும் அநீதி இழைப்பவன் அல்லன்.

47. 'அந்நேரம்' பற்றிய அறிவு அவனையே சார்ந்தது. அவனுக்குத் தெரியாமல் எந்தக் கனியும் தன் சூல்கொத்திலிருந்து வெளிப்படுவதில்லை; எந்தப் பெண்ணும் கர்ப்பம் தரிப்பதுமில்லை; பிரசவிப்பதுமில்லை. அவன் அவர்களை அழைத்து "எனக்கு இணையாக்கப்பட்டவர்கள் எங்கே" என்று கேட்கும் நாளில் அவர்கள், "எங்களில் சாட்சி கூறுபவர் எவரும் இல்லை என்பதை நாங்கள் உனக்கு அறிவித்து விட்டோம்" என்று கூறுவார்கள். 48. இதற்கு முன் அவர்கள் அழைத்துக் கொண்டிருந்தவை யாவும் அவர்களை விட்டும் மறைந்து விடும். தாங்கள் தப்பிக்க எந்த வாய்ப்பும் இல்லை என்பதை அவர்கள் புரிந்துகொள்வார்கள்.

49. மனிதன் நன்மையை வேண்டுவதில் சோர்வடைவதில்லை. ஆயினும் துன்பம் அவனைத் தீண்டிவிட்டால் அவன் மனமுடைந்து நம்பிக்கையிழந்து விடுகிறான். 50. அவனுக்கு நேர்ந்த துன்பத்திற்குப்பின் நம் கருணையை நாம் அவனுக்குச் சுவைக்கச் செய்தால், "இது எனக்குரியது. 'அந்நேரம்' (மறுமைநாள்) நிலைபெறும் என்றும் நான் நினைக்கவில்லை. ஒருவேளை என் இறைவனிடம் நான் திரும்பக் கொண்டு செல்லப்பட்டாலும் அவனிடத்தில் எனக்கு இன்பமே கிடைக்கும்" என்று அவன் கூறுவான். நிராகரிப்பாளர்களுக்கு அவர்களின் செயல்களைக் குறித்து நாம் அறிவித்திடுவோம். அவர்களைக் கடும் வேதனையைச் சுவைக்கச் செய்வோம்.

51. நாம் மனிதன்மீது அருள் புரிந்தால் அவன் (நம்மையும் நம்முடைய கட்டளைகளையும்) புறக்கணித்து தூர விலகிச் செல்கிறான். ஆனால் ஏதேனும் தீங்கு அவனைத் தீண்டிவிட்டால்

*நீண்ட பிரார்த்தனை செய்பவனாக மாறி விடுகிறான். **52.** நீர் கேளும்: "நீங்களே கூறுங்கள். இந்த குர்ஆன் அல்லாஹ்விடமிருந்து வந்திருந்தும் நீங்கள் அதனை நிராகரித்தால் பகைமையில் வெகுதூரம் சென்று விட்டவனைவிட வழிகெட்டவன் வேறு யார் இருக்க முடியும்?"*

*__53.__ இதுதான் சத்தியம் என்பது அவர்களுக்குத் தெளிவாகும் பொருட்டு (பிரபஞ்சத்தின்) பல பாகங்களிலும், அவர்களுக்குள்ளேயும் விரைவில் நாம் நம் சான்றுகளைக் காட்டுவோம். உம் இறைவன் எல்லாவற்றிற்கும் சாட்சியாளனாக இருக்கின்றான் என்பது உமக்குப் போதுமானதாக இல்லையா? **54.** அறிந்துகொள்ளுங்கள்: தம் இறைவனை அவர்கள் சந்திப்பதைக் குறித்து சந்தேகத்தில் ஆழ்ந்து கிடக்கிறார்கள். அறிந்து கொள்ளுங்கள்: அவன் ஒவ்வொன்றையும் சூழ்ந்தவனாக இருக்கின்றான்.*

## *42. ஆலோசனை (அஷ்ஷூறா)*

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*__1.__ ஹா. மீம். **2.** ஐன். ஸீன். காஃப். **3.** இவ்வாறே உமக்கும் உமக்கு முன் சென்றவர்களுக்கும் யாவற்றையும் மிகைத்த, ஞானம் நிறைந்த இறைவன் அறிவிக்கிறான். **4.** வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அவனுக்கே உரியன. அவன் மிக உயர்ந்தவனாகவும், மகத்துவமிக்கவனாகவும் இருக்கின்றான். **5.** வானங்கள் அவர்களுக்கு மேலிருந்து வெடித்துவிடவும் கூடும். வானவர்கள் தம் இறைவனைப் போற்றிப் புகழ்கிறார்கள். பூமியில் உள்ளவர்களுக்காக மன்னிப்புக் கோருகிறார்கள். அறிந்து கொள்ளுங்கள்: நிச்சயமாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். **6.** அல்லாஹ்வைவிடுத்து வேறு பாதுகாவலர்களை*

ஏற்படுத்திக் கொண்டவர்களை அவன் கண்காணித்துக் கொண்டிருக்கிறான். நீர் அவர்களுக்குப் பொறுப்பாளர் அல்லர்.

7. இவ்வாறே நாம் அரபி மொழியிலான இந்த குர்ஆனை உமக்கு அறிவித்துள்ளோம். (அதன்மூலம்) மக்காவில் உள்ளவர்களையும் அதைச் சூழ உள்ளவர்களையும் (விசாரணைக்காக) ஒன்றுதிரட்டப்படும் நாளைக் குறித்து நீர் எச்சரிக்கை செய்வதற்காகத்தான். அந்நாள் வருவதில் எத்தகைய சந்தேகமுமில்லை. ஒரு பிரிவினர் சொர்க்கத்தில் இருப்பார்கள், ஒரு பிரிவினர் நரகத்தில் இருப்பார்கள்.

8. அல்லாஹ் நாடியிருந்தால் அவர்கள் அனைவரையும் ஒரே சமூகமாக ஆக்கியிருப்பான். ஆயினும் தான் நாடியோரை அவன் தன் கருணையில் நுழையச் செய்கிறான். அக்கிரமக்காரர்களுக்கு பாதுகாவலர்களோ, உதவியாளர்களோ இல்லை. 9. அவனைவிடுத்து வேறு பாதுகாவலர்களை அவர்கள் ஏற்படுத்திக் கொண்டார்களா? அல்லாஹ்வே பாதுகாவலனாவான். அவனே இறந்தவர்களை உயிர்த்தெழச் செய்கிறான். அவன் எல்லாவற்றின்மீதும் பேராற்றலுடையவன். 10. “நீங்கள் எந்த விஷயத்தில் முரண்படுகிறீர்களோ அதன் முடிவு அல்லாஹ்விடமே உள்ளது. அவனே என் இறைவனான அல்லாஹ். அவனையே நான் முழுமையாகச் சார்ந்துள்ளேன். அவன் பக்கமே நான் திரும்புகிறேன்” என்று நீர் கூறுவீராக.

11. அவன் வானங்களையும் பூமியையும் படைத்தவன். அவனே உங்கள் இனத்திலிருந்து உங்களுக்கு இணைகளை ஏற்படுத்தினான். அதன்மூலம் உங்கள் சந்ததிகளைப் பெருகச் செய்தான். கால்நடைகளையும் இணைகளாகப் படைத்தான். அவனுக்கு நிகர் எதுவுமில்லை. அவன் செவியேற்பவனாகவும்,

*பார்ப்பவனாகவும் இருக்கின்றான்.* ***12.*** *வானங்கள் மற்றும் பூமியின் திறவுகோல்கள் அவனிடமே உள்ளன. தான் நாடியோருக்குத் தாராளமாக வாழ்வாதாரம் வழங்குகிறான். தான் நாடியோருக்குக் குறைத்தும் விடுகிறான். அவன் ஒவ்வொரு பொருளையும் நன்கறிந்தவன்.*

***13.*** *அவன் நோவாவுக்கு எதனைக் கட்டளையிட்டானோ அதனையே உங்களுக்கும் மார்க்கமாக ஆக்கியுள்ளான். நாம் உமக்கு அறிவித்ததும் ஆப்ரஹாம், மோசே, இயேசு ஆகியோருக்கு கட்டளையிட்டதும் இதுதான்: "நீங்கள் மார்க்கத்தில் நிலைத்திருங்கள். அதில் முரண்பட்டு விடாதீர்கள்". இணைவைப்பாளர்களை நீர் எதன் பக்கம் அழைக்கிறீரோ அது அவர்களுக்குச் சுமையாக இருக்கிறது. தான் நாடுவோரை அல்லாஹ் தன் பக்கம் தேர்ந்தெடுத்துக் கொள்கிறான். தன் பக்கம் திரும்புவோருக்கு அவன் நேர்வழி காட்டுகிறான்.*

***14.*** *அவர்கள் தங்களிடம் அறிவு வந்தபின்னரும் தங்களுக்கிடையே உள்ள பொறாமையினால்தான் பிளவுபட்டார்கள். 'குறிப்பிட்ட தவணைவரை' எனும் உம் இறைவனின் விதி முந்தியிராவிட்டால் அவர்களிடையே தீர்ப்பளிக்கப்பட்டிருக்கும். நிச்சயமாக அவர்களுக்குப் பின்னர் வேதம் வழங்கப்பட்டவர்கள் குழப்பத்தில் ஆழ்த்தும் சந்தேகத்தில் வீழ்ந்து விட்டார்கள்.*

***15.*** *எனவே நீர் அவன் பக்கமே அழைப்பீராக. உமக்கு ஏவப்பட்டபடி உறுதியாக இருப்பீராக. அவர்களின் மனஇச்சைகளைப் பின்பற்றாதீர். நீர் கூறும்: "அல்லாஹ் அருளிய வேதத்தின்மீது நான் நம்பிக்கை கொண்டேன். உங்களிடையே நீதி செலுத்துமாறு நான் ஏவப்பட்டுள்ளேன். அல்லாஹ்தான் எங்கள் இறைவனும் உங்கள் இறைவனுமாவான். எங்களுக்கு எங்கள் செயல்கள்; உங்களுக்கு*

*உங்கள் செயல்கள். எங்களுக்கும் உங்களுக்கும் இடையே எந்தத் தர்க்கமும் இல்லை. அல்லாஹ் நம் அனைவரையும் ஒன்றுதிரட்டுவான். அவனிடமே (நாம் அனைவரும்) திரும்ப வேண்டும்". 16. அல்லாஹ்வை ஏற்றுக்கொண்ட பின்னரும் அவனைக் குறித்து தர்க்கம் புரிபவர்களின் தர்க்கம் அவர்களின் இறைவனிடத்தில் வீணானதேயாகும். அவர்களின்மீது அவனது கோபம் உண்டாகும். அவர்களுக்குக் கடுமையான வேதனையும் உண்டு.*

*17. வேதத்தையும், (சரியானதையும் தவறானதையும் பிரித்தறிவிக்கும்) நீதித்தராசையும் சத்தியத்துடன் அல்லாஹ்வே அருளினான். உமக்கு என்ன தெரியும்? 'அந்நேரம்' மிகச் சமீபமாக இருக்கலாம். 18. அதனை நம்பாதவர்கள்தான் அதற்காக அவசரப்படுகிறார்கள். நம்பிக்கை கொண்டவர்களோ அதனைக் குறித்து அஞ்சிக் கொண்டிருக்கிறார்கள். அதுதான் சத்தியம் என்பதை அவர்கள் அறிவார்கள். அறிந்துகொள்ளுங்கள். நிச்சயமாக 'அந்நேரம்' குறித்து தர்க்கம் செய்து கொண்டிருப்பவர்கள் தூரமான வழிகேட்டில் வீழ்ந்து விட்டார்கள்.*

*19. தன் அடியார்களுடன் அல்லாஹ் கிருபையோடு இருக்கின்றான். தான் நாடியோருக்கு வாழ்வாதாரம் வழங்குகிறான். அவன் வல்லமை மிக்கவனாகவும், யாவற்றையும் மிகைத்தவனாகவும் இருக்கின்றான். 20. எவர் மறுமையின் விளைச்சலை விரும்புவாரோ அவரது விளைச்சலை நாம் அவருக்கு அதிகரிக்கச் செய்வோம். எவர் இம்மையின் விளைச்சலை விரும்புகிறாரோ அதிலிருந்து சிறிதளவை அவருக்கு வழங்குவோம். ஆனால் மறுமையில் அவருக்கு எவ்விதப் பங்கும் இல்லை.*

*21.* *அல்லாஹ் அனுமதிக்காததை அவை அவர்களுக்கு மார்க்கமாக ஏற்படுத்தி இருக்கின்றனவா? 'தீர்ப்பு' பற்றிய விஷயம் முடிவு செய்யப்பட்டிராவிட்டால் அவர்களிடையே தீர்ப்பளிக்கப்பட்டிருக்கும். நிச்சயமாக அக்கிரமக்காரர்களுக்குத் துன்புறுத்தும் வேதனை இருக்கின்றது.* *22.* *அக்கிரமக்காரர்கள் தாம் சம்பாதித்தது குறித்து பயந்து கொண்டிருப்பதை நீர் காண்பீர். ஆயினும் அது அவர்கள் மீது நிகழக்கூடியதே. நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிந்தவர்கள் சுவனப்பூங்காக்களில் இருப்பார்கள். அவர்களது இறைவனிடத்தில் அவர்கள் விரும்பியவை கிடைக்கும். இதுவே பேரருளாகும்.* *23.* *நம்பிக்கைகொண்டு நற்செயல் புரியும் தன் அடியார்களுக்கு இதையே அல்லாஹ் நற்செய்தியாகக் கூறுகிறான். நீர் கூறும்: "நான் உங்களிடத்தில் எந்தக் கூலியையும் கேட்கவில்லை. ஆயினும் உறவினர்மீது அன்பு கொள்வதைத் தவிர". எவர் நற்செயல் புரிகிறாரோ நாம் அவருக்கு நன்மையை அதிகப்படுத்தி விடுவோம். நிச்சயமாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், நன்றியை ஏற்பவனாகவும் இருக்கின்றான்.*

*24.* *இவர் அல்லாஹ்வின்மீது பொய்யுரைத்து விட்டார் என்று அவர்கள் கூறுகிறார்களா? அல்லாஹ் நாடினால் உம் இதயத்தில் முத்திரையிட்டு விடுவான். அல்லாஹ் அசத்தியத்தை அழிக்கிறான். தன் வார்த்தையால் சத்தியத்தை உறுதிப்படுத்துகிறான். அவன் உள்ளங்களில் உள்ளவற்றையும் நன்கறிந்தவன்.* *25.* *அவனே தன் அடியார்களின் பாவமன்னிப்பை ஏற்றுக்கொள்கிறான். தீமைகளை மன்னித்து விடுகிறான். நீங்கள் செய்பவற்றையும் அவன் அறிகிறான்.* *26.* *நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிபவர்களின் பிரார்த்தனையை அவன் ஏற்றுக்கொள்கிறான். தன் அருளிலிருந்து அவர்களுக்கு இன்னும் அதிகம் வழங்குகிறான். நிராகரிப்பாளர்களுக்குக் கடுந்தண்டனை இருக்கின்றது.*

**27.** தன் அடியார்களுக்கு அல்லாஹ் தாராளமாக வாழ்வாதாரம் வழங்கியிருந்தால் அவர்கள் பூமியில் அட்டூழியம் செய்திருப்பார்கள். ஆயினும் அவன் தன் நாட்டப்படி ஒரு அளவோடு இறக்கி வைக்கிறான். தன் அடியார்களை அவன் நன்கறிந்தவனாகவும் பார்ப்பவனாகவும் இருக்கின்றான். **28.** மக்கள் நம்பிக்கை இழந்த பின்னர் மழையைப் பொழியச்செய்து தன் கருணையை அவனே பரப்புகிறான். அவனே பாதுகாவலன்; புகழுக்குரியவன். **29.** வானங்கள், பூமியைப் படைத்திருப்பதும், அவற்றுக்கிடையில் அவன் உயிரினங்களைப் பரவச் செய்திருப்பதும் அவனது சான்றுகளில் உள்ளவையாகும். அவன் விரும்பும்போது அவற்றை ஒன்றுதிரட்டும் ஆற்றலுடையவனாவான்.

**30.** உங்களுக்கு ஏதேனும் துன்பம் நேர்ந்தால் அது உங்கள் கைகள் சம்பாதித்தவையினால்தான். அவன் பெரும்பாலான தவறுகளை மன்னித்து விடுகிறான். **31.** நீங்கள் பூமியில் இறை வேதனையிலிருந்து தப்பிவிட முடியாது. அல்லாஹ்வைத்தவிர உங்களுக்கு வேறு பாதுகாவலரோ, உதவுபவரோ இல்லை.

**32.** மலைகளைப்போன்று கடலில் செல்லும் கப்பல்களும் அவனது சான்றுகளில் உள்ளவையாகும். **33.** அவன் நாடினால் காற்றை நிறுத்தி விடுவான். அது அதன் மேற்பரப்பில் அப்படியே நின்று விடும். நிச்சயமாகப் பொறுமையுடன் நன்றி செலுத்தும் ஒவ்வொருவருக்கும் இதில் ஏராளமான சான்றுகள் இருக்கின்றன. **34.** அல்லது அவர்களின் தீய செயல்களின் காரணமாக அவற்றை மூழ்கடித்து விடுவான். ஏராளமானோரை மன்னித்தும் விடுவான். **35.** அப்போது நம் சான்றுகளில் தர்க்கம் புரிபவர்கள் தாங்கள் எங்கும் தப்ப முடியாது என்பதை அறிந்துகொள்வார்கள்.

**36.** உங்களுக்கு வழங்கப்பட்டிருப்பதெல்லாம் வெறும் உலக வாழ்வின் இன்பங்கள்தான். ஆயினும் நம்பிக்கைகொண்டு

தம் இறைவனையே முழுமையாகச் சார்ந்திருப்பவர்களுக்கு அல்லாஹ்விடம் இருப்பதே மிகச்சிறந்ததும் நிலையானதுமாகும்.

**37.** அவர்கள் பெரும் பாவங்களையும் மானக்கேடானவற்றையும் விட்டுவிலகிக்கொள்வார்கள். தங்களுக்குக் கோபம் ஏற்பட்டால் மன்னித்து விடுவார்கள். **38.** அவர்கள் தங்கள் இறைவனின் அழைப்பை ஏற்றுக்கொள்வார்கள். தொழுகையைக் கடைப்பிடிப்பார்கள். தங்கள் காரியங்களில் ஒருவருக்கொருவர் ஆலோசனை செய்துகொள்வார்கள். நாம் அவர்களுக்கு வழங்கியவற்றிலிருந்து செலவும் செய்வார்கள். **39.** அவர்கள் தங்கள்மீது அநீதி இழைக்கப்பட்டால் தற்காத்துக் கொள்வார்கள். **40.** தீமைக்குக் கூலி அதேபோன்ற தீமையே. ஆயினும் எவரேனும் மன்னித்து சரிப்படுத்திக் கொண்டால் அவரது கூலி அல்லாஹ்விடம் இருக்கிறது. நிச்சயமாக அவன் அநியாயக்காரர்களை நேசிக்க மாட்டான். **41.** தமக்கு அநீதி இழைக்கப்பட்ட பின்னர் பழிவாங்குபவர்களின்மீது எவ்விதக் குற்றமும் இல்லை. **42.** மக்களின் மீது அநீதி இழைத்து பூமியில் அநியாயமாக வரம்புமீறுபவர்கள்தான் குற்றவாளிகள். அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனை உண்டு. **43.** ஆயினும் எவர் பொறுமையைக் கடைப்பிடித்து மன்னித்து விட்டாரோ - நிச்சயமாக அது துணிவுமிக்க செயலாகும்.

**44.** எவரை அல்லாஹ் வழிதவறச் செய்து விடுகிறானோ அதற்குப்பின் அவருக்கு வேறு பாதுகாவலர் இல்லை. அநியாயக்காரர்கள் வேதனையைக் காணும்போது "திரும்பிச் செல்வதற்கு ஏதேனும் வழி உண்டா?" என்று கேட்பதை நீங்கள் காண்பீர். **45.** அவர்கள் நரகத்தின் முன் நிறுத்தப்படுவதையும் நீங்கள் காண்பீர். அவர்கள் அவமானத்தால் தலைகுனிந்தவர்களாகக் கடைக்கண்ணால் பார்த்துக் கொண்டிருப்பார்கள். அப்போது நம்பிக்கையாளர்கள் "மறுமை நாளில் தங்களையும்

தங்கள் குடும்பத்தையும் இழந்தவர்கள்தான் உண்மையில் நஷ்டமடைந்தவர்கள்" என்று கூறுவார்கள். அறிந்து கொள்ளுங்கள்: அக்கிரமக்காரரர்கள் நிலையான வேதனையில் வீழ்ந்திருப்பார்கள். 46. அல்லாஹ்வுக்கு எதிராக அவர்களுக்கு உதவிபுரியும் உதவியாளர்கள் எவரும் இருக்க மாட்டார்கள். அல்லாஹ் யாரை வழிதவறச் செய்துவிடுகிறானோ அவருக்கு எந்த வழியும் இல்லை.

47. அல்லாஹ்விடமிருந்து தப்பிக்க முடியாத அந்தநாள் வருவதற்கு முன்னர் நீங்கள் உங்கள் இறைவனின் அழைப்பை ஏற்றுக் கொள்ளுங்கள். அந்நாளில் உங்களுக்கு எந்தப் புகலிடமும் இருக்காது. உங்களால் எதையும் மறுக்க முடியாது. 48. அவர்கள் புறக்கணித்தால் - நாம் அவர்கள்மீது உம்மைக் கண்காணிப்பாளராக்கி அனுப்பவில்லை. எடுத்துரைப்பதுதான் உம் மீதுள்ள பொறுப்பாகும். நாம் மனிதனுக்கு நம்மிடமிருந்து ஏதேனும் அருளை சுவைக்கச் செய்தால் அதனைக்கொண்டு அவன் மகிழ்ச்சியடைகிறான். அவன் செய்த தீவினையினால் அவனுக்கு ஏதேனும் துன்பம் நேர்ந்துவிட்டால், நிச்சயமாக மனிதன் நன்றிகெட்டவனாகி விடுகிறான்.

49. வானங்கள் மற்றும் பூமியின் ஆட்சியதிகாரம் அவனுக்கே உரியது. தான் நாடுவதை அவன் படைக்கிறான். தான் நாடுவோருக்குப் பெண் மக்களையும் தான் நாடுவோருக்கு ஆண் மக்களையும் வழங்குகிறான். 50. அல்லது ஆண் மக்களையும் பெண் மக்களையும் சேர்த்து வழங்குகிறான். தான் நாடுவோரை மலடாகவும் ஆக்குகிறான். நிச்சயமாக அவன் நன்கறிந்தவன்; பேராற்றலுடையவன்.

51. எந்த மனிதனும் அல்லாஹ்வுடன் நேரிடையாகப் பேச சக்திபெற மாட்டான். ஆயினும் வஹியின் மூலமோ, திரைக்கு அப்பாலிருந்தோ, ஒரு தூதரை அனுப்பி அவன் நாடுவதை அவன்

கட்டளைப்படி அறிவிப்பதன் மூலமாகவோ (அவன் பேசினாலே) தவிர . அவன் மிக உயர்ந்தவன்; ஞானம் மிக்கவன். 52. இவ்வாறே நம் கட்டளையின் வாயிலாக குர்ஆனை உமக்கு அறிவித்தோம். வேதம் என்றால் என்ன, நம்பிக்கை என்றால் என்ன என்பதை நீர் அறியாதிருந்தீர். ஆயினும் அதனை நாம் ஒளியாக்கி நம் அடியார்களில் நாம் நாடியோருக்கு நேர்வழி காட்டுகிறோம். நிச்சயமாக நீர் நேரான வழியைக் காட்டுகிறீர். 53. அது அல்லாஹ்வின் வழியாகும். வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அவனுக்கே உரியன. அறிந்துகொள்ளுங்கள், அவனிடமே அனைத்து விவகாரங்களும் திரும்புகின்றன.

## 43. அலங்காரம் (அஸ்ஸுக்ருஃப்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

1. ஹா. மீம். 2. தெளிவான இவ்வேதத்தின் மீது சத்தியமாக. 3. நீங்கள் புரிந்துகொள்ளும் பொருட்டு இதனை நாம் அரபி மொழியிலுள்ள குர்ஆனாக ஆக்கியுள்ளோம். 4. நிச்சயமாக இது மூல ஏட்டில் நம்மிடம் உள்ளது. இது மிக உயர்வானதும் ஞானம் மிக்கதுமாகும்.

5. நீங்கள் வரம்புமீறும் மக்களாக இருப்பதால், உங்களை விட்டும் இந்த அறிவுரை கூறுவதை விட்டும் உம்மை புறக்கணித்து விடுவோமா என்ன? 6. முன்சென்றோரிடம் நாம் எத்தனையோ தூதர்களை அனுப்பியுள்ளோம். 7. அவர்களிடம் வந்த எந்தத் தூதரையும் அவர்கள் பரிகாசம் செய்யாமல் இருந்ததில்லை. 8. அவர்களைவிட பலம் வாய்ந்தவர்களையும் நாம் அழித்து விட்டோம். முன்சென்ற மக்களின் உதாரணங்கள் கடந்து விட்டன.

9. வானங்களையும் பூமியையும் படைத்தவன் யார் என்று நீங்கள் அவர்களிடம் கேட்டால் “யாவற்றையும் மிகைத்தவனும்

*நன்கறிந்தவனுமாகிய அல்லாஹ்தான் படைத்தான்'' என்று நிச்சயம் அவர்கள் கூறுவார்கள். **10.** அவனே உங்களுக்காகப் பூமியை விரிப்பாக்கினான். நீங்கள் விரும்பிய இடத்தை அடையும் பொருட்டு அதில் பாதைகளையும் ஏற்படுத்தினான். **11.** அவனே வானத்திலிருந்து ஒரு அளவோடு மழையை இறக்கினான். அதன்மூலம் இறந்த பூமியை நாம் உயிர்ப்பிக்கின்றோம். இவ்வாறே நீங்கள் வெளிப்படுத்தப்படுவீர்கள். **12.** அவன் எல்லாவகையான (உயிரினங்களையும்) படைத்தான். உங்களுக்காகக் கப்பல்களையும் நீங்கள் ஏறிச்செல்லும் கால்நடைகளையும் உண்டாக்கினான். **13.** அது நீங்கள் அவற்றின் முதுகுகளின்மீது உறுதியாக ஏறி அமர்ந்து உங்கள் இறைவனின் அருட்கொடையை நினைவுகூர்ந்து "அவன் தூய்மையானவன். அவனே எங்களுக்கு இதனை வசப்படுத்தித் தந்தான். நாங்கள் இதற்கு ஆற்றல் பெற்றவர்களாக இருக்கவில்லை. **14.** நிச்சயமாக நாங்கள் எங்கள் இறைவனிடம் திரும்பச் செல்பவர்களாக இருக்கின்றோம்" என்று கூறுவதற்காகத்தான்.*

*__15.__ அவர்கள் இறைவனது அடியார்களில் சிலரை அவனது ஒரு அம்சமாக ஆக்கி விட்டார்கள். நிச்சயமாக மனிதன் அப்பட்டமாக நன்றிகெட்டவனாக இருக்கிறான். **16.** தான் படைத்தவற்றில் இறைவன் தனக்கெனப் பெண் மக்களை ஏற்படுத்திக்கொண்டு உங்களுக்கு ஆண் மக்களை வழங்கி விட்டானா? **17.** கருணையாளனுடன் எவர்களையெல்லாம் இவர்கள் தொடர்புபடுத்திக் கூறினார்களோ அவர்களைக்கொண்டு இவர்களில் யாருக்கேனும் நற்செய்தி கூறப்பட்டால் அவரது முகம் கறுத்து துக்கம் நிரம்பி விடுகிறது. **18.** அலங்காரத்தில் வளர்க்கப்பட்டு, தன் வாதத்தை தெளிவாக எடுத்துக்கூற முடியாதவர்களையா (இவர்கள் அவனுக்கு சந்ததிகளாக்குகிறார்கள்)?. **19.** கருணையாளனின் அடியார்களான வானவர்களை இவர்கள் பெண்களாக ஆக்கி விட்டார்கள். அவர்கள் படைக்கப்பட்டபோது இவர்கள் அங்கு*

இருந்தார்களா? அவர்களின் சாட்சியம் பதிவு செய்யப்பட்டு அவர்கள் விசாரிக்கப்படுவார்கள்.

*20.* "கருணைமிக்க இறைவன் நாடியிருந்தால் நாங்கள் அவர்களை வணங்கியிருக்க மாட்டோம்" என்று அவர்கள் கூறுகிறார்கள். அவர்களுக்கு இது குறித்து எந்த அறிவும் இல்லை. அவர்கள் பொய்யுரைக்கிறார்கள். *21.* அவர்களுக்கு நாம் ஏதேனும் வேதத்தை வழங்கியுள்ளோமா? அவர்கள் அதனை உறுதியாகப் பற்றிப் பிடித்துள்ளார்களா? *22.* மாறாக அவர்கள், "நாங்கள் எங்கள் முன்னோர்களை ஒரு வழியில் கண்டோம். அவர்களுக்குப் பின்னால் நாங்கள் சென்று கொண்டிருக்கிறோம்" என்று கூறுகிறார்கள். *23.* இவ்வாறே உமக்கு முன்னர் எந்த ஊரில் நாம் எச்சரிக்கை செய்பவரை அனுப்பினாலும் அங்குள்ள சுகபோகிகள் "நாங்கள் எங்கள் முன்னோர்கள் ஒரு வழியில் செல்வதைக் கண்டோம். அவர்களையே நாங்கள் பின்பற்றிச் செல்கிறோம்" என்றுதான் கூறினார்கள். *24.* "உங்கள் முன்னோர்கள் எந்த வழியில் சென்றதைக் கண்டீர்களோ அதைவிடச் சரியான வழியை நான் காட்டினாலுமா?" என்று அவர் கேட்டார். அதற்கு அவர்கள், "உங்களின் தூதுச் செய்தியை நாங்கள் நிராகரிக்கிறோம்" என்று கூறினார்கள். *25.* எனவே நாம் அவர்களைத் தண்டித்தோம். நிராகரித்தோரின் கதி என்னவாயிற்று என்பதைப் பாரும்.

*26.* ஆப்ரஹாம் தம் தந்தையிடமும், சமூகத்திடமும், "நீங்கள் வணங்குபவற்றைவிட்டும் நான் விலகிக் கொண்டேன். *27.* ஆயினும் என்னைப் படைத்தவனை (நான் வணங்குவேன்). நிச்சயமாக அவனே எனக்கு வழிகாட்டுவான்" என்று கூறினார். *28.* இந்த வார்த்தையைத்தான் ஆப்ரஹாம் தம் சந்ததிகளிடம் விட்டுச் சென்றார், அவர்கள் நம் பக்கம் திரும்ப வேண்டும் என்பதற்காக. *29.* ஆயினும் சத்தியமும், தெளிவுபடுத்தும் தூதரும் அவர்களிடம்

வரும்வரை நாம் அவர்களுக்கும் அவர்களின் முன்னோர்களுக்கும் உலகியல் வசதிகளை வழங்கினோம். *30.* ஆனால் சத்தியம் அவர்களிடம் வந்தபோது "இது சூனியமே. நாங்கள் இதனை நிராகரிக்கிறோம்'' என்று கூறினார்கள்.

*31.* "இந்தக் குர்ஆன் இவ்விரு ஊர்களிலுள்ள ஒரு பெரிய மனிதருக்கு அருளப்பட்டிருக்கக் கூடாதா?" என்று அவர்கள் கேட்கிறார்கள். *32.* உம் இறைவனின் அருட்கொடையை இவர்கள்தான் பங்கிடுகிறார்களா? உலக வாழ்வில் நாம்தான் அவர்களிடையே அவர்களின் வாழ்வாதாரத்தைப் பங்கிட்டுள்ளோம், அவர்களில் சிலர் வேறு சிலரைக்கொண்டு ஊழியத்தைப் பெற்றுக் கொள்வதற்காக சிலரை, சிலரைவிட உயர்த்தியுள்ளோம். உம் இறைவனின் அருட்கொடை அவர்கள் சேர்த்து வைப்பதைவிடச் சிறந்ததாகும். *33-35.* 'மனிதர்கள் அனைவரும் (நிராகரித்து) ஒரே சமூகமாகி விடுவார்கள்' எனும் நிலை இல்லாதிருந்தால் கருணைமிக்க இறைவனை நிராகரிப்போரின் வீட்டு முகடுகளையும், ஏறிச்செல்லும் படிகளையும் அவர்கள் வீட்டுக் கதவுகளையும், அவர்கள் சாய்கின்ற கட்டில்களையும் வெள்ளியாலும் தங்கத்தாலும் ஆக்கியிருப்போம். ஆனால் இவையனைத்தும் இவ்வுலக வாழ்வின் இன்பங்கள்தான். ஆயினும் மறுமையோ உம் இறைவனிடத்தில் இறையச்சமுடையவர்களுக்கே உரியதாகும்.

*36.* எவர் கருணைமிக்க இறைவனின் அறிவுரையைவிட்டும் அலட்சியமாக இருக்கிறோரோ அவர்மீது நாம் ஒரு சாத்தானை ஏவி விடுகிறோம். அவன் அவருக்கு நண்பனாகி விடுகிறான். *37.* அந்த சாத்தான்கள் இவர்களை நேர்வழியை விட்டும் தடுத்துக் கொண்டிருப்பார்கள். ஆயினும் இவர்களோ தாம் நேர்வழியில் இருப்பதாக எண்ணிக்கொள்வார்கள். *38.* இறுதியில் அவர் நம்மிடம் வந்து சேரும்போது "அந்தோ! எனக்கும் உனக்கும்

இடையே கிழக்கிற்கும் மேற்கிற்கும் இடையேயுள்ள தொலைவு இருந்திருக்கக்கூடாதா! எவ்வளவு மோசமான நண்பன் நீ!" என்று கூறுவார். 39. அப்போது அவர்களிடம், "நீங்கள் அக்கிரமம் புரிந்துவிட்டதனால் இந்தப் பேச்சு இன்று உங்களுக்கு எந்தப் பயனையும் அளிக்காது. நீங்கள் வேதனையில் பங்காளிகளாவீர்கள்" என்று கூறப்படும்.

40. உங்களால் செவிடர்களைச் செவியேற்கச் செய்ய முடியுமா? அல்லது குருடர்களுக்கும் வெளிப்படையான வழிகேட்டில் வீழ்ந்து கிடப்பவர்களுக்கும் நேர்வழிகாட்ட முடியுமா? 41. நாம் உங்களை (உலகிலிருந்து) எடுத்துக் கொண்டாலும் அவர்களைத் தண்டித்தே தீருவோம். 42. அல்லது நாம் அவர்களுக்கு வாக்களித்த வேதனையை நீங்கள் காணும்படிச் செய்வோம். நிச்சயமாக நாம் அவர்களின்மீது ஆற்றல் பெற்றவர்களாவோம். 43. ஆகவே உங்களுக்கு அறிவிக்கப்படுவதை பலமாகப் பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள். நிச்சயமாக நீங்கள் நேரான வழியில் இருக்கின்றீர்கள். 44. இது உங்களுக்கும் உங்கள் சமூகத்திற்கும் அறிவுரையாகும். விரைவில் நீங்கள் விசாரிக்கப்படுவீர்கள். 45. நாம் உங்களுக்கு முன்னர் அனுப்பிய நம் தூதர்களிடம் கேட்டுப்பாருங்கள்: "கருணையாளனைத்தவிர வணங்கப்படுவதற்கு வேறு தெய்வங்களை நாம் நியமித்திருந்தோமோ என்ன?".

46. நாம் மோசேயை பாரோவிடமும், அவனது பிரமுகர்களிடமும் நம் சான்றுகளுடன் அனுப்பினோம். அவர், "நான் அகிலங்களின் இறைவனால் அனுப்பப்பட்ட தூதராவேன்" என்று கூறினார். 47. அவர் நம் சான்றுகளுடன் அவர்களிடம் வந்தபோது அவற்றைக்கண்டு அவர்கள் சிரித்தார்கள். 48. நாம் அவர்களுக்குக் காட்டிய ஒவ்வொரு சான்றும் முந்தைய சான்றினைவிட பெரியதாகவே இருந்தது. அவர்கள் நம்பக்கம் திரும்பும்பொருட்டு வேதனையால் அவர்களைத் தண்டித்தோம்.

*49.* “சூனியக்காரரே! அவன் உமக்களித்துள்ள வாக்குறுதியின் பேரில் எங்களுக்காகப் பிரார்த்தனை செய்யும். நிச்சயமாக நாங்கள் நேர்வழி பெற்று விடுவோம்” என்று அவர்கள் கூறினார்கள். *50.* அவர்களை விட்டும் நாம் வேதனையை நீக்கியபோது அவர்கள் தம் வாக்குறுதியை முறித்துக் கொண்டார்கள்.

*51.* பாரோ தன் சமூகத்தவரிடம், “என் சமூகமே! எகிப்தின் அரசாட்சி என்னுடையதல்லவா? இந்த ஆறுகள் என் கட்டுப்பாட்டில்தானே ஓடிக்கொண்டிருக்கிறது? நீங்கள் பார்க்க மாட்டீர்களா? *52.* எதையும் தெளிவாக பேச முடியாத, இழிவான இவரைவிட நான் சிறந்தவனில்லையா? *53.* இவருக்கு ஏன் தங்கக் காப்புகள் அணிவிக்கப்படவில்லை? அல்லது வானவர்கள் இவருடன் கூட்டமாக வர வேண்டாமா?” என்று கேட்டான். *54.* இவ்வாறு அவன் தன் சமூகத்தினரை மூடர்களாகக் கருதினான். அவர்களும் அவனுக்குக் கட்டுப்பட்டார்கள். அவர்கள் குற்றம் புரியும் மக்களாகவே இருந்தார்கள். *55.* பின்னர் அவர்கள் நம்மைக் கோபமடையச் செய்தபோது நாம் அவர்களைத் தண்டித்து அவர்கள் அனைவரையும் மூழ்கடித்து விட்டோம். *56.* நாம் அவர்களைக் கடந்தகாலக் கதைகளாகவும், வரக்கூடியவர்களுக்குப் படிப்பினையாகவும் ஆக்கி விட்டோம்.

*57.* மரியாளின் மகன் உதாரணமாகக் கூறப்பட்டபோது உம் சமூகத்தினர் நகைத்தனர். *58.* “எங்கள் தெய்வங்கள் சிறந்தவையா? அல்லது அவரா?” என்று அவர்கள் கேட்டனர். இந்த உதாரணத்தை அவர்கள் வீண்விவாதத்திற்காகவே கூறுகிறார்கள். அவர்கள் குதர்க்கம் செய்யும் மக்களேயாவர். *59.* இயேசு நாம் அருள் புரிந்த ஒரு அடியாராவார். இஸ்ராயிலீன் மக்களுக்கு நாம் அவரை ஓர் உதாரணமாக்கினோம். *60.* நாம் நாடியிருந்தால் உங்களுக்குப் பதிலாக வானவர்களை ஏற்படுத்தி பூமியில் அவர்களை

சந்ததிகளாக ஆக்கியிருப்போம். **61.** நிச்சயமாக அவர் மறுமையின் ஓர் அடையாளமாக இருக்கின்றார். அது குறித்து நீங்கள் சந்தேகம் கொள்ள வேண்டாம். என்னையே பின்பற்றுங்கள். இதுவே நேரான வழியாகும். **62.** சாத்தான் இதனைவிட்டு உங்களைத் தடுத்துவிட வேண்டாம். நிச்சயமாக அவன் உங்களுக்கு வெளிப்படையான பகைவனாவான்.

**63.** இயேசு தெளிவான சான்றுகளைக் கொண்டுவந்தபோது, "நீங்கள் முரண்பட்டுக் கொண்டிருக்கும் சில விஷயங்களைத் தெளிவுபடுத்துவதற்காக நான் உங்களிடம் ஞானத்தைக் கொண்டு வந்துள்ளேன். ஆகவே அல்லாஹ்வை அஞ்சுங்கள். எனக்குக் கீழ்ப்படியுங்கள். **64.** நிச்சயமாக அல்லாஹ்தான் எனக்கும் உங்களுக்கும் இறைவனாவான். எனவே நீங்கள் அவனையே வணங்குங்கள். இதுவே நேரான வழியாகும்" என்று கூறினார். **65.** ஆயினும் அந்த கூட்டத்தினர் தங்களிடையே முரண்பட்டுக் கொண்டனர். அநியாயக்காரர்களுக்கு துன்புறுத்தும் வேதனையுடைய நாளில் கேடுதான்.

**66.** அவர்கள் அறியாதிருக்கும் நிலையில் திடீரென 'அந்நேரம்' (மறுமைநாள்) வருவதைத்தான் எதிர்பார்க்கிறார்கள். **67.** இறையச்சமுடையவர்களைத்தவிர நண்பர்கள் அனைவரும் அந்நாளில் ஒருவருக்கொருவர் பகைவர்களாகி விடுவார்கள். **68.** என் அடியார்களே! இன்று உங்களுக்கு எவ்வித அச்சமும் இல்லை. நீங்கள் கவலைப்படவும் மாட்டீர்கள். **69.** அவர்கள் நம் வசனங்களின்மீது நம்பிக்கைகொண்டு கீழ்ப்படிந்தவர்களாக இருந்தார்கள். **70.** நீங்களும் உங்கள் மனைவியரும் மகிழ்ச்சியாக சொர்க்கத்தில் நுழைந்து விடுங்கள் (என்று கூறப்படும்). **71.** தங்கத் தட்டுகளும் கிண்ணங்களும் அவர்களிடையே சுற்றிக் கொண்டேயிருக்கும். மனதிற்கு உகந்த, கண்களுக்கு குளிர்ச்சியான அத்தனையும் அங்கு இருக்கும். நீங்கள் அங்கே என்றென்றும்

*தங்கியிருப்பீர்கள். **72.** உங்களுடைய செயல்களின் காரணமாக உங்களுக்குச் சொந்தமாக்கப்பட்ட சொர்க்கம் இதுதான். **73.** உங்களுக்காக இதில் உண்ணக்கூடிய ஏராளமான பழங்கள் இருக்கின்றன (என்று கூறப்படும்).*

***74.** நிச்சயமாக குற்றவாளிகள் நரகவேதனையில் என்றென்றும் வீழ்ந்து கிடப்பார்கள். **75.** அவர்களின் வேதனை குறைக்கப்பட மாட்டாது. அங்கு அவர்கள் நிராசையடைந்து விடுவார்கள். **76.** நாம் அவர்கள்மீது அநீதி இழைக்கவில்லை. ஆனால் அவர்கள்தான் அநியாயக்காரர்களாக இருந்தார்கள். **77.** "நரகத்தின் காவலரே! உம் இறைவன் எங்களை அழித்து விடட்டும்'' என்று கதறுவார்கள். அதற்கு அவர், "இவ்வாறே நீங்கள் வீழ்ந்து கிடக்க வேண்டியதாக!" என்று கூறுவார். **78.** உங்களிடம் நாங்கள் சத்தியத்தைக் கொண்டுவந்தோம். ஆனால் உங்களில் பெரும்பாலோர் சத்தியத்தை வெறுப்பவர்களாகவே இருந்தீர்கள். **79.** அவர்கள் ஏதேனும் ஒரு திட்டம் தீட்டியுள்ளார்களா? நிச்சயமாக நாமும் ஒரு திட்டம் தீட்டியுள்ளோம். **80.** அவர்களின் இரகசியப் பேச்சுகளையும் சதியாலோசனைகளையும் நாம் செவியுறுவதில்லை என்று அவர்கள் எண்ணிக் கொண்டார்களா? இல்லை. நிச்சயமாக அவர்களிடத்தில் இருக்கும் நம் தூதர்கள் (வானவர்கள்) பதிவு செய்து கொண்டிருக்கிறார்கள்.*

***81.** நீர் கூறும்: "கருணைமிக்க இறைவனுக்கு சந்ததி இருந்தால் அவர்கள் அனைவரையும்விட வணங்குவோரில் நானே முதன்மையானவனாக இருப்பேன்". **82.** வானங்கள் மற்றும் பூமியின் இறைவனும் அரியணையின் அதிபதியுமாகிய அவன் அவர்கள் கூறுவதைவிட்டும் தூய்மையானவன். **83.** ஆகவே அவர்களை விட்டுவிடுங்கள். அவர்களுக்கு வாக்களிக்கப்பட்ட அந்நாளைச் சந்திக்கும்வரை அவர்கள் வீண்விவாதங்களில் மூழ்கியிருக்கட்டும்; விளையாடட்டும்.*

84. அவனே வானத்திலும் இறைவன்; பூமியிலும் இறைவன். அவன் ஞானம் மிக்கவன்; நன்கறிந்தவன். 85. அவன் பெரும் பாக்கியமுடையவன். வானங்கள், பூமி மற்றும் அவையிரண்டிற்கிடையே உள்ளவற்றின் ஆட்சியதிகாரம் அவனுக்கே உரியது. மறுமைபற்றிய அறிவு அவனிடமே உள்ளது. அவனிடமே நீங்கள் திரும்ப கொண்டுவரப்படுவீர்கள்.

86. அவனைவிடுத்து அவர்கள் எவரை அழைக்கிறார்களோ அவர்கள் பரிந்து பேசும் ஆற்றல் பெற்றவர்கள் அல்லர். ஆயினும் சத்தியத்தை அறிந்து சாட்சி கூறுவோரைத் தவிர. 87. அவர்களைப் படைத்தது யார் என்று நீர் அவர்களிடம் கேட்டால் 'அல்லாஹ்' என்றே அவர்கள் கூறுவார்கள். பிறகு எங்கே அவர்கள் வழிதவறிச் செல்கிறார்கள்?. 88. "என் இறைவா! இவர்கள் நம்பிக்கைகொள்ளாத மக்களாக இருக்கிறார்கள்" என்று தூதர் கூறினார். 89. எனவே அவர்களைச் சகித்துக் கொள்ளும். 'உங்கள்மீது அமைதி உண்டாகட்டும்', என்று கூறும். விரைவில் அவர்கள் அறிந்து கொள்வார்கள்.

## 44. புகை (அத்துகான்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

1. ஹா. மீம். 2. தெளிவான இவ்வேதத்தின் மீது சத்தியமாக. 3. நாம் இதனை பாக்கியம்மிக்க ஓர் இரவில் அருளினோம். நிச்சயமாக நாம் எச்சரிக்கை செய்வோராக இருக்கின்றோம். 4. ஞானம்நிறைந்த எல்லா விவகாரங்களும் நம் கட்டளையினால் அன்றிரவு உறுதி செய்யப்படுகின்றன. 5. நாம் தூதர்களை அனுப்புவோராக இருந்தோம். 6. அது உம் இறைவனின் கருணையாகும். அவன் செவியேற்பவனாகவும் நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். 7. அவன் வானங்கள், பூமி மற்றும் அவையிரண்டிற்கும் இடையிலுள்ளவற்றின் இறைவன், நீங்கள் உறுதியான நம்பிக்கையுடையோராயின்.

*8.* அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. அவனே உயிர்ப்பிக்கிறான், மரணிக்கச் செய்கிறான். உங்களுக்கும் உங்களுக்கு முன்வாழ்ந்த மூதாதையர்களுக்கும் அவனே இறைவன்.

*9.* ஆயினும் அவர்கள் சந்தேகத்தில் வீழ்ந்து, விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். *10.* ஆகவே வானம் தெளிவான புகையைக் கொண்டுவரும் அந்நாளை எதிர்பார்ப்பீராக. *11.* அது மக்களை மூடிக்கொள்ளும். அது துன்புறுத்தும் வேதனையாகும். *12.* (அந்நாளில் மக்கள் இறைவனிடம்) "எங்கள் இறைவா! எங்களைவிட்டு வேதனையை அகற்றுவாயாக. நிச்சயமாக நாங்கள் நம்பிக்கை கொள்கிறோம்" என்று கூறுவார்கள். *13.* அவர்களுக்கு அறிவுரை எவ்வாறு பயனளிக்கும்? தெளிவாக எடுத்துரைக்கும் தூதர் அவர்களிடம் வந்து விட்டார். *14.* ஆயினும் அவர்கள் அவரைப் புறக்கணித்து 'இவர் ஒரு பயிற்றுவிக்கப்பட்ட பைத்தியக்காரர்' என்று கூறினார்கள். *15.* நாம் சிறிதுநேரம் வேதனையை அகற்றி விடுகிறோம். அப்போது நீங்கள் மீண்டும் முந்தைய நிலைக்கே வந்துவிடுவீர்கள். *16.* அவர்களை நாம் கடுமையாக பிடிக்கும் நாளில் நிச்சயம் தண்டிப்போம்.

*17.* நாம் இவர்களுக்கு முன்னர் பாரோவின் சமூகத்தைச் சோதித்தோம். அவர்களிடம் கண்ணியமான ஒரு தூதர் வந்தார். *18.* "அல்லாஹ்வின் அடியார்களை என்னிடம் ஒப்படைத்து விடுங்கள். நான் உங்களுக்கு நம்பிக்கைக்குரிய தூதராவேன். *19.* அல்லாஹ்வுக்கு எதிராக வரம்பு மீறாதீர்கள். நான் உங்களிடம் தெளிவான ஆதாரத்தைக் கொண்டுவந்துள்ளேன். *20.* நீங்கள் என்னைக் கல்லெறிந்து கொல்லாதிருக்கும் பொருட்டு என் இறைவனும் உங்கள் இறைவனுமாகிய அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறேன். *21.* நீங்கள் என்மீது நம்பிக்கை கொள்ளவில்லையாயின் என்னை விட்டு விலகிவிடுங்கள்" என்று அவர் கூறினார்.

*22.* பின்னர் மோசே தம் இறைவனிடம் ‘இவர்கள் குற்றம் புரியும் சமூகமாக இருக்கிறார்கள்’ என்று முறையிட்டார். *23.* “என் அடியார்களை இரவோடு இரவாக அழைத்துச் செல்லுங்கள். நிச்சயமாக நீங்கள் பின்தொடரப்படுவீர்கள். *24.* கடலினை பிளவுபட்ட அதே நிலையிலேயே விட்டுவிடும். அவர்கள் மூழ்கடிக்கப்படுவார்கள்” (என்று நாம் கூறினோம்). *25.* அவர்கள் எத்தனையோ தோட்டங்களையும் நீரூற்றுகளையும், *26.* வயல்களையும் உயர்தரமான இல்லங்களையும் *27.* அவர்கள் அனுபவித்த வாழ்க்கை வசதிகளையும் விட்டுச் சென்றுவிட்டார்கள். *28.* அவ்வாறே ஆனது. நாம் வேறு சமூகத்தை அவற்றிற்கு வாரிசாக்கினோம். *29.* அவர்களுக்காக வானமும், பூமியும் அழவில்லை. அவர்களுக்கு அவகாசமும் அளிக்கப்படவில்லை.

*30.* இழிவுமிக்க வேதனையிலிருந்து நாம் இஸ்ராயீலின் மக்களைக் காப்பாற்றினோம். *31.* அதாவது பாரோவிடமிருந்து! நிச்சயமாக அவன் ஆணவம் கொண்டவனாக, வரம்பு மீறியவனாக இருந்தான். *32.* நாம் (அவர்களைப் பற்றி) அறிந்தே உலக மக்கள் அனைவரிலும் அவர்களைத் தேர்ந்தெடுத்தோம். *33.* நாம் அவர்களுக்குத் தெளிவான அருட்கொடைகள் இருந்த சான்றுகளை அளித்தோம்.

*34.* இவர்கள் கூறுகிறார்கள்: *35.* “எங்களின் முதல் மரணத்தைத் தவிர வேறெதுவும் இல்லை. நாங்கள் மீண்டும் எழுப்பப்பட மாட்டோம்'', என்று. *36.* நீங்கள் உண்மையாளர்களானால் எங்கள் முன்னோர்களைக் கொண்டுவாருங்கள்” என்று இவர்கள் கூறுகிறார்கள். *37.* இவர்கள் சிறந்தவர்களா? அல்லது ‘துப்பஉ’ சமூகமும் அவர்களுக்கு முன் இருந்தவர்களுமா? நாம் அவர்களை அழித்து விட்டோம். ஏனெனில் அவர்கள் பாவம் செய்தவர்களாக இருந்தார்கள்.

*38. வானங்களையும் பூமியையும், அவையிரண்டிற்கும் இடையில் உள்ளவற்றையும் நாம் விளையாட்டிற்காகப் படைக்கவில்லை. 39. அவற்றை நாம் நோக்கத்துடன் படைத்துள்ளோம். ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் அறிவதில்லை. 40. நிச்சயமாகத் தீர்ப்பு நாள் அவர்கள் அனைவருக்கும் முடிவு செய்யப்பட்ட நேரமாகும். 41. அந்நாளில் எந்த நண்பரும் தம் நெருங்கிய நண்பருக்கு பயனளிக்க மாட்டார். அவர்களுக்கு எவ்வித உதவியும் கிடைக்காது. 42. ஆயினும் அல்லாஹ் கருணை காட்டியவர்களைத் தவிர! நிச்சயமாக அவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்*.*

---

*வானம் மற்றும் பூமி ஆகியவற்றைக் குறித்து, ஏன் முழு பிரபஞ்சத்தைக் குறித்தும் ஒருவர் சிந்திப்பாரேயானால் குறிப்பிட்ட நிச்சயமானதொரு நோக்கத்திற்காக அவை படைக்கப்பட்டுள்ளன என்பது தெளிவாகத் தெரியவரும். அது மட்டும் அப்படி இல்லை என்றால் இந்த உலகில் அற்புதமான கலாச்சாரங்களை மனிதன் உருவாக்கி இருப்பது என்பது இயலாத ஒன்றாகவே இருந்திருக்கும். பிரபஞ்சத்தின் ஒட்டுமொத்த செயல்பாடு பொருள் பொதிந்ததாக இருப்பது, அதன் முடிவும் பொருள் பொதிந்ததாகவும் பயனுள்ள விதத்திலுமே இருக்கும் என்பதைக் காட்டுவதாக உள்ளது. பிரபஞ்சத்தின் முடிவு வேறுவிதமாக இருக்கும் என்பது கற்பனை செய்து கூடப் பார்க்க இயலாத ஒன்றாகும். பிரபஞ்சத்தின் முடிவு என்பது மறுமை வாழ்க்கையின் தொடக்கமாகவே இருக்கும். மேலும் மரணத்திற்குப் பின்னரான மறுமை வாழ்க்கை என்பதில் நம்பிக்கை கொள்வது பிரபஞ்ச ரீதியில் பொருள் உள்ளது என்பதன் தொடர்ச்சியே ஆகும். இந்த உலகின் தற்போதைய நிலை சோதனைக்கானதேயாகும். எனவே இந்த உலகின் பொருள் பொதிந்த தன்மையில் ஒவ்வொருவருக்கும் பங்கு உண்டு. ஆனால் இறைவனின் பார்வையில் தகுதியானவரே மரணத்திற்குப் பின்னரான மறுமை வாழ்க்கையின் பொருள் பொதிந்த தன்மையில் தங்கள் பங்கைப் பெறுவார்கள்.

43. நிச்சயமாக ‘ஜக்கூம்’ எனும் மரம்தான் 44. பாவிகளின் உணவாகும். 45. அது எண்ணெயின் கசடைப் போலிருக்கும். அது வயிற்றுக்குள் கொதிக்கும், 46. வெந்நீர் கொதிப்பதைப் போல. 47. “அவனைப் பிடித்து நரகத்தின் நடுப்பகுதிக்கு இழுத்துச் செல்லுங்கள். 48. பின்னர் அவன் தலை மீது கொதிக்கும் நீரைக்கொட்டி வேதனைப்படுத்துங்கள்”. 49. “சுவைத்துப் பார். நீ வல்லமைமிக்கவனும் கண்ணியமுடையவனும் அல்லவா?. 50. இதைக் குறித்துதான் நீ சந்தேகம் கொண்டிருந்தாய் (என்று கூறப்படும்)”.

51. நிச்சயமாக இறையச்சமுடையோர் அமைதியான இடத்தில் இருப்பார்கள். 52. சோலைகளிலும் நீரூற்றுகளிலும், 53. இலேசான, கனமான பட்டாடைகளை அணிந்துகொண்டு எதிரெதிரே அமர்ந்திருப்பார்கள். 54. இவ்வாறே அழகிய விழிகளையுடைய சுவனக் கன்னிகளை நாம் அவர்களுக்கு மணமுடித்து வைப்போம். 55. அங்கு நிம்மதியுடன் எல்லாவகையான கனிகளையும் அவர்கள் வேண்டுவார்கள். 56. முதலில் நிகழ்ந்துவிட்ட மரணத்தைத்தவிர அங்கே எந்த மரணத்தையும் அவர்கள் அனுபவிக்க மாட்டார்கள். அவன் நரக வேதனையிலிருந்து அவர்களைப் பாதுகாத்துக் கொண்டான். 57. இது உம் இறைவனின் அருளாகும். இதுவே மகத்தான வெற்றியாகும். 58. எனவே மக்கள் அறிவுரை பெறும்பொருட்டு இவ்வேதத்தை உம் மொழியில் எளிதாக்கியுள்ளோம். 59. எனவே நீர் எதிர்பாரும், அவர்களும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

# 45. முழந்தாளிடுதல் (அல்ஜாஸியா)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. ஹா. மீம். 2. இது யாவற்றையும் மிகைத்தவனும் ஞானம் மிக்கவனுமாகிய அல்லாஹ்விடமிருந்து அருளப்பட்ட வேதமாகும். 3. நிச்சயமாக வானங்களிலும் பூமியிலும் நம்பிக்கையாளர்களுக்கு ஏராளமான சான்றுகள் இருக்கின்றன. 4. உங்களைப் படைத்திருப்பதிலும் பூமியில் உயிரினங்களைப் பரவச் செய்திருப்பதிலும் உறுதியாக நம்பிக்கைகொள்ளும் மக்களுக்கு எண்ணற்ற சான்றுகள் இருக்கின்றன. 5. இரவும் பகலும் மாறிமாறி வருவதிலும் வானத்திலிருந்து அல்லாஹ் வாழ்வாதாரத்தை இறக்கி அதன்மூலம் இறந்த பூமியை உயிர்ப்பிப்பதிலும் காற்றுகளின் சுழற்சியிலும் அறிவுடைய மக்களுக்கு ஏராளமான சான்றுகள் இருக்கின்றன. 6. இவை இறைவசனங்களாகும். இவற்றை சத்தியத்துடன் நாம் உமக்கு எடுத்துரைக்கிறோம். அல்லாஹ்வையும், அவனது வசனங்களையும் விட்டுவிட்டு வேறு எதன் மீதுதான் இவர்கள் நம்பிக்கை கொள்வார்கள்?*

*7. பொய்யுரைக்கும் ஒவ்வொரு பாவிக்கும் கேடுதான். 8. அவனிடம் இறைவசனங்கள் எடுத்துரைக்கப்பட்டால் அவற்றை அவன் செவியேற்கிறான். பின்னர் அவற்றைக் கேளாதவனைப்போல் ஆணவத்துடன் பிடிவாதம் கொள்கிறான். அவனுக்குத் துன்புறுத்தும் வேதனையைக்கொண்டு நற்செய்தி கூறும். 9. நம் வசனங்களிலிருந்து ஏதேனும் ஒரு விஷயத்தை அவன் அறிந்துகொண்டால் அதனை அவன் பரிகாசமாக எடுத்துக் கொள்கிறான். அவனைப் போன்றவர்களுக்கு இழிவுமிக்க வேதனை உண்டு. 10. அவர்களுக்கு முன்னால் நரகம் உள்ளது. அவர்கள் சம்பாதித்தது எதுவும் அவர்களுக்குப் பயனளிக்காது. அல்லாஹ்வை விடுத்து யாரையெல்லாம் இவர்கள்*

பாதுகாவலர்களாக எடுத்துக் கொண்டார்களோ அவர்களும் இவர்களுக்குப் பயனளிக்க மாட்டார்கள். அவர்களுக்கு மாபெரும் வேதனை உண்டு. 11. இதுவே வழிகாட்டியாகும். தங்கள் இறைவனின் வசனங்களை மறுத்தோருக்கு துன்புறுத்தும் கடும் தண்டனை உண்டு.

12. அல்லாஹ்தான் கடலினை உங்களுக்கு வசப்படுத்தித் தந்தான். அது அவனது கட்டளைப்படி கப்பல் அதில் செல்வதற்காகவும் அவனது அருளை நீங்கள் தேடுவதற்காகவும் நீங்கள் நன்றி செலுத்துவதற்காகவும்தான். 13. வானங்கள் மற்றும் பூமியிலுள்ள அனைத்தையும் அவன் உங்களுக்கு வசப்படுத்தித் தந்துள்ளான். நிச்சயமாக இதில் சிந்திக்கக்கூடிய மக்களுக்கு ஏராளமான சான்றுகள் இருக்கின்றன.

14. நம்பிக்கையாளர்களிடம் நீர் கூறும்: "இறைத்தண்டனை ஏற்பட்ட நாட்களின்மீது நம்பிக்கை கொள்ளாதவர்களை அவர்கள் மன்னித்து விடட்டும். அது ஏனெனில் அவன் ஒரு சமூகத்திற்கு அவர்கள் சம்பாதித்ததற்கான கூலியை வழங்குவதற்காகத்தான்". 15. எவர் நற்செயல் புரிகிறாரோ அது அவருக்கே நன்மையாகும். எவரேனும் தீய செயல் புரிந்தால் அது அவருக்கே கேடாக அமையும். பின்னர் உங்கள் இறைவனின் பக்கமே திரும்ப கொண்டு வரப்படுவீர்கள்.

16. நாம் இஸ்ராயீலின் மக்களுக்கு வேதத்தையும், ஞானத்தையும், தூதுத்துவத்தையும் வழங்கினோம். அவர்களுக்குத் தூய்மையான வாழ்வாதாரங்களையும் வழங்கினோம். உலக மக்கள் அனைவரைக் காட்டிலும் அவர்களுக்கு மேன்மையை அளித்திருந்தோம். 17. நாம் அவர்களுக்கு மார்க்கம் குறித்து தெளிவான ஆதாரங்களைக் கொடுத்திருந்தோம். ஆயினும் அவர்கள்

தங்களிடம் தெளிவான அறிவு வந்தபின்னரும் தங்களிடையே உள்ள பிடிவாதத்தினால் முரண்பட்டார்கள். நிச்சயமாக உம் இறைவன் அவர்கள் முரண்பட்டுக் கொண்டிருந்தவற்றில் மறுமைநாளில் அவர்களிடையே தீர்ப்பளிப்பான். 18. பின்னர் மார்க்கத்தின் தெளிவான வழிமுறையில் நாம் உம்மை நிலைத்திருக்கச் செய்தோம். எனவே நீர் அதனைப் பின்பற்றும். அறிவற்ற மக்களின் மனஇச்சைகளுக்கு இணங்கி விடாதீர். 19. இவர்கள் அல்லாஹ்வுக்கு எதிராக உமக்கு எந்தப் பலனையும் அளிக்க மாட்டார்கள். அநியாயக்காரரர்கள் ஒருவருக்கொருவர் தோழர்களாக இருக்கிறார்கள். அல்லாஹ் இறையச்சமுடையோரின் தோழனாவான். 20. இவ்வேதம் மக்களுக்குத் தெளிவான சான்றாகவும் உறுதியான நம்பிக்கையுடையோருக்கு வழிகாட்டியாகவும், கருணையாகவும் இருக்கின்றது.

21. நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிபவர்களைப்போன்று தீய செயல் புரிபவர்களை நாம் ஆக்கி விடுவோம் என்று அவர்கள் எண்ணிக் கொண்டார்களா? அவர்களது வாழ்வும் மரணமும் சமமாகி விடுமா? அவர்கள் கூறும் தீர்ப்பு எவ்வளவு மோசமானது! 22. அல்லாஹ் வானங்களையும் பூமியையும் உண்மையான நோக்கத்திற்காகவே படைத்துள்ளான். அது ஒவ்வொருவருக்கும் அவர்களது செயல்களுக்கேற்ப கூலி வழங்குவதற்காகவே!. அவர்கள்மீது எவ்வித அநீதியும் இழைக்கப்பட மாட்டாது.

23. தன் மனஇச்சையைத் தன் இறைவனாக ஆக்கிக் கொண்டவனை நீர் பார்த்தீரா? அல்லாஹ் அறிந்துகொண்டே அவனை வழிகேட்டில் விட்டுவிட்டான். அவன் செவியின்மீதும் உள்ளத்தின்மீதும் முத்திரையிட்டு அவனது பார்வையின்மீது திரையை ஏற்படுத்தி விட்டான். அல்லாஹ் அவனை வழிகேட்டில்

விட்டுவிட்ட பிறகு யார்தான் அவனுக்கு வழிகாட்ட முடியும்? நீங்கள் சிந்திக்க மாட்டீர்களா?

*24.* “நமது இவ்வுலக வாழ்வைத்தவிர வேறு வாழ்வு இல்லை. இங்குதான் நாம் மரணிக்கிறோம், உயிர் வாழவும் செய்கிறோம். காலத்தைத் தவிர வேறெதுவும் நம்மை அழிப்பதில்லை” என்று அவர்கள் கூறுகிறார்கள். இது குறித்து அவர்களுக்கு எதுவும் தெரியாது. அவர்கள் வெறும் ஊகத்தின் அடிப்படையில்தான் இவ்வாறு கூறுகிறார்கள். *25.* நம் தெளிவான வசனங்கள் அவர்களிடம் எடுத்துரைக்கப்பட்டால், “நீங்கள் உண்மையாளர்களாயின் எங்கள் முன்னோர்களை உயிரோடு கொண்டு வாருங்கள்” என்று கூறுவதைத் தவிர அவர்களிடம் வேறு எந்த வாதமும் இருப்பதில்லை. *26.* நீர் கூறும்: “அல்லாஹ்தான் உங்களை உயிர்ப்பிக்கிறான். பின்னர் அவனே உங்களை மரணிக்கச் செய்கிறான். பின்னர் மறுமைநாளன்று அவன் உங்களை ஒன்றுதிரட்டுவான். அதில் எவ்வித சந்தேகமுமில்லை”. ஆயினும் மனிதர்களில் பெரும்பாலோர் இதனை அறிந்துகொள்வதில்லை.

*27.* வானங்கள் மற்றும் பூமியின் ஆட்சியதிகாரம் அல்லாஹ்வுக்கே உரியது. ‘அந்நேரம்’ (விசாரணைநாள்) நிலைபெறும்போது அசத்தியவாதிகள் நஷ்டமடைந்து விடுவார்கள். *28.* அப்போது ஒவ்வொரு சமூகமும் முழந்தாளிட்டுக் கிடப்பதை நீங்கள் காண்பீர்கள். “ஒவ்வொரு சமூகமும் அதனதன் பதிவேட்டின் பக்கம் அழைக்கப்படும். இன்று நீங்கள் செய்தவற்றுக்குத்தான் கூலி கொடுக்கப்படுவீர்கள். *29.* இது உங்கள் விஷயத்தில் மிகச்சரியான முறையில் சாட்சியளிக்கும் நம் பதிவேடு. நீங்கள் செய்தவற்றையெல்லாம் நாம் பதிவு செய்து கொண்டிருந்தோம் (என்று நாம் கூறுவோம்)”.

*30.* நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிந்தவர்களை அவர்களின் இறைவன் தன் கருணையில் நுழையச் செய்வான். இதுவே தெளிவான வெற்றியாகும். *31.* ஆனால் நிராகரிப்பாளர்களிடம், "உங்களிடம் என் வசனங்கள் எடுத்துரைக்கப்படவில்லையா? ஆயினும் நீங்கள் ஆணவம் கொண்டீர்கள். குற்றம் புரியும் கூட்டமாக இருந்தீர்கள் (என்று கூறப்படும்)". *32.* "நிச்சயமாக அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானது. 'அந்நேரம் (மறுமைநாள்) வருவதில் எத்தகைய சந்தேகமுமில்லை' என்று கூறப்பட்டபோது, 'அந்நேரம்' என்னவென்று எங்களுக்குத் தெரியாது. நாங்கள் அதனைக் கற்பனை என்றே கருதுகிறோம். அதனை நாங்கள் உறுதியாக நம்புவோராக இல்லை" என்று கூறினீர்கள்.

*33.* அவர்கள் செய்தவற்றின் தீய விளைவுகள் அவர்களுக்கு வெளிப்பட்டு விடும். அவர்கள் எதனைப் பரிகாசம் செய்து கொண்டிருந்தார்களோ அதுவே அவர்களைச் சூழ்ந்துகொள்ளும். *34.* அவர்களிடம், "உங்களது இந்நாளின் சந்திப்பை நீங்கள் மறந்துவிட்டதைப் போன்று நாமும் இன்று உங்களை மறந்து விடுவோம். உங்களின் இருப்பிடம் நரகமாகும். உங்களுக்கு உதவி புரிவோர் யாருமில்லை. *35.* ஏனெனில் நீங்கள் இறைவசனங்களைப் பரிகாசமாக எடுத்துக் கொண்டீர்கள். உலக வாழ்க்கை உங்களை ஏமாற்றத்தில் ஆழ்த்தி விட்டது" என்று கூறப்படும். எனவே இன்றைய தினம் அதிலிருந்து விடுவிக்கப்படவும் மாட்டார்கள். அவர்களது காரணங்களும் ஏற்றுக் கொள்ளப்படாது.

*36.* அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவனே வானங்களின் இறைவனும் பூமியின் இறைவனும் அகிலங்களின்

*இறைவனுமாவான். **37.** வானங்களிலும் பூமியிலும் பெருமை என்பது அவனுக்கே உரியதாகும். அவன் யாவற்றையும் மிகைத்தவன்; ஞானம் மிக்கவன்.*

## *46. மணல்மேடுகள் (அல்அஹ்காஃப்)*

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

***1.** ஹா. மீம். **2.** இது யாவற்றையும் மிகைத்தவனும் ஞானம் மிக்கவனுமாகிய அல்லாஹ்விடமிருந்து அருளப்பட்ட வேதமாகும். **3.** வானங்களையும் பூமியையும், அவற்றிற்கிடையே உள்ளவற்றையும் நோக்கத்துடனும், ஒரு குறிப்பிட்ட தவணையுடனுமே நாம் படைத்துள்ளோம். ஆயினும் நிராகரிப்பாளர்கள் தங்களுக்கு விடுக்கப்படும் எச்சரிக்கையைப் புறக்கணிப்பவர்களாகவே இருக்கிறார்கள்.*

***4.** நீர் கேளும்: "அல்லாஹ்வைத் தவிர்த்து நீங்கள் அழைக்கின்றவற்றை நீங்கள் கவனிக்கவில்லையா? அவை பூமியில் எதைப் படைத்துள்ளன? அல்லது அவை வானங்களில் அவற்றின் ஆட்சியிலோ அல்லது படைப்பிலோ ஏதேனும் பங்கைப் பெற்றுள்ளதா என்பதை எனக்குக் காட்டுங்கள். நீங்கள் உண்மையாளர்களாயின் முன்னுள்ள ஒரு வேதத்தையோ அறிவுசார்ந்த ஏதேனும் ஒரு ஆதாரத்தையோ என்னிடம் கொண்டு வாருங்கள்". **5.** அல்லாஹ்வைத் தவிர்த்து மறுமைநாள்வரை தனக்குப் பதிலளிக்காதவற்றை அழைப்பவனைவிட வழிகேடன் யார்? அவர்களோ தம்மை அழைப்பதையே அறியாதவர்களாக இருக்கிறார்கள்.*

***6.** மனிதர்கள் அனைவரும் ஒன்றுதிரட்டப்படும்போது அவர்கள் இவர்களுக்குப் பகைவர்களாகி விடுவார்கள். தம்மை*

வணங்கியதையும் அவர்கள் நிராகரித்து விடுவார்கள். 7. நம் தெளிவான வசனங்கள் அவர்களிடம் எடுத்துரைக்கப்பட்டால் நிராகரிப்பாளர்கள் தம்மிடம் வந்த சத்தியத்தைக் குறித்து 'இது தெளிவான சூனியமாகும்' என்று கூறுகிறார்கள். 8. அல்லது 'இதனை அவர் சுயமாகப் புனைந்து கொண்டார்' என்று அவர்கள் கூறுகிறார்களா? நீர் கூறும்: "நான் இதனைப் புனைந்து கொண்டிருந்தால் உங்களால் அல்லாஹ்விடமிருந்து சிறிதும் என்னைக் காப்பாற்ற முடியாது. நீங்கள் புனைந்து கூறும் விஷயங்களை அவன் நன்கறிந்தவன். எனக்கும் உங்களுக்குமிடையே சாட்சியாளனாக இருக்க அவனே போதுமானவன். அவன் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்".

9. நீர் கூறும்: "தூதர்களில் நான் ஒன்றும் புதுமையானவன் அல்லன். எனக்கு என்ன நேரும் என்பதையும் உங்களுக்கு என்ன நேரும் என்பதையும் நான் அறிய மாட்டேன். நான் எனக்கு இறைவனிடமிருந்து அறிவிக்கப்படுவதைத்தான் பின்பற்றுகிறேன். நான் வெளிப்படையாக எச்சரிக்கை செய்பவனே". 10. நீர் கூறும்: "இது அல்லாஹ்விடமிருந்து வந்திருந்தும் இதனை நீங்கள் நிராகரித்தால் உங்களின் கதி என்னவாகும் என்பதை நீங்கள் சிந்தித்துப் பார்த்தீர்களா? இஸ்ராயீலின் மக்களிலிருந்து ஒருவர் இதைப்போன்ற ஒரு வேதத்திற்கு சாட்சி கூறி ஏற்றுக் கொண்டிருக்கும் நிலையில் நீங்கள் கர்வம் கொண்டுள்ளீர்கள்". நிச்சயமாக அல்லாஹ் அநியாயக்கார மக்களுக்கு நேர்வழி காட்ட மாட்டான்.

11. நிராகரிப்பாளர்கள் நம்பிக்கையாளர்களைக் குறித்து, "இது நல்லதாக இருந்திருந்தால் இதன் பக்கம் இவர்கள் எங்களை முந்தியிருக்க மாட்டார்கள்" என்று கூறுகிறார்கள். அவர்கள்

இதிலிருந்து நேர்வழி பெறவில்லையென்றால் "இது பழைய பொய்தான்" என்றே அவர்கள் கூறுவார்கள்.

*12.* இதற்கு முன்னர் மோசேவுக்கு வழங்கப்பட்ட வேதம் வழிகாட்டியாகவும் கருணையாகவும் இருந்தது. இது அரபி மொழியில் அமைந்த உண்மைப்படுத்தும் வேதமாகும். இது அக்கிரமக்காரர்களை எச்சரிக்கை செய்வதாகவும் நன்மை செய்வோருக்கு நற்செய்தியாகவும் அமைந்துள்ளது. *13.* நிச்சயமாக 'எங்கள் இறைவன் அல்லாஹ்தான்' என்று கூறி பின்னர் அதில் உறுதியாக நிலைத்து நிற்பவர்களுக்கு எவ்வித அச்சமுமில்லை, அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள். *14.* அவர்கள்தான் சுவனவாசிகள். உலகில் அவர்கள் செய்து கொண்டிருந்த செயல்களுக்குக் கூலியாக என்றென்றும் அங்கு தங்கியிருப்பார்கள்.

*15.* தாய்தந்தையருடன் நல்லமுறையில் நடந்து கொள்ளுமாறு நாம் மனிதனுக்குக் கட்டளையிட்டோம். அவனது தாய் அவனை சிரமத்துடனே சுமந்து சிரமத்துடனே பெற்றெடுத்தாள். அவனைச் சுமப்பதற்கும் அவனுக்குப் பால்குடி மறக்கடிப்பதற்கும் முப்பது மாதங்கள் ஆகின்றன. அவன் தன் பருவ வயதைக் கடந்து நாற்பது வயதை அடைந்தவுடன், "என் இறைவா! நீ என்மீதும் என் தாய் தந்தையர்மீதும் புரிந்த அருட்கொடைக்கு நன்றி செலுத்துவதற்கும், நீ விரும்பும் நற்காரியங்களைச் செய்வதற்கும் எனக்கு அருள் புரிவாயாக. என் சந்ததியிலிருந்து எனக்கு நல்ல பிள்ளைகளைத் தருவாயாக. நிச்சயமாக நான் உன் பக்கம் மீண்டு கீழ்ப்படிந்தவர்களில் ஒருவனாகி விட்டேன்" என்று பிரார்த்தனை புரிகிறான். *16.* இவர்களின் நற்செயல்களை நாம் ஏற்றுக்கொண்டு இவர்களின் தீமைகளை மன்னித்து விடுவோம். இவர்கள் சுவனவாசிகளுடன் இருப்பார்கள். இவர்களுக்கு அளிக்கப்படும் வாக்குறுதி உண்மையான வாக்குறுதியாகும்.

*17.* ஆனால் ஒருவன் தன் தாய் தந்தையரிடம், “நான் உங்களை வெறுக்கிறேன். இறந்தபின்னர் நான் மீண்டும் எழுப்பப்படுவேன் என்று மிரட்டுகிறீர்களா? எனக்கு முன்னர் எத்தனையோ சமூகங்கள் கடந்து போய் விட்டன” என்று கூறுகிறான். அப்போது அவனது தாய் தந்தையர் அல்லாஹ்விடம் மன்றாடியவர்களாக, “உனக்குக் கேடுதான். நம்பிக்கை கொள், அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானது” என்று கூறுகிறார்கள். ஆயினும் அவனோ “இவையெல்லாம் முன்னோர்களின் கட்டுக்கதைகள்தான்” என்று கூறுகிறான். *18.* இவர்களுக்கு முன் வாழ்ந்த ஜின், மனித சமூகங்களோடு இத்தகைய மக்கள்மீதும் வேதனை உறுதியாகி விட்டது. நிச்சயமாக இவர்கள் பெரும் இழப்பிற்குள்ளாகி விட்டார்கள்.

*19.* ஒவ்வொருவருக்கும் அவரவர் செயல்களுக்கேற்ப தகுந்த பதவிகள் உள்ளன. அல்லாஹ் அவர்களுக்கு நிறைவான கூலியை வழங்கிடுவான். அவர்கள் அநீதி இழைக்கப்பட மாட்டார்கள். *20.* நிராகரிப்பாளர்கள் நரகத்தின்முன் கொண்டு வரப்படும் நாளில், “நீங்கள் உங்களுக்குக் கிடைத்த நல்லவற்றையெல்லாம் வீணடித்து அவற்றின்மூலம் உலகில் அனுபவித்து விட்டீர்கள். ஆகவே நீங்கள் பூமியில் அநியாயமாகப் பெருமையடித்துக் கொண்டும், பாவம் செய்துகொண்டும் இருந்ததனால் இன்று இழிவுமிக்க வேதனைதான் உங்களுக்குக் கூலியாக வழங்கப்படும்” என்று அவர்களிடம் கூறப்படும்.

*21.* ‘ஆது’டைய சகோதரரை (ஹூதை) நினைவுகூரும். அவர் தம் சமூகத்தினரை மணல்மேடுகளில் நின்று எச்சரிக்கை செய்தார். அவருக்கு முன்னரும், பின்னரும் எச்சரிக்கை செய்பவர்கள் வந்துள்ளார்கள். “நீங்கள் அல்லாஹ்வைத்தவிர வேறு எவரையும் வணங்கக் கூடாது. நான் உங்கள் மீது வரப்போகும் கடினமான நாளின்

வேதனையை அஞ்சுகிறேன்" என்று (அவர் கூறினார்). *22.* அதற்கு அவர்கள், "எங்களுடைய தெய்வங்களை விட்டும் திசைதிருப்பிடவா எங்களிடம் நீ வந்திருக்கிறாயா? நீ உண்மையாளனாக இருந்தால் நீ அச்சுறுத்தும் வேதனையை எங்களிடம் கொண்டு வாரும்'' என்று கூறினார்கள். *23.* அதற்கு அவர், "அது பற்றிய அறிவு அல்லாஹ்விடமே உள்ளது. எதைக்கொண்டு நான் உங்களிடம் அனுப்பப்பட்டுள்ளேனோ அதைத்தான் நான் எடுத்துரைக்கிறேன். ஆயினும் நீங்கள் அறிவற்ற மக்களாக இருப்பதைக் காண்கிறேன்" என்று கூறினார்.

*24.* அடர்ந்த மேகம் தங்களின் பள்ளத்தாக்குகளை நோக்கி வருவதை அவர்கள் கண்டபோது "இது எங்களுக்கு மழை தரும் மேகம்" என்று கூறினார்கள். இல்லை. "மாறாக நீங்கள் அவசரப்பட்டீர்களே அதுதான் இது. இது துன்புறுத்தும் வேதனையை உள்ளடக்கிய காற்றாகும். *25.* அது தன் இறைவனின் கட்டளைப்படி அனைத்தையும் அழித்து விடும் (என்று அவர் கூறினார்)". அவர்களின் வீடுகளைத்தவிர எதுவும் தென்படாதவாறு அவர்கள் ஆகிவிட்டார்கள். இவ்வாறே நாம் குற்றவாளிகளைத் தண்டிக்கிறோம்.

*26.* உங்களுக்கு வழங்காத ஆற்றல்களையெல்லாம் நாம் அவர்களுக்கு வழங்கியிருந்தோம். அவர்களுக்கு செவிகளையும் கண்களையும் உள்ளங்களையும் அளித்திருந்தோம். ஆயினும் அவர்களது செவிப்புலனும், பார்வையும், உள்ளங்களும் அவர்களுக்கு எந்தப் பயனையும் அளிக்கவில்லை. அவர்கள் இறைவசனங்களை நிராகரித்துக் கொண்டிருந்தார்கள். எதனை அவர்கள் பரிகாசம் செய்து கொண்டிருந்தார்களோ அதுவே அவர்களைச் சூழ்ந்து கொண்டது. *27.* நாம் உங்களைச் சுற்றியுள்ள ஊர்களையும் அழித்து விட்டோம். அவர்கள் (உண்மையின் பக்கம்)

திரும்பிவிடும் பொருட்டு மீண்டும் மீண்டும் நம் சான்றுகளைத் தெளிவுபடுத்துகிறோம். **28.** இறைவனை நெருங்குவதற்காக அல்லாஹ்வை விடுத்து இவர்கள் ஏற்படுத்திக்கொண்ட தெய்வங்கள் ஏன் இவர்களுக்கு உதவி புரியவில்லை?. மாறாக அவையனைத்தும் இவர்களை விட்டும் மறைந்துவிட்டன. இதுவே அவர்களின் பொய்யும், புனைவுமாகும்.

**29.** ஜின்களில் ஒரு குழுவினரை நாம் உம்பக்கம் கொண்டுவந்தபோது அவர்கள் குர்ஆனைச் செவியுற்றார்கள். அவர்கள் அவரிடம் வந்தபோது தங்களிடையே ‘மௌனமாக இருங்கள்’ என்று கூறினார்கள். செவியேற்று முடிந்ததும் தம் சமூகத்திடம் எச்சரிக்கை செய்தவர்களாகத் திரும்பினார்கள். **30.** “எங்கள் சமூகமே! நாங்கள் மோசேவுக்குப்பின் அருளப்பட்ட ஒரு வேதத்தைச் செவியுற்றோம்! அது தனக்கு முன்னுள்ளவற்றை உண்மைப்படுத்துகிறது, சத்தியத்தின் பக்கமும், நேர்வழியின் பக்கமும் வழிகாட்டுகிறது. **31.** எங்கள் சமூகமே! அல்லாஹ்வின் பக்கம் அழைப்பவரின் அழைப்பை ஏற்று அவர்மீது நம்பிக்கை கொள்ளுங்கள். அவன் உங்கள் பாவங்களை மன்னித்து துன்புறுத்தும் வேதனையிலிருந்து உங்களைப் பாதுகாப்பான்” என்று அவர்கள் கூறினார்கள். **32.** அல்லாஹ்வின் பக்கம் அழைப்பவரின் அழைப்பை ஏற்றுக்கொள்ளாதவர் உலகில் அல்லாஹ்விடமிருந்து தப்பிவிட முடியாது. அவனைத்தவிர அவர்களுக்கு வேறு பாதுகாவலர்களும் இல்லை. இப்படிப்பட்டவர்கள் வெளிப்படையான வழிகேட்டில் இருக்கிறார்கள்.

**33.** வானங்களையும் பூமியையும் படைத்து, அவற்றைப் படைப்பதில் சோர்வடைந்துவிடாத அல்லாஹ், இறந்தவர்களை மீண்டும் உயிர்கொடுத்து எழுப்பவும் ஆற்றலுடையவன் என்பதை அவர்கள் அறிந்துகொள்ளவில்லையா? ஆம். அவன்

ஒவ்வொன்றின்மீதும் பேராற்றலுடையவன். *34.* இந்நிராகரிப்பாளர்கள் நரகத்திற்குமுன்பு கொண்டு வரப்படும் நாளில் 'இது சத்தியம் இல்லையா' என்று அவர்களிடம் கேட்கப்படும். அதற்கு அவர்கள், "ஆம். எங்கள் இறைவன்மீது ஆணையாக, இதுதான் சத்தியம்" என்று கூறுவார்கள். அதற்கு அவன், "நீங்கள் நிராகரித்துக் கொண்டிருந்ததனால் இவ்வேதனையை அனுபவியுங்கள்" என்று கூறுவான்.

*35.* மனஉறுதிமிக்க தூதர்கள் பொறுத்துக் கொண்டதுபோல் நீரும் பொறுமையுடன் இருப்பீராக. அவர்களின் விஷயத்தில் அவசரப்படாதீர். அவர்களுக்கு எச்சரிக்கப்பட்ட வேதனையை அவர்கள் காணும் நாளில் பகலின் சில மணித்துளிகள்தான் பூமியில் தங்கியிருந்தோம் என்றே அவர்களுக்குத் தோன்றும். இதனை எடுத்துரைத்துவிட வேண்டும் (என்பதே உமது பொறுப்பாகும்). அடிபணியாத மக்கள்தான் அழிக்கப்படுவார்கள்.

## 47. முஹம்மத் (முஹம்மத்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1.* சத்தியத்தை நிராகரித்து இறைவழியைவிட்டும் மக்களைத் தடுத்தவர்களின் செயல்களை அவன் வீணாக்கி விட்டான். *2.* எவரெல்லாம் நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிந்து முஹம்மத் மீது அருளப்பட்ட வேதம் தங்கள் இறைவனிடமிருந்து வந்துள்ள சத்தியமாகும் என்றும் நம்பிக்கை கொள்கிறார்களோ, அல்லாஹ் அவர்களின் பாவங்களைப் போக்கி அவர்களின் நிலையையும் சீராக்குவான். *3.* இது ஏனெனில் நிராகரிப்பாளர்கள் அசத்தியத்தைப் பின்பற்றினார்கள், நம்பிக்கையாளர்கள் தங்கள் இறைவனிடமிருந்து வந்துள்ள சத்தியத்தைப் பின்பற்றினார்கள் என்பதனாலேயாகும்.

இவ்வாறே அல்லாஹ் மக்களுக்கு அவர்களுக்கான உதாரணங்களை எடுத்துரைக்கிறான்.

*4.* நிராகரிப்பாளர்களை நீங்கள் போர்க்களத்தில் சந்திக்க நேர்ந்தால் அவர்களின் கழுத்துக்களை வெட்டுங்கள். அவர்களைக் கொன்று குவித்தபிறகே (எஞ்சியவர்களை) அவர்களைக் கைதிகளாகப் பிடியுங்கள். பின்னர் அவர்கள் மீது கருணை காட்டியோ, ஈட்டுத்தொகை பெற்றோ அவர்களை விடுவித்து விடலாம். இது போர் முடியும் வரையிலாகும். அல்லாஹ் நாடியிருந்தால் அவனே அவர்களைத் தண்டித்திருப்பான். ஆயினும் அவன் உங்களில் சிலரை சிலரைக்கொண்டு சோதிக்கிறான். இறைவழியில் கொல்லப்பட்டவர்களின் செயல்களை அவன் ஒருபோதும் வீணாக்க மாட்டான்*. *5.* அவர்களுக்கு வழிகாட்டி அவர்களின் நிலைமையை அவன் சீராக்குவான். *6.* அவன் அவர்களுக்கு அறிமுகப்படுத்தி வைத்திருந்த சுவனத்தில் அவர்களை நுழையச் செய்வான்.

*7.* நம்பிக்கையாளர்களே! நீங்கள் அல்லாஹ்வுக்கு உதவி புரிந்தால் அவன் உங்களுக்கு உதவி புரிவான், உங்களை உறுதிப்படுத்துவான். *8.* நிராகரிப்பாளர்களுக்குக் கேடுதான். அல்லாஹ் அவர்களின் செயல்களை வீணாக்கி விட்டான். *9.* ஏனெனில் அவர்கள் அல்லாஹ் அருளியதை வெறுத்தார்கள். ஆகவே அவன் அவர்களின் செயல்களை நாசமாக்கி விட்டான். *10.* அவர்கள் பூமியில் சுற்றித்திரிந்து தங்களுக்குமுன் இருந்தவர்களின் கதி என்னவாயிற்று என்பதைப் பார்க்க வேண்டாமா? அல்லாஹ் அவர்களை அடியோடு அழித்து விட்டான். இது போன்றவைதான் இந்நிராகரிப்பாளர்களுக்கும் நேரும். *11.* இதற்குக் காரணம்

---

*முன்னுரையைக் காண்க பக். 19

அல்லாஹ் நம்பிக்கையாளர்களின் பாதுகாவலனாக இருக்கின்றான் என்பதேயாகும். நிராகரிப்பாளர்களுக்குப் பாதுகாவலர் யாரும் இல்லை.

*12.* நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிந்தவர்களை நிச்சயம் அல்லாஹ் சுவனச் சோலைகளில் நுழையச் செய்வான். அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். நிராகரிப்பாளர்கள் அனுபவித்துக்கொண்டும் கால்நடைகளைப்போல் தின்றுகொண்டும் இருக்கிறார்கள். நரகமே அவர்களின் தங்குமிடமாகும். *13.* உம்மை வெளியேற்றிய உமது ஊர் மக்களைவிட வலிமைமிக்க எத்தனையோ ஊர் மக்களை நாம் அழித்திருக்கின்றோம். அவர்களுக்கு உதவி செய்பவர்களாக யாருமே இருக்கவில்லை.

*14.* தம் இறைவனின் தெளிவான பாதையில் இருப்பவர் தம் தீய செயல்கள் அழகாக்கப்பட்டு தம் மனஇச்சைகளைப் பின்பற்றியவர்களைப் போலாவாரா? *15.* இறையச்சமுடையோருக்கு வாக்களிக்கப்பட்டுள்ள சுவனத்தின் தன்மை இதுதான்: "அங்கு தூய்மையான தெளிந்த நீரினைக் கொண்ட ஆறுகளும், சிறிதும் சுவைமாறாத பாலாறுகளும் இன்பமளிக்கும் மது ஆறுகளும், தூய்மையான தேனாறுகளும் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்களுக்கு எல்லாவகையான கனிவகைகளும் தங்கள் இறைவனிடமிருந்து மன்னிப்பும் கிடைக்கும். இத்தகையவர்கள் என்றென்றும் நரகத்தில் வீழ்ந்து கிடப்பவர்களைப் போலாவார்களா? நரகவாசிகளுக்கு கொதிநீர் குடிப்பதற்காகக் கொடுக்கப்படும். அது அவர்களின் குடல்களைத் துண்டு துண்டாக்கி விடும்.

*16.* அவர்களில் சிலர் உம் பேச்சைக் காது கொடுத்துக் கேட்கிறார்கள். ஆயினும் அவர்கள் உம்மை விட்டுச் சென்றதும் அறிவு வழங்கப்பட்டவர்களிடம் (பரிகாசமாக) 'இவர்

இப்போது என்ன கூறினார்?', என்று கேட்கிறார்கள். அல்லாஹ் அவர்களின் உள்ளங்களில் முத்திரையிட்டுவிட்டான். அவர்கள் தம் மனஇச்சைகளைத்தான் பின்பற்றுகிறார்கள். *17.* ஆயினும் நேர்வழியைப் பின்பற்றியவர்களை அல்லாஹ் நேர்வழியில் மேலும் முன்னேறச் செய்கிறான். அவர்களுக்கு உள்ளச்சத்தையும் வழங்குகிறான்.

*18.* 'அந்நேரம்' அவர்களிடம் திடீரென வருவதைத்தான் அவர்கள் எதிர்பார்க்கிறார்களா? அதனுடைய அடையாளங்கள் வெளிப்பட்டு விட்டன. அது அவர்களிடம் வந்துவிட்டால் அறிவுரையை ஏற்றுக்கொள்ளும் வாய்ப்பு அவர்களுக்கு எங்கிருந்து கிடைக்கும்? *19.* அறிந்துகொள்ளும்: "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை" உமக்காகவும், நம்பிக்கைகொண்ட ஆண்கள், பெண்களுக்காகவும் மன்னிப்புக் கோருவீராக. அல்லாஹ் உங்களின் செயல்பாடுகளையும், தங்குமிடங்களையும் நன்கறிவான்.

*20.* போர் புரிவது குறித்து ஏதேனும் ஒரு அத்தியாயம் அருளப்படக் கூடாதா என்று நம்பிக்கையாளர்கள் கேட்கிறார்கள். ஆயினும் போர் புரிவது குறித்து தெளிவான ஒரு அத்தியாயம் அருளப்பட்டால் உள்ளங்களில் நோயுள்ளவர்கள் மரண பீதியால் மயக்கமுற்றவனைப்போல உம்மைப் பார்க்கிறார்கள். ஆகவே அவர்களுக்குக் கேடுதான்! *21.* கட்டுப்பட்டோம் என்று கூறுவதும், நல்ல வார்த்தை கூறுவதும் (அவர்களின் உதட்டளவில்தான் உள்ளன). விஷயம் உறுதியானதும் அவர்கள் அல்லாஹ்விடம் வாய்மையுடன் நடந்திருந்தால் அது அவர்களுக்கு நன்மையாக அமைந்திருக்கும். *22.* நீங்கள் புறக்கணித்தால் உங்களிடமிருந்து இதைத்தவிர வேறு என்ன எதிர்பார்க்க முடியும்? 'நீங்கள் பூமியில் குழப்பம் செய்து உறவுகளை துண்டித்து விடுவீர்கள்'. *23.* இத்தகையவர்களைத்தான்

அல்லாஹ் சபித்து விட்டான். அவர்களைச் செவிடாக்கி அவர்களின் கண்களையும் குருடாக்கி விட்டான்.

*24.* இவர்கள் குர்ஆனை ஆராய்ந்து பார்க்க வேண்டாமா? அல்லது இவர்களுடைய உள்ளங்களின்மீது பூட்டுகள் போடப்பட்டுள்ளனவா? *25.* நேர்வழி தெளிவானபின்னரும் யாரெல்லாம் பின்வாங்கித் திரும்பிச் செல்கிறார்களோ - சாத்தான் அவர்களது தவறுகளை அவர்களுக்கு அழகாக்கி விட்டான் - அல்லாஹ்வும் அவர்களுக்கு அவகாசம் அளித்து விட்டான். *26.* இதற்குக் காரணம் அவர்கள் அல்லாஹ் அருளியவற்றை வெறுப்பவர்களிடம் “நாங்கள் சில விஷயங்களில் உங்களுக்குக் கட்டுப்படுவோம்” என்று (இரகசியமாக) கூறியதுதான். அல்லாஹ் அவர்களின் இரகசியங்களை நன்கறிவான். *27.* ஆகவே வானவர்கள் அவர்களின் முகங்களிலும், முதுகளிலும் அடித்தவாறு அவர்களின் உயிர்களை கைப்பற்றும்போது என்னவாகும்? *28.* இதற்குக் காரணம் அவர்கள் அல்லாஹ்வுக்குக் கோபமூட்டக்கூடியதைப் பின்பற்றியதும், அவனது திருப்தியை வெறுத்ததுமாகும். ஆகவே அவன் அவர்களின் செயல்களை வீணாக்கி விட்டான்.

*29.* உள்ளங்களில் நோயுள்ளவர்கள் அவர்களது உள்ளங்களிலுள்ள குரோதங்களை அல்லாஹ் வெளிப்படுத்த மாட்டான் என்று எண்ணிக் கொண்டார்களா? *30.* நாம் நாடியிருந்தால் அவர்களை உமக்குக் காட்டியிருப்போம். ஆயினும் அவர்களின் முக அடையாளங்களைக் கொண்டே நீர் அவர்களை அறிந்துகொள்ளலாம். அவர்கள் பேசும் தொனியிலும் அவர்களை நீர் அறிந்துகொள்வீர். உங்களின் செயல்களை அல்லாஹ் நன்கறிவான்.

*31.* உங்களில் அவனது பாதையில் பாடுபடுபவர்கள் யார், உறுதியுடன் நிலைத்து நிற்பவர்கள் யார் என்பதை அறிந்து கொள்வதற்காக நிச்சயம் நாம் உங்களைச் சோதிப்போம். உங்களின் நிலைமைகளையும் நாம் பரிசீலிப்போம். *32.* தங்களுக்கு நேர்வழி தெளிவான பின்னரும் சத்தியத்தை நிராகரித்து, இறைவழியைவிட்டும் மக்களைத் தடுத்து தூதருக்கு மாறு செய்பவர்கள் அல்லாஹ்வுக்கு எவ்விதத் தீங்கும் இழைத்துவிட முடியாது. அவன் அவர்களின் செயல்களை வீணாக்கி விடுவான்.

*33.* நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்குக் கட்டுப்படுங்கள். அவனது தூதருக்கும் கட்டுப்படுங்கள். உங்களது செயல்களைப் பாழாக்கி விடாதீர்கள். *34.* சத்தியத்தை நிராகரித்து இறைவழியை விட்டும் மக்களைத் தடுத்து பின்னர் நிராகரித்த நிலையிலேயே மரணித்தும் விடுபவர்களை அல்லாஹ் ஒருபோதும் மன்னிக்க மாட்டான். *35.* எனவே நீங்கள் தைரியமிழந்து சமாதானத்தைக் கோராதீர்கள். நீங்கள்தான் மேலோங்கி நிற்பீர்கள். அல்லாஹ் உங்களுடன் இருக்கிறான். அவன் உங்களின் நன்மைகளை ஒருபோதும் குறைத்துவிட மாட்டான்.

*36.* இவ்வுலக வாழ்க்கை வேடிக்கையும், விளையாட்டுமேயாகும். நீங்கள் நம்பிக்கைகொண்டு இறையச்சத்துடன் நடந்தால் அவன் உங்களுக்குரிய கூலியை வழங்கிடுவான். உங்களிடம் உங்கள் செல்வங்களைக் கேட்க மாட்டான். *37.* அவன் உங்களிடம் உங்கள் செல்வங்களைக் கேட்டு வற்புறுத்தினாலும் நீங்கள் கஞ்சத்தனமே செய்வீர்கள். அவன் உங்கள் கெட்ட எண்ணங்களை வெளிப்படுத்திடுவான். *38.* ஆம். நீங்கள் இறைவழியில் செலவு செய்யுமாறு அழைக்கப்படுகிறீர்கள். ஆயினும் உங்களில் சிலர் கஞ்சத்தனம் செய்கிறார்கள். கஞ்சத்தனம் செய்பவர் தமக்கே கஞ்சத்தனம் செய்கிறார். அல்லாஹ் தேவையற்றவன்.

நீங்கள்தான் தேவையுடையவர்கள். நீங்கள் புறக்கணித்தால் அல்லாஹ் உங்களுக்குப் பதிலாக வேறொரு சமூகத்தைக் கொண்டு வருவான். அவர்கள் உங்களைப்போல் இருக்க மாட்டார்கள்.

# 48. வெற்றி (அல்ஃபத்ஹ்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

1. நிச்சயமாக நாம் உமக்கு தெளிவான வெற்றியை அளித்துள்ளோம். 2. அது அல்லாஹ் உம்முடைய முன், பின் பாவங்களை மன்னித்துத் தனது அருட்கொடையை உம்மீது பரிபூரணப்படுத்தி உமக்கு நேரான வழியைக்காட்ட வேண்டும் என்பதற்காகவும் 3. உமக்கு பெரும் உதவி செய்வதற்காகவும்தான்.

4. அவனே நம்பிக்கையாளர்களின் உள்ளங்களில் நிம்மதியை அருளினான், அவர்களின் நம்பிக்கையுடன் இன்னும் நம்பிக்கையை அதிகரிக்க வேண்டும் என்பதற்காக. வானங்கள் மற்றும் பூமியிலுள்ள படைகள் அல்லாஹ்வுக்கே சொந்தம். அவன் நன்கறிந்தவனாகவும் ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான். 5. இது ஏனெனில் நம்பிக்கைகொண்ட ஆண்களையும், பெண்களையும் அவன் சுவனங்களில் நுழையச் செய்வதற்காகத்தான். அவற்றில் ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும். அவற்றில் அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். அவன் அவர்களின் பாவங்களைப் போக்கி விடுவான். இதுவே அல்லாஹ்விடத்திலிருந்து கிடைக்கும் மகத்தான வெற்றியாகும். 6. அது அல்லாஹ்வைப்பற்றி தீய எண்ணம் கொண்ட நயவஞ்சக ஆண்களையும் பெண்களையும், இணைவைக்கும் ஆண்களையும் பெண்களையும் அவன் தண்டிப்பதற்காகவும்தான் (அவ்வாறு செய்தான்). அவர்கள்தான்

தீமையின் சுழலில் வீழ்ந்து கிடக்கிறார்கள். அல்லாஹ் அவர்கள்மீது கோபம்கொண்டு அவர்களைச் சபித்து விட்டான். அவர்களுக்காக நரகத்தைத் தயார்படுத்தி வைத்துள்ளான். அது மிகவும் கெட்ட இருப்பிடமாகும். 7. வானங்கள் மற்றும் பூமியிலுள்ள படைகள் அல்லாஹ்வுக்கே உரியன. அல்லாஹ் நன்கறிந்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.

8. நாம் உம்மை சாட்சியாளராகவும், நற்செய்தியாளராகவும், எச்சரிக்கையாளராகவும் அனுப்பியுள்ளோம். 9. அது நீங்கள் அல்லாஹ்வின் மீதும், அவனது தூதரின்மீதும் நம்பிக்கைகொண்டு அவனுக்கு உதவி புரிந்து அவனைக் கண்ணியப்படுத்துவதற்காகவும், காலையிலும் மாலையிலும் இறைவனைப் போற்றிப் புகழ வேண்டும் என்பதற்காகவும்தான். 10. உம்மிடம் வாக்குறுதி அளித்தவர்கள் உண்மையில் அல்லாஹ்விடம் வாக்குறுதி அளித்தவர்களாவர். அல்லாஹ்வின் கை அவர்களின் கைகள் மீது இருந்தது. எவரேனும் வாக்குறுதியை முறித்துக் கொண்டால் அவர் தமக்குக் கேடாகவே அதனை முறித்துக் கொள்கிறார். அல்லாஹ்விடம் செய்துகொண்ட சத்தியப் பிரமாணத்தை பரிபூரணமாக நிறைவேற்றுபவர்களுக்கு அவன் மகத்தான கூலியை வழங்கிடுவான்.

11. பின்தங்கிவிட்ட நாட்டுப்புற மக்கள் உம்மிடம் வந்து, “எங்களின் செல்வங்களும், குடும்பங்களும் எங்களுக்கு அவகாசம் அளிக்கவில்லை. எனவே எங்களுக்காக மன்னிப்புக் கோருவீராக” என்று கூறுவார்கள். அவர்கள் தங்கள் உள்ளங்களில் இல்லாதவற்றைத் தங்கள் நாவுகளால் கூறுகிறார்கள். நீர் கூறும்: “அல்லாஹ் உங்களுக்கு ஏதேனும் தீங்கிழைக்க நாடினால் அல்லது பலனளிக்க விரும்பினால் யாரால் அதனைத் தடுக்க முடியும்?”. உங்களின் செயல்களை அல்லாஹ் நன்கறிந்தவன். 12. மாறாக தூதரும், நம்பிக்கையாளர்களும் ஒருபோதும் தம் குடும்பத்தினரிடம்

திரும்பிவர மாட்டார்கள் என்று நீங்கள் எண்ணிக் கொண்டீர்கள். உங்களின் உள்ளங்களில் இதுவே அழகாக்கப்பட்டது. நீங்கள் தீய எண்ணம் கொண்டீர்கள். அழிந்துபோகும் சமூகமாகி விட்டீர்கள். *13.* எவர் அல்லாஹ்வின்மீதும் அவனது தூதரின்மீதும் நம்பிக்கை கொள்ளவில்லையோ - நிச்சயமாக நாம் நிராகரிப்பாளர்களுக்குக் கொழுந்து விட்டெரியும் நெருப்பைத் தயார்படுத்தி வைத்துள்ளோம். *14.* வானங்கள், பூமியின் ஆட்சியதிகாரம் அல்லாஹ்வுக்கே உரியது. தான் நாடியவர்களை அவன் மன்னிப்பான், தான் நாடியவர்களை தண்டிப்பான். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

*15.* போரில் கைப்பற்றப்பட்ட பொருட்களைப் பெறுவதற்காக நீங்கள் செல்லும்போது பின்தங்கிவிட்டவர்கள், "எங்களையும் உங்களுடன் வர அனுமதியுங்கள்" என்று கூறுவார்கள். அவர்கள் அல்லாஹ்வின் வாக்கை மாற்றிவிட நாடுகின்றார்கள். நீர் கூறும்: "நீங்கள் எங்களுடன் வரவே வேண்டாம். அல்லாஹ் முன்னரே இதனைக் கூறி விட்டான்". அதற்கு அவர்கள், "இல்லை. நீங்கள் எங்கள் மீது பொறாமைப்படுகிறீர்கள்!" என்று கூறுவார்கள். மாறாக அவர்கள் குறைவாகவே அன்றி புரிந்துகொள்ள மாட்டார்கள்.

*16.* பின்தங்கிவிட்ட நாட்டுப்புற அரபிகளிடம் நீர் கூறும்: "நீங்கள் விரைவில் வலிமைமிக்க மக்களுடன் போர் புரியுமாறு அழைக்கப்படுவீர்கள். அவர்களுடன் நீங்கள் போரிட வேண்டும் அல்லது அவர்கள் அடிபணிய வேண்டும். நீங்கள் கட்டளையை ஏற்றுக்கொண்டால் அல்லாஹ் உங்களுக்கு அழகிய கூலியை அளிப்பான். இதற்கு முன்னர் புறக்கணித்தது போன்றே இப்போதும் நீங்கள் புறக்கணித்துவிட்டால் துன்புறுத்தும் வேதனையால் அவன் உங்களைத் தண்டிப்பான்". *17.* பார்வையற்றவர், முடவர், நோயாளி ஆகியோர் (போருக்கு வரவில்லையென்றால் அவர்கள்) மீது

எவ்விதக் குற்றமுமில்லை. அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் கட்டுப்படுபவர்களை அல்லாஹ் சுவனச் சோலைகளில் நுழையச் செய்வான். அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். ஆயினும் எவரேனும் புறக்கணித்தால் துன்புறுத்தும் வேதனையால் அவன் அவரைத் தண்டிப்பான்.

18. நம்பிக்கையாளர்கள் அந்த மரத்தின் கீழே உம்மிடம் வாக்குறுதி எடுத்துக்கொண்டபோது அல்லாஹ் அவர்களைக் குறித்து திருப்தியடைந்தான், அவர்களின் உள்ளங்களில் உள்ளவற்றை அறிந்து அவர்களுக்கு நிம்மதியை அருளினான். விரைவில் கிடைக்கும் வெற்றியையும் அவர்களுக்கு வெகுமதியாக வழங்கினான். 19. ஏராளமான போர்ச் செல்வங்களையும் அவர்கள் அடையும்படிச் செய்தான். அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான். 20. அல்லாஹ் உங்களுக்கு ஏராளமான போர்ச்செல்வங்ளை வாக்களிக்கிறான். அவற்றை நீங்கள் அடைந்து கொள்வீர்கள். எனவே விரைவாக இதனை உங்களுக்கு வழங்கி உங்களை மக்களின் தீங்குகளையும் விட்டுத் தடுத்து விட்டான். இது நம்பிக்கையாளர்களுக்கு ஒரு சான்றாக அமைவதற்காகவும், உங்களுக்கு நேரான வழியைக் காட்டுவதற்காகவும்தான். 21. உங்களால் இயலாத மற்றொரு வெற்றியும் இருக்கின்றது. அல்லாஹ் அதனை முழுமையாகச் சூழ்ந்துள்ளான். அல்லாஹ் எல்லாவற்றின்மீதும் பேராற்றலுடையவன்.

22. இந்நிராகரிப்பாளர்கள் உங்களுடன் போரிட்டிருந்தால் நிச்சயம் புறங்காட்டி ஓடியிருப்பார்கள். பின்னர் எந்தப் பாதுகாவலனையும், உதவியாளனையும் காண மாட்டார்கள். 23. இது முன்பிருந்தே நடைபெற்று வரும் அல்லாஹ்வின் வழிமுறையாகும். அல்லாஹ்வின் வழிமுறையில் எவ்வித மாறுதலையும் நீர் காணமாட்டீர். 24. அவனே மக்காவின்

பள்ளத்தாக்கில் அவர்களுக்கெதிராக உங்களுக்கு வெற்றி அளித்தபிறகு அவர்களின் கைகளை உங்களைவிட்டும், உங்களின் கைகளை அவர்களைவிட்டும் தடுத்து விட்டான். உங்கள் செயல்களை அவன் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

25. (மக்காவாசிகளான) அவர்கள்தான் நிராகரிப்பாளர்கள். உங்களைப் புனித ஆலயத்தை விட்டும் பலிப்பிராணி அடைய வேண்டிய இடத்தை விட்டும் தடுத்தவர்கள். நம்பிக்கைகொண்ட ஆண்களும், பெண்களும் (மக்காவில்) இல்லாதிருந்து நீங்கள் அறியாமல் அவர்களைத் தாக்கி அதனால் உங்கள்மீது பழி ஏற்படாதிருக்குமானால் (நாம் போர் புரிய அனுமதியளித்திருப்போம். அவ்வாறு ஏன் அனுமதியளிக்கவில்லையெனில்) தான் நாடுவோரை அல்லாஹ் தன் கருணையில் நுழையச் செய்வதற்கேயாகும். அவர்கள் (நம்பிக்கையாளர்கள்) விலகியிருப்பார்களாயின் அவர்களில் நிராகரிப்பாளர்களை துன்புறுத்தும் வேதனையால் நாம் தண்டித்திருப்போம்.

26. நிராகரிப்பாளர்கள் தங்கள் உள்ளங்களில் அறியாமைக்கால வைராக்கியத்தை ஏற்படுத்திக்கொண்டபோது தன் தூதருக்கும் நம்பிக்கையாளர்களுக்கும் அல்லாஹ் நிம்மதியை அருளினான். நம்பிக்கையாளர்களை இறையச்சமுள்ள வாக்கைப் பின்பற்றி நடப்போராக விளங்கச் செய்தான். அவர்கள் அதற்குத் தகுதியானவர்களாகவும், அதற்குரியவர்களாகவும் இருந்தார்கள். அல்லாஹ் ஒவ்வொரு பொருளையும் நன்கறிந்தவன்.

27. நிச்சயமாக தன் தூதருக்கு அல்லாஹ் கனவை உண்மைப்படுத்திக் காட்டினான். அதுவோ முற்றிலும் நிகழக்கூடியதாகவே இருந்தது. அல்லாஹ் நாடினால் நிச்சயமாக புனித ஆலயத்தில் உங்கள் தலைமுடியை மழித்தவர்களாகவும்,

குறைத்தவர்களாகவும் அமைதியுடன் நீங்கள் நுழைவீர்கள். உங்களுக்கு எவ்வித அச்சமும் இருக்காது. நீங்கள் அறியாதவற்றை அவன் அறிந்திருந்தான். இதற்கு முன்பே அவன் ஒரு வெற்றியை அளித்து விட்டான்.

*28.* அல்லாஹ்தான் தன் தூதரை நேர்வழியுடனும், சத்திய மார்க்கத்துடனும் அனுப்பியுள்ளான், மற்ற அனைத்து மார்க்கங்களை விடவும் இதனை மேலோங்கச் செய்வதற்காக. சாட்சியளிக்க அல்லாஹ்வே போதுமானவன்.

*29.* முஹம்மத் இறைத்தூதராவார். அவருடன் இருப்பவர்கள் நிராகரிப்பாளர்களின் விஷயத்தில் கண்டிப்பானவர்கள்; தங்களுக்கிடையே கருணைமிக்கவர்கள். அவர்களை இறைவனின் அருளையும் அவனது திருப்தியையும் தேடியவர்களாக குனிந்தவர்களாகவும், சிரம்பணிந்தவர்களாகவும், நீங்கள் காண்பீர்கள். சிரம்பணிந்ததனால் அவர்களின் முகங்களில் ஏற்பட்ட அடையாளமே அவர்களின் அடையாளமாகும். அவற்றைக்கொண்டே அவர்கள் அறிந்து கொள்ளப்படுகிறார்கள். இதுவே தவ்ராத்தில் அவர்களுக்குச் சொல்லப்பட்ட உதாரணமாகும். இன்ஜீலில் அவர்களது உதாரணம் ஒரு பயிரைப் போன்றதாகும். அது தன் குருத்தை வெளிப்படுத்தி பின்னர் அதனைப் பலப்படுத்துகிறது. பின்னர் அது பருத்து தன் தண்டின்மீது நிலைத்து நிற்கிறது. அது விவசாயிகளை மகிழ்ச்சியடையச் செய்கிறது. இவற்றைக்கொண்டு அல்லாஹ் நிராகரிப்பாளர்களை எரிச்சலடையச் செய்கிறான். ஆயினும் அவர்களில் நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிபவர்களுக்கு அல்லாஹ் மன்னிப்பும், மகத்தான கூலியும் தருவதாக வாக்களிக்கிறான்.

# 49. அறைகள் (அல்ஹுஜுராத்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

1. நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் முன்னர் நீங்கள் முந்தாதீர்கள். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். நிச்சயமாக அல்லாஹ் செவியேற்பவனாகவும் நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான்.

2. நம்பிக்கையாளர்களே! தூதரின் குரலைவிட உங்களின் குரலை உயர்த்தி விடாதீர்கள். நீங்கள் ஒருவருக்கொருவர் இரைந்து பேசுவதைப்போல அவருடன் இரைந்து பேசாதீர்கள். அதனால் நீங்கள் அறியாத நிலையில் உங்களின் நற்செயல்கள் அழிந்துவிடும். 3. இறைத்தூதருக்கு முன்னால் தங்கள் குரல்களைத் தாழ்த்திக் கொள்பவர்களின் உள்ளங்களை அல்லாஹ் இறையச்சத்திற்காக சோதிக்கிறான். அவர்களுக்கு மன்னிப்பும் மகத்தான கூலியும் உண்டு. 4. (தூதரே,) அறைகளுக்கு வெளியே இருந்து உம்மை அழைப்பவர்களில் பெரும்பாலோர் விளங்கிக் கொள்ளாதவர்களே. 5. நீங்கள் வெளிப்பட்டு வரும்வரை அவர்கள் பொறுத்திருந்தால் அது அவர்களுக்கு மிக நன்றாக இருந்திருக்கும். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

6. நம்பிக்கையாளர்களே! தீயவன் ஒருவன் உங்களிடம் ஏதேனும் செய்தி கொண்டுவந்தால் அதைத் தீர விசாரித்துத் தெளிவுபடுத்திக் கொள்ளுங்கள். ஏனெனில் நீங்கள் அறியாமையினால் ஒரு சமூகத்திற்குத் தீங்கிழைத்துவிட்டு அதற்காக வருந்தக்கூடியவர்களாகி விடக்கூடாது. 7. அறிந்துகொள்ளுங்கள்: உங்களிடையே இறைத்தூதர் இருக்கின்றார். அநேக காரியங்களில்

அவர் உங்களின் பேச்சைக் கேட்டிருந்தால் நீங்கள்தான் சிரமத்திற்குள்ளாகியிருப்பீர்கள். ஆயினும் அல்லாஹ் நம்பிக்கையை உங்களுக்குப் பிரியமாக்கி உங்கள் உள்ளங்களில் அதனை அழகாக்கியுள்ளான். நிராகரிப்பையும், பாவம் புரிவதையும், உங்களுக்கு நேர்மாறாக செயல்படுவதையும் அவன் உங்களுக்கு வெறுப்பாக்கி வைத்துள்ளான். *8.* இவர்கள்தான் இறைவனின் அருளாலும் அவனது கிருபையாலும் நேர்வழியில் உள்ளவர்கள். அல்லாஹ் நன்கறிந்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.

*9.* நம்பிக்கையாளர்களில் இரு பிரிவினர் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டால் அவர்களிடையே சமாதானம் செய்து வையுங்கள். அவர்களில் ஒரு பிரிவினர் மற்றொரு பிரிவினரின்மீது வரம்பு மீறினால் அவர்கள் அல்லாஹ்வுடைய கட்டளையின்பக்கம் திரும்பும்வரை வரம்பு மீறும் பிரிவினருடன் போரிடுங்கள். அவர்கள் திரும்பிவிட்டால் அவர்களிடையே நியாயமாக சமாதானம் செய்து வையுங்கள். நீதி செலுத்துங்கள். நிச்சயமாக அல்லாஹ் நீதி செலுத்துவோரை நேசிக்கிறான். *10.* நம்பிக்கையாளர்கள் அனைவரும் சகோதரர்களே. எனவே உங்கள் சகோதரர்களுக்கிடையில் இணக்கத்தை ஏற்படுத்துங்கள். உங்கள்மீது கருணை காட்டப்படும் பொருட்டு அல்லாஹ்வை அஞ்சிக்கொள்ளுங்கள்.

*11.* நம்பிக்கையாளர்களே! எந்த ஆண்களும் பிற ஆண்களைப் பரிகாசம் செய்ய வேண்டாம். அவர்கள் இவர்களைவிட சிறந்தவர்களாக இருக்கக்கூடும். எந்தப் பெண்களும் பிற பெண்களைப் பரிகாசம் செய்ய வேண்டாம். அவர்கள் இவர்களைவிட சிறந்தவர்களாக இருக்கக்கூடும். நீங்கள் ஒருவரையொருவர் இழிவாகக் கருதி குறை கூறவேண்டாம். ஒருவருக்கொருவர் மோசமான பட்டப்பெயர் சூட்டி அழைக்காதீர்கள். நம்பிக்கைகொண்ட

பின்னர் பாவமான பெயரைச் சூட்டுவது மிகவும் கெட்டதாகும். இவற்றைவிட்டு விலகாதவர்கள்தான் அக்கிரமக்காரர்கள்.

12. நம்பிக்கையாளர்களே! அதிகமாக சந்தேகம் கொள்வதைத் தவிர்த்துக் கொள்ளுங்கள். சில சந்தேகங்கள் பாவமாகும். உளவு பார்ப்பதில் ஈடுபடாதீர்கள். உங்களில் ஒருவர் மற்றவரைப்பற்றி புறம் பேச வேண்டாம். உங்களில் யாராவது இறந்துவிட்ட தன் சகோதரனின் மாமிசத்தைப் உண்ண விரும்புவாரா? நீங்களே அதனை வெறுக்கிறீர்கள். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். நிச்சயமாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

13. மனிதர்களே! நாம் உங்களை ஒரே ஆண், பெண்ணிலிருந்து படைத்தோம். நீங்கள் ஒருவரையொருவர் அறிந்துகொள்ளும்பொருட்டு உங்களை சமூகங்களாகவும், கோத்திரங்களாகவும் ஆக்கினோம். அல்லாஹ்விடத்தில் மிகவும் கண்ணியம் வாய்ந்தவர் உங்களில் அவனை அதிகம் அஞ்சுபவர்தான். நிச்சயமாக அல்லாஹ் நன்கறிந்தவன்; நுட்பமானவன்.

14. நாட்டுப்புற அரபிகள் “நாங்கள் நம்பிக்கை கொண்டோம்” என்று கூறுகிறார்கள். நீர் கூறும்: “நீங்கள் நம்பிக்கை கொள்ளவில்லை. ஆயினும் ‘நாங்கள் கீழ்ப்படிந்தோம்’ என்று கூறுங்கள். இன்னும் உங்கள் உள்ளங்களில் நம்பிக்கை நுழையவில்லை’’. நீங்கள் அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் கீழ்ப்படிந்தால் அவன் உங்கள் செயல்களில் எதையும் குறைத்துவிட மாட்டான். நிச்சயமாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். 15. உண்மையில் நம்பிக்கையாளர்கள் யாரெனில் அவர்கள் அல்லாஹ்வின்மீதும் அவனது தூதரின்மீதும் நம்பிக்கைகொண்டு பின்னர்

*சந்தேகங்கொள்ளாது தங்கள் உயிர்களாலும், செல்வங்களாலும் இறைவழியில் கடுமையாகப் பாடுபடுபவர்களாவர். அவர்கள்தான் உண்மையாளர்கள்.*

*16. நீர் கூறும்: "நீங்கள் அல்லாஹ்வுக்கே உங்கள் மார்க்கம் குறித்துக் கூறுகிறீர்களா? வானங்களிலும் பூமியிலும் உள்ளவற்றை அல்லாஹ் நன்கறிவான். அல்லாஹ் ஒவ்வொரு பொருளையும் நன்கறிந்தவன்". 17. அவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டதை உமக்குப் புரிந்த பேருபகாரமாகக் கருதுகிறார்கள். நீர் கூறும்: "நீங்கள் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டதை எனக்குச் செய்த உபகாரமாகக் கருதாதீர்கள். நீங்கள் உண்மையாளர்களாயின் அல்லாஹ்தான் உங்களுக்கு நம்பிக்கையின்பக்கம் வழிகாட்டியதன்மூலம் பேருபகாரம் புரிந்துள்ளான்". 18. வானங்களிலும் பூமியிலும் மறைந்துள்ளவற்றை அல்லாஹ்வே நன்கறிவான். அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை பார்த்துக் கொண்டிருக்கிறான்.*

## *50. காஃப்*

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. காஃப். மகத்துவமிக்க குர்ஆனின்மீது சத்தியமாக. 2. அவர்களிடம் அவர்களிலிருந்தே எச்சரிக்கை செய்பவர் வந்துள்ளதைக் குறித்து அவர்கள் ஆச்சர்யப்படுகிறார்கள். "இது ஆச்சரியமான விஷயமே! 3. நாம் மரணமடைந்து மண்ணோடு மண்ணாகி விட்டாலுமா? இவ்விதம் எழுப்பப்படுவது சாத்தியமற்ற ஒன்று!" என்று நிராகரிப்பாளர்கள் கூறுகிறார்கள். 4. அவர்களை பூமி எந்த அளவு தின்கிறது என்பதை நாம் அறிவோம். நம்மிடம் பாதுகாக்கப்பட்ட ஏடு இருக்கிறது. 5. ஆயினும் சத்தியம்*

அவர்களிடம் வந்துவிட்ட பின்னர் அதனை அவர்கள் மறுத்தார்கள். அவர்கள் குழப்பத்தில் வீழ்ந்து கிடக்கிறார்கள்.

6. அவர்கள் தங்களுக்கு மேலுள்ள வானத்தைப் பார்க்கவில்லையா? அதனை நாம் எவ்வாறு அமைத்து அழகுபடுத்தியுள்ளோம்! அதில் எவ்விதக் குறைபாடும் இல்லை. 7. நாம் பூமியை விரித்து அதில் மலைகளை ஊன்றியுள்ளோம். அதில் எல்லாவகையான அழகிய தாவரங்களையும் முளைக்கச் செய்தோம் 8. இது நம்மிடம் திரும்பக்கூடிய ஒவ்வொரு அடியானுக்கும் படிப்பினையாகவும், நினைவூட்டலாகவும் இருக்கிறது. 9. நாம் வானத்திலிருந்து பாக்கியம்மிக்க நீரை இறக்கி அதன்மூலம் தோட்டங்களையும், அறுவடை செய்யப்படும் தானியங்களையும் 10. அடுக்கடுக்காகக் குலைகள் தள்ளிய நீண்ட பேரீச்சை மரங்களையும் முளைக்கச் செய்தோம், அடியார்களுக்கு உணவாக! 11. அதன்மூலம் நாம் உயிரற்ற பூமியை உயிர்ப்பிக்கின்றோம். இவ்வாறே நீங்கள் பூமியிலிருந்து வெளிப்படுவீர்கள்.

12. இவர்களுக்கு முன்னர் நோவாவின் சமூகம், ‘ரஸ்’வாசிகள், ஸமூத் சமூகம், 13. ஆத், பாரோ மற்றும் லோத்தின் சகோதரர்கள், 14. தோப்புவாசிகள் மற்றும் 'துப்பவு' சமூகம் ஆகிய அனைவரும் தூதர்களை மறுத்தார்கள். எனவே எனது எச்சரிக்கை உறுதியாகி விட்டது. 15. ஆரம்பத்தில் படைத்ததில் நாம் களைப்படைந்து விட்டோமா? ஆயினும் இவர்கள் புதிதாகப் படைப்பது குறித்து சந்தேகத்தில் வீழ்ந்து கிடக்கிறார்கள்.

16. நாமே மனிதனைப் படைத்தோம். அவனது உள்ளத்தில் தோன்றுவதையும் நாம் அறிவோம். அவனது பிடரி நரம்பைவிட நாம் அவனுக்குச் சமீபமாக இருக்கின்றோம். 17. வலது புறமும், இடது புறமும் இரு வானவர்கள் அமர்ந்து பதிவுசெய்து

கொண்டிருக்கிறார்கள். 18. கண்காணித்து எழுதக்கூடியவர் அவனிடம் இல்லாமல் அவன் எந்தச் சொல்லையும் கூறுவதில்லை.

19. மரணவேதனை உண்மையாகவே வந்து சேர்ந்தது. எதைக் கண்டு நீ விரண்டோடினாயோ அது இதுதான் (என்று கூறப்படும்). 20. எக்காளம் ஊதப்படும். இதுதான் எச்சரிக்கப்பட்ட நாளாகும் (என்றும் கூறப்படும்). 21. ஒவ்வொரு மனிதனும் தன்னை விரட்டிக்கொண்டு வருபவர், சாட்சியாளர் ஆகியோருடன் வந்து சேர்வான். 22. "இது குறித்து நீ அலட்சியத்தில் இருந்தாய். உன்னை விட்டும் உன் திரையை நாம் அகற்றி விட்டோம். இன்று உன் பார்வை கூர்மையாக உள்ளது (என்று கூறப்படும்)". 23. அவருடன் இருந்த வானவர், "இதோ என்னிடம் (பதிவேடு) உள்ளது, தயாராக இருக்கிறது" என்று கூறுவார். 24. "நரகத்தில் வீசியெறியுங்கள், நன்றிகெட்ட பிடிவாதக்காரர்கள் அனைவரையும். 25. அவன் நன்மையைத் தடுத்துக்கொண்டும், வரம்புமீறிக்கொண்டும், சந்தேகங்களை உண்டாக்கிக் கொண்டும் இருந்தான். 26. அவன் அல்லாஹ்வுடன் வேறு கடவுளை ஏற்படுத்தினான். எனவே கடுமையான வேதனையில் அவனை வீசி எறியுங்கள் (என்று கூறப்படும்)". 27. அவனுடைய கூட்டாளி (சாத்தான்) கூறுவான்: "எங்கள் இறைவா! நான் இவனை வழிகெடுக்கவில்லை. ஆயினும் இவனே மாபெரும் வழிகேட்டில்தான் இருந்தான்". 28. இறைவன் கூறுவான்: "என் முன்னிலையில் சண்டையிடாதீர்கள். இது குறித்து முன்னரே உங்களை எச்சரித்து விட்டேன். 29. வாக்கு என்னிடத்தில் எப்போதும் மாறுவதில்லை. நான் என் அடியார்களுக்கு அறவே அநியாயம் செய்பவன் அல்லன்".

30. 'நீ நிரம்பி விட்டாயா?' என்று நாம் நரகத்திடம் கேட்கும் நாளில் 'இன்னும் இருக்கிறதா?' என்று அது கேட்கும். 31. இறையச்சமுடையோருக்கு சுவனம் மிக அருகில் கொண்டு

வரப்படும். *32.* எப்போதும் இறைவனின் பக்கம் மீள்வோர் மற்றும் நினைவில் கொள்வோருக்காக உங்களிடம் வாக்களிக்கப்பட்ட சொர்க்கம் இதுதான் என்று கூறப்படும். *33.* அவர் அளவிலாக் கருணையாளனை மறைவில் அஞ்சி, அவன் பக்கம் மீளக்கூடிய உள்ளத்துடன் வந்தவர். *34.* “இதில் நிம்மதியாக நுழைந்து விடுங்கள். இந்த நாளே எப்போதும் இருக்கப் போகின்றது” (என்று அவரிடம் கூறப்படும்). *35.* அங்கே அவர்கள் விரும்புவதெல்லாம் அவர்களுக்குக் கிடைக்கும். நம்மிடம் இன்னும் அதிகமும் உள்ளது.

*36.* நாம் இவர்களுக்கு முன்னர் எத்தனையோ சமூகங்களை அழித்து விட்டோம். அவர்கள் இவர்களைவிட பலம் வாய்ந்தவர்களாக இருந்தார்கள். ஏதாவது புகலிடம் கிடைக்குமா என்று அவர்கள் பல நாடுகளில் சுற்றித் திரிந்தார்கள். *37.* எவரிடம் இதயம் உள்ளதோ அல்லது முழுமனதுடன் செவிதாழ்த்திக் கேட்கிறாரோ அவருக்கு இதில் படிப்பினை இருக்கின்றது.

*38.* நாம் வானங்களையும் பூமியையும் அவற்றிற்கிடையே உள்ளவற்றையும் ஆறுநாட் (காலகட்டங்)களில் படைத்தோம். அதனால் நமக்கு எவ்விதக் களைப்பும் ஏற்படவில்லை. *39.* எனவே அவர்கள் கூறுவதை சகித்துக்கொள்ளும். சூரியன் உதிப்பதற்கு முன்பும், அது மறைந்த பின்பும் உமது இறைவனைப் போற்றிப் புகழ்வீராக. *40.* இரவிலும், சிரம்பணிந்த பின்பும் அவனைப் புகழ்வீராக.

*41.* அழைப்பவர் மிக அருகிலிருந்து அழைக்கும் நாளை செவிமடுத்துக் கேளுங்கள். *42.* அந்நாளில் மக்கள் உறுதியாகப் பேரொலியைக் கேட்பார்கள். அதுதான் வெளிப்படும் நாளாகும். *43.* நிச்சயமாக நாமே வாழ்வளிக்கின்றோம், மரணிக்கச் செய்கின்றோம். நம்மிடமே (அனைவரும்) திரும்ப வேண்டும். *44.* பூமி

*பிளந்துவிடும் நாளில் அவர்கள் அனைவரும் விரைந்தோடுவார்கள். அவர்களை ஒன்றுதிரட்டுவது நமக்கு மிக எளிதானது.*

*45. இவர்கள் கூறுவதை நாம் நன்கறிவோம். நீர் அவர்களை நிர்ப்பந்திப்பவர் அல்லர். எனவே என் எச்சரிக்கையை அஞ்சும் மக்களுக்கு குர்ஆனின் மூலம் அறிவுரை வழங்குவீராக.*

# *51. புழுதியைக் கிளப்பக்கூடியவை (அஸ்ஸாரியாத்)*

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. புழுதியைக் கிளப்பக்கூடிய காற்றுகளின்மீது சத்தியமாக. 2. சுமைகளைச் சுமந்து செல்பவற்றின்மீதும் 3. மெதுவாகச் செல்பவற்றின்மீதும் 4. விவகாரங்களைப் பங்கிடுவோர்மீதும் சத்தியமாக. 5. நிச்சயமாக உங்களுக்கு வாக்களிக்கப்படுவதெல்லாம் உண்மையேயாகும். 6. தீர்ப்பு நாள் வந்தே தீரும். 7. வழிகளையுடைய வானத்தின்மீது சத்தியமாக 8. நிச்சயமாக நீங்கள் முரண்பாட்டில் வீழ்ந்து கிடக்கிறீர்கள். 9. சத்தியத்தைவிட்டு திருப்பப்பட்டவன்தான் திருப்பப்படுகிறான்.*

*10. பொய்யர்கள் அழிந்து விட்டார்கள். 11. அவர்கள் அறியாமையில் ஆழ்ந்து கிடக்கிறார்கள். 12. தீர்ப்பு நாள் எப்போது வரும் என்று அவர்கள் கேட்கிறார்கள். 13. அந்நாளில் அவர்கள் நரகத்தில் வேதனைக்குள்ளாக்கப்படுவார்கள். 14. உங்களது வேதனையைச் சுவையுங்கள். இதற்குத்தானே நீங்கள் அவசரப்பட்டுக் கொண்டிருந்தீர்கள்!. 15. இறையச்சமுடையோர் சோலைகளிலும், நீரூற்றுகளிலும் இருப்பார்கள், 16. தங்கள் இறைவன் தங்களுக்கு வழங்கியதைப் பெற்றுக்கொண்டு. நிச்சயமாக அவர்கள் இதற்கு முன்னர் நன்மை செய்வோராகவே இருந்தார்கள். 17. அவர்கள் இரவு நேரங்களில் குறைவாக உறங்குபவர்களாகவும்*

*18. பின்னிரவு நேரங்களில் பாவமன்னிப்புக் கோருபவர்களாகவும் இருந்தார்கள். 19. அவர்களுடைய செல்வங்களில் யாசிப்போருக்கும், யாசிக்காதோருக்கும் பங்கு உண்டு.*

*20. உறுதியான நம்பிக்கை கொண்டோருக்குப் பூமியில் ஏராளமான சான்றுகள் இருக்கின்றன. 21. உங்களுக்குள்ளேயும் சான்றுகள் இருக்கின்றன. நீங்கள் கவனிக்க மாட்டீர்களா? 22. வானத்தில் உங்களுக்கு வாழ்வாதாரமும், உங்களுக்கு வாக்களிக்கப்பட்டதும் இருக்கின்றது. 23. வானம் மற்றும் பூமியின் இறைவன் மீது ஆணையாக, நீங்கள் பேசுவதைப் போன்றே அது உண்மையானதுதான். 24. ஆப்ரஹாமிடம் வந்த கண்ணியம்மிக்க விருந்தினரின் செய்தி உம்மிடம் வந்ததா? 25. அவர்கள் அவரிடம் வந்து 'சாந்தி உண்டாகட்டும்' என்று கூறியபோது அவரும் 'சாந்தி உண்டாகட்டும்' என்று கூறினார். இவர்கள் அறிமுகமில்லாத மக்களாக இருக்கிறார்களே! (என்று அவர் எண்ணினார்). 26. பின்னர் அவர் தம் குடும்பத்தாரிடம் சென்று பொறிக்கப்பட்ட ஒரு கொழுத்த காளைக்கன்றைக் கொண்டு வந்தார். 27. அதை அவர்களுக்கு முன்னால் வைத்து நீங்கள் உண்ண மாட்டீர்களா? என்று கேட்டார். 28. மனதில் அவர்களைக் குறித்து அச்சம் கொண்டார். அவர்கள் "பயப்பட வேண்டாம்" என்று கூறி, அவருக்கு அறிவுள்ள ஒரு மகன் பிறப்பான் எனும் நற்செய்தியையும் கூறினார்கள். 29. உடனே அவரது மனைவி சப்தமிட்டவளாகத் தன் முகத்தில் அடித்துக் கொண்டே, "நான் மலட்டுக் கிழவியாயிற்றே!" என்று கூறினார். 30. அதற்கு அவர்கள், "இவ்வாறே உம் இறைவன் கூறியுள்ளான். அவன் ஞானம் மிக்கவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான்" என்று கூறினார்கள்.*

*31. "வானவர்களே, நீங்கள் வந்த நோக்கம் என்ன?" என்று ஆப்ரஹாம் கேட்டார். 32. அதற்கு அவர்கள் "நாங்கள்*

குற்றம் புரிந்த ஒரு சமூகத்திடம் அனுப்பப்பட்டுள்ளோம். *33.* சுடப்பட்ட களிமண் கற்களை அவர்களின்மீது பொழிவதற்காக" என்று கூறினார்கள். *34.* அவை வரம்பு மீறியவர்களுக்காக உம் இறைவனிடத்தில் அடையாளம் இடப்பட்டவையாகும். *35.* ஆகவே அங்கிருந்த நம்பிக்கையாளர்களை நாம் வெளியேற்றி விட்டோம். *36.* எனவே அங்கு ஒரே ஒரு வீட்டைத்தவிர கீழ்ப்படிந்தோரின் வீடுகள் எதனையும் நாம் காணவில்லை. *37.* துன்புறுத்தும் வேதனையை அஞ்சும் மக்களுக்காக அங்கு ஒரு சான்றினை விட்டுவைத்துள்ளோம்.

*38.* மோசேயிடமும் ஒரு சான்று உள்ளது. நாம் அவரை பாரோவிடம் தெளிவான ஆதாரத்துடன் அனுப்பினோம். *39.* அவன் தன் அதிகாரத் திமிறினால் புறக்கணித்து "இவர் சூனியக்காரரர் அல்லது பைத்தியக்காரரர்" என்று கூறினான். *40.* எனவே நாம் அவனையும் அவனது படையையும் பிடித்துக் கடலில் வீசி எறிந்து விட்டோம். அவன் பழிப்பிற்குரியவனாக இருந்தான். *41.* ஆத் சமூகத்திடமும் சான்று இருக்கின்றது. நாம் அவர்கள்மீது நாசகரமான காற்றை அனுப்பினோம். *42.* அது தன் எதிரில் பட்டதையெல்லாம் தூள் தூளாக்கி விட்டது. *43.* ஸமூத் சமூகத்திடமும் சான்று உள்ளது. 'ஒரு குறிப்பிட்ட காலம்வரை அனுபவித்துக் கொள்ளுங்கள்' என்று அவர்களிடம் கூறப்பட்டபோது *44.* தம் இறைவனின் கட்டளையை அவர்கள் மீறினார்கள். எனவே அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே பேரிடி அவர்களைத் தாக்கியது. *45.* ஆகவே அவர்களால் எழுந்து நிற்கவும் முடியவில்லை. தம்மைக் காப்பாற்றிக் கொள்ளவும் இயலவில்லை. *46.* இதற்கு முன்னர் நோவாவின் சமூகத்தையும் நாம் அழித்தோம். நிச்சயமாக அவர்கள் கீழ்ப்படியாத மக்களாகவே இருந்தார்கள்.

*47.* நாம் வானத்தை நம் வல்லமையால் அமைத்தோம். நாம் விசாலமாக்குவோராக இருக்கின்றோம். *48.* பூமியை நாமே விரித்தோம். நாம் சிறப்பான முறையில் விரிப்போராக இருக்கின்றோம்!. *49.* நீங்கள் சிந்திக்க வேண்டும் என்பதற்காக ஒவ்வொன்றையும் நாம் இணைஇணையாகப் படைத்துள்ளோம். *50.* ஆகவே அல்லாஹ்வின் பக்கம் விரையுங்கள். அவன் புறத்திலிருந்து நான் உங்களைத் தெளிவாக எச்சரிப்பவனாக இருக்கின்றேன். *51.* அல்லாஹ்வுடன் வேறு இறைவனை ஏற்படுத்தி விடாதீர்கள். அவனிடமிருந்து நான் உங்களைத் தெளிவாக எச்சரிப்பவனாக இருக்கின்றேன்.

*52.* இவ்வாறே இவர்களுக்கு முன்னிருந்தவர்களிடமும் தூதர்கள் வந்தபோதெல்லாம் 'இவர் ஒரு சூனியக்காரரர் அல்லது பைத்தியக்காரரர்' என்றுதான் கூறினார்கள். *53.* இவர்கள் தங்களுக்குள் உபதேசித்துக் கொண்டனரா என்ன? மாறாக இவர்கள் வரம்புமீறும் மக்களாவர். *54.* ஆகவே நீர் அவர்களைப் புறக்கணித்து விடும். உம்மீது எந்தக் குற்றமுமில்லை. *55.* நினைவூட்டுவீராக. நிச்சயமாக நினைவூட்டடல் நம்பிக்கையாளர்களுக்குப் பயனளிக்கும்.

*56.* ஜின்களையும் மனிதர்களையும் என்னை வணங்குவதற்காகவே நான் படைத்துள்ளேன். *57.* நான் அவர்களிடமிருந்து வாழ்வதற்கான எதையும் விரும்பவில்லை. அவர்கள் எனக்கு உணவளிக்க வேண்டும் என்றும் விரும்பவில்லை. *58.* நிச்சயமாக அல்லாஹ்வே வாழ்வாதாரம் அளிப்பவனாகவும், வல்லமை மிக்கவனாகவும், உறுதியானவனாகவும் இருக்கின்றான். *59.* எனவே அக்கிரமக்காரரர்களின் பங்கு அவர்களது தோழர்களின் பங்கைப்போல் ஆகிவிட்டது. எனவே அவர்கள் அவசரப்பட வேண்டாம். *60.* நிராகரிப்பாளர்களுக்கு அவர்கள் எச்சரிக்கப்பட்ட நாளில் கேடுதான்.

# *52. சினாய் மலை (அத்தூர்)*

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. தூர் மலையின்மீதும் 2. திறந்த பக்கங்களில் 3. எழுதப்பட்டுள்ள ஏட்டின்மீதும் 4. மக்கள் நடமாட்டமுள்ள ஆலயத்தின்மீதும் 5. உயர்ந்த முகட்டின்மீதும் 6. பொங்கும் கடலின்மீதும் சத்தியமாக, 7. நிச்சயமாக உம் இறைவனின் வேதனை வந்தே தீரும். 8. அதனைத் தடுப்பவர் எவருமில்லை. 9. அந்தநாளில் வானம் நடுநடுங்கும், 10. மலைகள் நகர்ந்து செல்லும். 11. நிராகரிப்பாளர்களுக்கு அந்தநாளில் கேடுதான். 12. அவர்கள் வீணானவற்றில் ஆழ்ந்து கிடக்கிறார்கள். 13. அந்த நாளில் அவர்கள் நரக நெருப்பில் தள்ளப்படுவார்கள். 14. "நீங்கள் பொய்யெனக் கூறிக்கொண்டிருந்த நரக நெருப்பு இதுதான். 15. இது என்ன சூனியமா அல்லது இது உங்களுக்குப் புலப்படவில்லையா? 16. இதனுள் நுழைந்து விடுங்கள். இனி நீங்கள் சகித்துக்கொள்ளுங்கள் அல்லது சகித்துக்கொள்ளாதிருங்கள். இரண்டும் உங்களுக்குச் சமமே. உங்களின் செயல்களுக்குத்தான் கூலி கொடுக்கப்படுகிறீர்கள் (என்று கூறப்படும்)".*

*17. நிச்சயமாக இறையச்சமுடையோர் சொர்க்கச் சோலைகளிலும், இன்பங்களில் திளைத்தும் இருப்பார்கள். 18. அவர்களது இறைவன் அவர்களுக்கு அளித்தவற்றைக்கொண்டு மகிழ்ச்சியாக இருப்பார்கள். அவர்களது இறைவன் நரக வேதனையிலிருந்தும் அவர்களைப் பாதுகாத்துக் கொண்டான். 19. நீங்கள் செய்த செயல்களுக்காக மகிழ்ச்சியாக உண்ணுங்கள், பருகுங்கள் (என்று கூறப்படும்). 20. அவர்கள் வரிசையாகப் போடப்பட்ட கட்டில்களின்மீது சாய்ந்தவர்களாக இருப்பார்கள்.*

நாம் அவர்களுக்கு அழகிய கண்களையுடைய கன்னியர்களை மணமுடித்து வைப்போம்.

21. நம்பிக்கையாளர்களையும், நம்பிக்கையில் அவர்களைப் பின்பற்றிய அவர்களின் சந்ததிகளையும் நாம் ஒன்றுசேர்த்து வைப்போம். அவர்களின் நன்மைகளில் எந்த ஒன்றையும் நாம் குறைத்துவிட மாட்டோம். ஒவ்வொரு மனிதனும் தான் சம்பாதித்தவற்றிற்குப் பிணையாக இருக்கின்றான். 22. அவர்கள் விரும்பும் கனிகளையும், இறைச்சியையும் நாம் அவர்களுக்கு வழங்கிக் கொண்டே இருப்போம். 23. அங்கு அவர்களுக்கிடையில் மதுக்கிண்ணங்கள் பரிமாறப்படும். அங்கு வீணான பேச்சோ, பாவமான காரியமோ இருக்காது. 24. அவர்களுக்குப் பணிவிடை செய்ய சிறுவர்கள் அவர்களைச் சுற்றிச்சுற்றி வருவார்கள். அவர்கள் (சிப்பிகளுக்குள்) மறைத்து வைக்கப்பட்டிருக்கும் முத்துக்களைப்போல் இருப்பார்கள்! 25. அவர்கள் ஒருவரையொருவர் முன்னோக்கியவாறு விசாரித்துக் கொள்வார்கள். 26. “நாங்கள் இதற்கு முன்னர் எங்கள் குடும்பத்தாரிடையே இருந்தபோது (மறுமையைக் குறித்து) அஞ்சிக் கொண்டிருந்தோம். 27. அல்லாஹ் எங்கள்மீது அருள் புரிந்து கொடிய வேதனையிலிருந்தும் எங்களைக் காப்பாற்றினான். 28. இதற்கு முன்னர் அவனையே நாங்கள் அழைத்துக் கொண்டிருந்தோம். நிச்சயமாக அவன் பேருபகாரம் செய்பவன்; இணையிலாக் கிருபையாளன்”, என்று அவர்கள் கூறுவார்கள்.

29. (தூதரே,) நீர் நினைவூட்டிக் கொண்டிருப்பீராக. உம் இறைவனின் அருளால் நீர் ஜோதிடரும் அல்லர், பைத்தியக்காரரும் அல்லர். 30. அல்லது இவர் ஒரு கவிஞர், இவர் விஷயத்தில் நாங்கள் காலத்தின் சுழற்சியை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம் என்று அவர்கள் கூறுகிறார்களா? 31. நீர் கூறும்: “எதிர்பாருங்கள்.

நானும் உங்களுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்". *32.* அவர்களது அறிவுதான் அவர்களை இவ்வாறு தூண்டுகிறதா? அல்லது அவர்கள் வரம்பு மீறும் மக்களாக இருக்கிறார்களா? *33.* அல்லது இந்தக் குர்ஆனை இவர் சுயமாகப் புனைந்து கொண்டார் என்று அவர்கள் கூறுகிறார்களா? மாறாக அவர்கள் நம்பிக்கை கொள்ள மாட்டார்கள். *34.* அவர்கள் உண்மையாளர்களாயின் இதைப்போன்ற ஒரு வாக்கைக் கொண்டுவரட்டும்.

*35.* அவர்கள் படைப்பாளன் யாருமின்றி தாமாகவே வந்து விட்டார்களா? அல்லது அவர்கள்தான் படைப்பாளர்களா? *36.* அல்லது வானங்களையும், பூமியையும் அவர்கள்தான் படைத்தார்களா? உண்மையில் அவர்கள் நம்பிக்கை கொள்ள மாட்டார்கள். *37.* அல்லது அவர்களிடம் உம் இறைவனின் பொக்கிஷங்கள் இருக்கின்றனவா? அல்லது அவர்கள் ஆதிக்கம் பெற்றவர்களா? *38.* அல்லது அவர்களிடம் ஏணி இருந்து அதன்மூலம் வானுலக இரகசியங்களை செவியேற்கிறார்களா? அப்படியாயின் அவர்களில் செவியேற்பவர் தெளிவான ஆதாரத்தைக் கொண்டுவரட்டும். *39.* அவனுக்குப் பெண் மக்கள். உங்களுக்கு ஆண் மக்களா?

*40.* அல்லது அவர்களிடம் நீர் ஏதேனும் கூலி கேட்டு அதன் சுமையால் அவர்கள் அழுத்தப்படுகிறார்களா? *41.* அல்லது அவர்களிடம் மறைவான ஞானம் இருந்து அதனை அவர்கள் எழுதிக் கொண்டிருக்கிறார்களா? *42.* அல்லது அவர்கள் ஏதேனும் சூழ்ச்சி செய்ய நாடுகின்றார்களா? அப்படியாயின் அந்நிராகரிப்பாளர்கள்தான் சூழ்ச்சியில் அகப்பட்டுக் கொள்வார்கள். *43.* அல்லது அல்லாஹ்வைத்தவிர வேறு ஓர் இறைவன் அவர்களுக்கு இருக்கின்றானா? அவர்களின் இணைவைப்பை விட்டும் அல்லாஹ் தூய்மையானவன்.

*44.* வானத்திலிருந்து அதன் ஏதேனும் ஒரு துண்டு கீழே விழுவதை அவர்கள் பார்த்தாலும் அதனை 'அடர்ந்த மேகம்' என்றுதான் கூறுவார்கள். *45.* அவர்கள் உணர்வற்றுப்போகும் அந்தநாளை சந்திக்கும்வரை நீர் அவர்களை விட்டுவிடும். *46.* அந்தநாளில் அவர்களின் சூழ்ச்சி அவர்களுக்கு எந்தப் பயனையும் அளிக்காது. அவர்கள் (எவராலும்) உதவி செய்யப்படவும் மாட்டார்கள். *47.* அக்கிரமக்காரர்களுக்கு இதைத்தவிர இன்னொரு வேதனையும் உண்டு. ஆயினும் அவர்களில் பெரும்பாலோர் அறிய மாட்டார்கள்.

*48.* உம் இறைவனின் தீர்ப்பை எதிர்பார்த்திருப்பீராக. நிச்சயமாக நீர் நம் கண்காணிப்பில் இருக்கின்றீர். நீர் எழுந்திருக்கும்போது உம் இறைவனைப் போற்றிப் புகழ்வீராக. *49.* இரவிலும், நட்சத்திரங்கள் மறையும் நேரத்திலும் அவனது தூய்மையைப் போற்றுவீராக!.

## 53. நட்சத்திரம் (அந்நஜ்ம்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1.* மறைகின்ற நட்சத்திரத்தின்மீது சத்தியமாக. *2.* உங்கள் தோழர் வழிகெடவுமில்லை, தவறான வழியில் செல்லவுமில்லை. *3.* அவர் தம் மன இச்சைப்படி பேசுவதில்லை. *4.* இது அவருக்கு அறிவிக்கப்படும் இறைச்செய்தியேயாகும். *5.* வல்லமைமிக்கவர் (கேப்ரியேல்) அவருக்கு இதனைக் கற்றுக் கொடுத்துள்ளார். *6.* அவர் நுண்ணறிவாளர். *7.* உயர்ந்த அடிவானத்தில் அவர் தோன்றினார். *8.* பின்னர் அவர் நெருங்கி அருகில் வந்தார். *9.* வில்லின் இரு முனைகளைப்போல் அல்லது அதைவிடவும் நெருங்கி வந்து விட்டார். *10.* அப்போது தன் அடியாருக்கு அல்லாஹ் அறிவிக்க

வேண்டியதை அவர் அறிவித்தார்.11. அவர் (தூதர்) கண்டது குறித்து அவரது உள்ளம் பொய்யுரைக்கவில்லை. 12. ஆயினும் அவர் கண்டது குறித்து அவருடன் நீங்கள் தர்க்கம் செய்கிறீர்களா? 13. (கேப்ரியேல்) மீண்டும் ஒருமுறை இறங்குவதை (தூதர்) கண்டார், 14. இறுதி எல்லையிலுள்ள இலந்தை மரத்தின் அருகில். 15. அதன் அருகில்தான் ஓய்வெடுக்கும் சொர்க்கம் இருக்கின்றது. 16. இலந்தை மரத்தை சூழ்ந்துகொள்ளக்கூடியது சூழ்ந்து கொண்டிருந்தபோது 17. பார்வை தடுமாறவுமில்லை, எல்லை மீறிச் செல்லவுமில்லை. 18. அவர் தம் இறைவனின் மிகப்பெரும் சான்றுகளைக் கண்டார்.

19. ‘லாத்’, ‘உஸ்ஸா’ மற்றும் 20. மூன்றாவது ‘மனாத்’தைப்பற்றி நீங்கள் எப்பொழுதாவது கவனம் செலுத்தியதுண்டா? 21. உங்களுக்கு ஆண் மக்கள் அவனுக்குப் பெண் மக்களா? 22. அப்படியானால் இது ஒரு அநீதியான பங்கீடாகும். 23. இவை நீங்களும் உங்கள் முன்னோர்களும் சூட்டிக்கொண்ட வெறும் பெயர்களைத்தவிர வேறொன்றுமில்லை. அல்லாஹ் எவ்வித ஆதாரத்தையும் இதற்கு இறக்கி வைக்கவில்லை. அவர்கள் யூகங்களையும் மன இச்சைகளையுமே பின்பற்றுகிறார்கள். ஆயினும் அவர்களின் இறைவனிடமிருந்து அவர்களிடம் நேர்வழி வந்தே உள்ளது. 24. மனிதனுக்கு அவன் விரும்புவதெல்லாம் கிடைத்து விடுமா? 25. மறுமையும் இம்மையும் அல்லாஹ்வுக்கே சொந்தம்.

26. வானங்களில் எத்தனையோ வானவர்கள் இருக்கிறார்கள். அவர்களின் பரிந்துரைகள் எப்பயனையும் அளிக்காது. ஆயினும் தான் நாடியவர்களில் அல்லாஹ் எவருக்கு அனுமதியளித்து திருப்திகொண்டானோ அவர்களைத்தவிர. 27. நிச்சயமாக மறுமையின்மீது நம்பிக்கை கொள்ளாதவர்கள்தான் வானவர்களுக்குப் பெண்களுக்கான பெயர்களைச் சூட்டுகிறார்கள். 28. உண்மையில் இதுகுறித்து அவர்களுக்கு எந்த அறிவும் இல்லை. அவர்கள்

யூகத்தைத்தான் பின்பற்றுகிறார்கள். சத்தியத்திற்கு முன்னால் அனுமானம் எப்பயனையும் அளிக்காது. *29.* நம் அறிவுரையைப் புறக்கணித்து இவ்வுலக வாழ்வை மட்டும் விரும்புபவனை நீர் புறக்கணித்து விடும். அவர்களின் அறிவு இந்த அளவுக்குத்தான். *30.* உம் இறைவன் அவனது பாதையை விட்டும் பிறழ்ந்து விட்டவர் யார் என்பதையும் நேரான வழியில் இருப்பவர் யார் என்பதையும் நன்கறிவான்.

*31.* வானங்களில் உள்ளவையும் பூமியில் உள்ளவையும் அல்லாஹ்வுக்கே உரியனவாக இருப்பது ஏனெனில் தீமை செய்தோர் அவர்களின் செயல்களுக்கேற்ப தண்டிக்கப்படுவதற்காகவும் நன்மை செய்தோர் நற்கூலி வழங்கப்படுவதற்காகவும்தான். *32.* அவர்கள் சிறு பாவங்களைத்தவிர பெரும் பாவங்களையும், மானக்கேடானவற்றையும்விட்டு தவிர்ந்து கொள்வார்கள். நிச்சயமாக உம் இறைவன் மன்னிப்பதில் தாராளமானவன்*. அவன் உங்களைப் பூமியிலிருந்து படைத்தபோதும் உங்கள் அன்னையரின் வயிறுகளில் நீங்கள் சிசுக்களாக இருந்தபோதும் உங்களை நன்கறிவான். எனவே உங்களை நீங்களே புனிதர்களாகக் கருதி விடாதீர்கள். உண்மையில் இறையச்சமுடையோரை அவன் நன்கறிவான்.

*33.* இப்படிப்பட்ட மனிதனைப்பற்றி நீர் என்ன கருதுகின்றீர்? அவன் சத்தியத்தைப் புறக்கணித்தான். *34.* சிறிது அளித்துவிட்டுப்

---

*மனிதன் எதனைச் செய்ய வேண்டும் எதனைச் செய்யக் கூடாது என்பதற்கான முழு வழிகாட்டுதலையும் எல்லாம்வல்ல இறைவன் அளித்திருக்கிறான். இருந்தாலும் சிறிய பாவங்களுக்காக மனிதன் மன்னிக்கப்படலாம். அதாவது உணர்ச்சி வசப்பட்ட நிலையில் எதனையாவது செய்துவிட்டு அதனை உடனடியாக உணர்ந்து வெட்கப்பட்டு தனது தவறை ஒப்புக் கொண்டு இறைவனிடம் மன்னிப்புக் கோரினால் இறைவனால் மன்னிக்கப்படலாம்.

பின்னர் நிறுத்திக் கொண்டான். *35.* அவனிடம் மறைவான அறிவு இருந்து அதன்மூலம் அவன் பார்த்துக் கொண்டிருக்கிறானா? *36.* மோசேயின் ஆகமங்களிலும், *37.* தம் வாக்குறுதியை முழுமையாக நிறைவேற்றிய ஆப்ரஹாமின் ஆகமங்களிலும் உள்ள செய்திகள் அவனுக்கு அறிவிக்கப்படவில்லையா? *38.* எந்த ஒருவரும் மற்றொருவர் சுமையைச் சுமக்க முடியாது. *39.* மனிதனுக்கு தான் சம்பாதித்ததைத்தவிர வேறொன்றும் கிடைக்காது. *40.* அவனது சம்பாத்தியம் விரைவில் அவனுக்குக் காட்டப்படும். *41.* பின்னர் நிறைவான கூலி அவனுக்கு வழங்கப்படும்.

*42.* உம் இறைவனிடமே அனைவரும் சென்றடைய வேண்டும். *43.* நிச்சயமாக அவனே சிரிக்க வைக்கிறான், அழவும் வைக்கிறான். *44.* அவனே மரணிக்கச் செய்கிறான், வாழ்வும் அளிக்கிறான். *45.* அவனே ஆண் பெண் இணைகளைப் படைத்தான், *46.* செலுத்தப்படும் ஒரு துளி விந்திலிருந்து!. *47.* மீண்டும் உயிர்கொடுத்து எழுப்புவதும் அவனது பொறுப்பேயாகும். *48.* அவனே செல்வத்தை வழங்கி செல்வந்தனாக்கினான். *49.* அவனே 'ஷிஃஅரா' (ஒரு நட்சத்திரம்) வின் இறைவனாவான்.

*50.* முந்தைய ஆத் சமூகத்தையும் ஸமூத் சமூகத்தையும் அவனே அழித்தான். *51.* அவர்களில் எவரையும் விட்டு வைக்கவில்லை. *52.* அவர்களுக்கு முன்னர் நோவாவின் சமூகத்தையும் அவனே அழித்தான். அவர்கள் அக்கிரமக்காரரர்களாகவும், வரம்பு மீறியவர்களாகவும் இருந்தார்கள். *53.* தலைகீழாகப் புரட்டப்பட்ட ஊர்களையும் அழித்து விட்டான். *54.* எனவே அவர்களை மூட வேண்டியது (வேதனை) மூடிக்கொண்டது. *55.* ஆகவே, மனிதனே! உன் இறைவனின் அருட்கொடைகளில் எதனை நீ சந்தேகிப்பாய்?

*56.* முந்தைய எச்சரிக்கையாளர்களைப் போன்றே இவரும் ஒரு எச்சரிக்கையாளர்தான். *57.* நெருங்க வேண்டியது (மறுமை) நெருங்கி

விட்டது. 58. அதனைத் தடுப்பவர் அல்லாஹ்வைத்தவிர எவரும் இல்லை. 59. இச்செய்தியைக் குறித்தா நீங்கள் வியப்படைகிறீர்கள்! 60. நீங்கள் சிரிக்கிறீர்களே! அழ வேண்டாமா? 61. அலட்சியமாகவும் இருக்கிறீர்களே! 62. எனவே அல்லாஹ்வுக்காக சிரம்பணியுங்கள். அவனையே வணங்குங்கள்.

## 54. சந்திரன் (அல்கமர்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

1. மறுமைநாள் நெருங்கி விட்டது. சந்திரனும் பிளந்து விட்டது. 2. அவர்கள் எந்த ஒரு சான்றைக் கண்டாலும் புறக்கணித்து "இது வழக்கமாக நடைபெறும் சூனியம்தான்" என்று கூறுகிறார்கள். 3. அவர்கள் சத்தியத்தை மறுத்து தங்கள் மன இச்சைகளைப் பின்பற்றுகிறார்கள். ஒவ்வொரு விஷயத்திற்கும் ஒரு குறிப்பிட்ட நேரம் உண்டு. 4. படிப்பினைக்குரிய பல செய்திகள் அவர்களிடம் வந்தே இருக்கின்றன. 5. அவை நிறைவான ஞானம்மிக்கவை. ஆயினும் எச்சரிக்கைகள் பயனளிக்கவில்லை. 6-8. எனவே நீர் அவர்களைப் புறக்கணித்துவிடும். வெறுக்கும் (கேள்விகணக்கு) விஷயத்தின் பக்கம் அழைப்பவர் அழைக்கும் நாளில் பரவிக்கிடக்கும் வெட்டுக்கிளிகளைப்போன்று சவக்குழிகளிலிருந்து அவர்கள் வெளிப்பட்டு அவர்களின் பார்வைகள் தாழ்ந்தவாறு அழைப்பாளரை நோக்கி விரைந்து கொண்டிருப்பார்கள். அப்போது நிராகரிப்பாளர்கள் "இது கடினமான நாள்" என்று கூறுவார்கள்.

9. இவர்களுக்கு முன்னர் நோவாவுடைய சமூகத்தினரும் மறுத்தார்கள். அவர்கள் நம் அடியாரைப் 'பைத்தியம்' என்று கூறி பொய்யுரைத்தார்கள். அவர் மிரட்டப்பட்டார். 10. தம் இறைவனிடம் அவர், "நான் அடக்கப்பட்டுள்ளேன், எனவே

நீயே எனக்கு உதவி புரிவாயாக” என்று பிரார்த்தனை செய்தார். *11.* எனவே நாம் கொட்டும் கடும் மழையால் வானத்தின் வாசல்களைத் திறந்து விட்டோம். *12.* பூமியிலிருந்து நீரூற்றுகளையும் பொங்கச் செய்தோம். விதிக்கப்பட்ட விஷயத்திற்காக இருவகை நீரும் ஒன்றிணைந்தது. *13.* பலகைகளாலும், ஆணிகளாலும் செய்யப்பட்ட கப்பலில் அவர்களை ஏற்றிக்கொண்டோம். *14.* அது நம் கண்காணிப்பில் சென்றது, நிராகரிக்கப்பட்ட அம்மனிதருக்காக தண்டிக்கும்பொருட்டு. *15.* நாம் அதனை ஒரு சான்றாக விட்டு வைத்தோம். சிந்திப்பவர் யாரேனும் இருக்கின்றாரா? *16.* எனவே நான் அளித்த வேதனையும், எச்சரிக்கையும் எப்படி இருந்தன? *17.* நாம் இந்தக் குர்ஆனை அறிவுரை பெறும்பொருட்டு எளிதாக்கியுள்ளோம். ஆகவே அறிவுரை பெறுபவர் யாரேனும் இருக்கின்றாரா?

*18.* ‘ஆத்’ சமூகமும் நிராகரித்தது. அதனால் நான் அளித்த வேதனையும், எச்சரிக்கையும் எப்படி இருந்தன? *19.* நீடித்த துர்ப்பாக்கியமுடைய ஒரு நாளில் (கடும் குளிரான நாளில்) நாம் அவர்கள்மீது புயல் காற்றை அனுப்பினோம். *20.* வேரோடு பிடுங்கப்பட்ட பேரீச்சை மரங்களைப்போல் அது மக்களைத் தூக்கி எறிந்தது. *21.* எனவே நான் அளித்த வேதனையும், எச்சரிக்கையும் எப்படி இருந்தன? *22.* நாம் இந்தக் குர்ஆனை அறிவுரை பெறும் பொருட்டு எளிதாக்கியுள்ளோம். ஆகவே அறிவுரை பெறுபவர் யாரேனும் இருக்கின்றாரா?

*23.* ஸமூத் சமூகமும் எச்சரிக்கைகளை பொய்யெனக் கருதியது. *24.* அவர்கள், “நம்மிலுள்ள ஒரு மனிதரையா நாம் பின்பற்றுவது? நாம் அவ்வாறு செய்தால் வழிகேட்டிலும், புத்தி தடுமாற்றத்திலும் வீழ்ந்து விடுவோம். *25.* நமக்கு மத்தியில் இவருக்குத்தான் ‘அறிவுரை’ வழங்கப்பட்டுள்ளதா? இல்லை. இவர்

ஒரு பொய்யர்; ஆணவம் கொண்டவர்" என்று கூறினார்கள். *26.* 'பொய்யர்' 'ஆணவங்கொண்டவர்' யார் என்பதை நாளை அவர்கள் திடமாக அறிந்துகொள்வார்கள். *27.* நாம் அவர்களுக்குச் சோதனையாக ஒரு பெண் ஒட்டகத்தை அனுப்பி வைப்போம். எனவே நீர் அவர்களைப் பொறுமையுடன் கவனித்து வாரும். *28.* "தண்ணீர் அவர்களுக்கிடையே பங்கிடப்பட்டுள்ளது. ஒவ்வொருவரும் முறைப்படி நீரருந்த வரலாம்" என்று அவர்களுக்கு அறிவித்து விடும். *29.* அவர்கள் தம் தோழனை அழைத்தார்கள். அவன் ஒட்டகத்தைக் கொன்று விட்டான். *30.* எனவே நான் அளித்த வேதனையும், எச்சரிக்கையும் எப்படி இருந்தன? *31.* நாம் அவர்கள்மீது பெரும் சப்தத்தை அனுப்பினோம். அவர்கள் தொழுவத்தில் மிதித்து நசுக்கப்பட்ட வைக்கோல்களைப் போலாகி விட்டார்கள். *32.* நாம் இந்தக் குர்ஆனை அறிவுரை பெறும் பொருட்டு எளிதாக்கியுள்ளோம். ஆகவே அறிவுரை பெறுபவர் யாரேனும் இருக்கின்றாரா?

*33.* லோத்தின் சமூகமும் எச்சரிக்கைகளை பொய்யெனக் கருதினார்கள். *34.* நாம் அவர்கள்மீது கற்களைப் பொழிகின்ற காற்றை அனுப்பினோம். ஆயினும் லோத்தின் குடும்பத்தினரைப் பின்னிரவில் நாம் காப்பாற்றிக் கொண்டோம். *35.* இது நம் அருளாகும். இவ்வாறே நன்றி செலுத்துவோருக்கு நாம் கூலி வழங்குகிறோம்.*36.* லோத் நம் தண்டனையைக் குறித்து அவர்களை எச்சரிக்கை செய்திருந்தார். ஆயினும் அவர்கள் எச்சரிக்கையைக் குறித்து சந்தேகம் கொண்டு தர்க்கித்தார்கள். *37.* அவரது விருந்தினரை தம் இச்சைக்கு இணங்க வைக்குமாறு அவரிடம் வற்புறுத்தினார்கள். நாம் அவர்களின் பார்வைகளைப் பறித்து விட்டோம். எனவே அனுபவியுங்கள் எனது தண்டனையையும், எச்சரிக்கையையும் (என்று விதித்தோம்). *38.* அதிகாலையில் நிலையான வேதனை

அவர்களைத் தாக்கியது. 39. இதோ அனுபவியுங்கள், எனது தண்டனைகளையும், எச்சரிக்கைகளையும். 40. நாம் இந்தக் குர்ஆனை அறிவுரை பெறும் பொருட்டு எளிதாக்கியுள்ளோம். ஆகவே அறிவுரை பெறுபவர் யாரேனும் இருக்கின்றாரா?

41. எச்சரிப்பவர்கள் பாரோவுடைய சமூகத்தினரிடமும் வந்தார்கள். 42. அவர்கள் நம் சான்றுகள் அனைத்தையும் நிராகரித்தார்கள். எனவே யாவற்றையும் மிகைத்த பலம் மிக்கவன் தண்டிப்பதைப்போன்று நாம் அவர்களைத் தண்டித்தோம்.

43. இவர்களைவிட உங்களிலுள்ள நிராகரிப்பாளர்கள் சிறந்தவர்களா? அல்லது வேதங்களில் 'உங்களுக்கு மன்னிப்பு உண்டு' என்று ஏதும் உள்ளதா? 44. அல்லது 'பெருங்கூட்டத்தினரான நாங்கள்தான் மேலோங்குவோம்' என்று அவர்கள் கூறுகிறார்களா? 45. விரைவில் இக்கூட்டம் தோல்வியைத் தழுவி புறங்காட்டி ஓடும். 46. ஆயினும் மறுமைநாள்தான் அவர்களுக்கு வாக்களிக்கப்பட்ட நாளாகும். அந்நேரம் மிகக் கடுமையானதும் மிகக் கசப்பானதுமாகும். 47. நிச்சயமாக குற்றவாளிகள் வழிகேட்டிலும், அறியாமையிலும் இருக்கின்றார்கள். 48. அவர்கள் நரகில் முகங்குப்புற இழுத்து வரப்படும் நாளில் அவர்களிடம் கூறப்படும் 'அனுபவியுங்கள் நரக நெருப்பை' என்று.

49. நாம் ஒவ்வொன்றையும் ஒரு அளவின்படியே படைத்துள்ளோம். 50. கண் இமைக்கும் நேரத்தில் நம் கட்டளை நிறைவேறிவிடுகிறது. 51. உங்களைப்போன்ற பலரையும் நாம் அழித்து விட்டோம். சிந்திப்பவர் யாரேனும் இருக்கின்றாரா? 52. அவர்கள் செய்தவை யாவும் பதிவேடுகளில் உள்ளது. 53. சிறியவை, பெரியவை அனைத்தும் பதிவு செய்யப்பட்டுள்ளது. 54. இறையச்சமுடையவர்கள் சுவனச் சோலைகளிலும், ஆறுகளிலும்

(அதன் அருகிலும்) தங்கியிருப்பார்கள். 55. வலிமைமிக்க அரசனுக்கு அருகில் சத்தியத்தின் இருக்கையில் அவர்கள் அமர்ந்திருப்பார்கள்.

## 55. அளவிலாக் கருணையாளன் (அர்ரஹ்மான்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

1. அளவிலாக் கருணையாளன் 2. குர்ஆனைக் கற்றுக் கொடுத்தான். 3. அவனே மனிதனைப் படைத்தான். 4. அவனுக்குப் பேசக் கற்றுக் கொடுத்தான். 5. சூரியனும், சந்திரனும் ஒரு ஒழுங்கின்படியே இயங்குகின்றன. 6. செடி கொடிகளும், மரங்களும் அவனுக்குச் சிரம் பணிகின்றன. 7-8. நீங்கள் நீதி தவறிவிடக்கூடாது என்பதற்காக அவனே வானத்தை உயர்த்தி நீதியை நிலைநிறுத்தினான். 9. நிறுவையை நிறுப்பதை நியாயமாகச் செய்யுங்கள், எடையைக் குறைத்து விடாதீர்கள்.

10. அவன் பூமியைப் படைப்பினங்களுக்காக அமைத்துள்ளான். 11. அதில் பழங்களும், பாளைகளுடைய பேரீச்சை மரங்களும் 12. தொலியுடைய தானியங்களும், மணம்வீசும் மலர்களும் இருக்கின்றன. 13. ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் (மனிதர்களும் ஜின்களும்) உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்? 14. தட்டினால் சப்தமுண்டாகும் சுட்ட மண்பாண்டத்தைப்போன்ற களிமண்ணிலிருந்து அவன் மனிதனைப் படைத்தான். 15. அவன் தீப்பிழம்பிலிருந்து ஜின்களைப் படைத்தான். 16. ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்? 17. இரு கீழ்த் திசைகளுக்கும், இரு மேல் திசைகளுக்கும் அவனே அதிபதி. 18. ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் உங்கள்

இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்? *19.* அவனே இரு கடல்களையும் ஒன்றோடொன்று சங்கமிக்கச் செய்தான். *20.* அவற்றிற்கிடையில் ஒரு தடுப்பும் இருக்கின்றது. அவை அதனை மீறுவதில்லை. *21.* ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்? *22.* அவ்விரண்டிலிருந்தும் முத்தும் பவளமும் வெளிப்படுகின்றன. *23.* ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்? *24.* கடலில் மலைகளைப்போன்று உயர்ந்து நிற்கும் கப்பல்களும் அவனுக்குரியதே. *25.* ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்?

*26.* பூமியில் உள்ள அனைத்தும் அழியக்கூடியவையே! *27.* மகத்துவமும், கண்ணியமும் நிறைந்த உம் இறைவன் மட்டுமே நிலைத்திருப்பான். *28.* ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்? *29.* வானங்களிலும் பூமியிலும் உள்ளவர்கள் அவனிடமே கேட்கிறார்கள். ஒவ்வொருநாளும் அவன் செயல்பாட்டிலேயே இருக்கின்றான். *30.* ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்?

*31.* இரு பெரும் கூட்டத்தார்களே! அதிவிரைவில் நாம் உங்களின்மீது கவனம் செலுத்துவோம். *32.* ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்? *33.* மனித, ஜின் கூட்டத்தார்களே! வானங்கள் மற்றும் பூமியின் எல்லைகளை உங்களால் கடந்து செல்ல இயலுமானால் கடந்து செல்லுங்கள். ஆயினும் வலிமையின்றி உங்களால் கடந்து செல்ல இயலாது. *34.* ஆகவே நீங்கள் இரு பிரிவினரும்

*உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்? **35.** உங்கள் மீது தீச்சுவாலையும், புகையும் அனுப்பப்படும். உங்களால் தப்பித்துக் கொள்ள முடியாது*. **36.** ஆகவே உங்கள் இறைவனின் எந்தெந்த வல்லமைகளை நீங்கள் மறுப்பீர்கள்?*

***37.** வானம் பிளந்து ஆலிவ் (ஜைத்தூன்) எண்ணெய்யைப் போல் சிவப்பாகி விடும். **38.** ஆகவே உங்கள் இறைவனின் எந்தெந்த வல்லமைகளை நீங்கள் மறுப்பீர்கள்? **39.** அந்நாளில் மனிதர்களோ, ஜின்களோ தம் பாவங்களைக் குறித்து விசாரிக்கப்பட மாட்டார்கள். **40.** ஆகவே உங்கள் இறைவனின் எந்தெந்த வல்லமைகளை நீங்கள் மறுப்பீர்கள்? **41.** குற்றவாளிகள் தங்களின் அடையாளங்களினால் அறியப்படுவார்கள். அப்போது அவர்களின் நெற்றி முடியையும் பாதங்களையும் பிடித்து (நரகத்தில் எறியப்படுவார்கள்). **42.** ஆகவே உங்கள் இறைவனின் எந்தெந்த வல்லமைகளை நீங்கள் மறுப்பீர்கள்? **43.** குற்றவாளிகள் பொய்யெனக் கூறிக்கொண்டிருந்த நரகம் இதுதான். **44.** அவர்கள் அதற்கிடையிலும், கொதிக்கின்ற நீருக்கிடையிலும் சுற்றிக் கொண்டிருப்பார்கள். **45.** ஆகவே உங்கள் இறைவனின் எந்தெந்த வல்லமைகளை நீங்கள் மறுப்பீர்கள்?*

---

*இந்த நடப்புலகு என்பது சோதனைக்கான ஒரு இடமேயாகும். இந்த சோதனைக்கான காலம் எவ்வளவு நீள்கிறதோ அதுவரை தங்கள் மனவிருப்பப்படி கர்வத்துடன் செயல்படும் வாய்ப்பு ஒவ்வொருவருக்கும் உள்ளது. ஆனால் இந்த முழுமையான சுதந்திரம் இருந்தும் எந்த ஒரு மனிதனுக்கும் அல்லது ஜின்னுக்கும் பிரபஞ்சத்தின் எல்லைகளை மீறிச்செல்லும் சக்தி கிடையாது. மனிதன் முழுக்க முழுக்க இறைவனின் பிடிக்குள் இருக்கிறான் என்பதை நிரூபிக்க இந்த உண்மையே போதுமானதாகும். சோதனைக்காலம் முடிவுற்றதும் இறைவன் மக்களைப் பிடிக்கத் தொடங்கும்போது தன்னைத்தானே காத்துக் கொள்வது என்பது எவருக்கும் சாத்தியப்படாது.

*46.* தம் இறைவனின் முன்னால் நிற்பதை அஞ்சியவருக்கு இரு சொர்க்கச் சோலைகள் உண்டு. *47.* ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்? *48.* அவையிரண்டும் எண்ணற்ற கிளைகளையுடையவை. *49.* ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்? *50.* அவ்விரண்டிலும் இரு நீரூற்றுகள் ஓடிக்கொண்டிருக்கும். *51.* ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்? *52.* அவ்விரண்டிலும் ஒவ்வொரு கனிவர்க்கமும் இரு வகையானவை. *53.* ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்? *54.* அவர்கள் விரிப்புகளின்மீது சாய்ந்தவர்களாக இருப்பார்கள். அவற்றின் உட்பாகங்கள் கனமான பட்டிலானவையாக இருக்கும். அவ்விரு சோலைகளிலும் பறிப்பதற்கு ஏதுவாக பழங்கள் நெருக்கமாக இருக்கும். *55.* ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்? *56.* அவற்றில் நாணும் விழிகளுடைய கன்னியர்கள் இருப்பார்கள். அவர்களை இதற்கு முன்னர் எந்த மனிதனும், ஜின்னும் தீண்டியிருக்க மாட்டார்கள். *57.* ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்? *58.* அவர்கள் மாணிக்கத்தையும், பவளத்தையும் போன்றிருப்பார்கள். *59.* ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்? *60.* நன்மைக்கு நன்மையைத்தவிர வேறு கூலி உண்டா? *61.* ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்?

*62.* அவற்றைத்தவிர இன்னும் இரு சோலைகளும் இருக்கின்றன. *63.* ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் உங்கள்

இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்? 64. இரண்டும் கரும்பச்சை நிறமுடையவை. 65. ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்? 66. அவ்விரண்டிலும் இரு ஊற்றுகள் பொங்கிக் கொண்டிருக்கும். 67. ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்? 68. அவ்விரண்டிலும் (பல்வேறு) கனிகளும், பேரீச்சையும், மாதுளையும் இருக்கும். 69. ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்? 70. அவற்றில் அழகிய நற்குணமுள்ள கன்னியர்கள் இருப்பார்கள் 71. ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்? 72. கூடாரங்களில் வசிக்கும் சுவனக் கன்னியர்களும் இருப்பார்கள். 73. ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்? 74. அவர்களை இவர்களுக்கு முன்னர் எந்த மனிதனும், ஜின்னும் தீண்டியிருக்க மாட்டார்கள். 75. ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்? 76. அவர்கள் பச்சை நிற கம்பளங்களிலும், விலைமதிப்பற்ற அழகிய விரிப்புகளிலும் சாய்ந்தவர்களாக இருப்பார்கள். 77. ஆகவே நீங்கள் இரு பிரிவினரும் உங்கள் இறைவனின் அருட்கொடைகளில் எதனை மறுப்பீர்கள்? 78. கண்ணியமும், மகத்துவமும் நிறைந்த உம் இறைவனின் பெயர் அருள்வளம் மிக்கதாகும்.

## 56. நிகழக்கூடியது (அல்வாகிஆ)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

1. நிகழக்கூடியது நிகழ்ந்து விடும்போது 2. அது நிகழ்வதை நிராகரிப்பவர் எவருமில்லை. 3. அது சிலரைத்

*தாழ்த்தக்கூடியதும் சிலரை உயர்த்தக்கூடியதுமாகும். 4. பூமி பலமாகக் குலுக்கப்படும்போது, 5. மலைகள் உடைபட்டுத் தூள்தூளாகி விடும். 6. அது பறக்கடிக்கப்பட்ட புழுதியாகி விடும். 7. அப்போது நீங்கள் மூன்று பிரிவினராகி விடுவீர்கள்*.*

*8. (ஒரு பகுதியினர்) வலப்புறத்தில் உள்ளவர்கள்! எவ்வளவு சிறப்பானவர்கள் வலப்புறத்தில் உள்ளவர்கள்! 9. (மற்றொரு பகுதியினர்) இடப்புறத்தில் உள்ளவர்கள்! எவ்வளவு மோசமானவர்கள் இடப்புறத்தில் உள்ளவர்கள்! 10. முந்தியவர்கள் முந்தியவர்களே! 11. அவர்கள் (இறைவனுக்கு) நெருக்கமானவர்கள். 12. அருட்கொடைகள் நிறைந்த சுவனங்களில் இருப்பார்கள். 13. அவர்களில் பெரும்பாலோர் முதலில் கூறப்பட்ட வகுப்பாரிலிருந்தும் 14. சிலர் பிறகு கூறப்பட்ட வகுப்பாரிலிருந்தும் இருப்பார்கள். 15. தங்க இழைகளால் நெய்யப்பட்ட இருக்கைகளில் சாய்ந்த வண்ணம் 16. ஒருவரையொருவர் பார்த்தவாறு அமர்ந்திருப்பார்கள். 17. என்றும் இளமையாக இருக்கக்கூடிய சிறுவர்கள் அவர்களிடம் சுற்றிக் கொண்டிருப்பார்கள், 18. கூஜாக்களையும், குவளைகளையும், தூய்மையான*

---

*இந்த நடப்புலகில் தான் விரும்பிய எதனையும் செய்வதற்கான சுதந்திரம் இருப்பதாக மனிதன் எண்ணுகிறான். எனவே மறுமைநாளில் விதிக்கப்படும் தண்டனைகளைக் குறித்து எந்த தாக்கமும் இல்லாதிருக்கிறான். ஆனால் இந்த உலகு என்பது உருவாக்கப்பட்டதைப் போன்றே மறுமை உலகின் உருவாக்கமும் சாத்தியமான ஒன்றே. அந்தவேளை வரும்போது முழுமையான அமைப்பு முறையும் மீண்டும் நிகழும். நிலையில் உயர்வாக உள்ளவர்கள் தாழ்ந்து போவார்கள், தாழ்ந்த நிலையில் இருப்பவர்கள் உயர்த்தப்படுவார்கள். அந்த நேரத்தில் மனிதர்கள் மூன்று பிரிவாகப் பிரிக்கப்படுவார்கள். அல் சாபிக்கூன் எனப்படுவோர் முன்னிலை மக்களாகவும், அஸ்ஹாப் யமீன் எனப்படுவோர் வலதுபக்க மக்களாகவும், அஸ்ஹாப் அல்ஷிமால் எனப்படுவோர் இடப்பக்க மக்களாகவும் இருப்பார்கள்.

மதுக்கிண்ணங்களையும் ஏந்தியவாறு! 19. அதனால் அவர்களுக்குத் தலைவலியும் வராது, புத்தியும் பேதலிக்காது. 20. அவர்கள் விரும்பும் பழங்களையும் 21. அவர்களுக்குப் பிடித்தமான பறவைகளின் இறைச்சிகளையும் (அவர்களிடம் கொண்டு வருவார்கள்) 22. அழகிய பெரிய விழிகளையுடைய சுவனக் கன்னியர்களும் அவர்களுக்காக இருப்பார்கள். 23. அவர்கள் சிப்பிக்குள் வைக்கப்பட்டுள்ள முத்துக்களைப் போன்று இருப்பார்கள்! 24. இது அவர்கள் செய்தவற்றுக்கான கூலியாகும். 25. அங்கு அவர்கள் வீணானவற்றையோ, பாவமானவற்றையோ செவியுற மாட்டார்கள். 26. ஆயினும் அமைதி, அமைதி என்ற சொல்லைத் தவிர!.

27. (ஒரு பகுதியில்) வலப்புறத்தில் உள்ளவர்கள்! எவ்வளவு சிறப்பானவர்கள் வலப்புறத்தில் உள்ளவர்கள்! 28. முள்ளே இல்லாத இலந்தை மரங்களில், 29. அடுக்கடுக்கான குலைகள் கொண்ட வாழைகள், 30. பரந்து விரிந்த நிழல்கள், 31. ஓடிக் கொண்டிருக்கும் ஆறுகள், 32. ஏராளமான கனிகள்... 33. அது என்றும் முடிவடையாதது. அவற்றிற்கு எவ்விதத் தடையுமில்லை. 34. மற்றும் உயர்ந்த விரிப்புகளிலும் அவர்கள் இருப்பார்கள். 35. அப்பெண்களை நாம் தனித்துவத்துடன் படைத்தோம். 36. அவர்களை நாம் கன்னியர்களாகவே வைத்தோம். 37-38. மனதை ஈர்க்கக்கூடியவர்களாகவும், சம வயதுடையவராகவும் ஆக்கினோம், வலப்புறத்தில் உள்ளவர்களுக்காக. 39. அவர்களில் பெரும்பாலோர் முன்னோர்களிலிருந்தும் 40. பின்னோர்களிலிருந்தும் இருப்பார்கள்.

41. இடப்புறத்தில் உள்ளவர்கள்! எவ்வளவு மோசமானவர்கள் இடப்புறத்தில் உள்ளவர்கள்!. 42. அவர்கள் நெருப்பிலும், கொதிக்கும் நீரிலும், 43. கரும்புகையின் நிழலிலும் இருப்பார்கள்.

44. அதில் குளிர்ச்சியும் இல்லை, கண்ணியமும் இல்லை. 45. இவர்கள் இதற்கு முன்னர் மகிழ்ச்சியானவர்களாக இருந்தார்கள். 46. பெரும் பாவங்களைப் புரிவதில் பிடிவாதமாக இருந்தார்கள். 47. “நாங்கள் இறந்து மண்ணாகவும், எலும்புகளாகவும் ஆகிவிட்டாலும் மீண்டும் எழுப்பப்படுவோமா? 48. எங்களின் முன்னோர்களுமா?” என்றும் அவர்கள் கேட்டுக் கொண்டிருந்தார்கள். 49. நீர் கூறும்: முன்னோர்கள், பின்னோர்கள், 50. அனைவரும் ஒரு குறிப்பிட்ட நாளில் ஒன்றுதிரட்டப்படுவீர்கள். 51. பின்னர் வழிகேடர்களே! நிராகரித்து விட்டவர்களே! 52. நீங்கள் ‘கள்ளி’ மரத்திலிருந்து உண்பீர்கள். 53. அதிலிருந்து வயிறுகளை நிரப்பிக் கொள்வீர்கள். 54. பின்னர் கொதிக்கின்ற நீரை அருந்துவீர்கள். 55. தாகம் கொண்ட ஒட்டகத்தைப்போல அருந்துவீர்கள். 56. இதுதான் தீர்ப்பு நாளில் அவர்களுக்குரிய விருந்தாகும்.

57. நாமே உங்களைப் படைத்தோம். ஏன் நீங்கள் ஏற்றுக் கொள்வதில்லை? 58. நீங்கள் செலுத்துகின்ற விந்தைக் கவனித்தீர்களா? 59. அதனை நீங்கள் படைக்கின்றீர்களா? அல்லது நாம் படைக்கின்றோமா? 60. நாம் உங்களிடையே மரணத்தை விதியாக்கி விட்டோம். 61. உங்களுக்குப் பதிலாக உங்களைப்போன்றே மற்றவர்களைப் படைப்பதற்கும், நீங்கள் அறியாத வடிவத்தில் உங்களை ஆக்கி விடுவதற்கும் நாம் இயலாதவரல்லர். 62. உங்களின் முதல் படைப்பினைப்பற்றி நீங்கள் அறிந்தேயுள்ளீர்கள். பிறகு ஏன் அதைக்கொண்டு நீங்கள் படிப்பினை பெறுவதில்லை?. 63. நீங்கள் விதைக்கின்ற விதைகளைக் கவனித்துப் பார்த்தீர்களா? 64. அதனை நீங்கள் முளைக்கச் செய்கிறீர்களா? அல்லது நாம் முளைக்கச் செய்கிறோமா? 65-67. நாம் நாடினால் அதனைக் கூளமாக ஆக்கி விடுவோம், ‘அந்தோ நாங்கள் அழிந்துவிட்டோமே, மாறாக நாங்கள் எதையும் பெறாதவர்களாகி விட்டோமே’, என்று

பின்னர் நீங்கள் புலம்பிக் கொண்டேயிருப்பீர்கள். *68.* நீங்கள் அருந்துகின்ற நீரைக் கவனித்தீர்களா? *69.* அதனை மேகத்திலிருந்து நீங்கள் பொழியச் செய்கிறீர்களா? அல்லது நாம் பொழியச் செய்கிறோமா? *70.* நாம் நாடினால் அதனை உப்பு நீராக்கி விடுவோம். பிறகு ஏன் நீங்கள் நன்றி செலுத்துவதில்லை? *71.* நீங்கள் எரிக்கின்ற நெருப்பைக் கவனித்தீர்களா? *72.* அதற்கான மரத்தை நீங்கள் உருவாக்கினீர்களா? அல்லது நாம் உருவாக்கினோமா? *73.* நாம் அதை நினைவூட்டலாகவும், வழிப்போக்கர்களுக்கும் பயனளிக்கக்கூடியதாகவும் ஆக்கியுள்ளோம்.*74.* எனவே நீர் மகத்துவம்நிறைந்த உம் இறைவனின் பெயரைத் துதிப்பீராக.

*75.* இல்லை. நட்சத்திரங்களின் அமைவிடங்கள்மீது நான் சத்தியம் செய்கிறேன். *76.* நீங்கள் சிந்தித்துப் பார்த்தீர்களானால் இது மகத்தான சத்தியமாகும். *77.* நிச்சயமாக இது கண்ணியமிக்க குர்ஆனாகும். *78.* ஒரு பாதுகாப்பான ஏட்டில் (எழுதப்பட்டுள்ளது). *79.* தூய்மையாளர்கள்தான் அதனைத் தொடுவார்கள். *80.* அது அகிலங்களின் இறைவனால் அருளப்பட்டதாகும். *81.* இந்த வாக்கையா நீங்கள் அலட்சியப்படுத்துகிறீர்கள்? *82.* அதனை பொய்யென்பதைத்தான் உங்கள் தொழிலாக்கிக் கொண்டீர்களா?

*83.* உயிர் தொண்டையை அடையும்போது, *84.* நீங்கள் பார்த்துக் கொண்டிருப்பீர்கள். *85.* நாம் உங்களைவிட அவருக்கு மிக அருகில் இருக்கின்றோம். ஆயினும் உங்களால் அதனைக் காணமுடியாது. *86.* நீங்கள் கட்டுப்பட்டவர்களாக இல்லையெனில் *87.* அந்த உயிரை ஏன் திரும்பக் கொண்டு வருவதில்லை? நீங்கள் உண்மையாளர்களாயின். *88.* ஆயினும் அவர் (இறைவனுக்கு) நெருக்கமானவராக இருந்தால் *89.* அவருக்கு ஓய்வும், சிறந்த உணவும், அருட்கொடைகள் நிறைந்த சுவனமும் உண்டு. *90.* அவர் வலப்புறத்தில் உள்ளவராக இருந்தால், *91.* உம்மீது

'அமைதி' உண்டாகட்டும், நீர் வலப்புறத்தில் உள்ளவராக தூற்றியவராக இருக்கின்றீர் (என்று கூறப்படும்). *92.* ஆனால் அவர் வழிகெட்ட பொய்யராக இருந்தால் *93.* கொதிக்கும் நீரால் விருந்தளிக்கப்பட்டு *94.* நரகத்தில் எறியப்படுவார். *95.* நிச்சயமாக இது மிகவும் உறுதியான உண்மையாகும். *96.* எனவே நீர் மகத்துவமிக்க உம் இறைவனின் பெயரைத் துதிப்பீராக.

# 57. இரும்பு (அல்ஹதீத்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1.*வானங்களிலும், பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்வைப் புகழ்கின்றன. அவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான். *2.* வானங்கள் மற்றும் பூமியின் ஆட்சியதிகாரம் அவனுக்கே உரியது. அவனே வாழ்வும் மரணமும் அளிக்கின்றான். அவன் எல்லாவற்றின் மீதும் பேராற்றல் உடையவன். *3.* அவனே முதலும் முடிவுமானவன். அவனே வெளிப்படையானவனும், மறைவானவனுமாவான். அவன் அனைத்தையும் அறிந்தவன். *4.* அவனே வானங்களையும், பூமியையும் ஆறுநாட்(காலகட்டங்)களில் படைத்தான். பின்னர் அரியணையின்மீது நிலைகொண்டான். பூமியினுள் செல்வதையும், அதிலிருந்து வெளிப்படுவதையும், வானத்திலிருந்து இறங்குவதையும், அதில் ஏறுவதையும் அவன் அறிகிறான். நீங்கள் எங்கிருந்தபோதிலும் அவன் உங்களுடனே இருக்கிறான். நீங்கள் செய்பவற்றை எல்லாம் அவன் பார்த்துக் கொண்டிருக்கிறான் *5.* வானங்கள் மற்றும் பூமியின் ஆட்சியதிகாரம் அவனுக்கே உரியது. அனைத்து விவகாரங்களும் அவனிடமே திரும்புகின்றன. *6.* அவன் இரவைப் பகலில் புகுத்துகிறான், பகலை இரவில் புகுத்துகிறான். அவன் உள்ளங்களில் உள்ளவற்றையும் நன்கறிந்தவன்.

*7. அல்லாஹ்வின்மீதும், அவனது தூதரின்மீதும் நம்பிக்கை கொள்ளுங்கள். அல்லாஹ் உங்களைப் பிரதிநிதிகளாக்கித் தந்த செல்வங்களிலிருந்து செலவு செய்யுங்கள். உங்களில் நம்பிக்கைகொண்டு செலவு செய்வோருக்குப் பெரும் கூலி இருக்கின்றது. 8. அல்லாஹ்வின்மீது நம்பிக்கை கொள்ளாமலிருக்க உங்களுக்கு என்ன நேர்ந்தது? தங்கள் இறைவனின் மீது நம்பிக்கை கொள்ளுமாறு தூதர் உங்களை அழைத்துக் கொண்டிருக்கிறார். இறைவன் உங்களிடம் உறுதிமொழியையும் பெற்றுள்ளான். நீங்கள் நம்பிக்கையாளர்களாக இருந்தால் (அதனை நிறைவேற்றுங்கள்). 9. அவனே தன் அடியார்மீது தெளிவான வசனங்களை அருளுகிறான், உங்களை இருளிலிருந்து வெளியேற்றி ஒளியின் பக்கம் கொண்டு வருவதற்காக. அல்லாஹ் உங்கள் விஷயத்தில் மென்மையானவனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். 10. இறைவழியில் செலவு செய்யாமலிருக்க உங்களுக்கு என்ன நேர்ந்தது? வானங்கள் மற்றும் பூமியிலுள்ளவை அல்லாஹ்வுக்கே உரித்தானது. உங்களில் வெற்றிபெற்ற பிறகு செலவு செய்வோரும், போர் புரிவோரும் வெற்றி பெறுவதற்கு முன்னால் செலவு செய்தவர்களுக்கும், போர் புரிந்தவர்களுக்கும் சமமாக மாட்டார்கள். இவர்கள் அவர்களைவிட பதவியில் உயர்ந்தவர்கள். அல்லாஹ் அனைவருக்கும் நன்மையையே வாக்களித்துள்ளான். அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை நன்கறியக்கூடியவன்*.*

*11. அல்லாஹ்வுக்கு அழகிய கடன் அளிப்பவர் யார்? அவன் அதனை அவருக்குப் பன்மடங்காக்கித் தருவான். அவருக்குக் கண்ணியமான கூலியும் உண்டு. 12. அந்நாளில் நீர் நம்பிக்கைகொண்ட ஆண்களையும், பெண்களையும் காண்பீர், அவர்களுக்கு முன்னும், வலதுபுறமும் ஒளி ஓடிக்கொண்டிருக்கும். இன்றைய தினம்*

---

*முன்னுரையைக் காண்க பக். 19

உங்களுக்கு சொர்க்கச் சோலைகளின் நற்செய்தி உண்டு. அவற்றில் ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும். அதில் என்றென்றும் தங்கியிருப்பீர்கள். இதுவே மகத்தான வெற்றியாகும். 13. அந்நாளில் நயவஞ்சக ஆண்களும், பெண்களும் நம்பிக்கையாளர்களிடம், "எங்களுக்காகப் பொறுத்திருங்கள். நாங்கள் உங்கள் ஒளியிலிருந்து பயனடைந்து கொள்கிறோம்" என்று கூறுவார்கள். அப்போது அவர்களிடம், "பின்னால் திரும்பி விடுங்கள். எங்காவது ஒளியினைத் தேடிக்கொள்ளுங்கள்" என்று கூறப்படும். அவர்களுக்கு மத்தியில் ஒரு தடுப்புச் சுவர் எழுப்பப்படும். அதில் ஒரு கதவு இருக்கும். அதன் உட்புறம் கருணையும், வெளிப்புறம் வேதனையும் இருக்கும். 14. இந்நயவஞ்சகர்கள் அவர்களிடம், "நாங்கள் உங்களுடன் இருக்கவில்லையா" என்று கேட்பார்கள். அதற்கு அவர்கள் கூறுவார்கள்: "ஆம். ஆயினும் நீங்கள் தம்மைத்தாமே குழப்பத்தில் ஆழ்த்திக் கொண்டீர்கள். (நம்பிக்கையாளர்களுக்கு துன்பம் வருமென) எதிர்பார்த்து, சந்தேகத்தில் வீழ்ந்து கிடந்தீர்கள். வீணான ஆசைகள் உங்களை ஏமாற்றிவிட்டன. இறுதியில் இறைத்தீர்ப்பு வந்து விட்டது. ஏமாற்றுக்காரன் அல்லாஹ்வின் விஷயத்தில் உங்களை ஏமாற்றி விட்டான். 15. இன்று உங்களிடமிருந்தோ நிராகரித்தோரிடமிருந்தோ எவ்வித இழப்பீடும் பெறப்படாது. உங்கள் இருப்பிடம் நரகமாகும். அதுவே உங்களுக்குத் துணையாகும். அது மிகவும் கெட்ட இருப்பிடமாகும்".

16. நம்பிக்கையாளர்களுக்கு அவர்களின் உள்ளங்கள் இறைநினைவால் அஞ்சி நடுங்குவதற்கும் அவர்களுக்கு அருளப்பட்டுள்ள சத்தியத்தின்முன் பணிந்து விடுவதற்கும் நேரம் வரவில்லையா? முன்னர் வேதம் வழங்கப்பட்டோர் போன்று அவர்கள் ஆகிவிடக்கூடாது. அவர்களது காலம் நீண்டு விட்டதால் அவர்களின் இதயங்கள் இறுகிவிட்டன. அவர்களில்

பெரும்பாலோர் அடிபணியாதவர்களாகத்தான் இருந்தார்கள். **17.** அறிந்துகொள்ளுங்கள், அல்லாஹ்வே பூமியை அது மரணித்துவிட்ட பின்னரும் உயிர்ப்பிக்கிறான். நீங்கள் புரிந்துகொள்ளும் பொருட்டு சான்றுகளை நாம் தெளிவுபடுத்துகிறோம்.

**18.** நிச்சயமாக தானதர்மம் செய்யும் ஆண்களுக்கும் பெண்களுக்கும், அல்லாஹ்வுக்கு அழகிய கடனை அளித்தவர்களுக்கும் பன்மடங்காக்கி (திருப்பி) வழங்கப்படும். அவர்களுக்கு கண்ணியமான கூலியும் உண்டு. **19.** அல்லாஹ்வின் மீதும், அவனது தூதர்களின்மீதும் நம்பிக்கை கொண்டவர்கள்தான் தங்கள் இறைவனிடம் உண்மையாளர்களாகவும், சாட்சியாளர்களாகவும் இருக்கிறார்கள். அவர்களுக்கு அவர்களது கூலியும், ஒளியும் உண்டு. சத்தியத்தை நிராகரித்து நம் வசனங்களை மறுத்துரைத்தவர்கள்தான் நரகவாசிகள்.

**20.** அறிந்துகொள்ளுங்கள்: இவ்வுலக வாழ்க்கை விளையாட்டும், வேடிக்கையும், வெளிப்பகட்டும், மற்றும் ஒருவருக்கொருவர் பெருமையடித்துக் கொள்ளுதலும், செல்வங்களையும், பிள்ளைகளையும்கொண்டு ஒருவரையொருவர் முந்த முயல்வதுமே ஆகும். அது மழையைப் போன்றது. அதன் விளைச்சல் விவசாயிகளை மகிழ்ச்சியில் ஆழ்த்துகிறது. பின்னர் அது காய்ந்து மஞ்சள் நிறமாகிப் போவதைப் பார்க்கின்றீர். பின்னர் அது கூளமாகி விடுகிறது. மறுமையில் கடும் வேதனையும் அல்லாஹ்விடமிருந்து மன்னிப்பும் (உங்கள் மீதான) அவனது திருப்தியும் உண்டு. உலக வாழ்க்கை ஏமாற்றும் இன்பமேயாகும். **21.** உங்கள் இறைவனின் மன்னிப்பை நோக்கியும், வானம் மற்றும் பூமியின் அளவு விசாலமான சுவனத்தை நோக்கியும் விரையுங்கள். அது அல்லாஹ்வின்மீதும், அவனது தூதர்களின்மீதும் நம்பிக்கை கொண்டோருக்காக தயார் செய்யப்பட்டுள்ளது. இது இறைவனின்

அருளாகும். தான் நாடியோருக்கு இதனை அவன் வழங்குகிறான். அல்லாஹ் பேரருளாளன் ஆவான்.

*22.* பூமியிலோ, உங்களுக்கோ ஏற்படுகின்ற எந்தத் துன்பமானாலும் அதனை உருவாக்குவதற்கு முன்பே ஒரு பதிவேட்டில் நாம் பதிவு செய்து விடுகின்றோம். இது அல்லாஹ்வுக்கு மிக எளிதானது. *23.* ஏனெனில் நீங்கள் இழந்ததைக்கண்டு கவலைகொள்ளாமல் இருப்பதற்கும், அவன் உங்களுக்கு வழங்கியதைக்கொண்டு கர்வங்கொள்ளாமல் இருப்பதற்காகவும்தான். கர்வம்கொண்டு பெருமையடிக்கும் எவரையும் அல்லாஹ் விரும்புவதில்லை. *24.* அவர்கள் தாமும் கஞ்சத்தனம் செய்வதோடு பிறரையும் கஞ்சத்தனம் செய்யத் தூண்டுகிறார்கள். எவர் புறக்கணிப்பாரோ அவர் அறிந்துகொள்ளட்டும், அல்லாஹ் தேவையற்றவனாகவும் புகழுக்குரியவனாகவும் இருக்கின்றான்.

*25.* நாம் நம் தூதர்களை சான்றுகளுடன் அனுப்பினோம். மக்கள் நீதியில் நிலைத்திருக்கும் பொருட்டு அவர்களுடன் வேதத்தையும், துலாக்கோலையும் (நீதி) அருளினோம். நாம் இரும்பையும் அருளினோம். அதில் பெரும் வலிமையும், மக்களுக்குப் பயன்களும் உள்ளன. இது ஏனெனில் அல்லாஹ்வை காணாமலேயே அவனுக்கும், அவனது தூதர்களுக்கும் உதவி புரிபவர்கள் யார் என்பதை அவன் அறிந்துகொள்வதற்காகத்தான். நிச்சயமாக அல்லாஹ் வல்லமை மிக்கவனாகவும், யாவற்றையும் மிகைத்தவனாகவும் இருக்கின்றான்.

*26.* நாம் நோவாவையும், ஆப்ரஹாமையும் அனுப்பினோம். அவர்களுடைய சந்ததியில் தூதுத்துவத்தையும், வேதத்தையும் அருளியிருந்தோம். அவர்களில் சிலர் நேர்வழியில் இருக்கிறார்கள். அவர்களில் பெரும்பாலோர் அடிபணியாதவர்களாகவே

இருக்கிறார்கள். *27.* பின்னர் அவர்களின் அடிச்சுவட்டிலேயே நாம் நம் தூதர்களை அனுப்பினோம். அவர்களுக்குப் பின் மரியாளின் மகன் இயேசுவை அனுப்பினோம். அவருக்கு இன்ஜீலை வழங்கி அவரைப் பின்பற்றியவர்களின் உள்ளங்களில் அன்பையும், இரக்கத்தையும் ஏற்படுத்தினோம். ஆனால் துறவறத்தை அவர்கள்தான் உருவாக்கிக் கொண்டார்கள். நாம் அதனை அவர்கள்மீது விதிக்கவில்லை. இறைதிருப்தியை நாடியே அவர்கள் அதனை மேற்கொண்டபோதிலும் அதனைப் கடைப்பிடிக்க வேண்டியவாறு அவர்கள் கடைப்பிடிக்கவில்லை. எனவே அவர்களில் நம்பிக்கையாளர்களுக்கு அவர்களின் கூலியை வழங்கினோம். அவர்களில் பெரும்பாலோர் அடிபணியாதவர்கள்தான்.

*28.* நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். அவனது தூதரின்மீது நம்பிக்கை கொள்ளுங்கள். அவன் தன் கருணையிலிருந்து இரு மடங்கு உங்களுக்கு வழங்கிடுவான். உங்களுக்கு ஒளியையும் வழங்கிடுவான். அதன் ஒளியில் நீங்கள் செல்வீர்கள். உங்களை மன்னித்தும் விடுவான். அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். *29.* அது, இதன்மூலம் வேதக்காரர்கள் “அல்லாஹ்வின் அருளில் தங்களுக்கு எந்தப் பங்கும் இல்லை. அவனது அருள் அவனது கரத்தில்தான் உள்ளது. தான் நாடியோருக்கு அவன் அதனை வழங்குகிறான்” என்பதை அறிந்துகொள்வதற்காகத்தான். அல்லாஹ் பேரருள் புரிபவனாவான்.

## 58. தர்க்கம் (அல்முஜாதலா)

**அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...**

*1.* தனது கணவனைப்பற்றி உம்மிடம் தர்க்கித்துக்கொண்டும் அல்லாஹ்விடம் முறையிட்டுக்கொண்டும் இருந்த அந்தப்

பெண்ணின் முறையீட்டை அல்லாஹ் கேட்டுக்கொண்டான். உங்கள் இருவரின் உரையாடலையும் அல்லாஹ் செவியேற்றுக் கொண்டுதான் இருந்தான். நிச்சயமாக அல்லாஹ் அனைத்தையும் கேட்பவனாகவும் பார்ப்பவனாகவும் இருக்கின்றான்.

2. உங்களில் யாரெல்லாம் தம் மனைவியரைத் தாய்க்கு ஒப்பிட்டுக் கூறுகிறார்களோ, அவர்களின் மனைவியர் அவர்களுக்குத் தாயாக மாட்டார்கள். அவர்களைப் பெற்றெடுத்தவர்களே அவர்களின் தாயார்கள் ஆவர். நிச்சயமாக அவர்கள் வெறுக்கத்தக்க, பொய்யான சொல்லையே கூறுகிறார்கள். அல்லாஹ் பிழைகளைப் பொறுப்பவனாகவும் பெரும் மன்னிப்பாளனாகவும் இருக்கின்றான். 3. தம் மனைவியரைத் தாய்க்கு ஒப்பிட்டுக் கூறிவிட்டு பின்னர் தாம் கூறியதைத் திரும்பப் பெறுபவர்கள் ஒருவரையொருவர் தீண்டுவதற்கு முன்னர் ஒரு அடிமையை விடுதலை செய்ய வேண்டும். இவ்வாறு உங்களுக்கு அறிவுரை வழங்கப்படுகிறது. நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவனாக இருக்கின்றான். 4. இவ்வாறு செய்வதற்கு இயலாதவர்கள் ஒருவரையொருவர் தீண்டுவதற்கு முன்னர் இரண்டு மாதங்கள் தொடர்ந்து நோன்பு நோற்க வேண்டும். இதற்கும் சக்தியற்றவர்கள் அறுபது ஏழைகளுக்கு உணவளிக்க வேண்டும். இது நீங்கள் அல்லாஹ்வையும் அவனது தூதரையும் நம்பிக்கை கொள்வதற்காகவே விதியாக்கப்பட்டுள்ளது. இவை இறைவரம்புகளாகும். நிராகரிப்பாளர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு.

5. அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் மாறாகச் செயல்படுபவர்கள் அவர்களுக்கு முன்னிருந்தவர்கள் இழிவுக்குள்ளாக்கப்பட்டதைப்போலவே இழிவுக்குள்ளாக்கப் படுவார்கள். நாம் தெளிவான வசனங்களை அருளியுள்ளோம். நிராகரிப்பாளர்களுக்கு இழிவுதரும் வேதனையுண்டு. 6. அவர்கள்

அனைவரையும் அல்லாஹ் எழுப்புகின்றநாளில் அவர்கள் செய்தவற்றை அவன் அவர்களுக்கு அறிவிப்பான். அல்லாஹ் அவற்றைக் கணக்கிட்டு வைத்துள்ளான். ஆனால் அவர்களோ அதனை மறந்து விட்டார்கள். அல்லாஹ் ஒவ்வொரு பொருளையும் நன்கறிந்தவனாக இருக்கின்றான்.

7. வானங்களிலும் பூமியிலும் உள்ள யாவற்றையும் அல்லாஹ் அறிவான் என்பதை நீங்கள் பார்க்கவில்லையா? மூன்று மனிதர்களிடையே இரகசியப் பேச்சு எதுவும் நடப்பதில்லை, அவர்களிடையே நான்காவதாக அல்லாஹ் இல்லாமல். ஐந்து மனிதர்களிடையே இரகசியப் பேச்சு எதுவும் நடப்பதில்லை, அவர்களிடையே ஆறாவதாக அல்லாஹ் இல்லாமல். இதனைவிடக் குறைவாக இருந்தாலும் கூடுதலாக இருந்தாலும் அவர்கள் எங்கிருந்தபோதிலும் அவன் அவர்களுடனேயே இருக்கின்றான். பின்னர் அவர்கள் செய்தவற்றை மறுமைநாளில் அவன் அவர்களுக்கு அறிவிப்பான். நிச்சயமாக அல்லாஹ் அனைத்தையும் அறிந்தவன். 8. இரகசியப் பேச்சுகள் பேசுவதைவிட்டும் தடுக்கப்பட்டவர்களை நீங்கள் பார்க்கவில்லையா? அவர்கள் தடுக்கப்பட்ட செயல்களையே மீண்டும் செய்கிறார்கள். அவர்கள் பாவமான, வரம்புமீறுகின்ற, தூதருக்கு மாறுசெய்கின்ற பேச்சுகளையே இரகசியமாகப் பேசிக்கொள்கிறார்கள். அவர்கள் உம்மிடம்வந்தால் அல்லாஹ் உமக்கு முகமன் கூறாத முறைப்படி முகமன் கூறுகிறார்கள். அவர்கள் தம் உள்ளங்களில் “இப்பேச்சுக்காக அல்லாஹ் நம்மை ஏன் தண்டிப்பதில்லை” என்று கூறிக்கொள்கிறார்கள். அவர்களுக்கு நரகமே போதுமானது. அதில் அவர்கள் நுழைந்தே தீருவார்கள். அது மிகவும் கெட்ட இருப்பிடமாகும்.

9. நம்பிக்கையாளர்களே! நீங்கள் இரகசியம் பேசுவதாக இருந்தால் பாவம்புரிதல், வரம்புமீறுதல், மற்றும் தூதருக்கு

மாறுசெய்தல் ஆகியவற்றைப்பற்றி இரகசியம் பேசாதீர்கள். மாறாக நன்மையான, இறையச்சமுள்ள விஷயங்களை இரகசியமாகப் பேசுங்கள். அல்லாஹ்வை அஞ்சுங்கள். அவனிடமே நீங்கள் ஒன்றுசேர்க்கப்படுவீர்கள். **10.** தீய நோக்கங்களுக்காக இரகசியம் பேசுவது சாத்தானியச் செயலாகும். அது, அதன்மூலம் சாத்தான் நம்பிக்கையாளர்களைக் கவலையடையச் செய்வதற்காகத்தான். அல்லாஹ்வின் அனுமதியின்றி அவர்களை அவனால் கவலையடையச் செய்யமுடியாது. நம்பிக்கையாளர்கள் அல்லாஹ்வையே முழுமையாகச் சார்ந்திருக்க வேண்டும்.

**11.** நம்பிக்கையாளர்களே, சபைகளில் நகர்ந்து இடமளியுங்கள் என்று உங்களுக்கு கூறப்பட்டால் நகர்ந்து இடமளியுங்கள். அல்லாஹ் உங்களுக்கு இடமளிப்பான். எழுந்து கொள்ளுங்கள் என்று கூறப்பட்டால் எழுந்து கொள்ளுங்கள். உங்களில் நம்பிக்கையாளர்களுக்கும், அறிவு வழங்கப்பட்டோருக்கும் அல்லாஹ் உயர்ந்த பதவிகளை வழங்குவான். அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை நன்கறிந்தவனாக இருக்கின்றான்.

**12.** நம்பிக்கையாளர்களே! நீங்கள் தூதருடன் தனிமையில் பேசுவதாயின் அவ்வாறு பேசுவற்குமுன் சிறிது தானதர்மம் செய்யுங்கள். இது உங்களுக்குச் சிறந்ததும் தூய்மையானதுமாகும். ஆனால் நீங்கள் எதையும் பெறவில்லையெனில் அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். **13.** நீங்கள் உங்களின் இரகசியப் பேச்சுக்கு முன்னால் தானதர்மங்கள் கொடுக்க வேண்டுமே என்று பயந்து விட்டீர்களா? அவ்வாறு செய்ய இயலவில்லையெனில் அறிந்துகொள்ளுங்கள் அல்லாஹ் உங்களை மன்னித்து விட்டான். எனவே தொழுகையைக் கடைப்பிடித்து கடமையாக்கப்பட்ட தானதர்மத்தையும் அளித்து வாருங்கள். அல்லாஹ்வுக்கும் அவனது

*தூதருக்கும் கட்டுப்படுங்கள். நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவனாக இருக்கின்றான்.*

*14. இறைக்கோபத்திற்குள்ளான மக்களுடன் நட்புக் கொள்பவர்களை நீங்கள் பார்க்கவில்லையா? அவர்கள் உங்களைச் சார்ந்தவர்கள் அல்லர், அவர்களைச் சார்ந்தவர்களும் அல்லர். அவர்கள் அறிந்துகொண்டே அல்லாஹ்வின்மீது பொய்யாக சத்தியம் செய்கிறார்கள். 15. அல்லாஹ் அவர்களுக்காகக் கடும் வேதனையைத் தயார்படுத்தி வைத்துள்ளான். நிச்சயமாக அவர்கள் செய்யும் காரியம் மிகவும் கெட்டதாகும். 16. அவர்கள் தங்கள் சத்தியங்களைக் கேடயமாக வைத்துக்கொண்டு இறைவழியைவிட்டும் மக்களைத் தடுக்கிறார்கள். ஆகவே அவர்களுக்கு இழிவுதரும் வேதனையுண்டு.*

*17. அவர்களின் செல்வங்களும், பிள்ளைகளும் அவர்களை அல்லாஹ்விடமிருந்து சிறிதும் காப்பாற்றாது. அவர்கள்தான் நரகவாசிகள், அதில் என்றென்றும் வீழ்ந்து கிடப்பார்கள். 18. அல்லாஹ் அவர்கள் அனைவரையும் எழுப்பும்நாளில் உங்களிடம் பொய்யாக சத்தியம் செய்தது போன்றே அவனிடமும் சத்தியம் செய்வார்கள். தாங்கள் ஏதோ ஒரு விஷயத்தின் மீது இருப்பதாக அவர்கள் எண்ணிக் கொள்கிறார்கள். அறிந்துகொள்ளுங்கள்; இவர்கள்தான் பொய்யர்கள். 19. சாத்தான் அவர்களை மிகைத்து இறைநினைவை விட்டும் அவர்களை மறக்கடித்து விட்டான். இவர்கள்தான் சாத்தானின் அணியினர். அறிந்துகொள்ளுங்கள்; நிச்சயமாக சாத்தானின் அணியினர்தான் நஷ்டமடைந்தவர்கள். 20. அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் மாறாக செயல்படுவர்கள்தான் மிகவும் இழிவானவர்கள். 21. “நானும் என் தூதர்களுமே மேலோங்கி நிற்போம்” என்று அல்லாஹ் விதித்துவிட்டான். நிச்சயமாக அல்லாஹ் வல்லமை மிக்கவன்; யாவற்றையும் மிகைத்தவன்.*

22. அல்லாஹ்வின்மீதும் மறுமைநாளின்மீதும் நம்பிக்கைகொண்ட மக்கள் அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் மாறாகச் செயல்படுவோருடன் நட்பு கொள்வதை நீங்கள் காணமாட்டீர்கள். அவர்கள் தம் பெற்றோர்களாயினும், பிள்ளைகளாயினும், சகோதரர்களாயினும், இன்னும் தம் குடும்பத்தினர்களாயினும் சரியே. அல்லாஹ் இத்தகையவர்களின் இதயங்களில் நம்பிக்கையை எழுதி தன் அருளால் அவர்களைப் பலப்படுத்தி விட்டான். அவன் அவர்களைச் சொர்க்கச் சோலைகளில் நுழையச் செய்வான். அவற்றில் ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். அல்லாஹ் அவர்களைக்குறித்து திருப்தியடைந்தான். அவர்களும் அல்லாஹ்வைக் குறித்து திருப்தியடைந்தார்கள். இவர்கள்தான் அல்லாஹ்வின் அணியினர். அறிந்துகொள்ளுங்கள்; அல்லாஹ்வின் அணியினர்தான் வெற்றி பெறக்கூடியவர்கள்.

## 59. ஒன்றுதிரட்டுதல் (அல்ஹஷ்ர்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

1. வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்வைப் புகழ்கின்றன. அவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும் ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான். 2. அவனே வேதக்காரர்களிலிருந்த நிராகரிப்பாளர்களை அவர்களின் வீடுகளிலிருந்து முதல் முறையிலேயே ஒன்றுசேர்த்து வெளியேற்றினான். அவர்கள் வெளியேறுவார்கள் என்று நீங்கள் நினைத்தும் பார்க்கவில்லை. “தங்களின் கோட்டைகள் அல்லாஹ்விடமிருந்து தங்களைக் காப்பாற்றும்” என்று அவர்கள் எண்ணியிருந்தார்கள். ஆனால் அல்லாஹ் அவர்கள் நினைத்துப் பார்க்காத இடத்திலிருந்து அவர்களை வந்தடைந்தான். அவர்களின் உள்ளங்களில் அச்சத்தை ஏற்படுத்திவிட்டான். அவர்கள் தம்

கைகளாலும் நம்பிக்கையாளர்களின் கைகளாலும் தம் வீடுகளை பாழ்படுத்திக் கொண்டார்கள். எனவே அகப்பார்வையுடையோரே, படிப்பினை பெறுங்கள்.

*3.* அல்லாஹ் அவர்கள்மீது ஊரிலிருந்து வெளியேறுதலை விதித்திருக்காவிட்டால் இவ்வுலகிலேயே அவர்களை வேதனை செய்திருப்பான். மறுமையில் அவர்களுக்கு நரக வேதனையுண்டு. *4.* காரணம் அவர்கள் அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் மாறு செய்தார்கள். அல்லாஹ்வுக்கு மாறுசெய்பவர் அறிந்துகொள்ளட்டும்; அல்லாஹ் தண்டிப்பதில் கடுமையானவன். *5.* நீங்கள் பேரீச்சை மரங்களை வெட்டியதும் அல்லது அவற்றின் வேர்களில் அவற்றை நிற்கும்படி விட்டுவிட்டதும் அல்லாஹ்வின் அனுமதியுடன் நடந்த ஒன்றாகும். அது அடிபணியாதோரை இழிவுபடுத்துவதற்காகத்தான்.

*6.* தன் தூதருக்கு அல்லாஹ் எதையெல்லாம் அவர்களிடமிருந்து திருப்பிக் கொடுத்தானோ அதற்காக நீங்கள் குதிரையையோ, ஒட்டகத்தையோ ஓட்டிச்செல்லவில்லை. ஆயினும் அல்லாஹ் தன் தூதர்களுக்குத் தான் நாடியோர்மீது ஆதிக்கம் அளிக்கிறான். அல்லாஹ் எல்லாவற்றின்மீதும் பேராற்றலுடையவன். *7.* அவ்வூரார்களிடமிருந்து தன் தூதருக்கு அல்லாஹ் மீட்டுக்கொடுத்தவை அல்லாஹ்வுக்கும், தூதருக்கும், (தூதரின்) உறவினர்களுக்கும், அநாதைகளுக்கும், ஏழைகளுக்கும், வழிப்போக்கர்களுக்கும் உரியவையாகும். இவ்வாறு பங்கிடப்பட்டுள்ளது ஏனெனில் உங்கள் செல்வந்தர்களிடையே மட்டும் அது சுற்றிக் கொண்டிருக்கக் கூடாது என்பதற்காகத்தான். தூதர் உங்களுக்கு வழங்குவதைப் பெற்றுக் கொள்ளுங்கள். அவர் உங்களைவிட்டுத் தடுத்ததைத் தவிர்ந்து கொள்ளுங்கள். அல்லாஹ்வுக்கு அஞ்சிக் கொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ்

*தண்டிப்பதில் கடுமையானவன். 8. தங்கள் வீடுகளையும் சொத்துகளையும்விட்டு வெளியேற்றப்பட்ட புலம்பெயர்ந்த ஏழைகளுக்கும் அது உரியதாகும். அவர்கள் இறைவனின் அருளையும் அவனது திருப்தியையும் நாடி அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் உதவி புரிகிறார்கள். அவர்கள்தான் உண்மையாளர்கள்.*

*9. மேலும் ஏற்கனவே மதீனாவில் தங்கியிருந்து நம்பிக்கையை உறுதிப்படுத்திக் கொண்டவர்களுக்கும் அது உரியதாகும். அவர்கள் புலம்பெயர்ந்து தங்களிடம் வருபவர்களை நேசிக்கிறார்கள். அவர்களுக்கு அளிக்கப்படுவதைக் குறித்து தம் உள்ளங்களில் எவ்விதப் பொறாமையும் காழ்ப்புணர்வும் கொள்ள மாட்டார்கள். தாங்கள் ஏழ்மை நிலையில் இருந்தபோதிலும் தம்மைவிட அவர்களுக்கே முன்னுரிமை அளிப்பார்கள். தம் மனதின் கஞ் சத்தனத்திலிருந்து பாதுகாக்கப்பட்டவர்கள்தான் வெற்றியாளர்கள். 10. அவர்களுக்குப்பின் வந்தவர்கள், "எங்கள் இறைவா! எங்களையும் நம்பிக்கைகொள்வதில் எங்களை முந்திவிட்ட எங்கள் சகோதரர்களையும் மன்னித்தருள்வாயாக. எங்கள் உள்ளங்களில் நம்பிக்கையாளர்களைப்பற்றி எவ்விதக் குரோதத்தையும் ஏற்படுத்தி விடாதே. எங்கள் இறைவா! நீயே மிகுந்த பரிவுடையவனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றாய்" என்று பிரார்த்தனை புரிகிறார்கள்.*

*11. நயவஞ்சகர்களை நீங்கள் பார்க்கவில்லையா? வேதக்காரர்களில் நிராகரிப்பாளர்களாக உள்ள தங்கள் சகோதரர்களிடம் அவர்கள், "நீங்கள் வெளியேற்றப்பட்டால் நாங்களும் உங்களுடன் வெளியேறி விடுவோம். உங்கள் விவகாரத்தில் நாங்கள் எவருக்கும் கீழ்ப்படிய மாட்டோம். உங்கள்மீது போர் தொடுக்கப்பட்டால் நாங்கள் உங்களுக்கு உதவி புரிவோம்" என்று கூறுகிறார்கள். அவர்கள் பொய்யர்கள்*

*என்பதற்கு அல்லாஹ்வே சாட்சி கூறுகிறான். **12.** ஏனென்றால் அவர்கள் வெளியேற்றப்பட்டால் இவர்கள் அவர்களுடன் வெளியேற மாட்டார்கள். அவர்கள்மீது போர்தொடுக்கப்பட்டால் இவர்கள் அவர்களுக்கு உதவி புரியவும் மாட்டார்கள். இவர்கள் அவர்களுக்கு உதவி செய்தாலும் நிச்சயமாகப் புறங்காட்டி ஓடிவிடுவார்கள். அவர்களுக்கு எங்கிருந்தும் உதவி கிடைக்காது.*

***13.** உங்களைப்பற்றிய பயமே அவர்களின் உள்ளத்தில் அல்லாஹ்வின் பயத்தைவிட அதிகமாக உள்ளது. காரணம் அவர்கள் புரிந்துகொள்ளாத மக்களாக இருக்கிறார்கள் என்பதுதான். **14.** அரண் அமைக்கப்பட்ட ஊர்களிலிருந்தோ சுவர்களுக்குப் பின்னாலிருந்தோ தவிர இவர்கள் உங்களுடன் ஒன்றுசேர்ந்து போரிட மாட்டார்கள். அவர்களுக்கிடையேயுள்ள பகையோ மிகக் கடுமையானது. அவர்கள் ஒன்றுபட்டுள்ளதாக நீர் நினைக்கிறீர். ஆனால் அவர்களின் உள்ளங்களோ பிரிந்து கிடக்கின்றன. அவர்கள் புரிந்துகொள்ளாத மக்களாக இருப்பதுதான் இதற்குக் காரணமாகும்*

***15.** இவர்களுக்கு சிறிது காலத்திற்கு முன்னர் தம் செயல்களின் விளைவை அனுபவித்த அந்த மக்களைப் போன்றவர்கள்தான் இவர்கள். இவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு. **16.** இவர்கள் சாத்தானைப் போன்றவர்கள். அவன் மனிதனை நோக்கி, 'நீ நிராகரித்துவிடு' என்று கூறுகிறான். அவன் நிராகரித்துவிடும்போது "நான் உன்னைவிட்டும் விலகிவிட்டேன். அகிலங்களின் இறைவனாகிய அல்லாஹ்வுக்கு நான் அஞ்சுகிறேன்" என்று கூறுகிறான். **17.** இறுதியில் அவர்கள் இருவரும் நரகத்தில் இருப்பார்கள். அங்கு அவர்கள் என்றென்றும் வீழ்ந்து கிடப்பார்கள். அதுவே அநியாயக்காரர்களின் கூலியாகும்.*

*18.* நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். ஒவ்வொரு மனிதனும் தான் நாளைய தினத்திற்காக எதனைச் சேர்த்து வைத்துள்ளான் என்பதைக் கவனிக்கட்டும். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை நன்கறிந்தவனாக இருக்கின்றான். *19.* அல்லாஹ்வை மறந்து விட்டவர்களைப்போன்று நீங்கள் ஆகிவிடாதீர்கள். அதனால் அவன் அவர்கள் தங்களையே மறக்கும்படிச் செய்துவிட்டான். அவர்கள்தான் அடிபணியாதவர்கள். *20.* நரகவாசிகளும் சொர்க்கவாசிகளும் சமமாக மாட்டார்கள். சொர்க்கவாசிகள்தான் உண்மையில் வெற்றியாளர்கள்.

*21.* நாம் இந்த குர்ஆனை மலையின்மீது இறக்கியிருந்தால் அது இறையச்சத்தால் நடுங்கி பிளந்து விடுவதைக் கண்டிருப்பீர். மனிதர்கள் சிந்திக்க வேண்டும் என்பதற்காக இத்தகைய உதாரணங்களை நாம் அவர்களுக்கு விளக்குகின்றோம். *22.* அந்த அல்லாஹ்வைத்தவிர வணக்கத்திற்குரிய வேறு இறைவன் இல்லை. அவன் மறைவானதையும் வெளிப்படையானதையும் நன்கறிபவன்; அவன் அளவிலாக் கருணையாளன்; இணையிலாக் கிருபையாளன். *23.* அந்த அல்லாஹ்வைத்தவிர வணக்கத்திற்குரிய வேறு இறைவன் இல்லை. அவன் பேரரசன்; மிகவும் தூய்மையானவன்; சாந்தியுடையவன்; அமைதியளிப்பவன்; கண்காணிப்பவன்; யாவற்றையும் மிகைத்தவன்; அடக்கியாள்பவன்; மாட்சிமை மிக்கவன். அவர்கள் செய்யும் இணைவைப்பை விட்டும் அல்லாஹ் தூய்மையானவன். *24.* அவனே அல்லாஹ். படைப்பவன்; தோற்றுவிப்பவன்; வடிவமைப்பவன். அவனுக்கு அழகிய பெயர்கள் இருக்கின்றன. வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அவனைப் புகழ்கின்றன. அவன் யாவற்றையும் மிகைத்தவன்; ஞானம் மிக்கவன்.

# 60. சோதனைக்கு ஆளானவள் (அல்மும்தஹினா)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. நம்பிக்கையாளர்களே! எனக்கும் உங்களுக்கும் பகைவர்களாக இருப்பவர்களை நண்பர்களாக்கிக் கொள்ளாதீர்கள். நீங்கள் அவர்களுடன் நட்பு பாராட்டுகிறீர்கள். ஆனால் அவர்களோ உங்களிடம் வந்துள்ள சத்தியத்தை நிராகரித்து விட்டார்கள். உங்கள் இறைவனாகிய அல்லாஹ்வின்மீது நம்பிக்கைகொண்டீர்கள் என்பதற்காக உங்களையும் உங்கள் தூதரையும் வெளியேற்றினார்கள். நீங்கள் என் திருப்தியை நாடி என் பாதையில் பாடுபடுவதற்காகப் புறப்பட்டீர்களானால் எப்படி உங்களால் அவர்களுடன் இரகசியமாக நட்பு கொள்ள முடியும்? நீங்கள் இரகசியமாகவும் வெளிப்படையாகவும் செய்யும் அனைத்தையும் நான் நன்கறிவேன். உங்களில் யாரேனும் இவ்வாறு செய்தால் நிச்சயமாக அவர் நேரான வழியிலிருந்து தவறி விட்டார். 2. அவர்கள் உங்களை வெற்றி கொண்டுவிட்டால் உங்களுக்குப் பகைவர்களாகி விடுவார்கள். தம் கரங்களாலும், நாவாலும் உங்களுக்குத் தொல்லை தருவார்கள். நீங்களும் நிராகரிப்பாளர்களாகிவிட வேண்டும் என்று விரும்புவார்கள். 3. உங்கள் உறவுகளோ, பிள்ளைகளோ மறுமைநாளில் உங்களுக்குப் பலனளிக்க மாட்டார்கள். அவன் உங்களிடையே தீர்ப்பளிப்பான். அல்லாஹ் நீங்கள் செய்பவற்றைப் பார்த்துக் கொண்டிருக்கிறான்.*

*4. உங்களுக்கு ஆப்ரஹாமிடத்திலும் அவரது தோழர்களிடத்திலும் அழகிய முன்மாதிரி இருக்கின்றது. அவர்கள் தம் சமூகத்தாரிடம், "உங்களையும் அல்லாஹ்வையன்றி நீங்கள் வணங்குபவற்றை விட்டும் நாங்கள் விலகி விட்டோம். நாங்கள் உங்களை நிராகரித்து விட்டோம். அல்லாஹ் ஒருவனையே*

நீங்கள் நம்பும்வரை உங்களுக்கும் எங்களுக்குமிடையே நிரந்தர பகைமையும் வெறுப்பும் ஏற்பட்டுவிட்டது" என்று கூறினார்கள். ஆனால் ஆப்ரஹாம் தம் தந்தையிடம் நான் உங்களுக்காகப் பாவமன்னிப்புக் கோருவேன். ஆயினும் "நான் அல்லாஹ்விடமிருந்து உங்களுக்கு எதையும் செய்ய சக்திபெற மாட்டேன்" என்று கூறியதைத்தவிர. "எங்கள் இறைவா! நாங்கள் உன்னையே சார்ந்துள்ளோம். உன்னிடமே மீண்டு விட்டோம். உன் பக்கமே திரும்பி வர வேண்டும். **5.** எங்கள் இறைவா! எங்களை நிராகரிப்பாளர்களிடம் (சிக்கவைத்து) சோதனையாக ஆக்கி விடாதே. எங்கள் இறைவா! எங்களை மன்னித்து விடுவாயாக. நிச்சயமாக நீ யாவற்றையும் மிகைத்தவனாகவும் ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றாய்". **6.** அல்லாஹ்வையும் மறுமைநாளையும் நம்புவோருக்கு அவர்களிடம் அழகிய முன்மாதிரி இருக்கிறது. எவரேனும் இதனைப் புறக்கணித்தால் - அவர் அறிந்துகொள்ளட்டும், அல்லாஹ் தேவையற்றவனாகவும் புகழுக்குரியவனாகவும் இருக்கின்றான். **7.** உங்களுக்கும் உங்கள் எதிரிகளுக்கும் இடையே அல்லாஹ் அன்பை ஏற்படுத்தி விடலாம். அல்லாஹ் பேராற்றலுடையவன். அவன் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

8. யாரெல்லாம் மார்க்க விஷயத்தில் உங்களுடன் போரிடவில்லையோ, உங்களை உங்கள் வீடுகளிலிருந்து வெளியேற்றவில்லையோ அவர்களுடன் நீங்கள் நல்லவிதமாகவும், நியாயமாகவும் நடந்து கொள்வதைவிட்டு அல்லாஹ் உங்களைத் தடுக்கவில்லை. நிச்சயமாக அல்லாஹ் நீதி செலுத்துவோரை நேசிக்கிறான். **9.** அவன் உங்களைத் தடுப்பதெல்லாம் யாரெல்லாம் மார்க்க விஷயத்தில் உங்களுடன் போர் புரிந்தார்களோ, உங்களை

உங்கள் வீடுகளிலிருந்து வெளியேற்றினார்களோ, உங்களை வெளியேற்றுவதற்கு உதவி செய்தார்களோ அவர்களுடன் நீங்கள் நட்பு கொள்வதைத்தான். அவர்களிடம் நட்பு கொள்பவர்கள்தான் அநியாயக்காரரர்கள்.

10. நம்பிக்கையாளர்களே! நம்பிக்கைகொண்ட பெண்கள் புலம்பெயர்ந்து உங்களிடம்வந்தால் அவர்களைச் சோதித்துப் பாருங்கள். அவர்களின் நம்பிக்கையை அல்லாஹ்வே நன்கறிவான் - அவர்கள் நம்பிக்கையாளர்கள்தான் என்பதை நீங்கள் அறிந்துகொண்டால் அவர்களை நிராகரிப்பாளர்களிடம் திருப்பி அனுப்பி விடாதீர்கள். அவர்கள் நிராகரிப்பாளர்களுக்கு அனுமதிக்கப்பட்டவர்கள் அல்லர். நிராகரிப்பாளர்களும் அவர்களுக்கு அனுமதிக்கப்பட்டவர்கள் அல்லர். நிராகரிப்பாளர்கள் செலவு செய்ததை அவர்களுக்கு வழங்கி விடுங்கள். நீங்கள் அப்பெண்களுக்கு மணக்கொடையை அளித்துவிட்டால் அவர்களை மணம் செய்துகொள்வதில் உங்கள்மீது எவ்விதக் குற்றமுமில்லை. நிராகரிக்கும் பெண்களைத் திருமண உறவில் தடுத்து வைத்துக்கொள்ளாதீர்கள். நீங்கள் அவர்களுக்கு செலவழித்ததைத் திருப்பிக் கேளுங்கள். அவர்களும் நம்பிக்கைகொண்ட பெண்களுக்கு செலவழித்ததைத் திருப்பிக் கேட்கட்டும். இது இறைக்கட்டளையாகும். அவன் உங்களிடையே தீர்ப்பளிக்கின்றான். அல்லாஹ் நன்கறிந்தவனாகவும் ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான். 11. உங்கள் மனைவியரில் யாரேனும் நிராகரிப்பாளர்களிடம் சென்றுவிட்டால் - நீங்கள் அவர்களுக்களித்த மணக்கொடையில் சிறிதளவு நிராகரிப்பாளர்களிடமிருந்து திரும்பக் கிடைக்கவில்லையாயின் - பின்னர் உங்கள்முறை வரும்போது உங்களில் யாருடைய மனைவியர் அங்கே சென்று விட்டார்களோ

அவர்களின் கணவன்மார்களுக்கு அவர்கள் செலவழித்ததற்குச் சமமான தொகையை நீங்கள் வழங்கி விடுங்கள். நீங்கள் நம்பிக்கை கொண்டிருக்கும் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்.

*12.* தூதரே! நம்பிக்கைகொண்ட பெண்கள் உம்மிடம் வந்து, “நாங்கள் அல்லாஹ்வுக்கு எப்பொருளையும் இணையாக்க மாட்டோம், திருட மாட்டோம், விபச்சாரம் செய்ய மாட்டோம், எங்கள் குழந்தைகளைக் கொல்ல மாட்டோம், பொய்யாக எந்த அவதூறையும் கூற மாட்டோம், எந்த ஒரு நல்ல காரியத்திலும் உங்களுக்கு மாறுசெய்ய மாட்டோம்” என்று உறுதிமொழி அளித்தால் அவர்களின் உறுதிமொழியை ஏற்றுக்கொள்வீராக. அவர்களுக்காக அல்லாஹ்விடம் மன்னிப்புக் கோருவீராக. நிச்சயமாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

*13.* நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வின் கோபத்திற்கு ஆளான மக்களுடன் நட்பு கொள்ளாதீர்கள். சவக்குழிகளில் வீழ்ந்து கிடக்கும் நிராகரிப்பாளர்கள் நம்பிக்கை இழந்ததைப்போல அவர்கள் மறுமையைப்பற்றி நம்பிக்கை இழந்து விட்டார்கள்.

## 61. அணிவகுப்பு (அஸ்ஸஃப்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1.* வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்வைப் புகழ்கின்றன. அவன் யாவற்றையும் மிகைத்தவன்; ஞானம் மிக்கவன். *2.* நம்பிக்கையாளர்களே! நீங்கள் செய்யாதவற்றை ஏன் சொல்கிறீர்கள்? *3.* நீங்கள் செய்யாதவற்றைச் சொல்வது

*அல்லாஹ்விடம் மிகவும் வெறுப்பிற்குரியதாகும். **4.** நிச்சயமாக தன் பாதையில் ஈயத்தால் வார்க்கப்பட்ட சுவரைப்போன்று அணிவகுத்து நின்று போரிடுபவர்களை அல்லாஹ் நேசிக்கிறான்**.*

***5.** மோசே தன் சமூகத்தாரிடம், "என் சமூகத்தாரே! நான் உங்களிடம் அனுப்பப்பட்ட தூதராவேன் என்பதைத் தெளிவாகத் தெரிந்து கொண்டிருந்தும் என்னை ஏன் துன்புறுத்துகிறீர்கள்?" என்று கேட்டதை நினைவுகூருங்கள். அவர்கள் கோணல்வழியை பின்பற்றியபோது அல்லாஹ்வும் அவர்களின் உள்ளங்களைக் கோணலாக்கி விட்டான். அடிபணியாத மக்களுக்கு அல்லாஹ் நேர்வழி காட்டுவதில்லை. **6.** "இஸ்ராயீலின் மக்களே! நான் உங்களிடம் அனுப்பப்பட்ட இறைத்தூதராவேன். எனக்கு முன்னுள்ள தவ்ராத் எனும் வேதத்தை உண்மைப்படுத்தக்கூடியவனாகவும் எனக்குப்பின் வரவிருக்கும் அஹமது எனும் பெயருடைய தூதரைக் குறித்து நற்செய்தி கூறுபவனாகவும் இருக்கின்றேன்" என்று மரியாளின் மகன் இயேசு கூறியதையும் நினைவுகூருங்கள். அவர் அவர்களிடம் தெளிவான சான்றுகளைக் கொண்டு வந்தபோது 'இது தெளிவான சூனியமே' என்று கூறினார்கள். **7.** அல்லாஹ்வின் மீது பொய்யை இட்டுக் கட்டுபவனைவிட மிகப்பெரிய அநியாயக்காரன் யார்? அதுவும் அவன் இஸ்லாத்தின் பக்கம் அழைக்கப்படும் நிலையில். இத்தகைய அநியாயக்காரர்களுக்கு அல்லாஹ் நேர்வழிகாட்ட மாட்டான். **8.** இவர்கள் அல்லாஹ்வின் ஒளியைத் தம் வாய்களால் ஊதி அணைத்துவிட நாடுகிறார்கள். ஆயினும் அல்லாஹ் தனது ஒளியை முழுமைப்படுத்தியே தீருவான், அது நிராகரிப்பாளர்களுக்கு எவ்வளவு வெறுப்பானதாக இருந்தாலும் சரியே. **9.** அவன்தான் தனது தூதரை நேர்வழியுடனும், சத்திய மார்க்கத்துடனும் அனுப்பி*

---

*முன்னுரையைக் காண்க பக். 19

வைத்தான், ஏனைய அனைத்து மார்க்கங்களைவிட அதனை மேலோங்கச் செய்வதற்காக. அது இணைவைப்பாளர்களுக்கு எவ்வளவு வெறுப்பாக இருந்தாலும் சரியே.

*10.* நம்பிக்கையாளர்களே! உங்களைத் துன்புறுத்தும் வேதனையிலிருந்து காப்பாற்றும் ஒரு வியாபாரத்தை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா? *11.* நீங்கள் அல்லாஹ்வின்மீதும் அவனது தூதரின்மீதும் நம்பிக்கைகொண்டு அவனது பாதையில் உங்கள் செல்வங்களாலும், உயிர்களாலும் பாடுபடுங்கள். நீங்கள் அறிவீர்களாயின் இதுவே உங்களுக்குச் சிறந்ததாகும். *12.* அல்லாஹ் உங்கள் பாவங்களை மன்னித்து உங்களை சுவனச் சோலைகளில் நுழையச் செய்வான். அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். நிலையான சுவனங்களில் மிகச்சிறந்த இல்லங்களையும் அவன் உங்களுக்கு வழங்கிடுவான். இதுவே மாபெரும் வெற்றியாகும். *13.* நீங்கள் விரும்பும் இன்னொன்றையும் அவன் உங்களுக்கு வழங்குவான். அது இறைஉதவியும் நெருங்கி இருக்கும் வெற்றியுமாகும். நம்பிக்கையாளர்களுக்கு நற்செய்தி கூறுவீராக.

*14.* நம்பிக்கையாளர்களே! மரியாளின் மகன் இயேசு தம் சீடர்களிடம் ‘அல்லாஹ்வுக்காக எனக்கு உதவி செய்பவர் யார்’ என்று கேட்டபோது “நாங்கள் அல்லாஹ்வின் உதவியாளர்களாவோம்” என்று அவர்கள் கூறியதைப்போன்று நீங்களும் அல்லாஹ்வின் உதவியாளர்களாக ஆகிவிடுங்கள். இஸ்ராயீலின் மக்களில் ஒரு பிரிவினர் ஏற்றுக் கொண்டனர். மற்றொரு பிரிவினர் நிராகரித்து விட்டனர். நம்பிக்கையாளர்களை அவர்களின் பகைவர்களுக்கெதிராக நாம் பலப்படுத்தினோம். எனவே அவர்களே மேலோங்கி நின்றார்கள்.

# 62. வெள்ளிக்கிழமை (அல்ஜுமுஆ)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்வைப் புகழ்ந்து கொண்டிருக்கின்றன. அவன் பேரரசன்; மிகவும் தூயவன்; யாவற்றையும் மிகைத்தவன்; ஞானம் மிக்கவன். 2. அவன்தான் படிப்பறிவற்ற மக்களிடையே ஒரு தூதரை அவர்களிலிருந்தே எழுப்பினான். அவர் அவனது வசனங்களை அவர்களுக்கு எடுத்துரைக்கின்றார். அவர்களைத் தூய்மைப்படுத்துகின்றார். அவர்களுக்கு வேதத்தையும் ஞானத்தையும் போதிக்கின்றார். அவர்களோ இதற்கு முன்னர் தெளிவான வழிகேட்டில் வீழ்ந்து கிடந்தார்கள். 3. இன்னும் அவர்களுடன் வந்துசேராத ஏனைய மக்களுக்காகவும் (தூதராக அனுப்பி வைத்தான்). அவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும் ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான். 4. இது அல்லாஹ்வின் அருளாகும். தான் நாடியோருக்கு இதனை அவன் வழங்குகிறான். அல்லாஹ் பேரருளாளன் ஆவான்.*

*5. தவ்ராத் எனும் வேதம் வழங்கப்பட்டு பின்னர் அதன்படி செயல்படாதோரின் உதாரணம் புத்தகங்களைச் சுமக்கும் கழுதையைப் போன்றதாகும். இறைவசனங்களை நிராகரிக்கும் மக்களின் உதாரணம் மிக மோசமானதாகும். அல்லாஹ் இத்தகைய அநியாயக்கார மக்களுக்கு நேர்வழிகாட்ட மாட்டான். 6. நீர் கூறும்: "யூதர்களே! மற்ற மக்களைவிட நீங்கள்தான் இறை அன்பிற்குரியவர்கள் என்று நீங்கள் எண்ணுவீர்களாயின் - உங்கள் கூற்றில் உண்மையாளர்களாக இருந்தால் - மரணத்தை விரும்புங்கள்". 7. அவர்கள் முன்னரே செய்த செயல்களினால் அதனை ஒருபோதும் விரும்ப மாட்டார்கள். அல்லாஹ் அக்கிரமக்காரர்களை*

நன்கறிந்தவன். *8.* நீர் கூறும்: “எந்த மரணத்தைக் கண்டு நீங்கள் விரண்டோடுகிறீர்களோ அது உங்களை அடைந்தே தீரும். பின்னர் மறைவானதையும், வெளிப்படையானதையும் அறிந்தவனிடம் நீங்கள் கொண்டு செல்லப்படுவீர்கள். அப்போது நீங்கள் செய்து கொண்டிருந்தவற்றைப்பற்றி அவன் உங்களுக்கு அறிவிப்பான்”.

*9.* நம்பிக்கையாளர்களே! வெள்ளிக்கிழமை தொழுகைக்காக அழைக்கப்பட்டால் அல்லாஹ்வை நினைவுகூர்வதன்பக்கம் விரைந்து செல்லுங்கள், வியாபாரத்தை விட்டுவிடுங்கள். நீங்கள் அறிவுடையவர்களாக இருந்தால் இதுவே உங்களுக்குச் சிறந்ததாகும். *10.* தொழுகை நிறைவேற்றப்பட்டு விட்டால் பூமியில் பரவிச் சென்று இறையருளைத் தேடுங்கள். நீங்கள் வெற்றியடையும் பொருட்டு அல்லாஹ்வை மேலதிகமாக நினைவு கூருங்கள். *11.* அவர்கள் ஏதேனும் வியாபாரத்தையோ வேடிக்கையையோ கண்டால் உம்மை நின்ற நிலையில் (அப்படியே) விட்டுவிட்டுச் சென்று விடுகிறார்கள். நீர் கூறும்: “அல்லாஹ்விடம் இருப்பது வேடிக்கை மற்றும் வியாபாரத்தைவிடச் சிறந்ததாகும். வாழ்வாதாரம் அளிப்போரில் அல்லாஹ்வே மிகச் சிறந்தவன்”.

## 63. நயவஞ்சகர்கள் (அல்முனாஃபிகூன்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1.* நயவஞ்சகர்கள் உம்மிடம் வந்தால் ‘நிச்சயமாக நீர் இறைத்தூதரே என்று நாங்கள் சாட்சி கூறுகிறோம்’ என்று கூறுவார்கள். நிச்சயமாக நீர் அவனது தூதர் என்பதை அல்லாஹ் நன்கறிவான். ஆயினும் இந்நயவஞ்சகர்களே பொய்யர்கள் என்று அல்லாஹ் சாட்சி கூறுகிறான். *2.* இவர்கள் தங்கள் பொய் சத்தியங்களைக் கேடயமாகக் கொண்டு மக்களை இறைவழியை

விட்டும் தடுக்கிறார்கள். இவர்கள் செய்துகொண்டிருப்பது மிகவும் மோசமான காரியமாகும். 3. இவர்கள் நம்பிக்கைகொண்டு பின்னர் நிராகரித்து விட்டதே இதற்கான காரணமாகும். எனவே இவர்களது உள்ளங்களின்மீது முத்திரையிடப்பட்டு விட்டது. இவர்கள் புரிந்துகொள்ள மாட்டார்கள்.

4. நீர் அவர்களைப் பார்த்தால் அவர்களின் வெளிப்படையான தோற்றம் உம்மை ஆச்சர்யத்தில் ஆழ்த்தும். அவர்கள் பேச ஆரம்பித்தால் நீர் அவர்களின் பேச்சைக் கேட்கும்படி ஆகும். ஆயினும் அவர்கள் சுவரில் சாய்த்து வைக்கப்பட்டிருக்கும் மரக்கட்டைகளைப் போன்றவர்கள். ஒவ்வொரு உரத்த சப்தத்தையும் தங்களுக்கு எதிரானதாகவே கருதுவார்கள். அவர்கள்தான் எதிரிகள். எனவே அவர்களைக் குறித்து எச்சரிக்கையாக இருப்பீராக. அல்லாஹ் அவர்களை அழிக்கட்டும். அவர்கள் எங்கே திசை மாறிச் செல்கிறார்கள்? 5. வாருங்கள், “இறைத்தூதர் உங்களுக்காக மன்னிப்புக் கோருவார்” என்று அவர்களிடம் கூறப்பட்டால் தங்களின் தலைகளைத் திருப்பிக் கொள்கிறார்கள். அவர்கள் ஆணவத்தால் அலட்சியப்படுத்துவதை நீர் காண்பீர். 6. நீர் அவர்களுக்காக மன்னிப்புக் கோரினாலும் அல்லது கோராவிட்டாலும் அவர்களுக்குச் சமமே. அல்லாஹ் ஒருபோதும் அவர்களை மன்னிக்க மாட்டான். அடிபணியாத மக்களுக்கு அல்லாஹ் நேர்வழிகாட்ட மாட்டான்.

7. இவர்கள்தான் “இறைத்தூதருடன் இருப்போருக்கு செலவு செய்யாதீர்கள், அதனால் அவர்கள் பிரிந்து போகட்டும்” என்று கூறுபவர்கள். வானங்கள் மற்றும் பூமியின் பொக்கிஷங்கள் அல்லாஹ்வுக்கே உரியனவாகும். எனினும் இந்நயவஞ்சகர்கள் புரிந்துகொள்ள மாட்டார்கள். 8. ‘நாங்கள் மதீனாவிற்குத் திரும்பிவந்தால் கண்ணியமுள்ள நாங்கள் இழிவானவர்களை

*(நம்பிக்கைகொண்டவர்களை) அங்கிருந்து நிச்சயமாக வெளியேற்றிவிடுவோம்' என்று கூறுகிறார்கள். கண்ணியமானது அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் நம்பிக்கையாளர்களுக்கும் உரியதாகும். ஆயினும் இந்நயவஞ்சகர்கள் அறிய மாட்டார்கள்.*

*9. நம்பிக்கையாளர்களே! உங்களின் செல்வங்களோ பிள்ளைகளோ இறைநினைவைவிட்டு உங்களை அலட்சியத்தில் ஆழ்த்திவிட வேண்டாம். அவ்வாறு செய்பவர்கள்தான் நஷ்டமடைந்தவர்கள். 10. உங்களில் ஒருவருக்கு மரணம் வரும்முன்னரே நாம் உங்களுக்கு அளித்தவற்றிலிருந்து செலவு செய்து கொள்ளுங்கள். அப்போது அவன் கூறுவான்: "என் இறைவனே! எனக்கு நீ சிறிது அவகாசம் அளித்திருக்கக் கூடாதா? நான் தர்மம் செய்து நல்லோர்களில் ஒருவராக ஆகிவிடுவேனே" என்று. 11. ஆனால் எந்த ஆன்மாவுக்கும் அதற்குரிய தவணை வந்து விட்டால் அல்லாஹ் ஒருபோதும் அவகாசம் அளிக்க மாட்டான். நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவனாக இருக்கின்றான்.*

## 64. வெற்றி - தோல்வி (அத்தகாபுன்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அல்லாஹ்வைப் புகழ்ந்து கொண்டிருக்கின்றன. ஆட்சியதிகாரம் அவனுக்கே உரியது. புகழும் அவனுக்கே உரியது. அவன் ஒவ்வொன்றின்மீதும் பேராற்றலுடையவன். 2. அவனே உங்களைப் படைத்தான். உங்களில் சிலர் நிராகரிப்பாளர்களாக இருக்கிறார்கள், சிலர் நம்பிக்கையாளர்களாக இருக்கிறார்கள். அல்லாஹ் நீங்கள் செய்கின்ற அனைத்தையும் பார்த்துக் கொண்டிருக்கிறான். 3. அவன் வானங்களையும் பூமியையும் சிறந்த முறையில் படைத்துள்ளான்.*

அவன்தான் உங்களை வடிவமைத்து உங்கள் தோற்றங்களை அழகாக்கினான். அவனிடமே நீங்கள் திரும்பிச் செல்ல வேண்டும். 4. வானங்களிலும் பூமியிலும் உள்ளவற்றை அவன் அறிகிறான். நீங்கள் மறைப்பதையும் வெளிப்படுத்துவதையும் அவன் அறிகிறான். உள்ளங்களில் உள்ளவற்றையும் அல்லாஹ் நன்கறிந்தவன்.

5. இதற்கு முன்னர் நிராகரித்தவர்களின் செய்தி உங்களுக்கு வரவில்லையா? அவர்கள் தங்கள் செயலின் மோசமான விளைவை அனுபவித்தார்கள். அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு. 6. இதற்குக் காரணம் அவர்களிடம் அவர்களின் தூதர்கள் தெளிவான ஆதாரங்களைக் கொண்டுவந்தபோதிலும் ‘ஒரு மனிதரா எங்களுக்கு வழிகாட்டுவது?’ என்று கூறி நிராகரித்து புறக்கணித்து விட்டதுதான். அல்லாஹ்வும் அவர்களைப் பொருட்படுத்தவில்லை. அல்லாஹ் தேவையற்றவனாகவும் புகழுக்குரியவனாகவும் இருக்கின்றான்.

7. ‘இறந்தபின் தாம் மீண்டும் எழுப்பப்பட மாட்டோம்’ என்று நிராகரிப்பாளர்கள் வாதம் புரிகிறார்கள். நீர் கூறும்: “என் இறைவன்மீது சத்தியமாக, நிச்சயமாக நீங்கள் எழுப்பப்படுவீர்கள். பின்னர் நீங்கள் என்னவெல்லாம் செய்தீர்கள் என்று உங்களுக்கு அறிவிக்கப்படும்”. இவ்வாறு செய்வது அல்லாஹ்வுக்கு மிக எளிதானது. 8. எனவே அல்லாஹ்வின்மீதும் அவனது தூதரின்மீதும் நாம் அருளியிருக்கும் ஒளியின்மீதும் நம்பிக்கை கொள்ளுங்கள். நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவன். 9. எந்த நாளில் -அவன் உங்கள் அனைவரையும் ஒன்றுதிரட்டுவானோ அந்த நாள்தான் வெற்றி தோல்விக்கான நாளாகும். எவர் அல்லாஹ்வின்மீது நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிகிறாரோ அல்லாஹ் அவரது பாவங்களைப் போக்கி சொர்க்கச் சோலைகளில் அவரை நுழையச் செய்வான். அவற்றில் ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள்.

இதுவே மாபெரும் வெற்றியாகும். **10.** சத்தியத்தை நிராகரித்து நம் வசனங்களைப் பொய்யெனக் கூறுபவர்கள்தான் நரகவாசிகள். அங்கு அவர்கள் நிரந்தரமாக இருப்பார்கள். அது மிகவும் கெட்ட இருப்பிடமாகும்.

**11.** அல்லாஹ்வின் அனுமதியின்றி எத்துன்பமும் ஏற்படுவதில்லை. எவர் அல்லாஹ்வின்மீது நம்பிக்கை வைப்பாரோ அவரது உள்ளத்திற்கு அவன் நேர்வழிகாட்டுகிறான். அல்லாஹ் அனைத்தையும் அறிந்தவனாக இருக்கின்றான். **12.** அல்லாஹ்வுக்கு கட்டுப்படுங்கள். தூதருக்கும் கட்டுப்படுங்கள். நீங்கள் புறக்கணித்தால் அறிந்துகொள்ளுங்கள்; தெளிவாக எடுத்துரைப்பதே நம் தூதர் மீதுள்ள கடமையாகும். **13.** அல்லாஹ், அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. எனவே நம்பிக்கையாளர்கள் அவனையே சார்ந்திருக்க வேண்டும்.

**14.** நம்பிக்கையாளர்களே! உங்கள் மனைவியரிலும் பிள்ளைகளிலும் உங்களுக்குப் பகைவர்களாக இருக்கிறார்கள். எனவே அவர்கள் விஷயத்தில் எச்சரிக்கையாக இருங்கள். நீங்கள் அவர்களின் குறைகளை சகித்துக்கொண்டு கண்டுகொள்ளாமல் மன்னித்து விட்டால்..., நிச்சயமாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். **15.** உங்களின் செல்வங்களும் பிள்ளைகளும் ஒரு சோதனையே. அல்லாஹ்விடம்தான் மகத்தான கூலி உள்ளது. **16.** எனவே உங்களால் முடிந்தவரை அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள், செவிதாழ்த்திக் கேளுங்கள், கீழ்ப்படியுங்கள், செலவு செய்யுங்கள். இது உங்களுக்குத்தான் சிறந்தது. தம் உள்ளத்தின் கஞ்சத்தனத்தை விட்டுப் பாதுகாக்கப்பட்டவர்கள்தான் வெற்றியாளர்கள். **17.** நீங்கள் அல்லாஹ்வுக்கு அழகிய கடன் அளித்தால் அவன் உங்களுக்கு இருமடங்கு அதிகமாக்கித் தருவான். உங்களை

*மன்னித்தும் விடுவான். அல்லாஹ் நன்றியை ஏற்பவனாகவும் சகிப்புத்தன்மை உடையவனாகவும் இருக்கின்றான். 18. அவன் மறைவானதையும் வெளிப்படையானதையும் அறிந்தவன்; யாவற்றையும் மிகைத்தவன்; ஞானம் மிக்கவன்.*

# *65. விவாகரத்து (அத்தலாக்)*

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. தூதரே! (கூறுவீராக): நீங்கள் பெண்களை விவாகரத்து செய்தால் அவர்கள் தூய்மையாக இருக்கும் காலங்களில் விவாகரத்து செய்யுங்கள். அவர்களின் கால அளவை சரியாகக் கணக்கிட்டுக் கொள்ளுங்கள். உங்கள் இறைவனாகிய அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். அப்பெண்களை உங்கள் வீடுகளிலிருந்து வெளியேற்றாதீர்கள். அவர்களும் வெளியேறக்கூடாது, ஆனால் அவர்கள் வெளிப்படையான மானக்கேட்டைச் செய்தாலே தவிர. இவை இறைவரம்புகளாகும். எவன் இறைவரம்பை மீறுகிறானோ அவன் தனக்குத்தானே அநீதியிழைத்துக் கொண்டவனாவான். இதற்குப் பின்னர் அல்லாஹ் ஏதேனும் புதிய சூழலை உண்டாக்கக்கூடும் என்பதை நீர் அறிய மாட்டீர். 2. அவர்கள் தங்களது தவணையை அடைந்துவிட்டால் நல்ல முறையில் அவர்களை வைத்துக் கொள்ளுங்கள் அல்லது நல்ல முறையில் அவர்களை விட்டுப் பிரிந்துவிடுங்கள். உங்களிலிருந்து நியாயமான இரு சாட்சிகளை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். அல்லாஹ்விற்காக சரியான முறையில் சாட்சி வழங்குங்கள். அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்புவோருக்கு இவ்வாறு அறிவுரை கூறப்படுகிறது. எவர் அல்லாஹ்வுக்கு அஞ்சுகிறாரோ அவருக்கு அல்லாஹ் வழியை ஏற்படுத்துவான். 3. அவர் நினைத்துப் பார்க்காத புறத்திலிருந்து அவருக்கு அவன் வாழ்வாதாரத்தை வழங்குவான்.*

எவர் அல்லாஹ்வையே சார்ந்திருக்கிறாரோ அவருக்கு அவனே போதுமானவன். நிச்சயமாக அல்லாஹ் தனது திட்டத்தை நிறைவேற்றியே தீருவான். அல்லாஹ் ஒவ்வொரு பொருளுக்கும் ஒரு விதியை நிர்ணயித்துள்ளான்.

4. உங்கள் பெண்களில் மாதவிடாய் வராது என்று நம்பிக்கையிழந்து விட்டவர்கள் விஷயத்தில் உங்களுக்கு ஐயம் இருந்தால் அவர்களின் கால அளவு மூன்று மாதங்களாகும். மாதவிடாய் வராத பெண்களுக்கும் இதுவே விதியாகும். கர்ப்பிணிப் பெண்களின் காலஅளவு அவர்கள் பிரசவிக்கும் வரையிலாகும். யார் அல்லாஹ்வுக்கு அஞ்சுகிறாரோ அவருக்கு அவரது காரியத்தை அவன் எளிதாக்கி விடுவான். 5. இது அல்லாஹ் உங்கள்மீது அருளியுள்ள கட்டளையாகும். யார் அல்லாஹ்வை அஞ்சுவாரோ அவரது பாவங்களை அவன் போக்கி விடுவான். அவருக்குப் பெரும் கூலியையும் வழங்குவான்.

6. உங்களின் சக்திக்கேற்ப நீங்கள் வசிக்கும் இடத்திலேயே அப்பெண்களையும் வசிக்கச் செய்யுங்கள். அவர்களை நெருக்கடியில் ஆழ்த்துவதற்காக அவர்களுக்குத் தொல்லை தராதீர்கள். அவர்கள் கர்ப்பிணிகளாக இருந்தால் பிரசவிக்கும்வரை அவர்களுக்குச் செலவு செய்யுங்கள். அவர்கள் உங்களுக்காக உங்கள் குழந்தைகளுக்குப் பாலூட்டினால் அவர்களுக்குரிய ஊதியத்தைக் கொடுத்து விடுங்கள். நீங்கள் ஒருவருக்கொருவர் நல்ல முறையில் பேசி முடிவு செய்துகொள்ளுங்கள். நீங்கள் உங்களுக்குள் நெருக்கடியை உணர்ந்தால் குழந்தைக்கு வேறொரு பெண் பாலூட்டட்டும். 7. வசதியுள்ளவர் தம் வசதிக்கேற்ப செலவு செய்ய வேண்டும். எவரது வருமானம் குறைவாக இருக்கிறதோ அவர் அல்லாஹ் வழங்கியதிலிருந்து செலவு செய்யட்டும். அல்லாஹ் எவருக்கு எவ்வளவு கொடுத்திருக்கிறானோ அதற்கு மேலாக அவர்மீது

சுமையை சுமத்துவதில்லை. அல்லாஹ் சிரமத்திற்குப் பிறகு எளிதானதை விரைவில் ஏற்படுத்தி விடுவான்.

*8.* எத்தனையோ ஊர்மக்கள் தங்கள் இறைவனின் கட்டளைக்கும் அவனுடைய தூதர்களுக்கும் மாறு செய்தார்கள். எனவே நாம் அவர்களைக் கடுமையாக விசாரணை செய்து மோசமான தண்டனை அளித்தோம். *9.* எனவே அவர்கள் தங்கள் செயலின் விளைவை சுவைத்து விட்டார்கள். அவர்களின் இறுதி முடிவு நஷ்டமாகவே அமைந்தது. *10.* அல்லாஹ் அவர்களுக்குக் கடும் வேதனையைத் தயார்படுத்தி வைத்துள்ளான். நம்பிக்கைகொண்ட அறிவுடையோரே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். அல்லாஹ் உங்களுக்கு ஒரு அறிவுரையை அருளியுள்ளான். *11.* ஒரு தூதரையும் (அனுப்பியுள்ளான்). அவர் தெளிவுபடுத்தக்கூடிய இறைவசனங்களை எடுத்துரைக்கிறார், நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிவோரை இருளிலிருந்து வெளியேற்றி வெளிச்சத்தின் பக்கம் கொண்டு வருவதற்காக. எவர் நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிகின்றாரோ அவரை அல்லாஹ் சொர்க்கச் சோலைகளில் நுழையச் செய்வான். அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அங்கு அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். அல்லாஹ் அவர்களுக்கு அழகிய வாழ்வாதாரத்தை வழங்குவான்.

*12.* ஏழு வானங்களையும் அதைப்போன்று பூமியையும் அல்லாஹ்தான் படைத்தான். அவற்றில் (அவனது) கட்டளை இறங்கிக் கொண்டிருக்கிறது. அது அல்லாஹ் ஒவ்வொரு பொருளின்மீதும் ஆற்றலுடையவன் என்பதையும் அல்லாஹ்வின் அறிவு ஒவ்வொரு பொருளையும் சூழ்ந்திருக்கிறது என்பதையும் நீங்கள் அறிந்துகொள்வதற்காகத்தான்.

# 66. விலக்குதல் (அத்தஹ்ரீம்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. தூதரே! உமது மனைவியரின் திருப்திக்காக அல்லாஹ் உமக்கு அனுமதியளித்துள்ளதை (எடுத்துக் கொள்வதில்லை என்று ஏன் சத்தியம் செய்து) விலக்கிக்கொள்கிறீர்? அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான். 2. அல்லாஹ் உங்கள் சத்தியங்களை (பரிகாரம் கொடுத்து) முறித்துக் கொள்ளும்படி கட்டளையிட்டுள்ளான். அல்லாஹ்வே உங்கள் பாதுகாவலன். அவன் நன்கறிந்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான்.*

*3. தூதர் தம்முடைய ஒரு மனைவியிடம் ஒரு விஷயத்தை இரகசியமாகக் கூறியபோது அம்மனைவி அதனை வெளிப்படுத்தி விட்டார். அல்லாஹ் அதனை தூதருக்கு வெளிப்படுத்தி விட்டான். தூதர் சிலவற்றை அம்மனைவியிடம் தெரியப்படுத்தி வேறு சிலவற்றை விட்டுவிட்டார். பின்னர் தூதர், தம் மனைவியிடம் தெரிவித்தபோது 'தங்களுக்கு இதனை தெரிவித்தது யார்' என்று மனைவி கேட்டார். அதற்குத் தூதர் "நன்கறிந்தவனும் எல்லாம் தெரிந்தவனும்தான் எனக்குக் கூறினான்" என்று கூறினார். 4. நீங்கள் இருவரும் அல்லாஹ்விடம் மன்னிப்புக்கோரி மீண்டு விட்டால் (அதுவே உங்களுக்குச் சிறந்ததாகும்). ஏனெனில் உங்களின் உள்ளங்கள் நேர்வழியிலிருந்து விலகி விட்டன. நீங்கள் இருவரும் தூதருக்கு எதிராகச் செயல்பட்டால் அல்லாஹ் அவரது பாதுகாவலனாக இருக்கிறான். கேப்ரியேலும் நம்பிக்கைகொண்ட நல்லோர்களும் வானவர்களும் அவருக்கு உதவியாளர்களாக இருக்கிறார்கள். 5. தூதர் உங்கள் அனைவரையும் விவாகரத்து செய்துவிட்டால் அவரது இறைவன் உங்களுக்குப் பதிலாக*

உங்களைவிடவும் சிறந்த மனைவியரை அவருக்கு வழங்கி விடலாம். அவர்கள் கீழ்ப்படிந்தவர்களாக, நம்பிக்கைகொண்டவர்களாக, வணங்கக்கூடியவர்களாக, பாவமன்னிப்புக் கோருபவர்களாக, நோன்பு நோற்கக்கூடியவர்களாக, கன்னியர்களாகவும், (கணவனை இழந்த) கைம்பெண்ணாகவும் இருப்பார்கள்.

6. நம்பிக்கையாளர்களே! உங்களையும் உங்கள் குடும்பத்தினரையும் நரகநெருப்பிலிருந்து காத்துக்கொள்ளுங்கள். அதன் எரிபொருள் மனிதர்களும் கற்களுமேயாகும். அதன்மீது கடுமைமிக்க, வலிமையான வானவர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர். அவர்கள் இறைக்கட்டளைக்கு மாறாக நடப்பதில்லை. அவர்கள் தங்களுக்கு இடப்பட்ட கட்டளைப்படியே செயல்படுவார்கள். 7. நிராகரிப்பாளர்களே! நீங்கள் இன்று எந்த பொய்க்காரணமும் சொல்லாதீர்கள். நீங்கள் செய்தவற்றுக்குத்தான் கூலி கொடுக்கப்படுகிறீர்கள்.

8. நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்விடம் உண்மையான முறையில் பாவமன்னிப்புக்கோரி மீளுங்கள். உங்கள் இறைவன் உங்கள் பாவங்களைப் போக்கி உங்களை சொர்க்கச் சோலைகளில் புகுத்தி விடலாம். அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அந்நாளில் தூதரையும் அவருடன் நம்பிக்கை கொண்டவர்களையும் அல்லாஹ் இழிவுபடுத்த மாட்டான். அவர்களுக்கு (வழங்கப்பட்ட) ஒளி அவர்களுக்கு முன்னாலும் வலப்பக்கமும் ஓடிக்கொண்டிருக்கும். அவர்கள் "எங்கள் இறைவா! எங்கள் ஒளியை எங்களுக்கு முழுமையாக்கித் தருவாயாக. எங்களை மன்னிப்பாயாக. நிச்சயமாக நீ ஒவ்வொரு பொருளின்மீதும் பேராற்றலுடையவன்" என்று கூறுவார்கள். 9. தூதரே! நிராகரிப்பாளர்களுடனும், நயவஞ்சகர்களுடனும் கடுமையாகப் பாடுபடுவீராக. அவர்களுடன் கடுமையாக நடந்து கொள்வீராக. அவர்களின்

இருப்பிடம் நரகமாகும். அது மிகவும் கெட்ட இருப்பிடமாகும். *10.* நோவாவின் மனைவியையும் லோத்தின் மனைவியையும் அல்லாஹ் நிராகரிப்பவர்களுக்கு உதாரணமாகக் கூறுகிறான். இவ்விருவரும் நம்முடைய நல்லடியார்களின் மனைவியராக இருந்தார்கள். எனினும் அவர்கள் தங்கள் கணவன்மார்களுக்கு துரோகம் செய்தார்கள். அப்பெண்களுக்கு அல்லாஹ்விடமிருந்து எந்தப் பயனையும் அந்த நல்லடியார்களால் அளிக்க முடியவில்லை. நரகநெருப்புக்குள் செல்வோருடன் நீங்களும் செல்லுங்கள் என்றே அவ்விரு பெண்களுக்கும் கூறப்பட்டது.

*11.*பாரோவின் மனைவியை அல்லாஹ் நம்பிக்கையாளர்களுக்கு உதாரணமாகக் கூறுகிறான். அவர் “என் இறைவா! உன்னிடத்தில் எனக்காக சொர்க்கத்தில் ஒரு வீட்டை அமைத்துத் தருவாயாக. பாரோவை விட்டும் அவனது செயலை விட்டும் என்னைக் காப்பாற்றுவாயாக. அநியாயக்கார சமூகத்திலிருந்து எனக்கு விடுதலை அளிப்பாயாக” என்று பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார். *12.* இம்ரானின் மகள் மரியாளையும் (மற்றொரு) உதாரணமாக கூறுகிறான். அவர் தமது கற்பை பாதுகாத்துக் கொண்டார். அவருள் நாம் நம் ஆன்மாவை ஊதினோம். அவர் தம் இறைவனின் வார்த்தைகளையும் அவனது வேதங்களையும் உண்மைப்படுத்தினார். அவர் கீழ்ப்படிந்து நடப்பவர்களில் உள்ளவராக இருந்தார் (என்று கூறுகிறான்).

## 67. ஆட்சியதிகாரம் (அல்முல்க்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1.* யாருடைய கைவசம் ஆட்சி உள்ளதோ அவன் பாக்கியம்மிக்கவன். அவன் ஒவ்வொரு பொருளின்மீதும்

*பேராற்றலுடையவன். **2.** உங்களில் நற்செயல் புரிபவர் யார் என்பதைச் சோதிப்பதற்காகவே அவன் மரணத்தையும் வாழ்வையும் படைத்தான். அவன் யாவற்றையும் மிகைத்தவனாகவும் பெரும் மன்னிப்பாளனாகவும் இருக்கின்றான். **3.** அவனே ஏழு வானங்களையும் ஒன்றன் பின் ஒன்றாகப் படைத்தான். கருணைமிக்க இறைவனின் படைப்பில் எவ்விதக் குறைபாட்டையும் நீ காண மாட்டாய். மீண்டும் பார்வையைச் செலுத்திப் பார். உனக்கு ஏதேனும் குறை தென்படுகிறதா? **4.** மீண்டும் மீண்டும் பார்வையைச் செலுத்திப் பார். பார்வை தோல்வியுற்று களைப்படைந்து உன் பக்கமே திரும்பி விடும்.*

***5.** நாம் அருகிலுள்ள வானத்தை விளக்குகளால் அலங்கரித்துள்ளோம். அவற்றை சாத்தான்களை எறிவதற்காகவே அமைத்துள்ளோம். அவர்களுக்கு நரக வேதனையையும் தயார்படுத்தி வைத்துள்ளோம். **6.** தங்கள் இறைவனை நிராகரித்தோருக்கு நரக வேதனையுண்டு. அது மிகவும் கெட்ட இருப்பிடமாகும். **7.** அதில் அவர்கள் எறியப்படும்போது கொதித்துக் கொண்டிருக்கும் அதன் பயங்கரமான கர்ஜனையை செவியுறுவார்கள். அது கோபத்தால் வெடித்து விடும்போலத் தோன்றும். **8.** அதில் ஏதேனும் ஒரு சமூகத்தார் எறியப்படும்போதெல்லாம் அதன் காவலர்கள் அவர்களிடம், உங்களிடம் எச்சரிக்கை செய்பவர்கள் யாரும் வரவில்லையா என்று கேட்பார்கள். **9.** அதற்கு அவர்கள், "ஆம். எங்களிடம் எச்சரிக்கை செய்பவர் வந்திருந்தார். ஆயினும் நாங்கள் அவரைப் பொய்யென கருதி அல்லாஹ் எதனையும் அருளவில்லை, நீங்கள் பெரும் வழிகேட்டில் இருக்கிறீர்கள் என்று கூறி விட்டோம்" என்று கூறுவார்கள். **10.** "நாங்கள் செவிமடுத்திருந்தால் அல்லது புரிந்துகொண்டிருந்தால் நரகவாசிகளாயிருக்க மாட்டோமே" என்றும் கூறுவார்கள். **11.** இவ்வாறு அவர்கள் தங்களின் குற்றத்தை*

*ஒப்புக்கொள்வார்கள். எனவே நரகவாசிகளின் மீது சாபம் உண்டாகட்டும்.*

*12. மறைவில் தங்கள் இறைவனை அஞ்சுபவர்களுக்கு மன்னிப்பும், பெரும் கூலியும் உண்டு. 13. நீங்கள் இரகசியமாகக் கூறுங்கள் அல்லது பகிரங்கமாகக் கூறுங்கள். அவன் உள்ளங்களில் உள்ளவற்றையும் நன்கறிவான். 14. படைத்தவன் அறிய மாட்டானா என்ன? அவன் நுட்பமானவன்; நன்கறிந்தவன்.*

*15. அவனே பூமியை உங்களுக்கு வசப்பட்டதாக அமைத்துள்ளான். அதன் பாதைகளில் செல்லுங்கள். அதனுடைய உணவிலிருந்து உண்ணுங்கள். அவனிடமே நீங்கள் மீண்டும் எழுப்பப்படுவீர்கள். 16. வானத்தில் இருப்பவன் உங்களைப் பூமியினுள் ஆழ்த்தி விடுவான் என்பதைக் குறித்து நீங்கள் அச்சமற்று இருக்கிறீர்களா? அப்போது அது நடுங்கத் தொடங்கும். 17. வானத்தில் இருப்பவன் உங்கள்மீது கற்களை வீசும் காற்றை அனுப்பி விடக்கூடும்  என்று உங்களுக்கு அச்சமில்லையா? எனது எச்சரிக்கை எப்படி இருக்கின்றது என்பதை நீங்கள் அறிந்துகொள்வீர்கள். 18. இவர்களுக்கு முன் இருந்தவர்களும் நிராகரித்தார்கள். அப்போது எனது தண்டனை எவ்வாறு இருந்தது (என்பதை நீங்கள் அறியவில்லையா)?*

*19. தங்களுக்கு மேலே இறக்கைகளை விரித்தவாறும் மடக்கியவாறும் பறந்து கொண்டிருக்கும் பறவைகளை அவர்கள் பார்க்கவில்லையா? கருணையாளனைத்தவிர அவற்றை விழாமல் தடுத்துக் கொண்டிருப்பவன் வேறு யாருமில்லை. நிச்சயமாக அவன் ஒவ்வொரு பொருளையும் பார்த்துக் கொண்டிருக்கிறான். 20. கருணையாளனைத்தவிர உங்களுக்கு உதவி புரிவதற்கு உங்களிடம் என்ன படை இருக்கிறது? நிராகரிப்பாளர்கள்*

ஏமாற்றத்தில் ஆழ்ந்து கிடக்கிறார்கள். *21.* அவன் உங்களுக்கான தனது உணவை நிறுத்திக்கொண்டால் உங்களுக்கு உணவு அளிப்பவர் யார்? மாறாக அவர்கள் வரம்பு மீறுவதிலும் சத்தியத்தைவிட்டு வெறுத்தோடுவதிலும் வீழ்ந்து விட்டார்கள்.

*22.* முகங்குப்புற விழுந்து செல்பவன் சரியான வழியை அடைபவனா அல்லது நேரான பாதையில் சீராகச் செல்பவனா? *23.* நீர் கூறும்: "அவனே உங்களைப் படைத்து உங்களுக்குச் செவிகளையும் கண்களையும் உள்ளங்களையும் உண்டாக்கினான். ஆயினும் நீங்கள் மிகக் குறைவாகவே நன்றி செலுத்துகிறீர்கள்". *24.* நீர் கூறும்: "அவனே உங்களைப் பூமியில் பரவச் செய்தான். அவனிடமே நீங்கள் ஒன்று திரட்டப்படுவீர்கள்". *25.* "நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் இந்த வாக்குறுதி எப்போது நிறைவேறும்" என்று அவர்கள் கேட்கிறார்கள். *26.* நீர் கூறும்: "இதனைப்பற்றிய அறிவு அல்லாஹ்விடமே உள்ளது. நான் தெளிவாக எச்சரிப்பவனே". *27.* அவர்கள் அதனை அருகில் காணும்போது நிராகரித்தோரின் முகங்கள் கருத்து விடும். அப்போது, நீங்கள் கேட்டுக்கொண்டிருந்தது இதுதான் என்று கூறப்படும். *28.* நீர் கூறும்: "அல்லாஹ் என்னையும் என்னுடன் இருப்பவர்களையும் அழித்துவிட்டால், அல்லது எங்கள் மீது இரக்கம் காட்டினால் துன்புறுத்தும் வேதனையிலிருந்து நிராகரிப்பாளர்களைக் காப்பாற்றுபவர் யார்?" *29.* நீர் கூறும்: "அவன் அளவிலாக் கருணையாளன். நாங்கள் அவன்மீதே நம்பிக்கை கொண்டுள்ளோம். அவனையே சார்ந்துள்ளோம். தெளிவான வழிகேட்டில் இருப்பவர் யார் என்பதை நீங்கள் மிக விரைவில் அறிந்துகொள்வீர்கள்". *30.* நீர் கேளும்: "நீங்கள் பருகும் தண்ணீர் வற்றிவிட்டால் உங்களுக்குத் தூய்மையான தண்ணீரைக் கொண்டுவருபவன் யார்?" என்று.

# 68. எழுதுகோல் (அல்கலம்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. நூன். எழுதுகோலின்மீதும் மக்கள் எழுதுபவற்றின்மீதும் சத்தியமாக. 2. உமது இறைவனின் அருளால் நீர் பைத்தியக்காரர் அல்ல. 3. நிச்சயமாக உமக்கு என்றும் முடிவுறாத கூலி உள்ளது. 4. நிச்சயமாக நீர் உன்னதமான நற்குணம் உடையவராக இருக்கின்றீர். 5. எனவே விரைவில் நீரும் கண்டுகொள்வீர், அவர்களும் கண்டுகொள்வார்கள், 6. உங்களில் எவருக்குப் பைத்தியம் பிடித்திருந்தது என்பதை. 7. உங்களில் அவனது வழியை விட்டுத் தவறி விட்டவர் யார் என்பதை உம் இறைவனே நன்கறிவான். நேர்வழியில் செல்வோரையும் அவனே நன்கறிவான். 8. எனவே நீர் மறுப்பாளர்களுக்குக் கட்டுப்படாதீர். 9. நீர் விட்டுக்கொடுத்தால் தாங்களும் விட்டுக் கொடுக்கலாம் என்று அவர்கள் விரும்புகிறார்கள். 10. அதிகம் சத்தியம் செய்கின்ற, இழிவான எந்த மனிதனுக்கும் நீர் கட்டுப்படாதீர். 11. அவன் குறைகூறிப் புறம்பேசித் திரிபவன், 12. நற்செயல்களைத் தடுப்பவன், வரம்புமீறும் பெரும்பாவி, 13. இரக்கமற்றவன். இத்தனைக்கும் மேல் அவன் இழிபிறவியாக இருக்கின்றான். 14. இதற்கான காரணம் அவன் செல்வமும், பிள்ளைகளும் உடையவனாக இருப்பதுதான். 15. அவனிடம் நம் வசனங்கள் எடுத்துரைக்கப்பட்டால் இது முன்னோர்களின் கட்டுக்கதைகள் என்று கூறுகிறான். 16. விரைவில் நாம் அவனது மூக்கின்மீது சூடு இடுவோம்.*

*17. நாம் தோட்டக்காரர்களை சோதனைக்குள்ளாக்கியதைப் போன்று இவர்களையும் சோதனைக்குள்ளாக்கினோம். அதிகாலையில் சென்று தங்கள் தோட்டத்தின் கனிகளை நிச்சயம் பறித்திடுவோம். 18. எதையும் விட்டு வைக்க மாட்டோம் என்று*

*அவர்கள் சத்தியம் செய்திருந்தார்கள். **19.** எனவே அவர்கள் உறக்கத்தில் ஆழ்ந்திருந்தபோது உமது இறைவனிடமிருந்து சுற்றி வளைக்கக்கூடியது (ஆபத்து) சுற்றி வளைத்துக்கொண்டது. **20.** அது அறுவடை செய்யப்பட்ட வயலைப் போன்று ஆகிவிட்டது. **21.** காலையில் அவர்கள் ஒருவரையொருவர் அழைத்தார்கள். **22.** 'நீங்கள் கனிகளைப் பறிப்பதாக இருந்தால் அதிகாலையில் உங்கள் தோட்டத்திற்குப் புறப்படுங்கள்' **23.** என்றபடி அவர்கள் தங்களிடையே இரகசியமாகப் பேசிக்கொண்டே புறப்பட்டுச் சென்றார்கள். **24.** "இன்று எந்த ஏழையும் உங்களிடம் தோட்டத்திற்குள் வந்துவிடக் கூடாது". **25.** தாம் தடுப்பதற்கு சக்தி பெற்றவர்கள் என்று அவர்கள் எண்ணிக் கொண்டார்கள். **26.** ஆனால் தோட்டத்தை அவர்கள் கண்டபோது 'நாம் வழிதவறி வந்துவிட்டோம்' என்று கூறினார்கள். **27.** 'இல்லை. நாம் இழப்புக்குள்ளாகி விட்டோம்' என்று கூறினார்கள். **28.** அவர்களில் சிறந்தவர், "நீங்கள் அல்லாஹ்வை துதிக்க வேண்டும் என்று உங்களிடம் நான் கூறவில்லையா?" என்று கேட்டார். **29.** அதற்கு அவர்கள் "எங்கள் இறைவன் மிகத் தூய்மையானவன். நிச்சயமாக நாங்கள்தான் அநியாயக்காரரர்களாக இருந்தோம்" என்று கூறினார்கள். **30.** அவர்கள் ஒருவர் மீது ஒருவர் பழி சுமத்தலானார்கள் **31.** "எங்கள் கேடே! நிச்சயமாக நாங்கள் வரம்பு மீறியவர்களாக இருந்தோம். **32.** எங்கள் இறைவன் இதற்குப் பதிலாக இதைவிடச் சிறந்த தோட்டத்தை எங்களுக்கு வழங்கக்கூடும். நாங்கள் அவன் பக்கமே திரும்புகின்றோம்" என்று அவர்கள் கூறினார்கள். **33.** இவ்வாறுதான் வேதனை வருகிறது. மறுமையின் வேதனையோ இதைவிடக் கடுமையானதாகும். அவர்கள் அறிந்துகொள்ள வேண்டுமே!*

*__34.__ நிச்சயமாக இறையச்சமுடையோருக்கு அவர்களின் இறைவனிடத்தில் அருள்நிறைந்த சுவனச்சோலைகள் உள்ளன.*

*35.* கீழ்ப்படிந்து நடப்போரை நாம் கீழ்ப்படியாதவர்களைப் போன்று ஆக்கிவிடுவோமா என்ன? *36.* உங்களுக்கு என்ன நேர்ந்தது? நீங்கள் எவ்வாறு முடிவு எடுக்கிறீர்கள்? *37.* உங்களிடம் ஏதேனும் வேதம் உள்ளதா, அதில் நீங்கள் படிக்கிறீர்களா? *38.* அதில் நீங்கள் விரும்பக்கூடியவை இருக்கின்றனவா? *39.* 'நீங்கள் தீர்மானிப்பவை மறுமைநாள் வரை உங்களுக்குக் கிடைத்துக் கொண்டே இருக்கும்' என்று நம்மிடம் ஏதேனும் வாக்குறுதி பெற்றிருக்கிறீர்களா? *40.* அவர்களில் யார் இதற்குப் பொறுப்பாளி என்று நீர் அவர்களிடம் கேளும். *41.* அவர்களுக்கு யாரேனும் இணையாளர்கள் இருக்கின்றனரா? அவர்கள் உண்மையாளர்களாயின் தம் இணையாளர்களைக் கொண்டு வரட்டும்.

*42.* சத்தியத்தைவிட்டு திரை அகற்றப்படும் நாளில் மக்கள் சிரம்பணிய அழைக்கப்படுவார்கள். அப்போது அவர்களால் சிரம்பணிய முடியாது. *43.* அவர்களின் பார்வைகள் தாழ்ந்திருக்கும். இழிவு அவர்கள்மீது படர்ந்திருக்கும். அவர்கள் ஆரோக்கியமாக இருந்தபோது சிரம்பணியுமாறு அழைக்கப்பட்டிருந்தார்கள். *44.* ஆகவே என்னையும் இவ்வாக்கைப் புறக்கணிப்போரையும் விட்டுவிடுங்கள். அவர்களே அறியாதவாறு படிப்படியாக நாம் அவர்களைப் பிடிப்போம். *45.* நான் அவர்களுக்கு அவகாசம் அளிக்கிறேன். நிச்சயமாக என் திட்டம் உறுதியானது.

*46.* அவர்களிடம் நீர் ஏதேனும் கூலி கேட்கிறீரா? அதனால் கடன் சுமையால் மூழ்கிவிட்டார்களா? *47.* அல்லது அவர்களிடம் மறைவான அறிவு இருந்து அதனை அவர்கள் எழுதிக் கொண்டிருக்கிறார்களா? *48.* ஆகவே, உம் இறைவனின் தீர்ப்பு வரும்வரை பொறுத்துக்கொள்ளும். மீன் விழுங்கிவிட்டவரைப் (ஜோனா) போன்று ஆகிவிடாதீர். அவர் துக்கம் நிறைந்தவராக அழைத்தபோது *49.* அவரது

இறைவனின் அருள் அவரைத் தழுவாதிருந்தால் இழிவுக்குள்ளாகி வெட்டவெளியில் வீசியெறிப்பட்டிருப்பார். 50. அவரது இறைவன் அவரைத் தேர்ந்தெடுத்து நல்லோர்களில் சேர்த்துக் கொண்டான். 51. இந்நிராகரிப்பாளர்கள் அறிவுரையைச் செவியுறும்போது தம் பார்வைகளால் உம்மை வீழ்த்தி விடுவதைப்போலப் பார்க்கிறார்கள். 'நிச்சயமாக இவர் ஒரு பைத்தியக்காரர்' என்றும் கூறுகிறார்கள். 52. இது அகிலத்தாருக்கு ஒரு அறிவுரையன்றி வேறில்லை.

## 69. நிச்சயமாக நிகழக்கூடியது (அல்ஹாக்கா)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

1. நிச்சயமாக நிகழக்கூடியது. 2. 'நிச்சயமாக நிகழக்கூடியது' எது? 3. 'நிச்சயமாக நிகழக்கூடியது' என்னவென்று உமக்குத் தெரியுமா? 4. ஸமூத் மற்றும் ஆத் கூட்டத்தினர் அந்த திடுக்கிடச் செய்யும் நிகழ்வை மறுத்தார்கள். 5. எனவே ஸமூத் சமூகத்தார் பெரும் சப்தத்தால் அழிக்கப்பட்டார்கள். 6. ஆத் சமூகத்தினரோ வேகமாக விரைந்து வீசும் காற்றினால் அழிக்கப்பட்டார்கள். 7. அல்லாஹ் தொடர்ந்து ஏழு இரவுகள், எட்டு பகல்கள் அவர்கள்மீது அதனை வீசச் செய்தான். அவர்கள் அடியோடு பிடுங்கப்பட்ட பேரீச்சை மரங்களைப்போல் வீழ்ந்து கிடப்பதை நீர் கண்டிருப்பீர். 8. அவர்களில் யாரேனும் எஞ்சி இருப்பதாக உமக்குத் தென்படுகிறார்களா? 9. பாரோவும், அவனுக்கு முன்னிருந்தவர்களும், தலைகீழாகப் புரட்டப்பட்ட ஊரிலிருந்த மக்களும் பாவங்கள் புரிந்தார்கள். 10. அவர்கள் தங்கள் இறைவனின் தூதருக்கு மாறுசெய்தார்கள். எனவே அல்லாஹ் அவர்களை மிகக் கடுமையாகத் தண்டித்தான். 11. தண்ணீர் எல்லை மீறிச் சென்றபோது நாம் உங்களைக் கப்பலில் ஏற்றினோம். 12. அதனை உங்களுக்கு நினைவுச் சின்னமாக ஆக்குவதற்காகவும் நினைவுகூரும்

*செவிகள் அதனை நினைவில் வைத்துக் கொள்வதற்காகவும்தான் நாம் அவ்வாறு செய்தோம்.*

***13.*** *எக்காளம் ஒருமுறை ஊதப்படும்போது,* ***14.*** *பூமியும் மலைகளும் உயர்த்தப்பட்டு ஒரே தடவையில் தூள் தூளாக்கப்படும்போது* ***15.*** *அந்நாளில் நிகழக்கூடியது நிகழ்ந்து விடும்.* ***16.*** *வானம் பிளந்து விடும். அந்நாளில் அது பலமிழந்து விடும்.* ***17.*** *வானவர்கள் அதன் கடைக்கோடிகளில் இருப்பார்கள். அந்நாளில் உமது இறைவனின் அரியணையை எட்டு வானவர்கள் தம்மீது சுமந்து கொண்டிருப்பார்கள்.* ***18.*** *அந்நாளில் நீங்கள் (இறைவனுக்குமுன்) நிறுத்தப்படுவீர்கள். உங்களது எந்த விஷயமும் மறைந்து இருக்காது*.*

***19.*** *எவரது பதிவேடு அவரது வலக்கையில் கொடுக்கப்படுமோ அவர், "இதோ என் பதிவேட்டைப் படியுங்கள்.* ***20.*** *நான் எனது விசாரணையை எதிர்கொள்வேன் என்று உறுதியாக எண்ணியிருந்தேன்" என்று கூறுவார்.* ***21.*** *எனவே அவர் திருப்திகரமான வாழ்க்கையில் இருப்பார்,* ***22.*** *உயர்ந்த சுவனச் சோலைகளில்.* ***23.*** *அதன் கனிகள் தாழ்ந்து தொங்கிக் கொண்டிருக்கும்.* ***24.*** *"மகிழ்ச்சியாக உண்ணுங்கள்; பருகுங்கள். கடந்த காலங்களில் நீங்கள் செய்த காரியங்களுக்காக" (என்று கூறப்படும்).* ***25-29.*** *எவனது பதிவேடு அவனது இடக்கையில் கொடுக்கப்படுமோ அவன், "எனது*

---

*இந்த நடப்புலகு மனிதர்களை சோதிப்பதற்காகவே படைக்கப்பட்டுள்ளது. சோதனைக்கான காலம் முடிவுற்றதும் இந்த உலகம் அழிக்கப்படும். மேலும் சோதனை முடிவுகளுக்கான தீர்ப்பின் தேவைகளுக்கு புதிய உலகம் ஏற்படுத்தப்படும். எல்லாம் வல்ல இறைவன் தற்போது தன்னை மறைமுகமான வகையில் வெளிப்படுத்துகிறான். ஆனால் இவ்வுலகம் அழிக்கப்பெற்று, பின் மறுமை உலகில் எல்லாம் வல்ல இறைவன் தன்னை நேரடியாகவே வெளிப்படுத்துவான்.

*பதிவேடு என்னிடம் கொடுக்கப்படாமல் இருக்கக் கூடாதா! எனது விசாரணையை நான் அறியாதிருக்க வேண்டுமே!. அந்த மரணமே முடிவானதாக இருந்திருக்கக் கூடாதா! எனது செல்வங்கள் எனக்குப் பயனளிக்கவில்லையே! என் அதிகாரமும் பறிபோய் விட்டதே" என்று புலம்புவான் **30.** அவனைப் பிடியுங்கள், அவனுக்கு விலங்கை மாட்டுங்கள். **31.** பின்னர் அவனை நரகத்தில் தள்ளுங்கள். **32.** பின்னர் அவனை எழுபது முழம் நீளமுள்ள சங்கிலியால் பிணையுங்கள் (என்று கூறப்படும்). **33.** அவன் மகத்துவமிக்க அல்லாஹ்வின்மீது நம்பிக்கைகொள்ளாமல் இருந்தான். **34.** அவன் ஏழைகளுக்கு உணவளிக்கத் தூண்டவுமில்லை. **35.** எனவே இன்று இங்கே உதவிபுரியும் நண்பன் யாருமில்லை. **36.** சீழ், சலங்களைத்தவிர அவனுக்கு வேறு உணவும் இல்லை. **37.** குற்றவாளிகளைத்தவிர வேறு யாரும் அதனை உண்ண மாட்டார்கள்.*

***38-39.*** *இல்லை. நீங்கள் பார்க்கின்றவற்றின்மீதும் நீங்கள் பார்க்காதவற்றின் மீதும் நான் சத்தியம் செய்கிறேன். **40.** நிச்சயமாக இது கண்ணியமிக்க ஒரு தூதரின் சொல்லாகும். **41.** இது ஒரு கவிஞரின் சொல்லல்ல. நீங்கள் மிகக் குறைவாகவே நம்பிக்கை கொள்கிறீர்கள். **42.** இது ஒரு ஜோதிடனின் சொல்லும் அல்ல. மிகக் குறைவாகவே நீங்கள் சிந்திக்கிறீர்கள். **43.** இது அகிலத்தாரின் இறைவனிடமிருந்து அருளப்பட்டதாகும். **44.** அவர் ஏதேனும் ஒரு விஷயத்தை நம்மீது புனைந்து கூறியிருந்தால் **45.** நாம் அவரது வலக்கரத்தைப் பிடித்திருப்போம், **46.** பின்னர் அவரது நாடி நரம்பைத் துண்டித்திருப்போம். **47.** உங்களில் எவரும் இதிலிருந்து நம்மைத் தடுக்க முடியாது. **48.** நிச்சயமாக இது இறையச்சமுடையோருக்கு ஒரு நினைவூட்டலேயாகும். **49.** உங்களில் மறுப்பவர்கள் இருக்கிறார்கள் என்பதை நாம் அறிவோம். **50.** இது நிராகரிப்பாளர்களுக்கு துக்கத்தை*

அளிக்கக்கூடியதாகும். 51. இது உறுதியான சத்தியமாகும். 52. எனவே மகத்துவமிக்க உமது இறைவனின் பெயரைத் துதிப்பீராக.

## 70. உயர்வழிகள் (அல்மஆரிஜ்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

1. கேட்பவர் நிகழக்கூடிய வேதனையைக் கேட்டு விட்டார். 2. அதனைத் தடுப்பவர் யாரும் நிராகரிப்பாளர்களுக்கு இல்லை. 3. இது ஏறிச்செல்லும் படிகளின் அதிபதியான அல்லாஹ்விடமிருந்து உள்ளதாகும். 4. வானவர்களும், கேப்ரியேலும் அவனிடம் ஏறிச்செல்கிறார்கள். அவர்கள் செல்லும் ஒரு நாளின் அளவு ஐம்பதாயிரம் ஆண்டுகளாகும். 5. எனவே நீர் அழகிய பொறுமையைக் கடைப்பிடிப்பீராக. 6. அவர்கள் அதனை வெகு தொலைவில் இருப்பதாக எண்ணுகிறார்கள். 7. ஆனால் நாம் அதனை அருகில் காண்கிறோம். 8. அந்நாளில் வானம் உருகிய செம்பைப்போல் ஆகிவிடும். 9. மலைகள் கடையப்பட்ட பஞ்சைப்போன்று ஆகிவிடும். 10. எந்த நண்பனும் தனது நண்பனைப்பற்றி விசாரிக்க மாட்டான். 11. அவர்கள் ஒருவர் மற்றவருக்குக் காட்டப்படுவார்கள். குற்றவாளி அந்நாளின் வேதனையை விட்டுத் தப்புவதற்காக 12. தன் பிள்ளைகளையும், தன் மனைவியையும், தன் சகோதரனையும், 13. தன்னைப் பாதுகாத்து வந்த தன் சொந்தங்களையும் 14. இன்னும் பூமியிலுள்ள அனைவரையும் பிணையாகக் கொடுத்தேனும் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டும் என்று விரும்புவான்.

15. ஒருபோதும் இல்லை. அதுவோ கொழுந்து விட்டெரியும் தீப்பிழம்பாகும். 16. அது தோலை உரித்து விடும். 17. புறக்கணித்துப் புறங்காட்டிச் சென்றவனையும், 18. செல்வத்தைச் சேர்த்து பாதுகாத்து வைத்தவனையும் அது அழைக்கும். 19. நிச்சயமாக

மனிதன் பதற்றக்காரனாகப் படைக்கப்பட்டுள்ளான். **20.** அவனைத் துன்பம் தீண்டிவிட்டால் பதறி விடுகிறான். **21.** அவனுக்கு வசதி வாய்ப்புகள் ஏற்படும்போது கஞ்சத்தனம் செய்யத் தலைப்படுகிறான். **22.** ஆயினும் தொழுகையாளிகளைத் தவிர. **23.** அவர்கள் தங்கள் தொழுகைகளைத் தவறாது கடைப்பிடிப்பார்கள். **24.** அவர்களது செல்வத்தில் யாசகர்களுக்கும், **25.** இல்லாதவர்களுக்கும் ஒரு நிர்ணயிக்கப்பட்ட பங்கு உண்டு. **26.** அவர்கள் தீர்ப்புநாளின்மீது நம்பிக்கை கொண்டிருப்பார்கள். **27.** தங்கள் இறைவனின் வேதனைக்கு அஞ்சுவார்கள். **28.** நிச்சயமாக இறைவனின் வேதனையைவிட்டு எவரும் அச்சமற்றிருக்க முடியாது. **29.** அவர்கள் தம் வெட்கத்தலங்களைப் பாதுகாத்துக் கொள்வார்கள், **30.** தங்கள் மனைவியரையும், தங்கள் அடிமைப் பெண்களையும் தவிர. இவர்களிடத்தில் பாதுகாத்துக் கொள்ளாமல் இருப்பதால் அவர்கள் பழிக்கப்பட மாட்டார்கள். **31.** இதனைத்தவிர வேறு வழிகளை நாடுபவர்கள்தான் வரம்பு மீறியவர்கள். **32.** அவர்கள் தங்களிடம் ஒப்படைக்கப்பட்ட பொருட்களையும் (கொடுத்த) வாக்குறுதிகளையும் பேணுவார்கள்; **33.** தாங்கள் அளித்த சாட்சியங்களின்மீது நிலைத்திருப்பார்கள்; **34.** தங்கள் தொழுகையைக் கடைப்பிடிப்பார்கள். **35.** அவர்கள்தான் சொர்க்கச் சோலைகளில் கண்ணியத்துடன் இருப்பார்கள்.

**36.** இந்நிராகரிப்பாளர்களுக்கு என்ன நேர்ந்தது? அவர்கள் உம்மை நோக்கி ஓடி வருகிறார்களே! **37.** வலப்பக்கத்திலிருந்தும் இடப்பக்கத்திலிருந்தும் கூட்டம் கூட்டமாக! **38.** இவர்களில் ஒவ்வொருவரும் அருள்நிறைந்த சுவனபதியில் நுழைந்துவிடலாம் என்று பேராசை கொண்டிருக்கின்றனரா? **39.** ஒருபோதும் இல்லை. நாம் அவர்கள் அறிந்த பொருளிலிருந்தே அவர்களைப் படைத்துள்ளோம்.

*40.* இல்லை. கிழக்கு மற்றும் மேற்குத் திசைகளின் இறைவன் மீது நான் சத்தியம் செய்கிறேன். *41.* அவர்களைவிட சிறந்தவர்களை நாம் கொண்டு வருவதற்கு ஆற்றல் பெற்றுள்ளோம். நாம் இயலாதவர்கள் அல்லர். *42.* ஆகவே அவர்களை விட்டுவிடும். அவர்கள் வீணானவற்றைப் பேசிக்கொண்டும் விளையாடிக்கொண்டும் இருக்கட்டும். இறுதியில் அவர்கள் வாக்களிப்பட்ட நாளை எதிர்கொள்ளத்தான் போகிறார்கள். *43.* ஏதேனும் ஒரு இலக்கை நோக்கி ஓடுவதைப்போல சவக்குழிகளிலிருந்து அவர்கள் விரைந்து வெளியேறும் நாளில் *44.* அவர்களின் பார்வைகள் தாழ்ந்திருக்கும். அவர்களின்மீது இழிவு படர்ந்திருக்கும். இதுதான் அவர்கள் எச்சரிக்கப்பட்டிருந்த நாள்.

# 71. நோவா (நூஹ்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1.* நாம் நோவாவை அவரது சமூகத்தாரிடம் "உம் சமூகத்தின்மீது துன்புறுத்தும் வேதனை வருவதற்கு முன்னர் அவர்களை எச்சரிக்கை செய்வீராக" என்று கூறி அனுப்பினோம். *2.* அவர்களிடம் அவர், "என் சமூகத்தினரே! நான் உங்களை வெளிப்படையாக எச்சரிப்பவனாக இருக்கின்றேன். *3.* நீங்கள் அல்லாஹ்வை வணங்கி அவனையே அஞ்சுங்கள். எனக்குக் கீழ்ப்படியுங்கள். *4.* அவன் உங்கள் பாவங்களை மன்னிப்பான். உங்களுக்கு ஒரு குறிப்பிட்ட காலம்வரை அவகாசம் அளிப்பான். நிச்சயமாக அல்லாஹ் நிர்ணயித்த நேரம் வந்துவிட்டால் அது ஒத்திவைக்கப்படாது. இதனை நீங்கள் அறிந்துகொள்ள வேண்டுமே!" என்று கூறினார்.

*5.* அவர் கூறினார், "என் இறைவா! நான் என் சமூகத்தினரை இரவு பகலாக அழைத்தேன். *6.* ஆனால் எனது அழைப்பு

*அவர்களிடம் வெருண்டோடுவதையேதான் அதிகரித்தது. **7.** நீ அவர்களை மன்னிக்க வேண்டும் என்பதற்காக நான் அவர்களை அழைத்தபோதெல்லாம் அவர்கள் தம் காதுகளில் விரல்களால் அடைத்துக்கொண்டு தம் ஆடைகளால் தம்மை மூடிக்கொண்டார்கள். ஆணவம் கொண்டு பிடிவாதத்தில் நிலைத்திருந்தார்கள். **8.** பின்னர் நான் அவர்களை வெளிப்படையாக அழைத்தேன். **9.** நான் அவர்களிடம் பகிரங்கமாகப் பிரச்சாரம் செய்தேன், இரகசியமாகவும் கூறினேன்". **10.** "உங்கள் இறைவனிடம் மன்னிப்புக் கோருங்கள். நிச்சயமாக அவன் பெரும் மன்னிப்பாளனாக இருக்கின்றான். **11.** அவன் உங்கள்மீது தொடர்ந்து மழையை அனுப்புவான். உங்கள் செல்வங்களிலும் பிள்ளைகளிலும் அருள்வளத்தை உண்டாக்குவான். **12.** உங்களுக்காகத் தோட்டங்களை உருவாக்கி ஆறுகளையும் ஓடச் செய்வான்" என்று நான் கூறினேன். **13.** உங்களுக்கு என்ன நேர்ந்தது? அல்லாஹ்வின் மகத்துவத்தை நீங்கள் உணரவில்லையா? **14.** அவன் உங்களைப் பல நிலைகளில் படைத்தான். **15.** அல்லாஹ் ஏழு வானங்களையும் எவ்வாறு அடுக்கடுக்காகப் படைத்துள்ளான் என்பதை நீங்கள் பார்க்கவில்லையா? **16.** அவற்றில் அவன் சந்திரனை ஒளியாகவும் சூரியனை விளக்காகவும் அமைத்துள்ளான். **17.** அல்லாஹ்வே பூமியிலிருந்து உங்களைச் சிறந்த முறையில் உருவாக்கினான். **18.** பின்னர் அவன் உங்களை பூமிக்குள் திரும்பக் கொண்டு செல்வான். அதிலிருந்தே உங்களை வெளிப்படுத்துவான். **19.** அல்லாஹ் உங்களுக்காகப் பூமியை விரிப்பாக ஆக்கினான், **20.** அதனுடைய திறந்த பாதைகளில் நீங்கள் செல்வதற்காக.*

***21.** "என் இறைவா! இவர்கள் என் பேச்சைக் கேட்கவில்லை. எவனது செல்வமும் பிள்ளைகளும் அவனுக்கு இழப்பைத்தவிர வேறொன்றையும் அதிகப்படுத்தவில்லையோ அத்தகைய மனிதர்களையே இவர்கள் பின்பற்றினார்கள் என்று நோவா*

கூறினார். *22.* அவர்கள் பெரும் திட்டங்களைத் தீட்டினார்கள். *23.* நீங்கள் உங்கள் தெய்வங்களை ஒருபோதும் விட்டுவிடாதீர்கள். நீங்கள் வத்தையும், ஸுவாவையும், யகூஸையும், யஊகையும், நஸ்ரையும் ஒருபோதும் விட்டுவிடாதீர்கள் என்று அவர்கள் கூறுகிறார்கள். *24.* அவர்கள் பெரும்பாலோரை வழிகெடுத்து விட்டார்கள். எனவே நீ இந்த அநியாயக்காரர்களுக்கு வழிகேட்டைத்தவிர வேறெதையும் அதிகப்படுத்தாதே''. என்று நோவா கூறினார். *25.* தங்கள் பாவங்களினால் அவர்கள் மூழ்கடிக்கப்பட்டு நரகத்தில் தள்ளப்பட்டார்கள். அவர்கள் அல்லாஹ்விடமிருந்து தங்களைக் காப்பாற்றக்கூடிய எந்த உதவியாளரையும் பெறவில்லை.

*26.* "என் இறைவா! நீ இந்நிராகரிப்பாளர்களில் எவரையும் பூமியில் விட்டுவிடாதே. *27.* நீ அவர்களை விட்டுவிட்டால் அவர்கள் உன் அடியார்களை வழிகெடுப்பார்கள். தீயவனையும் நிராகரிப்பாளனையும் தவிர வேறெவனையும் அவர்கள் பெற்றெடுக்க மாட்டார்கள். *28.* என் இறைவா! என்னையும், என் பெற்றோரையும் என் வீட்டில் நம்பிக்கையாளராக நுழைந்தவரையும், நம்பிக்கைகொண்ட ஆண்கள், பெண்கள் அனைவரையும் மன்னிப்பாயாக. அநியாயக்காரர்களுக்கு அழிவைத்தவிர வேறு எதையும் அதிகப்படுத்தி விடாதே" என்று நோவா பிரார்த்தித்தார்.

## 72. ஜின்கள் (அல்ஜின்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1.* நீர் கூறும்: "ஜின்களில் ஒரு கூட்டம் குர்ஆனைச் செவியுற்று, நாங்கள் அற்புதமான ஒரு குர்ஆனைச் செவியுற்றோம் என்று கூறியதாக எனக்கு இறைவனிடமிருந்து அறிவிக்கப்பட்டுள்ளது".

*2.* அது நேரான வழியைக் காட்டுகிறது. எனவே நாங்கள் அதன்மீது நம்பிக்கை கொண்டோம். நாங்கள் எங்கள் இறைவனுடன் யாரையும் இணையாக்க மாட்டோம். *3.* எங்கள் இறைவனின் மகிமை மிகவும் உயர்ந்தது. அவன் மனைவியையோ, பிள்ளையையோ ஏற்படுத்திக் கொள்ளவில்லை. *4.* நம்மிலுள்ள மூடன் அல்லாஹ்வைப்பற்றி உண்மைக்கு மாறான விஷயங்களைக் கூறிக்கொண்டிருந்தான். *5.* மனிதர்களும், ஜின்களும் அல்லாஹ்வின்மீது ஒருபோதும் பொய் கூற மாட்டார்கள் என்றே நாங்கள் எண்ணியிருந்தோம். *6.* மனிதர்களிலுள்ள ஆண்களில் சிலர் சில ஜின்களிடம் பாதுகாப்புத் தேடுபவர்களாக இருந்தனர். இதனால் அவர்கள் ஜின்களின் கர்வத்தை அதிகரித்து விட்டனர். *7.* 'அல்லாஹ் யாரையும் எழுப்ப மாட்டான்' என்று நீங்கள் எண்ணியதைப்போலவே அவர்களும் எண்ணியிருந்தார்கள்.

*8.* நாங்கள் வானத்தை ஆராய்ந்து பார்த்தோம். அது கடுமையான காவலாளிகளாலும், தீச்சுவாலைகளாலும் நிரப்பப்பட்டுள்ளதைக் கண்டோம். *9.* நாங்கள் அதன் சில இடங்களில் ஒட்டுக் கேட்பதற்காக அமர்பவர்களாக இருந்தோம். ஆனால் இப்போது யார் கேட்க விரும்பினாலும் அவர் தனக்காகத் தயார் நிலையிலுள்ள ஒரு தீச்சுவாலையைப் பெறுவார். *10.* பூமியில் உள்ளவர்களுக்கு ஏதேனும் தீங்கு நாடப்பட்டுள்ளதா அல்லது அவர்களின் இறைவன் அவர்களுக்கு நன்மையை நாடியுள்ளானா என்பதை நாங்கள் அறிய மாட்டோம். *11.* எங்களில் சிலர் நல்லவர்களாக இருக்கிறார்கள், சிலர் வேறு விதமாகவும் இருக்கிறார்கள். நாங்கள் பல்வேறு வழிகளில் சிதறிக் கிடக்கிறோம். *12.* நாங்கள் பூமியில் அல்லாஹ்வை தோற்கடிக்க முடியாது என்பதையும் ஓடிச்சென்று அவனிடமிருந்து தப்பிவிட முடியாது என்பதையும் உணர்ந்து கொண்டோம். *13.* நாங்கள்

நேர்வழியைச் செவியுற்றபோது அதன்மீது நம்பிக்கை கொண்டோம். தம் இறைவன் மீது நம்பிக்கைகொள்பவர் இழப்பிற்கோ, அநீதிக்கோ அஞ்சமாட்டார். *14.* எங்களில் சிலர் கீழ்ப்படிந்தவர்களாகவும், சிலர் வழிதவறியவர்களாகவும் இருக்கின்றோம். எனவே கீழ்ப்படிந்தவர்கள் நேரான வழியைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார்கள். *15.* வழிதவறியவர்கள் நரகத்தின் எரிபொருளாகத்தான் இருப்பார்கள்.

*16.* இம்மக்கள் நேர்வழியில் நிலைத்திருந்தால் நாம் அவர்களுக்குத் தாராளமாகத் தண்ணீர் புகட்டுவோம், *17.* அதன்மூலம் அவர்களைச் சோதிப்பதற்காக. எவர் தம் இறைவனின் நினைவைப் புறக்கணிக்கிறாரோ அவரைக் கடுமையான வேதனையில் அவன் ஆழ்த்தி விடுவான். *18.* பள்ளிவாசல்கள் அல்லாஹ்வுக்கே உரியனவாகும். எனவே நீங்கள் அல்லாஹ்வுடன் வேறு யாரையும் வணங்காதீர்கள். *19.* அல்லாஹ்வின் அடியார் அவனை வணங்குவதற்காக எழுந்து நின்றபோது மக்கள் அவர்மீது பாய்வதற்கு நெருங்கி விடுகிறார்கள். *20.* நீர் கூறும்: "நான் என் இறைவனை மட்டுமே வணங்குகிறேன், அவனுடன் வேறு யாரையும் இணையாக்க மாட்டேன்". *21.* நீர் கூறும்: "நான் உங்களுக்கு ஏதேனும் நன்மையோ, தீமையோ செய்ய சக்திபெற மாட்டேன்". *22.* நீர் கூறும்: "அல்லாஹ்விடமிருந்து என்னை யாரும் காப்பாற்ற முடியாது. அவனைத்தவிர வேறு எந்தப் புகலிடத்தையும் என்னால் பெற முடியாது *23.* அல்லாஹ்விடமிருந்து எடுத்துரைப்பதும், அவனது தூதுச் செய்திகளை அறிவிப்பதுமே எனது பணியாகும். எவர் அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் மாறு செய்கிறாரோ அவருக்கு நரக நெருப்புதான் உண்டு. அதில் அவர்கள் என்றென்றும் வீழ்ந்து கிடப்பார்கள்".

*24.* இறுதியில் அவர்களுக்கு எச்சரிக்கப்பட்டதை அவர்கள் காணும்போது, யாருடைய உதவியாளர்கள்

*பலவீனர்கள், எண்ணிக்கையில் குறைவானவர்கள் என்பதை விரைவாக அறிந்துகொள்வார்கள். **25.** நீர் கூறும்: "உங்களுக்கு எச்சரிக்கப்படுவது சமீபத்தில் உள்ளதா அல்லது என் இறைவன் அதற்கு நீண்ட தவணையை நிர்ணயித்து உள்ளானா என்பதை நான் அறிய மாட்டேன்". **26.** அவனே மறைவானவற்றை அறிந்தவன். தான் மறைவாக வைத்திருப்பவற்றை யாருக்கும் அவன் வெளிப்படுத்துவதில்லை. **27.** ஆயினும் அவன் விரும்பிய தூதரைத்தவிர. பிறகு அவருக்கு முன்னும், பின்னும் பாதுகாவலரை அவன் நியமித்து விடுகிறான், **28.** அவர்கள் தங்கள் இறைவனின் தூதுச்செய்திகளை எடுத்துரைத்து விட்டார்களா என்பதை அல்லாஹ் அறிந்து கொள்வதற்காக. அவன் அவர்களிடம் உள்ளதை சூழ்ந்து அறிந்து கொண்டிருக்கிறான். அவன் ஒவ்வொரு பொருளையும் கணக்கிட்டு வைத்துள்ளான்.*

## 73. போர்த்தப்பட்டவர் (அல்முஸ்ஸம்மில்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*__1.__ போர்க்கப்பட்டவரே, **2.** இரவின் ஒரு பகுதியில் நின்று தொழுவீராக. **3.** பாதி இரவு அல்லது அதைவிட சிறிது குறைத்துக் கொள்வீராக. **4.** அல்லது அதைவிட அதிகமாக்கிக் கொள்வீராக. குர்ஆனை நிறுத்தி நிதானமாக ஓதுவீராக. **5.** நாம் உம்மீது ஒரு கனமான விஷயத்தைச் சுமத்தப் போகின்றோம்.*

*__6.__ நிச்சயமாக இரவில் எழுவது மனதைக் கட்டுப்படுத்துவதற்கும் சொற்கள் சீராக வெளிப்படுவதற்கும் உகந்தது. **7.** நிச்சயமாக உமக்குப் பகலில் நிறையப் பணிகள் உள்ளன. **8.** உம் இறைவனின் பெயரை நினைவுகூர்வீராக. அனைத்தையும் விட்டுவிட்டு அவன் பக்கமே கவனம் செலுத்துவீராக. **9.** அவன் கிழக்கு மற்றும்*

மேற்கின் அதிபதியாக இருக்கின்றான். அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. எனவே அவனையே நீர் பொறுப்பாளனாக ஆக்கிக்கொள்வீராக. 10. மக்கள் கூறுவதைப் பொறுமையுடன் சகித்துக் கொள்வீராக. அழகிய முறையில் அவர்களைவிட்டு விலகிவிடுவீராக. 11. மறுத்துரைக்கும் சுகவாசிகளை என்னிடம் விட்டுவிடுவீராக. அவர்களுக்கு சிறிது அவகாசம் அளிப்பீராக. 12. நம்மிடம் அவர்களுக்கு (கை கால்களில் இடப்படும்) விலங்குகளும், நெருப்பும், 13. தொண்டையில் சிக்கிக் கொள்ளும் உணவும், துன்புறுத்தும் வேதனையும் இருக்கின்றது. 14. அந்நாளில் பூமியும், மலைகளும் ஆட்டம் காணும். மலைகள் சரிந்து மணற்குவியலாகி விடும்.

15. நாம் பாரோவிடம்ஒரு தூதரை அனுப்பியதைப்போன்று உங்கள் மீதும் ஒரு தூதரை சாட்சியாளராக அனுப்பியுள்ளோம். 16. தூதருக்கு எதிராக பாரோ செயல்பட்டான். எனவே நாம் அவனைக் கடுமையாகத் தண்டித்தோம். 17. நீங்கள் நிராகரித்தீர்களானால் குழந்தைகளையும் கிழவர்களாக்கும் அந்நாளின் வேதனையைவிட்டு எப்படித் தப்பித்துக் கொள்வீர்கள்? 18. அப்போது வானம் வெடித்துவிடும். அவனது வாக்குறுதி நிறைவேறியே தீரும். 19. இது ஒரு அறிவுரையாகும். எனவே விரும்புகிறவர் தம் இறைவனின் பக்கம் செல்லும் வழியை தேர்ந்தெடுத்துக் கொள்ளட்டும்.

20. நிச்சயமாக நீரும், உமது தோழர்களில் ஒரு பிரிவினரும் ஏறத்தாழ இரவில் மூன்றில் இரு பகுதி அல்லது பாதி இரவு, அல்லது மூன்றில் ஒரு பகுதிவரை நின்று தொழுகிறீர்கள் என்பதை உமது இறைவன் அறிந்திருக்கிறான். அல்லாஹ்வே இரவையும், பகலையும் கணக்கிட்டுள்ளான். உங்களால் அதனை சரியாகக் கணக்கிட்டுக்கொள்ள முடியாது என்பதை அவன் அறிவான். எனவே உங்கள்மீது அவன் கருணை புரிந்துள்ளான். ஆகவே

குர்ஆனிலிருந்து உங்களுக்கு இலகுவானதை ஓதிக்கொள்ளுங்கள். உங்களுக்குள் நோயாளிகளும், இறைருயளைத் தேடி பூமியில் பயணம் செய்பவர்களும், மேலும் போர் புரிபவர்களும் இருப்பார்கள். எனவே குர்ஆனிலிருந்து உங்களுக்கு இலகுவானதை ஓதுங்கள். தொழுகையைக் கடைப்பிடித்து, கடமையாக்கப்பட்ட தானதர்மத்தையும் கொடுத்து வாருங்கள். அல்லாஹ்வுக்கு அழகிய கடன் அளியுங்கள். உங்களுக்காக நீங்கள் சேர்த்து வைக்கும் நன்மைகளை அல்லாஹ்விடம் பெறுவீர்கள். அதுவே சிறந்ததும் கூலியில் மகத்தானதுமாகும். அல்லாஹ்விடம் மன்னிப்புக் கேளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும், இணையிலாக் கிருபையாளனாகவும் இருக்கின்றான்.

## 74. போர்த்திக் கொண்டவர் (அல்முத்தஸ்ஸிர்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

1. போர்வையைப் போர்த்திக் கொண்டவரே! 2. எழுந்து எச்சரிக்கை செய்வீராக. 3. உமது இறைவனைப் பெருமைப்படுத்துவீராக. 4. உமது ஆடையைத் தூய்மையாக வைப்பீராக. 5. அசுத்தத்தை விட்டுவிடுவீராக. 6. உதவி செய்துவிட்டு அதற்குரிய பலனை அதிகமாக எதிர்பார்க்காதீர். 7. உமது இறைவனுக்காகப் பொறுமையை மேற்கொள்வீராக.

8. எக்காளம் (மகா ஊதுகுழல்) ஊதப்படும்போது, 9. அந்தநாள் மிகக் கடுமையான நாளாக இருக்கும். 10. நிராகரிப்பாளர்களுக்கு அது எளிதானதாக இருக்காது. 11. நான் தனியாகப் படைத்த அந்த மனிதனை என்னிடமே விட்டுவிடும். 12. நான் அவனுக்கு ஏராளமான செல்வங்களையும் 13. கூடவே இருக்கக்கூடிய ஆண்மக்களையும் வழங்கினேன். 14. அனைத்துவகையான

பொருட்களையும் அவனுக்காகக் கிடைக்கச் செய்தேன். 15. ஆயினும் நான் அவனுக்கு இன்னும் அதிகமாகத் தர வேண்டும் என்று ஆசைப்படுகிறான். 16. அவ்வாறன்று. ஏனெனில் அவன் நம் வசனங்களுக்கு எதிரானவனாக இருக்கின்றான். 17. விரைவில் நாம் அவனை ஒரு கடினமான வேதனையில் ஆழ்த்திடுவோம்.

18. அவன் சிந்தித்து புனைந்தான். 19. எனவே அவன் அழிந்துவிட்டான். எப்படிப்பட்ட விஷயத்தை அவன் புனைந்து விட்டான்? 20. பின்னரும் அவன் அழிந்துவிட்டான். எப்படிப்பட்ட விஷயத்தை அவன் புனைந்து விட்டான்? 21. பின்னும் அவன் பார்த்தான். 22. கடுகடுத்து முகம் சுளித்தான். 23. பின்னர் புறக்கணித்து கர்வங்கொண்டான். 24. "இது வழிவழியாக வரும் சூனியமேயாகும். 25. இது மனிதனின் சொல்லேயாகும்" என்றும் கூறினான்.

26. நான் அவனை அதிவிரைவில் நரகத்தில் வீசியெறிவேன். 27. 'நரகம்' என்னவென்று உமக்குத் தெரியுமா? 28. அது இருக்கவும் விடாது, விட்டு விடவும் செய்யாது. 29. அது சருமத்தை கரித்துவிடக்கூடியது. 30. அதில் பத்தொன்பது வானவர்கள் இருக்கிறார்கள். 31. நாம் நரகத்தின் காவலர்களாக வானவர்களை மட்டுமே நியமித்துள்ளோம். நாம் அவர்களின் எண்ணிக்கையை நிராகரிப்பாளர்களுக்கு ஒரு சோதனையாகவே ஆக்கியுள்ளோம். இது ஏனெனில் வேதம் வழங்கப்பட்டவர்கள் உறுதி கொள்வதற்காகவும், நம்பிக்கையாளர்கள் தங்கள் நம்பிக்கையை அதிகரித்துக் கொள்வதற்காகவும், வேதம் வழங்கப்பட்டவர்களும் நம்பிக்கையாளர்களும் சந்தேகம் கொள்ளாமல் இருப்பதற்காகவும் உள்ளத்தில் நோயுள்ளவர்களும், நிராகரிப்பாளர்களும் இதன்மூலம் இறைவன் என்னதான் நாடுகின்றான் என்று கூறுவதற்காகவும்தான். இவ்வாறு தான் நாடியவர்களை அல்லாஹ் வழிதவறச் செய்து

*விடுகிறான். தான் நாடியவர்களை நேர்வழியில் செலுத்துகிறான். உமது இறைவனின் படைகளை அவன்மட்டுமே அறிவான். இது மனிதர்களுக்கான ஒரு நினைவூட்டலேயாகும்.*

*32. ஒருபோதும் இல்லை. சந்திரன்மீதும் 33. திரும்பிச்செல்லும் இரவின்மீதும் 34. பிரகாசமாகும் அதிகாலையின் மீதும் சத்தியமாக. 35. நிச்சயமாக நரகம் பெரும் விஷயங்களில் ஒன்றாகும். 36. அது மனிதர்களுக்கான எச்சரிக்கையாகும். 37. உங்களில் முன்னோக்கியோ, பின்னோக்கியோ செல்ல விரும்புபவர்களை எச்சரிக்கக்கூடியது. 38. ஒவ்வொரு மனிதனும் தன் செயல்களுக்குப் - பிணையாக உள்ளான். 39. ஆயினும் வலப்புறத்தில் இருப்போரைத் தவிர. 40. அவர்கள் சுவனச் சோலைகளில் இருப்பார்கள். 41. அவர்கள் குற்றவாளிகளிடம் கேட்டுக் கொண்டிருப்பார்கள். 42. உங்களை எந்த விஷயம் நரகத்திற்குக் கொண்டு வந்தது? 43. அவர்கள் கூறுவார்கள்: “நாங்கள் தொழுபவர்களாக இருக்கவில்லை. 44. ஏழைகளுக்கு உணவளிக்கவுமில்லை. 45. மாறாக வீணாக விவாதம் புரிபவர்களுடன் சேர்ந்து விவாதத்தில் மூழ்கிக் கிடந்தோம். 46. நாங்கள் தீர்ப்பு நாளை மறுத்துக் கொண்டிருந்தோம். 47. இறுதியில் அந்த உறுதியான விஷயம் எங்களை வந்தடைந்து விட்டது”. 48. எனவே பரிந்துரை செய்வோரின் பரிந்துரை அவர்களுக்கு எவ்விதப் பயனையும் அளிக்காது.*

*49. அவர்களுக்கு என்ன நேர்ந்தது? அவர்கள் அறிவுரையை விட்டும் முகம் திருப்பிக்கொள்கிறார்களே! 50-51. அவர்கள் சிங்கத்தைக் கண்டு மிரண்டோடும் காட்டுக் கழுதைகளைப் போல் இருக்கிறார்கள்! 52. அவர்களில் ஒவ்வொருவரும் தங்களுக்குத் திறந்த புத்தகங்கள் கொடுக்கப்பட வேண்டுமென்று விரும்புகிறார்கள். 53. ஒருபோதும் இல்லை. மாறாக இவர்கள் மறுமையைக் குறித்து அஞ்சுவதில்லை. 54. அவ்வாறன்று. இது ஒரு அறிவுரையாகும்.*

*55.* எனவே விரும்புகிறவர் அறிவுரை பெற்றுக்கொள்ளட்டும். *56.* அல்லாஹ் நாடினாலேயன்றி அவர்கள் இதிலிருந்து அறிவுரை பெற்றுக்கொள்ள மாட்டார்கள். எனவே (நீங்கள்) அவனையே அஞ்ச வேண்டும். அவனே மன்னிக்கும் தகுதி வாய்ந்தவன்.

# 75. மறுமைநாள் (அல்கியாமா)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1.* இல்லை. நான் மறுமைநாளின்மீது சத்தியம் செய்கிறேன். *2.* இல்லை. நிந்தனை செய்யும் உள்ளத்தின் மீதும் சத்தியம் செய்கிறேன். *3.* நாம் அவனது எலும்புகளை ஒன்றுதிரட்ட மாட்டோம் என்று மனிதன் எண்ணுகிறானா? *4.* ஏனில்லை. நாம் அவனது விரலின் நுனியைக்கூட சரிப்படுத்தும் ஆற்றலைப் பெற்றுள்ளோம். *5.* ஆயினும் மனிதன் தனக்கு முன்னால் இருப்பதை நிராகரிக்கவே விரும்புகிறான். *6.* 'மறுமைநாள் எப்போது வரும்' என்று அவன் கேட்கிறான் *7.* பார்வை நிலைகுத்தி விடும்போது, *8.* சந்திரன் ஒளியற்று விடும்போது, *9.* சூரியனும் சந்திரனும் ஒன்று சேர்க்கப்படும்போது. *10.* அந்நாளில் 'நான் எங்கே ஓடுவது' என்று மனிதன் கேட்பான். *11.* முடியவே முடியாது. எங்குமே புகலிடம் இருக்காது. *12.* அந்நாளில் உமது இறைவனிடமே தங்குமிடம் இருக்கும். *13.* அந்நாளில் அவன் செய்த செயல்களும் செய்யாமல் விட்டவையும் மனிதனுக்கு எடுத்துக் காட்டப்படும். *14.* மாறாக மனிதன் தன்னைப்பற்றி நன்கறிந்தவனாக இருக்கிறான். *15.* அவன் எவ்வளவுதான் பொய்க்காரணங்கள் கூறினாலும் சரியே.

*16.* நீர் இதனை விரைவாகக் கற்றுக்கொள்ள வேண்டும் என்பதற்காக உமது நாவை அசைக்காதீர். *17.* அதனை ஒன்றுசேர்ப்பதும் ஓதும்படிச் செய்வதும் நமது பொறுப்பாகும்.

*18. எனவே நாம் அதனை ஓதிக்காட்டினால் அதனைப் பின்தொடர்வீராக. 19. அதனை விளக்குவதும் நமது பொறுப்பே ஆகும்.*

*20. உண்மையில் நீங்கள் விரைவாகக் கிடைக்கக்கூடியதை விரும்புகிறீர்கள். 21. மறுமையை விட்டுவிடுகிறீர்கள். 22. அந்நாளில் சில முகங்கள் (மகிழ்ச்சியால்) பொலிவுற்று இருக்கும். 23. அவை தமது இறைவனை பார்த்தவண்ணமிருக்கும். 24. அந்நாளில் சில முகங்கள் சோகமயமாக இருக்கும். 25. அவை தமக்கு பேராபத்து ஏற்படப் போவதாக எண்ணிக்கொண்டிருக்கும். 26. ஆயினும் உயிர் தொண்டையை அடைந்து விடும்போது, 27. 'மந்திரித்து ஊதுபவர் யாரேனும் இருக்கிறார்களா?' என்று கேட்கின்றனர். 28. இது பிரியும் நேரம் என்பதை அவன் உணர்ந்து கொள்வான். 29. கெண்டைக்காலுடன் கெண்டைக்கால் பின்னிக்கொள்ளும். 30. இது உன் இறைவனின் பக்கம் செல்ல வேண்டிய நாளாகும்.*

*31. அவன் (சத்தியத்தை) உண்மையென ஏற்கவுமில்லை, தொழவுமில்லை. 32. மாறாக அதனை மறுத்து முகம் திருப்பிக்கொண்டான். 33. பின்னர் கர்வத்துடன் தன் குடும்பத்தை நோக்கிச் சென்றான். 34. உனக்குக் கேடுதான். ஆம். உனக்குக் கேடுதான். 35. மீண்டும் உனக்குக் கேடுதான். ஆம். உனக்குக் கேடுதான். 36. தான் வெறுமனே விட்டுவிடப்படுவான் என்று மனிதன் எண்ணிக் கொண்டானா? 37. செலுத்தப்படும் ஒரு துளி விந்தாக அவன் இருக்கவில்லையா? 38. பின்னர் அவன் இரத்தக்கட்டியாகி விட்டான். அல்லாஹ் அவனைப் படைத்து அவனது உறுப்புகளைச் சீராக்கினான். 39. பின்னர் அதனை ஆண்-பெண் என்ற இரு இனங்களாக்கினான். 40. அவன் இறந்தவர்களை மீண்டும் உயிர்ப்பிக்கும் ஆற்றல் உடையவன் இல்லையா என்ன?*

# 76. மனிதன் (அல்இன்ஸான்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. மனிதனின்மீது ஒரு காலகட்டம் கடக்கவில்லையா? அப்போது அவன் குறிப்பிடத்தக்க ஒரு பொருளாக இருக்கவில்லை. 2. நாம் மனிதனை ஒரு கலப்பான விந்திலிருந்து படைத்தோம். நாம் அவனைச் சோதித்துக் கொண்டே இருக்கிறோம். அவனைச் செவியுறுபவனாகவும் பார்ப்பவனாகவும் ஆக்கினோம். 3. நாம் அவனுக்குப் பாதையை தெளிவாக்கி விட்டோம். விரும்பினால் அவன் நன்றியுள்ளவனாக இருக்கட்டும் அல்லது நிராகரித்து விடட்டும்.*

*4. நாம் நிராகரிப்பாளர்களுக்கு சங்கிலிகளையும் (பூட்டும்) விலங்குகளையும், கொழுந்து விட்டெரியும் நெருப்பையும் தயார்படுத்தி வைத்துள்ளோம். 5. நல்லோர்கள் குவளைகளில் கற்பூரம் கலந்த பானத்தை அருந்துவார்கள். 6. அது இறையடியார்கள் அருந்துகின்ற ஓர் ஊற்றாகும். அதை ஓடைகளாக ஓடச் செய்வார்கள். 7. அவர்கள் கடமைகளை நிறைவேற்றுவார்கள். கடுமை பரவியிருக்கும் அந்த நாளைக் குறித்து அஞ்சுவார்கள். 8. இறைவன் மீதுள்ள அன்பினால் ஏழைகளுக்கும் அநாதைகளுக்கும் கைதிகளுக்கும் உணவளிப்பார்கள். 9. "இறைதிருப்தியை நாடியே நாங்கள் உங்களுக்கு உணவளிக்கிறோம். நாங்கள் உங்களிடமிருந்து பிரதிபலனையோ, நன்றியையோ எதிர்பார்க்கவில்லை. 10. நாங்கள் எங்கள் இறைவனிடமிருந்து கடுமையான, கசப்பான ஒரு நாளைக் குறித்து அஞ்சுபவர்களாக இருக்கின்றோம்" (என்று கூறுவார்கள்). 11. அல்லாஹ் அவர்களை அந்நாளின் கடுமையிலிருந்து காப்பாற்றிக் கொண்டான். அவர்களுக்குப் பொலிவையும், மகிழ்ச்சியையும் அளித்தான். 12. அவர்களுடைய பொறுமையின் காரணமாக*

சொர்க்கத்தையும் பட்டாடைகளையும் அவர்களுக்கு வழங்கினான். *13.* அங்கு அவர்கள் இருக்கைகளில் சாய்ந்தவர்களாக இருப்பார்கள். வெப்பத்தாலோ, குளிராலோ பாதிக்கப்பட மாட்டார்கள். *14.* சொர்க்கத்தின் நிழல் அவர்களின்மீது படர்ந்திருக்கும். அதன் கனிகள் அவர்களுக்கு வசமாக இருக்கும். *15.* அவர்களுக்கு முன்னால் வெள்ளிப் பாத்திரங்களும், கண்ணாடிக் குவளைகளும் சுற்றிவருமாறு செய்யப்படும். *16.* கண்ணாடி வெள்ளி போன்று இருக்கும். நிரப்புபவர்கள் சரியான அளவில் நிரப்பி இருப்பார்கள்.

*17.* அங்கு அவர்களுக்கு இஞ்சி கலந்த மற்றொரு பானம் புகட்டப்படும். *18.* இது அங்குள்ள ஓர் ஊற்றாகும். அதற்குப் பெயர் 'ஸல்ஸபீல்' என்று கூறப்படும். *19.* என்றும் இளமையோடு இருக்கும் சிறுவர்கள் (பணிவிடைக்காக) அவர்களைச் சுற்றிக் கொண்டே இருப்பார்கள். நீங்கள் அவர்களைப் பார்த்தால் சிதறிய முத்துக்கள் எனக் கருதுவீர்கள். *20.* நீங்கள் எங்கே பார்த்தாலும் அங்கே அருட்கொடைகளையும், அரசாட்சியையும் காண்பீர்கள். *21.* அவர்கள்மீது மெல்லிய பச்சை நிற பட்டாடைகளும் கனமான பட்டாடைகளும் இருக்கும். அவர்களுக்கு வெள்ளிக்காப்புகளும் அணிவிக்கப்படும். அவர்களுக்கு அவர்களின் இறைவன் தூய்மையான பானத்தையும் புகட்டுவான். *22.* நிச்சயமாக இதுதான் உங்களுக்குரிய கூலியாகும். உங்களின் முயற்சி ஏற்றுக் கொள்ளப்பட்டு விட்டது (என்று கூறப்படும்).

*23.* நாம் உம்மீது இந்த குர்ஆனை சிறிதுசிறிதாக அருளினோம். *24.* எனவே உமது இறைவனின் கட்டளைப்படி பொறுமையை மேற்கொள்வீராக. அவர்களில் பாவிக்கோ, நன்றி கெட்டவனுக்கோ கட்டுப்படாதீர். *25.* உமது இறைவனின் பெயரைக் காலையும் மாலையும் நினைவுகூர்வீராக. *26.* இரவிலும் அவனுக்குச் சிரம்பணிவீராக. இரவில் நீண்ட நேரம் அவனைப் புகழ்வீராக.

*27.* *இவர்கள் விரைவில் கிடைக்கக்கூடியதை விரும்புகிறார்கள். தங்களுக்குப் பின்னால் வரக்கூடிய ஒரு கடினமான நாளை விட்டுவிடுகிறார்கள். 28. நாம்தாம் அவர்களைப் படைத்தோம். நாம்தாம் அவர்களின் உடலமைப்பை உறுதிப்படுத்தினோம். நாம் நாடினால் அவர்களைப் போன்றவர்களையே அவர்களது இடத்தில் மாற்றி விடுவோம். 29. இது ஒரு அறிவுரையாகும். எனவே விரும்புகிறவர் தம் இறைவனின் பக்கம் செல்லும் பாதையைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளட்டும். 30. அல்லாஹ் நாடினாலே தவிர, நீங்கள் நாட முடியாது. நிச்சயமாக அல்லாஹ் நன்கறிந்தவனாகவும், ஞானம் மிக்கவனாகவும் இருக்கின்றான். 31. அவன் தான் நாடுவோரை தன் கருணையில் நுழையச் செய்கிறான். அக்கிரமக்காரரர்களுக்கு அவன் துன்புறுத்தும் வேதனையைத் தயார்படுத்தி வைத்துள்ளான்.*

## 77. அனுப்பப்படுகின்ற காற்றுகள் (அல்முர்ஸலாத்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. அனுப்பப்படுகின்ற காற்றுகளின்மீது சத்தியமாக 2. அந்தக் காற்றுகள் புயல் வேகத்தில் வீசுகின்றன; 3. மேகங்களைப் பரப்பி விடுகின்றன; 4. விவகாரங்களைப் பிரித்து விடுகின்றன; 5. இறைநினைவை உண்டாக்குகின்றன, 6. மன்னிப்பிற்காக அல்லது எச்சரிப்பதற்காக. 7. உங்களுக்கு எச்சரிக்கப்படுவது நடந்தே தீரும்.*

*8. நட்சத்திரங்கள் ஒளியிழந்துவிடும்போது, 9. வானம் பிளக்கப்படும்போது, 10. மலைகள் தூள் தூளாக்கப்படும்போது, 11. தூதர்கள் குறிப்பிட்ட நேரத்தில் ஒன்று கூட்டப்படும்போது 12. அவர்கள் எந்த நாளுக்காகப் பிற்படுத்தப்பட்டார்கள்?*

*13. தீர்ப்பு நாளுக்காகவே. 14. தீர்ப்பு நாள் என்னவென்று உமக்குத் தெரியுமா? 15. அந்நாளில் மறுப்போருக்குக் கேடுதான். 16. நாம் முன் சென்றோரை அழிக்கவில்லையா? 17. பின்னர் பின்னுள்ளோரையும் அவர்களைத் தொடர்ந்து வரச் செய்தோம். 18. குற்றவாளிகளிடம் நாம் இவ்வாறே நடந்து கொள்கிறோம். 19. அந்நாளில் மறுப்போருக்குக் கேடுதான்.*

*20. நாம் உங்களை அற்பமான நீரிலிருந்து படைக்கவில்லையா? 21. பின்னர் அதனை பாதுகாப்பான இடத்தில் வைத்தோம். 22. ஒரு குறிப்பிட்ட காலம்வரை 23. பின்னர் நாமே நிர்ணயித்தோம். நிர்ணயம் செய்வோரில் நாமே மிகச் சிறந்தவர்கள். 24. அந்நாளில் மறுப்போருக்குக் கேடுதான். 25. நாம் பூமியை அணைத்துக் கொள்ளக்கூடியதாக ஆக்கவில்லையா? 26. உயிருள்ளவர்களையும் இறந்தவர்களையும் 27. நாம் அதில் உயர்ந்த மலைகளை ஏற்படுத்தியுள்ளோம். உங்களுக்கு சுவையான நீரைப் புகட்டினோம் 28. அந்நாளில் மறுப்போருக்குக் கேடுதான்.*

*29. நீங்கள் பொய்யெனக்கூறி கொண்டிருந்ததன் பக்கம் செல்லுங்கள். 30. மூன்று கிளைகளுடைய (நரகத்தின்) நிழலின் பக்கம் செல்லுங்கள். 31. அது நிழலும் தராது. வெப்பத்திலிருந்தும் காக்காது. 32. உயர்ந்த மாளிகையைப் போன்ற நெருப்புக் கங்குகளைக் கக்கும். 33. அது மஞ்சள் நிற ஒட்டகங்களைப் போன்றிருக்கும். 34. அந்நாளில் மறுப்போருக்குக் கேடுதான். 35. அது அவர்கள் பேச முடியாத நாளாகும். 36. பொய்க்காரணங்கள் கூறவும் அவர்களுக்கு அனுமதியளிக்கப்படாது. 37. அந்நாளில் மறுப்போருக்குக் கேடுதான். 38. இது தீர்ப்பு நாளாகும். நாம் உங்களையும் முன் சென்றோரையும் ஒன்று திரட்டியுள்ளோம். 39. உங்களால் எனக்கெதிராக சூழ்ச்சி செய்ய முடியுமெனில் சூழ்ச்சி செய்யுங்கள். 40. அந்நாளில் மறுப்போருக்குக் கேடுதான்.*

41. நிச்சயமாக இறையச்சமுடையோர் (சுவனத்தின்) ஊற்றுகளிலும் நிழல்களிலும் இருப்பார்கள். 42. அவர்கள் விரும்பும் பழங்களும் அவர்களுக்கு உண்டு. 43. “நீங்கள் செய்துகொண்டிருந்த செயல்களின் காரணமாக மகிழ்ச்சியாக உண்ணுங்கள்; பருகுங்கள்”. 44. இவ்வாறே நாம் நல்லோர்களுக்குக் கூலி வழங்குகிறோம். 45. மறுப்போருக்கு அந்நாளில் கேடுதான். 46. சில நாட்கள்வரை உண்ணுங்கள்; அனுபவித்துக் கொள்ளுங்கள். நிச்சயமாக நீங்கள் குற்றவாளிகள்தான். 47. அந்நாளில் மறுப்போருக்கு கேடுதான். 48. குனிந்து வணங்குங்கள் என்று அவர்களிடம் கூறப்பட்டால் அவர்கள் குனிந்து வணங்குவதில்லை. 49. அந்நாளில் மறுப்போருக்கு கேடுதான். 50. இதற்குப்பின் அவர்கள் எந்த விஷயத்தின்மீது நம்பிக்கை கொள்ளப் போகிறார்கள்?

## 78. மாபெரும் செய்தி (அந்நபஉ)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

1. மக்கள் எதைப்பற்றிக் கேட்டுக் கொள்கிறார்கள்? 2. அந்த மகத்தான செய்தியைப்பற்றி. 3. அதில் அவர்கள் கருத்து வேறுபட்டுள்ளார்கள். 4. அவ்வாறன்று. விரைவில் அவர்கள் அறிந்துகொள்வார்கள். 5. அவ்வாறன்று. விரைவில் அவர்கள் அறிந்துகொள்வார்கள். 6. நாம் பூமியை விரிப்பாகவும், 7. மலைகளை முளைகளாகவும் ஆக்கவில்லையா? 8. நாம் உங்களை இணைகளாகப் படைத்தோம். 9. உங்களின் தூக்கத்தை ஓய்வாகவும் ஆக்கினோம். 10. நாமே இரவைத் திரையாக்கினோம். 11. பகலை வாழ்வாதாரத்துக்கான நேரமாக ஆக்கினோம். 12. நாம் உங்களுக்கு மேலே ஏழு உறுதியான வானங்களை அமைத்துள்ளோம். 13. அதில் ஒளிரக்கூடிய விளக்கையும் (சூரியன்) அமைத்துள்ளோம். 14. நாம் கார்மேகங்களிலிருந்து பெருமழையைப் பொழியச் செய்கின்றோம்.

*15.* அதன்மூலம் தானியங்களையும், தாவரங்களையும், *16.* அடர்ந்த தோட்டங்களையும் நாம் வெளிப்படுத்துகிறோம். *17.* நிச்சயமாக தீர்ப்புநாள் ஒரு குறிப்பிட்ட நேரமாக இருக்கின்றது.

*18.*எக்காளம் ஊதப்படும் நாளில் நீங்கள் கூட்டம் கூட்டமாக வருவீர்கள். *19.* வானம் திறக்கப்பட்டு அது பல வாசல்களாகி விடும். *20.* மலைகள் இடம்பெயர்க்கப்பட்டு அது கானலைப் போன்றதாகி விடும். *21.* நிச்சயமாக நரகம் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது. *22.* அது வரம்பு மீறியோரின் இருப்பிடமாகும். *23.* அதில் அவர்கள் பல யுகங்கள் வீழ்ந்து கிடப்பார்கள். *24.* அதில் அவர்கள் குளிர்ச்சியையோ குடிபானத்தையோ சுவைக்க மாட்டார்கள் *25.* கொதிக்கும் நீரையும் சீழையும் தவிர. *26.* இது அவர்களின் செயலுக்கேற்ற கூலியாகும். *27.* அவர்கள் விசாரணையை எதிர்பார்க்காதவர்களாக இருந்தார்கள். *28.* நம் வசனங்களை முற்றிலும் மறுத்து விட்டார்கள். *29.* ஆனால் நாமோ ஒவ்வொரு விஷயத்தையும் கணக்கிட்டு எழுதி வைத்துள்ளோம். *30.* எனவே சுவையுங்கள். நாம் உங்களின் வேதனையைத்தான் அதிகரிப்போம்.

*31.* நிச்சயமாக இறையச்சமுடையோருக்கு வெற்றி கிடைக்கும். *32.* தோட்டங்களும் திராட்சைகளும் *33.* சம வயதுடைய கன்னிப் பெண்களும், *34.* நிறைந்த கிண்ணங்களும் உண்டு. *35.* அங்கு அவர்கள் வீணானவற்றையோ, பொய்யானவற்றையோ செவியுற மாட்டார்கள். *36.* இது உமது இறைவனிடமிருந்து வழங்கப்படும் அவர்களின் செயலுக்கேற்ற கூலியாகும். *37.* அது வானங்கள், பூமி மற்றும் அவற்றிற்கிடையிலுள்ள அனைத்திற்கும் இறைவனாகிய மாபெரும் கருணையாளனிடமிருந்து கிடைத்த கூலியாகும். அவனிடம் பேச எவரும் சக்தி பெற மாட்டார். *38.* கேப்ரியேலும் வானவர்களும் அணிவகுத்து நிற்கும் நாளில் எவரும் பேசமாட்டார்,

ஆயினும் கருணைமிக்க இறைவன் எவருக்கு அனுமதியளிப்பானோ அவரைத்தவிர. அவர் சரியானவற்றையே கூறுவார். 39. அந்நாள் உண்மையானதாகும். ஆகவே விரும்புகிறவர் தம் இறைவனின் பக்கம் இருப்பிடத்தை அமைத்துக் கொள்ளட்டும். 40. நாம் உங்களை நெருங்கிவரும் வேதனையை எச்சரித்து விட்டோம். மனிதன் தன் கரங்கள் முற்படுத்தியவற்றைக் காணும் நாளில் நிராகரித்தவனோ "அந்தோ! நான் மண்ணாக இருந்திருக்கக் கூடாதா?" என்று புலம்புவான்.

## 79. பற்றியிழுக்கக் கூடியவை (அந்நாஸிஆத்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

1. வேரோடு பிடுங்குகின்ற காற்றுகளின்மீதும் 2. மெதுவாக வீசுகின்ற காற்றுகளின்மீதும் சத்தியமாக. 3. நீந்துகின்ற மேகங்களின்மீதும் சத்தியமாக. 4. முந்திச்செல்பவர்கள்மீதும் 5. விவகாரங்களை முறைப்படி நிர்வகிப்பவர்கள் மீதும் சத்தியமாக. 6. எந்நாளில் நடுங்க வைக்கக்கூடியது நடுங்க வைத்து விடுமோ, 7. அதன் பின்னர் வரவேண்டியது ஒன்றும் வந்து விடுமோ, 8. அந்நாளில் இதயங்கள் நடுநடுங்கிக் கொண்டிருக்கும். 9. அவர்களின் பார்வைகள் கீழே தாழ்ந்திருக்கும். 10. 'நாம் முந்தைய நிலைக்கு மீண்டும் திரும்புவோமா' என்று அவர்கள் கேட்கிறார்கள். 11. 'மக்கிப்போன எலும்புகளாக நாம் ஆகிவிட்டாலுமா?' 12. அப்படியானால் அது பேரிழப்பிற்குரிய மீட்சியாகத்தான் இருக்கும் என்றும் கூறுகிறார்கள். 13. ஆனால் அதுவோ ஓர் உரத்த அதட்டல்தான். 14. திடீரென அவர்கள் வெட்டவெளியில் இருப்பார்கள்.

15. தூதரே! மோசேயைப்பற்றிய செய்தி உமக்கு வந்ததா? 16. அவரது இறைவன் அவரை 'துவா' எனும் புனிதப் பள்ளத்தாக்கில்

*அழைத்தான். **17.** நீர் பாரோவிடம் செல்லும். அவன் வரம்புமீறி விட்டான். **18.** அவனிடம் நீர் கேளும்; "நீ தூய்மையடைய விரும்புகிறாயா? **19.** நான் உனக்கு உன் இறைவனின் பாதையைக் காட்டுகிறேன். அதனால் நீ அஞ்சிக்கொள்வாய்" **20.** எனவே மோசே அவனுக்குப் பெரும் சான்றினைக் காட்டினார். **21.** ஆனால் அவன் ஏற்றுக்கொள்ளாமல் நிராகரித்து விட்டான். **22.** பின்னர் அவன் விரைவாகப் பின்வாங்கினான். **23.** மக்களை ஒன்றுதிரட்டி, **24.** 'நான்தான் உங்களின் மாபெரும் இறைவன்' என்று பிரகடனம் செய்தான். **25.** எனவே இம்மை மற்றும் மறுமையின் வேதனையால் அல்லாஹ் அவனைத் தண்டித்தான். **26.** நிச்சயமாக அஞ்சக்கூடியவர்களுக்கு இதில் படிப்பினை இருக்கிறது.*

*   **27.** உங்களைப் படைப்பது அதிகச் சிரமமானதா? அல்லது வானத்தையா? அவன்தான் அதனைப் படைத்தான். **28.** அதன் முகட்டை உயர்த்தி அதனை ஒழுங்குபடுத்தினான். **29.** அதன் இரவை இருளாக்கி பகலை வெளிப்படுத்தினான். **30.** அதற்குப்பின் பூமியை அவன் விரித்தான். **31.** அதிலிருந்து அதன் தண்ணீரையும், மேய்ச்சல் பயிர்களையும் வெளியாக்கினான். **32.** மலைகளையும் அவனே நாட்டினான், **33.** உங்களுக்கும் உங்கள் கால்நடைகளுக்கும் பயனளிக்கும் பொருட்டு.*

*   **34.** எனவே அந்தப் பேரமளி வந்துவிட்டால் **35.** தான் செய்ததையெல்லாம் மனிதன் அந்நாளில் நினைத்துப் பார்ப்பான். **36.** பார்ப்பவர்களுக்கு முன்னால் நரகம் வெளிப்படுத்தப்படும். **37.** எனவே எவன் வரம்புமீறி **38.** இவ்வுலக வாழ்வைத் தேர்ந்தெடுத்துக் கொண்டானோ **39.** அவனது இருப்பிடம் நரகமாகும். **40.** எவன் தன் இறைவனின் முன்னே நிற்பது குறித்து அஞ்சி மனதை தீய இச்சைகளை விட்டும் தடுத்துக் கொண்டானோ **41.** அவனது இருப்பிடம் சுவனமாகும். **42.** அவர்கள் மறுமைநாளைக்*

*குறித்து 'அது எப்போது நிகழும்' என்று உம்மிடம் கேட்கிறார்கள். **43.** அதனைக் குறிப்பிட்டு நீர் என்ன செய்வீர்? **44.** அதனைப்பற்றிய முடிவு உமது இறைவனிடமே உள்ளது. **45.** அதனை அஞ்சுவோருக்கு நீர் எச்சரிக்கை செய்பவர் மட்டுமே ஆவீர். **46.** அவர்கள் அதனைக் காணும் நாளில் ஒரு மாலையோ, அதன் காலையோ தவிர அவர்கள் உலகில் தங்கியிருக்கவில்லை என்றே அவர்களுக்குத் தோன்றும்.*

## *80.* கடுகடுத்தார் (அபஸ)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

***1.** அவர் கடுகடுத்தார்: முகத்தை திருப்பிக்கொண்டார், **2.** அந்தப் பார்வையிழந்தவர் தம்மிடம் வந்ததற்காக, **3.** உமக்கு என்ன தெரியும்? அவர் தூய்மையடையக்கூடும் **4.** அல்லது அவர் அறிவுரை பெறலாம்; அந்த அறிவுரை அவருக்குப் பயனளிக்கலாம். **5.** எவன் அக்கறையற்று இருக்கிறானோ **6.** அவன் பக்கம் நீர் கவனம் செலுத்துகிறீர். **7.** அவன் திருந்தாவிட்டால் அதற்கு நீர் பொறுப்பாக மாட்டீர். **8.** ஆனால் எவர் உம்மிடம் ஓடோடி வந்தாரோ **9.** அவர் (இறைவனுக்கு) அஞ்சியவராக இருக்கின்றார். **10.** அவரை நீர் அலட்சியம் செய்து விடுகிறீர். **11.** அவ்வாறன்று. நிச்சயமாக இது ஒரு அறிவுரையாகும். **12.** எனவே விரும்புகிறவர் இதனை நினைவுகூர்ந்து கொள்ளட்டும். **13.** அது கண்ணியமிக்க, **14.** உயர்வான, தூய்மையான ஏடுகளில் உள்ளது. **15.** (அந்த ஏடுகள்) எழுத்தர்களின் கைகளில் உள்ளது. **16.** அவர்கள் கண்ணியம் மிக்கவர்கள்; நல்லவர்கள்.*

***17.** மனிதனுக்குக் கேடுதான்! அவன் எவ்வளவு நன்றிகெட்டவனாக இருக்கிறான்!. **18.** அவனை அல்லாஹ் எப்பொருளிலிருந்து படைத்திருக்கிறான்? **19.** ஒருதுளி விந்திலிருந்து அவனைப் படைத்து அவனது விதியை நிர்ணயித்தான். **20.** அவனது*

பாதையை எளிதாக்கினான். 21. பின்னர் அவனை மரணிக்கச் செய்து சவக்குழியில் கொண்டு சேர்க்கிறான். 22. பின்னர் அவன் நாடும்போது மீண்டும் உயிர்பெறச் செய்வான். 23. ஆயினும் மனிதன் அல்லாஹ் விதித்த கட்டளைகளை நிறைவேற்றுவதில்லை. 24. மனிதன் தன் உணவைக் கவனித்துப் பார்க்கட்டும். 25. நாமே நன்கு மழை பொழியச் செய்தோம். 26. பின்னர் பூமியை நன்கு பிளந்தோம். 27. அதில் தானியங்களையும் 28. திராட்சைகளையும், காய்கறிகளையும் 29. ஆலிவ், பேரீச்சை மரங்களையும் 30. அடர்ந்த தோட்டங்களையும் 31. கனிகளையும், தீவனங்களையும் 32. உங்களுக்கும் உங்கள் கால்நடைகளுக்கும் வாழ்வாதாரப் பொருட்களாக அமையும் பொருட்டு முளைக்கச் செய்தோம்.

33. எனவே காதைச் செவிடாக்கும் பயங்கர ஓசை ஏற்படும்போது 34. அந்நாளில் மனிதன் தன் சகோதரனை விட்டும், 35. தாயை விட்டும், தந்தையை விட்டும், 36. மனைவியை விட்டும், தன் மக்களை விட்டும் விரண்டோடுவான். 37. அந்நாளில் அவர்களில் ஒவ்வொருவருக்கும் ஏற்படும் கவலை அவர்களை வேறு எவருடைய பக்கமும் கவனம் செலுத்த விடாது. 38. சில முகங்கள் அந்நாளில் பிரகாசித்துக் கொண்டிருக்கும். 39. சிரித்துக்கொண்டும் மகிழ்வுடனும் இருக்கும். 40. அந்நாளில் சில முகங்களின்மீது புழுதி படிந்திருக்கும். 41. அவற்றின்மீது கருமை படர்ந்திருக்கும். 42. அவர்கள்தான் நிராகரிப்பாளர்கள்; பாவிகள்.

## 81. சுருட்டுதல் (அத்தக்வீர்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

1. சூரியன் சுருட்டப்படும்போது 2. நட்சத்திரங்கள் ஒளியிழந்து விடும்போது 3. மலைகள் நடத்திச் செல்லப்படும்போது 4. பத்துமாத நிறை கர்ப்ப ஒட்டகங்கள் கவனிப்பாரற்று

விடப்படும்போது **5.** வனவிலங்குகள் ஒன்றுதிரளும்போது **6.** கடல்கள் கொளுத்தப்படும்போது **7.** ஒவ்வொரு வகையான மக்களும் ஒன்றிணைக்கப்படும்போது **8-9.** உயிருடன் புதைக்கப்பட்ட சிறுமியிடம் 'அவள் எந்தக் குற்றத்திற்காகக் கொல்லப்பட்டாள்' என்று கேட்கப்படும்போது. **10.** பதிவேடுகள் விரிக்கப்படும்போது **11.** வானம் திறந்துவிடும்போது **12.** நரகம் கொழுந்துவிட்டு எரிக்கப்படும்போது **13.** சொர்க்கம் அருகே கொண்டு வரப்படும்போது **14.** தான் கொண்டு வந்ததை ஒவ்வொரு மனிதனும் அறிந்துகொள்வான்.

**15.** பின்னே விலகிச் செல்பவற்றின் (நட்சத்திரங்கள்) மீதும் **16.** மறைந்து செல்லக்கூடிய நட்சத்திரங்களின்மீதும் **17.** விடைபெற்றுச் செல்லும் இரவின்மீதும் **18.** உதயமாகும் காலைப்பொழுதின்மீதும் நான் சத்தியம் செய்கிறேன். **19.** உண்மையில் இது கண்ணியமிக்க தூதர் ஒருவரால் கொண்டுவரப்பட்ட வாக்காகும். **20.** அவர் வலிமைமிக்கவர்; அரியணை உடையவனிடம் உயர் மதிப்பு பெற்றவர். **21.** அங்கு அவரது கட்டளை ஏற்றுக்கொள்ளப்படுகிறது. அவர் நம்பிக்கைக்குரியவராகவும் இருக்கிறார். **22.** உங்களின் தோழர் பைத்தியக்காரரர் அல்லர். **23.** அவர் அந்தத் தூதரை தெளிவான அடிவானத்தில் கண்டார். **24.** அவர் மறைவான விஷயங்களில் பேராசை கொண்டவரல்லர். **25.** இது விரட்டப்பட்ட சாத்தானின் சொல்லும் அல்ல. **26.** எனவே நீங்கள் எங்கே செல்கிறீர்கள்? **27.** இதுவோ உலக மக்கள் அனைவருக்கும் ஒரு அறிவுரையேயாகும். **28.** இது உங்களில் நேர்வழியில் நடந்திட விரும்பும் ஒவ்வொருவருக்கும் உரியது. **29.** ஆயினும் அகிலங்களின் இறைவனாகிய அல்லாஹ் விரும்பினாலன்றி நீங்கள் விரும்ப முடியாது.

# *82. வெடித்தல் (அல்இன்ஃபிதார்)*

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. வானம் பிளந்து விடும்போது, 2. நட்சத்திரங்கள் உதிர்ந்து விடும்போது, 3. கடல்கள் பொங்கி வழியும்போது, 4. சவக்குழிகள் திறக்கப்படும்போது 5. ஒவ்வொரு மனிதனும் தான் முன்னர் செய்தவற்றையும் செய்யாமல் விட்டவற்றையும் அறிந்துகொள்வான். 6. மனிதனே, கொடையாளனான உன் இறைவனைக் குறித்து உன்னை ஏமாற்றியது எது? 7. அவனே உன்னைப் படைத்து உன் உறுப்புகளைச் சீராக்கி உன்னைப் பொருத்தமாக அமைத்தான். 8. அவன் நாடிய வடிவத்தில் உன்னை ஒருங்கிணைத்து உண்டாக்கினான். 9. எனினும் நீங்கள் தீர்ப்பு நாளை மறுக்கிறீர்கள். 10. நிச்சயமாக உங்கள்மீது கண்காணிப்பாளர்கள் நியமிக்கப்பட்டுள்ளார்கள். 11. அவர்கள் கண்ணியமான எழுத்தர்கள். 12. நீங்கள் செய்வதையெல்லாம் அவர்கள் அறிவார்கள். 13. நிச்சயமாக நல்லவர்கள் சுவன இன்பத்தில் திளைத்திருப்பார்கள். 14. தீயவர்கள் நரகத்தில்தான் இருப்பார்கள். 15. தீர்ப்பு நாளில் அவர்கள் அதில் நுழைவார்கள். 16. அதிலிருந்து அவர்கள் தப்பிவிட முடியாது. 17. தீர்ப்பு நாள் என்னவென்று உமக்குத் தெரியுமா? 18. பின்னரும் தீர்ப்பு நாள் என்னவென்று உமக்குத் தெரியுமா? 19. அந்நாளில் எந்த ஒரு மனிதனும் மற்ற*

---

*முடிவில் இறுதித் தீர்ப்பு நாள் வரும் என்பதை குர்ஆன் நமக்குத் தெரிவிக்கிறது. அந்த நாளில் ஒட்டுமொத்த மனித இனமும் கூட்டப்பட்டு மனிதர்களின் செயல்களுக்கேற்ப சுவன வாழ்வு என்னும் வெகுமதியோ அல்லது நரக வாழ்க்கை என்னும் தண்டனையோ அளிக்கப்படும். இவை அனைத்தும் இந்த நடப்புலக வாழ்வின் நிகழ்வுகளை ஒத்தே அமைந்திருக்கிறது. மனிதனின் படைப்பில் உள்ள பொருள் பொதிந்த தன்மை அவன் பெறப்போகும் சுவனம் அல்லது நரகம் என்பதன் அறிவிப்பில் நியாயப்பூர்வ தன்மையைக் கொண்டுள்ளது.

மனிதனுக்காக எதையும் செய்திட இயலாது. அந்நாளில் அதிகாரம் அனைத்தும் அல்லாஹ்விடமே இருக்கும்*.

# 83.அளவில் மோசடி செய்வோர் (அல்முதஃஃப்ஃஃபிஃஃபீன்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

1. அளவில் மோசடி செய்வோருக்குக் கேடுதான். 2. அவர்கள் மக்களிடம் அளந்து வாங்கும்போது நிறைவாக வாங்குகிறார்கள். 3. ஆனால் மற்றவர்களுக்கு அளந்தோ, நிறுத்தோ கொடுக்கும்போது குறைத்து விடுகிறார்கள். 4-5. ஒரு மகத்தான நாளில் "அவர்கள் எழுப்பப்படுவார்கள்" என்பதை அவர்கள் எண்ணிப் பார்க்கவில்லையா? 6. அந்நாளில் மனிதர்கள் அனைவரும் அகிலங்களின் இறைவனுக்கு முன்னால் நிற்பார்கள். 7. நிச்சயமாக பாவிகளின் பதிவேடு 'ஸிஜ்ஜீனில்' இருக்கும். 8. 'ஸிஜ்ஜீன்' என்னவென்று உமக்குத் தெரியுமா? 9. அது ஒரு எழுதப்பட்ட பதிவேடாகும். 10. மறுப்போருக்கு அந்நாளில் கேடுதான். 11. அவர்கள் தீர்ப்புநாளை மறுக்கிறார்கள். 12. வரம்புமீறும் பாவியைத்தவிர வேறு எவரும் அதனை மறுக்க மாட்டார். 13. நம் வசனங்கள் அவனிடம் எடுத்துரைக்கப்பட்டால் 'இவை முன்னோர்களின் கட்டுக்கதைகள்' என்று கூறுகிறான். 14. அவ்வாறன்று. மாறாக அவர்களது செயல்கள் அவர்களின் உள்ளங்களில் துருவாகப் படிந்து விட்டன. 15. நிச்சயமாக அவர்கள் அந்நாளில் தம் இறைவனை விட்டும் தடுக்கப்படுவார்கள். 16. பின்னர் அவர்கள் நரகத்தில் நுழைவார்கள். 17. அவர்களிடம் "நீங்கள் மறுத்துக்கொண்டிருந்தது இதுதான்" என்று கூறப்படும்.

18. அவ்வாறில்லை. நிச்சயமாக நல்லோர்களின் பதிவேடு 'இல்லிய்யீனில்' இருக்கும். 19. 'இல்லிய்யீன்' என்பது என்னவென்று

*உமக்குத் தெரியுமா? 20. அது எழுதப்பட்ட ஒரு பதிவேடாகும். 21. நெருக்கமான வானவர்கள் அதனைப் பாதுகாக்கிறார்கள். 22. நிச்சயமாக நல்லவர்கள் பேரின்பத்தில் இருப்பார்கள். 23. அவர்கள் இருக்கைகளில் சாய்ந்தவர்களாக பார்த்துக் கொண்டிருப்பார்கள். 24. அவர்களின் முகங்களில் இன்பத்தின் பொலிவை நீங்கள் கண்டுகொள்வீர். 25. முத்திரையிடப்பட்ட தூய்மையான மது அவர்களுக்குப் புகட்டப்படும். 26. அதன்மீது கஸ்தூரி முத்திரை பதிந்திருக்கும். பேராசை கொள்பவர்கள் இதன் மீதே பேராசை கொள்ளட்டும். 27. அந்த மதுவில் தஸ்னீம் கலந்திருக்கும். 28. அது இறைவனுக்கு நெருக்கமானவர்கள் அருந்துகிற ஒரு நீரூற்றாகும். 29. நிச்சயமாக குற்றவாளிகள் நம்பிக்கையாளர்களைப் பார்த்து ஏளனமாக சிரித்துக் கொண்டிருந்தார்கள். 30. இவர்கள் அவர்களைக் கடந்து செல்லும்போது கண்களால் சாடை காட்டிக் கொண்டிருந்தார்கள். 31. அவர்கள் தங்கள் குடும்பத்தாரிடம் திரும்பும்போது பரிகாசம் செய்தவர்களாகத் திரும்புகிறார்கள். 32. அவர்களைப் பார்க்கும்போது ‘இவர்கள் வழிகெட்டவர்கள்’ என்று கூறிக்கொண்டிருந்தார்கள். 33. அவர்களின் பாதுகாவலர்களாக இவர்கள் அனுப்பப்படவில்லையே. 34. ஆகவே இன்று நம்பிக்கையாளர்கள் நிராகரிப்பாளர்களை பார்த்து சிரிப்பார்கள். 35. அவர்கள் இருக்கைகளில் சாய்ந்தவாறு பார்த்துக் கொண்டிருப்பார்கள். 36. நிராகரிப்பாளர்களுக்கு அவர்களின் செயல்களுக்கான நல்ல கூலி கிடைத்துவிட்டதல்லவா? (என்றும் கேட்கப்படும்).*

## 84. பிளந்து விடுதல் (அல்இன்ஷிகாக்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. வானம் பிளந்து விடும்போது 2. அது தன் இறைவனின் கட்டளைக்கு அடிபணியும். இதுதான் அதற்கு ஏற்றதாகும்.*

3. பூமி பரப்பப்பட்டுவிடும்போது 4. அது தன்னுள் இருக்கும் பொருட்களையெல்லாம் எறிந்துவிட்டு வெறுமையாகி விடும்போது 5. அது தன் இறைவனின் கட்டளைக்கு அடிபணியும். இதுதான் அதற்கு ஏற்றதாகும். 6. மனிதனே! நீ கடும் முயற்சிசெய்து உன் இறைவனின் பக்கம் சென்று கொண்டிருக்கிறாய். எனவே நீ அவனைச் சந்திப்பாய். 7. எவரது பதிவேடு அவரது வலக்கையில் கொடுக்கப்படுமோ 8. அவர் எளிதான முறையில் விசாரிக்கப்படுவார். 9. தம் குடும்பத்தாரிடம் மகிழ்ச்சியுடன் திரும்பிச் செல்வார். 10. ஆனால் எவரது பதிவேடு அவரது முதுகுக்குப் பின்னால் கொடுக்கப்படுமோ, 11. அவர் மரணத்தை அழைப்பார். 12. நரகத்தில் நுழைவார். 13. அவர் தம் குடும்பத்தாரிடம் மகிழ்ச்சியாக இருந்தார். 14. (இறைவனின் பக்கம்) ‘ஒருபோதும் திரும்ப வேண்டியதில்லை’ என்றே அவர் எண்ணியிருந்தார். 15. ஏனில்லை. அவரது இறைவன் அவரைப் பார்த்துக் கொண்டிருக்கிறான். 16. அந்தி நேர செம்மையின்மீதும் 17. இரவின்மீதும் அது உள்ளடக்கியவற்றின்மீதும் 18. முழுமை அடையும் நிலவின்மீதும் நான் சத்தியம் செய்கிறேன். 19. நிச்சயமாக நீங்கள் ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்குச் செல்ல வேண்டியுள்ளது. 20. அவர்களுக்கு என்னவாயிற்று? நம்பிக்கைகொள்வதில்லையே! 21. அவர்களிடம் குர்ஆன் எடுத்துரைக்கப்பட்டால் அவர்கள் இறைவனுக்குச் சிரம் பணிவதில்லையே!. 22. மாறாக நிராகரிப்பாளர்கள் மறுக்கிறார்கள். 23. அவர்கள் சேர்த்துக் கொண்டிருப்பவற்றை அல்லாஹ் நன்கறிகிறான். 24. எனவே அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனை உள்ளதென நற்செய்தி கூறிவிடும். 25. ஆனால் நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிந்தவர்களுக்கு என்றென்றும் முடிவுறாத கூலி உண்டு.

# 85. கோள்கள் (அல்புரூஜ்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. கோள்களுடைய வானத்தின்மீதும் 2. வாக்களிக்கப்பட்ட அந்த நாளின்மீதும் 3. சாட்சியாளர்கள் மீதும் சாட்சியத்தின் மீதும் சத்தியமாக 4. அகழ்வாசிகள் அழிக்கப்பட்டார்கள். 5. அதில் கொழுந்து விட்டெறியும் எரிபொருளின் நெருப்பு இருந்தது. 6. அதன்மீது அவர்கள் அமர்ந்து 7. நம்பிக்கையாளர்களுக்கு தாம் செய்து கொண்டிருந்த செயல்களைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். 8. யாவற்றையும் மிகைத்தவனும் புகழுக்குரியவனுமாகிய அல்லாஹ்வின்மீது அவர்கள் நம்பிக்கை கொண்டார்கள் என்பதற்காகவே இவர்கள் அவர்களைப் பகைத்தார்கள். 9. வானங்கள் மற்றும் பூமியின் ஆட்சி அவனுக்கே உரியது. அவன் அனைத்திற்கும் சாட்சியாக இருக்கின்றான். 10. எவரெல்லாம் நம்பிக்கைகொண்ட ஆண்களையும், பெண்களையும் துன்புறுத்தி, பின்னர் மன்னிப்புக் கோரவில்லையோ, அவர்களுக்கு நரக வேதனையும், சுட்டெரிக்கும் தண்டனையும் உண்டு. 11. நிச்சயமாக நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிந்தவர்களுக்கு, சொர்க்கச் சோலைகள் உள்ளன. அவற்றில் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். இது மாபெரும் வெற்றியாகும். 12. நிச்சயமாக உம் இறைவனின் பிடி கடுமையானது. 13. அவனே படைப்பை ஆரம்பம் செய்கிறான். அவனே மீண்டும் படைப்பான். 14. அவன் பெரும் மன்னிப்பாளன்; அன்பாளன்; 15. உயர்வான அரியணையின் அதிபதி; 16. தான் விரும்பியதைச் செய்யக்கூடியவன். 17-18. பாரோ மற்றும் ஸமூதுடைய படைகளைப்பற்றிய செய்தி உம்மிடம் வந்ததா? 19. ஆனால், நிராகரிப்பாளர்கள் மறுப்பதிலேயே ஆழ்ந்து கிடக்கிறார்கள். 20. ஆயினும் அல்லாஹ் அவர்களை முற்றிலும்*

சூழ்ந்துள்ளான். *21.* மாறாக இது மகத்துவமிக்க குர்ஆனாகும். *22.* இது பாதுகாக்கப்பட்ட பலகையில் எழுதப்பட்டுள்ளது.

## 86. இரவில் தோன்றக்கூடியது (அத்தாரிக்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1.* வானத்தின்மீதும் இரவில் தோன்றக்கூடியதன்மீதும் சத்தியமாக. *2.* இரவில் தோன்றக்கூடியது என்னவென்று உமக்குத் தெரியுமா? *3.* அது மின்னும் நட்சத்திரம். *4.* கண்காணிப்பாளர் இல்லாத எந்த உயிருமில்லை. *5.* மனிதன் தான் எதிலிருந்து படைக்கப்பட்டான் என்பதைக் கவனித்துப் பார்க்கட்டும். *6.* குதித்து வெளிப்படும் நீரிலிருந்து அவன் படைக்கப்பட்டான். *7.* அது முதுகெலும்புக்கும் நெஞ்செலும்புக்கும் இடையிலிருந்து வெளியாகிறது. *8.* நிச்சயமாக அவன் மனிதனை மீண்டும் படைக்கும் ஆற்றலுடையவன். *9.* எந்நாளில் மறைவான விஷயங்கள் சோதனைக்குள்ளாக்கப்படுமோ *10.* அப்போது மனிதனிடம் எந்த வலிமையும் இருக்காது. எந்த உதவியாளனும் இருக்க மாட்டான். *11.* (நீரை) திருப்பி அனுப்புகின்ற வானத்தின்மீதும் *12.* பிளந்து விடுகின்ற பூமியின்மீதும் சத்தியமாக *13.* நிச்சயமாக இது தீர்க்கமான சொல்லாகும். *14.* இது கேலிக்குரிய சொல் அல்ல. *15.* அவர்கள் திட்டம் தீட்டிக் கொண்டிருக்கிறார்கள். *16.* நானும் திட்டம் தீட்டுகிறேன். *17.* எனவே நிராகரிப்பாளர்களுக்கு நீர் அவகாசம் அளிப்பீராக. சிறிது காலம் அவர்களை விட்டு விடுவீராக.

## 87. மிக உயர்ந்தவன் ( அல்அஃலா)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. மிக உயர்வான உமது இறைவனின் பெயரைப் போற்றுவீராக. 2. அவனே படைத்துச் செம்மையாக்கினான். 3. அவனே நிர்ணயித்து வழிகாட்டினான். 4. அவனே மேய்ச்சல் பயிர்களையும் வெளியாக்கினான். 5. பின்னர் அவற்றைக் கருத்த, உலர்ந்த குப்பைக் கூளங்களாக்கினான். 6. நாம் உமக்கு ஓதிக் காட்டுவோம். ஆகவே நீர் மறக்க மாட்டீர். 7. ஆயினும் அல்லாஹ் நாடினாலே அன்றி. அவன் வெளிப்படையானதையும் மறைவானதையும் அறிகிறான். 8. நாம் உம்மை எளிதான வழியில் அழைத்துச் செல்வோம். 9. அறிவுரை பயனளிக்குமாயின் அறிவுரை வழங்குவீராக. 10. அல்லாஹ்வை அஞ்சுபவர் அறிவுரையை ஏற்றுக்கொள்வார். 11. ஆனால் துர்பாக்கியசாலியோ அதிலிருந்து விலகிக்கொள்வான். 12. அவன் பெரும் நெருப்பில் வீழ்வான். 13. அதில் சாகவும் மாட்டான், வாழவும் மாட்டான்.*

*14. தம்மைத் தூய்மைப்படுத்திக் கொண்டவர் வெற்றியடைந்து விட்டார். 15. அவர் தமது இறைவனின் பெயரை நினைவுகூர்ந்து தொழுகையை நிறைவேற்றியவராவார். 16. ஆனால் நீங்கள் இவ்வுலக வாழ்விற்கே முன்னுரிமை அளிக்கிறீர்கள். 17. மறுமையே சிறந்தது; நிலையானது. 18. இதுவே முந்தைய ஆகமங்களிலும் 19. ஆப்ரஹாம் மற்றும் மோசேவுடைய ஆகமங்களிலும் உள்ளது.*

## 88. சூழ்ந்து கொள்ளக்கூடியது (அல்காஷியா)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. சூழ்ந்து கொள்ளும் செய்தி உமக்கு வந்ததா? 2. அந்நாளில் சில முகங்கள் இழிவடைந்திருக்கும். 3. அவை பாடுபட்டவையாக,*

*களைத்துப் போனவையாக இருக்கும். **4.** அவை கொழுந்து விட்டெரியும் நெருப்பில் வீழும். **5.** அவர்கள் கொதிக்கின்ற ஊற்றிலிருந்து தண்ணீர் புகட்டப்படுவார்கள். **6.** முட்கள் நிறைந்த செடியைத்தவிர வேறெந்த உணவும் அவர்களுக்குக் கிடைக்காது. **7.** அது ஊட்டமும் தராது, பசியையும் போக்காது. **8.** அந்நாளில் சில முகங்கள் பொலிவுற்றிருக்கும். **9.** தமது உழைப்பிற்காகத் திருப்தியடைந்திருக்கும், **10.** அவை உன்னதமான சுவனச்சோலையில் இருக்கும். **11.** அங்கு அவை வீணானவற்றைச் செவியுற மாட்டா. **12.** அங்கு ஓடிக் கொண்டிருக்கும் ஊற்றுகள் உண்டு. **13.** உயர்வான கட்டில்களும் இருக்கும். **14.** தேர்ந்தெடுக்கப்பட்ட குவளைகளும் **15.** வரிசையாக வைக்கப்பட்டிருக்கும் திண்டு, தலையணைகளும் **16.** விரிக்கப்பட்ட கம்பளங்களும் அங்கு உண்டு. **17.** "ஒட்டகம் எவ்வாறு படைக்கப்பட்டுள்ளது, **18.** வானம் எவ்வாறு உயர்த்தப்பட்டுள்ளது, **19.** மலைகள் எவ்வாறு நிறுத்தப்பட்டுள்ளன, **20.** பூமி எவ்வாறு விரிக்கப்பட்டுள்ளது" என்பதை அவர்கள் கவனிக்க வேண்டாமா? **21.** எனவே நீர் நினைவூட்டுவீராக. நீர் நினைவூட்டக்கூடியவர் மட்டுமே. **22.** நீர் அவர்கள்மீதான கண்காணிப்பாளர் அல்லர். **23.** ஆனால் எவன் புறக்கணித்து நிராகரித்தானோ **24.** அவனை அல்லாஹ் கடினமான வேதனையால் தண்டிப்பான். **25.** நிச்சயமாக அவர்கள் நம் பக்கமே திரும்பி வர வேண்டியுள்ளது. **26.** பின்னர் அவர்களை விசாரணை செய்வது நம் பொறுப்பேயாகும்*

## 89. வைகறை (அல்ஃபஜ்ர்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. வைகறையின் மீதும் **2.** பத்து இரவுகளின் மீதும் **3.** இரட்டை மற்றும் ஒற்றையின் மீதும் **4.** செல்கின்ற இரவின் மீதும் சத்தியமாக. **5.** இதில் அறிவுடையோருக்குப் போதுமான*

சத்தியம் இருக்கிறதல்லவா? 6. உம் இறைவன் ஆத் சமூகத்துடனும் 7. தூண்களுடைய இரம்வாசிகளுடனும் எவ்வாறு நடந்து கொண்டான் என்பதை நீ பார்க்கவில்லையா? 8. அவர்களைப்போன்று எந்தச் சமூகமும் நாடுகளில் படைக்கப்பட்டிருக்கவில்லை. 9. பள்ளத்தாக்கில் பாறைகளைக் குடைந்த ஸமூத் சமூகத்துடனும் 10. ஆணிகளுடைய பாரோவிடமும். 11. இவர்களெல்லாம் பூமியில் வரம்புமீறி நடந்தார்கள். 12. அங்கு பெரும் குழப்பத்தை ஏற்படுத்தினார்கள். 13. எனவே உமது இறைவன் அவர்களின்மீது வேதனையின் சாட்டையை வீசினான். 14. நிச்சயமாக உமது இறைவன் கண்காணித்துக் கொண்டிருக்கிறான். 15. மனிதனை அவனது இறைவன் கண்ணியப்படுத்தி அருட்கொடைகளையும் வழங்கி சோதிக்கும்போது, “என் இறைவன் என்னைக் கண்ணியப்படுத்தினான்” என்று கூறுகிறான். 16. ஆனால் அவனது வாழ்க்கை வசதிகளைக் குறைத்து அவனைச் சோதிக்கும்போது “என் இறைவன் என்னை இழிவுபடுத்தி விட்டான்'' என்று கூறுகிறான். 17. அவ்வாறன்று. நீங்கள் அநாதையை மதிப்பதுமில்லை; 18. ஏழைகளுக்கு உணவளிக்குமாறு தூண்டுவதுமில்லை. 19. பிறருடைய வாரிசு சொத்துக்களை நீங்களே முழுமையாக விழுங்கி விடுகிறீர்கள். 20. செல்வத்தின்மீது அளவுகடந்த மோகம் கொண்டுள்ளீர்கள். 21. அவ்வாறன்று. பூமி நொறுக்கப்பட்டு தூள் தூளாக்கப்படும்போது 22. வானவர்கள் அணிவகுத்து நிற்க உமது இறைவன் வருகை தருவான். 23. அந்நாளில் நரகம் கொண்டு வரப்படும். அந்நாளில்தான் மனிதன் புரிந்துகொள்வான். அப்போது ஏற்படும் புரிதலால் அவனுக்கு என்ன பயன்? 24. ‘என் வாழ்க்கையில் எதையாவது செய்திருக்கக் கூடாதா’ என்று மனிதன் வருத்தப்பட்டு புலம்புவான். 25. அந்நாளில் இறைவன் தண்டிப்பதைப்போல வேறு எவனும் தண்டிக்க மாட்டான். 26. அவன் கட்டுவதுபோல வேறு எவனும் கட்ட மாட்டான். 27. அமைதியடைந்த ஆன்மாவே!

*28.* உன் இறைவனின் பக்கம் செல். நீ அவனைக் கொண்டு திருப்தியடைந்தாய். அவனும் உன்னைக் குறித்து திருப்தியடைந்தான். *29.* இணைந்து விடு என் அடியார்களுடன், *30.* என் சொர்க்கத்திலும் நுழைந்து விடு, (என்று கூறப்படும்).

# 90. அந்த நகரம் (அல்பலத்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1.* இந்தநகரின்மீது நான் சத்தியம் செய்கிறேன். *2.* நீர் இந்த நகரில் தங்கியுள்ளீர். *3.* தந்தையின்மீதும் அவரது சந்ததியின்மீதும் சத்தியமாக. *4.* நாம் மனிதனைக் கஷ்டத்தில் படைத்துள்ளோம். *5.* அவன்மீது எவரும் ஆதிக்கம் செலுத்த முடியாது என்று அவன் எண்ணுகிறானா? *6.* "ஏராளமான செல்வத்தை வாரி இறைத்து விட்டேன்" என்று அவன் கூறுகிறான். *7.* தன்னை யாரும் பார்க்கவில்லை என்று அவன் எண்ணுகிறானா? *8.* நாம் அவனுக்கு இரு கண்களையும் *9.* ஒரு நாவையும் இரு உதடுகளையும் வழங்கவில்லையா? *10.* இன்னும் நாம் அவனுக்கு (நன்மை தீமையின்) இரு வழிகளையும் காட்டினோம். *11.* ஆயினும் அவன் கணவாயைக் கடக்கவில்லை. *12.* 'கணவாய்' என்னவென்று உமக்குத் தெரியுமா? *13.* அது ஒரு அடிமையை விடுதலை செய்வதாகும். *14.* அல்லது உறவினரான அநாதைக்கோ, *15.* வறுமையில் உழலும் ஏழைக்கோ *16.* பசி நிறைந்த நாட்களில் உணவளிப்பதாகும். *17.* பின்னர் எவரெல்லாம் நம்பிக்கைகொண்டு பொறுமையை மேற்கொள்ளவும், இரக்கம் காட்டவும் ஒருவருக்கொருவர் அறிவுரை கூறுகிறார்களோ அவர்களில் உள்ளவராக அவர் இருப்பார். *18.* அவர்கள்தான் வலதுபக்கமுள்ள பாக்கியசாலிகள். *19.* நம் வசனங்களை நிராகரித்தவர்கள்தான் துர்பாக்கியசாலிகள். *20.* அவர்களின்மீது நெருப்பு படர்ந்திருக்கும்.

## *91. சூரியன் (அஷ்ஷம்ஸ்)*

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. சூரியன் மீதும் அதன் ஒளியின்மீதும் 2. அதனைத் தொடர்ந்து வரும் சந்திரன்மீதும் 3. சூரியனை வெளிப்படுத்தும் பகலின்மீதும் 4. அதனை மூடிக் கொள்ளும் இரவின்மீதும் 5. வானத்தின்மீதும் அதனை அமைத்தவன்மீதும் 6. பூமியின்மீதும் அதனை விரித்தவன்மீதும் 7. ஆன்மாவின்மீதும் அதனைச் செம்மையாக உருவாக்கியவன்மீதும் சத்தியமாக. 8. அவன் அதன் தீமையையும், நன்மையையும் அதற்கு உணர்த்தினான். 9. அதைத் தூய்மைப்படுத்தியவர் வெற்றியடைந்து விட்டார். 10. அதைக் களங்கப்படுத்தியவர் தோல்வியடைந்து விட்டார். 11. ஸமூத் சமூகத்தினர் தங்கள் வரம்புமீறிய போக்கினால் மறுத்தனர். 12. அவர்களில் மிகவும் கேடுகெட்டவன் எழுந்து வந்தபோது 13. அவர்களிடம் இறைத்தூதர் (சாலிஹ்) “இது இறைவனின் பெண் ஒட்டகம். இதை தண்ணீர் குடிக்க விடுங்கள்” என்று கூறினார். 14. ஆனால் அம்மக்கள் அவரை நிராகரித்தார்கள். ஒட்டகத்தின் கால்நரம்பை வெட்டி (க்கொன்று) விட்டார்கள். எனவே இறைவன் அவர்களது பாவத்தினால் அழிவை இறக்கி அவர்களைத் தரைமட்டமாக்கினான். 15. அதன் விளைவைக் குறித்து அவன் அஞ்சவில்லை*

## *92 . இரவு (அல்லைல்)*

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. படர்ந்துவிடும் இரவின்மீதும் 2. பிரகாசிக்கின்ற பகலின் மீதும் 3. ஆணையும் பெண்ணையும் படைத்திருப்பதன்மீதும் சத்தியமாக. 4. நிச்சயமாக உங்களின் முயற்சி பலவாறாக இருக்கிறது.*

*5.* எனவே எவர் (பிறருக்கு) வழங்கி இறையச்சத்துடன் நடந்து *6.* நன்மையை உண்மையென ஏற்றுக்கொண்டாரோ *7.* அவருக்கு இலகுவான வழியில் செல்வதை நாம் எளிதாக்குவோம். *8.* ஆனால் எவன் கஞ்சத்தனம் செய்து அலட்சியமாக இருந்து *9.* நன்மையானவற்றை நிராகரித்தானோ *10.* அவனுக்குக் கடினமான வழியில் (வழிகேட்டில்) செல்வதை நாம் எளிதாக்குவோம். *11.* அவன் நரகத்தில் விழுந்து விட்டால் அவனது செல்வம் அவனுக்குப் பயனளிக்காது. *12.* நிச்சயமாக வழிகாட்டுவது நமது பொறுப்பாகும். *13.* நிச்சயமாக மறுமையும் இம்மையும் நமக்கே உரியவையாகும். *14.* எனவே கொழுந்து விட்டெரியும் நெருப்பைப்பற்றி நான் உங்களை எச்சரித்து விட்டேன். *15.* மிகக் கெட்டவன்தான் அதில் நுழைவான். *16.* அவன் சத்தியத்தை நிராகரித்துப் புறக்கணித்தான். *17.* இறைவனை அதிகம் அஞ்சுபவர் அதைவிட்டும் பாதுகாக்கப்படுவார். *18.* அவர் தூய்மையடையும்பொருட்டு தம் செல்வத்தை வழங்குவார். *19.* கைமாறு செய்யும் அளவுக்கு எவருக்கும் அவர் நன்றிக்கடன்பட்டிருப்பதில்லை. *20.* ஆனாலும் மேலான தம் இறைவனின் திருப்தியைப் பெறுவதற்காகவே. *21.* வெகு விரைவில் அவர் திருப்தியடைவார்.

## 93. ஒளிமிக்க காலைப் பொழுது (அள்ளுஹா)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1.* ஒளிமிக்க காலைப்பொழுதின்மீதும் *2.* இருண்ட இரவின்மீதும் சத்தியமாக. *3.* உம் இறைவன் உம்மைக் கைவிடவுமில்லை; வெறுக்கவும் இல்லை. *4.* மறுமையே இம்மையைவிட உமக்குச் சிறந்ததாகும். *5.* விரைவில் உம் இறைவன் உமக்கு வழங்கிடுவான். அப்போது நீர் திருப்தியடைவீர். *6.* அவன் உம்மை அநாதையாகக் கண்டு புகலிடம் அளிக்கவில்லையா? *7.* உம்மைத் தேட்டங்கொண்டவராகக் கண்டான். எனவே

உமக்கு வழிகாட்டினான். 8. உம்மைத் தேவையுடைவராகக் கண்டான். எனவே உம்மை தேவையற்றவராக்கினான். 9. எனவே நீர் அநாதைகளுடன் கடுமையாக நடந்து கொள்ளாதீர், 10. யாசிப்பவரை விரட்டாதீர். 11. உம் இறைவனின் அருட்கொடைகளை எடுத்துரைப்பீராக.

## 94. விரிவாக்குதல் (அல்இன்ஷிராஹ்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

1. (தூதரே!) நாம் உங்களது உள்ளத்தை உங்களுக்காக விரிவாக்கவில்லையா? 2. உங்களது சுமையை உங்களை விட்டும் இறக்கினோம். 3. அது உங்களது முதுகை முறித்துக் கொண்டிருந்தது. 4. உங்களுக்காக உங்கள் புகழை மேலோங்கச் செய்தோம். 5. எனவே சிரமத்துடன் எளிதும் இருக்கிறது. 6. நிச்சயமாக சிரமத்துடன் எளிதும் இருக்கிறது. 7. எனவே நீங்கள் (பணியிலிருந்து) விடுபட்டதும் முயற்சி செய்வீராக. 8. உங்களது இறைவனின் பக்கம் கவனம் செலுத்துவீராக.

## 95. அத்திப் பழம் (அத்தீன்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

1. அத்தியின்மீதும் 2. ஆலிவ் மரத்தின்மீதும் 3. சினாய் மலையின்மீதும் அமைதியான இந்த நகரத்தின்மீதும் சத்தியமாக. 4. நாம் மனிதனை மிக அழகிய வடிவில் படைத்தோம். 5. பின்னர் அவனது (தீய செயல்களினால்) அவனைத் தாழ்ந்தவர்களில் மிகவும் தாழ்ந்தவனாக ஆக்கினோம், 6. நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிந்தவர்களைத் தவிர. அவர்களுக்கு என்றும் முடிவுறாத நற்கூலி உண்டு. 7. எனவே நீ எதைக்கொண்டு தீர்ப்பு நாளை

*மறுக்கின்றாய்? 8. அல்லாஹ் தீர்ப்பளிப்போரில் எல்லாம் மிகச் சிறந்த தீர்ப்பளிப்பாளன் இல்லையா?*

## *96. ஒட்டிக் கொள்ளக்கூடியது (அல்அலக்)*

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. படைத்த உம் இறைவனின் பெயரால் படிப்பீராக. 2. அவன் மனிதனை (கருவறை சுவரில்) ஒட்டிக் கொள்ளக்கூடியதிலிருந்து படைத்தான். 3. படிப்பீராக! உம் இறைவன் மாபெரும் கொடையாளி. 4. அவனே எழுதுகோலின் மூலம் கற்றுக் கொடுத்தான். 5. அறியாதவற்றையெல்லாம் மனிதனுக்கு அவன் கற்றுக் கொடுத்தான். 6. இருந்தபோதிலும் மனிதன் வரம்பு மீறுகிறான், 7. தன்னைத் தேவையற்றவன் என்று அவன் கருதியதால். 8. நிச்சயமாக உமது இறைவனிடமே திரும்ப வேண்டியுள்ளது. 9. ஒரு அடியார் தொழும்போது அவரைத் தடுப்பவனை நீர் பார்த்தீரா? 11. நீர் என்ன நினைக்கிறீர், அவர் நேர்வழியில் இருந்தாலுமா? 12. அல்லது இறையச்சத்தை ஏவினாலுமா? 13. அவன் சத்தியத்தை மறுத்துப் புறக்கணித்தால் அவனைப்பற்றி நீர் என்ன நினைக்கிறீர்? 14. அல்லாஹ் பார்த்துக் கொண்டிருக்கிறான் என்பது அவனுக்குத் தெரியாதா? 15. அவ்வாறன்று. அவன் விலகிக்கொள்ளவில்லையெனில் அவனது நெற்றிமுடியைப் பிடித்து இழுப்போம், 16. பாவம்செய்த, பொய்யுரைத்த அந்த நெற்றியை. 17. அச்சமயம் தன் ஆதரவாளர்களை அவன் அழைத்துக் கொள்ளட்டும்.18. நாமும் நரகத்தின் காவலர்களை அழைப்போம். 19. அவ்வாறன்று. அவனுக்குக் கட்டுப்படாதீர். உம் இறைவனுக்கு சிரம் பணிந்து நெருங்குவீராக.*

# 97. விதியின் இரவு (அல்கத்ர்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. "விதியின் இரவில்" இதனை நாம் அருளினோம். 2. "விதியின் இரவு" என்னவென்று உமக்குத் தெரியுமா? 3. "விதியின் இரவு" ஆயிரம் மாதங்களை விடச் சிறந்ததாகும். 4. வானவர்களும் கேப்ரியேலும் தங்கள் இறைவனின் அனுமதியைப் பெற்றுக்கொண்டு அனைத்து காரியங்களுடன் இறங்குகிறார்கள். 5. அந்த இரவு அதிகாலை உதயமாகும்வரை முற்றிலும் சாந்தம் நிரம்பியதாக இருக்கும்.*

# 98. தெளிவான சான்று (அல்பய்யினா)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. வேதக்காரரர்களிலும் இணைவைப்பாளர்களிலும் உள்ளவர்கள் தங்களிடம் தெளிவான ஆதாரம் வந்தால் அதனை மறுக்கக்கூடாது என்ற எண்ணத்தில் உறுதியாக இருந்தார்கள். 2. அது அல்லாஹ்விடமிருந்து (இவர்களிடம் வந்திருக்கும்) பரிசுத்தமான வேதங்களை ஓதிக் காண்பிக்கும் இந்தத் தூதர்தான். 3. அவற்றில் நிலையான சட்டதிட்டங்களும் உள்ளன. 4. வேதக்காரரர்கள் தங்களிடம் தெளிவான ஆதாரம் வந்தபின்னரே பிளவுபட்டார்கள். 5. மார்க்கத்தை அல்லாஹ்வுக்கு மட்டுமே உரித்தாக்கி முழு நம்பிக்கை உடையவர்களாக அவனுக்கு வழிபட வேண்டும். தொழுகையைக் கடைப்பிடித்து கடமையாக்கப்பட்ட தர்மத்தையும் அளிக்க வேண்டும் என்றுதான் அவர்கள் ஏவப்பட்டார்கள். இதுதான் சரியான மார்க்கமாகும். 6. நிச்சயமாக வேதக்காரரர்களிலும் இணைவைப்பாளர்களிலும் உள்ள நிராகரிப்பாளர்கள் நரக நெருப்பில் நிரந்தரமாக*

வீழ்ந்து கிடப்பார்கள். இவர்கள்தான் படைப்பினங்களில் மிகவும் கெட்டவர்கள் 7. நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிந்தவர்கள்தான் படைப்பினங்களில் மிகவும் சிறந்தவர்கள். 8. அவர்களின் கூலி அவர்களது இறைவனிடம் நிலையான சுவனங்களாகும். அவற்றில் ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும். அவற்றில் அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள். அல்லாஹ் அவர்களைக் குறித்து திருப்தியடைந்தான். அவர்களும் அவனைக் குறித்து திருப்தியடைந்தார்கள். இவை எவர் தம் இறைவனுக்கு அஞ்சினாரோ அவருக்கே உரியவையாகும்.

## 99. பூமி அதிர்ச்சி (அஸ்ஸில்ஸால்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

1. பூமி பலமாக உலுக்கப்படும்போது 2. தன் சுமைகளை அது வெளியேற்றி விடும். 3. அதற்கு என்ன நேர்ந்தது என்று மனிதன் கேட்பான். 4. அந்நாளில் அது தன் செய்திகளை அறிவிக்கும். 5. ஏனெனில் உம் இறைவன் அதற்கு இவ்வாறே கட்டளையிடுவான். 6. அந்நாளில் மக்கள் தங்களின் செயல்களைக் காண்பதற்காகத் தனித்தனியாக வருவார்கள். 7. எனவே அணுவளவு நன்மை செய்திருந்தாலும் அதனை அவர் கண்டுகொள்வார். 8. அணுவளவு தீமை செய்திருந்தாலும் அதனையும் அவர் கண்டுகொள்வார்.

## 100. வேகமாக ஓடும் குதிரைகள் (அல்ஆதியாத்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

1. மூச்சிறைக்க வேகமாக ஓடுகின்ற குதிரைகள்மீது சத்தியமாக. 2. அவை குளம்புகளிருந்து தீப்பொறியை எழுப்பக்கூடியவை; 3. அதிகாலைப் பொழுதில் தாக்குதல் நடத்தக்கூடியவை; 4. அதனால் புழுதியைக் கிளப்பக்கூடியவை; 5. படைகளுக்கு

மத்தியில் ஊடுருவிச் செல்லக்கூடியவை. **6.** நிச்சயமாக தன் இறைவனுக்கு நன்றி கெட்டவனாக மனிதன் இருக்கிறான். **7.** அவனே அதற்கு சாட்சியாகவும் இருக்கிறான். **8.** அவன் செல்வத்தின்மீது அளவு கடந்த மோகம் கொண்டுள்ளான். **9.** அவன் சவக்குழிகளிலிருந்து எழுப்பப்பட்டு **10.**உள்ளங்களில் உள்ளவையெல்லாம் வெளிப்படுத்தப்படும் நேரத்தை அறிந்துகொள்ளவில்லையா? **11.** நிச்சயமாக அந்நாளில் அவர்களின் இறைவன் அவர்களைப்பற்றி நன்கறிந்தவன்.

## 101. திடுக்கிடச் செய்யும் நிகழ்வு (அல்காரிஆ)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

**1.** “திடுக்கிடச் செய்யும் நிகழ்வு”. **2.** “திடுக்கிடச் செய்யும் நிகழ்வு” என்றால் என்ன? **3.** “திடுக்கிடச் செய்யும் நிகழ்வு” என்னவென்று உமக்குத் தெரியுமா? **4.** அந்நாளில் மனிதர்கள் ஈசல்களைப்போல் சிதறுண்டு கிடப்பார்கள். **5.** மலைகள், கொட்டப்பட்ட பஞ்சைப்போன்று ஆகிவிடும். **6.** எனவே எவரது எடைத்தட்டு கனமாக இருக்குமோ **7.** அவர் மனதிற்குப் பிடித்தமான வாழ்வைப் பெறுவார். **8.** ஆனால் எவரது எடைத்தட்டு இலேசாக இருக்குமோ **9.** அவரது இருப்பிடம் படுகுழியாகும். **10.** அது என்னவென்று உமக்குத் தெரியுமா? **11.** அது கொழுந்து விட்டெரியும் நெருப்பாகும்.

## 102. பேராசை (அத்தகாசுர்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

**1.** அதிகப்படுத்திக்கொள்ளும் பேராசை உங்களை அலட்சியத்தில் ஆழ்த்திவிட்டது. **2.** நீங்கள் சவக்குழிகளை சென்றடையும்வரை **3.** அவ்வாறன்று. நீங்கள் விரைவில்

*அறிந்துகொள்வீர்கள். 4. அவ்வாறன்று. நீங்கள் விரைவில் அறிந்துகொள்வீர்கள். 5. அவ்வாறன்று. உறுதியாக நீங்கள் அறிந்துகொள்வீர்களாயின், 6. நிச்சயமாக நீங்கள் நரகத்தைக் காண்பீர்கள். 7. அதனைக் கண்கூடாகக் காண்பீர்கள். 8. பின்னர் அந்நாளில் அருட்கொடைகளைப்பற்றி கட்டாயம் விசாரிக்கப்படுவீர்கள்.*

## *103.* காலம் (அல்அஸ்ர்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. காலத்தின் மீது சத்தியமாக. 2. நிச்சயமாக மனிதன் நஷ்டத்தில் இருக்கிறான். 3. ஆயினும் நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிந்து ஒருவருக்கொருவர் சத்தியத்தைக்கொண்டும், பொறுமையைக்கொண்டும் அறிவுரை கூறிக்கொண்டிருந்தார்களே, அவர்களைத் தவிர.*

## *104.* புறம் கூறித்திரிதல் (அல்ஹுமஸா)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. குறைகூறிப் புறம்பேசித் திரியும் ஒவ்வொருவருக்கும் கேடுதான். 2. அத்தகையவன் செல்வத்தைச் சேகரித்து அதைக் கணக்கிட்டு வைக்கிறான். 3. அவனது செல்வம் எப்போதும் அவனிடமே இருக்கும் என்று எண்ணுகிறான். 4. அவ்வாறில்லை. நசுக்கப்படுகின்ற இடத்தில் அவன் எறியப்படுவான். 5. "நசுக்கப்படும் இடம்" என்னவென்று உமக்குத் தெரியுமா? 6.அது கொழுந்து விட்டெரியும் அல்லாஹ்வின் நெருப்பாகும். 7. அது இதயங்கள்வரை எட்டிப் பார்க்கும். 8. அது அவர்களை மூடியிருக்கும். 9. உயரமான தூண்களில் (அவர்கள் கட்டப்பட்டிருப்பார்கள்).*

## 105. யானை (அல்ஃஃபீல்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. யானைப் படையினரை உமது இறைவன் என்ன செய்தான் என்பதை நீங்கள் பார்க்கவில்லையா? **2.** அவர்களின் சூழ்ச்சியை அவன் முறியடிக்கவில்லையா? **3.** அவர்களின்மீது பறவைகளை கூட்டம் கூட்டமாக அனுப்பினான். **4.** அவை அவர்களின்மீது சுடப்பட்ட களிமண் கற்களை எறிந்தன. **5.** அதனால் அவர்களை மென்று தின்னப்பட்ட வைக்கோலைப்போல் அவன் ஆக்கி விட்டான்.*

## 106. குறைஷிகள் (குறைஷ்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. குறைஷிகள் பழக்கப்பட்டுவிட வேண்டுமென்பதற்காக. **2.** (அதாவது) குளிர்கால மற்றும் கோடைக்கால பயணங்களில் அவர்கள் பழக்கப்பட்டுவிட வேண்டுமென்பதற்காக. **3.** எனவே அவர்கள் இந்த இல்லத்தின் இறைவனையே வணங்கட்டும். 4. அவனே அவர்களுக்குப் பசியின்போது உணவளித்தான்; பயத்திலிருந்து அபயமளித்தான்.*

## 107. அற்பப் பொருள் (அல்மாவூன்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. தீர்ப்புநாளை மறுப்பவனை நீங்கள் பார்த்தீர்களா? **2.** அவன்தான் அநாதைகளை விரட்டுகிறான். **3.** அவன் ஏழைக்கு உணவளிக்கத் தூண்டுவதுமில்லை. **4.** அந்த தொழுகையாளிகளுக்குக் கேடுதான். **5.** தம் தொழுகையைவிட்டு அலட்சியமாக அவர்கள்*

*இருக்கிறார்கள். 6. அவர்கள் பிறருக்குக் காட்டுவதற்காகவே செயல்படுகிறார்கள். 7. அற்ப பொருட்களைக்கூட அவர்கள் தடுத்து விடுகிறார்கள்.*

## *108. ஏராளமான நன்மைகள் (அல்கவ்ஸர்)*

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. (தூதரே!) நாம் உமக்கு ஏராளமான நன்மைகளை வழங்கியுள்ளோம். 2. எனவே உம் இறைவனுக்காக தொழுது பலி கொடுப்பீராக. 3. நிச்சயமாக உம் பகைவனே வேரறுந்தவன்.*

## *109. நிராகரிப்பாளர்கள் (அல்காஃபிரூன்)*

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. நீர் கூறும்: “நிராகரிப்பாளர்களே! 2. நீங்கள் வணங்குபவற்றை நான் வணங்க மாட்டேன். 3. நான் வணங்குபவனை நீங்கள் வணங்குபவர்கள் அல்லர். 4. நீங்கள் வணங்குபவற்றை நான் வணங்குபவன் அல்லன். 5. நான் வணங்குபவனை நீங்கள் வணங்கப் போவதில்லை. 6. உங்களுக்கு உங்கள் மார்க்கம்; எனக்கு எனது மார்க்கம்”.*

## *110. உதவி (அந்நஸ்ர்)*

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. அல்லாஹ்வின் உதவியும் வெற்றியும் வரும்போது 2. இறைமார்க்கத்தில் கூட்டம் கூட்டமாக மக்கள் நுழைவதை நீங்கள் காண்பீர்கள். 3. எனவே உம் இறைவனைப் புகழ்ந்து போற்றுவீராக. அவனிடம் மன்னிப்புக் கோருவீராக; நிச்சயமாக அவன் பெரும் மன்னிப்பாளனாக இருக்கிறான்.*

## 111. முறிந்துவிட்டது (தப்பத்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. அபூலஹபின் கைகள் முறிந்து விடட்டும்; அவனும் நாசமாகட்டும். 2. அவனது செல்வமோ அவன் சம்பாதித்தவையோ அவனுக்குப் பயனளிக்காது. 3. வெகு விரைவில் கொழுந்து விட்டெரியும் நெருப்பில் அவன் விழுவான். 4. தலையில் விறகைச் சுமந்து திரியும் அவனது மனைவியும். 5. அவளது கழுத்திலே முறுக்கேற்றப்பட்ட கயிறுதான் இருக்கும்.*

## 112 . ஏகத்துவம் (அல்இக்லாஸ்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. நீர் கூறும்: "அல்லாஹ், அவன் ஏகன். 2. அல்லாஹ் தேவையற்றவன். 3. அவனுக்கு சந்ததியாக யாரும் இல்லை; அவன் யாருடைய சந்ததியுமில்லை. 4. அவனுக்கு நிகராக எவரும் இல்லை".*

## 113. காலைப்பொழுது (அல்ஃபலக்)

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. நீர் கூறும்: "அதிகாலையின் இறைவனிடம் பாதுகாவல் தேடுகிறேன். 2. அவன் படைத்தவற்றின் தீங்கிலிருந்தும் 3. இருள் படர்ந்துவிடும்போது ஏற்படும் தீங்கிலிருந்தும் 4. முடிச்சுகளில் ஊதுகின்றவர்களின் தீங்கிலிருந்தும் 5. பொறாமைக்காரன் பொறாமை கொள்ளும்போது ஏற்படும் தீங்கிலிருந்தும் (நான் பாதுகாப்பு தேடுகிறேன்)".*

# *114. மனிதர்கள் (அந்நாஸ்)*

அளவிலாக் கருணையாளனும் இணையிலாக் கிருபையாளனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

*1. நீர் கூறும்: "மனிதர்களின் இறைவனிடம் பாதுகாவல் தேடுகிறேன். 2. மனிதர்களின் அரசனிடம், 3. மனிதர்களின் வணக்கத்திற்குரியவனிடம் 4. மறைந்துகொண்டே மனதில் ஊசலாட்டங்களை ஏற்படுத்துபவனின் தீங்கிலிருந்து (நான் பாதுகாவல் தேடுகிறேன்). 5. அவன் மனிதர்களின் உள்ளங்களில் ஊசலாட்டங்களை ஏற்படுத்துகிறான். 6. (அவர்கள்) ஜின்களிலும் மனிதர்களிலும் இருக்கின்றனர்".*

# திருக்குர்ஆனில் கூறப்பட்டுள்ள இறைத்தூதர்களும் அவர்களின் தமிழ்பெயர் பட்டியலும்

| | | |
|---|---|---|
| *1.* | ஆதம் | ஆதம் |
| *2.* | நூஹ் | நோவா |
| *3.* | இப்ராஹீம் | ஆப்ரஹாம் |
| *4.* | இஸ்மாயீல் | இஸ்மவேல் |
| *5.* | இஸ்ஹாக் | ஈசாக் |
| *6.* | யஃகூப் | ஜேகப் |
| *7.* | யூஸுஃப் | ஜோஸஃப் |
| *8.* | லூத் | லோத் |
| *9.* | மூஸா | மோசே |
| *10.* | ஹாரூன் | ஆரோன் |
| *11.* | தாவூத் | தாவீத் |
| *12.* | ஸுலைமான் | சாலமன் |
| *13.* | அய்யூப் | ஜோப் |
| *14.* | யூனுஸ் | ஜோனா |
| *15.* | யஹ்யா | ஜான் |
| *16.* | ஈஸா | இயேசு |
| *17.* | முஹம்மது | முஹம்மது |

மேலும் கீழ்க்காணும் இறைத்தூதர்களின் பெயர்கள் தமிழ்ச்சூழலில் புழக்கத்தில் இல்லாததால் அவர்களின் அரபுப் பெயர்களை அப்படியே பயன்படுத்தியுள்ளோம்.

| | | |
|---|---|---|
| *18.* | ஷுஐப் ரகுவல் | ஜெத்ரோ |
| *19.* | இத்ரீஸ் | எனோக் |
| *20.* | ஹூத் | எபைர் |
| *21.* | ஸாலிஹ் | சேலஹ் |
| *22.* | துல்கிஃப்லு | துல்கிஃப்லு |
| *23.* | இல்யாஸ் | இல்யாஸ் |
| *24.* | அல்யஸவு | அல்யஸவு |
| *25.* | ஜகரிய்யா | ஜகரிய்யா |

# திருக்குர்ஆனில் பயன்படுத்தப்படும் சொற்கள் பற்றிய குறிப்புகள்

**அல்லாஹ்:**

ஒரே இறைவனைக் குறிக்க திருக்குர்ஆன் பயன்படுத்தும் சொல்.

## திருக்குர்ஆனில் கூறப்பட்டுள்ள இடங்கள்

**கஅபா:**

சவுதி அரேபியாவின் மக்கா நகர பெரியபள்ளிவாசலின் மையத்தில் அமைந்துள்ள சதுர வடிவமான கட்டடம். இறைத்தூதர் ஆப்ரஹாம் அல்லாஹ்வை வணங்குவதற்காக இதைக் கட்டினார். இது இருக்கும் திசை உலகம் முழுவதும் உள்ள முஸ்லிம்கள் இறைவணக்கம்புரிய முன்னோக்கும் திசையாக உள்ளது.

**ஸஃபா மற்றும் மர்வா:**

மக்காவிலுள்ள பெரிய பள்ளிவாசலுக்கு அருகிலுள்ள இரண்டு மலைக்குன்றுகள்.

**துவா:**

எகிப்து, சினாய் தீபகற்பத்தில் உள்ள ஒரு பள்ளத்தாக்கு. இங்குதான் இறைத்தூதர் மோசேவுடன் அல்லாஹ் உரையாடினான்.

**தூர்:**

மோசேவுக்கு இறைத்தூதர் பொறுப்பு கிடைத்த எகிப்திலுள்ள சினாய் மலையடிவாரம்.

**ஜூதி:**

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் பெருவெள்ளம் ஏற்பட்டது. அதிலிருந்து இறைத்தூதர் நோவா தன்னையும், தம்மை சார்ந்தவர்களையும் காத்துக்கொள்ள கட்டிய கப்பல் (Arc of Noah) துருக்கியில் சென்று சேர்ந்த மலை.

**சபஉ:**

எமன் நாட்டின் மேற்குப் பகுதியில் அமைந்துள்ள ஒரு நகரத்தின் பெயர்.

**பத்ர்:**

மக்கா மற்றும் மதீனாவுக்கு இடையே உள்ள ஒரு இடம். இது மதீனாவுக்குத் தென்மேற்கே சுமார் 150 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இங்குதான் மதீனா நகரில் இருந்த முஸ்லிம்களுக்கும் மக்கா நகர இறைமறுப்பாளர்களுக்குமிடையே ஹிஜ்ரி 2ஆம் ஆண்டு (கி.பி.624) ரமலான் மாதம் 17ஆம் நாளில் போர் நடந்தது. இந்தப் போர் ‘பத்ர் போர்’ என்று அழைக்கப்படுகிறது.

**அரஃபா:**

கஅபாவுக்கு தென்கிழக்கே 7 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள மைதானம்.

**ஹுனைன்:**

மக்கா மற்றும் தாயிஃப் நகருக்கு இடையிலுள்ள பள்ளத்தாக்கு.

**ஹிஜ்ர்:**

மதீனாவிலிருந்து தபூக் செல்லும் வழியில் அமைந்துள்ள ஊர்.

**யஸ்ரிப்:**

*சவுதி அரேபியாவிலுள்ள மதீனா நகரம் இறைத்தூதரின் காலத்தில் இப்பெயரில் அழைக்கப்பட்டது.*

**மத்யன்:**

*எகிப்துக்கும் பாலஸ்தீனத்துக்கும் இடையிலுள்ள ஒரு நகரம். இங்கு ஷுஐப் என்பவர் இறைத்தூதராக அனுப்பப்பட்டிருந்தார்.*

## திருக்குர்ஆனில் கூறப்பட்டுள்ள மனிதர்கள்

**பாரோஃ-பிர்அவ்ன்:**

*இறைத்தூதர் மோசேவின் காலத்தைய எகிப்திய பேரரசன்.*

**கோரா-காரூன்:**

*எகிப்திய பாரோ மன்னருடைய காலத்தின் பெரும் செல்வந்தன்.*

**கோலியத்-ஜாலூத்:**

*இறைத்தூதர் தாவீத் காலத்தில் வாழ்ந்த தீய மனிதன்.*

**தாலூத்:**

*இறைத்தூதர் தாவீத் காலத்தில் வாழ்ந்த நல்ல அரசன். கி.மு. 1028-1012ல் ஆட்சி செய்த இவர் கிறிஸ்தவ வேத நூலான பழைய ஏற்பாட்டில் 'சவுல்' எனக் குறிப்பிடப்படுகிறார்.*

**மரியாள்-மர்யம்:**

*இறைத்தூதர் இயேசுவின் அன்னை. இவரை முன்மாதிரிப் பெண் என்று திருக்குர்ஆன் சிறப்பிக்கிறது.*

**யாஃஜுஜ், மாஃஜுஜ்:**

மிகப் பழங்காலத்தில் வாழ்ந்துவந்த பழங்குடி மக்கள். இவர்கள் பலவித அத்துமீறல்களில் ஈடுபட்டு வந்ததால் பிற மக்கள் குடியிருப்பு பகுதிக்குள் இவர்கள் நுழைந்து விட முடியாதவாறு ஒரு தடுப்புச் சுவரை துல்கர்னைன் என்பவர் கட்டியதை திருக்குர்ஆன் பதிவு செய்கிறது.

**ஆஸர்:**

இறைத்தூதர் ஆப்ரஹாமின் தந்தை.

**ஹாமான்:**

எகிப்திய பாரோ மன்னருடைய அமைச்சரவையின் முக்கிய பொறுப்பாளாராக இருந்தவர்.

**ஸாமிரி:**

இறைத்தூதர் மோசேவுக்கு எதிராக செயல்பட்டு காளைக் கன்றை வணங்குவதற்காக உருவாக்கியவர்.

**அஹமது:**

இறுதித்தூதர் முஹம்மதின் பெயர்களில் ஒன்று.

**லுக்மான்:**

பழங்காலத்தில் வாழ்ந்த இவர் ஈசாப் கதைகளின் ஆசிரியர் என்றும் கருதப்படுகிறார்.

**ஸைத்:**

நபிகள் நாயகத்தின் தோழர்களில் ஒருவர்.

**இஸ்ராயீல் மக்கள்-யஹூது:**

ஆப்ரஹாமுடைய மகன் ஈசாக்கிற்குப் பிறந்தவர் ஜேக்கப். இவருடைய சந்ததியினரான யூதர்களை திருக்குர்ஆன் இவ்வாறு குறிப்பிடுகிறது.

**கிறிஸ்தவர்-நஸாரா:**

இறைத்தூதராக வந்த இயேசுவை இறைவன் எனக் கொண்ட மக்கள்.

**இஸ்லாம்:**

கீழ்ப்படிதல், தன்னை சமர்ப்பித்தல், ஒரே இறைவனை வழிபடுதல் என்பவை இதன் பொருள்.

**முஸ்லிம்:**

பிறப்பால் வருவதல்ல, மாறாக நம்பிக்கையால், வாழ்கின்ற முறையால் அடைந்து கொள்ளும் நிலை. ‘கட்டுப்பட்டு நடத்தல்’ என்பது இதன் பொருள்.

## இனக்குழு - சமூகம்

**ரஸ்வாசி:**

’ரஸ்’ என்ற ஊரில் வசித்த மக்கள்.

**இரம்வாசிகள்:**

இரம் என்ற பகுதியில் வாழ்ந்த இனக் குழுவினர்.

**ரோம்-ரூம்:**

பழங்கால ரோமாபுரிப் பேரரசு.

**ஆத்:**

ஹூத் என்பவரை இறைத்தூதராகப் பெற்றிருந்த சமூகத்தினர்.

**சமூத்:**

ஸாலிஹ் என்பவரை இறைத்தூதராக பெற்றிருந்த மக்கள்.

**சாபியீன்:**

'சபஅ' என்பதற்கு 'மதம் மாறினான்' என்பது மொழிரீதியிலான பொருள். பலதெய்வ வழிபாடு, சிலை வணக்கம் என்பவற்றை விட்டுவிட்டு ஓரிறைக் கொள்கையில் நம்பிக்கையுடையவர்களாக இருந்தவர்கள்.

**துப்பஉ:**

செல்வ வளத்துடன் வாழ்ந்த மக்கள். அதிகமாக குற்றம் செய்ததால் அழிந்து போனதாக திருக்குர்ஆன் கூறுகிறது.

## திருக்குர்ஆனில் கூறப்பட்டுள்ள பிற உயிரிகள்

**இப்லீஸ்:**

சாத்தான்களின் தலைவன்.

**சாத்தான்:**

மனிதக் கண்களுக்குப் புலப்படாத தீய உயிரி.

**வானவர்:**

மனிதக் கண்களால் காணமுடியாத இறைவனின் படைப்பு. இவர்கள் ஒளியால் படைக்கப்பட்டவர்கள். இவர்கள் இறைக்கட்டளையை அணுவளவும் பிசகாது நிறைவேற்றுபவர்கள்.

**ஜின்:**

மனிதக் கண்களால் காணமுடியாத இறைவனின் படைப்பு. இவர்கள் நெருப்பால் படைக்கப்பட்டவர்கள் என்று குர்ஆன் கூறுகிறது.

**கேப்ரியேல்-ஜிப்ரீல்:**

அல்லாஹ்விடமிருந்து இறைத்தூதர்களுக்கு இறைச்செய்தியை கொண்டு வந்த படைப்பு. பரிசுத்த ஆன்மா என்ற சொல்லில் சில இடங்களில் திருக்குர்ஆன் கேப்ரியேல் அவர்களைக் குறிக்கிறது.

**மைக்கேல்:**

வானவர்களில் ஒருவர்,

**ஹாரூத், மாரூத்:**

பழைய பாபிலோன் நகரின் சம்பவம் ஒன்றுடன் சோதனைக்காக வந்த வானவர்கள்.

**துல்கர்னைன்:**

பழங்காலத்தில் உலகின் பெரும்பகுதியை ஆண்ட அரசர்.

## திருக்குர்ஆனில் பயன்படுத்தப்பட்டுள்ள பிற அரபுச் சொற்கள்

**அல்அஃராப்:**

பழங்குடியின நாடோடிகள்.

**புனித ஆலயம் காஅபா:**

மக்காவின் பெரிய பள்ளிவாசல்.

**ஒளு:**

தொழுவதற்கு முன்னர் செய்யப்படும் உடல் சுத்தம். முகம், கை, கால்களைக் தண்ணீரில் கழுவி தலையை ஈரக்கையால் தடவுதல்.

**இஹ்ராம்:**

ஹஜ் அல்லது உம்ரா செல்லும் ஆண்கள் குறிப்பிட்ட எல்லையில் வைத்து அணியும் தைக்கப்படாத துணித் துண்டுகள்.

**வஹீ:**

மனிதர்களில் தான் தேர்ந்தெடுத்த தூதர்களுக்கு இறைவன் தனது செய்திகளை அளிக்கும் வழிமுறை.

**ஹஜ்:**

இஸ்லாத்தின் ஐந்து கடமைகளில் ஒன்றாகும். பண வசதியும், ஆரோக்கியமும் பெற்ற முஸ்லிம்கள் குறிப்பிட்ட காலத்தில் சவுதி அரேபியாவின் மக்கா நகரிலுள்ள கஅபாவுக்குச் சென்று நிறைவேற்றுவது.

**லாத், உஸ்ஸா, மனாத்:**

இறைத்தூதரின் காலத்தில் அரேபியாவில் வாழ்ந்த மக்களால் வணங்கப்பட்ட சிலைகள்.

**வத், ஸுவா, யகூஸ், யஊக், நஸ்ர்:**

இறைத்தூதர் நோவா காலத்தைய மக்களுடைய நேர்ச்சை விலங்குகளின் வகைப்பாடுகள்.

**இஃதிகாஃப்:**

உலக விவகாரங்களிலிருந்து விடுபட்டு, இறைவனை வழிபடும் எண்ணத்துடன் இறையில்லத்தில் தங்கி தியானித்தல்.

**புனித மாதங்கள்:**

இஸ்லாமிய ஆண்டில் நான்கு மாதங்கள் புனித மாதங்களாகக் கொள்ளப்படுகின்றன. அவை துல்கஅதா, துல்ஹஜ், முஹர்ரம், ரஜப் ஆகியவையாகும். இந்த மாதங்களில் போர்புரிவது தடைசெய்யப்பட்டுள்ளது.

**நபி-ரசூல்:**

இறைவனிடமிருந்து தூதுச்செய்தியைப் பெற்று மக்களுக்கு அறிவிப்பவர், பொதுவாக இறைத்தூதர்களை இது குறித்தாலும், தூதுச் செய்தியைக் கொண்டு வந்ததால் வானவர்களில் சிலரையும் குறிக்க இதே சொல் திருக்குர்ஆனில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**தவ்ராத்** (Torah):

இறைத்தூதர் மோசேவுக்கு அருளப்பட்ட வேதம்.

**இஞ்ஜீல்** (Gospel):

இறைத்தூதர் இயேசுவுக்கு அருளப்பட்ட வேதம்.

**ஸபூர்** (Psalms):

இறைத்தூதர் தாவீதுக்கு அருளப்பட்ட வேதம்.

இது நம் தமிழகச் சூழலில் ஆதியாகமம், புதிய ஏற்பாடு, தாவீதின் சங்கீத புத்தகம் என்ற பெயர்களில் அறியப்படுகிறது. ஆனால் இவை மூன்றும் அதன் மூலமொழியில், அசல்

வடிவில் இல்லாமல் திரிக்கப்பட்டு விட்டதாக குர்ஆன் கூறுகிறது.

**சனிக்கிழமைக்காரர்கள்:**

இஸ்ரேவேலர்கள் "சனிக்கிழமையில் எவ்வித உலக அலுவல்களிலும் ஈடுபடக்கூடாது. அந்நாளை ஓய்வுக்கும் வணக்க வழிபாட்டுக்கும் உரிய நாளாக ஆக்கிவிட வேண்டும்" என்று இறைவனால் கட்டளையிடப்பட்டிருந்தார்கள். இந்த வரையறையை மீறி சனிக்கிழமையிலும் மீன் பிடிப்பதில் ஈடுபட்டவர்களையே இறைவன் 'சனிக்கிழமைக்காரர்கள்' என்று குறிப்பிடுகிறான்.

**மஸீஹ்** (Messiah):

இயேசுவை குறிக்க இச்சொல்லை குர்ஆன் பயன்படுத்துகிறது.

**தயம்மும்:**

சுத்தமான மணலில் இரு உள்ளங்கைகளையும் அடித்து முகத்திலும் மணிக்கட்டுவரை இரு கைகளிலும் தடவி சுத்தம் செய்து கொள்ளுதல், உளு என்னும் உடல் தூய்மை செய்ய தண்ணீர் கிடைக்காதபோதும் நோய்வாய்ப்படுதல் போன்ற நேரங்களிலும் செய்துகொள்ளும் சுத்திகரிப்புமுறை.

**மன்னு, சல்வா:**

'மன்னு' என்பது ஒருவகையான இனிப்புப் பண்டமாகும். 'சல்வா' என்பது காடை, கௌதாரி போன்ற பறவையாகும்.

**அன்சார்:**

இதற்கு ‘உதவியாளர்கள்’ என்று பொருளாகும். இறைத்தூதர் காலத்தில் வாழ்ந்த மதீனா நகர முஸ்லிம்கள் மக்காவிலிருந்து புலம்பெயர்ந்து வந்த முஸ்லிம்களுக்கு உதவிபுரிந்ததால் அன்சார் என்றழைக்கப்பட்டனர்.

**முஹாஜிர்:**

இறைவழியில் புலம்பெயர்ந்தவர்கள்.

**நம்பிக்கையாளர், நம்பிக்கை கொண்டவர்:**

இஸ்லாமிய நெறியில் ஒரு இறைவன், இறைத்தூதர், வானவர், வேதங்கள், மறுமைநாள் மற்றும் இறைவன் விதித்த விதி ஆகியவற்றின்மீது நம்பிக்கை கொண்டு அதற்கேற்ப வாழ்க்கையை அமைத்துக் கொள்பவர்கள்.

**தூதர் - இறைத்தூதர்:**

மனிதர்களை நல்வழிப்படுத்த மனிதர்களிலிருந்தே இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்.

**இறைநிராகரிப்பாளர் - இறைமறுப்பாளர் - காஃபிர்:**

கடவுள் மறுப்பாளர்கள், நாத்திகர்களை குர்ஆன் இவ்வாறு குறிப்பிடுகிறது.

**நயவஞ்சகர் - துரோகி - முனாஃபிக்:**

இறைநம்பிக்கையாளராகவும் வாழாமல், அதற்கெதிரான நிலைப்பாடு கொண்டவராகவும் இல்லாமல் இரட்டை மனநிலையுடன் இருப்பவர்களை திருக்குர்ஆன் இச்சொல்லைக் கொண்டு குறிப்பிடுகிறது.

**இணைவைப்பவர் - இணைவைப்பாளர் - இணைகற்பித்தல் - முஷ்ரிக்:**

பல கடவுள், எண்ணற்ற இறைவன், நிறைய தெய்வங்கள் இருப்பதாக நம்பிக்கை கொள்வதை மன்னிக்கமுடியாத பெரும் பாவம் என்று திருக்குர்ஆன் கூறுகிறது.

**மறுமைநாள் - இறுதிநாள் - நியாயத் தீர்ப்புநாள் - மறுமை - மறுஉலகம்:**

சூரியன், வானம், பூமி, நட்சத்திரங்கள், மனிதர்கள் மற்றும் அனைத்து உயிரினங்களும் அழிந்துவிடும். அந்நாள் அல்லது அந்த நேரத்தில் இறைவன் மட்டுமே இருப்பான். அதன் பிறகு மீண்டும் மனிதர்கள் எழுப்பப்பட்டு விசாரிக்கப்படுவார்கள். அவர்கள் இவ்வுலகில் செய்ததற்கேற்ப நல்லவர்கள், தீயவர்கள் என வகைப்படுத்தப்படுவர். இதனை கூலி கொடுக்கப்படும் நாள், மீண்டும் உயிர்ப்பிக்கும் நாள், இறைவனை சந்திக்கும் நாள் என்றும் குர்ஆன் குறிப்பிடுகிறது. இந்த பிரபஞ்சம் அழிந்த பின்னர் மீண்டும் வேறொரு வகையான வாழ்க்கை ஏற்படும் என்று குர்ஆன் கூறுகிறது.

**நரகம்:**

இறந்தபிறகு தீயவர்கள் தங்கள் செயல்களுக்காக தண்டனைபெறும் இடம்.

**சுவனம் - சொர்க்கம்:**

நன்மையான செயல்களை இவ்வுலக வாழ்க்கையில் புரிந்தவர்கள் அடையும் இடம்.

## மொழிபெயர்ப்பு செய்யப்படாத எழுத்துக்கள்:

அரபு அகரமுதலியின் தனித்தனி எழுத்துக்கள். எடுத்துக்காட்டாக, இரண்டாவது அத்தியாயத்தின் முதல் வசனம் அலிப், லாம், மீம். இவ்வாறான எழுத்துக்களுடன் திருக்குர்ஆனில் மொத்தம் 29 அத்தியாயங்கள் ஆரம்பிக்கின்றன. அவற்றை அப்படியே அளித்துள்ளோம்.

## மறைவானவற்றில் நம்பிக்கை:

அல்லாஹ், வானவர், சொர்க்கம், நரகம், மறுமையில் கிடைக்கும் இன்பம் அல்லது துன்பம் ஆகியவற்றை நம் பகுத்தறிவால் அறிய முடியாது. ஆனால் தர்க்கரீதியாக சிந்தித்து நம்பிக்கை கொள்ளவேண்டும்.

## முன்னர் அருளப்பட்டது:

இறைத்தூதர் முன்னர் வாழ்ந்த தூதர்கள் பெற்ற இறைச்செய்திகளை குர்ஆன் இப்படி குறிப்பிடுகிறது.

## முன் சென்றவர்கள் முன்னோர்கள்:

இதற்கு முன்பு வாழ்ந்து இறந்து போனவர்கள்.

## வேதம் கொடுக்கப்பட்டோர்:

யூதர்கள், கிறிஸ்தவர்கள் போன்றவர்களைக் குறிக்கிறது.

## தொழுகை:

ஒவ்வொரு நாளும் குறிப்பிட்ட நேரங்களில் செய்யப்படும் இறைவணக்கம்.

**நோன்பு:**

இஸ்லாமிய ஆண்டின் ஒன்பதாவது மாதத்தில் சூரியன் உதிப்பதற்குமுன் தொடங்கி அது மறையும்வரை உண்ணாமல், குடிக்காமல், (மனைவியுடன்) உடலுறவு கொள்ளாமல், தீயவற்றிலிருந்து தவிர்ந்து இருக்கும் நிலை.

**ஜக்காத்:**

வளம்பெற்றவர்கள் தம் வருமானத்தில் குறிப்பிட்டதொரு பங்கை இறைவனின் கட்டளைப்படி தேவையுள்ளோருக்கு அளிப்பது.

**ஹஜ் மற்றும் உம்ரா:**

இஸ்லாமிய நாட்காட்டியின் 12-வது மாதத்தில் மக்காவுக்கு செல்லும் புனிதப் பயணத்தை ஹஜ் என்றும், அவ்வாறு அல்லாத காலங்களில் மேற்கொள்ளப்படும் பயணங்களை உம்ரா என்றும் அழைப்பர். இதற்கு உடல் மற்றும் பொருளாதார அடிப்படையில் தகுதிகள் வரையறை செய்யப்பட்டுள்ளன.

# திருக்குர்ஆன் பொருள் அட்டவணை

## A அல்லாஹ்

### 1. இறைவனின் குணங்கள்

*01:01-03; 02:115-116; 02:139; 02:163; 02:255; 03:02-06; 03:26-27; 04:87; 06:03,12; 06:13,18; 06:26; 06:95,96; 07:158; 09:129; 10:55,56; 11:123; 13:09; 13:41; 16:77; 17:111; 19:64; 20:04-08; 20:50; 20:110-111; 22:58-66; 22:78; 23:17; 23:78-80; 23:84-89; 23:116; 24:35; 25:02; 25:59; 26:24-28; 27:25-26; 28:68-70; 28:88; 29:19; 30:11; 30:06; 30:40; 31:16; 32:06-08; 34:01-02; 34:23-26; 35:01-02; 36:83; 37:04-05; 37:180; 38:66; 39:06; 39:62-63; 39:67; 40:02-03; 40:15; 40:19-20; 41:43; 41:53-54; 42:09; 42:11-12; 42:19; 42:24-31; 42:49-51; 43:84-85; 44:06-08; 45:36-37; 48:14; 51:58; 53:43-53; 54:55; 55:78; 57:01-06; 59:22-24; 62:01; 64:01; 65:12; 72:03; 73:09; 85:12-16; 87:01-05; 95:08; 112:1-4; 114:1-3*

### 2. அல்லாஹ்வின் ஞானம்

*02:29; 02:30-33; 02:74-77; 02:96; 02:235; 03:05; 03:29; 06:03; 06:59; 06:80; 10:61; 11:05; 11:123; 13:05-10; 13:42; 15:24; 16:19; 18:26; 20:07; 20:110; 22:70; 27:74-75; 31:34; 34:02; 34:03; 35:11; 35:38; 41:47; 47:19; 50:16; 58:07; 64:04; 67:13; 72:26-28*

### 3. அல்லாஹ்வின் சாந்த குணம்

*02:235; 10:11; 16:61; 18:58; 35:45*

## 4. அல்லாஹ்வின் மன்னிப்பும் பொருத்தருளும் பண்பும்

*02:31; 02:37; 02:160; 02:173; 02:187; 04:43; 04:110; 06:54; 13:06; 15:49; 20:82; 33:73; 39:35; 39:53; 40:43; 42:25; 42:30*

## 5. அல்லாஹ்வின் பரிவும் கருணையும்

*01:02; 02:105; 02:143; 02:186; 02:205; 02:251; 02:286; 04:29; 04:147; 06:54; 06:54; 06:142; 07:156; 11:61; 11:90; 12:56; 12:87; 12:92; 15:56; 23:109; 33:43; 37:75; 40:60; 42:19; 58:09*

## 6. அல்லாஹ்வின் ஆற்றலும் ஆட்சியதிகாரமும்

*02:31; 11:56; 11:107; 12:21; 12:40; 13:13; 16:40; 20:06; 20:114; 22:61; 32:26-27; 35:16-17; 35:41; 36:80-81; 38:65-66; 43:84; 48:07; 50:38; 54:50; 64:01; 67:01; 74:31; 85:16; 114:02*

## 7. படைப்பாளன்

*02:28; 2:116-117; 03:06; 03:47; 04:01; 06:02; 6:95-103; 10:03-04; 15:16-23; 15:86; 16:03-08; 23:12-22; 24:45; 25:02; 29:19; 30:54; 32:04-09; 36:79-81; 37:05; 37:11; 37:96; 39:05-06; 51:47-49; 67:*

## 8. உணவளித்தல், பரிபாலித்தல் எனும் குணங்கள்

*01:01; 02:212; 06:14;11:06; 13:16; 15:19-22; 17:20; 19:65; 24:38; 26:79-80; 29:60; 29:62; 30:40; 34:24; 40:13; 42:19; 51:22; 51:58; 62:11*

## 9. அடியார்களுக்கு அவன் புரிந்த உதவிகள்

*02:22; 02:28; 02:47-61; 02:257; 03:103; 03:164; 05:03; 05:06; 6:141-144; 07:10; 07:26; 07:32 08:09-12; 08:26; 10:05-06; 10:22; 10:54-60; 11:61 14:34; 16:05-28; 16:53; 16:65-66; 16:67-68; 16:71-72; 16:78-83; 16:89; 17:66; 17:70; 22:63; 22:78; 23:17-22; 25:47-50; 25:53-54; 27:73; 28:73; 29:67; 31:20; 31:31; 32:09; 32:27; 35:03; 35:12-13; 35:39; 36:33-35; 36:36; 36:71-72; 39:06; 40:79-80; 42:30; 43:10-12; 45:12; 48:04; 55:02-22; 56:58-72; 57:25; 62:02; 67:05; 67:15; 67:23-24; 76:01-03; 77:20-27; 78:06-09; 79:28-31; 80:25-31; 82:07-08; 90:08-10; 95:04; 96:04-05*

## 10. இறைவனின் வல்லமையும் ஏகத்துவத்தின் ஆதாரங்களும்

*02:164; 02:258; 06:01-04; 06:14-18; 06:40-41; 06:63-64; 06:76-78; 06:95-96; 07:54; 07:57-58; 07:185; 10:03-06; 10:22-23; 10:31-32; 12:105-106; 13:02; 13:03-04; 13:12-13; 14:32-34; 16:52-55; 16:66-70; 16:78; 16:79; 16:80-81; 17:12; 17:42-43; 17:66-67; 20:53-54; 21:22; 21:30; 21:32-33; 23:78-80; 23:86-87; 23:88-92; 24:41-42; 24:43-44; 24:45-46; 25:47-49; 25:61; 26:07; 26:24; 27:60-62; 27:63; 29:44; 29:61; 30:20-27; 30:37; 30:46; 30:48-50; 30:54; 31:10; 31:25; 31:21; 32:27; 35:11-13; 35:27; 36:33-35; 36:37-39; 36:41-44; 39:05-06; 39:21; 39:42; 40:61; 40:67-68; 40:79-81; 41:37-38; 41:39; 42:29; 42:32; 43:09; 43:87; 45:03; 45:12-13; 50:06; 51:20; 56:58-59; 56:62-64; 56:68-70; 56:71-72; 67:02-03; 67:19; 67:23-24; 77:20-27; 88:17-20*

### *11. அவனைத் தவிர வணக்கத்திற்குரிய வேறு எதுவும் இல்லை*

*05:75-76; 06:40-41; 06:46-47; 06:71; 06:100; 7:191-194; 07:195; 10:34; 10:35-36; 10:66-67; 11:101; 12:39-40; 13:14-16; 13:33; 16:17; 16:20-22; 17:56-57; 18:15; 19:42; 21:21; 21:43; 21:66-67; 22:11-13; 22:73; 25:03; 28:70-74; 30:40; 31:10-11; 34:22; 35:40-41; 36:23; 36:74-75; 39:38; 41:37-39*

## B. முஹம்மத் (ஸல்)

### *1. அவர்களின் குணநலன்கள்*

*03:159; 05:15; 09:40; 09:61; 09:128; 18:06; 26:03; 21:107; 33:21; 35:08; 68:04; 73:20*

### *2. முஹம்மத் நபி (ஸல்) அவர்களும் மனிதரே*

*06:50; 06:57-58; 07:188; 10:49; 12:38; 17:93; 17:95; 18:110; 21:07-08; 25:20 33:63; 46:09*

### *3. அவர்களின் பதவியும் பொறுப்பும்*

*02:20; 02:145; 03:144; 03:164; 04:105; 05:21; 06:19; 07:157-158, 10:15; 13:40; 16:26; 27:80-81; 33:40; 33:42-45; 34:28; 35:23-24; 36:03; 39:41; 48:28; 50:45; 50:45; 53:56*

### *4. சத்தியப் பாதையில் அவர்களுக்கு நேர்ந்த தொல்லைகள்*

*02:09-14; 02:114; 02:212; 03:72; 03:99; 06:10; 06:123; 08:30; 08:56; 09:08-10; 09:13; 09:50; 09:50-58; 17:73-75; 21:36; 25:45; 25:31; 27:70; 31:06; 33:48; 35:25; 38:04; 40:35; 41:26; 58:08; 68:51; 96:09-10*

5. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மீது நம்பிக்கை கொள்ளல்

*02:17-18; 02:101; 03:81; 03:84; 03:86; 03:110; 04:42; 04:115; 04:150-152; 04:170; 05:19; 06:20; 07:157; 09:80; 47:32; 48:13; 57:07; 57:28; 58:05; 64:08*

6. நபி (ஸல்) அவர்களுக்குக் கீழ்ப்படிதல்

*03:31-32; 04-13-14; 04-42; 04:59; 04:64-65; 04:69-70; 04:80; 05:92; 07:158; 08:01; 08:24-26; 09:62; 09:71; 24:47-54; 24:56; 24:63; 25:27; 33:36; 33:61; 33:71; 47:33; 48:10; 49:14*

7. நபி (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் வழங்கிய சிறப்பான அருட்கொடைகள்

*02:144; 03:13; 04:113; 05:03; 05:67; 08:30; 08:33; 09:26; 17:01; 17:79; 21:107; 33:06; 33:40; 33:53; 34:28; 49:01-05; 53:06-18; 93:03:08; 94:01-04; 108:01; 110:02*

C. திருக்குர்ஆன்

1. சிறப்புத் தன்மைகள்

*02:02-05; 02:97; 02:185; 03:07; 03:34; 03:138; 05:15-16; 05:48; 06:90; 06:92; 06:155; 07:63; 10:57; 11:120; 12:02; 14:01; 14:52; 16:64; 16:89; 17:09; 17:82; 20:02-04; 20:113; 24:34; 25:01; 26:192-196; 27:02; 32:02; 36:02-05; 36:69-70; 38:01; 38:29; 39:23; 39:27-28; 41:02-04; 41:41-42; 43:03-04; 44:03; 45:20; 46:12; 54:05; 56:77-78; 56:79-80; 59:21; 65:10; 69:40-43; 75:17-19; 76:23; 80:11-14; 80:15-16; 81:19-21; 85:21-22; 86:13-14; 97:01; 98:02-03*

### 2. வான்மறைக்குரிய சான்றுகள்

*02:23-24; 04:82; 06:114; 10:37; 11:13-14; 17:88; 26:196-197; 28:49-50; 29:46-49; 34:06; 46:10; 52:33-34; 69:44-46*

### 3. திருக்குர்ஆன் மீது நம்பிக்கை கொள்ளுதல்

*02:04; 02:24; 02:41; 02:85; 02:89-91; 02:97-99; 02:121; 02:136-137; 02:176; 03:04; 03:199; 04:61; 04:162; 05:83-84; 06:27; 06:50; 06:92; 06:93; 06:155-157; 07:03; 10:94-95; 11:24; 13:19; 16:64; 17:45-46; 17:107; 28:50; 28:52-53; 29:51; 31:07; 32:22; 40:56; 41:44; 43:69-73; 47:02; 67:08-09*

## D. மறுமைக் கோட்பாடு

### 1. மனிதனின் மரணம்

*03:185; 04:78; 4:97-100; 06:61; 06:93; 07:37; 08:50-51; 16:28; 16:32; 16:35; 23:99-100; 29:57; 32:11; 47:27-28; 50:19; 56:83-85; 63:10; 75:26-30; 102:1-02*

### 2. மரணத்திற்குப் பின்...

*02:154; 3:169-171; 23:100; 40:46; 50:04*

### 3. மீண்டும் உயிர்ப்பித்தல்

*02:113; 02:148; 3:106-107; 06:36; 06:73; 07:29; 10:04; 10:45; 11:103-108; 14:48; 15:23-25; 17:52; 17:71; 17:97; 18:47-49; 18:53; 19:68; 19:85-86; 20:102; 20:120-127; 21:40; 23:101; 27:87; 30:25; 36:49-50; 36:51; 37:19-20; 39:68; 42:47; 43:66; 50:09-11; 50:20; 50:41-42; 50:44; 52:09-10; 55:37; 56:04-05; 69:13-14; 70:08-09; 70:43-44; 74:07-09; 77:08-10; 78:18-19;*

*79:06-09; 60:33-37; 81:01-14; 84:01-05; 89:21-23; 99:01-08; 100:9-10; 101:4-5*

### 4. மரணத்திற்குப் பின்னுள்ள வாழ்க்கையின் தேவை

*03:191-192; 07:04-05; 07:29; 07:57; 10:04; 10:07-09; 10:34; 11:07; 11:102-108; 13:02; 13:05; 15:23-25; 16:38-40; 16:65; 17:99; 19:66-67; 21:104; 22:05-07; 36:33; 23:79-90; 27:69-73; 29:19-20; 30:09-11; 30:19; 30:22-27; 30:50; 34:03-04; 35:09; 36:77-81; 37:11-18 38:27-28; 41:39; 44:38-42; 45:21-22; 46:33; 56:57-62; 75:36-40; 77:16-19; 78:01-17; 86:05-08; 95:07-08*

### 5. கணக்கு கேட்டலும் வினைச்சுவடி வழங்கலும்

*02:284; 03:30; 07:07-09; 10:04; 11:111; 14:51; 16:92; 16:111; 17:13-14; 17:71; 18:49; 18:105; 21:47; 23:102; 23:103-104; 27:89-90; 29:12-13; 34:25; 36:53-54; 36:65; 40:17; 41:20; 45:28; 50:23; 69:18; 83:06; 84:07; 86:09; 88:25-26; 99:06; 101:06; 102:06*

### 6. மறுமையை ஏற்றுக் கொள்ளாததன் விளைவுகள்

*07:147; 10:07-08; 10:11; 16:22; 17:18; 18:105; 23:74; 25:11; 27:04-05*

### 7. மறுமையில் ஒன்றும் செய்ய முடியாத நிலை;

*02:48; 02:167; 02:254; 06:94; 10:27; 14:21-22; 20:109; 25:19; 26:88; 28:63; 31:35; 34:31; 35:18; 37:24-33; 42:45; 43:67; 44:41; 60:03; 69:28; 70:10-14; 80:34; 82:18*

### 8. நரகம்

*02:24; 04:56; 07:38; 07:42; 10:04; 11:106; 13:05; 14:16; 15:44; 17:97; 18:29; 20:74; 22:19-21; 23:104; 25:12-13; 25:65-66;*

*32:20; 34:35; 35:35; 37:66-67; 44:44; 38:55-58; 39:16; 40:71-72; 76:04; 40:71-72; 47:15; 56:43-44; 56:52-55; 66:06; 67:06-07; 69:30-36; 70:15-16; 73:12-13; 74:29-30; 76:04; 78:21-25; 88:04-05*

### 9. சொர்க்கம்

*02:25; 07:43; 09:20-22; 10:09-10; 11:108; 13:24; 13:35; 13:45-48; 16:30-31; 18:31; 18:107-108; 19:62; 20:75-76; 22:23-24; 25:15-16; 25:75-76; 29:58; 30:15; 32:17-19; 33:44; 34:37; 35:32-34; 36:55-56; 37:41-49; 38:49-52; 39:20; 41:08; 41:31-32; 43:70; 44:51-56; 47:15; 50:35; 51:15-16 54:55; 55:46-78; 56:89; 76:11-22; 77:41-42; 78:31-35; 83:24; 88:08-06; 98:08*

## E. இறைத்தூதர்கள்

### 1. ஆதாம்

*02:30-37; 07:11-25; 04:01; 07:11-18; 15:26-30; 15:31-42; 17:61-65; 18:50; 20:115; 20:116-120; 38:71-85*

### 2. நோவா

*07:59-64; 10:71-74; 11:25-35; 11:36-39; 11:40-48; 21:26-27; 23:23-25; 23:27-28; 25:37; 26:105-122; 29:14-15; 37:75-82; 54:09-16; 71:01-28*

3. இத்ரீஸ் (எனோக்)

*19:56-57; 21:85*

4. ஹூத் (எபைர்)

*07:65-72; 11:52-58; 26:123-124; 26:128-140; 54:19; 69:06-08*

5. ஸாலிஹ்

*07:73-79; 11:62-68; 91:11-15; 26:141-159; 54:23-31*

6. ஆப்ரஹாம்

*02:124-132; 02:258; 02:260; 03:67-68; 04:54; 06:74-83; 09:114; 11:69-75; 14:35-41; 15:51-56; 16:121-122; 19:41-48; 21:51-67; 21:68-69; 22:26-27; 26:69-82; 29:16; 37:83-99; 37:101-103; 43:26; 51:24-28; 60:04;*

7. இஸ்மவேல்

*02:125; 02:127; 06:86; 19:54; 21:85; 37:102; 38:48*

8. ஈசாக்

*11:71-73; 37:112-113; 38:45-47*

9. லோத்

*06:86; 07:80-82; 11:77-83; 15:61-77; 21:74; 26:160-175; 27:58-58; 29:28; 29:30-35; 37:133-134; 54:33-39*

10. யாகோப் (ஜேகப்)

*02:153; 02:140; 04:165; 38:45-47*

*11. ஜோஸஃப்*

*12:03-06; 12:07-18; 12:16-99; 12:100-101*

*12. ஷுஐப் (ரகுவல் ஜெத்ரோ)*

*07:85-93; 11:84-95; 26:176-186; 26:189-191*

*13. மோசே மற்றும் ஆரோன்*

*02:47-74; 02:80-101; 04:164; 05:20-26; 7:102-145; 7:148-155; 7:160-162; 10:75-78; 10:79-93; 11:96-99; 14:05-08; 17:02; 17:101-104; 18:60-65; 18:66-82; 19:51-53; 20:09-36; 25:35; 20:37-54; 20:56-79; 26:52-61; 20:85-97; 21:48; 23:45-49; 26:18-29; 26:30-51; 26:62-66; 27:07-14; 28:04-09; 28:12-36; 28:38-40; 28:43; 29:39-40; 32:23; 33:69; 37:114-116; 40:22-25; 40:28-35; 40:38-45; 43:46-56; 44:17-23; 44:25-33; 61:05; 79:15-26*

*14. தாவீது*

*04:163; 17:55; 21:78-80; 27:15; 34:10; 38:17-26*

*15. சாலமன்*

*02:102; 21:78-82; 27:16-20; 27:20-44; 34:12-14; 38:31-38*

*16. ஜோப் (அய்யூப்)*

*21:83-84; 38:41-42*

*17. ஜோனா (யூனுஸ்)*

*10:98; 21:87-88; 37:139-148; 68:49-50*

### *18. ஜகரிய்யா*

*03:37-41; 19:02-07; 21:89*

### *19. இயேசு*

*02:87; 02:253; 03:46-59; 4:156-159; 4:171-172; 05:17; 05:46-47; 05:70-75; 05:110; 5:112-118; 09:30-31; 19:20-26; 19:29-32; 19:36; 23:50; 57:27; 61:06; 61:14*

## F. பிரார்த்தனை

*01:01-07; 2:126-129; 02:201; 2:285-286; 03:08; 03:16; 03:53; 03:147; 07:89; 07:126; 07:161; 10:85-86; 12:101; 14:85-86; 12:101; 14:35-41; 17:22-24; 17:80; 18:10; 19:04-06; 20:25-35; 21:83; 21:89; 23:29; 23:97-98; 23:109; 23:118; 25:65-66; 25:74; 26:83-87; 26:118; 26:169; 27:19; 28:16-17; 26:21; 28:24; 29:30; 38:35; 40:07-09; 46:15; 59:10; 66:11; 113:1-5; 114:1-6*

## G. முதல் மனிதன் ஆதாம் - மனித இனத்தோற்றம்

*02:29-38; 04:01; 06:02; 06:98; 07:11-27; 07:172; 07:189; 15:26-43; 15:26-43; 16:03-05; 17:61-65; 18:50-51; 19:67; 20:115-123; 23:12-14; 25:54; 32:07-09; 33:72; 35:11; 35:11; 36:77; 37:11; 38:71-85; 40:67; 50:16; 51:56-58; 55:03-04; 55:14-15; 71:14; 76:01-02; 77:20-23; 86:05-08; 95:04-05; 96:01-02*

## H. பிரபஞ்சத்தின் தோற்றம்

*02:28-29; 06:01; 06:73; 07:54; 09:36; 10:19; 11:07; 25:59-60; 29:19-20; 30:11; 41:09-12; 42:11; 50:38; 55:14-15*

### J. இறைவனின் படைப்புகள் மற்றும் பிரபஞ்சம் (பூமியில் இறைவனின் அத்தாட்சிகள்)

*02:22; 02:26; 02:164; 02:259; 06:95-99; 07:57-58; 13:03-05; 13:12-14; 13:17; 13:41; 15:19-24; 17:12; 22:05; 22:61; 22:63-65; 23:43; 23:46; 25:45-59; 25:53-54; 25:62; 26:07:08; 27:60-65; 26:86; 26:86; 26:88; 26:93; 28:73; 30:21-27; 30:46; 30:55-60; 31:10-11; 31:29-31; 32:27; 34:12-14; 34:27-28; 34:27-28; 36:33-44; 36:78-83; 39:05-06; 39:21; 40:64; 41:39; 42:29; 42:32; 45:01-06; 50:06-11; 51:01-04; 51:20-22; 51:48-49; 53:39-51; 53:53-56; 55:06-09; 55:14-25; 57:17; 57:25; 65:12; 67:19; 71:17-20; 75:36-40; 77:27; 78:06-16; 79:30-33; 80:18-19; 80:24-32; 86:11-12; 87:17-20; 91:02-06; 92:01-03*

### K. பிரபஞ்சம் பற்றிய திருக்குர்ஆன் வசனங்கள்

*02:164; 3:190-192; 3:190-192; 06:96-97; 07:54; 07:185; 10:03-06; 13:02; 14:32-33; 21:30-33; 24:35; 24:41-42; 25:61-62; 29:44; 30:25; 31:29; 32:04-06; 34:41; 37:06-10; 41:09-12; 41:37; 41:53; 42:29; 50:06; 51:47; 53:49; 55:05-06; 55:32-36; 57:01-06; 57:25; 65:12; 67:02-05; 70:01-04; 71:15-16; 72:08-11; 78:12-13; 79:27-29; 86:01-03; 91:01-05*

### L. இறைவனின் திட்டத்தில் உலகம், சமுதாய உருவாக்கம்

*02:36; 02:213; 02:251; 02:253; 03:140; 07:34; 7:94-102; 11:116-119; 17:16-21; 17:58; 18:06-08; 20:123-124; 21:07-11; 21:16-18; 22:40-41; 23:71; 24:55; 25:50-52; 26:04; 26:208-209; 28:58-61; 29:02-03; 30:05; 34:45; 37:27-28; 39:46; 40:84-85; 42:08; 42:27; 43:32-33; 44:38-39; 47:07; 49:13; 51:56-58; 55:07-09; 55:26-30; 76:30*

## M. மனிதர்கள்மீதான இறைவனின் கொடைகள்

*5:21-25; 10:05-18; 10:53-55; 10:66-69; 10:79-83; 22:65; 23:17-22; 23:78-79; 25:48-49; 27:60-65; 31:20; 36:33-44; 36:71-73; 40:79-81; 42:28; 43:10-14; 45:12-13; 54:17; 55:10-19; 56:51-73; 67:15; 67:15; 67:15; 67:30; 71:19-20; 82:24-32; 82:06-08; 78:04-05; 95:01-03; 96:03-05; 106:1-4*